உ

சிவகணபதிதுணை

# பாராசரஸ்மிருதி

## மாதவியவுரை

## தமிழ்மொழிபெயர்ப்பு.

## முதற்புத்தகம்.

## VOL. I.

இஃது

சகலசாஸ்திர விளக்கச் சங்கத்தார் கேட்டுக்கொண்டபடி

பிரஸிடென்ஸீகாலேசு கன்னடபண்டிதர்

பிரமஸ்ரீ, சித்தாந்தி-பெங்களூர்

**சுப்பிரமணியசாஸ்திரியார்உதவியால்**

ஷை பிரஸிடென்ஸீ காலேசுதமிழ்ப்புலமை

சமரசவேத சன்மார்க்க சங்கத்து வித்வான்

**தொழுவூர். வேலாயுதமுதலியாரால்**

மொழிபெயர்க்கப்பட்டு

கவுண்டாண்டுசெனரல் ஆபீசு சூப்பரிண்டெண்டாண்டு

ம-ா-ா-ஸ்ரீ,

**கூடலூர். கனகசபைபிள்ளை**

ம-ா-ா-ஸ்ரீ,

மயிலை. சிக்கிட்டிசெட்டியார் குமாரர்

**சோமசுந்தரசெட்டியார்**

இவர்களால்

மிமோரியல் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1880ஸு

# விளம்பரம்.

இப்புத்தகம் வேண்டியவர்கள் சென்னப்பட்டணம் (Memorial Press.) மிமோரியல் அச்சுக்கூடம் மயிலை. வீராசாமிசெட்டியார்.

அல்லது

சென்னப்பட்டணம் முத்தியாலுப்பேட்டை இராமசுவாமித்தெருவு ௨௦-வது நெம்பர் வீட்டில் கூடலூர். ஸ்ரீநமசிவாயம்பிள்ளை இவர்களிடத்தில் பெற்றுக்கொள்ளலாம்.

## புத்தகக் கிரயம்.

| | Rs. | A. | P. |
|---|---|---|---|
| முதல் புத்தகம் VOL. I. (ஆசாரகாண்டம் ௲௯-வது அத்தியாயம் பாரம் ௭௯ முழுமையும் காலிக்கோ கட்டடம்) ... ... ... | 4 | 8 | 0 |
| தபால் கூலி ... ... ... ... ... ... ... | 0 | 6 | 0 |

2-வது புத்தகம் VOL. II. (ஷை காண்டம் ௨-௯-வது அத்தியாயங்கள்) முடிவாகி வருகின்றது உடனே வெளிப்படுத்தப்படும்.

# பராசரம்.

## அத்தியாய அட்டவணை.

—:o:—

பராசரம்.

௧-வது, ஆசாரகாண்டம்.

# அதிகார அட்டவணை.

௧-வது-அத்தியாயம் சாதுர்வருண பொதுச்சிறப்புத்தருமம்.

# அதிகார அட்டவணை.



## முதன் மூன்று வருணத்தாருக்கும்.

# அதிகார அட்டவணை.

## க்ஷத்திரியதருமம்.

## வைசியதருமம்.



## சூத்திரதருமம்.

# நித்தகருமம்.

—:o:—

| காலம். | நாழிகை அளவு. | மணியளவு. | செய்வினை. |
|---|---|---|---|
| | பகற்காலம். | | |
| வைகறை விடிய ௫-நாழிகை ழிஃ .. | ......... | ................ | படுக்கைவிட்டெழுதல், கடவுளை வழிபடுதல், மலஜலங்கழித்தல், சௌசம், ஆசமனம், பல்விளக்கல், தருப்பைசேகரித்தல். |
| ழிஃ காலம்... | ௧-ழிஃ ௩ஜ, வரையில். | ௬-ழிஃ - ௭௨ வரையிலும். | * ஸ்நாநம், ஆடையுடுத்தல், நீறணிதல், * காலைச்சந்தி * ஜெபம். * ஹோமம். |
| ௨ ,, ... | ௩ஜ-,,-௭௨ ,, | ௭௨-,,- ௯ ,, ... | வேதாப்பியாசம். |
| ௩ ,, ... | ௭௨-,,-௧௧வ ,, | ௯ -,,-௧௰௨ ,, ... | பொருள்சேகரித்தல். |
| ௪ ,, ... | ௧௧வ-,,-௧௫ ,, | ௧௰௨-,,-௧௨ ,, ... | பிரமவேள்வி அல்லதுவேதமோதல், மாத்தியாநிகசந்தி, தருப்பணம், * தேவபூசனை. |
| ௫ ,, ... | ௧௫ ,, ௧௮ஜ ,, | ௧௨ -,,- ௧௨ ,, ... | * வைசுவதேவம், * விருந்துபசரித்தல், உண்டி, தாம்பூலம் |
| ௬ ,, ... | ௧௮ஜ, ௨௨௨ ,, | ௧௨ -,,- ௩ ,, ... | புராணந்திகேள்வி, மாலைச்சந்தி அக்கினிகாரியம். |
| ௭ ,, ... | ௨௨௨,, ௨௬வ,, | ௩ -,,- ௪௨ ,, ... | |
| ௮ ,, ... | ௨௬வ,, ௩௰,, | ௪௨-,,- ௬ ,, ... | |
| | இராக்காலம். | ................ | வேதமோதல், வைஸ்வதேவம், விருந்துபசரித்தல், உண்டி, தாம்பூலம், நித்திரை. |

* ஷட்கருமம்.

శ్రీ

శ్రీగణపతయేనమః.

ద్రమిడ తాత్పర్య సహిత

# పరాశరస్మృతిమాధవీయమ్.

మఙ్గళశ్లోకః.

గణేశదీపోహృదయస్థితోసౌ । స్ఫాటికసఙ్కాశేషుచదర్పణేషు।
అర్థాత్మనాబింబితఏషలోకః । ఉచ్చావచోభాతివిచిత్రరూపః॥

ప్రథమఙ్గపురుషార్థేషు ప్రతిపాద్యస్త్రయీగిరామ్।
వృషభఙ్గపాతుధర్మాత్మా జగన్తిశివవాహనః॥

ప్రతిజ్ఞా.

పరాశరస్మృతేరర్థ మ్మాధవీయానుసారతః।
పణ్డితానాంసహాయేన వక్ష్యేద్రమిడభాషయా॥

ఉద్దేశః.

ధర్మంహ్యజానతామత్ర ధర్మబుద్ధివివృద్ధయే।
కలౌపరాశరప్రోక్త ధర్మశాస్త్రంప్రకాశ్యతే॥

ஸ்ரீ

உ ஓம்சிவகணபதயேநமஃ.

ஸ்மிருதிகளாகிய தருமநூன் முப்பத்தாறனுள்

ஒன்றாகிய

# பராசரஸ்மிருதிமூலமும்.

அதற்கு

## வடமொழிக்கண்ணே மாதவாசாரியர்

செய்த விருத்தியுரைக் கருத்தின்படி

தமிழ் மொழி பெயர்ப்பும்.

முதலாவது

## ஆசாரகாண்டம்.

### பாயிரம்.

### கடவுள் வாழ்த்து.

சொற்பொரு ளென்னத் துணைவியொடு கெழீஇக்
கற்ப நிலைஇய கடவுட் டரும
விடைப்பெரும் பாகனை விழைந்தென் னுள்ளத்
திடைக்குடி யிருந்த வெண்குணத் தொருதனி
யம்மை யப்ப னருளிய களிற்றின்
செம்மலர்ச் சேவடி சென்னிதலை யுறுமே.

### உரையாசிரியர் எழுதிய கடவுள் வாழ்த்து.

ఓమ్ ॥ వాగీశాద్యాస్సుమనస స్సర్వార్థానాముపక్రమే।
యన్నత్వాకృతకృత్యాస్స్యు స్తన్నమామిగజాననమ్॥

என்பது சுலோகம்.

குறுமுனி தேற நெடுமறை விரித்த
திருவ னருட்பிர காச னெஞ்சிறைகொள்
பரமா சிரியன் பதமலர் பழிச்சி
முன்னவ னுய்ந்த பண்ணுறு பசுந்தமிழ்
தென்மொழி யாவது தேற்றார் தென்மொழிப்
பொருட்கட லெழுந்த திருத்தகு பேரறன்
இயலிறை பெருமை யயலுறீஇக் கிடத்தலின்
வடமொழி யன்றறீஇ தில்லென் றிசினோர்
இடனுறக் கடுப்புக் காணிய விருடியர்
தத்தம் பெயரிய தக்காங் குணர்பு
பாற்படக் கிளந்த பண்பமை மிருதியுட்
கலிகெழு சிறப்பிற் பராசர மதனுக்
கொலிகெழு நீர்வல னுடுத்த வரைப்பிற்
கலைமலி மாதவ மாதவன் றன்கோ
ணிலைபெறச் செய்தவந் நீடுறு மொழியின்
விருத்தி யொன்றே மேவலி னிளையோர்
கருத்துற வதனைக் காட்டுறு மருத்தியி
னமிழ்தினு மினிய தமிழ்மொழி பெயர்ப்பான்
எண்ணிய வெந்தை செந்நாப் போதார்
"வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கெ" னலஞ்சாது
"புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி
கல்லா வொருவ னுரைப்பவுங் கண்ணோடி
நல்லார் வருந்தியுங் கேட்பரோ மற்றவன்
பல்லாரு ணாணல் பரிந்தெ" னுநாலடி
சிறுமதி நெஞ்சினுக் குரனது பயப்ப
வுறுதி நாடி யெடுத்துக்கொண்ட விதனுள்

இம்முதற் சுலோகமென் னுதலிற்றோவெனின், மாதவாசிரியர் தாமெடுத்துக்கொண்ட விப்பராசர நூலுரையிடையூறின்றி யினிது முடிதற்பொருட்டு, ஏற்புடைக் கடவுளைவாழ்த்துதலின், மூத்தபிள்ளையாரை வாழ்த்துதனுதலிற்று. (இதன் பொருள்) கலைமகள் கேள்வனாகிய பிரமன் முதலிய வெல்லாத் தேவரும்

அறிஞரும் நல்லெண்ணத்தினர் யாவரும், பயன்றருமெவ்வகைத் தொழிலினையும், தாம்தொடங்கும்போது, யாரை வணங்குதல் செய்து தத்தந் தொழிலினை யினிது முடித்துக்கொள் வாரோ, அத்தகைய மூத்தபிள்ளை யாரை, யானுந்தொழுவேன் - எ-று. எனவே, யானது செய்தலால் இந்நூலுரையினிது முடியுமென் பதுகருத்து. இதுவுரையாசிரியர் தம்முரையினிது முடிந்துலகி னிலவுதல்வேண்டி மங்கலம்பட எழுதியவாழ்த்தாமாகலின் இதற் குரை விரித்தெழுதாது, விரிவஞ்சி விடப்பட்டது. மேல்வருவன வெல்லா மிக்கருத்தே யெனக்கொள்க. இச்சுலோகம், ஆசிரிய வசனம். (க)

ஸ்லோ ॥ సోహంప్రాప్యవివేకతీర్థపదవీ మామ్నాయతీర్థేపరం।
మజ్జంస్సజ్జనతీర్థసంగినిపున స్సద్వృత్తతీర్థంశ్రయన్।
లబ్ధ్వామాకలయన్ప్రభావలహరీం శ్రీభారతీతీర్థతో।
విద్యాతీర్థముపాశ్రయన్హృదిభజే శ్రీకంఠమవ్యాహతమ్॥ இது.

என்னுதலிற்றோவெனின்,எல்லாமுடையவிறைவனைவாழ்த் துதலானிது தாம்வழிபடுகடவுளை வாழ்த்துதனுதலிற்று. இ-ள். அத்தகைய அறிவற்றவனு யிருக்குமெனக்கு நல்லுணர்சசியென் னும் புனித நீராடுவதற்கோர் துறைகிடைத்த பின்பு சாதுக்க ளாகிய நன்னீரோடுகலந்த வேதமென்னுஞ் சுத்தநீராடி நல்லொ ழுக்கமென்னுந் தெண்ணீரையடைந்து சீராற்றலாகிய வெள்ளத் தைப்பெற்றுப் "பாரதிதீர்த்தர்" என்னுமாரியனுர் கிடைத்தன ராகஅவர்முன்னிலையால் "வித்தியாதீர்த்தர்" என்னும்பெரியரை யுமடையப் பெற்றேனுதலிற் றடையறச் சீகண்டனுய விறைவனை வழுத்துவேனுக - எ-று.

இதனுனே குருவணக்கமுங் கூறினூராயிற்று. அறிவிலாரை யெண்ணுவாரொண்ணுங்கால் முதற்கண்ணேசுட்டியறியத்தக்கவறி வின்மையையுடையே னென்பார் "సోహం" என்றூர் பிறவுமன்ன. இத்துணையுங் கடவுள்வாழ்த்து. (உ)

ஸ்லோ ॥ సత్యైకవ్రతపాలకో ద్విగుణధీ స్త్ర్యర్థీ చతుర్వేదితా।
పంచస్కంధకృతీషడన్వయదృఢ స్సప్తాఙ్గసర్వంసహః।
అష్టవ్యక్తికలాధరో నవనిధిగ పుష్యద్దశప్రత్యయ।
స్థానస్తోచ్ఛ్రాయధురంధరో విజయతాం శ్రీబుక్కణక్ష్మాపతిః॥ இது.

என்னுதலிற்றோவெனின், எடுத்துக்கொண்ட நூல் அரச நீதியோ டியைபுடையதாதலின் அவ்வரசன் இவனென்பதும் அவனியல்பு முதலியனவுங்கூறி அவனை வாழ்த்து முகத்தா லிவ்வுரைசெய்த காலமுங்களனுமுணர்த்துதனுதலிற்று.

இ-ள். "సత్యైకవ్రతపాలకః" என்பதனுள் "సత్య" எ-து, வாய்மை "ఏకం" எ-து, முக்கியம் "వ్రతం" எ-து, நியமம் "పాలకః" எ-து, காப்பவன் எனவே சத்தியத்தையே சிறந்ததாகக் கொண் டொழுகு நியமத்தைக்காப்பவன்-எ-று. ஏகமென்றசொற் பொ ருட்டொனியால் அஃது அரசனிடத்தோர் குணமாக விருத்தலை யுணர்த்துகின்றது. சத்தியமொன்றினையே காப்பது விரதமாகக் கொண்டவ னென்பதுகருத்து.

"ద్విగుణధీః" "ద్విగుణ" எ-து, இரண்டுகுணமுடைய என்றுபெகு விரீஹிசமாசார்த்தம். எ-து, அன்மொழித்தொகைப்பொருளாம் இனி திவிகுணமெனில் இரட்டிப்பு என்று ஆதிக்கார்ததம்-எ-து, (விசேடப்பொருள்) எனக்கொள்வதுவழக்கு "ధీ" எ-து, புத்தி. எனவே, திவிகுணமான புத்தியுடையவனென்றவாறு. நன்மையைக் கோடல் ஒன்று, தீமையை யொழித்தலொன்று இவ்விரண்டு குண முள்ள புத்தி யுள்ளவனென்றபடி. ஏனையமானிடரிற் சிறந்த வறிவினையுடையவ னெனினுமமையும். சத்துவ ரஜோகுணங்க ளிரண்டினையுமுடையவன் என்பாருமுளர். தாமதகுணமில்லாதவ னென்பது கருத்து.

"త్ర్యర్థః" "అర్థ" எ-து, இச்சிக்கப்படுவது. எனவே, பயன்-எ-று. அந்த அருத்தம் என்பது, அவ்வப்பொருணோக்கங்களிற் பலவகையானும்பொருள் கொள்ளப்படுகின்றது; ஆயினும் ஈண்டு தருமம், அருத்தம், காமம், என்னும் மூன்றுபுருடார்த் தங்களையு முடையவ னென்பது.

"చతుర్వేదితా" "వేదితా" எ-து, அறிந்தவன் "చతుః" நான்கு என்பன சாமம், தானம், பேதம், தண்டம், என்னும் உபாயங்களை யுணர்ந்தவன் என்பது.

"పంచస్కంధకృత్" "స్కంధ" என்பது, அமைச்சியலங்கம்ஐந்து அவையாவன, துணைவலியறிதல், கருவியறிதல், இடங்காலமறிதல், வினைத் திறந்தெரிதல், தெரிந்துதெளிதல். இதனை "காமந்தக

நூல்" கஉ-வது சருக்கம் ௯௬-வது சுலோகத்திற்காண்க "மாகம்" உ-ம் சருக்கம்-உ௬-சுலோகத்துள் இவை கந்தமெனக் கூறப்பட்டன. "க்ருதீ" எ-து. தேர்ந்தோன் மேற்கூறிய ஐவகைக் கந்தங்களினுளு மாராய்தல் வல்லவன்-எ-று.

"ஷட்ஸ்வயஸ்த்ருடிஃ" என்புழி "அந்வய" எ-து, சம்பந்தம், மரபு. அல்லதூஉம் - "அய" என்ற, தாது=பகுதி- பொருள்- (கதி)=(நடை) ஆகவே, கதியருத்தமுடைய பகுதிகளுக்கு எல்லாம் ஞானமென்றும் பொருள்கூறப்படும். அநு, எ-து, உபசருக்கை. இவ்விரண்டும் புணர்ந்து அவ்வப்பொருளுக்கத்து வேறு வேறுபொருள்களில் நூலாசிரியர்களும்கவிஞரும்வழங்கியிருக்கின்றனர். என்னை? செய்யுளின்கண்ணேசொற்களொன்றோடொன்றியைபுபெறக்கொண்டு கூட்டல்என்னும்பொருளிலே அந்வயம்எனவும், ஐம்பொறியுணர்ச்சிக்கும் அவற்றின் விடயங்களுக்கும் உண்டாம் தொடர்பை அந்வய மெனவும், தந்தைமகன்என்னுங் கால்வழித்தொடர்பும் குருசீடன்என்னும் பரம்பரைத்தொடர்பும் சம்பந்தத்தையுணர்த்துமாகலின்அதுவுமந்வயமெனவும், அங்காங்கி-எ-து, உறுப்பும்உறுப்பினையுடையதுமாம். இவற்றின்றொடர்பும் அந்வயமெனவும், ஒரு விடயத்திற்கும் அவ்விடயத்தைக்கூறும் நூலுக்குமுள்ள சம்பந்தமும் அந்வயமெனவுங்கூறுப. "த்ருடி" எ-து, அழுத்தமுடையது. ஆகவே அரசியலுக்கு அங்கமாகிய சந்தி, விக்கிரகம், யானம், ஆசனம், துவைதீபாவம், சமாசிரயம், என்னும்ஆறும் அந்வயமாம். ஆதலின் இந்தஆறு அந்வயங்களையும் ஊன்றப்பெற்றுள்ளவன்-எ-று. இவற்றுள் சந்தி=பொருந்தல். விக்கிரகம்=போர். யானம்=படையெடுத்துச்செல்லல். ஆசனம்=தங்கல். துவைதீபாவம்=எதிரேற்றல். சமாசிரயம்=ஒருவரையொருவர்பற்றி செல்லுதலாம். இனி வேதாங்கங்களாகிய சிக்ஷை, வியாகரணம், சந்தசு, நிருத்தம், சோதிடம், கற்பம், என்ற ஆறுவித்தைகளிலும் வல்லவன் என்பதும் ஒன்று. அறியத்தக்க விடயங்களைக்கூறத்தக்க அக்ஷபாதம், காணதம், ஜைமினியம், பாணினியம், பாதஞ்சலம், வியாசம், என்னும் ஆறுசாத்திரமாகிய தரிசனைகளிடத்தும் வல்லன் என்பதுமாம். தாய்மரபு, தந்தைமரபு, மனைவிமரபு, மகன்மனைவிமரபு, மகளைவேட்டோன்மரபு, குரவன்மரபு, என்னும் ஆறுமரபையும் சுத்தமும் புகழும்பெற உடையான் என்றுகூறினும் அமையும்.

அன்றியும் ஷடங்கவயர் என்னின் அறுதொழிலுடைய வேதியர். ஆகவே அவர் பெரியரென்னும் நிலைபெற்ற பத்தியையுடையான் என்று கூறுவாருமுளர்.

"సప్తాఙ్గసర్వంసహః" எ-து, எழுவகை அங்கத்தின் சுமையெல்லாவற்றையும்பொறுப்பவன்-எ-று. எழுவகைஅங்கமாவன, அரசு, அமைச்சு, நட்பு, கோசம், நாடு, அரண், படை, என்னும்ஏழுமாம். இவ்வாறுகூறுதலால் இவ்வேழினையுமீட்டல், காத்தல், செலுத்தல், முதலியதொழில் வருத்தத்தைப்பொறுப்பவன் என்பது கருத்து. "படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு முடையா னரசருளேறு" என அங்கம் ஆறு என்றார்க்கு அரசினையுங்கூட்டிஏழங்கம் என்ற வடநூல் கருத்தும் உடன்பாடுபோலும் "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கறனென்றாங்கைம்புலத்தாறோம்ப றலை" என்றலின். கோசம்—எ-து, பொருள்வைப்பு. கூறென்பதுமது.

இனி இந்த ஏழுறுப் பிலக்கணத்தையுடைய சபை''யின் காரியத்தைச் சீர்செய்பவன் எனினும் அமையும்.

"అష్టవ్యక్తికలాధరః" எ-து, அஷ்டமூர்த்தியான வடிவுடைய சிவனது கலைகள் எனவே ஞானம், புகழ், செல்வம், ஆற்றல் முதலிய சத்திகளின் கூறுபாடு. அவற்றைத்தரித்தவன் - எ-று. இன்னும் "அஷ்டவியக்தி" எ-து, திக்குப்பாலகருடைய கூறாகிய ஞானம், செல்வம், சுத்தம், தண்டம், ஆணைமுதலியன உடையவன் எனினுமமையும். இதனை மனு "అష్టాభిశ్చసురేంద్రాణాం మాత్రాభిర్నిర్మితోనృపః" என்றதனானுமுணர்க.

"నవనిధిః" என்புழி "నవ" எ-து, புதிது, ஒன்பது "నిధి" எ-து, ஒருபொருள்மிகவும் வைக்கப்பட்டுள்ளது. மேலுமேலும் ஈட்டிய பொருளுடையவன்-எ-ம், ஒன்பதுவகைநிதியையுடையவன்-எ-ம், ஆம். ஒன்பதுவகைநிதி - ஒன்பது வகைமணியாலாகியது. அன்றியும், ஞானநிதி, தருமநிதி, தானநிதி, பராக்கிரமநிதி, தனநிதி, உலோகநிதி, தானியநிதி, அநுக்கிரகநிதி, நிக்கிரகநிதி, எனவுமாம். இவைமுறையே புலவர், புண்ணியவொழுக்கர், சற்பாத்திரர், சூரர், புதையல், ஆகரம், (ஆகரம்-எது-பொன், வெள்ளிமுதலியன விளையும் நிலவறைகள்.) களஞ்சியம், சிட்டர், துட்டர், என்னப்படும்.

"పుష్యద్దశప్రత్యయః" என்புழி "ప్రత్యయః" உடன்பட்டுநிற்றல்-அல்லது—வசப்பட்டிருத்தல், சபதம், ஞானம், நம்பிக்கை, ஹேது என்

னும் பொருள். "அமரம் ௩-ம் காண்டம் நாநார்த்தவர்க்கை" ௩0௩-வது சுலோகத்திற்காண்க. ஆகவேஈண்டுநம்பிக்கைப்பொருளில்வந்தது. பத்துவகைநம்பிக்கையாவன—புரோகிதன், பிரதானி, அமைச்சன், சேநாபதி, பண்டாரத்தலைவன், மருத்துவன், மடைத்தலைவன், சோதிடன், ஒற்றன், மெய்காப்பாளன், என்னும் பதின்மரது நம்பிக்கையையுங்காப்பவன். எனவே அவரால் விரும்பப்பட்டவன் என்பது கருத்து. பண்டாரத் தலைவன் = திரவியசாலைக்கு அதிபதி. மருத்துவன்=வயித்தியன். மடைத் தலைவன்=சமையல் சாலைக்கு அதிபன். ஒற்றன்=தூதன். மெய்காப்பாளன்=அரசன் தேகத்தைக்காப்பவன். இனி பகையரசன், உட்பகையான அரசன், பகைவனுக்கு நட்பான அரசன், தன் நண்பனுக்கு நட்பானஅரசன், உண்ணட்பு உடையஅரசன், நட்பரசன், (இவ்வறுவரும் முன்வருவோர்) பார்சணிக்கிராகன், ஆக்கிராந்தன் (பின்படைத்துணையாகும் அரசர்) ஆசாரர், (பக்கத்துணைவருவோர்), இப்பதின்மரையுமுணர்ந்தோன் எனினுமமையும். "காமந்தகம்" அ-ம் சருக்கத்திற்காண்க.

"స్మార్తోచ్ఛ్రాయధురంధరః" எ-து, ஸ்மார்த்தர் எனவே ஸ்மிருதியால் கூறப்பட்ட தருமத்தையநுட்டிப்பவர்கள். இனி அத்துவிதிகளாகிய ஒருசார் வேதியரெனக்கூறுவாருமுளர். "ఉచ్ఛ్రాయ" எ-து, விருத்தி. கொடையால் அவர்களைக்காப்பவன்—எ-று. இனி ஸ்மிருதிகளிற்கூறியபடி அரசாள்வோன் என்பது மொன்று.

"శ్రీమత్పుణ్యశ్లోకపతిః" இப்படிப்பட்ட செல்வனாகிய புக்கணனென்னுமிந்நிலவேந்தன்-எ-று. "విజయతాం" வெற்றிபெற்றுவாழ்வானாக-எ-று. (௩)

శ్లో॥ ఇంద్రస్యాంగిరసో నలస్య సుమతి శ్శైబ్యస్య మేధాతిథిః।
ధౌమ్యో ధర్మసుతస్య వైన్యనృపతేస్స్వోజా నిమేర్గౌతమః।
ప్రత్యగ్దృష్టిరరుంధతీసహచరో రామస్య పుణ్యాత్మనో।
యద్వత్తస్య విభో రభూత్కులగురుర్మంత్రీ తథా మాధవః॥ இது.

என்னெனின், அவ்விறைமகனுக்குந் தமக்குமுள்ள தொடர்புரிமை கூறுதனுதலிற்று. இ-ள். இந்திரனுக்குப் பிரகற்பதியும், நளனுக்குச் சுமதியும், சைப்பியனுக்கு மேதாதிதியும், உதிட்

டிரனுக்குத்தௌமியரும், வைநியனுக்கு சோஜா என்பவனும், நிமிச் சக்கிரவர்த்திக்குக் கௌதமியென்னுங் கோதமன்மகனும், தருமவடிவனாகிய சீராமனுக்கு ஞானக்கண்ணினையுடைய வருந்ததி கேள்வனாகிய வசிட்டனும்போலும், அந்தப்புக்கனனென்னு மிறைமகனுக்கு மாதவாரியரும், குலகுருவு மந்திரியுமாயிருந்தனர்-எ-று. எனவே யிவ்வுரையாசிரியர் குலம்,கல்வி,செல்வம், சிறப்பு, அறிவு, ஒழுக்கம், அதிகாரம்,வாழ்நாண்முதலியவற்றுள் ஒன்றானுங் குறைவிலனென்று கூறியவாறாயிற்று. இங்ஙனந் தாமேகூறுதல் வடநூல்வழக்கு. "தோன்றாதோற்றித் துறைபல முடிப்பினுந்தான்றற்புகழ்தறகுதியன்றே" என்பதுதமிழ்வழக்கு. இம் முறையீண்டு விரிப்பிற் பெருகுமாகலின், நல்லாசிரியரை யடைந்துணர்கவென்க. (௪)

శ్లో ॥ ప్రజ్ఞామూలమహీవివేకసలిలైస్సిక్తాబలోపఘ్నకా।
మంత్రైః పల్లవితావిశాలవిటపా సంధ్యాదిభిష్షడ్గుణైః।
శక్త్యాకోరకితాయశస్సురభితా సిద్ధ్యాసముద్యత్ఫలా।
సంప్రాప్తాభువభాతినీతిలతికా సర్వోత్తరం మాధవమ్॥ இது.

என்னெனின், அச்செங்கோன் முறையினுக்கமும் பயனுங் கூறுதனுதலிற்று. இ-ள். நீதியென்னுங் கொடியானது உணர்வென்னும் பாத்தியை பகுத்தறிதலென்னுநீரால் நனைத்து, தன்வலி, உணர்ச்சிவலி, நட்புமுதலிய துணைவலி, வினைவலி யென்னும் எருவினையிட்டு, இடந்தரப்பெற்றதாய், ஆராய்ச்சி யென்னுந்தளிர்தளிர்த்தலையும், சந்தி,விக்கிரகம்,யானம்,ஆசநம்,துவைதீபாவம்,சமாசிரயம், என்னும்அறுவகை யிறைமைக் குணமாகிய கிளைகிளைத்தலையும், பிரபுசத்தி, மந்திரசத்தி, உச்சாகசத்தி யென்னுமூவகையரும்புகளை யரும்புதலையும், புகழென்னுமணம் வீசுதலையும், பயன்கையுறுதலென்னும் பழம்பழுத்தலையுமுடையதாய் எல்லாவற்றினுமுயர்ந்த மாதவத்தை யடைந்துலகின் கண்ணே ஒளிசிறந்தது-எ-று. மாதவம் எ-து. இவ்வுரையாசிரியரினியற் பெயராதலின் அவரையும் இளவேனிற் பருவத்தையும் குறித்து நின்றது. நீதியைக்கொடியென வுருவகஞ்செய்தலால், மாதவம் அதுபடர்தற் கேதுவாகிய வேனிற் பருவமென்றபடி. இனி மரமெனினுமமையும்: கொடிபடர்தற்கு அதுவும் இடனாதலின். இது சிலேஷா விசேஷணம். (௫)

శ్లో॥ యస్యబోధాయనంసూత్రం శాఖాయస్యచయాజుషీ।
భారద్వాజకులంయస్య సర్వజ్ఞస్సహిమాధవః।
శ్రీమతీయస్యజననీ సుకీర్తిర్మాయణఃపితా।
సాయణోభోగనాథశ్చ మనోబుద్ధిసహోదరా॥
సమాధవస్సకలపురాణసంహితా ప్రవర్తకస్స్మృతిసుషుమాపరాశరః।
పరావరస్మృతజగతీహితాప్తయే పరాశరస్మృతివివృతౌ ప్రవర్తతే।
పరాశరస్మృతిఃపూర్వైర్నవ్యాఖ్యాతానిబంధృభిః।
మయాతోమాధవార్యేణ తద్వ్యాఖ్యేయంప్రవర్త్యతే॥ இவை.

என்னெனின், இவ்வுரையாசிரியரது வரலாற்றினையுநூற்றன்மையையும் உரைசெய்தற்குக் காரணத்தையு முணர்த்துதலுதலிற்று. (இதன்பொழிப்பு) போதாயந சூத்திரமும், யஜுர்வேதசாகையும், பாரத்துவாச கோத்திரமும், உடையவர்யார்? அம்மாதவாரியர் எல்லாக்கலைகளையு முணர்ந்தவரல்லவா? அவர் சௌபாக்கியவதியாகிய சுகீர்த்தியாரைத் தாயாகவும், மாயணாசாரியரைப் பிதாவாகவும், சாயணாரியர் போகநாதாரியரென்னுமிருவரையும் மநமும் புத்தியும் போலும் சகோதரராகவுமுடையராம். அம்மாதவாரியர் எல்லாப் புராணங்களையும், சங்கிதைகளையும் நடாத்தவல்ல ஸ்மிருதிகளுக்கு விளக்கஞ் செய்யவல்லராதலின், மேலோர்முதல் கீழோர்வரையுமான வுலகமெல்லாம் இன்பமடையும்படிப்பராசரஸ்மிருதிக்குஉரைசெய்யத்தொடங்குகின்றனர். என்னையெனில், நிபந்தனை நூலாசிரியர்களாகிய முன்னோரால் இப்பராசர நூலுரை செய்யப்படாமையால், அம்மாதவாரியரால்இப்போதுரைசெய்யப்படுகின்றது. எ-று. வடநூலாதலின்அவ்வழக்குப்பற்றிப்படர்க்கைமுகத்தாற் கூறினார். தற்புகழ்ச்சியன்று.பிறவுமன்ன. இம்மாதவாரியர் தாம் வேதத்திற்குப்பாஷியஞ்செய்த வித்தியாரணியர் என்பவர்.

# நூலின் உரைப்பாயிரம்.

இனி, உரைசெய்ய வெடுத்துக்கொண்ட நூலினது திறமும் நூலாசிரியர் சிறப்பும், நூலுட் கூறப்படும் பாகுபாடும், பொருளும், பிறவும்இன்னதுஇதுவெனமுன்னர்க்கடாவிடையாகஉரைப்பாயிரங் கூறுகின்றார். கற்போருக்கு ஊக்கம் இனிது செல்லுதற்பொருட்டு. அல்லாக்கால்,குன்றத்தையடைந்த குரீஇத்தங்குதற்கோர் நிலைகாணாது தளர்வதுபோலும் மநந்தளருமாதலின். (கடா எ-து, வினா. குரீஇ-எ-து, பறவை).அற்றேலஃதாக.

அதுவருமாறு.

" ననునేయంస్మృతిర్వ్యాఖ్యానమర్హతి "

என்றதுமுதல்.

" తద్వివేకాయకుర్వేహం వ్యాఖ్యాంపారాశరస్మృతేః "

என்றவரையுமாம்.

அதாவது, இந்த ஸ்மிருதி யுரைசெய்வதற்குத் தக்கதன்று. அது பிராமாணியமாவதைப்புலப்படுத்தக்கூடாமையால்.

என்னையெனில்.

வேதம் பிராமாணியமே யென்பதற்குக் காரணம், ஆசிரியர், ஜைமினியார், " తత్ప్రమాణంబాదరాయణస్యానపేక్షత్వాత్ " என்ற தமது சூத்திரத்தில், வேதம் ஒருபுருடனாற் செய்யப்பட்டதன்று ஆகலின், வேறொரு மூலப் பிரமாணத்தைத் தான் வேண்டுவதொன்றல்ல. என்வே, சுவயம்பிரகாசமாகிய வேதத்திற்குப் பிரமாணமாகுந் தலைமை இயற்கையாகவே உள்ளது. என்னும் வியாசர்மதமேதமக்கும் உடன்பாடென்றனர்.(பிரமாணம். எ-து, அளவை. பிராமாணியம். எ-து, அளவாதலை யுடையது. சுவயம் பிரகாசம் எ-து, தானே விளங்குவது).

ஒருபுருடனாற் செய்யப்பட்டதும் வேறோர், மூலப்பிரமாணத்தையே வேண்டி யுள்ளதுமாகிய நூல்களினிடத்தில் அச்சூத்திரக்கருத்தை விசாரித்தல்கூடாது. எனவே ஏனைய நூல்க

ளெல்லாம் பரப்பிரகாசம் - என்றால், வேறொன்றால் விளங்குவ தாம் ஆகலின், ஜைமினியார் கூறியபடி வேதத்திற்குப் பிரமாண மாந்தலைமை பிறவற்றிற்குச்செல்லாதென்றவாறும்.

அங்ஙனமானல், வேறொரு மூலப்பிரமாண முண்மையால், அதுகொண்டிதற்குப் பிராமாணிய முண்மை கொள்ளலாமோ வெனின்? அங்ஙனமுமன்று.

மூலம் இதுவென்று கூறுதற்கு இடனில்லை யாதலால்.

காட்சி மூலம் என்று கூறுவாம் எனில்? அதுவும் அமை யாது: அதுபொறிகளுக்கு விடயமாகாமையால். (மூலம் எ-து, ஈண்டு பிரமாணம் என்னும் பொருளில்வந்தது.)

அநுமாநம் மூலம் என்று கூறுவாமெனில்? முன்கண்ட காட்சிப் பிரமாணத்தையே வேண்டி நிற்ப தொன்றாகலின் அநுமாநமு மன்று. எனவே, அநுமித்தறிவதற்குக் கருவியாகிய பிரத்தியக்ஷகாரண மில்லை என்றவாறு. (அனுமித்தறிதல் எ-து, ஊகித்தறிதல்).(பிரத்தியக்ஷம் எ-து, கண்ணாற்கண்டது).

புருடவாக்கியம் பிரமாண மெனில்? அதுவும் பிரமாண மன்று:வஞ்சகமுடைமையாற் புருடன்கண்டவாறு கூறுதலில்லை யாதலின். வஞ்சகமில்லாதவனது உரையினிடத்தோ வெனில்? சந்தேக விபரீதங்கள் விளைவது உண்மையாதலால் அதுவும் அமையாது. புருடவாக்கியம், சத்தம், உரை, என்பன வொரு பொருட்கிளவி.

எனவே, இந்நூல் காட்சி, அநுமாநம், ஆகமம், என்னு மூவகையளவைகளுள் ஒன்றும் அல்ல என்றபடி.

இனி "चोदना" = சோதனை என்பதும் இல்லை. என்னை? அந்த சோதனை உடைமையாண்டுங் கிடைத்ததில்லை யாதலால். சோதனை, பிரேரணை, ஏவல், கட்டளை, ஆணை, விதிஎன்பனவொரு பொருட்கிளவி. அதுநிற்க.

ஸ்மிருதிகளால் கூறப்பட்ட சுத்தம் முதலிய வொழுக்கங் களுக்கு மூலகாரணமாகிய ஆணையொன்று,வேதத்துள் யாண்டும் எடுத்துக் காட்டியவாறு பெற்றதுமில்லை யல்லவா?

அப்பிரோரணை அளவற்ற வேதத்தில் யாண்டேனும் இருக்கலாமென்று, அநுமானித்து எண்ணுவதற்கும் ஆகாது. என்னே? அங்ஙனம் எண்ணுமிடத்துச்சாக்கியர்முதலியநாஸ்திகர்கள்கூறும் "சைத்தியவந்தநாதிகள்" இடத்தும் பிராமாணியமான ஆணை உண்டென்றும், அதிப்பிரசங்கமாக எண்ணும்படி நேரிடுமேயெனின்? மேற்கூறுவாம். ("சைத்தியவந்தநம்." என்பது, வெளியிடத்துச் செய்யும்வந்தநை. அதிப்பிரசங்கம் = இல்லாததைக் கூறுதல். சாக்கியர்=புத்தர்).

மநுமுதலிய ஸ்மிருதிகளுக்கும் சாக்கியர் முதலிய நாஸ்திகர் நூலுக்கும் விசேஷம் ஏற்றத் தாழ்ச்சியுள்ளன. என்னே? வேதம், மநுமுதலிய பிராமாணியங்களை யெடுத்துக்காட்டி யுடன்பட்டதுபோல, சாக்கியர்முதலியோர் நூல்களை யுடன்பட்டுக்கூறியதில்லை.

எங்ஙனமென்னில்? "యద్వైకించమనురవదత్తద్భేషజం భేషజతాయాః" என்ற வேதவாக்கியம் (மநுஎதைச் சிறிது கூறிற்றோ, அது மருத்துவத்திற்கு மருந்துபோலாம்) என்றது. அவ்வாறேசாக்கியர் முதலியோர் நூல்களினுடைய பிராமாணியத்தை அநுக்கிரகிக்கும் வைதிகவாக்கியம் ஒன்றுமில்லை. (வைதிகம் - என்பது, வேதசம்பந்தம்).

எண்ணிறந்த வேதத்தில் யாண்டாயினும் நாஸ்திகநூற்பிராமாணியத்திற்கும் ஆணை இருக்கலாமே யென்று கூறுமோவெனில்? அங்ஙனங் கூறுவதற்கு இடமில்லை.

அற்றேல். முன் "యద్వైకించ" என்றவேதவாக்கியம் அருத்தவாதவாக்கியமாதலால், சுவார்த்தத்தில், கருத்துஇல்லை. (அருத்தவாதம்=புனைந்துரை=துதி. சுவார்த்தம்=தன்னுரைப்பொருள்). பிறவெனில் "మానవీఋచౌధాయ్యేకుర్యాత్" என்றுவிதித்தஅவ்விதிவாக்கியப்பொருளைப் புகழ்வதற்கு அந்த "యద్వైకించ" என்றது எழுந்ததாமாதலால்.

இனி யவ்விதிவாக்கியப்பொருளாவது "ఇష్టిప్రకృతిః" என்னும் கருமத்தில். "సోమారౌద్రం" என்பது சோமதேவதாகமாயும் உருத்திரதேவதாகமாயும் உள்ள "சரு" என்ற ஹோம

அங்ஙனஞ்செய்ய வேண்டுவதென்னுங் கருமத்துள் "அதிதேசத்தால்" "ஊஹத்" என்னுமந்திரங்கள் வருகின்றன. (அதிதேசமென்பது வேறோரிடத்தில் விதிக்கப்பட்டுள்ள தொன்றையேற்றவிடத்தி லெடுத்தாளுதல்). அவற்றினுள் "த்யாவா" என்னுமிரண்டு மந்திரங்களைச் சேர்க்கவேண்டியதாக விருக்கின்றது. அவையாவையெனில்? "மாநவத்யாவா" என்னும் மந்திரங்களே சேர்க்கத்தக்கதாக விருக்கின்றன; என்றதாதலால், மேற்சொன்னது அருத்தவாதமாக விளங்குகின்றது. ஆகவே, ஸ்மிருதிப் பிராமாணியங்கள் வேதத்தாற் கூறப்பட்ட தல்ல ஆதலின், சாக்கியர் முதலிய நாஸ்திகர் நூல்போலவே மநுமுதலிய நூல்களும் பிரமாணமாகாது! என்று கூறப்பட்டிருக்கின்றது. (தேவதாகம்-எ-து, தேவதைகளுடையது).

அன்றியும் பெரும்பாலும் மாநுடர்க்குப் பொய்யுரையும் மயக்கமும் நேரிடுவதாலும், வேதத்தில் ஆணை காணப்படாமையாலும், நம்பிக்கை மாத்திரத்தினால் பிரமாணமென்று கொள்ளுவதன்றி வேறு நிமித்தமில்லை. அங்ஙனமிருந்த போதினும் பெரிது முயன்று மநுஸ்மிருதி பிராமாணியமே யென்னும் விஷயத்தில் ஏதேனுமோர்வகையால் உடன்படுவோமாயினும், ஈண்டெடுத்துக்கொண்டபாராசரஸ்மிருதிமட்டில், பிராமாணியம் எங்ஙன முண்டாகும். வேதமானது மநுவின் பெருமையைக்கூறியதுபோலப் பராசரருடைய பெருமையைக்கூறியதில்லை. ஆதலால், அப்பராசரர் கூறிய ஸ்மிருதி பிராமாணிய முள்ளதென்று கூறுவதமையாதெனில்? மேற்கூறுவாம்.

பிராமாணியமென்பது காரணமின்றித் தானேவிளங்குவது. அப்பிராமாணியம் என்பது காரணமில்லாதது. ஆதலால் ஸ்மிருதிகள் பிராமாணியமேயாம்.

எங்ஙனமெனில், அப் பிரமாணமென்று சாதிப்பதற்குக் கூறிய பொய்யுரை மயக்கம் ஆணை இல்லாமை என்னு மூன்று ஏதுக்களும் உள்ளதன்று. (ஏது-என்பது-காரணம்).

ஏனெனில், பிறந்ததுமுதல் தபோசித்தர்களாயுள்ள மநு, பராசரர், முதலிய சிறந்த விருடிகளிடத்தில், அசத்தியம், மயக்கம், முதலிய குற்றங்கள் எவ்வளவும் உள்ளதாக எண்ணுவதற்கு

மிடமில்லாமையால் ஏது சொரூபாசித்தியாம். (ஏதுசொரூபா சித்தி) எ-து, காரணமாக வெடுத்துக்காட்டிய அவயவம், அவயவியினிடத்தில் இல்லாமற்போதல் (உதாரணம்) மனிதனுக்கு இயற்கை அறிவு இல்லை: கொம்புடைமையால், என்றவிடத்துக் கொம்புடைமை இயற்கையறிவில்லாமையைத் தெரிவிப்பதற்கு, ஏதுவாகக் கூறப்பட்டது. ஆதலால், கொம்பு - அவயவம். மனிதன் - அவயவி. இதனுள் மனிதனுக்குக்கொம்பு இல்லாமை "ஏது சொரூபாசித்தி" ஆம்:—

அப்பராசராதியர்கள், பிறந்ததுதொட்டுத் தவச்சித்தியை யுடையவர்கள் என்பதற்கு ஐயமில்லை. என்னை? அப்பராசரர் முதலியோரது உண்மைநிலைமையைத்தெரிவிக்கும் மந்திரார்த்த வாதங்களானும்,இதிகாசபுராணங்களானுமே,சித்தியையுடையார் களென்பது உணர்த்தப்பட்டுள்ளது.

இனி, அம் மந்திரமுதலியன பிராமாணியம் என்று கூற லாகாது;என்பையேல்? அப்பராசரர்முதலியோரேஇல்லையென்ற வாறும். ஆகவே, "ஏது ஆசிரயாசித்தி" யாம். (ஏது ஆசிரயா சித்தி - என்பது-தான்கூறும் ஏதுவுக்குப் பொருந்தும் இடமில் லாமற் போதல்.(உதாரணம்)மலடிமகன் ஆதலால்,அழகுள்ளபுருடன் ஆயினன் என்னுமிடத்து, அழகுண்மையாகிய காரியம்பிறத் தற்கு ஏது, மலடிமகன் என்னவே, மலடியென்னுஞ் சொல்லே மக்கள் இல்லாதவள் என்னும்பொருளை வெளிப்படுத்தலால், மலடிக்கு மகனுதல் யாண்டையது? அவனை இடமாக உடைய அழகுண்மை யாண்டையது? என்று வினவப்படுதலின் மலடி மகன் இன்மையே "ஏது ஆசிரயாசித்தி" ஆம்.

இங்ஙனமாகலின், இதனையாவரால் மறுக்கக்கூடும்:—

வேறு பிரமாணங்களுக்கு மாறுபாடில்லாத மநுமுதலிய ஸ்மிருதிகளுக்குச்சுவார்த்தத்திலும்,என்றால், தன்னுனைப்பொரு ளிலும் பிராமாணியம் உண்டு என்று உத்தரமீமாம்ஸையின், தேவதாதிகரணத்தில் விளக்கஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

பூர்வமீமாம்ஸம், அர்த்தவாதாதிகரணத்தில்சுவார்த்தமாகிய தன்னுனைப்பொருளில் பிராமாணியம் இல்லை என்று கூறப் பட்டது.

இவ்விரண்டும் தம்முள் விரோதமுடையதாய் அநுவாதத்திற்கு இடமுண்டாகின்றது. (அநுவாதம் என்பது முன்கூறப்பட்டதொன்றை வேறொருகாரணம்பற்றி மீட்டும்கூறல்).

ஆதலால் "యద్బ్రాహ్మణంచ" என்ற அருத்தவாத மானது "మాన విఋచా" என்னும் விதிவாதத்துக்குத்துதிவடிவமாயினும், சுவார்த்தமாகிய தன்னுரைப்பொருளிலும் தாற்பரியம் உண்டென்று நிச்சயமாயிருத்தலின், சாக்கியர் முதலிய நாஸ்திகர்நூலே அதற்கு ஒப்பாகக்கூறலாகாதுஎன்றுநினைத்து "சதுர்விமிசதிமதம்" என்னும் கிரந்தத்தில்,

> "యత్రచార్వాక వాక్యాని బౌద్ధాది పఠితానితు
> విప్రలంభక వాక్యాని తానిసర్వాణివర్జయేత్"

என்பது, உலகாயுதர் புத்தராதி நாஸ்திகர் வஞ்சகர் முதலியோர் வார்த்தைகளை யெல்லாம் ஒழிக்க வேண்டுவது. என்று கூறிற்று. அற்றேல் அற்றாக.

இனிப்பராசரருடைய பெருமை வேதத்தாற் கூறப்படாததல்ல: கூறப்பட்டதேயாம். என்னை? "సహోవాచవ్యాసః పారాశర్యః" என்னும் வேதவாக்கியத்தில் பராசரருடையமகன்வியாசனென்று மகன்மையைச்சிறப்பித்துவியாசனைப்புகழ்ந்தது. (மகன்மை-என்பது - மகனாகுந்தன்மை). இங்ஙனம் யாவராலும் மதிக்கப்பட்ட பெருமையை யுடைய வியாசனையும் பராசரர் மகனென்றே துதித்ததனால் பராசரருடைய மகிமை வேறுகூறுவது என்னுளது. "வாஜஸநேயம்" என்னும்சாகையில், வமிசப்பிராமணத்தில், வேதசம்பிரதாயத்தை வழங்குவிக்கும் குருசீட பரம்பரையைக் கூறுமிடத்தில் பராசரருடைய புத்திரர் பௌத்திரர்களையும் கூறக்கேட்டோம். என்னை? "జాతూకర్ణ్యాత్ జాతూకర్ణ్యః పారాశర్యాయణా త్పారాశర్యాయణః పారాశర్యాత్ పారాశర్యోజాతుకర్ణ్యాత్" என்றது (இதுசுருதி) அதனால்பராசரனாரும் மநுவினோடொப்பாவர். இன்னுமிவ்வாறே வசிட்டர், அத்திரி, யாஞ்ஞவற்கியர், முதலியோர்கள் விடயத்திலும் ஆராய்ச்சிசெய்யத்தக்கதாகவிருக்கின்றது. அவ்விடயத்தில் சுருதிப்பிரமாணமுங் காணப்படுகின்றதாவது "ఋషయోవా ఇంద్రంప్రత్యక్షం నాపశ్యన్-తంవశిష్ఠః ప్రత్యక్షమపశ్యత్"

అత్రిర్దదౌదౌర్వాయ ప్రజాం పుత్రకామాయ అథహ యాజ్ఞవల్క్యస్యద్వేభార్యే బభూవతుః." என்பவை முதலியனவாம்.

ஆதலால், மநுமுதலிய ஸ்மிருதிகளிடத்தில் பிராமாணியம் இல்லையென்று விலக்குவதற்கிடனில்லை: மநுமுதலியஸ்மிருதிகளுக்கு மேதாதிதி முதலியோரால் உரையுஞ் செய்யப்பட்டிருக்கின்றதனால்.

இனி இந்தஸ்மிருதிகளுக்கு மூலகாரணமாகிய சுருதியின் பிரேரணை கிடைப்பது இல்லையென்பது கூடாது. என்னை? "పంచవాఏతే మహాయజ్ఞా స్సతతిప్రతాయంతే సతతిసంతిష్ఠంతే దేవయజ్ఞః పితృయజ్ఞో భూతయజ్ఞో మనుష్యయజ్ఞో బ్రహ్మయజ్ఞః." என்றது முதலிய சுருதிவாக்கியங்களால் ஸ்மார்த்த தருமத்திற்கு மூலமான வேதப்பிரேரணையும் கிடைத்திருக்கின்றதனால். ("సతతి" = "సతతం" நித்தியம் என்பதுபொருள்) யாண்டும், சௌசமுதலிய வொழுக்கங்களுக்கு வேதப் பிரேரணை கிடைத்ததில்லை யென்பது ஒத்த விவகார மொழியன்று.

அன்றியுமிதனை, பாட்டாசிரியரும்.

వైదికైఃస్మర్యమాణత్వా త్తత్పరిగ్రహదార్ఢ్యతః।
సంభావ్యవేద మూలత్వాత్స్మృతీనాం మానతోచితా.

என்புழி, வேதமுநிவர்களால் உணர்த்தப் படுதலாலும், அவற்றை அங்கீகரிப்பதில் நிச்சயத்தன்மை யுண்டாயிருப்பதாலும், நம்பத்தக்க வேதமே மூலமாயிருப்பதாலும், ஸ்மிருதிகளுக்குப்பிரமாணத்தன்மை சிறந்ததாகவிருக்கின்றது. எ-ம்.

மநுவானவரும்.

శ్రుతింపశ్యంతిమునయః స్మరంతిచతథాస్మృతిం।
తస్మాత్ప్రమాణముభయం ప్రమాణైః ప్రమితంభువి।
యోవమన్యేతతేహూభేహేతుశాస్త్రాశ్రయాన్నరః।
ససాధుభిర్బహిష్కార్యోనాస్తికోవేదనిందకః॥

என்புழி. முநிவர்கள் வேதங்களை யிடைவிடாது காண்கின்றனர்: ஸ்மிருதிகளை யெப்பொழுதுஞ் சிந்திக்கின்றனர்: ஆதலால், சுருதிஸ்மிருதிகளிரண்டும் அளக்கத்தக்க அளவைக

ளாகவும், உலகம் அளக்கப்பட்ட பொருளாகவுமிருக் கின்றன. இவ்விரண்டினையும் இவற்றிற்கு வேறாகிய தருக்கமுதலிய கருவி நூலைக்கொண்டு அவமானஞ் செய்கின்ற வொருவனை நாஸ்திகன் எனவும், வேதநிந்தகன் எனவும், அறிவுடையோர்யாவரும் முற்றுந்துறக்கின்றார்கள்-எ-ம்.

பாரதம் அநுசாசநீகபருவத்திலும்.

ధర్మంజిజ్ఞాసమానానాం, ప్రమాణంప్రథమంశ్రుతిః॥
ద్వితీయం ధర్మశాస్త్రంతు, తృతీయం లోకసంగ్రహః॥

என்புழி, தருமத்தையறிய விரும்புவோர்க்குச் சுருதியானது முதலளவையாம். தருமசாஸ்திரமாகிய ஸ்மிருதிகள் இரண்டாமளவையாம். சான்றோர் ஒழுக்க வழக்கமானது மூன்றாமளவையாம். எனவுங்கூறுப. (அளவை=பிரமாணம்) ஆதலால், பாராசர ஸ்மிருதியுரைசெய்வதற்குத் தக்கதென்பதே தேற்றம்.

## பாராசர ஸ்மிருதியின் வகைமை.

இப்பாராசர ஸ்மிருதியென்னும் நூலின்வகைமையைக் கூறுமிடத்தில், இரண்டுகாண்டமும், பன்னிரண்டு அத்தியாயமும், ஐந்நூற்றுத்தொண்ணூற்றிரண்டு சுலோகங்களும் அடங்கியிருக்கின்றன. அவற்றுள், முதல் ஆசாரகாண்டமும் இரண்டாவது பிராயச்சித்த காண்டமுமாம். இவ்விரண்டனுள், ஆசாரம்-என்பது, இச்சித்த பொருளைத் தருவது. எனவே, புண்ணியமுண்டாவது. ஆசாரம், ஒழுக்கம், என்பன ஒருபொருட்கிளவி. பிராயச்சித்தம்-என்பது, வெறுப்பைத்தருகின்ற பாவத்தையொழிப்பது. பிராயச்சித்தம் - எனினும், கழுவாய்-எனினுமொக்கும்.

இவ்வாசாரம், பிராயச்சித்தமென்னு மிரண்டனாலும் உலகத்துள் யாவரும் புண்ணியலோகத்தையடைகின்றனர் என்று வேதங்கூறிற்று. வேதத்தாற்கூறப்பட்ட ஆச்சிரமவொழுக்க முதலியவற்றால், மறுமையில் - அல்லது-பரலோகத்தில் இச்சித்த

பயன்உண்டாகின்றது. நூல்களால் விலக்கப்பட்ட கருமத்தைச் செய்தால் நரகம் என்னும் அநிஷ்டம் உண்டாகும். அநிஷ்டம்-எ-து-வெறுப்பைத்தருந்துன்பமாம். அத்துன்பத்தையொழித்துக் கொள்வதாகிய மார்க்கத்தைவிளக்குநூல் பிராயச்சித்தமென்று கூறப்படும்.

இவ்விரண்டும் மறுமைக்குக்காரணமாகிய கருமம் ஒன்றினுடைய கதிகளாயிருக்கின்றன.

"சுரௌத தருமத்திலும்" (என்றால் வேதசம்பந்தமானதருமம்). அந்தப் பிராயச்சித்தமும் ஒழுக்கமுமேயுள்ளதாகக் காணப்படுகின்றது.

அக்கினிஹோத்திரமுதலியவற்றில் ஒழுக்கங்களை அநுட்டிப்பதே "சுரௌததருமம்" என்னப்படும். விதித்ததற்குமாறாக ஒருவன் ஒருகருமத்தைச் செய்தால், அதனாலுண்டாகிய தோஷம் நீங்குவதற்குப் பிராயச்சித்தஞ்செய்யும்படி வேதத்திற் கூறப்பட்டது. கற்பசூத்திரங்களைச் செய்த ஆசிரியர்களும், இப்பிராயச்சித்தவொழுக்கங்களையே அநுட்டிக்கத்தக்கதாகச் சூத்தரித்தனர்களல்லாமல், விவகாரத்தைக் கூறினாரில்லை. ஆதலால், ஆசிரியர் பராசரனாரும் அவ்வண்ணமேமறுமைக்குக் காரணமாகியஸ்மார்த்ததருமங்களை யுணர்த்தத் தொடங்கி யவ்விரண்டினையே இரண்டு காண்டங்களாக கூறினாரென்றுணர்க.

அற்றேல், அந்த சுருதி சூத்திரங்களாற் பிரோரிக்கப்பட்ட விவகாரம் தருமமாகாவோ வெனில்?

அற்றன்று. தருமமா யிருக்கினுமிருக்க. அது இம்மையொன்றற்கே பயன்படுவதாகின்றது.

என்னை? "காரீரி" என்னும், இஷ்டிமுதலியசுரௌததருமங்களுக்கு மழைபெய்தல் ஒன்றுமேபயனாவதுபோல, விவகாரத்திற்கும் இலாபம், மேன்மை, புகழ்; என்னும் இவ்வளவேபயனாகவிருக்கின்றது. (இஷ்டி=யாகம்).

ஆகவே, விவகாரத்தில் வெற்றியடைந்தவனுக்கு இலாபமும் அதுபோலத் தோற்றவனுக்குத் தண்டனையுமாகிய அவ்வி

ரண்டினளவே, விவகாரத்தில் விதித்த கருமத்திற்கும் விலக்கிய கருமத்திற்கும் பயனுகியசுவர்க்க நரகமாக விருக்கின்றன.

அங்ஙனமன்று. அரசனுக்கும், அரசவையோர்க்கும், சான்றினர்க்கும் முறைதவறி நீதிசெய்வாராயின் விவகாரத்தாற்பாவம் வருகின்றது. ஆதலால்விவகாரத்திற்கு மறுமைப்பயனுமுண்டாமன்றே? (சான்று-எ-து. சாக்ஷி). என்னை?

అదండ్యాన్దండయన్రాజా దండ్యాంశ్చైవాప్యదండయన్।
అయశోమహదాప్నోతి నరకం చాధిగచ్ఛతి।
సభావానప్రవేష్టవ్యా వక్తవ్యంవాసమంజసం।
అబ్రువన్విబ్రువన్వాపి నరోభవతికిల్బిషీ।
సాక్ష్యేనృతం వదన్పాశై ర్బధ్యతేవారుణైర్నరః।
వివశశ్శత వర్షాణి తస్మాత్సాక్షీవదేదృతం॥ என்புழி.

அரசன் தண்டிக்கத் தகாதவர்களைத் தண்டித்தாலும் தண்டிக்கத்தக்கவர்களை தண்டியாது விட்டாலும் பழியையடைகின்றான். அன்றியும் நரகத்திற்குச் செல்கின்றான். எ-ம், ஒருவன் நீதி புரியும் அவைக்களத்துக்குச் செல்லலாகாது. சென்றால்உண்மையையேகூறல்வேண்டும்.தானறிந்ததை அறிந்தபடிச் சொல்லாவிடினும் வேறுவிதமாகச்சொல்லினும், மனிதன்பாவத்தை யடைகின்றான். சான்றில், பொய்கூறினவன் வருணன்பாசத்தால் கட்டப்பட்டவனாய் நூறுவருடபரியந்தமும் தண்டனையநுபவிக்கின்றான். ஆதலால் சான்று உண்மையையே கூறவேண்டும்.

என்று மநு கூறுதலின் அரசன் முதலியோர்க்குக்குற்றம் உண்டாவதாகக் கூறியமாத்திரையால் விவகாரத்திற்குப் போந்தது என்னை? அரசனுக்கும் சான்றினர்க்கும் விவகாரத்திற்கும் யாதொரு சம்பந்தமுமில்லை யல்லவா? அது வாதி பிரிதிவாதிகளுக்கே சம்பந்தப்பட்டிருக்கின்றது. அவ்வாதி பிரதிவாதிகளுக்கோபாவமுள்ளதாக யாண்டுங் கூறப்பட்டதில்லை. தோற்றவனுக்குத்தோல்விக்காரணத்தால்வேறு பிராயச்சித்தமும் கூறியதில்லை ஆகலின்.

கடன்பட்டவனுக்குநரகம்உண்டாகின்றதுஎன்றசொல்வழக்கும் ஆசாரத்தைப்பற்றி வந்தது. அங்ஙனம் தருமசாத்திரத்திற்கு

மாறுக விவகாரஞ்செய்தவனுக்கும் நரகம் உள்ளதேயாயினும், இந்தவிவகாரம் மறுமைப்பயனுக்குச்சிறந்த தென்பது ஒழிக்கத் தக்கதேயாம். ஆகவே, இம்மைப் பயனுக்கே சிறந்த தெனவும் மறுமைக்குச் சிறுபான்மை பயன்படுத லுளதெனவுங் கொள்க.

விவகாரமும் அத்தரும மாகுமேயாயினும் ஆசாரத்திற்கு வேறுபட்டேயிருக்கின்றது.

இனி, இவ்விவகாரம் இம்மைக்குக்காரணமானதேயாயினும் அதற்கு மூலமாகிய வேதவாக்கியமும் உள்ளதாக விருக்கின்றதே யெனில்?

காந்தருவம் முதலிய வுபவேதங்களின் விடயத்தும் அவ் வாறுளதாகக் காணப்படுகின்றது. என்னை?

జగ్రాహపాఠ్యమృగ్వేదాత్సామభ్యోగీతిమేవచ।
యజుర్వేదాదభినయం సామాన్యాథర్వణాదపి॥

என்புழி, இருக்குவேதத்தினின்றும் காலால்நடித்தல்விகற் பமும், சாமத்தில் நின்றும் இசை விகற்பமும், யஜுர்வேதத்தி னின்றும் அவிநய விகற்பமும் அதர்வண வேதத்தி னின்றும் இவற்றினொழிபும் பொதுவுமாகிய சுருதி, லயை, ஸ்தாயி, தாளம் பாவம் முதலியனவும் கொள்ளப்பட்டன என்றதனாலுணர்க. (பாவம் எ-து கருத்து).

இனி, விரித்துக்கூறுவதிற் பயனென்னுளது? இவ்வாசிரியர் பராசரனார் மறுமை யொன்றனையே சிறந்ததாகக் கொண்ட நோக்கமுடையாராதலின் விவகாரகாண்டத்தை விரித்துக்கூறினா ரல்லர்.

ஆயின், இராஜதருமத் தைக்கூறவந்தவிடத்தில் "క్షితింధర్మేణ పాలయేత్" எ-து, அரசன் - பூமியைத் தருமத்தோடுங் காக்கக் கடவன் - என்றவாறு. இவ்வளவு கூறியதால் அரசன் விசா ரிக்க வேண்டுவனவாகிய விவகாரத்தினையும் குறிப்பித்தவாறா யிற்று.

இனி, ஆசாரம் ஒருவன் இச்சித்ததைப்பெறுவதற்குநேரே காரணமாதலால் அதுமுதற்கண்ணே கூறப்பட்டது.

அவ்வாசாரம் வழுவியவிடத்தே உண்டாவது பிராயச்சித்தம் ஆதலால் அப்பிராயச்சித்தம்பின்னே கூறப்பட்டது.

இந்த ஆசாரகாண்டத்தில் மூன்று அத்தியாயங்களும், பிராயச்சித்தகாண்டத்தில் ஒன்பது அத்தியாயங்களு முள்ளனவாம்.

இனி, அம்முதல் அத்தியாயத்துள் கூறியுள்ளன நால்வகை வருணத்தினர்க்கும் உரிய பொதுத்தருமமும் சிறப்புத்தருமமுமாம். சான்றோரொழுக்கம் பொதுத்தருமம் மென்றும்; ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல், என்னும் அறுவகைத்தொழிலும் உலகோம்பல் முதலியனவும் வருணங்களின் சிறப்புத் தருமங்களென்றும் கொள்க.

இரண்டாம் அத்தியாயத்துள் உழவுமுதலிய சீவனோபாயங்களும், பிரமசரியம், கிரகஸ்தம், வாநப்பிரஸ்தம், சந்நியாசம், என்னும் நால்வகை ஆச்சிரமவொழுக்கங்களும் கூறப்பட்டன. ஆச்சிரமம் - எ-து - நிலைமை.

மூன்றும் அத்தியாயத்துள் ஆசூசவகைகளும், பிதுர்சிராத்தத்தொகுதிகளும், கூறப்பட்டன. (ஆசூசம் - எ-து. தீட்டு). இம்மூன்று அத்தியாயங்களுமே ஆசாரகாண்டமாம்.

நாலாவது அத்தியாயத்துள் பிரகீரண பாவங்களுக்குப் பிராயச்சித்தமும், புத்திரபேதங்களும், பரிவேதநப் பிராயச்சித்தமும், கூறப்பட்டன.

ஐந்தாவது அத்தியாயத்துள் நாய்கடித்தன் முதலியவற்றின் பிராயச்சித்தமும், துன்மரணப் பிராயச்சித்தமும் ஆகிதாக்கினிப் பிரேத கருமவிதியும், பிறவுங் கூறப்பட்டன.

ஆறுவது அத்தியாயத்துள் மலிநீகரணப்பிராயச் சித்தமும் சண்டாளாந்ந போஜந முதலியவற்றின் பிராயச் சித்தமும், செம்பு முதலியவற்றின் சுத்தியும், அங்கசுத்தியும், இரதசுத்தியும்(எ-து-சுவைப்பண்டங்களின் சுத்தியும்) பிறவுங்கூறப்பட்டன.

ஏழாவது அத்தியாயத்துள் பூமிசுத்தி, கிரகசுத்திமுதலிய எல்லாச் சுத்திகளுங் கூறப்பட்டன.

எட்டாவது அத்தியாயத்துள் - கோவதை முதலியவற்றின் பிராயச்சித்தமும், சாமாநியமாகப் பரிஷத்திலக்கணமுதலியவும், கூறப்பட்டன. (பரிஷத்து-எது. சபை).

ஒன்பதாவது அத்தியாயத்துள் - அமுரைகையைப்பற்றியும், பசுவினையடித்தலைப்பற்றியும், அரசர்கள் மாதர்கள் மயிர்கழித்தன்முதலியவற்றைப்பற்றியுஞ் செய்யத்தக்கப் பிராயச்சித்தமும், பிராயச்சித்தஞ்செய்து கொள்ளாதவழிவரும் பாவமும் பிறவுங் கூறப்பட்டன.

பத்தாவது அத்தியாயத்துள், புணரத்தகாத மாதரைப் புணர்தலின் பிராயச்சித்தம் முதலிய கூறப்பட்டன.

பதினோராவது அத்தியாயத்துள், புசிக்கத்தகாதனவற்றைப் புசித்தன் முதலியவற்றின் பிராயச்சித்தங் கூறப்பட்டன.

பனிரண்டாவது அத்தியாயத்துள் கூறாது ஒழிந்த எல்லா ஒழிபுகளையுந் தொகுத்துக்கூறப்பட்டன.

இதனானே சொல்லப்படாத பாவங்களுக்கெல்லாம் பிராயச்சித்தங்களை உபலக்கணவிதியால் கொள்ளப்படும். (உபலக்கணம் - எது. ஒன்றற்குக்கூறிய விதியைக்கொண்டு, அதனோடு இயைபு உடையதாய்க்கூறாது ஒழிந்துள்ள பிறவற்றினையு மெடுத்தாளுதல்).

சில விடங்களில், சிலமுக்கியமான அநுபாதங்களுக்குப் பிராயச்சித்தங் கூறவில்லை. சிலவிடங்களில் சிலஇரகசியமானபிராயச்சித்தங்களைக் கூறாதுவிட்டனர்.

சௌமிய பரமுதலிய கிருச்சிரங்களை வேறெவ்விடத்துங் கூறவில்லை.

கருமவிபாகமுங் கூறவில்லை. கருமவிபாகம் - எ - து - முன் ஜநநங்களிற் செய்ததீவினை. அவற்றையெல்லாம் உபலக்கணத்தால் கொள்ளப்படும்.

இவ்வொன்பது அத்தியாயங்களும் பிராயச்சித்த காண்டமாம். இது இக்கலியுகத்தையே பற்றிக் கூறவந்த தருமநூலாதலின், பிராயச்சித்த காண்டமே இதனுள் விரித்துக்கூறப்பட்டது.

என்னை? இக்கலியுகத்தில் பார்வையாலும் எண்ணத்தாலுமே தீவினை மிகவும் விளைவதாயிருக்கின்றது. அதனையொழிக்கத்தக்கப் பிராயச்சித்தத்தைச் செய்து கொள்ளுதற்குரிய மாநுடர்களும் சத்தியில்லாதவர்களாகவும் இருக்கின்றனர்: என்று நினைத்து இந்த ஸ்மிருதியில் சிறுகத்தொகுத்துத் தயவினால் கூறினர்.

எங்ஙனமென்னில்? வேதம் முற்றும் ஓதவேண்டிய அந்தணன் ஒருவன் அவ்வேதத்துள் சிறிதேயோதினும் அமையுமென்றும், வேதியன்செய்யத்தகாத வுழவையேனுஞ் செய்து ஆபற்காலத்திற் பிழைக்கலாமென்றும், கோவதைக்குப் பிராஜாபத்தியஞ்செய்தலாலும், பிரமஹத்திக்குச் சேதுதரிசநத்தாலும் பாவவொழிவு உண்டாமென்றும், கூறியதால், பெருத்தபிராயச்சித்தங்களைச் சிறிதேதொகுத்துக் கூறினரென்பது விளங்கும். இருபிறப்பாளராகிய மூவரும் அவ்வகைத் தொழில் செய்யமுயலுதல், யுகவல்லமையேயல்லது அவர்கள்தோஷமல்லாமையால், அவர்களை அதுபற்றி நிந்தைசெய்யலாகாதென்று முதலிலும் முடிவிலுங் கூறுதலால், இவ்வாசிரியர் தயவுடையவரென்பது விளங்குகின்றது.

உலகத்திலுள்ள எல்லாஸ்மிருதிகளுக்கும் சம்மத மாகும்படி, ஒவ்வொரு பாவத்திற்கும் தக்க முழுப்பிராயச்சித்தத்தைக் கடைப்பிடிப்பதற்கு, எம்போலியர்க்கு ஆற்றலின்று. அன்றியும் ஸ்மிருதிகள் எல்லாவற்றிற்கும் ஒரேவாக்கியத்தால் ஒப்பக்கூறுதல், எவ்வகைப்பட்ட நிபந்தனைநூலுக்கும் முடியாததாயுள்ளது. அல்லதூஉம், அங்ஙனம் வரம்புசெய்து மறுக்கத் தொடங்கினால், தருமநூலுக்குத்தருப்பணஞ்செய்யவேண்டுவதாம்.எனின்? தருமநூலெல்லாம் இறந்துவிடு மென்பதுகருத்து.

ஆயின், வரம்புகடவாத வொழுக்கத்தையுடைய வுத்தமர்கள் துணிந்த நெறியாவது? பிரசித்தமான அருத்தத்தில் ஒன்றோடொன்று மாறுபாடில்லாதவழி எல்லாஸ்மிருதிகளும் பிரமாணமென்பதேயாம். ஆயின், இந்தப் பராசரஸ்மிருதி மற்றைய ஸ்மிருதிகளைப்போல அந்நிய ஸ்மிருதிகளால் எவ்விடத்தும்மாறுபடுதலில்லை. ஆதலால், இப்பராசரர் நூலிற் கூறப்பட்ட விதி

விலக்குகளே,கலியுகத்தில் முக்கியமாக வுபயோகப்படத்தக்கன. மற்றைய தருமநூல்களின் வாக்கியங்களோ வெனில்? எவ்வளவு மாறுபடுதலில்லையோ? அவ்வளவு இப்பராசரநூலோடு ஒப்பக் கொள்ளப்படும்.

ஸ்மிருதிகளில்சொல்லப்பட்டவிஷயங்களை ஆராயுமிடத்து, திருத்தியாகும்படி, ஆகாரத்திற்குச் சோளம், கேழ்வரகு, நெல், கோதுமை, முதலியபலவகைத்தானியங்களையும் கொள்வதுபோல, ஒவ்வொருபாவங்களையும் ஒழிப்பதற்கு அவ்வவ்விருடிகள்வெவ்வேறு பிராயச்சித்தங்களையுங் கூறியவாறாகக் காணப்படுகின்றது. அவ்வாறே இச்சித்தபயனைத்தரும் புண்ணியங்களுங் கூறப்பட்டனவாம்.

எங்ஙனமெனில்? சுவர்க்கப்பேறு ஒன்றினுக்கே "விசுவஜித்துயாகம்", "அக்கினிஹோத்திரம்", "அக்கினிட்டோமம்", "தரிசவிதி" முதலிய அநேகசாதநங்கள் கூறப்பட்டுள்ளன.

பிரம காண்டத்தில் பிரமலோகப் பேற்றைக் குறித்துச் "சாண்டில்யவித்தை," "தகரவித்தை," "சக்ஷுராவித்தை," முதலியவநேக உபாசனைகள்கருவியாகக் கூறப்பட்டுள்ளன.

அதுபோலவே, கருமகாண்டத்திலும் ஒவ்வொரு பாவ நிவர்த்தியின் பொருட்டுப் பிராயச்சித்த விரதங்கள் வேறுவேறு பலகூறப்பட்டுள்ளன.

ஒருபாவத்திற்குக் கழுவாயாக வொருபுறம் பஞ்சகவ்விய முதலியனவும், மற்றொருபுறம் மரணாந்தப் பிராயச் சித்தமும், ஒத்தனவென்று விகற்பநடையாகக் கூறப்பட்டன (மரணாந்தம், எ-து தேகநாசம்வரையும்).

இங்ஙனங் கூறுவது சாகசமாகவிருக்கின்றது. (சாகசம்= வல்லான் வகுப்பு).என்னை? ஒரே கருத்தாவுக்கு அநுவாயினும், அல்லது இதுவாயினும், பிராயச்சித்த மாகுமென்று விகற்பப் படக்கூறுவது, வல்லான் வகுத்தபடியன்றி நியாயசம்மதம் ஆகமாட்டாது.

தருமம் அதிகமாகச்செய்தால் பயன்மிகுதியாக விருக்கின்றதென்னும் நியாயத்தை அநுசரித்து, வல்லான்வகுப்பென்னும்

குற்றத்திற்குப் பரிகாரம் சொல்லலாமே யென்னும் பக்ஷத்தில், அது நம்மிருதிறத்தாருக்கும் ஒத்தவாறும்.

ஆகவே, நியாயத்தைப்பற்றி இவ்வுரைசெய்தலாற் போந்த முடிபு என்னெனின்?

தேயபேதத்தாலும், காலபேதத்தாலும், அதிகாரிபேதத்தாலும், சாத்திரங்களின் கருத்துக்கள் வேறுவேறாய் முடிகின்றனவென்று முன்னமே கூறினும்.

இன்னம், விதிவாக்கியங்களில் அருத்தவாத பாகங்களைவிட்டுச்சொல்லின்அளவாலும், விலக்குஎன்றேகூறுதபக்ஷத்தில்எந்த வாக்கியத்திற்கு எவ்வாறு பொருள் படுகின்றதோ? அவ்வாறு பொருள் கொள்ளலாம்.

ஆகவே, ஸ்மிருதிகளுக்கு உரைசெய்த உரையாசிரியர்கள் இதற்கிதுவே பொருளென்று எங்ஙனங்கூறினொனில்? உள்ளவாறுபொருளையுணருந்திறமில்லாத மந்தஅறிவினர்க்கு,உணர்ச்சியுண்டாம்படிக்கூறியதன்றிவேறல்ல. அங்ஙனங்கூறுக்கால் அற்பமான பாவத்திற்குப் பன்னிரண்டாண்டளவும் பிராயச்சித்தஞ் செய்துகொள்ளினும் பரிகாரமில்லையாம். ஆதலால் அங்ஙனம் வரம்புசெய்து கூறியதென்றுணர்க.

ஆயின், பல பாவங்களின் ஒழிவுக்கும் ஒரோ மகாவிரதஞ் சாலுமாக, வேறுபல கழுவாய்கள் கூறுவானேன்னனில்? பெரிய பாவத்திற்குப்பெரியபிராயச்சித்தமும், சிறியபாவத்திற்குச் சிறிய பிராயச்சித்தமும், ஆற்றலுடையவனுக்கு அதிகப்பிராயச்சித்தமும், அற்பசத்தியுடையவனுக்கு அற்பபிராயச்சித்தமும் உண்டாவது தகுதியாக விருக்கின்றது என்றபடியாம்.

ஆயின், பெரிய பிராயச்சித்தத்தால் சிறுபாவமொழிவாம். சிறுபிராயச்சித்தத்தால் பெரியபாவமொழியா தென்பாமெனில்? இதுபெரியது, இதுசிறியது, என்னும்நியமம்யாண்டுபெற்றவாறு? பெருமுயற்சியாலாயது பெரிது. சிறுமுயற்சியாலாயது சிறியது. என்பாயேல்? நன்றுகூறினாய்! மகாவிரதத்தினும் உழவுபெருவருத்தமுயற்சியது: ஆதலால் அதனையே பெரியதென்று கூறவேண்டும். பஞ்சகவ்வியத்திற்குக்கோமூத்திரம்வேண்டுமெனில்?

கிடைத்தற்கு எளியகோமூத்திரத்தினும், கிடைத்தற்கு அரியசிங்கம்புலிமுதலியவற்றின்மூத்திரங்கிடைப்பதுபெரிதென்றுஎண்ணவும் படும்: ஆயின், அதுவிரதத்திற்குத் தக்கதோ? தக்கதன்று. மகாவிரதமெனில்? தருமசாத்திரத்தில் எந்த அதிகாரிக்கு எதனைப் பெரிதாக விதிக்கப்பட்டதோ? அதனை அவ்வாறே பெரிதென்று தெரிந்துகொள்ளவேண்டும்.

இனி, விரித்து வாதிப்பதிற் பயனென்னை? எதனிடத்து முயற்சிவருத்தமிகுதியாம் உள்ளதோ? அதுவே மகாவிரதமென்னினும் அதனையுமுடன்படுவோம்: ஆயின், பெரியபிராயச்சித்தத்தால் சிறியபாவத்திற்குப் பரிகாரம் வருவதுபோலச் சிறியபிராயச்சித்தத்தால் பெரியபாவத்திற்கும் பரிகாரம் நேருமாம்: சிறு நெருப்புப்பொறிவிரிந்தபெருங்காட்டையும் அழிப்பதுபோலும். சத்தியில்லாத வோர் பெரிய மண்ணுங்கட்டி அக்காட்டினைக் கொளுத்த வல்லதோ? ஆதலால், சாத்திரங்களிற் கூறப்பட்டது சிறியதோர் கழுவாய் ஆயினும், பெரியபாவங்களையும் போக்கத் தக்கதாம் எனில்?

அங்ஙனமன்று. சிறுநெருப்புத்தன்னளவில்நில்லாதுமூண்டு பெரியநெருப்பான பின்னர், அக்காட்டைக் கொளுத்தவல்லதாம். சிறுபிராயச்சித்தமும் அவ்வாறு தன்னளவிற் பெருத்துப் பெரும் பாவங்களை யொழிக்கலாற்றாது: ஆகலின், ஈண்டுக்கூறிய உவமை பொருந்தாது.

அற்றேல், வடிவம் அற்றபாவத்தில் சிறிது ஒழியும் என்பது என்னை? சிறிதுஒழியாது என்பது என்னை? ஒழியுங்கால்எல்லாம் ஒருங்கு ஒழிய வேண்டுவதாமே யெனில்?

அற்றன்று. பாவம்கட்புலன்ஆகாதுஆயினும், அவ்வப்பாவங்களுக்குத்தக்கவாறு ஒவ்வொருவடிவமும் உண்டாயிருக்கின்றது.

அங்ஙனம் பாவத்திற்கு வடிவம் என்பது ஒன்று இல்லை யெனில், ஒருபாவத்திற்கு ஒரேவகையான துன்பமே உண்டாக வேண்டும்: அவ்வாறின்றிப்பலதுன்பம் உண்டாவதால், பாவங்களுக்கு அவயவங்களும் உள்ளனவென்றுணர்க.

ஆகவே, அற்பமாகிய பிராயச்சித்தத்தால் பாவத்தின் அவயவங்களாகிய சிலபாகங்களை ஒழித்துவிடின், மற்றையவற்றிற்குப் போம்வழியாது? ஆதலால் மகாவிரதங்களில் ஒரு பாகமாகிய பிராயச்சித்தத்தால், பாவத்தின் ஒரு பங்கு நாசமடையின், ஒழிந்த பாவத்தின் பாகங்களை ஒழிப்பதற்காக, விரதங்களிற்சேடமாயிருக்கிற பிராயச்சித்த பாகங்களை யெல்லாஞ் செய்துமுடித்தால், அப்போது அப்பாவம் முற்றும் ஒழிந்து சுகமுண்டாம் என்னுங்கருத்தால் ஸ்மிருதிகள் கூறுகின்றன. ஆதலால் சிறியதேயாயினும் பெரியதேயாயினும் எவ்வகைத்தீவினைக்கு எவ்வகைக் கழுவாய் தக்கதென்று, தருமநூலாசிரியர் அனைவரும் ஒருநெறிப்படக் கூறியிருக்கின்றனரோ? அதுவே உண்மையானதாகவிருக்கின்றது.

சிறியதோர் பாவத்திற்காகப் பெரும்பிராயச்சித்தஞ் செய்தால், அப்பெரும் பிராயச்சித்தத்தின் சிலபாகத்தினாலே அவ்வினை யொழிதலால், ஏனையபாகங்கள் பயனிலி ஆகின்றன: ஆதலால், மகாவிரதஞ்செய்வது வீண் எனில்? அற்றன்று. சிலபாகம், பாவத்தை ஒழித்தலால், மற்றையன சுகத்தை யுண்டாக்குவதற்கு ஹேதுவாதல் அன்றி வீணாதல் இல்லையாம்.

அல்லதூஉம், அங்ஙனங்கூறுக்கால் பாவம் இவ்வளவிற்று என்று, உணரலாற்றாதான் ஒருவனுக்குப் பெரியதோர் பிராயச்சித்தத்தைச் செய்துகொள்ளுவதற்கு எங்ஙனம் ஊக்கமுண்டாம்: ஆதலால், பாவம்இத்துணையென்று வரையறை பெறுவிடினும், பெரிய பிராயச்சித்தஞ் செய்துகொள்ளுவதே முறைமையாம். என்னை? அங்ஙனஞ்செய்தால், பாவம் சிறியதேல், அஃது ஒழிந்து சுகமுண்டாகின்றது: பெரியதேல், முற்றும் தொலைகின்றது: ஆகவே, மகா விரதம்பூண்ட புருடன்பெருமையையே அடைகின்றான்என்பதற்குஐயமின்று: என்னும்இக்கருத்தைஉள்ளிட்டஏனைய ஸ்மிருதிநூலாசிரியர் அனைவரும்பிராயச்சித்தங்களை மிகுதிப்படக் கூறிவந்தனர்.

இனி, இப்பராசரரோவெனில்? இக்கலியுகத்தில் மக்களுயிர்க்குச் செய்துமுடித்தற்கு, எளியவாகவும் பெரியபாவங்களைப் போக்கடிக்கத் தக்கவாகவும் உள்ள சிறிய பிராயச்சித்தங்களையே ஆராய்ந்து எடுத்துக்கூறியிருக்கின்றனர்.

ஏனைய விருடிகள் பெரிதுஞ்சிறிதுமாகக்கூறிய பிராயச்சித்தங்களெல்லாம், விரதங்களில் உபயோகப்படுவன வாகுமன்றி, இவ்வாறு ஒத்தபடி இராவாம்.

ஆயினும், ஓர் இருடியால் நியமிக்கப்பட்ட பிராயச்சித்தம் வேறோர் இருடியால் ஒத்தது அல்லவென்று, யாண்டும் மறுக்கப்பட்டதில்லை. ஆதலால், யார் யார் எவ்வெவ்விடயங்களைக் கூறியிருக்கினும், அவற்றையெல்லாம் உடன்பட்டுக் கொள்ளலாம். முனிவர் எல்லாரும்கூறியபிராயச்சித்தங்களெல்லாம் யாவருக்கும் உடன்பாடேயாம்.

அங்ஙனமாயின், இத்துணை விரித்துக்கூறுவதிற் பயனில்லையேயெனில்? ஒவ்வோர் இருடிகூறியகூற்று ஒவ்வொருநூலாக இருக்கின்றது.

ஒன்றனுள் இருக்கும் குணப்பொருளைமற்றொன்றில் கொள்வதுமுறைமை அல்லவாம் அன்றோ எனில்?

ஓ மீமாஞ்சக மந்நியரோ! முனிவர் வாக்கியங்களில் நீராக வலிமையில் விரோத வினாக்களை யெழுப்பி, நுமது பண்டிதத் திறமையை விளக்குகின்றனீர்போலும். அங்ஙனமன்று. ஒரு பாவத்திற்குக் கழுவாயாக ஒருஇருடி ஓர் விரதத்தைக் கூறியிருந்தால், அதே பாவத்திற்குப் பிராயச்சித்தமாக மற்றோர் இருடி வேறோர் விரதத்தைக் கூறியிருக்கின்றனர். அதனால், அவ்விருடியர்வாக்கியங்களிரண்டும் தம்முள் ஒன்றோடொன்று மாறுகொண்டதாமோ? ஆகாவாம். எங்ஙனமெனில்?

அவ்வவ்விருடிகள் கூறிய விரதங்கள் எல்லாவற்றையும் ஒருங்குசேர்த்துச் செய்யவேண்டுமென்னும் சமுச்சயபக்ஷத்தை உடன்படினும், அவ்வாறன்றி, அதைச் செய்யினும் போதும் அல்லது இதைச்செய்யினும் போதும்என்கிற விகற்பபக்ஷத்தை உடன்படினும் உண்டாம் தடையாது? ஒன்று மில்லையல்லவா? (சமுச்சயம் எ-து, கூட்டிக்கொள்வது), (விகற்பம் எ-து, வேறுபடுப்பது).

எங்ஙனமென்னில், கிரஹணம்வந்தால் ஸ்நாநம், தாநம், ஜெபம்,] ஹோமம், என்னும் நைமித்திய விதிகளை அவ்வவரும்

வேறுவேறு கூறியிருந்தால், அவற்றையெல்லாம் ஒப்பக்கொள்ளுஞ் சமுச்சயபக்ஷமே ஒத்ததுஎன்று, உடன்பட்டீர்அன்றே? அவ்வாறே கூறியுள்ள விரதங்களையும் ஒப்பக்கூறும் சமுச்சய பக்ஷத்தை நீர் ஏன் உடன் படலாகாது?

ஒரு விரதத்தால் பாவம் பரிகாரமானால் மற்றொருவிரதம் வீணாகும் என்கிற பக்ஷத்தில், தவம் முழுதும் சுவர்க்கத்துக்குச் சாதநம் என்றுசொல்லியிருக்கும் நியாயத்தைப்பற்றி, அதனையும் உண்மைப்பொருள்என்று ஒப்புக்கொள்ளலாம்: ஆயின், "சாந்திராயணம்" முதலிய விரதங்களைத் தவமென்று கூறியதுபோல "பிக்ஷாகாரியம்," "பிரமகபாலதாரணம்," முதலிய விரதங்களைத் தவமெனக்கூறியது இல்லையாதலால், வேறு விரதங்களால் தீவினைதீர்ந்தவன் ஒருவன், இவ்விரதங்களைச் செய்யவேண்டியது இல்லை: ஆகலின் சமுச்சய பக்ஷம்வேண்டா: ஆகவே, விகற்பப் பக்ஷத்தை நீர் ஏன் உடன் படலாகாது?

இப்படிப்பட்ட இடங்களில் விகற்பத்தை உடன்படினும், கிரஹணகாலத்திற்கு விதித்த ஸ்நாந தாந ஜெப தருப்பணம் என்னுமிவற்றுள், விகற்ப பக்ஷத்தை யெங்ஙனம் உடன்படலாம் என்பாயேல்? அதற்கு விடைமுன்னரே கூறினம்: விகற்பமே யாயினும் சமுச்சயமேயாயினும் கூடுமாதலின், நின்வினாவுக்கு இடனின்று.

எங்ஙனம்,ஆயினுமாக. மூலப்பிரமாணமாகிய வசனமின்றி, நம்மறிவால் வகுத்துக்கொள்ளப்பட்ட முடிபுகளை யாம் உடன்படுவதில்லை. என்னை? தான்அறிந்தேவேண்டுமென்று இச்சையாற் செய்த பாவத்திற்குக் கழுவாய்மிகுதியாகவே இருக்கின்றது. அறியாதுசெய்த பாவத்திற்குக் கழுவாய் சிறுகியிருக்கின்றது என்னையேல்? நன்று கூறினாய்.

மூலவசனங்களில் தான் அறிந்தும் அறியாதும் என்றசொல் உள்ளதாயின், அவற்றிற்கு ஆண்டு அங்ஙனம் யாமும் உடன்படுகின்றாம். மூலப்பிரமாணத்தையேஅடைக்கலம்புக்க யாமன்றே?

எம்மறிவானேயாம் வரம்புசெய்து கொள்வது ஒன்று உண்டாகுமாயின், கபிலமுனிஎல்லாம் உணர்ந்தவரன்றே? அவர் எல்லாம் உணர்ந்தவராகவே, கணாதமுனிவர் அல்லர் என்று

எங்ஙனம்? என்னும்பெருவழக்குக்குஇடனுய்த்தருமவழிமுற்றும் கெடுகின்றது. இக்கருத்தை "பிரமசூத்திரம்" உ-ம் அத்தியாயம், முதற்பாதம், முதலாவது, ஸ்மிருதி அதிகரண பாஷியத்துட் காண்க.

இனி, மீமாம்ஸகத்துவம்என்பதுஎன்னே? மூலவாக்கியங்களை அனுசரித்துவிசாரஞ்செய்துபொருட்டிறத்தை வரம்புசெய்வதே யாம். அங்ஙனமின்றிச் செய்தவிசாரங்களெல்லாம் அவ்வவர்கல்வித் திறத்தினைக்காட்டும் அளவாவதன்றி மீமாம்ஸை யாகமாட்டாது. (மீமாம்ஸகத்துவம் எ-து, நியாயம் விளங்குந்தன்மை).

அறிந்துசெய்யாத பாவங்கட்கு இங்ஙனம் இது பிராயச்சித்தமாகிய சுத்தியென்று கூறப்பட்ட விடத்தில், அவ்வாறு செய்தால் அத்தீவினைமுற்றும் தொலைகின்றது. அதே பிராயச்சித்தத்தை அறிந்துசெய்த பாவங்களில் செய்தால் ஒன்றும் ஆவதில்லையாம்.

ஒருஸ்மிருதியில் ஒருசுத்தியைக் கூறியிருந்தால், வேறு ஸ்மிருதிகளில் அச்சுத்தி வேறுவகையாகக் கூறப்பட்டிருக்கின்றது. இங்ஙனங் கூறுவதனுள்ளும் சாமாநியமாகவும் விசேடமாகவும்கூறும். விசேடங்கூறும் நூல்கிடைக்குமளவும் சாமானியத்தைக்கூறும் நூலுக்குப் பொருள்நிச்சயமாவதில்லை. விசேடவிதிகிடைத்தால் சாமாநியவிதியாற் பயனில்லை. அவ்வாறுகூறுக்கால் பிரமாணமென்பதே வேறாகமுடியும்.

இங்ஙனம் பிரமாணம் இதுவென வரம்புசெய்த ஆசிரியர்கள் எல்லாமுணர்ந்தவர்கள்: ஆதலின், ஒவ்வொரு விடயத்தின் எல்லாக் குணங்களையும் உபசங்காரஞ்செய்தே கூறியிருக்கின்றனர். ஈண்டு (உபசங்காரம்-எ-து-சுருக்குதல்) ஆதலால்அதற்குச் சம்பந்தமாகிய நூல்களெல்லாமும் எவ்வாறு இருக்கின்றனவோ? அவ்வாறே உடன்படல்வேண்டும்.

ஒருஸ்மிருதிக்கண்ணே கூறப்பட்டிருக்கும் பிராயச்சித்தங்களை ஆராய்ந்துநிச்சயிக்கும்போது, ஆண்டுகாணப்படாது இருப்பவைகளாகவும் வேறுஸ்மிருதிகளால் வெளிபெற வுணரத்தக்கவைகளாகவும் இருக்கின்றன. ஆகவே அவற்றிற்குச் சம்பந்தப்பட்டவிடயங்களெல்லாவற்றையும்உபசங்காரஞ்செய்து, ஒருங்கு

கொள்ளாவிடத்து, அவ்விரதத்தால் யாதொரு பயனும் இல்லையாகமுடிகின்றது.

விதிவாக்கியங்கள் எவ்வாறு காணப்படுகின்றனவோ? அதிகாரியின் ஆற்றல் எவ்வளவினதோ? அவ்வளவில் வினைமுடித்தல் வேண்டும்: அன்றி, குணமில்லையென்னும் ஆசங்கையால் அதனை வெறுத்துக் கைவிடுதல் ஒத்தபடியன்று.

பிராயச்சித்த விடயங்களிலும் ஆசாரவிடயங்களிலும்வேறுயுள்ள ஏனையதருமநூலுள் யாம் கண்டவாறு, அவ்வவற்றையெல்லாம் அவ்வவ்விடங்களில் விளங்கக் குறித்துக்காட்டி, ஆண்டாண்டு வேண்டுவனவாகிய அவ்வவற்றின் குணங்களை யெல்லாம் உபசங்கரித்துக் கூறியிருக்கின்றாம். இந்தக்குணோபசங்கார வகைமைகளை "பிரமசூத்திரம்" ௩-ம் அத்தியாயம், ௩-ம்பாதம், முதற் சூத்திரத்துட்காண்க.

மந்தராயினோர்க்கு உணர்ச்சி உண்டாகும்படி, முற்காலத்து நிபந்தனை நூலாசிரியர் எவ்வாறு கூறியிருக்கின்றனரோ? அவ்வாறு யாமும் ஒவ்வொருவிடயங்களையும் ஆராய்ச்சிசெய்து முடிவுகூறியிருக்கின்றாம்.

எவ்விடயத்தில் எது கூறப்பட்டிருக்கின்றதோ? அவ்விடயத்தில்அதுசிறந்தது அன்றி ஏனையசிறந்ததுஅன்றாம்:ஆயின்,அவ்விடயத்தைக்குறித்து வேறு சிலவிடங்களிற்கூறப்பட்டிருக்கின்ற விசேடம் ஏதேனும் கிடைக்கும் பக்ஷத்தில், அதனை வேண்டாம் என்று யாம் விலக்குவதில்லை: ஆகலின், மேற்கூறிய எல்லா விடயங்களிலும், யாவர்க்கும் உணர்ச்சியுண்டாம் பொருட்டு இப் பராசரஸ்மிருதிக்கு உரைசெய்யத் தொடங்கினோம் என்றுணர்க.

ஓம்

உ சிவகணபதயேநம:.

# ஸ்ரீபராசரஸ்மிருதிமூலமும்,

மாதவீய வியாக்கியாநக் கருத்தின்படித்

தமிழ் மொழி பெயர்ப்பும்,

## முதலாவது - ஆசாரகாண்டம்,

முதல்

## அத்தியாயம்.

శ్లో ॥ అథాతోహిమశైలాగ్రే దేవదారువనాలయే।
వ్యాసమేకాగ్రమాసీన మపృచ్ఛన్నృషయః పురా ॥ ❊ ౧

శ్లో ॥ మానుషాణాంహితంధర్మం వర్తమానేకలౌయుగే।
శౌచాచారంయథావచ్చ వదసత్యవతీసుత ॥❊ ❊ ౨

என்பன சுலோகங்கள்.

இவை யென்னுதலிற்றோ வெனின்:—எடுத்துக்கொண்ட நூலின்கண்ணே கேட்போருக்கு ஊக்கஞ் செல்லுதற்பொருட்டு நூலினுக்குரிய அநுபந்த சதுட்டயமாகிய சம்பந்தம், அதிகாரி விடயம், பயன், என்னு மிந்நான்கினையுங் கூறுதல் நுதலிற்று.

(இவற்றின் பொருள்).

ஒருவன் வேதமோதிய பின்னர், " ధర్మేణపాపమపనుదతి " எனவும், "ధర్మంచర" எனவும், வரும் சுருதிகளால், சாதாரணமாகத் தருமத்தாற் பாபத்தைப் போக்கிக்கொள்ளுகிறான், என்றும்; தருமத்தைக் கடைப்பிடிக்கவேண்டும், என்றும்; உணர்ந்திருத்தலின், அத்தருமவடிவம் யாது? அதனை அறியவேண்டும் என்னும் இச்சைபிறத்தல் இயல்பு ஆதலால்; முற்காலத்து அங்ஙனம் அவ்வெண்ணம் வாய்த்தவிருடியர், இமயமலையின் கொடுமுடிக்கண்ணதாகிய தேவதாரு வநத்தினிடத்து, ஒருவழிப்பட்ட மநத்தின

ராய் வீற்றிருக்கும் வியாசரையடைந்து, ஓ! சத்தியவதிபுத்திரரே! இக்கலியுகத்தில் மக்களுயிர்க்கு இதவாகிய தருமத்தையும் சுத்தமாகிய ஒழுக்கத்தையும் உண்மையாகக் கூறவேண்டுமென்று வினவினர்-எ-று.

“ మంగళానంతరారంభప్రశ్నకార్త్స్న్యేష్వథో అథ ” என்ற நிகண்டின்படி, “ అథ ” என்னும் அவ்வியயம், “ மங்கலம் ”, “ ஆநந்தரியம் ”, “ ஆரம்பம் ”, “ பிரசினை ”, “ கார்ச்சிநியம் ” என்னும்பல பொருள் ஒருசொல். ஆநந்தரியம்=பின்னர். ஆரம்பம்=தொடங்குதல். பிரசினை=வினுதல். கார்ச்சிநியம்=எல்லாம். அவற்றுள், அதற்கு ஈண்டு பின்னர் என்னும் பொருளினையே கூறுவானேன் எனில்?

மங்கலம் என்பதும், பின்பு என்பதும், ஒழியப்பிறபொருளைக்கூறுங்கால், பின்வரும் வினவினர் என்னும் வினைச்சொல்லோடு இயைபு இல்லையாம்.

ஆதலின், பின்னர் வினவினர் என்றுகூறின், அந்வயத்திற்குத் தகுதியாக விருத்தலின், “ అథ ” என்பதற்கு அநந்தரம் என்றே பொருள் கூறப்பட்டது. ஆநந்தரியம் = அநந்தரம்= பின்பு=பின்னர், என்பனதம்முள் ஒக்கும். அந்வயம்=சொல்லும் பொருளும் இயைபு பெறநிற்றல்.

ஆரம்பம் என்று பொருள் கூறினால், தொடக்கத்தில் வினவினர் எனவே இயைபு இல்லையாம்.

வினுதல் என்று பொருள்கூறின், வினவி வினவினர் எனப்படுதலால், கூறியது கூறல் என்னும் குற்றத்திற்கு இடமாம். அன்றி இயைபும் இல்லையாம். இயைபு=சம்பந்தம்.

எல்லாம் என்று பொருள் கூறின், எல்லாவற்றையும் வினவினர்; எனச்சொல் இயைபுபெற்று இருப்பினும், முன்னைய சம்பந்தங் குறியாது செல்கின்றது.

ஆநந்தரியப்பொருளாக உரைத்தால், முன்னடந்ததற்கும் பின்வினவுதற்கும், உள்ளகாரணகாரியப்பொருட்டான சம்பந்தம் குறிக்கப்படுகின்றது ஆகலின்.

ஆயின், “ హృదయస్యాగ్రేవదత్యథజిహ్వయాऽథవక్షసః ” என்பது-மநுத்தின் முடிவில் கூறுகின்றான்: பின்பு நாவினால்: அதன்

பின்னர் நெஞ்சினுடைய. எ - று. இந்தசுருதி வாக்கியத்துள் "அத" என்னுஞ் சொல்லினுக்குப் பின்பு என்பதுபொருளாக இருந்தும், காரணகாரியப்பொருட்டான சம்பந்தம் குறித்தது இல்லையே என்பாயேல்!

அங்ஙனம் அதுவழுவு அன்று. அவ்விடத்தில்விரும்பப் பட்ட கருமத்தினுடைய அநுட்டாந முறை மாத்திரையில் கூறப்பட்டு இருக்கின்றது. ஈண்டோஎனில்? சாமக்கிரியை யாகிய துணைக்காரணம், அல்லது, கருவிக்கும் அதன்காரியத்திற் கும் உள்ள முறைவழுவாத விசேடம் எதுவோ? அதுவே சிறந் ததாம்: ஆதலின், அஃது உடன்பாடு ஆகின்றது.

அந்தச் சிறப்பு என்பது, முன்னும் பின்னுமாயுள்ள எவ் விரண்டினுக்கு, விளம்பம், வியபிசாரம், என்னும் காலநீட்டித்த லும் முறைகடந்து செல்லுதலுமாகியகுற்றம் உண்டாவது இல்லை யோ? அதுசிறப்புத்தன்மையாம். துணைக்காரணமுற்றும்கிடைத்த பின்பு, காரியம்பிறவாது காலந் தாழ்த்தல் இல்லை. காரணம் இல்லாமல் காரியம் பிறத்தலாகிய முறைகடத்தலும் இல்லை. இக்கருத்து, "అథాతో బ్రహ్మజిజ్ఞాసా" என்ற "பிரமசூத்திரத்தில்" விவரணாசாரியரால் விரித்து உரைக்கப்பட்டுள்ளது.

இவ்விடத்தில் துணைக்கருவி என்பதுயாது என்னின்? வினுதல் என்னும் காரியம்பிறத்தற்கு வினவத்தக்க விடயத்தின் சாதாரண உணர்ச்சியே யாம். ஒருவிடயத்தை ஒருவன் சிறிதும் உணராத இடத்தும் முற்றும், உணர்ந்த இடத்தும், வினவுதல் இல்லையாம் ஆதலின்.

"ధర్మేణపాపమపనుదతి", "ధర్మంచర", என்பன தருமத்தால் தீவினையைப் போக்கடிக்கின்றான். எ-ம், தருமத்தில் ஒழுருக. எ-ம், கூறியவாறு, இவ்வேதவாக்கியங்களை ஓதுவதனால் ஒரு வனுக்குத் தருமஞ்செய்ய வேண்டும் என்னும் பொது உணர்ச்சி உண்டாகின்றது. (பொது = சாதாரணம், சாமாநியம், என்பன ஒருபொருள்). ஆதலால், "அத" என்னும் மொழிக்கு வேதாத்தி யயநம் செய்தபின்பு என்று பொருள்படுகின்றது.

அல்லதூஉம், "వర్ణాశ్రమ" என்றுமூலத்துள்ளே, ஆசிரிய ரால் விசேடித்துக்கூறப்பட்டதனால், ஈண்டு, "அத" என்பதற்கு

ஏனையயுகங்களின் தருமங்களை அறிந்தபின்பு எனப்பொருள்கூறி னும் அமையும். (விசேடித்தல்=அடைகொடுத்தல்).

எடுத்துக்கொண்டநூல் இனிது முடிதற்பொருட்டு, மங்கல மொழியால் தொடங்கவேண்டும், என்பது சான்றோர் வழக்காம் ஆகலின், இந்த "అథ" என்பதற்கு மங்கலம் உண்டாக என்று ஏன் பொருள்கூறலாகாது எனின் ?

இங்ஙனம் அந்த அருத்தத்தைக் கூறவேண்டுவது இல்லை. ஏனெனில்? பின்னர் என்று பொருள்கூறப்பட்ட "అథ" என்னுஞ் சத்தத்தைக்கேட்ட அளவிலே, வீணை மத்தள முதலியவற்றின் ஓசையைப்போலும் மங்களகரமாகவே இருக்கின்றது ஆகலின்.

என்னை ? "ఓంకారశ్చాథశబ్దశ్చ ద్వావేతౌ బ్రహ్మణః పురా । కంఠం భిత్త్వా వినిర్యాతౌ తస్మాన్మాంగళికావుభౌ" எ-து- ஓங்காரமும், "అథ" (அத) என்னும் சொல்லும், ஆகியஇரண்டும், முன்னம் பிரமனுடைய மிடற்றைப் பேதித்துக்கொண்டு வெளிப்பட்டன ஆதலால், இவ் விரண்டும் மங்கலசத்தமாகும். எ-று.

இங்ஙனம் ஆயின், இவ்விடத்தில் ஓங்காரத்தை ஏன்கூற லாகாது? எனின், அங்ஙனம் அன்று. அது வேதவிஷயத்தில் மாத்திரம்கூறத்தக்கதாக இருக்கின்றது. அதனாற்றான் "అస్య తు వేదాదిత్వాత్సర్వమనూనాం ప్రయుజ్యతే హ్యాదౌ" எ-து, இப்பிரணவம் வேதத்திற்கு ஆதியாம், ஆதலால், எல்லாமந்திரங்களுக்கும் முதலில் பிரயோ கிக்கப்படுகின்றது. எ-று. இது "பிரபஞ்சசாரம்" என்னும்நூலி னுள் சங்கராசாரியராலும் கூறப்பட்டது.

ஆதலால், ஸ்மிருதிகளின் முதற்கண்ணே முநிவர்கள் எல்லாம், "అథ" (அத)என்பதனையே கூறினார்கள். ஆகவே, ஓதத் தக்க அதிகாரிகளின் தரத்தை விசாரித்துப் பிரணவத்தையும், "అథ" என்பதனையும், இடம்வகுத்துக் கூறியவாறாக வெளிப் படுகின்றது.

பிரணவத்தை ஓதுதற்கு உரிய அதிகாரிகள் ஆவார்:—வேதி யன், அரசன், வைசியன் என்னும் மூன்றுவருணத்தினர் மாத்திர மே; என்றுவேதங்கூறிற்று .என்னை ? సావిత్రీం ప్రణవం యజుర్లక్ష్మీం స్త్రీశూద్రాణాం నేచ్ఛంతి." எ-து, காயத்திரி, பிரணவம், யஜுர்வேதம்,

இலக்குமி, இவைகளை மாதரும் சூத்திரரும் விரும்பத்தக்க அதிகாரிகள் அல்லர்; எ-று. இது சுருதிமொழி. (மாதர் சூத்திரர்) பிரணவாதிகளுக்கு அதிகாரியர் அல்லர்! எனவே, ஏனையர் அதிகாரியர் என்றபடி.

"பௌருஷேயம்" ஆகிய நூல்கள் எல்லாவருணர்க்கும் பொது! ஆதலால், அதற்குப்பிரணவத்தை ஒழித்து "అథ" என்பதனை மங்கலமொழியாகக் கூறுவதே தகுதியுடைத்து என்று உணர்க. பௌருஷேயம்=மாந்தராற் சொல்லப்பட்டது. இருடிகளும் மாந்தரோ ஆவார். திருவள்ளுவனாரும் "நிறைமொழி மாந்தர்" என்றதனாலும்உணர்க.

இனி "అతః" என்பது ஏதுப்பொருளில் வந்தது. ஏதுவாவது, என்னெனில்? எந்த ஏதுவால் ஒரு வேதசாகையை ஓதினவனுக்கு ஏனையசாகைகள் எல்லாம் கூறியதரும உணர்ச்சி முழுவதும் உண்டாவது இல்லையோ? அதுவும்; எந்த ஏதுவால் வேறு ஒருயுக தருமத்தை உணர்ந்த உணர்ச்சியைக் கொண்டு,ஏனையயுகதருமங்களை உணரலாகாதோ? அதுவும், ஏதுவாம். (எனவே, முழுவதும் உணராமையே ஏது என்றபடி).

தருமங்கள் அனைத்தும் தோற்றுவதற்கு ஒருதூராயும், பரந்து சிதறிக்கிடக்கும் கிளைகளை உடையதாயும் இருக்கின்ற முடிவு இல்லாத வேதவாக்கியங்களின் துணிபு, "யோகியினது" யோகக்காட்சியினாலேயே பெறத்தக்கதாக இருக்கின்றது. அக்காட்சியோ? யோகாசநத்தில் இருந்தபொழுதே கிடைக்கத் தக்கதாக இருக்கின்றது. அந்த யோகாசந இருக்கையோ? தக்க இடம்பற்றியதாக விருக்கின்றது. ஆதலால், அவ்விசேடத்தைக் குறிப்பதற்கு "హిమశైలాగ్రే దేవదారువనాలయే." என்றார். (தூர்=வேர்), (சாகை=கிளை), (யோகாசநத்தில் இருத்தல்=தியாநசமாதியின் பொருட்டு ஓரிடத்தில் பீடம் இட்டு உட்கார்ந்திருத்தல்).

இனி, அவ்விசேடமாவது என்னெனில்? హిమశైలాగ్రం=பனிமலைஉச்சி. எனவே, ஏனையஉயிர்கள் அவ்விடத்தை அடைவதற்கு அருமையாதல் கூறப்பட்டது. ஆகவே, அது இரகசிய

மான இடம் என்று விளங்குகின்றது. இக்கருத்து உபநிடதங்களிலும்கூறியபடி.

என்னை? "கைவல் யோபநிடதத்தில்".—"వివిక్తదేశేతుసుఖాసనస్థః." எ-து, இரகசியமான இடத்தில் சுகமான ஆசநத்தில்-எ-ம். "க்ஷுரிகோபநிடதத்தில்."—"నిశ్శబ్దం దేశమాస్థాయ తత్రాసనమవాస్థితః." எ-து, சத்தமில்லாத இடத்தில் ஆசநமிட்டு உட்கார்ந்து, எ-ம், கூறியவாறுகாண்க.

தேவதாருவநத்தைக்கூறினர்: தவம்செய்வார் மநத்திற்கு ஒத்த இடம் என்பது குறித்தற்கு. என்னை? "சுவேதாசுவதர சாகையின் மந்திரோபநிஷத்தில்," "సమేశుచౌశర్కరావహ్నివాలుకా వివర్జితేశబ్దజలాశ్రయాదిభిః। మనోనుకూలేనతుచక్షుఃపీడనే గుహానివాతాశ్రయణే ప్రయోజయేత్." — எ-து, ஒத்தபடியாயும், புநிதமானதாயும், வன்னிலமாயும், வெப்பம் மணலுறுத்தல் முதலியவாதைகள் இல்லாததாயும், பேரிரைச்சல்நீர்கோத்தல்முதலிய இல்லாததாயும், மநத்தினுக்கு இசைந்ததாயும், கண்ணுக்குத் துன்பம்தராததாயும், காற்றின் பீடைக்கும்குளிர்பனிஉபாதிக்கும் அமைந்தகுகையுடையதாயும், உள்ளஇடத்தைத்தவத்திற்கு உபயோகிக்கவேண்டும். என்றவாறு காண்க. கண்ணுக்குத் துன்பந் தராமையாவது, கொசுமுதலியவற்றால் வாதைப்படுதல் இல்லாமையாம்.

அங்ஙனம் அன்று. "యత్రైకాగ్రతాతత్రావిశేషాత్." என்ற இந்த அதிகரணத்தில், (அதிகரணம்=இடம்) யோகமுயற்சிக்குத் திக்கு, தேசம், காலம், இவற்றினது நியமம் வேண்டுவது இல்லை, என்றதேயெனில்? நல்லது, அம்முயற்சிக்குக் காட்சிப்படாத ஏதுக்களை நியமமாகக் கூறுவிட்டாலும், காட்சிப்பட்டுள்ள மநம் ஒருவழிப்படுதலாகிய ஏது நியமமாதலைக் கூறுதுவிட்டது இல்லை என்று உணர்க.

இனி, "ఏకాగ్రం" என்றதனால் ஐந்துவகையான உள்ளநிலைக்களத்துள், ஐம்பொறிக்கும் விடயமாகாத அல்லது எட்டாதபொருளை அறிவதற்குத் தக்க நான்காவது நிலைக்களத்தைக் குறித்தவாறு ஆயிற்று. இங்ஙனம், ஆசிரியர், பதஞ்சலியார் கூறிய "யோகசூத்திரத்தின்" உரையாகிய வையாசகபாஷியம்." எ-து, வியாசர்செய்தமாபாடியத்துள், உள்ளத்தின் நிலைக்களம் ஐந்து

எனக் குறிக்கப்பட்டது. உள்ள நிலைக்களத்தை "சித்தபூமி" எனவும் கூறுவர்.

அவைவருமாறு:— "క్షిప్తం మూఢం విక్షిప్తమేకాగ్రం నిరుద్ధమితిచిత్త భూమయః." எ-து, க்ஷிப்தம், மூடம், விக்ஷிப்தம், ஏகாக்கிரம், நிருத்தம், என்னும் ஐந்தும் சித்தபூமியாம். எ-று. இவற்றை முறையே:—உழல்நிலை, உறக்கநிலை, இருமைநிலை, ஒருவழிநிலை, தன்னிலை என்னப்படும்.

அவற்றுள், முதலாவது:—க்ஷிப்தம்=உழல்நிலை, என்பது, ஒவ்வொருகணத்திலும் இருவினையாகியகாற்றினால் அநுபவிக்கப் படும் பலபொருளினும்ஆசையுடையதாய் விரைவில்சுழலும்படிச் செலுத்தப்பட்ட மநத்தின் நிலைமையாம்.

இரண்டாவது:—மூடம்=உறக்கநிலை - என்பது, தூக்கம், சோம்பல், நெடுநீர் முதலியவற்றோடுங்கூடிய மநநிலைமையாம். (நெடுநீர்=வறிதுகாலந்தாழ்த்தல்=தாமசம். வறிது=வீண்).

மூன்றாவது:—விக்ஷிப்தம்=இருமைநிலை-என்பது, எப்போதாயினும் ஒருபோது சமாதியோடுகூடி, மற்றைப்போதெல்லாம் விடயங்களில் உழலுகின்ற மநநிலைமையாம். (சமாதி=கருவிகரணங்கள் எல்லாம் தன்னிலையில் ஒத்துநிற்றல்). (விடயம்=பற்றப் படும்பொருள்).

நான்காவது:—ஏகாக்கிரம்=ஒருவழிநிலை-என்பது, இயமம், நியமம், முதலிய அட்டாங்கயோகப்பயிற்சியின் வல்லபத்தால், ஒரேபொருளினிடத்தில் மநத்தின்ஒழுக்கமானது, இடைவிடாது தொடர்ந்துசெல்லும் வெள்ளம்போல, செல்லும் நிலைமையாம். (ஒழுக்கம் - என்பது, இவ்விடத்தில், நடக்கும் நடை).

ஐந்தாவது:—நிருத்தம்=தன்னிலை - என்பது, மநம், தன்னை மறந்து சோர்ந்துபோகாமல் விழித்திருந்தும், வேறு ஒரு புற விடயத்திலும் உணர்ச்சி பிறவாது இருத்தலும், அவ்வுணர்ச்சி யொருகால் வேண்டும்போது, பிறப்பதற்கு ஏதுவாகிய அதன் காரியம் வித்துப்போல வாசனைமாத்திரையில் சேடப்பட்டுக் கெடாது நிற்றலுமாகிய அந்நிலைமை யாம். (சேடம்=மீதி).

அந்த ஐந்தனுள், க்ஷிப்தமூடங்களாகிய உழல்நிலை, உறக்கநிலை, இரண்டும் யோகமார்க்கத்திற்குப்பயன்பட்டன அல்ல: என்பது யாவரும் அறிந்தபடியாம்.

இனி, விக்ஷிப்தமாகிய இருமை நிலையோவெனில்? பலகாலும்விடயப்பற்றாய் உழலுகின்றநெஞ்சு, அவ்வுழலுதலை ஒழித்து ஒருபோது சமாதி கூடுவதால் அதுயோகம் என்றுகூறப்படாது. என்னை? வறுத்தவித்து முளைத்துப் பயன்கொடாதவாறுபோல, அந்த ஏகதேச சமாதி தவறிப்போதலையுடையதாம்; ஆதலின் பயனைக்கொடாதாம்.

ஆகவே, ஏகாக்கிரமாகிய ஒருவழிநிலையோ எனின்? அது உண்மைப்பொருளை விளக்குகின்றது; கவலைகளை நாளுக்குநாள் குறைந்தொழியும்படிக் கெடுக்கின்றது; தன்னைப்பந்தித்து இருக்கும் வினைக்கட்டுகளை அவிழ்த்து எறிகின்றது, தான்குறித்துக் கொண்ட இலக்கியமாகியபொருளைத் தன் எதிர்முகமாய்வெளிப்படச்செய்கின்றது; ஆதலால் அது, "சம்பிராத யோகம்" என்று பெரியரால் புகழப்படுகின்றது. அதனுள் "சம்மியம" விசேடத்தால் பலவகைப்பட்ட யோகச் செல்வம் உண்டாகின்றன. "தாரணை, தியானம், சமாதி" என்னும் மூன்றும் ஒரேவிடயமாம்: ஆகலின், அது "சம்மியமம்" என்றுசொல்லப்படுகின்றது. (தாரணை=விதித்தவிடங்களில் குறித்தபொருளை நினைவினால் தரித்தல். தியானம் ஒருபொருளை மறவாதுநினைத்தல்). சமாதிமேலே கூறப்பட்டது.

ஒற்றுமை நயத்தினைப் பற்றிய பலவேறுபாடுகளை யுடைய சத்தஞானமும், அருத்தஞானமும், ஆகிய அவ்விரண்டில் அந்தச் "சம்மியமம்" என்பது ஒருவனுக்கு உண்டாகுமாயின், அதனால், உலகத்ின்கணுள்ள சத்தங்கள் அருத்தங்கள் எல்லாம் கண்கூடாக விளங்கச்சிதே பறவை முதலியவற்றின் பாடைகள் தாமே விளங்குவனவாம்: என்று ஆசிரியர் - பதஞ்சலியாரால் கூறப்பட்டது. அதுபோலும் நியாயத்தினால், பலபடக்கிடந்த வேதசாகைகளினுடைய எல்லாஞானமும் உண்டாகும் என்னும் கருத்தால் "[illegible]" என்று கூறப்பட்டது. அவ்வொருவழிப்படும் நிலைமைக்கு அங்கமாயுள்ளது, "ஆசனம்" உடைமை:

ஆதலால் " ఆసీనం " என்றார். (அங்கம் = அவயவம் = உறுப்பு. ஆசநம்=இருப்பு. ஆசீநம்=இருத்தல்).

எனவே, விடயப்பற்று உள்ளவர்க்கு மநம் அலைவுடைமையால் சமாதிகைகூடாது: சமாதி கைகூடாதவர்க்கு முக்காலத்தும் நிகழ்பொருளை உணர்தல்கூடாது : கூடாதுபோகவே அவர் எல்லாம் உணர்ந்தவர் ஆகார் : ஆகவே அவர் ஆசிரியர் ஆகார் ஆகலின், முனிவர்கணம் வினவுதற்கு நாடிச்சென்ற வியாசர் வினவி அறிதற்குஇடனாகத்தக்க ஆசிரியர்என்பது, அறிவித்தற்கு இங்ஙனம்கூறியது, கருத்தாகக்கொள்க. (நிகழ்பொருள் = உள்ள பொருள்).

அங்ஙனம் வியாசசூத்திரம், " ఆసీనస్సంభవాత్ ".— எ-து. (படுத்திருப்பவனுக்குக் காரணம் தோன்றாமலே நித்திரை வந்து சோரச்செய்கின்றது. நின்றிருப்பவனுக்குத் தேகத்தைத் தரிப்பதில் மநம்முயலுகின்றது. நடப்பவனுக்கும் ஓடுகின்றவனுக்கும் மநம்தவறிப்போதல் மிகுதியாக இருக்கின்றது. இக்குற்றங்களை ஒழிக்கவேமிக்கது இருத்தலாம்). ஆகவே, இருப்பவனுக்கு ஆனலோ? சித்தம் ஏகாக்கிரமாதல்=ஒருவழிப்படுதல் கூடுகின்றது; ஆதலால், இருந்துயோகப்பயிற்சி செய்யவேண்டும்: என்றவாறு.

## இனி, அநுபந்தசதுட்டயத்துள் சம்பந்தவருமாறு.

அந்வயவியதிரேகங்களால் வினுதல், அறிவதற்குக்கருவியாகஇருக்கின்றது. வினவுதல் உண்டானால், அறிவதனுக்கு உபாயம் உண்டாகும் என்பது அந்வயவியாத்தி; வினவுதல் இல்லாவிட்டால், அறிதலுக்குவழி உண்டாவதில்லை என்பதுவியதிரேகவியாத்திஎனக்கருதி " అపృష్ట " = வினவினர். என்று மூலத்துள் கூறப்பட்டது. "பகவற்கீதையுள்" "తద్విద్ధి ప్రణిపాతేన పరిప్రశ్నేన సేవయా" எ-து, வணங்குதலினாலும், வினுதலாலும், பணிசெய்வதனாலும், அவ்வறிவென்றுணர்க-எ-று. இது அந்வயவியாத்தி "ஸ்மிருதியுள்" " నాపృష్టః కస్యచిద్బ్రూయాత్ " எது-வினவப்படாதவன் எவனுக்கும் கூறலாகாது. எ-று. இது வியதிரேக வியாத்தி. (அந்வயம்=உடன்பாடு. வியதிரேகம்=எதிர்மறை. வியாத்தி=அடைவு). (க்ருதல்=நினைத்தல்.)

"ஐஷி" என்பது, ஐம்பொறிகளுக்கும் எட்டாத பொருள் உணர்ச்சியுடைமை எ-று. ஆகவே, தெளியப்படுகின்ற தருமங்களை அநுட்டித்தபின்பு அன்றோ ? இருடியாகும் தன்மை உண்டாம்: எங்ஙனம், முன் உண்டாகப்போகின்ற குறிகளினால் ("ஃடஂகுரு") "பாயைச்செய்க" என்றசொல்வழக்குஉண்டாவதோ? அதுபோலும். இல்லையேல் பொறிகளுக்கு எட்டாத பொருளை நோக்கிநிற்கும் அவர்கள் தெரிந்துகொள்ளவேண்டும்; என்னும் இச்சையால் வினவுதல் என்பது உண்மையல்லவாம்.

எனவே, இருடிகள் என்பவர் பொறிகளுக்கு எட்டாதனவற்றை யுணர்பவர்: தருமம் என்பது பொறிகளுக்கு விடயமாகாத பொருள்: தருமத்தை அநுட்டியாமல், இருடியாகான். இருடிக்கு அன்றித் தருமம் விளங்காது. உணராதனவற்றை ஒருவன் அநுட்டிப்பது எவ்வாறு ? உணர்ந்தவர்களே ஆயின், உணர்ந்ததைக்கேட்பது ஏன் எனில் ? ஈண்டு "பாயைச்செய்க" என்புழி பாய்வடிவந்தோன்றுமுன்னே, அதற்கு அப்பெயர் வந்தவாறுபோல, இனி இருடித்தன்மை அடைவது உண்மை ஆதலால், துணிவுபற்றி இருடிகள் எனவும், அவர்கள் அத்தரும உணர்ச்சியைத் தருமம் எனப்பொதுவகையால் உணர்ந்தார்களன்றி, இது இத்தன்மைத்து; எனச்சிறப்புவகையால் உணரவில்லை யாதலால், வினவினர் எனவும், கூறியது கருத்தாகக் கொள்க.

அல்லதூஉம், தாம்தெரிந்து கொள்ளவேண்டும் என்னும் இச்சை இல்லாதவர் ஆயினும், மந்த அறிவினையுடையவர்களை உணர்த்துவதற்காகவேனும், கேட்டே உணர்தல் வேண்டும் என்னும் மரபைத் தமதுமாணுக்கருக்கு உணர்த்துவதற்காகவேனும், இருடியரும் வினவுதல் கூடும்.

"பப்ரச்சு"= வினவினர். இவ்வினைச் சொல்லே இறந்த காலத்தை உணர்த்துகின்றது. "புரா" - எ-து- முன்பு என்னும் பொருளதாகிய அவ்வியயம். இந்த அவ்வியயமும் இறந்த காலத்தையே உணர்த்துகின்றது : வினவியபின்பு அன்றோ ? வினவினர் என்று கூறவேண்டும். ஈண்டு முன்பு வினவினர் எனக்கூறப்பட்டது. ஆகவே, வினவினர்என்னுஞ் சொல்லானே முன்பு என்னும்பொருள் விளங்குமாக, வேறு முன்பு என்று கூறுவானேன் எனில் ? அங்ஙனம் அன்று. கழிந்த எல்லாக் கற்பங்களிலும், தருமசாத்திரம் இவ்வாறேவெளிப்பட்டன ; என்னும் கருத்தை அந்த "புரா" என்னுஞ்சொல் குறிப்பிக்கின்றது.

அங்ஙனம் குறிப்பிப்பது, விசேடப்பற்றை உண்டாக்குவதற்குக் காரணம் ஆகின்றது. (அவ்வியயம்=திணைபாலிட முருபுபெறாத சொல்.) (கற்பம்=காலத்தின் பெரும்பகுதி).

ஏனைய முனிவர்களைப் பொருள் படுத்தாது, வியாசமுனிவரையே வினவிய இருடிகளுக்கு, வைதிகதருமத்துள் வியாச முனிவரோ சான்றோர் என்பது கருத்து. (சான்றோர் எ-து. ஈண்டு உணர்ச்சியில் சிறந்தவர் எ-று).

ஆதலால், இங்ஙனம்செய்ய விரும்பியநூலினுக்கு, முனிவர்கள் வினவினோடு நேராகவுள்ள சம்பந்தம் ஒன்று; வினவ வேண்டும்என்னும் இச்சையைப் பிறப்பிக்குமுகமாக, அத்தியயனத்தோடு உள்ள சம்பந்தம் ஒன்று; இவ்விரண்டு சம்பந்தங்களும், இத்தலைச் சுலோகத்துள்கூறியவாறாயிற்று.(ஆகவே, ஓதியவறிவால், வினவ; உரைத்தநூல் என்றபடி).

இனி, அதிகாரிமுதலிய மூன்று அநுபந்தங்களும், இரண்டாவது சுலோகத்துள் கூறப்படுகின்றன.

## அவற்றுள் அதிகாரி வருமாறு.

இனி " బ్రాహ్మణోబృహస్పతి సవనేనయజేత, రాజారాజసూయేన, వైశ్యో వైశ్యస్తోమేన."— எ-து. அந்தணன் " பிரகற்பதி சவநம் " என்னும்கருமத்தால், தேவதைகளின் பூசையைச் செய்யவேண்டும். (எனவே, " பிரகற்பதிசவநம் " என்னும் வேள்விக்கு வேதியனேஅதிகாரி என்பது கருத்து). " இராஜசூயம் " என்னும்யாகத்திற்கு, அரசனே அதிகாரி : "வைசியஸ்தோமம்" என்னும்யாகத்திற்கு வைசியனே அதிகாரி. எ-று. இது சுருதி. இங்ஙனம் இக்கருமத்திற்கு இவரேஅதிகாரியர்என்னும்விசேடங்கள், வேதத்துள் எவ்வாறு உணரப்படுகின்றனவோ? அவ்வாறு, பராசரனார்கூறிய தருமங்களை அநுட்டிப்பதற்கு உரியவர் இவர் என ஒரு பிரமாணமும் இல்லை: ஆதலால், அதிகாரியாவார் இவரென எங்ஙனம் கொள்வது எனில் ?

" మానుషాణాం " என்றதனால், மாநுடரது. எ-று. என்னை ? இழிந்த விலங்குமுதலிய உயிர்களுக்கு செய்யும்ஆற்றல் இல்லாமையால், அவைகளுக்குத் தருமத்தைச்செய்வதற்கு அதிகாரம்

இல்லை. உயர்ந்ததேவர் முதலிய உயிர்களுக்குத் தருமத்தைஅநுஷ்டிப்பதனால், அடையத்தக்க பயன் இல்லை: ஆதலால், அவர்களும் அதிகாரியர் அல்லர். ஆகவே, ஒழிந்து நின்றவர் மாநுடர் ஆதலாலும், வேறுவகுத்துக் கூறுமையாலும், அவரே அதிகாரியர் என்பது பெறற்கும். (அதிகாரியின்றி நூல்பிறவா தென்பது கருத்து).

## தேவர்கட்குக் கருமாதிகார விடயம்பற்றி.

அங்ஙனம் ஆயின், * - நக்ஷத்திரேஷ்டிமுதலிய கருமத்தில் தேவர்கள் அதிகார முடைமை வேதவாக்கியங்களிற் கேள்விப் படுகின்றும்; எங்ஙனம் எனில்?

"అగ్నిర్వా అకామయత, అన్నాదో దేవానాగ్ం స్యామితి, స ఏతమగ్నయే కృత్తికాభ్యః, పురోడాశమష్టాకపాలంనిరవపత్."—எ-து, தேவர்களுக்கு உரியஅந்நத்தைப் புசிப்பவன் ஆவேன் என்று, அக்கினியே இச்சித்தான். அந்த அக்கினி, அக்கினியின்பொருட்டும், கிருத்திகை நக்ஷத்திரத்தின்பொருட்டும், எட்டுக் † "கபாலத்தில்" அமைத்து வைக்கப் பட்ட ‡ "புரோடாசம்" என்னும் ஹோமதிரவியத்தை அர்ப்பித்தான். எ-று.

---

*-"నక్షత్రేష్టి" என்றால் நக்ஷத்திரங்களினுடையதேவதைகளைக்குறித்துச் செய்ய வேண்டுவனவாகிய இஷ்டி எ-து "ஹோமம்"=பிரார்த்தனைமுதலிய தொழிலோடு கூடியவேள்வி. இதனைச்குறித்த விடயங்கள் கிருஷ்ணயஜசு, பராயாதம், ௩-ம் காண்டம், முதலாவது பிரசினத்தில் கூறப்பட்டது.

† சுத்தமாகியநெல்லை விதிப்படி அரிசியாக்கி மாவுசெய்து வறுத்து உண்டைசெய்து அமைத்தால், அதற்குப்புரோடாசம் என்று வைதிகப்பெயர்.

‡ விதிப்படி மண்ணால் ஓடுசெய்து அமைத்தால், அதற்குக்கபாலம் என்று வைதிகப்பெயர்.

இன்னகருமத்தில் புரோடாசத்தை இத்தனை கபாலத்தில்அமைத்துவைக்க வேண்டும் என்பதுமுதலிய விதிகளும் நிஷேதங்களும் பிராயச்சித்தங்களும் முறைகளும் வேண்டும் திரவியங்களும் அளவைகளும் தொகைகளும் ஏனைய விடயங்களும் வேதத்துள் விசேடமாகக் கூறப்பட்டுள்ளன. அவற்றைஅங்கு காண்க.

*, அங்ஙனம் அன்று. அந்தச்சுருதியால், "అగ్నిః" எ-து எழுவாய் வேற்றுமைக்கண்வந்த சொல், ஆதலாலே, யாரோ? ஒருமனிதன் இக்கருமத்திற்குத் தலைவனாய் அக்கருமம்முடிந்த பின்பு, அடையத்தக்க தேவத்துவத்தின் பெயராகிய அக்கினி என்பதனை, இவ்விடத்திற் கூறியவாறு ஆயிற்று; என்றுபொருள் கூறவேண்டும்.

இல்லையேல், அக்கினிதேவர் இருவர் ஒருகாலத்தில் சேர்ந்திருப்பர் என்று சொல்லும்படி நேரும்.

ஆயின், எவ்விடத்து ஒரோதேவதை இரண்டுபட்டு இருக்குமென்னும் குற்றம் விளையாதோ? அவ்விடத்துத் தேவர்களுக்கு அதிகார முண்டாகலாம் அன்றோ? அங்ஙனம், வேதத்துள்ளும் காணப்படுகின்றதே. என்னை?

"బృహస్పతిరకామయత శ్రన్మే దేవా దధీరన్ గచ్ఛేయం పురోధామితి స ఏతం చతుర్వి గ్ంశతిరాత్రమపశ్య త్తమాహరత్తేనా యజత తతో వై తస్మై శ్ర ద్దేవా అదధతాగచ్ఛత్పు రోధామ్". எ-து, தேவர்கள் என்னிடத்து நம்பிக்கைவைத்திடுக; நான்புரோகிதத்தன்மையை அடைவேனாக; என்று பிரகற்பதி எண்ணினான். அப்பிரகற்பதி இருபத்து நான்கு அஹோராத்திரங்களில் செய்யத்தக்க இந்தச் "சத்திரயாகத்தை" நோக்கினான். அதனைக் கொண்டுவந்தான். அதனால், யஜநம்செய்தான். பின்பு பிரசித்தமாக அவன் பொருட்டுத் தேவர்கள் விசுவாசத்தை

---

* அக்கினிதேவதை, அக்கினிதேவதையைக்குறித்துக் "கிருத்திகாநக்ஷத்திரேஷ்ட்டி" என்னும் கருமத்தைச் செய்ததாக வேதத்தால் தெரியவருகின்றது. இவ்வாறே அநேகம்தேவர்கள் "இஷ்டி" கருமத்தைச்செய்தனர்: ஆதலால், தேவர்களுக்குக் கருமாதிகாரம் உண்டே எனில்?

தேவர்களுக்குக் கருமஅதிகாரம் உண்டு என்பதற்கு எடுத்துக்காட்டிய பிரமாணச் சுருதிக்கு அது கருத்து அன்று. என்னை? தேவர்களுக்கு உரிய அவிர்ப்பாகத்தைப்புசிக்கத்தக்க அதிகாரமுடைய தெய்வம், அக்கினிஎன்னப்படுகின்றான். அந்தஅக்கினி, மறுபடியும் அதேநிலைமையை இச்சித்துத்தேடினான் என்றுசொல்வது ஒவ்வாது; அன்றியும்பிறர்க்கு அதிகாரத்தைக்கொடுக்கும் தானே தன்னைப்பூசித்துத்தனக்கு ஒருஅதிகாரத்தை அடைந்தான் என்று சொல்வதும் ஒவ்வாது; என்ற கருத்தால், "அங்ஙனம் அன்று," என்றுமேல் மறுப்பு வந்த கருத்து.

வைத்தனர். பௌரோஹித்தியத்தை அடைந்தான். எ-று. இது சுருதி. "ச்ரத்" = நம்பிக்கை=விசுவாசம். "ஸ்மை=ஸ்ய" = என்னிடத்து. (நான்காவது அல்லது ஆறுவது வேற்றுமைப் பொருளில் வரத்தக்க "ஸ்" என்பதற்கு வடமொழி உரையாசிரியர், ஏழாம்வேற்றுமையாகப் பொருள் உரைத்திருக்கின்றனர்). "புரோதாம்" = பௌரோஹித்தியம். "சதுர்வீரம் ராத்ரம்" = இப்பெயரையுடைய சத்திரயாகத்தை. எ-று. இது முதலியவற்றுள் தேவர்களுக்கும் கருமத்தால்பயன் உள்ளதாகக் கேள்விப்படுகின்றும்; ஆதலால், அவர்கள் கருமத்தை அநுட்டிப்பதில், எவ்வாறுபயன் இல்லைஎன்பதென்னில்? (தேவர்களுக்குக் கருமஞ் செய்வதால் பயன்உண்டு; ஆதலால், கருமாதிகாரம் உண்டே என்பது) புரோகிதன்=முன்னுக்கு இதம் செய்பவன். பௌரோஹித்தியம் = புரோகிதத்தன்மை.

அங்ஙனமன்று. ஏனெனில்? இவ்விடத்தும், முன் உண்டாகப்போகின்ற பெயரையே போற்றிஆளப்பட்டதாக விருக்கின்றது. அவ்வாறு இல்லையேல் பிரகற்பதிக்குச் சிலகாலத்தில் தானே, நம்பப்படுதலும், பௌரோஹித்தியமுமாகிய இவ்விரண்டும் உண்டாவது இல்லையென்று கூறுதலுமாம். ஆயின் அது ஏனையசுருதிகளுக்கும் முரண் ஆகின்றது. என்னை? "ப்ருஹஸ்பதிர்தேவாநாம் புரோஹிதஆஸீத்" எது, தேவர்களுக்குப் புரோஹிதனுகிய பிரகற்பதி, ஆயினன்-எ-று. இந்தச்சுருதியால், பௌரோஹித்தியத்தை முன்னிட்டுக்கொண்டே பிரகற்பதி யிருந்ததாக விளங்குகின்றது. போற்றிஆளுதல்=ஆதரித்தல்=சோராமற்காத்தல். ஒருபொருட்கிளவி. முரண்=விரோதம்).

அல்லதூஉம், தமக்கு உபயோகம் இல்லைஆயினும், மனிதர்களைச்செய்யச் செய்யும்படித் தேவர்கள் கருமங்களை அநுட்டிக்கவுங் கூடுமே. என்னை? "யத்யதாசரதி ச்ரேஷ்ட ஸ்தத்தேவேதரோஜந:" எ-து. சிறந்தவன் எதனை ஆசரிக்கின்றுனே? ஏனையரும், அதனையே ஆசரிப்பர்கள் - எ-று. இப்பகவற்கீதை வாக்கியத்தால் அவ்வாறு உடன்படலாமன்றே? (ஆசரித்தல்=மேற்கொண்டு நடத்தல்).

அன்றியும், தமக்குப் பயன்உண்டு எனினும் குற்றமில்லை. உலகம் தாங்குவதில் அதிகாரிகளாகிய தேவர்கள், அதுநிமித்

தம் தவஞ்செய்யவேண்டுவதாகவே இருக்கின்றது. (உலகந்தாங்குதல்=சராசரவுயிர்களை நிலைபெறக்காத்தல்).

இன்னும், "వసంతేబ్రాహ్మణోఽగ్నీ మాదధీత, గ్రీష్మేరాజన్య ఆదధీత, శరదివైశ్యఆదధీత," எ-து, வசந்தகாலத்தில், வேதியன் "ஆதாநம்" செய்து யாகத்தீயைச் சேகரித்துக்கொள்ளவேண்டும். கிரீஷ்மகாலத்தில் அரசன் "ஆதாநம்" செய்யவேண்டும். சரற்காலத்தில் வைசியன் "ஆதாநம்" செய்யவேண்டும். எ-று. இங்ஙனம், விதித்து இருக்கப்பட்ட "ஆதாநகருமம்" பிராமணக்ஷத்திரியவைசியர்களில்உண்டாவதுபோல, தேவர்களிலும் உண்டாவது இல்லை; எனவுங்கொள்க. *

அங்ஙனம் அன்று. மூன்றுவருணத்துள்ளும் சேராதஇரதகாரனுக்கு ஆதாநம் இன்றியே, வேள்விசெய்தற்கு அதிகாரம் உண்டாயிருப்பது போலும், தேவர்களுக்கும் உண்டு என்றுகூறினால், ஒத்திருக்குமே எனில்? இரதகாரன் எ-து, மரத்தேர்செய்பவன்=தச்சன்.

இனி, இரதகாரனுக்குவேதமந்திரத்தோடு "ஆதாநம்" விதிக்கும் வசநங்கள் உண்டாயிருப்பதுபோலும், தேவர்க்கும் உண்டு என்றுகொள்ளுவாய்போலும். என்னை? "ఋభూణాంత్వాదేవానాం వ్రతపతేవ్రతేనాదధామీతిరథకారస్య." எ-து. இருபு தேவர்களுடையவிரதத்தால், விரதபதியே! உன்னை ஆதாநம்செய்கின்றேன்; என்று இரதகாரனுக்கு. எ-று. இதுசுருதி. இவ்வாறுதேவர்களுக்கு "ஆதாநம்" விதித்தது இல்லை: ஆதலால் இரதகாரனைப்போலும் தேவர்களுக்கு அதிகாரம் உண்டு என்று எங்ஙனம்கூறப்படும்? அங்ஙனம் ஆனால் "நிஷாதஸ்தபதி நியாயத்தை" யுங்கொள்வாம். என்னை? "నిషాదస్థపతింయాజయేత్" வேடர் களின்அரசனால், வேள்விசெய்வித்தல்வேண்டும். எ-று. இதுசுருதி. ஆதலால், வேடத்தலைவ

---

* (அக்கிநி) "ஆதாநம்," என்பது இன்றி வேள்விசெய்யலாகாது. தேவர்களுக்கு "ஆதாந" விதிகூறாமையால் வேள்வி அதிகாரம் இல்லை என்பது கருத்து. "ஆதாநம்" எ-து, சுரௌதவிதிப்படி அரணியைக்கடைந்து தீயை உண்டாக்கிக்கொள்ளும் கருமம்). வசந்தருது=இளவேனில்: அது சித்திரை, வைகாசி. கிரீஷ்மருது=முதுவேனில்: அது ஆனி, ஆடி. சரதிருது=கூதிர்=குளிர்காலம்; அது ஐப்பசி, கார்த்திகை, மாசங்களாம்.

னுக்குஅக்கினி, "ஆதானத்தை" விதிக்கும் வாக்கியங்கள்வேதத்துள் இல்லை. வேள்வியை மாத்திரம் ஒப்புக் கொள்ளப்பட்டது. அது எவ்வாறே? அவ்வாறு தேவர்களுக்கும், "ஆதான" அதிகாரத்தை விதிக்கும் சுருதிமொழிகள், இல்லாவிடினும்,வேள்விக்கு அதி காரம் உண்டு என்று உடன்படக்கூடும்.

ஆயின், தேவர்களுடைய விடயமாய் முன் எடுத்துக் கூறிய சுருதிமொழிகளைமறந்தாய்போலும்;அவை, " அருத்தவாதவாக்கி யம் "=புனைந்துரை ஆயினும், வேறுபிரமாணங்களோடு மாறுபடு தல் இல்லாமையாலும், அநுவாதம் ஆகாமையாலும் அம்மொழி களுக்குத் தன்னுரைப்பொருளிலும் கருத்து ஏன் இல்லாமற் போகும்?

இனி,ஸ்மிருதிகள் தருமநூல் ஆதலால், அவற்றுள், தரும மீமாம்ஸ சாஸ்திரநியாயங்கள் அநுசரிக்கத்தக்கனவாய் இருப் பனவன்றே? அந்தமீமாம்ஸையில் ஒருபுனைந்துரை ஆயினும், வாச்சியார்த்தம்=சொல்லுக்கு உரியபொருளில் பிரமாணமுடை மை ஒப்புக்கொள்ளப்படவில்லை: ஆதலால், தன்னுரைப்பொ ருளில் கருத்து உண்டென்று எங்ஙனம் கூறலாம்?

ஆ !! இம்மொழி ஸ்மிருதிகளிலும் மீமாம்ஸத்திலும், சிறந் தோனாக மதித்திருக்கும் உனக்கு அநர்த்தமாகவேமுடிகின்றது. " எலிபயத்தாற்றன்னில்லங்கொளுத்தினன் " என்னும் வழக்கு இவ்விடத்துவந்தவாறுஆயிற்று. அங்ஙனம்கூறலாமோ?ஏதேனும் ஒரு புனைந்துரைக்கு தன்னுரைப்பொருளில் பிரமாணமுடைமை சொல்லக்கூடாது, என்றபயத்தால், புனைந்துரைகள் எல்லாவற் றிற்கும் தன்னுரைப்பொருளில், கருத்தும் பிரமாணமும் இல்லை என்றால், ஸ்மிருதிநூல் ஆசிரியர்களாகிய மநுமுதலியோர்மீமாம் ஸநூல்ஆசிரியராகியஜைமினியார்முதலியோர்அனைவரும்"அருத்த வாதவாக்கியத்தினாலே,புகழ்பெற்றவராய்இருத்தலால், அவர்கள் இருந்தார்கள், என்பதேநம்பக்கூடாததாகஇருக்கின்றது. அந்த, பக்ஷத்தில்," இதிகாசம்" ஆகியமுன்னடந்தகதைஎல்லாம்உலோ பித்துப்போய் விடுகின்றன; ஆதலால், அதுமுறையன்று. இறந்த காலத்தினது நிகழ்ச்சிகூறிய அருத்தவாதங்கள் பிரமாணமாகவே இருக்கின்றன.

அங்ஙனம் ஆனால், "తంమనురాధత్త్,తంప్రూషాధత్త్,తంత్వష్టాధత్త్, తంధాతాధత్త్" எ-து, அந்த அக்கினியைமநு ஆதாநம் செய்தார்; பூஷா என்னும் தேவதை ஆதாநம்செய்தார்; துவஷ்டா என்னும் தேவதை ஆதாநம்செய்தார்; தாதரஎன்னும் தேவதை ஆதாநம் செய்தார்; எ-று. இந்த அருத்தவாத சுருதிமொழியினால் ஆதாந கருமமும், தேவர்களுக்குஏன் இல்லாமற்போகும்? பிராமணத்துவ முதலிய சாதிநியமம் தேவர்களுக்கு இல்லையே எனில்? அதைக் குறித்த வசந்தவிருது முதலியகால நியமம் இல்லாது ஒழிக: ஆதாநத்திற்குத்தடை என்னுளது எனில்?

இவ்வளவேயன்றி, ஆதாநம் இல்லாமலே இலௌகிக அக்கினியால் சிலவிடங்களில் வேள்விவெளிப்படுகின்றது. "అవకీర్ణిపశుశ్చ తద్వదాధానస్యాప్రాప్తకాలత్వాత్."-இது, ஆ-ஜைமினியார்சூத்திரம் "యోబ్రహ్మచారీస్త్రియముపేయాత్సగర్దభంపశుమాలభేత."-இதுசுருதி, எ-து, எந்தப் பிரமசாரி, பெண்புணர்ச்சிசெய்கின்றானோ? அவன் அப்பாவத்தின் பிராயச்சித்தமாகக் கழுதையைப் பசுவாகச்செய்து, வேள்விசெய்யவேண்டும்- எ-று. அதற்கு "அவகீர்ணிபசுஎனப்பெயராம்." பிரமசாரியானவன், மனைவிஇல்லாதவன்: ஆதலால், அவன் அக்கினி ஆதாநம்செய்வதற்குஇடனில்லை. அவன், "அவகீர்ணிப்பசுவேள்விசெய்யவேண்டுவது: ஆனால், எந்தத்தீயால்செய்யவேண்டுவது? என்றால், முதற்கண் அந்தணன் ஆவதற்கு உரியபெரிய ஏது வாகிய "உபநயநத்தை" இலௌகிக அக்கினியாற் செய்வது போல; இதனையும்செய்யலாம்: என்பது அந்தஜைமினிசூத்திரப் பொருளென்க. (இலௌகிகத் தீயாவது, வேதியர்மனை அடுக்களைத்தீயாம்.) (அவகீர்ணி=விரத ஒழுக்கம் கெட்டவன்.)

இவ்வளவு உழைப்பினால், தேவர்களுக்குக் கருமாதிகாரம் உண்டென்று சாதித்தால், உமக்கு வரும்பயன்யாது? அங்ஙனம் மீமாம்ஸத்திற்றான், என்னவேறுபாடு உண்டாகின்றது? ஒன்றுமில்லை. பிடித்தது சாதித்தல் ஒன்றே பயனாகின்றது. ஆனால், தேவர்கள்பயனோ? உலகந்தாங்குதலே என்பதனை யாம், முன்னரோ உடன்பட்டுக்கூறினோம். இங்ஙனமானால், புராணமுதலிய எல்லாமும், நிலைநிறுத்தப்பட்டன வாகின்றன. ஆதலால், மனிதரைப்போல; சுவர்க்கப்பேற்றின்பொருட்டுத் தேவர்களுடை

யது கருமம் அல்ல; உலகு ஓம்புதற்பொருட்டுக் கருமம உண்டா கின்றது. தவத்தினலே தானே அவ்வோம்புதல் உண்டாகும் (ஓம்புதல்=காத்தல்).

அங்ஙனமன்று. தானம், யாகம், ஹோமம், மௌனம், தியா னம், இவைமுதலியவற்றினும்வேருகிய தவம் உள்ளதாகக்காணப் படுவதில்லை, ஆதலால், பரமேஸ்வரன் சத்தியசங்கற்பன் ஆயி னும், இராமகிருஷ்ணுதி அவதாரங்களில், வைதிக லௌகிக கருமங்களைச்செய்பவனைப்போலநடித்தலாலேயே, உலககாரியங் களை முடித்துவந்தார் : தேவர்களும் அவ்வாறு நடித்தலைச்செய்க.

இங்ஙனமாயினும், நடிக்கத்தக்க கருமாதிகார மேனும், தேவர்களுக்கு உண்டுஎன்று உம்மால் உடன்பட்டவாறு சாலும். இங்ஙனம், நீர் ஒப்புக்கொள்ளவேண்டும் அன்ருே ? ஆனல், “ మానుషాణాం ” என்புழி, கருமாதிகாரம் மனிதருடையது என்று, எங்ஙனம் கூறப்பட்டது எனின் ?

பௌருஷேயமாகிய மாந்தர் மொழிகளினுடைய வேண் டுகையால் என்று கூறுகின்ருேம். என்னை ? தானே தன்னறிவில் தோற்றிவருகின்ற எல்லாவேதப்பொருள்களையு முடைய தேவர் களுக்குத் தருமத்தை உணர்ந்து கொள்வதற்காக, மாந்தரால் செய்யப்பட்டநூலினிடத்து இச்சையில்லையல்லவா ? மக்களுக்கு ஆனலோ? அந்தத்தரம்இல்லாமையால், மிகவும்மாந்தரால்சொல் லப்பட்ட நூலின் கண்ணே விருப்பம் உண்டு: ஆகலின்.

## பசுக்களுக்குக் கருமாதிகார விடயம்பற்றி.

இனி, “ గావోవాఏతత్సత్ర మాసతాశృంగాస్సతీః శృంగాణినోజాయంతామి తికామేనతా సాందశమాసానిషణ్ణా ఆసన్నథశృంగాణ్యజాయంతతా ఉదతిష్ఠన్నరాత్మేన తియాసాంనాజాయంతతా స్సంవత్సరమాప్త్వోదతిష్ఠన్నరాత్స్నే. ” எ-து - ஆன் இனங்களுக்குக் கோடுகள் உண்டாயிருந்ததில்லை. எங்களுக்குக் கோடுகள் உண்டாகுக ; என்னும் இச்சையால், கிடந்திருந்து இந்தச் “ சத்திர யாகத்தைச் செய்திருந்தன. அவை அவ்வாறு கிடந்திருக்கையில், பத்துத் திங்களும் கழிந்த பின்னர், கோடு கள் பிறந்தன. அவை இச்சித்த பேற்றை அடைந்தோம் என்று எழுந்தன. எந்தப்பசுவினுக்குக் கோடுகள் பிறக்கவில்லையோ? அது வருடத்தைக்கடந்து இச்சித்தபேறுபெற்றுஎழுந்தன-எ-று.

"ఆరాత్న" எ-து-இச்சித்த பொருட்பேறு பெற்றோம் என்னும் பொருளது. இந்தச்சுருதியால், "திரியக்கு ஜந்துக்" களாகிய ஆன் இனங்களுக்கும் "சத்திரயாக" அநுட்டாநம் கூறப்படுதலின் பசுக்களுக்கும் கரும அதிகாரம் உண்டு என்பது வேதமுடிபு. ஆன் இனம்=பசுநிரை=திரியக்குஜந்து, ஒருபொருள். வேள்விக் குரியன, பசுவென்பது மரபு.

இங்ஙனம் கூறுதலால் பழுது இன்று. ஏன் எனில்? இந்தச் சுருதி அருத்தவாதமாக இருக்கின்றது "యఏవంవిద్వాగ్ం సస్సంవత్సర ముపయంతి." எ-து, யாவர் இங்ஙனம் உணர்ந்தவர்களோ? அவர்கள் இந்தச் "சம்வச்சர சத்திரயாகத்தை" அடைகின்றார்கள் எ-று. இச்சுருதியால், ஆக்கத்தை விரும்பின வனுக்குச் சத்திரயாகத்தை விதித்தற்பொருட்டு முதற்கண், "గోసత్రంవై సంవత్సరః." எ-து, "கோசத்திரயாகமே" வருடபரியந்தம் செய்யத்தக்கது; என்று புகழப்பட்டது. அந்தத் துதிமொழியைநிலைநிறுத்தும்பொருட்டு, மேல், "గావోవాఏతత్సత్రం" என்றது முதலிய சுருதிகூறப்பட்டன.

இந்த அருத்தவாத சுருதிக்கு, "యద్వైకించమనురవదత్తద్భేషజం" என்ற சுருதியைப்போலத் தன்னுரைப் பொருளிலும், கருத்து உண்டென்று சொல்வதற்கு அமையாது. என்னே? காட்சியளவைக்கும், வேறு ஒரு சுருதியுரை அளவைக்கும், மாறுபடுதல் உண்டாகின்றது. எங்ஙனம் என்னில்? "திரியக்கு ஜந்துக்களுக்கு" மந்திரங்களைப் படநஞ்செய்தலிலும், கரும அநுட்டாநம் செய்தலிலும், ஆற்றல் இல்லாமற் போதல் பிரத்தியக்ஷமாக இருக்கின்றது. "ఉతేతరేషాంపశూనామ శనాయాపిపాసేవా అభిజ్ఞానం నవిజ్ఞానంవదంతి నవిజ్ఞాతంపశ్యంతినవిదుఃశ్వ స్తనమ్" எ-து, இப்பசுக்கள் வேறு பசுக்களுடைய பசிதாகங்களையும், குறிகளையும் தங்கருத்தையும், கூறுதலில்லை. தாம் உணர்ந்ததை நோக்குவதில்லை. (எனவேமறக்கின்றன). நாளைய இருப்பை அறியா. (எனவே, உளகித்தவில்லை) என்றுவேறு ஒருசுருதியும், பசுக்களுக்கு அறிவில்லை என்பதனை வெளிப்படுத்துகின்றது. ஆதலாலே "గావో" என்ற அருத்தவாத சுருதிக்குத் தன்னுரைப்பொருளில், கருத்து உண்டு என்றால், இச்சுருதியோடு முரணுதல் உண்டாகின்றது.

அருத்தவாதத்திற்குச்"சுவார்த்தத்திலும்" கருத்துஉண்டாயினும், குற்றம் இல்லை: ஏனெனின்? "గో" என்னும் மொழிக்கு,

பசு இனங்களுக்கு அபிமாநியாகிய தெய்வம் என்று பொருள் கூறுகின்றனும்: ஆதலால். "అభిమానివ్యపదేశస్తు." என்ற "பிரம சூத்திரத்தில்," பகவராகிய "வாதராயணாசாரியர்" முதலிய எல்லாப்பொருளுக்கும், வேதமே மூலமாயிருத்தலால்,(=சொல் லுதலால்), அபிமாநிதேவதை வடிவம் என்று கூறியிருக்கின் றனர். (வாதராயணர்=வியாசர்).

எல்லாவகைகளாலும், ஸ்மிருதி சாஸ்திரத்திற்கு மாநுடர் மாத்திரமே அதிகாரியர் என்பது துணிபு.

## இனிபயன்வருமாறு, தருமத்திற்குப்பயன்

"ఊంతం." எது, இனிமையாகிய-எ-று. இந்தமொழியால்பயன் குறிக்கப்படுகின்றது. இனிமையாகிய பயனுக்குக்கருவியாய்இருப் பதே, தருமத்தினுடைய இனிமையாம். அந்தப்பயன், இம்மை யது என்றும், மறுமையது என்றும், இருவகைப்பட்டு இருக்கின் றன. இம்மை=ஐஹிகம். மறுமை=ஆமுஷ்டிகம். எனக்கூறுப. "* அஷ்டகாசிரார்த்தம்" முதலியவற்றால், சாதிக்கத்தக்கபுஷ்டி முதலிய பயன், இம்மையதாக இருக்கின்றன. (புஷ்டி=தேகவி ருத்தி. சாதிக்கத்தக்க=அடையத்தக்க).

("அப்பியுதயம்") எ-து சுவர்க்க முதலிய சுகவடிவாகிய செல்வம் என்றும், நிஃஸ்ரேயசம் எ-து வீடுபேறு என்றும், மறுமை இருவகையதாகஇருக்கின்றது. தருமம், சுவர்க்கமுதலிய செல்வத்திற்குத் தான் நேரே ஏது ஆகின்றது. வீடுபேற்றிற்குக் காரணமாகிய ஞாநத்தைத் தருமம் உண்டாக்குவதனால், ஞாநத் தை முன்னிட்டுக்காரணம் ஆகின்றது. ஈண்டுக்கூறிய உரை "ధర్మాత్సుఖంచజ్ఞానంచ జ్ఞానాన్మోక్షోధిగమ్యతే." எ-து தருமத்தாற் சுக மும் ஞாநமும், அதினின்று முத்தியும், அடையப்படுகின்றது. எ-று இங்ஙனம் ஸ்மிருதியுள் கூறப்பட்டது.

---

*-"அஷ்டகாசிராத்தம்" எ-து, மார்க்கசிரம், புஷியம், மாகம், என்னும் மாதங்களில், அபரபக்ஷத்தில், சத்தமி, அஷ்டமி, நவமி, என்னும் மூவகை நாளினும் செய்யத்தக்க காமிய பலத்தைத்தரும் ஒன்பது நாளைய சிராத்தம். இவை "திஸ்ராஷ்டகம்" எனவும் படும். சிராத்தம்=பிதிர்க்களுக்குச்செய்யும் கருமக்கடன்.

## நித்திய கருமத்தின் விடயம்.

ஈண்டுச்சிலர், நித்தியகருமத்திற்குப் பயனென்பதேயில்லை ஆயின், செய்யாவிடில் பாவம் வருதலால், அச்சமுடையவரால் மாத்திரம்செய்யப்படுகின்றது. அதனால் சுவர்க்கபோகச் செல்வத்திற்கேனும், வீடுபேற்றிற்கேனும்,தருமம் எவ்வாறு காரணம் ஆகும் என்று கூறுகின்றனர்.

வேறுசிலர், அபாவத்தினின்றும் பாவம் உண்டாவதாகத் தோற்றுவதில்லை.(அபாவம்=இல்லாமை. பாவம்=உண்மை), ஆதலால், செய்யாவிட்டால் பாவம் வருகின்றது; என்பது யுத்தி சம்மதி அல்லவாம். அவ்விடத்தில் பிரமாணங்களும் இல்லை என்று கூறுகின்றனர்.

ஆயின், உபநயநம், அத்தியயநம், முதலிய செய்யத்தக்ககருமங்களைச்செய்யாவிட்டால், பாவம்வருகின்றதென்று, ஸ்மிருதி கூறுகின்றது. என்னை? "అతఊర్ధ్వంపతంత్యేతే యథాకాల మసంస్కృతాః। సావిత్రీపతితావ్రాత్యా భవంత్యార్య విగర్హితాః। యోనధీత్యద్విజోవేదా నన్యత్రకురుతే శ్రమం। సజీవన్నేవశూద్రత్వ మాశుగచ్ఛతిసాన్వయః। అకుర్వన్విహితంకర్మనిందితంచ సమాచరన్। అనిగ్రహాచ్చేంద్రియాణాం నరః పతనమృచ్ఛతి." எ-து இவர்கள் காலங்கடவாது, சமஸ்காரஞ்செய்து கொள்ளாவிட்டால், அதன் பின், சாவித்திரிஇழந்தவர்களாகவும்,விராத்தியராகவும்,பதிதராகவும், சான்றோரால் இழிக்கத்தக்கவர்களாகவும், ஆகின்றார்கள். எந்த இருபிறப்பாளன், வேதம் ஓதாமலே வேறுவகையால் பயிற்சி செய்கின்றானோ? அவன் தன் மரபோடும் பிழைத்திருக்கும் போதே,விரைவில் சூத்திரத்தன்மையைஅடைகின்றான். செய்யத்தக்க கருமத்தைச்செய்யாமலே, விலக்காகிய கருமங்களை நன்றாகச்செய்து, இந்திரியங்களை அடக்கா விட்டால், மனிதன் நிலை கெட்டவன் ஆவான்-எ-று: என்று. உணர்க. (சமஸ்காரம்-எ-து, செய்யத்தக்கனவற்றைத் திருந்தச்செய்தல்).

## நித்தியகருமம் சுவர்க்கப் பேற்றுக்கு நிமித்தமாகும் விடயம்பற்றி.

அங்ஙனமன்று. இந்த வசநங்கள், நித்தகருமஞ்செய்பவனுடைய சோர்வுக்கு நிமித்தமாகிய முன்னையசஞ்சிதபாவம் எது

வோ? அதனது உண்மையைக் குறிக்கின்றன. இந்த அருத்தம், "தைத்திரீய வுபநிடதத்தி" னுடையவுரையில். "பாஷ்யகாரர்களாலும், அதன்வார்த்திக காரர்களாலும்", கூறப்பட்டது. என்னை? "యద్యకరణం ప్రత్యవాయస్యోత్పాదకం యదివాసూచకముభయథాపి నిత్య కర్మానుష్ఠానె నప్రాగభావపరిపాలనం ప్రధ్వంసాభావోత్పాదనంచసంపాద్యతే. దురిత ప్రధ్వంసిత్వంచ, త్రిసంధ్యమనుష్ఠీయమానేషు. "సూర్యశ్చ,".—"ఆపఃపునంతు."— "అగ్నిశ్చ,"—ఇతిమంత్రేషు విస్పష్టమవభాసతె." எ-து - கருமம் செய்யாது. ஒழிவது, பாவத்தை உண்டுபண்ணுவ தாயினும், ஆகும்; ஆனால், இரண்டுவகையாலும், நித்தகரும அநுட்டானத்தால், "பிராக பாவத்தைக்" காத்தலும், "பிரத்துவம்ஸாபாவத்தைப்" பிறப்பித்தலும் தேடப்படுகின்றது. மூன்று காலத்திலும் அநுஷ்டானம் செய்யப்படுகின்ற "சந்தியாவந்தந" கருமத்தில், செய்யப்படுன்ற மூன்று மந்திரங்களால், பாவத்தினது பின்னில்லாமையை உண்டாக்குவது வெளிப்படக் காண்கின்றது.

(பிராகபாவம் - எ-து - முன்னில்லாமை. பிரத்துவம்ஸாபாவம் - எ-து- பின்னில்லாமை. அவற்றுள், நித்தியகருமம் செய்யாவிட்டால், பாவம் வரும்; எனவே, செய்தால்வராது; என்று, பொருள்தருதலால், முன்னில்லாமையைக் காத்தவாறாயிற்று. இன்னும் அச்செய்கை கழிந்தபிறவிகளில், செய்தபாவத்தை ஒழிக்கும்எனவே, பின்னில்லாமையை உண்டுபண்ணிற்று; என்றவாறு. இவை அந்வயவியதிரேகியாம்).

"సూర్యశ్చ" இந்த மந்திரத்தைக் காலைச்சந்தி வந்தநத்தில். சலத்தில் ஜெபித்துக்குடிப்பதற்கு, உபயோகிக்கின்றார்கள். (அம்மந்திரத்தின் பொருள்) சூரியனும் கோபத்தெய்வமும், அக்கோப அதிதேவதையு மாகிய இவர்கள், கோபத்தினால் உண்டாகும் பாவத்தினின்றும் எம்மைக்காக்க. மநம், வாக்கு, கை, கால், வயிறு, ஆண்குறி, இவைகளால் இரவில் எந்தப் பாவத்தைச் செய்தேனோ? அந்தப் பாவமும், இன்னு மென்னிடத்துள்ள மற்றைப் பாவங்களும், நாசம் அடைக. இந்தயான்என்னை "அமிர்தயோநி" எனின், வீடு பேற்றிற்குக் காரணமாகிய "சூரியப்பிரகாசத்தி னிடத்தில்", "ஹோமம்" செய்கின்றேன்: எ-று. "స్వాహా" என்னும் மந்திரத்தால், அந்தச் சலத்தை ஆசமநம் செய்கின்றனர்.

"ఆపఃపునంతు" இம்மந்திரம் "மாத்தியந்நிக சந்திவந்தநத்தில்" அவ்வாறாயது. (அம்மந்திரத்தின் பொருள்) ஜலதத்துவம் பிருதிவிதத்துவத்தைச் சுத்திசெய்க. பிருதிவிதத்துவம் என்னை சுத்திசெய்க. "பிரம்ஹணஸ்பதி=கணபதி-விஷ்ணு" பிரம்ஹபூதா=பிரமவித்தை. இவைகள் என்னைப்

பரிசுத்தனுக்குக. யாது எச்சிலோ ? யாது புசிக்கலாகாததோ ? யாது என்னுடைய தீயவினையோ ? தகாதவரிடத்தில் வாங்கியது யாதோ ? அவற்றாலுண்டாகிய என்பாவங்கள் அனைத்தினையும், இந்தமந்திர நீர்த்தெய்வம் ஒழித்துப் புநிதஞ்செய்க.

" అగ్నిశ్చ " இம்மந்திரத்தை மாலைச்சந்திவந்தநத்தில் அவ்வாறு உபயோகிக்கின்றனர். இதன்பொருள். அக்கினிமுதலிய தேவர்கள் பகலிற்செய்த பாவங்களை ஒழிக்க, சத்தியப் பிரகாசத்தில் ஹோமம் செய்கின்றேன். மற்றையன காலைச்சந்தி மந்திரப்பொருளையே ஈண்டுங்கொள்க.

இவ்வாறு, அநுபவிக்கத்தக்க பயன் இல்லாத நித்தகருமங்கள் சுவர்க்கச்செல்வத்திற்குக்காரணம் என்பது தூரத்தேசென்று ஒழிந்தது.

இனி, ஈண்டு கூறப்படுவதாவது, பாவத்திற்குப் பகையாக இருக்கினும் இருக்க. இவ்வளவினாலே வேறுபயன் இல்லாமல் போகவில்லை. " మయివర్చోబలమోజోనిధత్త "- எ-து, என்னிடத்தில் பிரமவொளி, பலம், சத்தி, வைப்பீர்களாக. எ-று. இம்மந்திரலிங்கத்தால் நித்தியகருமத்திற்குப்பயன் உள்ளது என்று காணப்படுகின்றது. இவ்வாறே சுருதிஸ்மிருதி வாக்கியங்களாலும் நித்தியகருமங்களுக்குப்பயன் உள்ளதாக வெளிப்படுகின்றது. (இலிங்கம்=குறிப்பு=ஞாபகம் - ஒருபொருள்)

"சாமவேதமொழி," மூன்று ஆச்சிரமங்களும புண்ணியவுலகத்திற்கு ஏதுவாகுந் தன்மையுடைமையும் நான்காவது ஆச்சிரமம் வீட்டுக்கு ஏதுவாகுந்தன்மையுடைமையும் குறிப்பிக்கின்றது. அச்சுருதி வருமாறு. " త్రయోధర్మస్కంధాయజ్ఞోధ్యయనం దానమితిప్రథమస్త పఏవద్వితీయోబ్రహ్మచ ర్యాదా చార్యకులవాసీ, తృతీయో త్యంతమా త్మాన మాచార్యకులేవ సాదయంత్సర్వఏతేపుణ్యలోకాభవంతి బ్రహ్మసంస్థో మృతత్వమేతి" எ-து, வேட்டல், ஓதல், ஈதல், எனத்தருமத்திற்கு மூன்று கிளைகள் உள்ளன, அவற்றுள் முதலாவது, தவம். இரண்டாவது, பிரமசரியத்தினின்றும் ஆசிரியன் மனைக்குச்சென்று பணிசெய்து இருத்தல். மூன்றாவது. ஆசிரியன்மனையிற்றானே தன்து ஆயுளைக்கழிப்பது. இவற்றைச்செய்தவர்கள் அனைவரும்புண்ணியலோகத்தை அடைபவர்களாக இருக்கின்றனர். பிரமநிட்டன், அமிர்தத்துவம் = சாவில்லாமை=வீடுபேற்றை அடைகின்றான்.

எ-று. வேட்டல்=வேள்விசெய்தல். இது ஆச்சிரமத்தைப் பற்றி யதென்று "జైమినిం" "என்றவியாசசூத்திரத்தில்" கூறப்பட்டது.

இனி, ஸ்மிருதிமொழி வருமாறு. "తద్యథామ్రేఫలార్థేనిమిత్తేఛాయాగంధ ఇత్యనూద్యేతేఏవంధర్మం చర్యమాణమర్థా అనూద్యంతే." — எ-து. அஃது எங்ஙனம் எனில்? கனிகளுக்கு நிமித்தமாகி மாமரத்தில், நிழலும் மணமும் எவ்வண்ணம் கூறப்படுகின்றனவோ? அவ்வண்ணமே இங்ஙனம்செய்யப்படுகின்றகருமத்தைப்பற்றிப்பொருட்பயன் கூறப்படுகின்றது. எ-று. இம்மொழி நித்தியகருமத்தைப் பற்றிக் கூறுகின்றது என்று * "விசுவரூபாசாரியார்" கூறியிருக்கின்றனர்.

அது வருமாறு. "ఆమ్రేనిమిత్తఇత్యాది హ్యాపస్తంబ స్మృతేర్వచః। ఫలవత్త్వంసమాచష్టే నిత్యానాంకర్మణామపి" எ-து "ఆమ్రేనిమిత్తే" என்ற ஆபஸ்தம்ப ஸ்மிருதிமொழி நித்தகருமத்திற்கும் பயன் உண்டு என்று கூறுகின்றது. எ-று.

இன்னும் அவ்வாறு, மநுவுங்கூறி இருக்கின்றனர். வருமாறு. "వేదోదితంస్వకంకర్మనిత్యం కుర్యాదతంద్రితః। తద్ధికుర్వన్యథాశక్తి ప్రాప్నోతిపరమాంగతిం" எது. வேதத்துள்கூறப்பட்டதனது நித்தகருமத்தைச் சோர்வு இல்லாமல் செய்யவேண்டுவது. ஆற்றலுள்ளவனாயில் அதைச்செய்தவன் மேலானகதியை அடைகின்றான். எ-று.

இனி, கூர்மபுராணத்துள்ளும் கூறப்பட்டது. வருமாறு. "యథాశక్తిచరేత్కర్మ నిందితాని వివర్జయేత్। విధూయమోహకలిలం లబ్ధ్వాయోగమనుత్తమం। గృహస్థో ముచ్యతేబంధా న్నాత్రకార్యా విచారణా." = தன் ஆற்றல் அளவைக்குத் தக்கபடி, கருமத்தைச் செய்யவேண்டும். விலக்கிய வினைகளை ஒழிக்கவேண்டும். அதனால் அறியாமையையும் பாவத்தையும் உதறித்தள்ளி எல்லாவற்றிற்கு மேலாகிய "சிவயோகச் செல்வத்தைப்பெற்று, இல்லறத்தான் பற்றுக்களினின்றும் விடப்படுகின்றான். ஈண்டு விசாரித்தல் ஒன்றும் வேண்டாம் எ-று.

---

*- சங்கர பாஷியத்திற்கு விவரணம் செய்த "சுரேசுவராசாரியார்" இவர் மண்டநமிசிரர் எனவும் கூறப்படுவர்.

## இனி, நித்தியகருமம் முத்திக்கும் ஏதுவாதற்பற்றியது.

நித்தியகருமம் அப்பியுதயமாகிய சுவர்க்க முதலிய செல்வங்களுக்கு ஏது வாயினுமாக: முத்திக்கும் ஏது என்பது கூடாது. என்னை? பிரமாணம் இல்லாமையால். அல்லதூஉம், சுருதிமிருதிகளால் அது விலக்கப்படுகின்றது. என்னை? "నకర్మణాన ప్రజయాధనేన" எது, கருமத்தால் வீடுபேறு உண்டாவதில்லை. புதல்வரால் வீடுபேறு உண்டாவதில்லை, பொன்னால் வீடுபேறு உண்டாவதில்லை எ-று. இது சுருதி. "జ్ఞానాదేవతుకైవల్యం" = ஞானம் ஒன்றினுனேமுத்திஉண்டாகின்றது. எ-று. என ஸ்மிருதி. கூறுவதேயெனில்?

அங்ஙனம் அன்று. "பரமான்மப் பிரகரணத்தில்" வீடு பேற்றிற்கு ஏதுவாகிய ஞானத்தைத்தேடிக் கொள்வதற்குக்கருவியாதலால் வேள்விமுதலிய கருமங்கள் விதிக்கப்பட்டன. என்றது. என்னை? "తమేతంవేదానువచనేనబ్రాహ్మణా వివిదిషంతి యజ్ఞేనదానేన" எது, இப்பரமான்மாவை உணர்வதற்கு வேதியர்கள் வேதமொழிகளாலும் வேள்வியாலும் தானத்தினுலும் விரும்புகின்முர்கள். எ-று. இது சுருதி விதி.

இனி, முற்கூறிய அவ்விலக்குவிதி ஆனுலோ? அக்கருமம் தான், நேரே முத்திக்குக் கருவித் தன்மையை நாடி நிற்கின்றது. (எனவே, கருவிக்குக் கருவியென்பதுகருத்து) ஆதலால், முத்தருக்கு அக்கினி ஆதானம் முதலிய கருமத்தில் விருப்பம் இல்லை, ஞானம் உண்டாகவேண்டிய விஷயத்தில் அவ்விருப்பம் உண்டு. இவ்விரண்டும் "అతఏవచాగ్నీంధనాద్యనపేక్షా". — எ-து. அதனுலேயே அக்கினி, சமித்து முதலியவற்றில் விருப்பம் இல்லை எ-று. இது பிரமசூத்திரம் "సర్వాపేక్షాచయజ్ఞాదిశ్రుతేః".— எது. எல்லாவற்றின்விருப்பமும் "யஜ்ஞேனதானேன" என்ற சுருதியால் உண்டு எ-று. இதுவும் பிரமசூத்திரம் இவ்விரண்டு அதிகரணத்தாலும் நிச்சயிக்கப்பட்டன.

அவ்வாறே, கருமங்கள் பரம்பரையினின்றும் வீடுபேற்றினுடைய ஏதுவாகும் என்று "வாயுசங்கிதை" யுட்கூறப்பட்டிருக்கின்றது. (பரம்பரை. எது. ஒன்றிலிருந்து ஒன்றுபிறந்து

வருவது) என்னை? "కర్మాతిశయమాసాద్య పశోః పాశపరిక్షయః। ఏవం ప్రవృత్తౌ పాపస్య బహుభిర్జన్మభిః క్రమాత్। భవేద్విషయవైరాగ్యం వైరాగ్యాద్భావశోధనం। భావశుద్ధ్యా ప్రపన్నస్య శివజ్ఞానసమన్వయః। జ్ఞానధ్యాననియుక్తస్య పుంసో యోగః ప్రవర్తతే। యోగేనతుపరా భక్తిః ప్రసాదస్తదనంతరం। ప్రసాదాన్ముచ్యతే జంతుః ముక్తః శివసమో భవేత్." கருமங்களைச்செய்து உயர்வை அடைந்த பசுக்களுக்குப்பாசங்கள் கெட்டு ஒழிகின்றன. இவ்வாறு பலபிறவியிலுலே முறையே பாவத்தை ஒழித்துக்கொண்டவனுக்கு விடயங்களில் வைராக்கியம் பிறக்கின்றது. வைராக்கியத்தினால் சித்தம் சுத்தப்படுகின்றது. அந்தக்கரணங்கள் முழுவதும் சுத்தமான பின்பு அவனுக்குச் சிவஞானச்சம்பந்தம் உண்டாகின்றது. ஞானத்திலும் தியானத்திலும் நன்றாகக்கூடிய புருடனுக்கு யோகப்பயிற்சி நடக்கின்றது. யோகத்தால் மேலான பத்திவிளைகின்றது. அதன்பின், சிவப்பிரசாதம் உண்டாகின்றது. அப்பிரசாதத்தினின்றும் சீவன்முத்தியை அடைந்து, சிவனோடு சமானன் ஆகின்றான். எ-று. வைராக்கியம்=வெறுப்பு.

## பயன்பற்றிய நித்தகருமத்தின் அளவு.

இனி, பாவபரிகாரம், புண்ணியலோகம், பிரமஞானம், ஆகிய இம்மூன்றுபயனுக்காக நித்தகருமத்தை நாள்தோறும் மூன்றுவிசை செய்யவேண்டுவது அன்றோ எனில்?

அஃதங்ஙனமன்று. "ఖాదిరవత్".—எது. கருங்காலிபோலும். எ-று. ஒருக்கால் பிரயோகித்ததற்கே சொல்லின் புணர்ச்சிபேதத்தால் பயன் வேறுபாடுகள் அமைகின்றது. "என்னை?" "ఖాదిరో యూపో భవతి". — எ-து, கருங்காலிமரத்தின் வேள்வித்தம்பம் ஆகின்றது. எ-று. இதுசுருதி. கிரதுவின்பொருட்டு இம்மொழி கூறப்பட்டது. (கிரது=வேள்விபேதம்.) "వీర్యకామస్య యూపం కుర్వీత."— எது. வீரியத்தை விரும்பினவன் யூபம்செய்யவேண்டும். எ-று. இதுசுருதி. இம்மொழி புருடார்த்தத்தின் பொருள் உள்ளது. இவ்விரண்டுசுருதிகளும் ஒருகருங்காலிக்கே இருவகைப்பயன் உண்டாவதற்கு ஏது ஆகின்றன. "ఏకస్య తూభయత్వే సంయోగపృథక్త్వమ్."—எது, ஒன்று இருவகையாகுமிடத்தில்செய்கைவேறாக இருக்கும். எ-று. இது "ஜைமினிசூத்திரம்". (எனவே, செய்கை வேறுபாட்டால் ஒன்றேபலபயனைத் தருமென்பது கருத்து).

அவ்வாறே, இவ்விடத்து, முன்உதகரித்த மூன்றுபிரமாணமொழி களின் பலத்தினல் பயன் மூவகையாக இருக்கினும் பிரயோ கிப்பது ஒருவிசையாகவேயிருக்கின்றது. இக்கருத்து "[Grantha] [Grantha]." — எது, விதித்து இருத்தலால் ஆச்சிரமகருமங் களைச்செய்யவேண்டுவது. எ-று. இங்ஙனம் பிரமசூத்திர அதி கரணத்திலும் கூறப்பட்டு இருக்கின்றது.

## நித்தகருமத்திற்கும் காமியகருமத்திற்கும் உள்ளபேதம் கூறுகின்றது.

ஆயின், நித்தகருமத்திற்கும் பயன் உண்டாகுமேயானல் அந்த நித்தியகருமத்திற்கும் காமியகருமத்திற்கும் வேறுபாடு என்னை? என்பது மேல்வினு (எனவே பயனுண்டாகிய கரும ங்களெல்லாம் ஒன்றே யென்பது வினுவின்கருத்து).

அவ்விரண்டற்கும் செய்கையால் பயன் ஒத்தனவே ஆயி னும், செய்யாதுவிடுதலால் பாவம் உண்டு, பாவம் இல்லை என்பதனுல் அவ்விரண்டற்கும் வேறுபாடுஉள்ளது. (எனவே, நித்தகருமஞ் செய்யாவிட்டால் பாவம் உண்டு. காமியகருமம் செய்யாவிட்டால்பாவம் இல்லை: என்பதுகருத்து). ஆயுள்விருத் தியைவிரும் பினவனும் மழையைவிரும்பினவனும் செய்யத் தக்க "ஆயுஷ்டோமேஷ்டி," "காரீரியாயஜநம்," என்னும் காமியகருமங்கள் செய்யாவிட்டால், பாவம்வருகின்றது என்று, வேதத்துள்யாண்டும் கூறப்பட்டதில்லை அன்றே?

"[Grantha], [Grantha]" - எது, தவறினல் ஹோமஞ் செய்க. பிங்ஙப்பட்டால் ஹோமம்செய்க. எ-று. இது சுருதி. இங்ஙனம் நியமம் இல்லாத பிங்ஙமாதல் முதலிய செய்கை விசேடணத்தோடு கூடி உள்ளது நைமித்திக கருமம். ஆதலால் நித்த கரும நியாயத்தையே நைமித்திகத்திலும் ஒப்புக்கொள்ள வேண்டும். (பிங்ஙம்=இடையூறு).

ஆகவே, நித்தகருமம்போல நைமித்திககருமமும் விதிக் கப்பட்டிருக்கின்றது: சுத்திக்கும் காரணமாக இருக்கின்றது: ஆதலால், வீடுபேற்றிற்கும் ஏது ஆமேனனில்?

காமிய கருமத்தில், இச்சை * முக்கியமாக இருக்கின்றது. சுத்தமோ? † கௌணமாக இருக்கின்றது. சுத்திகௌணமாதலால், அது இச்சையின் விடயமாகிய போகத்தைக்கொடுத்துத் தான்கெடுகின்றது. அதனால், "பகவற்கீதையில்." மோக்ஷத்தை விரும்பின அருச்சுநனுடையபயன் விருப்பம், விலக்கப்பட்டிருக்கின்றது. அதுவருமாறு "యోగస్థః కురుకర్మాణిసంగం త్యక్త్వాధనంజయ। సిద్ధ్యసిద్ధ్యోస్సమోభూత్వాసమత్వంయోగఉచ్యతే। కర్మణ్యేవాధికారస్తేమాఫలేషుకదాచన। మాకర్మఫలహేతుర్భూః" எது, ஒ! 'அருச்சுநா!' நீ கூடுதலை ஒழித்துவிட்டு, யோகநிஷ்டனாய் பலிப்பிலும் பலிப்பு இல்லாமையிலும் ஒத்தவனாய். கருமங்களைச்செய்வாய். அவ்வொத்த தன்மையே யோகம் என்று கூறப்படும். உனக்குக்கருமத்தில் மாத்திரம் உரிமைஉண்டாய் இருக்கக்கடவது. பயனிடத்து இல்லாது ஒழிக. கருமப் பயனுடையகாரணன் ஆகாது ஒழிக. எ-று.

நித்தகருமத்தில், புத்தியும்சுத்தியும் முக்கியமாய் உள்ளது. பயன் இரண்டாம்பக்ஷமாய் உள்ளது. அதனாலே, பயன் அநுபவிக்கப்பட்டிருந்தாலும் அந்தப்பயன் நித்தியமானது அல்ல என்பது, அதனிலும் சிறந்தபயன் உள்ளது என்பது, முதலிய தோஷங்களைக்கண்டு பிடிக்கும் உணர்ச்சிஉண்டாவதற்குத் தடையில்லை. இது "வார்த்தகிக" உரையாசிரியரால் கூறப்பட்டிருக்கின்றது. என்னையெனில்? "నిత్యేషుశుద్ధిః ప్రాధాన్యాద్భోగస్య ప్రతిబంధకః। భోగంభంగురమీక్షంతేబుద్ధిశుద్ధ్యనురోధతః."— எது. நித்தியகருமத்தில் சுத்திசிறந்ததாம் ஆதலின்பயன் நுகர்ச்சியும் தடைபடுவது இல்லை (ஆகவே) சித்தசுத்தியைப் பற்றிப்பயன்நுகர்தலை நிலை அற்றது என்று நோக்குகின்றனர் - எ-று (நுகர்ச்சி-எது, அநுபவிப்பு).

## அநித்தகரும வகைமை.

அந்த நித்தகருமம், இருவகைப்படும். அவையாவன,ஸம்ஸ்காரகம் எனவும், விவிதி ஷாஜநகம் எனவும்படும். ஸம்ஸ்காரம்-என்பது புத்திமுதலிய கரணங்களைச் சுத்திசெய்வது. "விவிதி

* முக்கியம்=பிரதானம்=பெரும்பான்மை=மிகுதி. என்பன ஒரேபொருள்.
† கௌணம்=உபசர்ஜநம்=சிறுபான்மை. என்பன ஒரேபொருள்.

ஷாஜநகம் - எது,ஞானத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்னும் இச்சையை உண்டுபண்ணுவது. இவ்விரண்டனுள் முதலாவதாகிய "ஸம்ஸ்காரகம்" என்னும் கருமம். விதியால் விதிக்கப்பட்டுள்ளது என்ற உணர்ச்சிமாத்திரையால் செய்யப்படுகின்றது. அங்ஙனம், ஸ்மிருதியும் "యస్యైతేచత్వారింశత్సంస్కారాఅష్టావా త్మగుణా బ్రహ్మణస్సాయుజ్యం సలోకతాంగచ్ఛతి."— எது, நாற்பது கிரியைகளும் எட்டு ஆன்மகுணங்களும் யாருக்குள்ளனவோ? அவன் பிரமத்தினுடைய சாலோக்கியத்தையும் சாயுச்சியத்தையும் பெறுவன். என்று கூறிற்று.இனி, இரண்டாவது "விவிதிஷாஜநகம்" என்னும் கருமம், ஈசுவரனுக்குப்பிரீதியாகுக என்னும் எண்ணத்தால் செய்யப்படுகின்றது. அந்தக்கருமம் ஞானத்தில் இச்சையையும் முயற்சியையும்உண்டுபண்ணி,தவறாது ஞானத்தை அடையப் பண்ணுகின்றது. ஆதலால், வீடுபேற்றில் விருப்பமுடையவன், கருமப்பயனை ஈசுரப் பிரீதிசெய்வதே தக்கது.

ஆதலால், இங்ஙனம் "ஊஹ்ம" என்பதனால் தருமம், தான் எண்ணிய பயனைக்கொடுப்பதற்கு ஏற்றகருவி என்று கூறுதலின் இந்நூலுக்கு இச்சித்த பொருள்கிடைப்பதே பயனென்றுகூறியவாறாயிற்று.

## இனிவிடயம்வருமாறு.

"ధర్మః" என்பதனால், விடயம் குறிக்கப்படுகின்றது. என்னை? சுவர்க்கப்பேற்றை வீடுபேற்றினுக்குக்கருவியாகத்தரிக்கின்றது: ஆதலால் தருமம் என்னப்படும். இனி அத்தருமம், இலக்கணத்தாலும், அளவையாலும், வேத ஆணை ஒன்றினிடத்தேவகுக்கப்பட்டது.

இனி, யாது, வேத ஆணையால் உணரத்தக்கதோ? அது. ஸ்மிருதிகளுக்கு விடய மாகாது. ஏன் எனில்? எல்லா இடங்களிலும், வேறொன்றால் உணரக்கூடாதனவாய் இருப்பது எதுவோ? அதுவே, விடயமாய் இருத்தல் வேண்டும் என்பது ஒருதலை ஆதலால். அற்றேல் வேத ஆணையால் உணரத்தக்கதே ஆயினும் புனருத்தியை ஒழிப்பதால், மற்றொரு "சாகை" யில் உள்ள விசேடங்களை முடித்துக்கொள்வதனால் அநுட்டானமுறையில் இனிது முடிதற்பொருட்டுச் சுருக்கப் படுகின்றது: என்

றுகொள்வாய்போலும் அங்ஙனமன்று. "கற்ப சூத்திரங்களில்" அவ்வாறு, சுருக்கப்பட இல்லை. ஆதலால், தருமம், இந்த சாத்தி ரத்திற்குவிடயம் அல்லவே? என்னும் வினாவைஎழுப்பிக்கொண்டு மூலத்துள் "ஶ்ரௌதம்" என்று கூறினார்.

இதன் கருத்தாவது, தருமம் இருவகைப்படும், ஒன்று "சுரௌதம்" மற்றொன்று "ஸ்மார்த்தம்" அவற்றுள், "ஆதா நம்" முதலாகவுடையதும், தான் ஓதி உணர்ந்த வேதமேமூல மாகவுடையதுமாகிய, "தரிச பூர்ணமாசம்" முதலியவைகளே அந்த "சுரௌததருமமாம்" உளகிக்கத்தக்க=புலப்படாத "வேத சாகைகளை" மூலமாகவுடைய "சௌசம், ஆசமநம்" முதலி யவை ஸ்மார்த்த தருமமாம். அவற்றுள், "ஆதாநம்" முதலிய னகற்பசூத்திரங்களில். தொகுக்கப்பட்டிருந்தாலும் "சௌசம்" முதலியன தொகுக்காமையால், ஸ்மார்த்ததருமமேஇந்தஸ்மிருதி களுக்கு விடயமாம் என்பது. (உளகித்தல்=அநுமித்தறிதல்.)

இனி, அந்நியஸ்மிருதிகளிலும் "சௌசம்" முதலிய ஆசா ரங்கள் சொல்லப்பட்டிருக்கின்ற தன்றோ எனில்? அதனையொழி த்து, இது இக்கலியுகத்தில் என்பதற்கு "ஷட்கர்மாபிரதோயுகே".— என்றார்.

இக்கலியுகத்தில் வேள்விசெய்வித்தல், வேதம் ஓதுவித் தல், இவ்விரண்டு கருமத்தால் உண்டாகும் பயன் சீவநத்திற் குப்போதாமையால் மாநுடர்க்குச் சீவநோபாயமாகவும், சுவர் க்கப்பேற்றிற்கும் வீடுபேற்றிற்கும் இனிமையாகவும், எளிதில் அடையத்தக்கனவாகவும் உள்ளதருமங்களும் உழவுமுதலியமுய ற்சிகளும் வேதியன்செய்யத்தக்கன: எனவும், பிறவும், முக்கிய மாகக் கூறப்படுகின்றன. இவை வேறு யாண்டும் கூறப்படாமை யின் விடயமாகலாம்: என்பது கருத்து.

இனி, "யதாவத்" என்றதனால் எப்படியுள்ளதோ? அப் படி. எனவே, உண்மையாய் எனவும், எவ்வளவுள்ளதோ?அவ்வ ளவு. எனவே எல்லாமும். எனவும் வரும் பொருளுடைய இம் மொழியால் சுருக்குதலைஒழித்தார் என்பது. அங்ஙனமில்லையேல். சொல்லாமற் போதலே தடையின்றிச்செல்லும்.

ஸ்மிருதியை உணர்ந் தவர்களுக்கு மயக்கம், பிறரால் உடன்படாமற்போதல், ஐயம், முதலிய குற்றங்களினுடைய சம்பந்தமில்லையாம். ஆகலின் "సత్యవతీసుత" என்று விளிவேற்று மையாக உரைக்கப்பட்டது. எப்பொழுது, பெண்பாலே ஆயினும் சத்தியவதி யென்னுந்தாய் உண்மையையே கூறத்தக்கவளாயிருக்கின்றுளோ? அப்பொழுது அவளது புதல்வராயும் வேத ஆசிரியராயும் உள்ள வியாசர் சத்தியத்தையே கூறுகின்றவர் என்று வேறுசொல்வானேன். "చ" எ-து. அவ்விஷயம், இதனல் எளிதுகொள்ளத்தக்கனஎன்பதை உணர்த்தப்பெறுகின்றது.

ஈண்டு, முன் சொல்லப்பட்ட அதிகாரி பயன், விடயம், இவற்றுள் ஒன்றினே டொன்றனுக் குள்ள சம்பந்தம் விளக்கப்பட்டது. எங்ஙன மெனில்? பயனுக்கும் அதிகாரிக்கும், இச்சிக்கப் படுதலும் இச்சித்தலும் ஆம். அதிகாரிகளால் பயன் இச்சிக்கப் படுகின்றது. என்பதுகருத்து. இனிபயனுக்கும் விடயத்திற்கும், பிறப்பதுவும் பிறப்பிப்பதுவுமாம். தருமம் உணர்த்தப்பட்டால் பின்பு அதனை அநுட்டாநம் செய்தலால் சுவர்க்கப் பேறும் வீடுபேறும் உண்டாகின்றது என்பது கருத்து. இனி அதிகாரிக்கும் விடயத்திற்கும் உபகரிக்கப்படுதலும் உபகரித்தலும் சம்பந்தமாம். விடயம் பயனை உண்டுபண்ணி அதிகாரியை உபகரிக்கின்றது. விடயத்திற்கும் நூலினுக்கும் கூறப்படுதலும் கூறுதலுமாம். நூல்விடயத்தைக் கூறுகின்றது என்பதுகருத்து.

இங்ஙனம்,அநுபந்தநான்கும் இனிது பெற நிற்றலின் ஒத்த கருத்தினராகிக் கேட்போரால் இந்நூல் கேட்கத்தக்கது என்பது இவ்விரண்டு சுலோகங்களின் கருத்து. எனக்கொள்க. (உ)

శ్లో ॥ తచ్ఛ్రుత్వామునివాక్యంతుసశిష్యోగ్న్యర్కసన్నిభః।
ప్రత్యువాచమహాతేజాఃశ్రుతిస్మృతివిశారదః ॥3॥

శ్లో ॥ నచాహంసర్వతత్త్వజ్ఞఃకథంధర్మంవదామ్యహమ్।
అస్మత్పితైవప్రష్టవ్యఇతివ్యాసస్సుతోబ్రవీత్ ॥౪॥

என்பன, பராசரஸ்மிருதியைப் பெறுவதற்கு வியாசரை வினவுதல் (வியதிகரணம்) இடனில்லாமை என்னும் ஐயத்தைக் கருதி அதனை ஒழித்தலைக்கூறுகின்றன.

(இ-ள்) சீடர்களோடு கூடியவராய், அக்கினிக்கும் சூரிய னுக்கும் ஒப்பானவராய், மிக்க ஒளியை யுடையவராய், சுருதி மிருதிகளில் விசேடஞானமுடையவராய் இருக்கின்ற பராசரரு டைய புதல்வராகிய வியாசர் அம்முனிவர்கள் வாக்கியங்களைக் கேட்டு, நான்எல்லாவுண்மைகளையும்தெரிந்தவன் அல்லன். நான், தருமத்தை எவ்வாறு கூறுவேன்? எமது பிதாவே வினவப்படு வோராம்; என்று விடைகூறினர். எ-று.

"ஸஶிஷ்ய:".— என்றார். சுமந்து, வைசம்பாயநர், ஜைமினி, பைலர், இந்நால்வரும் முறையே நான்கு வேதங்களையும் சீட பரம்பரையால் வழங்குவித்த மாணாக்கர்களாம். சூதர் புராணசங் கிதைகளை எல்லாம் வழங்குவித்த மாணாக்கராம். இம்மாணாக்க ரோடு கூடியவர் வியாசர் என்பது குறித்தற்கு.

"அக்நிஸூர்ய-ஸந்நிப:" என்றார். அக்கினி எவ்வாறு சுவாலைக ளோடு கூடியிருக்கின்றானோ? சூரியன் எவ்வாறு கிரணங்களோடு கூடி யிருக்கின்றானோ? அவ்வாறே இவ்வியாசர் தம்மோடொத்த கல்வி அறிவுள்ள சீடரோடு கூடியிருப்பவர் என்பது குறித்தற்கு.

"மஹாதேஜா:" என்றார். பிரமவொளி யுடையவர் என்பதற்கு அந்நிய ஒளியாற்பயனில்லை ஆகலின். இக்கருத்தை "ஶ்ருதிஸ்ம்ருதி விஶாரத:" என்பதனால் விளங்கக் கூறினர்.

சுருதி ஸ்மிருதிகட்கு முறையே அக்கினி சூரியரது உவமை யைக்கொள்ளத்தக்கது. அக்கினி அடுத்தபொருளையே சுடுவதாயி னும் பகலிலும் இரவிலும் வேறுபாடின்றி ஒத்துச்சுடுகின்றது. அவ்வாறே தன்னால் ஓதப்பட்டுவரும் அச்சுருதிகளில் சிலதரு மங்களே தோன்றுவனஆகின்றன; ஆயினும்,அது, யுக்தாவஸ்தை யிலும் அயுக்தாவஸ்தையிலும் அவ்வேறுபாடு இல்லாமலே தோன்றுகின்றன. (யுக்தம் = கூடியது - அயுக்தம் = கூடாதது. அவஸ்தை=பொழுது).

சூரியன், பகற்போது மாத்திரமே விளக்குபவன் ஆனாலும், சமீபத்திலும் தூரத்திலும் உள்ள எல்லாப்பொருளையும் விளக்கு கின்றான் இவ்வாறே அதுகூடிய பொழுதிலேயே நினைக்கப்பட் டனவாயினும் தானுணர்ந்த வேதத்தால் காணப் படாது சித றிக் கிடக்கும் அளவு இறந்தவேதங்களிலும் உள்ள தருமங்கள்

எல்லாம் ஞாபகத் திற்குக் கொண்டுவரப் படுகின்றன. அல்லக்கால், தவத்தினுல் மிகவும் பரிசுத்தரிவர் என்னும் பொருளில் அக்கினி உவமை கூறப்பட்டது. "𑌅𑌗𑍍𑌨𑌿𑌶𑍍𑌶𑍁𑌚𑌿𑌃" = அக்கினி பரிசுத்தமானது; என்றது சுருதி ஆகலின். பலவிடயங்களை வெளிப்படுத்துவதில் ஆற்றலுடையவர் ஆதலின் சூரியனேடு உவமிக்கப்பட்டனர் எனினும் அமையும்.

இனி, இங்ஙனமாயின், "𑌨𑌚𑌾𑌹𑌂𑌸𑌰𑍍𑌵𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌃" = நான்எல்லாவுண்மைகளையும் உணர்ந்தவன் அன்று. என்று வியாசர் மேற்கூறிய கூற்று மாறுகொளலாம் அன்றோ எனில்? (கூற்று=சொல்).அங்ஙனம் அன்று.அக்கூற்று, அவரது தந்தையைச் சிறப்பிக்க எழுந்தகூற்றும் "𑌅𑌪𑌶𑌵𑍋𑌵𑌾𑌅𑌨𑍍𑌯𑍇𑌗𑍋𑌅𑌶𑍍𑌵𑍇𑌭𑍍𑌯𑌃." =ஆன் இனங்களுக்கும்குதிரைகளுக்கும் வேறுகிய ஜந்துக்கள் பசுக்கள் அல்ல. என்ற இச்சுருதிமொழி, ஆனினங்களையும் குதிரைகளையும் சிறப்பிக்கின்றதே அன்றி யாடு முதலியவற்றிற்குப் பசுத்துவத்தை விலக்குவது இல்லை. (யாடு=ஆடுஎன மருவிற்று). அந்தயாடு முதலியன பசுக்கள் அல்லவெனின் காட்சி அளவைக்கு விரோதம் உண்டாகின்றது. அன்றியும் "அக்கினிஷோமீயயாகத்திற்கு" யாடேபசு என்னும் சுருதிமொழிக்கும் விரோதம் வருகின்றது. அதுபோலவே;இந்த வியாசர் மொழியும் வியாசருடைய முற்றுணர்ச்சியை விலக்குவது இல்லை.பிற என்னெனின் ? அவர்தந்தையைப்புகழ்கின்றது.

அங்ஙனமில்லையேல், ஆசிரியன் விடயத்தில் விநயம்செய்ய வேண்டுவது என்னும் ஒழுக்கத்தை மாணுக்கர்க்கு அறிவுறுத்தற்பொருட்டு அவ்வாறு கூறியது எனினும் அமையும். (விநயம்=அடங்கி ஒழுகுதல்).

அல்லதூஉம், "𑌨𑌚𑌾𑌹𑌂𑌸𑌰𑍍𑌵𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌃" என்றவியாசரது கருத்து இதுவெனினும் அமையும். என்னை ? ஈண்டுகலிதருமம் வினவப்படுகின்றது. நான் ஆனலோ ? தானே கலிதருமத்தை உணர்ந்தவன் அல்லன். எமது தந்தையார் அக்கலிதரும உணர்ச்சியால் சிறந்தவராக இருக்கின்றார். ஆதலின் "𑌕𑌲𑍌𑌪𑌾𑌰𑌾𑌶𑌰𑌾𑌃𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃"= கலியுகத்தில் பராசரர் கூறியஸ்மார்த்ததருமங்களே சிறந்தன. என்று கூறப்படுகின்றது. அதனல்,பிதாவின்அருளினல் எனக்கு

ஞானம் உண்டானதாயினுல், எமது தந்தையே வினவப்படத் தக்கவர். முதற்கண்கூறினவனே கிடைக்குமிடத்தில் பரம்பரையால் உணர்ந்தவர் தக்கவர் அல்லர் அன்று என்றதுமாம்.

"பிதா"—வளர்த்தலால் பிதா எனப்படும். ஈண்டுவளர்த்தல் கலிதருமத்தை உபதேசித்ததால் உண்டாயது என்று இடம் பற்றி உணரத்தக்கது. இந்த இச்சையினுலேயே. "జనకః, తాతః," என்ற பிறபரியாயச்சொற்களைக் கூருது "పిత్రు" என்னும் அம்மொழியையே கூறினர் (பரியாயம்=ஒருபொருளைக் குறிக்கும்பல மொழி).

"ఏవ" என்ற தேற்றச்சொல்லால் வேறு ஸ்மிருதிநூல் ஆசிரியர்களை ஒழித்தபடி அன்றுயினும், மநுமுதலிய பெரியரும் கலிதருமத்தை உணர்ந்தவர்களே ஆவார் ஆனலும், இவ்விடயத்தில் பராசருடைய தவமிகுதிவலிமையால் உள்ளதுபோல ஏனையர்க்கு இல்லை என்னும் சிறப்புஉண்டுஎன்று உணர்க. எங்ஙனம் "காண்வம், மாத்தியந்திநம், காடகம், கௌதுமம், தைத்திரீயம்" என்பன முதலியசாகைகளில் முறையே கண்ணுவர் முதலியவர்களுக்குச் சிறப்பு இயற்கையாக உள்ளதோ? ஈண்டும் அவ்வாறே உள்ளதென்று உணரத்தக்கது.

"సుతోవ్యాసః="புதல்வர் வியாசர் என்கிறதென்னெனின்? கலிதருமத்தின் சம்பிரதாயங்களை உணர்ந்தவர் ஆனலும் பராசருடைய புதல்வர் அந்தத்தரும இரகசியங்களை உணர்த்துவதில் எப்போது அடக்கம்கொண்டனரோ?அப்போது ஏனையர் களைப் பற்றிக் கூறத்தக்கது என்னை ? உள்ளது. (எனவே, பெரியோர் முன்சிறப்புச் செய்துகொள்வதில் அடங்கிஒழுகவேண்டும் என்பது கருத்து).

இங்ஙனமாக, வியாசர் முன்னிலையில் பராசரரிடத்தில் மதிக்கத்தக்க சிறந்த அறிவுடைமைவெளிப்படுத்துவதற்கும் பராசரஸ்மிருதி தோற்றுவதற்கும் வியாசனை வினவுவது "வியதிகரணம்" அன்றும். என்று உணர்க. (ங-ச)

శ్లో॥ తతస్తెఋషయస్సర్వే ధర్మతత్వార్థకాంక్షిణః।
ఋషింవ్యాసంపురస్కృత్య గత్వాబదరికాశ్రమమ్ ॥౫॥

என்பது, விதிப்படி ஆசிரியனை அடுத்தலால் கல்விப்பேறு உண்டாகின்றது, என்ற அக்கருத்தால், ஆசிரியனை அடைதலைக் கூறுகின்றது.

(இ-ள்). பின்பு அம்முநிவர் யாவரும் தருமத்தினுடைய உண்மையான அருத்தஞாநத்தை விரும்பினவர்களாய், வியாச மஹாரிஷியை முன்னிட்டுக்கொண்டுவதரிகாச்சிரமத்தை அடைந்து எ—று.

யாவருக்கும் பொதுவகையால் அறியப்பட்டதும், சிறப்பு வகையால் அறியப்படாததுமாகிய விடயங்களில் தெரிந்துகொள்ளவேண்டும் என்னும் விருப்பம் உண்டாகின்றது. "ధర్మ" என்றஇம்மொழி இவ்விடத்து, பொதுத்தருமத்தை உணர்த்துகின்றது. "తత్త్వార్థ" என்றது சிறப்புத் தருமத்தை உணர்த்துகின்றது.

அவற்றுள், பொதுத்தருமம், ஓதப்பட்ட வேதமுடையவனுகியும், வியாகரணத்தை நன்கு உணர்ந்தவனுகியும், ஏனைய இலக்கணத்திலும் அளவையிலும் சதுரனுகியும் இருக்கப்பட்ட புருடனுல் அறியப்படுகின்றது, "ధర్మోవిశ్వస్యజగతఃప్రతిష్ఠా" தருமம் எல்லாவுலகத்தினையும் நிலைபெறச்செய்கின்றது. என்ற இது (கிருஷ்ணயஜுர்வேதம் - அஉ - வது பிரசிநம். உபநிடதம்). பொதுத்தருமத்தைக் கட்டளையிடுகின்றது.

அங்கிய சாகைகளை ஓதினவனுக்காகுலோ ?வியாகரணவன்மையால் சுவர்க்கப் பேற்றதனையும் வீடு பேற்றதனையும் தரித்தலால் தருமம் என்னப்படும் என்று சொல்லாக்கத்தின்றிறமே காட்டுதலினுல் அந்த ஞாநம் உண்டாகின்றது. வியாகரணத்துள்ள "ஔணுதிகப்பிரக்கிரியை" யில் தேற்றமில்லாதவன் ஆனுல், இலக்கணத்தால் அறிந்துகொள்ளுகின்றுன். "ஔணுதிகப் பிரக்கிரியை" = "உணு" முதலியவற்றின் மொழியாக்கம் "உணுதி" என்னும் அந்தவியாகரண சூத்திரத்துட்காண்க.—

## தருமவிலக்கணம்.

"చోదనాలక్షణోऽర్థో ధర్మః" = பொருளாகியும்,வேதஆணையால்அறியத்தக்கதாயும், இருப்பது தருமம்; என்பதுதருமத்தின் இலக்க

ணமாம். அவ்விடத்தில் "அருத்தம்" என்றமொழியால், "சேநாபிசரணம்" முதலிய அநர்த்தங்கள் ஒழிக்கப்பட்டன "శ్యేనేనాభి చరన్యజేత"=அபிசாரம்=சத்துருமாரணத்தை விரும்பினவன் வல்லூறு என்னும் பறவையால் யாகம் செய்யவேண்டுவது; என்று சுருதியாற் கூறப்பட்ட அந்த "சேநாபிசரணம்" என்னும்யாகத்திற்குப் பயனுய சத்துருவதை, "నహింస్యాత్సర్వాభూతాని"=எந்தவுயிரையும் துன்பம் செய்யலாகாது. என்றசுருதிமொழியால் உணர்த்தப்பட்ட விலக்குக்கு விடயமாதலால் அநர்த்தமாகின்றது. அவ்வநர்த்தத்திற்குக் காரணமாதலின் வல்லூறும் அநர்த்த மாகின்றது. (அருத்தம்=பயனுள்ளதாக இச்சிக்கத்தக்கது. அநர்த்தம்=இச்சிக்கத்தகாதது). வல்லூறுதன்வடிவால் விலக்குவதற்கு விடயம் அல்லாதபடியால் விதிக்கு விடயமாவது விரோதம் அல்ல. விலக்கினுக்கு விடயமாதலால், "அக்கினி ஷோமீய யாகத்து" உள்ளவதையும் "அருத்தம்" என்னும் மொழியால், வேறுபடுத்தத்தக்கதா யிருப்பதனுல் அவ்வியாத்திதோஷம் உண்டாகின்றது என்று சங்கித்தல் கூடாது. அவ்வியாத்தி எ-து. ஒருபொருளுக்கு இது அமைதி என்று வகுத்துச்சொல்லிய இலக்கணம் அப்பொருளினிடத்தில்இல்லாமை.(வல்லூறுஎன்பது ஓர்பறவை அதனை டேகைஎன்றும் இக்காலத்து வழங்குவர்).

அவ்விடத்து விசேடவிதியால், சாமாநியமாகிய விலக்கு ஒழிக்கப்பட்டிருக்கின்றது.

(எனவே, எந்த உயிரையும் கொல்லலாகாது என்பது சாமாநிய விலக்கு "அக்கினிஷோமாதியாகத்தில்" பசுக்கொலைசெய்யவேண்டும்என்பது விசேடவிதி. சாமாநிய வுரையிலும் விசேடவுரை வலுவுள்ளது. வலுவுள்ளதால் வலியற்றது ஒழிக்கப்படுகின்றது. ஆதலால் "அக்கினிஷோமீய யாகத்தின்" பசுக்கொலை அநர்த்தம் அல்ல என்பது மீமாம்ஸகரது கருத்து.) விதி=செய்யவேண்டும் என்பது.விலக்கு=செய்யவேண்டாம் என்பது. உரை-எது, விதி, விலக்கு. வசனம்,என்னும்பொருட்டு.

"చోదనా" (சோதனை) என்ற மொழியால் காட்சிமுதலியவை வேறுபடுத்தப்படுகின்றன. அங்ஙனமாஞல் "ఘటంకురు"="குடத்தைச்செய்" என்னும் உலகவழக்கில் அவ்விதிஅதிவியாத்திவருகின்றது: எனில்? அங்ஙனம் அன்று. (அதிவியாத்தி எ-து.

ஒன்றற்கு உரியதென்று எடுத்துச்சொல்லிய இலக்கணம் மற்றொன்றிலும் இருப்பது).

அந்த "சோதனை" என்றசொல், வேதவிடயத்தில் வழங்கும் வழக்கமுடையது ஆதலின், பங்கயம்முதலிய சொற்களைப்போல் அவயவப்பொருள் வெளிப்படுதற்கு நிமித்தமில்லை. பங்கயம் என்பது சேற்றில் பிறந்தது=தாமரை.

மேலே, இலக்கணம் சொல்லப்பட்டு இருத்தலாலே தருமத்தில் அந்த "சோதனை" பிரமாணம் என்று சொல்லுவோன் குறிப்பினால் அப்பொருள் ஆகின்றது. சொல்லுவோன் குறிப்பினால் பொருள்படுவதனை (முன்னத்தினுணருங்கிளவி என்பர்.)

இங்ஙனம், இலக்கண முதலியவற்றால் பொதுத் தருமம் உணர்ந்த பின்பு, சிறப்புவகையால் தெரிந்துகொள்வதில், இருடிகளுக்கு விருப்பம் உண்டாவது நியாயமேயாம்.

தருமவிடயத்தில், விசேடமாய் வினவுவதில் சமர்த்துடையவர் ஆதலால், வியாசனையே இருடிகள் முன்னிலையாக்கிக்கொண்டனர்: என்று கூறியது.

கலிதோஷத்தைப் போக்கடிப்பதற்குக் காரணம் ஆகையினாலும், கெடாதநல்லபயனுக்கு ஏதுவாகையினாலும், வதரிகாச்சிரமத்தில், வாசம் செய்வது சிறந்ததாக இருக்கின்றது. கூர்மபுராணத்திலும் "బదర్యాశ్రమ మాసాద్య ముచ్యేతకలికల్మషాత్। తత్రనారాయణో దేవో నరేణాస్తేసనాతనః। అక్షయ్యంతత్రదత్తంస్యాజ్జప్యంవాపితథావిధం। మహాదేవప్రియం తీర్థంపావనంతద్విశేషతః। తారయేచ్చపితౄంత్సర్వాన్దత్వాశ్రాద్ధంవిశేషతః."=வதரிகாச்சிரமத்தை அடைந்து கலிதோஷத்தினால் விடப்பட்டான். அங்குநரனோடு பழையவனாகிய நாராயணன் இருக்கின்றான். அவ்விடத்துக் கொடுக்கப்படும் தானமும் அவ்விடத்து செபிக்கப்பட்டமந்திரமும், பிறவும், கெடாத பயனைத் தருகின்றன. விசேடமாய் அவ்விடத்தில் மஹாதேவர்க்குப் பிரியமாகிய தீர்த்தம்=(கங்கை)பரிசுத்தமாக இருக்கின்றது. அவ்விடத்தில் பிதிர் கருமம் செய்பவன்தன்னுடையபிதிர்க்கள் எல்லாரையும் கடத்திவிடுகின்றான். என்று கூறிற்று. (ரு)

శ్లో ॥ నానాపుష్పలతాకీర్ణం ఫలపుష్పైరలంకృతమ్ ।
నదీప్రస్రవణోపేతంపుణ్యతీర్థోపశోభితం ॥౬॥
శ్లో ॥ మృగపక్షినినాదాఢ్యం దేవతాయతనావృతమ్ ।
యక్షగంధర్వసిద్ధైశ్చనృత్తగీతైరలంకృతమ్ ॥౭॥

என்பன, பராசருடைய தவத்தின் பெருமையை விளக்குதற்பொருட்டு, அவரிருக்கும் இடமாகிய ஆச்சிரமத்தின் இயல்பைக்கூறுகின்றன.

(இ-ள்) (அவ்வதரிகாச்சிரமமானது) பலவகைப்பட்ட பூங்கொடிகளால் படரப்பட்டுள்ளது. பழங்களாலும் பூக்களாலும் அலங்கரிக்கப்பட்டது. யாறுகளும் அருவிகளும் கூடியுள்ளது. புண்ணிய தீர்த்தங்களால் ஒளிவிடுவது. விலங்கு பறவைமுதலியவற்றின் சத்தங்கள் நிரம்பி யுள்ளது. தேவர்கள் ஆலயங்களால் சூழப்பட்டது. இயக்கர், கந்தருவர், சித்தர்களின் ஆடல், பாடல்களால் அலங்கரிக்கப்பட்டது. எ - று. யாறு, ஆறு எனமருவிற்று.

எல்லைகடந்த தவத்தினுல், பயன் உடனே கிடைக்கின்றது: ஆதலால், எவ்வளவு சிறந்தபயன் காணப்படுகின்றனவோ? அவ்வளவு தவத்தின் பெருமை சிறந்தது என்று நிச்சயிக்கத்தக்கதாக இருக்கின்றது.

இந்த ஆச்சிரமத்தில் அந்தந்தப் பருவத்தில் கிடைக்கத்தக்க பலவகைப்பட்ட பூக்கள், எல்லாக்காலத்திலும் கிடைப்பதனுல், கடவுள் பூசை என்னும் தவப்பயன் பலித்துள்ளதாகக் காணுகின்றது.

பயன்படத் தக்க மரங்கள் விசேடப்பட்டு இருத்தலால், ஆகார நியமங்களின் பலிப்பு நிச்சயிக்கப் படுகின்றது.

வேனிற்காலத்திலும் ஒழியாதயாற்றுப்பெருக்கினுல், ஸ்நாந நியமங்களினுடைய பலிப்பு வெளிப்படுகின்றது.

சுடுகையோடும் கூடிய தீர்த்தம், விஷ்ணுதீர்த்தம், கங்கை முதலிய புண்ணிய தீர்த்தம் இவற்றின் விளக்க மிகுதியால் இந்த ஆச்சிரமம், சிறந்த தவத்திற்குக் காரணமாயிருக்கின்றது என்பதற்கு ஏது சொல்லியபடி யாயிற்று.

விலங்குகள் பறவை முதலியவை நட்பாய் ஒன்றற்கொன்று பகையைவிட்டு அச்சமில்லாமல் நம்பிக்கையோடு கூடிசவிட்டுக் கொண்டு இருக்கின்றன என்றதனல் "அஹிம்ஸை" = கொலையில்லாமை என்னும் தவப்பலிப்புப் பெற்றுள்ளதாக வெளிப்படுகின்றது. அவ்வாறே "யோக சாத்திரத்துள்", ஆசிரியர், பதஞ்சலியார் இயமநியமமுதலிய யோக அங்கங்களுடைய சித்திக்கு அடையாளங்களைக்கூறி, கொல்லாவிரத முதலியவற்றையுங்குறிப்பித்தனர். வருமாறு. "అహింసాప్రతిష్ఠాయాం తత్సన్నిధౌ వైరత్యాగః"=கொல்லாதவிரதசித்தியடைந்த பெரியோர்கள் சந்நிதியில், பகைக்குணமுள்ள மிருக முதலிய பிராணிகளின் பகை ஒழிந்துபோகின்றது எ-று.

முன்னம், மஹா ரிஷிகள் இந்த ஆச்சிரமத்தில் தவஞ்செய்து கொண்டு, தங்கள்தங்கள் காலத்தில் ஒவ்வொருதேவாலயங்களைப் பிரதிஷ்டைசெய்தார்கள். அவற்றால் சூழப்பட்டிருத்தல், சிறந்த தவத்திற்கு இந்த ஆச்சிரமம் தக்கது என்று யாவரும் விரும்புதற்குக் குறியாக இருக்கின்றது. அன்றியும், சந்திரசூரியர் முதலியதேவர்கள் முற்பிறப்பில் மனிதராக இருந்து இந்த ஆச்சிரமத்திலேயே பலபல இடங்களில் தவஞ்செய்து, தேவத்துவத்தை அடைந்தார்கள் என்று சொல்லவேண்டிய விருப்பத்தால் அவ்வத் தேவர்களுடைய பெயர்க்குறியையுடைய கோயில்களால் சூழப்பட்டது என்று சொல்லப்பட்டது எனவும் கூறுதலுமாம்.

இயக்கர் முதலியவர்கள் முற்பிறப்பிற்செய்த தவத்திற்குப் பலமாகிய தேவயோனித் தன்மையை=தெய்வப்பிறப்பினை, அநுபவிப்பவர்கள் ஆனாலும், இவ்விடத்திற்குவந்து, இத்தவத்தினுடைய பெருமையை நோக்கிக்களித்து ஆடுவதும் பாடுவதும் செய்கின்றனர். இதனால், இவ்வாச்சிரமம் தேவர்களாலும் இச்சிக்கத்தக்கது என்று குறிப்பிக்கின்றது. இதுதகுதி யுள்ளதே. தெய்வப்பிறப்பினும் மேலான பயனை இவ்விடத்துத் தேடிக்கொள்வதுகூடுமானதாகஇருக்கின்றமையால். அல்லதூஉம், இயக்கர் முதலியோர் முத்தியை விரும்பினவர்களாய் அந்தமோக்ஷத்திற்கு ஏதுவாகிய ஆடல்பாடல்களால் கடவுளைத்துதிக்கின்றனர். என்பதுமாம்இக்கருத்தை யோகியாகிய யாஞ்ஞவற்கியரும் கூறினர். வருமாறு. "వీణావాదనతత్త్వజ్ఞః శ్రుతిజాతివిశారదః। తాళజ్ఞశ్చాప్రయాసేన మోక్షమార్గం నిగచ్ఛతి." = வீணைவாசிக்கும் இரகசியத்தை அறிந்த

வனும்*சுருதிசெய்வதிலும் ஸ்வரஜாதியிலும்சமர்த்தனும், தாளத்தையுணர்ந்தவனும், "ச" என்பதனல் கருத்தைத்தெரிந்தவனும் ஆகிய மனிதன், "நாதாநுசந்தாந உபாசனையால்"=தோத்திரத்தால்,வருத்தம் இன்றியே முத்திமார்க்கத்தை, (எனவே, கடவுள் அருளை) பெறுகின்றான். எ-று.

 శ్లో॥ తస్మిన్నృషిసభామధ్యేశక్తిపుత్రంపరాశరమ్ ।
సుఖాసీనంమహాతేజాముని ముఖ్యగణావృతమ్ ॥౫॥
కృతాంజలిపుటోభూత్వావ్యాసస్తుఋషిభిస్సహ ।
ప్రదక్షిణాభివాదైశ్చస్తుతిభిస్సమపూజయత్ ॥౬॥

என்பன, ஆசிரியனை வழிபடுதலின்கண் மாணாக்கன், அநுட்டிக்கத்தக்க முறைமையைக் கூறுகின்றன.

(இ-ள்.) அவ்விடத்தில் அந்த இருடிகள் கூட்டத்தின் நடுவிலே முநிவர்களில் சிறந்தவர்களுடைய கூட்டத்தால் சூழப்பட்டு இன்பத்தோடும் வீற்றிருக்கின்ற சத்திரிஷிபுத்திரராகிய பராசர முநிவரை,மிகுந்த பிரகாசத்தையுடைய வியாசர்,முநிவர்களோடு அடைந்து இரண்டு கைகளையும் குவித்து அஞ்சலிசெய்தவராய், கோத்திரம்பிரவரம் பெயர் முதலியவற்றைச் சொல்லிச்செய்யும் நமஸ்காரமாகிய அபிவாதநங்களாலும், வலம்வருதலாலும்,தோத்திரங்களாலும் நன்றாகப்பூசித்தார் எ-று. பிரவரம்=கிளைமரபு.

முன்னர்சொல்லப்போகின்ற தருமமானது,முநிவர்கள் எல்லார்க்கும் உடன் பாடானதா யிருக்கும் என்பதைக் குறித்தற்கு "ఋషిసభా" என்று கூறப்பட்டது.

முநிவர்களிலும்விசேடமாகத்தருமநூலாகிய ஸ்மிருதிகளைச் செய்த நூலாசிரியர்களாகியும், கோத்திரங்களை வளர்த்தவர்களாயும் இருக்கின்ற அத்திரி, யாஞ்ஞவற்கியர் முதலானவர்களுடைய உடன்பாட்டுண்மையைச் சொல்ல விரும்பி "మునిముఖ్య" என்று கூறப்பட்டது.

* சுருதி எ-து. எழால், அது ஈண்டு கண்டத்து ஒலியும் நரம்பொலியும் ஒத்திருக்கச்செய்தல். ஸ்வரம் - எ-து, எழுத்துக்களின் எடுத்தல் படுத்தல் முதலிய வோசைத்திறம். தாளம் - எ-து - எழுத்துக்களின் உச்சாரணகால மாத்திரை. கருத்து=பொருள் = பாவம்.

தவம்ஒன்றினலேயே பராசரர்க்கு மகிமை கிடைத்தபடியல்ல; சான்ருேர் வழியிற்பிறந்தபிறப்பினுலும் பெருமைகிடைத்தது; என்பது குறித்தற்கு "శక్తేఃపుత్రం" என்று கூறப்பட்டது.

இந்த மகிமை "பராசரர்" என்னும் சொல்லினுடைய பொருளின் இலக்கணத்தை விசாரிப்பதினுலும் நன்ருக விளங்குகின்றது. அப்படிப்பட்ட பொருள்வகை பெரியோர்களால் கூறப்பட்டது. என்னை? "పరాకృతాశ్న రాయస్మాద్రాక్షసానాంవధార్థినాం। అతఃపరాశరోనామఋషిరుక్తోమనీషిభిః।"=கொல்லவேண்டிய அரக்கர்களால்விடப்பட்ட அம்பைப் பின்னிட்டுப்போகும்படி, செய்ததால், அறிந்த முநிவர்கள் பராசரர் என்று பெயரிட்டனர். எ-ம்.

"పరస్యకామదేవస్య శరాస్సమ్మోహనాదయః।నవిద్యంతేయతస్తేనఋషిరుక్తఃపరాశరః." = யாவரினும் சிறந்த மந்மதனுடைய சம்மோஹநம் முதலிய அம்பின் வேதனை இவர்க்கு இல்லை ஆதலால், பராசரர் என்று பெரியராற் சொல்லப்பட்டார். எ-ம்.

"పరేషుపాపచిత్తేషు నాదత్తేకోపలక్షణం। శరంయస్మాత్తతఃప్రోక్త ఋషిరేవపరాశరః"=பாவ எண்ணத்தையுடைய அந்நியரிடத்துத் தமது கோவம் என்னும் அம்பைச்செலுத்துவது இல்லை ஆதலால், பராசரர் என்றுகூறப்பட்டார். எ-ம்.

"పరంమాతుర్నిజాయాయదుదరంతదయంయతః। ఋచముచ్చార్యనిర్భిద్యనిరగాత్సపరాశరః."=தாயின் கருப்பத்தி லிருந்தபோது, ஒரு இருக்கு மந்திரத்தை உச்சரித்து அந்தவலிமையால் தாய்வயிற்றைப் பீறிக்கொண்டு அவ்வழியால் வெளிப்பட்டனர் ஆதலால் பராசரர் என்னப்பட்டார். எனவும்வரும்.

மநத்திற்கு எவ்வகைப்பட்ட விக்ஷேப தோஷங்களும் இல்லாமல் ஒரேகுறியால் நிலைபெற்று இருக்கும்படி வீற்றிருப்பவர் என்பது குறித்தற்கு "సుఖాసీనం" என்றுகூறப்பட்டது. ఐకాగ్ర్యం "మహాతేజాః" என்னும்இவ்விரண்டு மொழிகளுடையவகைமை முன்னரே கூறினும்: ஆண்டுணர்க. விக்ஷேபம்=கவலை.

## குருபத்திவிடயம்.

"కృతాంజలిపుటః" எ-து. கைகுவித்து அஞ்சலிசெய்து, எ-று. இதனல் விசேடமான பத்தியுடைமை தோற்றுவிக்கப்பட்டது.

மிகச்சிறந்த பத்தியால் குரு உபதேசித்த உண்மைப் பொருள் வெளிப்படுகின்றது. இங்ஙனம் "சுவேதாஸ்வதர சாகையால்" சுருதிமொழி கேட்கப்படுகின்றது. அதுவருமாறு. "యస్య దేవే పరా భక్తిర్యథా దేవే తథా గురౌ। తస్యైతే కథితా హ్యర్థాః ప్రకాశంతే మహాత్మనః॥" = யாவன் ஒருவனுக்குக் கடவுளிடத்தில் சிறந்தபத்தி உண்டாய், அவ்வாறே ஆசிரியனிடத்திலும் பத்தி உண்டாருமோ? அந்தப் பெரியவனுக்கு இங்கே கூறியபொருளெல்லாம் விளங்கும். எ-று.

குருபத்தியில்லாவிட்டால் பொருள் உபதேசிக்கப் பட்டாலும் பலியாதாம். இவ்வாறு, வேதமும் கூறிற்று. அதுவருமாறு. "అధ్యాపితా యే గురుం నాద్రియంతే విప్రా వాచా మనసా కర్మణా వా। యథైవ తేన గురుభిర్భోజనీయాస్తథైవ తాన్న భునక్తి శ్రుతం తత్" = குருவால் ஓதுவிக்கப்பட்டு, யார் மநம்மொழிதொழில்களால் அந்தக்குருவை வழிபடாதுவிட்டானோ? அவ்வாறேஅந்தக்குரவனும், அந்தச்சீடனுக்குஉணவைக்கொடுக்கலாகாது. அவ்வாறேஅவன்படித்தபடிப்பும்அவனுக்குப்பயன்படமாட்டாது, எ-று. எனவே, எவ்வாறுகுருவைவழிபடாதசீடர்கள்குருவால் காக்கப்படுகிறதில்லையோ? அவ்வாறே அக்கல்வியானது கற்றமாணுக்கர்களைத் தன்பயனைக்கொடுப்பதனுற் காப்பாற்றுவதில்லை. என்பதுகருத்து. கடவுளைப்போலவே ஆசிரியனையும் பூசிக்கவேண்டுவது ஆதலாலே அவ்வாசிரியன் விடயமாக பிரதக்ஷண நமஸ்காரம் செய்வது தக்கதாக இருக்கின்றது.

ஆனல், கடவுளுக்குச் செய்வதுபோல ஆசிரியனுக்கும் "ஆவாஹநம், ஆசநம்" முதலியஉபசாரங்களையும்செய்தல் வேண்டுமே எனில்? செய்யலாம் ஆதலால், பிரதக்ஷணநமஸ்காரம் என்றதனுல் மற்றைய உபசாரங்களையும் செய்ததாக உபலக்ஷணவிதியாற்கொள்க.

அன்றியும், தூரத்திலிருந்து வந்து குருதரிசனை செய்துகொள்பவர்கள், அப்போதைக்குச் செய்யத்தக்கது வலம்வருதல் முதலியவே போதுமானதாக இருக்கின்றது என்று அங்ஙனம் கூறியது எனினும் அமையும். (அ-கூ)

శ్లో॥ తతస్సంతుష్టహృదయః పరాశరమహామునిః।
ఆహ సుస్వాగతం బ్రూహి వ్యాసీనో మునిపుంగవః ॥౧౦॥

என்பது, மேற்கூறப்பட்ட வழிபாடு, விதிப்படி உள்ளது என்பது விளக்குவதற்குக் களிப்புமுதலிய ஆசிரியன் கருணை விசேடத்தைக் கூறுகின்றது.

(இ-ள்.) அதன்பின்பு, களிப்பை அடைந்த உள்ளத்தினை யுடைய பராசர மஹாமுநி, இருடிகளிற் சிறந்தவர் ஆதலால் தாமிருந்தபடியே "சுகமாகவந்தாயோ? சொல்வாயாக" என்று வினவினர். எ-று.

ஆசிரியன் களிப்படைவது, சீடனுடைய விருத்திக்குக்காரணமாக இருக்கும்: என்னும்கருத்தை * உடன்பாட்டாலும் மறுதலையாலும், புராணசாரத்தில் கூறப்பட்டது. வருமாறு "గురా వతుష్టేతుష్టాస్స్యుస్సర్వేదేవాద్విజోత్తమాః। తుష్టేతుష్టోయతస్తస్మాత్సర్వదేవమయోగురుః। శ్రేయోర్థీయదిగుర్వాజ్ఞాంమనసాపినలంఘయేత్ । గుర్వాజ్ఞాపాలకోయస్మాత్ జ్ఞానసంపత్తిమశ్నుతే" = ஆசிரியன்சந்தோஷத்தை அடைந்தால் தேவர்கள் எல்லாரும்சந்தோஷப்படுகின்றனர் ஆதலால் ஆசிரியனேஎல்லாத்தேவர்களுடையவடிவமாகியிருக்கின்றார். தனது விருத்தியை விரும்பினவனாக இருந்தால், அவன் ஆசிரியர் கட்டளையை மநத்தாலும் கடக்கலாகாது. ஆசிரியர் கட்டளையைத்தவறாதபடி, காப்பவன்ஞானச் செல்வத்தை அநுபவிக்கின்றான். எ-று.

அன்போடு வரவை விசாரித்தபடியால் சிறந்த தயவை உடையவர் என்பது குறிக்கின்றது.

"సుస్వాగతం" என்பதில் "సు, సు" என்று இரண்டுவிசை=மிகைபடக் கூறியது, அன்பின் மிகுதியைக் குறிக்கின்றது. அன்றி, ஒரு "సు" என்பதனால், உலக சுகமும், இரண்டாவது "సు" என்பதனால், செய்தவழிபாடு விதிப்படியுள்ளது என்பதற்கு அறிகுறியாகிய சாஸ்திரீயசுகமும், எனக்கொள்ளினும் அமையும்.

"ఆసీనః" = உட்கார்ந்திருப்பவனாகிய என்ற இச்சொல், இருடிகள் வந்தபோது அவரும் எழுந்து உபசரிக்கவேண்டுவது அன்

---

* குருவுக்கு சந்தோஷமுண்டானால், சீடனுக்குச் செல்வம் உண்டாகின்றது என்பது அந்வயம். குருவுக்கு சந்தோஷம் இல்லாவிட்டால் மாணாக்கனுக்கு யாதொரு பயனும் இல்லை என்பது வியதிரேகம். இவற்றால் குருவின் சந்தோஷம் சீடனுடைய செல்வவிருத்திக்குக்காரணமென்பது அநுபவ சித்தமாயுள்ளது.

ரோ? என்னும் வினவை ஒழிக்கின்றது. அதற்கு அநுகூலமாக "మహామునిః" — சிறந்தமுநிவர்: "మునిపుంగవః" = முநிவர்கள் தலைவர்: என்னும் இவ்விரண்டு சொற்களால் விசேடம்கூறப்பட்டது. இவ்விரண்டு சொற்களும் முறையே ஒன்று பருவத்தாலும், மற்றொன்று கல்வியாலும் மூத்திருக்குந் தன்மையைக் குறிக்கின்றன. பருவம்=வயது. அவ்விருவகைப்பெருமையும்உடையவராயிருத்தலால் பராசரனார் எழுந்திருந்து உபசரிக்கத்தக்கவர் அல்லர் என்பது. (கo)

శ్లో ॥ కుశలంసమ్యగిత్యుక్త్వావ్యాసఃపృచ్ఛత్యతఃపరమ్ ॥౧౦౫॥ *

என்பது, இருந்தவர், வந்தவருடைய வரவை எவ்வாறுவினவினரோ? அவ்வாறே வந்தவரும் இருந்தவருடைய இருப்பை விசாரிக்கவேண்டுவது ஆதலால், முன்பாக உண்மை உணர்ந்த ஆசிரியர்களுக்குத்தனதுவரவுமுதலியவற்றை விண்ணப்பித்தபின் தானுணர்ந்து கொள்ள வேண்டுவனவற்றை வினவுகின்றார் என்பது.

(இ-ள்.) க்ஷேமம் நன்றாக இருக்கின்றது என்று சொல்லி, வியாசர் அதன்பின் இவ்வாறு வினவத்தொடங்கினர். எ-று.

இவ்வாறு சொல்லி, குருமுகமாக க்ஷேமங்களையும் வினவி என்னும் பொருளை வருவித்துக்கொண்டு, கருத்தை முடித்துக் கொள்ளவேண்டும். (கoஉ)

శ్లో ॥ యదిజానాసిభక్తింమేస్నేహాద్వాభక్తవత్సల।
ధర్మంకథయమేతాతహ్యనుగ్రాహ్యోహ్యహంతవ ॥౧౦౫॥

என்பது, அறியத்தக்கபொருளை வினவுதலின் முறைமையைக் கூறுகின்றது.

(இ-ள்.) பத்திசெய்பவரிடத்தில் கருணையை உடையவரே! என்னுடைய பத்தியைத்திருவுளத்திற்கொண்டீராயினும், தந்தையே! மகன்என்னும் அன்பினாலாயினும் எனக்குத் தருமங்களைக் கூறியருளும். எவ்வண்ணமாயினும், அடியேன் தேவரீரால் அநுக்கிரகிக்கத்தக்கவனாகி யிருக்கின்றேன். எ-று.

---

* இதன்பின் அரைசுலோகம் இருக்கவேண்டியதாக இருக்கின்றது ஆனால் அது காணப்படவில்லை.

அன்புடைய மாணாக்கன் ஆயினும் மகனாயினும், இரகசிய மான உபதேசத்திற்குத் தக்கவர்களாம். ஏனையர் தக்கவர்களல்லர். இந்த அருத்தம் சாமவேதிகளால் "மதுவித்தை" அச்சுருதிமொழியில் சொல்லப்படுகின்றது. வருமாறு. "ఇదంవావ జ్యేష్ఠాయపుత్రాయపితాబ్రహ్మప్రబ్రూయాత్, ప్రాణాజ్ఞ్యాయనేన్తేవాసినేనాన్యస్మైకస్మైచన" பிதாமூத்தமகனுக்குக்கூறுவன். தன்னுயிரிலும் சிறந்த மாணாக்கனுக் காயினும் கூறுவன், அந்நியன்ஒருவனுக்கும் கூறலாகாது. என்றது. ஆதலால்இவ்விடத்து, வியாசனார் பாராசரனார்க்குமகனாகியும் மாணாக்கனாகியும் இருக்கின்றனர் என்னும் கருத்தால் அவ்விரண்டினையும்கூறினார்.

எவ்வகையா லாயினும் என்மநத்தில் பத்திவிசேடம் உண்டு என்று தேவரீரால் கருதப்பட்டதானால், நீர் அடியவர்களிடத்தில் அன்புடையவர் ஆதலால், இவன் மாணாக்கனே யென்னும் திருவுளத்தால் அருள்செய்யும் அவ்வாறுகருதா விட்டாலும் மகன் என்னும் கருணையினா லாயினும் அடியேன் கருணைக்குத்தக்கவன் ஆகின்றேன். எவ்வகையாலும் தருமம், உபதேசிக்கத்தக்கதாகவேயிருக்கின்றது: என்றபடி. (கக௬)

శ్లో॥ శ్రుతామేమానవాధర్మావాసిష్ఠాగ్కాశ్యపాస్తథా।
గార్గేయాగౌతమీయాశ్చతథాచౌశనసాఃశ్రుతాః ॥౧౨౫॥

ఆత్రేర్విష్ణోశ్చసంవర్తాద్దక్షాదంగిరసస్తథా।
శాతాతపాచ్చహారీతాద్యాజ్ఞ్యవల్క్యాత్తథైవచ ॥౧౨౫॥

ఆపస్తంబకృతాధర్మాశ్శంఖస్యలిఖితస్యచ।
కాత్యాయనకృతాశ్చైవతథాప్రాచేతసాన్మునేః ॥౧౮౫॥

என்பன, பலவகைப்பட்ட தருமங்கள் மநுமுதலியவர்களாற் சொல்லப்பட்டுள்ளன. அவற்றுள், எந்தத்தருமம் உம்மால் அறியத்தக்கதோ? என்ற வினாக்கருத்தால் அறியவேண்டிய தருமங்களைப் பிரிப்பதற்குத் தாம்; முன் உணர்ந்ததருமங்களைவகுத்து முறையே கூறுதலையுணர்த்துகின்றது.

(இ-ள்.) மநு, வசிஷ்டர், கசியபர், கர்க்கர், கௌதமர், உசநர், அத்திரி, விஷ்ணு, சம்வர்த்தர், தக்ஷர், ஆங்கிரசு, சாதாதபர், ஹாரீதர், யாஞ்ஞவற்கியர், ஆபஸ்தம்பர், சங்கர், இலிகிதர்,

காத்தியாயநர், பிராசேதசர், இப்பத்தொன்பதின்மரும் வேறு வேருகக் கூறியிருக்கும் தருமசாத்திரங்கள், அந்தந்த இருடிக ளினின்றும் என்னுல் உணரப்பட்டது.

"మే", "మయా" = என்னுடைய என்னும்ஆரும் வேற்று மைக்கு என்னுல் எனமூன்ற னுருபின் பொருள்படக் கூறப்பட் டது. இவ்விடத்தும் சாமாநியமாய்ச் சம்பந்தப் பொருளதாகிய ஆரும் வேற்றுமைக் கருத்தாவின் புடைபெயர்ச்சி இலக்கண விசேடத்தில் முடிகின்றது.

இருடிகளினின்றும், என்னும் ஐந்தாவதனுருபிற்கு கூறப் பட்டதனேடுசம்பந்தம். ஆபஸ்தம்பரால் செய்யப்பட்டவைகள், எனில்? சொல்லப்பட்டவை என்பதுகருத்து. சங்கர், இலிகிதர், என்பன இந்த ஆரும் வேற்றுமைக்கு சம்பந்தமேபொருள். அவ ராற் கூறப்பட்டதே அந்த சம்பந்தம்ஆகின்றது. "ప్రాచేతస" என் பது, "వాయస" రాక్షస என்பனபோல் "ஸ்வார்த்தத்தில்வந்த தத் திதம்" = (தன்னுைப் பொருளேக்குறிக்கும் பெயர்ப்பகுபதம்) "ప్రచేతాః" என்பதற்கு பொருள் வருணன் என்பது. அல்லது, (அபத்தியார்த்தம்) = அவன்மகன், என்னும் பொருளிலாயினும் "தத்திதப்பிரத்தியயம்" ஆகலாம். அந்தபக்ஷத்தில் "பிரசேத நன்" மகன் என்பவன் ஒருவன் தருமநூல்செய்தவனென்ற கருத் தும் ஆகின்றது. (பிரத்தியயம்=விகுதி.) (சம்பந்தம்=கிழமை= உரிமை.) (கசஉ)

శ్లో ॥ శ్రుతాహ్యేతేభవత్ప్రోక్తాః శ్రుత్యర్థామేనవిస్మృతాః
అస్మిన్మన్వంతరేధర్మాః కృతత్రేతాదికేయుగే ॥౧౫౪॥

என்பது,மநுமுதலியோராற் கூறப்பட்ட ஸ்மார்த்த தருமம் கேள்விப்பட் டிருத்தலால் அவற்றை வினவி அறிய வேண்டுவ தில்லே. "அக்கினிஹோத்திரம்" முதலிய "சுரௌததருமங்களே" வினவியறியத்தக்கதென்று சங்கித்துக் கூறுகின்றது.

(இ-ள்.) தேவரீர் கூற இங்கு, கிடைத்துள்ள வேதங்களும் சுரௌத தருமங்களும் எவ்வாறு என்னுல் கேட்கப்பட்டனவோ? அவ்வாறு இந்த மநு வந்தரத்தில், கிருதம், திரேதம், முதலிய யுகங்களில் வழங்கும் தருமங்களும், என்னுல் மறக்கப்பட்டன அல்ல. எ-று.

அறியப்பட்டுள்ள சுருதிகளுக்கு அருத்தமாகிய "அக்கினி ஹோத்திரம்" முதலிய தருமங்கள் என்னால் கேட்கப்பட்டன. "ஹி" என்னுஞ் சொல், இதனைத்தாமும் உணர்ந்து உள்ளீர் அன்றே? என்னும் பொருளைத்தருகின்றது, உம்மாற் கூறப்பட்ட என்றது, அதற்குக்காரணத்தை விளக்குகின்றது. பராசரனிடத்தில் வியாசனர் ஓதியதாகப் புராணக்காரர்கள் கூறுகின்றனர். கேட்கப்பட்டதும் மறந்ததானல் மறுபடியும் ஞாபகத்திற்குக் கொண்டுவருவதற்காக விரும்பவும் படுமே? என்னும் ஐயத்திற்கு இடமில்லாதபடி, மறக்கவில்லை என்று கூறினர்.

கலியுகத்தில், அக்கினிஹோத்திரம் முதலிய தருமங்கள் மிகுதியாகக்கிடையாது என்னுங்கருத்தால் திரேதாயுக முதலியவற்றுள் என்று கூறப்பட்டது. "ஆதி" என்றதனல் துவாபரயுகமுங் கொள்ளப்பட்டது. இந்த மநு வந்தரத்தில் என்று, சொல்வது நிகழ்காலத்தை உணர்த்துகின்றது. ஆனல், இறந்த மநு வந்தரத்தையும்வரும் மநு வந்தரத்தையும் விலக்கியது அன்று. அவ் விலக்கினலும் பயனில்லை. வேறு வேறுவகைப்பட்ட மநு வந்தரங்களில் தருமங்களும் வேறுபட்டிருப்பதாக யாண்டும் கண்டதில்லை. இந்த மநுவந்தரத்தில், கிருத திரேத துவாபரயுகங்களில் பெரும்பாலும் அநுட்டிக்கப்பட்டனவாகியும் பிரத்தியக்ஷ சுருதி அருத்தமாகியும் உள்ள இந்த சுரௌததருமங்களும் மநுமுதலியோர்கூறிய ஸ்மார்த்ததருமங்களைப்போல ஸ்மரிக்கப்பட்டிருத்தலினல் தெரிந்துகொள்வதற்கு இச்சிக்கவில்லை. (ஸ்மரித்தல்= நினைத்தல்).

(கடுஉ)

శ్లో॥ సర్వేధర్మాఃకృతేజాతాస్సర్వేనష్టాఃకలౌయుగే।
చాతుర్వర్ణ్యసమాచారంకించిత్సాధారణంవద ॥௧௬॥

என்பது, இப்போது, கூறுதொழிந்த அறிபொருளை வினவுதல் கூறுகின்றது. (அறிபொருள் = அறியவிரும்பியபொருள்).

(இ-ள்.) எல்லாத்தருமங்களும் "கிருத" யுகத்தில் பிறந்தன. கலியுகத்தில் இறக்கின்றன. ஆதலால், நான்குவருணத்தினுடைய பொதுவாகிய நல் ஒழுக்கங்களைச் சிறிது கூறவேண்டும். எ-று.

" సర్వ " = எல்லாம். என்றது, தேசகால அவஸ்தை முதலிய பேதத்தால், தருமம் பலவகைப்பட்டிருக்கின்றது என்பதுகுறிக்கின்றது. இவ்வாறு, " மஹாபாரதம், அநுசாசநிகபருவம், உமாமகேச சம்வாதத்தில், " கூறப்பட்டுமிருக்கின்றது.

அதுவருமாறு, "ధర్మాబహువిధాలోకే శ్రుతిభేదముఖోద్భవాః। దేశధర్మాశ్చ దృశ్యంతే కులధర్మాస్తథైవచ। జాతిధర్మా వయోధర్మా గుణధర్మాశ్చశోభనే। శరీరకాలధర్మాశ్చఆపద్ధర్మాస్తథైవచ। ఏతద్ధర్మస్యనానాత్వం క్రియతేలోకవాసిభిః॥." = உலகத்தில் வேறு வேறு சுருதிகளாகிய முகங்களில் இருந்து பிறந்த தருமங்கள் பலவகைப்பட்டுள்ளன. அவை, தேசதருமங்கள், குலதருமங்கள், சாதிதருமங்கள், பருவதருமங்கள், குணதருமங்கள், தேகதருமங்கள், காலதருமங்கள், ஆபத்துத்தருமங்கள் எனப்படும்: இங்ஙனம் தருமங்கள் பலவகைப்பட்டனவாக, உலகத்துள்ளவர்களாற்செய்யப்படுகின்றன.

இத்தருமங்கள் எல்லாம் உயிர்களால் " கிருதயுகத்தில் " உள்ளவாறு அநுட்டிக்கப் பட்டனவாகின்றன. யுகவல்லமையால் நான்குபாதங்களையுடைய தருமங்களுக்கும் கேடுஇல்லை. திரோதாயுகமுதலியவற்றுள் தருமங்கள் படிப்படி சுருங்கிப் போவதாய் கலியுகமுடிவில் ஒன்றும்இல்லாமற்கெட்டு ஒழிகின்றது. இவையெல்லாம் " புராண சாரத்துள் " குறிக்கப்பட்டன. வருமாறு, " కృతేచతుష్పాత్సకలో వ్యాజోపాధి వివర్జితః॥ వృషప్రతిష్ఠితోధర్మో మనుష్యేష్వభవత్పురా। ధర్మపాదవిహీనస్తు త్రిభిరంశైః ప్రతిష్ఠితః। త్రేతాయాంద్వాపరేర్థేన వ్యామిశ్రో ధర్మ ఇష్యతే। త్రిపాదహీనస్తిష్యేతుసత్తామాత్రేణతిష్ఠతి. " = கிருதயுகத்தில், "வியாஜஉபாதிவிட்ட". = வேறொரு நிமித்தத்தடையில்லாத முழுத்தருமம் முதலில் நான்கு கால்களையுடைய இடபரூபமாய், மனிதரிடத்தில் நிலைபெற்றதாயிருந்தது. திரோதாயுகத்தில், தருமம் ஒருகால் குறைந்து மூன்று பங்கோடு அமைக்கப்பட்டிருந்தது. துவாபரயுகத்தில், இரண்டு அல்லது அரைப்பங்காகி " மிசிரதருமம் " என்று பெயர்பெற்று இருந்தது. மிசிரதருமம்=பாவத்தோடுகூடியதருமம். " తిష్యే=కలౌ "=கலியுகத்தில் மூன்றுகாலு மற்று, இருக்கின்றது என்னும்அவ்வளவில்நின்றது.

அங்ஙனம், பிரகற்பதியும் கூறினர். வருமாறு, " కృతేభూత్స కలోధర్మస్త్రేతాయాంత్రిపదిస్థితః। పాదఃప్రణష్టో ధర్మస్య మత్సరద్వేషసంభవః। ధర్మాధ

ర్గాసమాఘూత్వాద్విపాదొద్వాపరేస్థితా। తిష్యేధర్మస్థితఃపాదైర్ధర్మః పాదెనసంస్థితః." =கிருதயுகத்தில், தருமங்கள் முழுவதும் நடந்தன. திரேதாயுகத்தில், மூன்று பாதங்களையுடையனவாயிருந்தன. மச்சரம், துவேஷம், உண்டாகின்ற அதருமத்தின் ஒருகால் அவற்றுட்கலந்திருந்தது. துவாபர யுகத்தில், அறம் பாவங்களிரண்டும் இரண்டிரண்டு கால்களால், ஒத்தனவாகி விரவிநின்றன. கலியுகத்தில், பாவம் மூன்றுகாலுடன் நிற்கின்றன; அறம் ஒருகாலுடன் நின்றுள்ளது. எ-று. மச்சரம் = பிறர்துயர்கண்டு களித்தல். துவேஷம்=பகை பாராட்டல்.

அன்றியும், " இலிங்கபுராணத்துள், ,, கலியுகத்தினுள் உள்ளதருமத்தின் கேட்டினைக் கூறி அதற்குக் காரணமாகிய புருட தோஷத்தை உபநியசித்திருக்கிறார். " ఆద్యేకృతేతుయోధర్మస్స త్రేతాయాం ప్రవర్తతే। ద్వాపరేవ్యాకులీభూతః ప్రణశ్యతికలౌయుగే। తిష్యేమాయామసూయాంచ వధంచైవతపస్వినాం। సాధయంతినరాస్తత్రతమసావ్యాకులేంద్రియాః॥ " = முதலாவது கிருதயுகத்தில், தருமம் எதுவோ? அதுவே, திரேதாயுகத்தில், வழங்குகின்றது. துவாபரயுகத்தில், வியாகூலத்தைஅடைந்திருக்கின்றது. கலியுகத்தில் நாசத்தை அடைகின்றது. அக்கலியுகத்தில், மாநுடர் தாமசகுணத்தால் கவர்ந்து அலைக்கப்பட்ட பொறிபுலன்களை யுடையவராய் வஞ்சகத்தையும், அழுக்காற்றையும், தவத்தரைக்கொலை வதையையும் செய்கின்றார்கள். எ-று. உபநியசித்தல்=வரம்புசெய்து எடுத்துக்கூறுதல்.

அல்லதூஉம், " விஷ்ணுபுராணத்திலும்" = వర్ణాశ్రమాచారవతీప్రవృత్తిర్నకలౌనృణాం। నసామయజుర్ఋగ్వర్గవినిష్పాదనహేతుకా. = சாமம், யஜுசு, இருக்கு, இவ்வேதங்களினுடைய பயனை அடைவதற்குக் காரணமாகிய வருணாச்சிரம ஒழுக்கங்களையுடைய நடை, கலியுகத்தில் மனிதருக்குள் இல்லாமல் ஒழியும். எ-று.

இன்னும், " ஆதித்திய புராணத்திலும்"= " యస్తుకార్త్యయుగేధర్మోనకర్తవ్యఃకలౌయుగే। పాపప్రసక్తాస్తుయతః కలౌనార్యోనరాస్తథా." = மாதர்களும், மைந்தரும் பாவத்தில் சிறந்தவராவார் என்னும் நிமித்தத்தினால், கிருதயுகத்துள்ள தருமம்கலியுகத்தில் அவ்வாறு செய்யத்தக்கதல்ல. எ-று.

ஆதலால், கலிகாலத்தில், சீவர்களுக்குவருத்தத்தால்முடிக்கத்தக்கதருமங்களில் செல்லுகை உண்டாவதில்லை. ஆதலால், செய்வதற்கு எளியதாகிய தருமம் எதுவோ? அதனை இங்கு அறிந்து கொள்வதற்கு விருப்பம் உண்டாயிருக்கின்றது. அத்தருமம், நான்குவருணங்களுக்கும், பொது எனவும், சிறப்பு எனவும், இருவகைப்பட்டிருக்கின்றது.

## பொதுத்தருமம்.

அவற்றுள் பொதுத்தருமம், பிரகற்பதியால் விளக்கப்பட்டது. வருமாறு, "దయాక్షమానసూయాచశౌచానాయాసమంగళం। అకార్పణ్యాస్పృహత్వేచసర్వసాధారణాఇమె."=தயவுடைமை, பொறுமை, அழுக்காறின்மை, சுத்த முடைமை, சோர்வின்மை, மங்கலமுடைமை இவறலின்மை=உலோபமில்லாமை, அவாவின்மை, அவா=ஆசை இவையாவர்க்கும் பொதுவாகியதருமம். எ-று. காண்க.

அங்ஙனம், விஷ்ணுவும் கூறியிருக்கின்றனர். வருமாறு "క్షమాసత్యందమశ్శౌచందానమిన్ద్రియసంయమః। అహింసా గురుశుశ్రూషా తీర్థానుసరణందయా। ఆత్మవత్వమలోభత్వం దేవతానాంచపూజనం। అనభ్యసూయాచతథాధర్మస్సామాన్యఉచ్యతే." = பொறுமை, உண்மை, மனமடக்கம், சுத்தம், கொடை=தானம், பொறியைத்தன்வழிப்படுத்தல், கொல்லாமை, குருபணிவிடையில் இச்சை, தீர்த்தயாத்திரை, அருளுடைமை=சீவகாருணியம், தன்னிலை யுணர்ச்சியுடைமை, உலோபகுணமில்லாமை, கடவுளரைப்பூசித்தல், பொறாமை யில்லாமை, இவை பொது அறங்கள் என்று கூறப்படுகின்றன. எ-று. *

* தானம்=சற்பாத்திரத்தில் கொடுக்கப்படுவது. பொறியைத் தன்வழிப்படுத்தல்=பொருளல்லாத விடயங்களில் மனத்தைவிடாமை. கொல்லாமை=விதியில்லாக்கொலை என்பாருமுளர். தன்னிலை யுணர்ச்சியுடைமை=நல்லெண்ணம் அமைந்திருத்தல் எனவும் படும். அல்லது - ஆத்திகத்தன்மை யுண்டாயிருத்தல். அதாவது, மறுமை வீடு கடவுளுண்டெனக் கொளவது. ஆன்மா என்பது சீவன், ஊக்கம், நிலைபடுதல், உடம்பு, இயற்கைக்குணம், ஞானம்-எம், பரமான்மா=கடவுள் எனவும் கூறுப. உலோபம் = தருமத்திற்கு மாறாகி ஆசையால் இறுகப்பற்றுதல். கடவுளரைப் பூசித்தல்=உலகபாலராகியதேவர்களனைவரையும் அருச்சித்தல்.

## இனிச்சிறப்புத்தருமம் வருமாறு.

பிரகற்பதி ஸ்மிருதியில் கூறப்பட்டது ; బృహస్పతిః॥ స్వాధ్యాయోధ్యా పనంచాపియజనంయాజనంతథా। దానంప్రతిగ్ర హశ్చేతి షట్కర్మాణ్యగ్రజన్మనః." "ఇజ్యాధ్యయనదానేచ ప్రజానాంపరిపాలనం। శస్త్రాస్త్రధారణంసేవాకర్మాణి క్షత్రియస్యతు." "స్వాధ్యాయోయజనందానంపశూనాం పాలనంతథా। కుసీదకృషివాణిజ్యంవైశ్యకర్మాణిసప్తవై." "శౌచంబ్రాహ్మణశుశ్రూషాసత్యమక్రోధఏవచ। శూద్రకర్మతథామంత్రోనమస్కారోప్యచోదితః."=வேதமோதல், ஓதுவித்தல், வேள்வி வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்=தாநம் வாங்குதல், இந்த ஆறு கருமங்களும் முதற்பிறந்த வேதியனுக்குச் சிறப்புத் தருமமாம். வேள்விசெய்தல், வேதமோதுதல், ஈதல், உலகோம்புதல், படைக்கலம் பயிலுதல், சேவைசெய்தல், என்னும் கருமங்கள் அரசனுக்குச் சிறப்புத்தருமமாம். வேதமோதல், வேள்விபுரிதல், ஈதல், பசுக்காத்தல், வட்டியீட்டல், உழவுத் தொழில் செய்தல், பண்டமாற்றுதலாகிய வியாபாரம், இவ்வேழு கருமமும் வைசியனுக்குச் சிறப்புத் தருமமாம். சுத்தமுடைமை, அந்தணர் பணி விரும்புதல், சத்தியம், சினமின்மை, வேதவிதியில்லாத மந்திரம், அவ்வகை நமஸ்காரம், இந்த கருமங்கள் சூத்திரனுக்குச் சிறப்புத் தருமமாம். *

இனி, பகவற்கீதையுள்ளும் இங்ஙனம் கூறப்பட்டது. வருமாறு, "బ్రాహ్మణక్షత్రియవిశాంశూద్రాణాంచపరంతప। కర్మాణిప్రవిభక్తాని స్వభావప్రభవైర్గుణైః॥ "శమోదమస్తపశ్శౌచంక్షాంతిరార్జవమేవచ। జ్ఞానంవిజ్ఞానమాస్తిక్యం

---

* சத்திரம்=ஆயுதம். அத்திரம்=பாணம்=அம்பு. இவ்விரண்டும் படைக்கலம் என்னப்பட்டு, தநுர்வேத மந்திரங்களால் ஆற்றல் பெறும். அரசனுக்குச் சேவையாவது, தேவபிராமண அதிதிகுரு பசுப்பணியாம். வைசியனுக்கு அத்தியயநம் சிலபாகம் என்பது. இதுபிறர்மதம். சூத்திரனுக்கு மந்திரத்தைச் சிந்திக்கும் அதிகாரமும் நமஸ்காரம்செய்யும் அதிகாரமும் சொல்லப்படவில்லை எனறு சிலர் கூறுகின்றனர். அங்ஙனம் அன்று. வேதத்திலுள்ள மந்திரமும், வேதத்துட் கூறிய நமஸ்காரமும், சூத்திரனுக்கு இல்லை என்பது அன்றி அப்பொருளை யுடைய புராணமுதலியவற்றுள்ளமந்திரங்களும் அவைதிக நமஸ்காரமும் அவனுக்கு ஆம். அன்றியும் வைதிகமந்திரநமஸ்காரங்களை தேவதைகளின் பொருட்டுஉபயோகிக்கவேண்டிய விருப்பமுடைய சூத்திரனவன், ஆசிரியன், புரோகிதன், இருத்துவிக்கு, என்னும் அந்தணர் முன்னிலையால் செய்விக்கக்கூடுமென்று சூத்திர கமலாகரமுதலிய நூல்களால் கூறப்பட்டது. இத்துணையும் பிறர்மதம் கூறியது.

బ్రాహ్మంకర్మస్వభావజం॥ "శౌర్యంతేజోధృతిర్దాక్ష్యం యుద్ధేచాప్యపలాయనం। దాన మీశ్వరభావశ్చ క్షాత్రంకర్మస్వభావజం। "కృషిగోపశువాణిజ్యం వైశ్యకర్మస్వభావజం।" "పరిచర్యాత్మకంకర్మ శూద్రస్యాపిస్వభావజం॥" = பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர் கருமங்கள் அவரவரியற்கைக்குணத்தால் பிரிக்கப்பட்டது. சமம்=அந்தக்கரணம் அடக்கல், தமம்=புறக்கரணங்களை யடக்கல், தவம், சுத்தம், க்ஷாந்தி=பொறுமை, ஆர்ஜவம்=நடுவு நிலைமை, ஞாநம், விஞ்ஞாநம்=விசேடஞாநம், ஆஸ்திக்கியம்= கடவுள், தருமம், மறுமை உண்டென்னு நம்பிக்கை, இவை அந்தணனுக்குரிய இயற்கைத் தருமமாம். சௌரியம் சூரத்தன்மை தேஜசு = புகழ், திருதி = தைரியம், அல்லது தாங்கல், தாக்ஷியம் = சாமர்த்தியம், போரிற்புறங் கொடாமை, தாநம், ஈசுர பாவம்=ஆணையாற்றல், இவை அரசனுக்குஉரிய இயற்கைத்தருமமாம். உழவு, ஆன் நிரைகாத்தல், ஏனைப் பசுவின மேய்த்தல், இம்மூவகையாலும் வாணிபம் செய்தல், இவை வைசியனுக்குரிய இயற்கைத் தருமமாம். பரிசரியை=பணிசெய்து நிற்றல் சூத்திரனுக்குரிய இயற்கைத்தருமமாம். எ-று. *

இவ்வாறு தருமம், பொதுவும் சிறப்புமென இருவகைப் பட்டிருத்தலால், அவற்றுள், இக்கலியுகத்துள் வழங்கும் பொ

* தவம் என்பதனுள் "తప" என்பது பகுதி அதற்கு ஆராய்ச்சி என்பது பொருள். அது தியாநமெனவும் கூறப்படும். ஆகவே யோகம் என்பது பொருள். தவம்-எது, மெய்கூறுதல் எனவும் சொல்தவறுமை எனவும், சாந்தமுடைமை எனவும், வேள்வியெனவும், பிரம உபாசனை எனவும் உண்டியொழித்தல் எனவும், சுருதி கூறுகின்றது.

தேஜசு என்பது சூட்டினை யுடைய ஒளி அது எவ்வாறு அடுக்க முடியாதோ? அவ்வாறு பகைவர்க்கு அரியனுயிருத்தல் அரசனுக்கு உரியதாதலால் இலக்கணையால் பராக்கிரமம்=ஆற்றல் என்றும் கூறுகின்றனர்.

பரிசரியை=பணிசெய்தல் எனப்பொதுவகையால் கூறப்பட்டது, அப்பணிசெய்யப்படுவார் இவரொன்பது ஈண்டு, குறித்ததில்லை. ஆதலால், இடம்பற்றி உயர்ந்த மூவருணர்க்கும் அவரவர் தரத்தின்படி சூத்திரன் பணிசெய்தல் என்பது. முற்கூறிய பிரகற்பதி ஸ்மிருதியில் சூத்திரன் அந்தணன்பணி செய்யவேண்டும் என்றமாத்திரையே கூறி ஒழிந்தது. ஆதலால் இக்கீதை மொழிக்கும் அதே உரைகூறுவாருமுளர்.

"అపి" எது, உம்மை. இவ்வும்மையால், அரசன் அந்தணனுக்கும், வைசியன்மே லிருவர்க்கும், பணிசெய்யவேண்டுமென்பதும்பெறப்படும்.

துத் தருமத்தை வினவினர். "కించిత్" என்றதனுல் சுருக்குதலே உணர்த்து கின்றது: ஆதலால், சிறிது எனவே பொதுத்தருமத்தைச் சுருக்கிக் கூறவேண்டுமென்று வினவியவாருகப்பொருள் படுகின்றது. இங்ஙனம் பொருள் கூறுவது ஒத்ததே. ஏனெனில்? மேல் சிறப்புத் தருமங்களை விரித்துக் கூறவேண்டுமென்றுவினவு வாராதலின். (கஎ)

శ్లో॥ చతుర్ణామపివర్ణానాం కర్తవ్యంధర్మకోవిదైః।
బ్రూహిధర్మస్వరూపజ్ఞ సూక్ష్మంస్థూలంచవిస్తరాత్ ॥౮॥

என்பது சிறப்புத்தருமங்களை வினவுதல் கூறுகின்றது.

(இ-ள்.) தருமவடிவ முணர்ந்தஐயரே? நான்கு வருணங்களிலும் தருமங்களை நன்ருக அறிந்தவர்களால் செய்யவேண்டுவனவும் சிறியதும் பெரியதுமாகிய தருமங்களை விரித்துக்கூற வேண்டும். எ-று.

## தருமவடிவம் பற்றிய விசாரம்.

தருமசொரூபத்தில், சமயவாதிகளுக்கு சந்தேக முண்டாவதால், அவர்களுக்கு அறிவுறுத்துவது அருமையாம் ஆகலின், அவ்விடத்து, அறிவுடைமைகூறத் தொடங்கி, "ధర్మస్వరూపజ్ఞ" என்றவிசேடணத்தால் விளிக்கப் பட்டது. (விளித்தல் = அழைத்தல்).

## தருக்கர்,

தருமம், அதருமம், என்னும் இரண்டினையும் ஆன்மாவின் குணமென்று கூறுவர். என்னை? "విహితక్రియయాసాధ్యఃపుంసోధర్మోగుణో మతః॥ ప్రతిషిద్ధక్రియాసాధ్యః పుంగుణోధర్మఉచ్యతే." = விதிக்கப்பட்ட கருமத்தால் அடையத்தக்க புருடனுடைய குணமே தருமம் என்று உணரப்பட்டது. விலக்கிய கருமத்தால் அடையத்தக்க புருட குணமே அதருமம் என்று கூறப்படுகின்றது. என்பர்.

## மீமாஞ்சகர்,

"చోదనాలక్షణోర్థోధర్మః" = வேதவாணையையே யிலக்கணமாக வுடையது தருமம் என்று சூத்தரித்தனர்.

## அவருள்பாட்டர்,

"ద్రవ్యక్రియాగుణాదీనాం ధర్మత్వంస్థాపయిష్యతి। తేషామైంద్రియకత్వేపినతాద్రూప్యేణధర్మతా। శ్రేయస్సాధనతాహ్యేషాం నిత్యంవేదాత్ప్రతీయతే। తాద్రూప్యేణచధర్మత్వం తస్మాన్నేంద్రియగోచరః" = திரவியங்கள், தொழில்கள், குணங்கள், முதலியவை தருமம் என்று நிலைபெறுத்தத் தொடங்குகின்றார். ஆயின் அவை, பொறிகளுக்கு விடயமாவது: தருமம் அப்பொறிகளுக்கு விடயமாகாதது: ஆகவே, அத்திரவிய முதலியன எவ்வாறு தருமமாம். எனவே, அவ்வுருவமாகத் தருமம் இல்லை, ஆனால், அவை, அத் தருமத்திற்குக்கருவி என்று நித்தமாக வேதத்தால் உணர்த்தப் படுகின்றது. அதனால் அத் தருமம் அவ்வடிவமென்று கூறப்பட்டது, ஆதலின், உண்மையை விசாரிக்கு மிடத்து தருமம் பொறிகளுக்கு விடயமாகாததாம்.

## பிரபாகரர்,

* காரியம், நியோகம் = ஆணை, அபூர்வம்=முன்னில்லாது வருவது. இம்மொழிகளாற் கூறப்பட்டதும், † தாது = பகுதிப் பொருளால் அடையத்தக்கதும், சுவர்க்க முதலிய பலன்களைப் பெறுதற்கு ஏதுவாகியும், உள்ள ஆன்மகுணமே தருமம்என்று கூறுவர்.

## தருமம்பிரிப்பது அருமை.

இக்கருத்தினை மஹாபாரதத்துள், திருஷ்டத்யும்னனாற்கூறப்பட்டது. வருமாறு, "అధర్మో ధర్మఇతిచ వ్యవసాయోనశక్యతే। కర్తుమస్మద్విధైర్బ్రహ్మన్ తతోనవ్యవసామ్యహం." = இது அறம், இதுபாவம், என்று தேடுவது நம்மாலாவதன்று. ஆதலின், ஓய்! வேதியரே! நான் அந்த முயற்சிக்குச்செல்வோன் அல்லன். எ-று. காண்க.

---

* அபூர்வம், எது, கிரியை செய்வதற்கு முன்னில்லாதிருந்து செய்தபின் உண்டாவது. எனவே, புண்ணியம் பாவம் என்றபடி.

† பகுதிப்பொருளால் அடையத்தக்கது=தாதுவர்த்த சாத்தியம். எ-து, "యజేత" எது, விதிப்பொருட்டாகியவினைச்சொல், அதனுள் "యజ" என்பது தாது. அதன்பொருள் "యజనం" = வேள்வி. அதனால் அடையத்தக்கது. எனவே, வேதத்துள் விதிக்கப்பட்ட விதிப்பொருள் வினைச்சொற் பகுதிக்கு யாது பொருளோ? அதுதருமம் = வேதவிதியாற் செய்யப்பட்ட கருமத்தாலுண்டாவது தருமம். என்றபடி.

இப்படிப்பட்ட அருமுயற்சியால் அடையத்தக்க தருமத்தையும் மநத்திற்குத் துன்பம் இல்லாமல் அறிந்து கொள்ளக் கூடும் என்பதனுள்ளும் ஒருஅறிவுடைமையுள்ளது என்றுணர்க.

## தருமவடிவம்.

விசுவாமித்திரர். அந்த அறத்தின் வடிவத்தைக் கூறினர். என்னை? "యమార్యాః క్రియమాణంతు శంసంత్యాగమవేదినః। సధర్మోయంగర్హంతే తమధర్మంప్రచక్షతే। ఈదృశస్యహిధర్మస్య స్వరూపంవ్యాకులోనతు। జానాత్యస్తితత్రాపి ప్రావీణ్యంధర్మశాలినాం." ஆகமங்களையுணர்ந்த ஆரியர்கள், செய்து கொண்டிருக்கப்பட்டதாகிய எதனைப் புகழ்கின்றார்களோ? அதனைத் தருமமாகவும், எதனைஇகழ்கின்றார்களோ? அதனை அதருமமாகவும் கூறுகின்றனர். இப்படிப்பட்ட தருமத்தின் வடிவத்தை மநந்தெளிந்து கவலையற்று இராதவன் அறியமாட்டான். அங்ஙனம் அரிதில் அடையத்தக்க விடயங்களிலும் புண்ணியர்களானவர்க்கு உணர்ச்சித் திறம் உண்டு. எ—று. காண்க.

## மநுக்கூற்று.

மநுவானவர், "విద్వద్భిస్సేవితస్సద్భిర్నిత్యమద్వేషరాగిభిః। హృదయేనాభ్యనుజ్ఞాతో యోధర్మస్తంనిబోధత." = வித்துவான்களும் காமம் வெகுளி யில்லாதவர்களும் ஆகிய சற்புருடர்களால் தினந்தோறும் சேவிக்கப் படுவதாகியும், மநம் ஒத்துக்கட்டளை யிடப்பட்டதாகியும், உள்ள தருமம் எதுவோ? அதனைத் தெரிந்து கொள்வீர்களாக. எ—று. காண்க.

## மேல் வினா.

அங்ஙனமாயின், இங்ஙனம் கூறியதனால் தருமம் இதுவெனத்துணிவு பெறக்கூறியவாறு இல்லையாயிற்று. அவ்வாறே, விசுவாமித்திரர் மநுவாக்கியங்களால், தருமத்தின் சாமாநியமான வடிவந்தோற்றுவ தல்லாமல், பொருள், தொழில், குணமுதலிய வடிவமாகிய விசேடம் தோற்றுவதில்லை. அன்றியும், வாதிகள், இவ்விடயத்தில் ஒருவர்க்கொருவர் ஐயத்தை அடைகின்றார்கள் என்று உம்மாலேயே கூறப்பட்டது. இக்கருத்தைப் பற்றியே மஹாபாரதத்து, அரசநீதியுள்ளும் கூறப்பட்டது. "నకల్మాషో నకపిలో నకృష్ణోనతులోహితః। అణీయాన్ క్షురధారాయాః కోధర్మంవక్తుమర్హతి." =

கலவை வண்ணம் அன்று; புகர் வண்ணம் அன்று; கருவண்ணம் அன்று; செவ்வண்ணம் அன்று. மயிர்வினைஞன் மயிர்களையும் கருவிக் கூர்மையினும் நுண்ணியதாய், உள்ள தருமத்தை வாயாற் கூறத்தக்கவன்யாவன்ஒருவன்இருக்கின்றான். எ-று. என்னெனில்?

## விடை.

இதுகுற்றமன்று. சொல்லப்பட்ட வாக்கியங்களில், அதருமத்திற்கு வேறாகிய ஒருவுருவ விசேடம் வெளிபெறத் தோற்றுதலின். சமயவாதிகளது வாதவுரைகள் சமாதானம் கூறுவதற்குக் கூடுமானதாக விருக்கின்றது. சுவர்க்கமுதலிய வற்றிற்கு ஏதுவாயும், நூல் ஒன்றினாலேயே துணியப்படுவதாயும், உள்ள பெரியதனுடைய தருமதரத்தினால் யாவர்க்கும் சம்மதம் ஆதலின்.

அவ்வதிசயம், இருவகைப்படும். பொருண்முதலியவைகளினிடத்துள்ளது; ஆன்மாவினிடத்துள்ளது; என.

அவற்றுள், ஆன்மாவினிடத்துள்ள அதிசயத்தின் கண் கண்டபயனுக்கு ஏதுவாகுந் தராமுடைமையாலும், பயனுண்டாகிறவரையில், நெடுங்காலமும் அடுத்திருத்தலினாலும், அதனைக் கூறவேண்டி, அறிவின்குணமாயும், அபூர்வவாசகத்துக்கு வாச்சியமாயும் உள்ளது தருமம் என்று, தருக்கரும் பிரபாகரரும் கூறினர்.

கூறப்பட்ட அபூர்வத்தின் தோற்றகாலவரையில் இருப்பதற்கு உடன்பட்டு, அதற்குக் கருவியாகிய பொருள்முதலியவற்றினுடைய அதிசயம் தருமமென்று கூறுவர்பாட்டர். இக்கருத்து பிரமவாதிகளுக்கும் விரோதமின்று. என்னை? "వ్యవహారేభాట్టనయః"= வழக்கிலே பாட்டர் நியாயம். என்று உடன்படுதலின்.

இனிஇங்ஙனமாக, தருமவடிவம் தேற்றப்படுதலின், கவலையில்லாமையால் அதனை உணர்ந்தவனாதலே யாம். நான்கு வருணங்களுள்ளும், தருமமுணர்ந்த அறிஞரும் சிறப்புத் தருமங்களை உணர்ந்தவருமானவர்களால் செய்யத்தக்கனவற்றை விரித்துக்கூறுக. எனில் ?

அங்ஙனம் செய்யத்தக்கனவும் இருவகைப்படும்: தூலம் எனவும், சூக்குமம் எனவும்.

## தூலதருமம்,

மந்த அறிவினை யுடையவர்களாலும் எளிதில் உணரப் படுகின்ற சௌசம், ஆசமநம், சந்தியாவந்தநம் முதலியன, தூல தருமமாம்.

## சூக்குமதருமம்,

சாத்திரமுடிபுணர்ந்த அறிஞர்களாலேயே அறிவதற்கு உரி யதாயும், ஏனையரது அறிவுக்கு அதருமம் என்று கொள்ளத்தக்க தாயும் உள்ள துரௌபதை விவாகம் முதலியன சூக்குமதரும மாம். அங்ஙனம் மஹாபாரதத்துள், துருபதராஜன் ஒருமாதுக்கு பலநாயகர் உண்டாயிருப்பது உலகவழக்கிற்கும் வேதவழக்கிற் கும் மாறுனது என்று உட்கொண்டு கூறினன்.

## உலகவழக்கு.

அவற்றுள், உலகவழக்குக்கு மாறுபாடு என்பது யாவரு முணர்ந்தபடியாம். விலங்குயிர்களிலும் ஒருபெற்றத்தின் விடய மாக (பெற்றம்=பசு) இரண்டு ஏற்றின் (இடபம்) போர்வெளிப் படலால் என்றுணர்க.

## வேதவழக்கு.

வேதத்துள்ளும், இங்ஙனமுள்ளதாகக் காணப்படுகின்றது. என்னை? "ఏకస్యబహ్వ్యో జాయాభవంతినైకస్యాబహవస్సహపతయఇతి యదేకస్మిన్ యూపేద్వేరశనేపరివ్యయతి। తస్మాదేకోద్వేజాయేవిందతే। యన్నైకాంరశనాంద్వయోర్యూపయోః పరివ్యయతి। తస్మాన్నైకాద్వౌపతీవిందతే. = ஒருபுருடனுக்குப் பலமனைவியர் உளவாகின்றனர்கள். ஒருமாதுக்கு பலநாயகர் உண் டாதல் இல்லை. எந்தகாரணத்தினல்ஒருயூபத்தம்பத்தில், இரண்டு தாம்புகள் = கயிறு, சுற்றப்படுவனவோ? அதனல், ஒருவன் இருமனைவியரை அநுபவிக்கின்றன். எந்த காரணத்தினல், ஒரு தாம்பினை இரண்டு யூபத்தம்பத்தில். சுற்றுவதில்லையோ? அத னல், ஒருத்தி இரண்டுபதிகளை = நாயகரை அநுபவிக்க மாட் டாள். எ-று. காண்க.

## தருமராஜன்கூறியது.

அவ்விடயத்தில், துருபதராஜனுடையமயக்கத்தையொழிப் பதற்கு, உதிட்டிரன் கூறுகின்றனர். அதுவருமாறு, பாரதம்,

“ లోకవేదవిరుద్ధోయం ధర్మోధర్మవతాంవర। సూక్ష్మోధర్మోమహారాజ నాస్యఃర్మోగతిం వయం.”=தருமத்தை யுணர்ந்தவருள் சிறந்தது ருபதராஜனே! இத் தருமம் உலகத்திற்கும் வேதத்திற்கும் முரணுயுள்ளது. ஆயின் தருமம் சூக்குமமானதாயிருத்தலால், இதனது ஒழுக்கத்தை யாம் அறியோம். எ-று. துரோபதைக்குப்பலநாயகர் உண்டாதல் தருமம் என்பதற்குத் தக்க நியாயப்பிரமாணங்கள் அவ்விடத்து விரித்துக் கூறப்பட்டது.

## தருமவியாதோபாக்கியானம்.

கல்விகற்பதினும் தாய்தந்தைகளை உபசரிப்பது சிறந்தது. கல்விகல்லாமலே அவர்கள் பணிவிடை ஒன்றினாலேயே ஒருவனுக்குஞானமுண்டாமாதலின் - என்று தருமத்தின் நுட்பமானது தேற்றுவிக்கப்பட்டது. என்னை? బహుధాదృశ్యతేధర్మ సూక్ష్మఏవద్విజోత్తమ.” = அந்தணரிற் சிறந்தோனே! சூக்குமதருமமே மிகுதியாகக் காணப்படுகின்றது. எ-று. அறிக.

இங்ஙனமாக, தூலதருமமும், சூக்குமதருமமும், உண்டாயிருத்தலால், அவ்விரண்டினைப்பற்றி வியாசர் வினவியது தகுதியாகவே யிருக்கின்றது. (கஅ)

శ్లో॥ వ్యాసవాక్యావసానేతు మునిముఖ్యఃపరాశరః।
ధర్మస్యనిర్ణయంప్రాహ సూక్ష్మంస్థూలంచవిస్తరాత్ ॥౧౯॥

என்பது, கூறப்பட்ட வினா, இனி, கூறப்படும் விடை என்னுமிரண்டினுடைய மயக்கம் இல்லாமைக்கு ஒத்த விடையைத்தோற்றுவிக்கின்றது. விடை = மறுமொழி.

(இ-ள்.) வியாசர் வாக்கியத்தின் முடிவிலே, முனிவரிற்சிறந்த பராசரனார், சூக்குமமும் தூலமும் ஆகிய தரும நிச்சயத்தை விரித்துக் கூறினார். எ-று.

“మునిముఖ్యః” என்றவிசேடணத்தால், சூக்குமநிச்சய விளக்கம் குறிக்கப்பட்டது.

ஆயின், இந்த சுலோகம் யார் கூறியது? வியாசர் கூற்றல்ல, வினாவல்லாமையின். பராசரனாரதுமன்று, விடை அல்லாமையின். யாவர் கூற்றுமன்றிச் சிறுபொருளதாகக்கூறப்பட்டுள்ளதன்றோ? முதல் சுலோகத்துள்ளும் இந்த ஆராய்ச்சி ஒத்ததே. இங்ஙன

மானல், இதுபோன்றன எல்லாவற்றுள்ளும் பரிகாரம் தேடத் தக்கதாக விருக்கின்றது. எனின்?

கூறுதும். பராசரரோ எதிர்காலத்து மாணுக்கர் அறிவுக்கு உடன்பாடுஉண்டாம்பொருட்டு, தமது சரித்திரமுதலியவற்றைத் தெரிவிக்கத்தக்க இவ்வகைய சுலோகங்களைக் கூறினர் என்று உணர்கவென்க. பாரதம் முதலியவற்றுள் வியாசர் சரித்திர சுலோகங்களை வியாசரோ கூறியதாக யாவரும் உடன்பட்டு மேற் கொண்டிருத்தலின். (கக)

శ్లో॥ శృణుపుత్ర ప్రవక్ష్యామి శృణ్వంతుమునయస్తథా ॥౧౯౪॥

என்பது, கூறப்படும் தரும இரகசியத்தை உணர்ந்துகொள்ளுதற் பொருட்டு கவலையற்றொருமை மனத்தோடு இருத்தல் வேண்டும் என்பதனை யுணர்த்துகின்றது.

(இ-ள்.) குமாரனே! நன்றாகச் சொல்லுவன்கேள். முனிவர்களே! அவ்வாறே கேட்பீராக. எ-று.

இவ்விடத்து, முனிவர்களை விளித்தலானே மகனையழைத்தலும் அமையும்; ஆயினும் சம்பிரதாயம்=மரபு ஒழுக்கம் உண்டாதல் உடைமையின் அவ்விளி மிகுத்து வந்தது. (ககூ)

శ్లో॥ కల్పేకల్పే క్షయోత్పత్త్యా బ్రహ్మవిష్ణుమహేశ్వరాః॥
శ్రుతిస్మృతిసదాచార నిర్ణేతారశ్చసర్వదా ॥౨౦౪॥

என்பது, தருமத்தில், ஊக்கம் விசேடமாதற் பொருட்டு, தருமத்தி னுடைய பிரவாகரூபத்தால் அநாதித் தன்மையைக் கூறுவதற்கு தருமசாத்திரத்தின் கருத்தர்களுடைய தோற்றவொடுக் கங்களைச் சுருக்கிக் கூறுகின்றது.

(இ-ள்.) கற்பங்கள்தோறும், தோற்ற ஒடுக்கங்களால், பிரமா விஷ்ணு உருத்திரன் என்னும் மூவரும் எப்பொழுதும் சுருதிஸ்மிருதிகளின் ஒத்த ஒழுக்கங்களைவிதிப்பவர்களாகின்றார்கள். எ-று.

"కల్పః" என்பது இன்னகாலத்தில் உலகம் படைக்கப் படுகின்றது: என்னும் விற்பத்தியால், சிருட்டி முதற்கொண்டு, பிரளயத் தொடக்கம் வரையிலும் இவ்வுலகத்தோடு பிளவு படாது கலந்து நிற்கும் காலம். எ-று.

## கற்பபேதம்.

அக்கற்பம், இருவகைப்படும். மஹாகற்பம்–எம், அவாந்தரகற்பம்–எனவும். அவற்றுள், மூலப்பகுதியினின்றும் உண்டாம் சிருட்டிமுதல் பிரமாவின் ஆயுள்வரையும் ஏற்பட்டுள்ளகாலம், மஹா கற்பமாம். சதுமுகப்பிரமனுடைய ஒருநாளைக்குரியகாலம், அவாந்தரகற்பம் எனப்படும். இது கூர்மபுராணத்துட் கூறப்பட்டது. வருமாறு. “బ్రాహ్మమేకమహఃకల్ప స్తావతీరాత్రిరుచ్యతే। చతుర్యుగసహస్రంతత్కల్పమాహుర్మనీషిణః.” = பிரமனது ஒருபகல், ஒருகற்பமாம். இரவுமவ்வளவிற்றே என்று கூறப்படுகின்றது. அந்த * கற்பம் ஆயிரம் சதுர்யுகமாக அறிந்தோர் கூறுவர். எ-று. இதுவே அவாந்தர கற்பம். இனி † மஹாகற்பம், பிரமனளவையால் நூறு வருட அளவை யுடையது: என்று புராணமுதலியவற்றுள் கூறப்பட்டது.

---

* சூரியன் மேடராசிக்கு வந்ததுமுதல் மறுபடியும் மீநராசியை விடுகிறவரையில், (௩௬௫) நாளும், (௧௫) நாழிகையும், (௩௧) விநாடியும், (௩௧) பரையும், (௨௪) தற்பரையும் உடையகாலம் ஒருசௌரவருடம் என்றுசொல்லப்படும், இவ்வருடம். பதினேழு லக்ஷத்து இருபத்து எண்ணாயிரம் கொண்டது ஒரு கிருதயுகம். பன்னிரண்டுலக்ஷத்துத் தொண்ணூற்றாறாயிரம் கொண்டது திரேதாயுகம். எட்டுலக்ஷத்து அறுபத்துநாலாயிரம்கொண்டது துவாபரயுகம். நாலுலக்ஷத்து முப்பத்திரண்டாயிரம் கொண்டது கலியுகம். ஆக நாலுயுகமும் கூடியவருடம் நாற்பத்து மூன்றுலக்ஷத்து இருபதனாயிரமாம். இது ஒருமஹாயுகமென்று சொல்லப்படும். இது ஆயிரங்கொண்டது பிரமாவுக்கு ஒருபகல். அந்த ௪௩௨,000,000 வருடம். அவாந்தரகற்பம். எனவே ஒருகால்படைக்கப்பட்ட உலகம் அத்துணைநாள் காணப்பட்டு நிற்கும். பின்சிருட்டி கருத்தாவுக்கு அத்தனைகாலம் இரவாதலால், உலகந்தோற்றுவ தின்மையின், அதனை அவாந்தரப்பிரளய மென்று சொல்லுவர். இந்த அவாந்தரகற்பமும் பிரளயமுங்கூடி, அப்பிரமாவுக்கு இரவும்பகலுமான ஒருநாளாம்.

† பிரமனளவையால் அவன் ஒருதினத்திற்கு ௮௬௪,000,000 மனிதர் வருடம் ஆகின்றது. அந்தநாள், ௩௬௫ பிரமாவுக்கு ஒரு ஸாவன வருடமாம் அவ்வருடம் நூறுகொண்டது பிரமாஆயுள். அது மனிதர் அளவையால். மூன்றுபதும்ம் ஒரு மஹாகருவம் ஒருகருவம் நாலுஅற்புதவருடமாகின்றன. இதற்கு மஹாகற்பமென்றுபேர். இதனையே பிரமகற்பம் என்பர். பின் அத்தனைகாலம் மஹாப்பிரளயம் என்று சொல்லப்படும். இவ்விவரம் சூரிய சித்தாந்தமுதலியவற்றாலும் புராணங்களாலும் கூறப்பட்டது.

## மஹாகாலகற்பங்கள் அளவின்மை.

"కల్పేకల్పే" என்று இரட்டித்தது அளவில்லை என்னும் கலப்பினைக் குறித்தற்கு. இதனால் இருவகைப்பட்ட கற்பத்திற்கும் இத்துணையென்னும் எண்ணின் வரையறையில்லாமை கூறவேண்டிய வாறாயிற்று, இங்ஙனம் இலிங்கபுராணத்துள்ளும் கூறப்பட்டது. அதுவருமாறு "ఏవంకల్పాస్త్వసంఖ్యాతా బ్రహ్మణోవ్యక్తజన్మనః। కోటికోటిసహస్రాణి కల్పానాం మునిసత్తమాః"—ஓய்! முனிசிரேட்டரே! இவ்வாறாக * அவ்வியத்த தத்துவத்தினின்றும் பிறந்த சதுர்முகப்பிரமனுடைய கற்பங்கள் எண்ணிறந்து உள்ளன. கோடிகளாற் பெருக்கி அத்தொகையினை ஆயிரத்தொகையாற் பெருக்கினும் கற்பங்கள் அளவுபடாவாம். எ-று.

## பிரளயபேதம்.

இனி, அக்கற்பங்களுள், இவ்விரண்டுகற்பத்தின் நடுவே ஒவ்வொரு ஒடுக்கம் உண்டாகின்றது. அவ்வொடுக்கம் நால்வகை. நித்தம், நைமித்திகம், பிராகிருத்திகம், ஆத்தியந்திகம், என. இது கூர்மபுராணத்துட் கூறப்பட்டது. வருமாறு. "నిత్యోనైమిత్తికశ్చైవ ప్రాకృతాత్యంతికాతథా। చతుర్ధాయంపురాణేషు ప్రోచ్యతేప్రతిసంచరః॥ యోయంసందృశ్యతేనిత్యంలోకేభూతక్షయస్త్విహ। * నిత్యస్సంకీర్త్యతేనామ్నా మునిభిః ప్రతిసంచరః॥ బ్రాహ్మో † నైమిత్తికోనామ కల్పాంతే యోభవిష్యతి। ‡ మహదాదివిశేషాంతంయదాసంయాతిసంక్షయం॥ ప్రాకృతః ప్రతిసర్గోయం ప్రోచ్యతేకాలచింతకైః। జ్ఞానా ‖ దాత్యంతికః ప్రోక్తో యోగినః పరమాత్మని." நித்தியம், நைமித்திகம், பிராகிருத்திகம்,

* அவ்வியத்த தத்துவமென்பது நாராயணன் என்று பகவற்கீதை சங்கரபாஷியத்துட் கூறப்பட்டது.

* மரணமே நித்தியப் பிரளயம். பிறந்தவன் இறப்பது நியதியாதலின்.

† பிரமனுடைய பகல், அவன் ஆயுள் முடிந்தது, என்னும் நிமித்தத்தினால் உண்டாவது நைமித்திகம்.

‡ மகத்தத்துவம் - எது. சதுமுகப்பிரமன் என்று, உபநிடதங்களால் அறியப்படுகின்றது. பரமாணுக்கள்முதலிய நித்தப்பொருள்களில் இருந்து, ஒன்றற்கொன்று வேறுபாடுகளையுணர்த்துவதற்கு ஏதுவாக இருக்கும் விசேடங்கள் பலவாம்: என்று தருக்கர் கூறுவர்.

‖ பிரமத்தினிடத்தில் சீவனுக்கு ஐக்கியமுண்டானபின் கடலிற் கலந்த யாற்று வெள்ளநீர், அக்கடலில் வேறுபாடின்றி நிற்பதுபோல பிரமத்திற்கும் சீவனுக்கும் அபேதம்பட நிற்பது. எனவே பேதமுழுவதும் ஒழிந்தமை என்றபடி. இது அத்துவிதிகள் கூற்று.

ஆத்தியந்திகம், என்ற இப்பிரளயங்கள் புராணங்களில் நான்கு வகையாகக் கூறப்பட்டன. அவற்றுள், இவ்வுலகத்தில், நித்தியமாகக் காணப்பட்டுவருகிற சீவகோடிகளது க்ஷயமே நித்தியப் பிரளய மென்று பெரியோரால் கூறப்பட்டது. பிரமனுடையகற்பமுடிவில், உண்டாகின்ற ஒடுக்கம் எதுவோ? அது நைமித்திகப்பிரளயமாம். மகத்தத்துவமுதல் விசேட பரியந்தம் எப்போது ஒடுக்கத்தை அடைகின்றதோ? அதுபிராகிருதப் பிரளயமென்றுகாலமுணர்ந்த பெரியரால் கூறப்படுகின்றது. தத்துவ ஞானத்தால், யோகிக்குப்பிரமத்தினிடத்தில் உண்டாகும் ஒடுக்கம் ஆத்தியந்திகம் என்னப்படும். எ-று. காண்க.

## பிராகிருதப்பிரளயவிசாரம்.

அவற்றுள் பிராகிருதப் பிரளயத்தை காந்தபுராணம், சூதசங்கிதையில், இங்ஙனமாகக் கூறியது, என்னை? "త్రిశతైష్షష్టిభిః కల్పైర్బ్రహ్మణోవర్షమీరితం। వర్షాణాంయచ్ఛతంతస్యతత్పరాఖ్యమిహోచ్యతే। బ్రహ్మణోంతెమునిశ్రేష్ఠామాయాయాంలీయతేజగత్। తథావిష్ణుశ్చరుద్రశ్చప్రకృతౌవిలయంగతౌ। బ్రహ్మణశ్చతథావిష్ణోస్తథారుద్రస్యసువ్రత। మూర్తయోవివిధాస్స్వేషుకారణేషులయంయయుః। మాయాచప్రళయేకాలేపరస్మిన్పరమేశ్వరే। సత్యబోధసుఖానంతె బ్రహ్మరుద్రాదిసంజ్ఞితే."=முந்நூற்று அறுபது கற்பங்களால் பிரமாவுக்கு ஒரு வருடம் கூறப்பட்டது அவனது நூறுவருடம் பரகாலம் என்னப்படும். ஓ! முநிவரிற் சிறந்தவர்களே! பிரமாவினுடைய முடிவிலே, உலகம் மாயையில் ஒடுங்கும். அவ்வாறே, விஷ்ணுவும் உருத்திரரும் மூலப்பகுதியில் ஒடுங்குவர். அவ்வாறே, பிரம விஷ்ணு உருத்திரர்களுடைய பலவகைப்பட்டவடிவமூர்த்திகளும் தத்தம் காரணத்துள் ஒடுக்கத்தையடைவர். அந்த மாயையும், பிரளய காலத்தில் பரமனும், பிரம உருத்திரர் என்னும் பெயரையுடையவரும், சத்தியவடிவரும், ஞானமே திருமேனியாகவுடையவரும் இன்பவுருவரும், அநந்தருமாகிய பரமேச்சுரனிடத்தில் ஒடுங்கும். எ-று. அநந்தர்=நாசமில்லாதவர்.

இங்கு பிரம உருத்திரவடிவமொன்று கூறியது சங்காரகாரணனே சிருட்டிகாரணன் என்றகருத்து. இதனைச் சிவஞான போதம் - "அவனவளது" என்னு முதற் சூத்திரத்துட்காண்க.

இன்னும் கூர்மபுராணத் துள்ளும், பிரமவிஷ்ணு முதலியோர் இலயத்தை அடைந்தபின்பு, பஞ்சபூதலயங்கூறப்பட்டது.

வருமாறு, "సంస్థితేష్వథ దేవేషు బ్రహ్మవిష్ణుపినాకిషు। గుణైరశేషైః పృథివీ విలయం యాతివారిషు। తద్వాగిత్వాసగుణాం గ్రసతేహవ్యవాహనః। తేజస్తుగుణసంయుక్తం వాయౌసంయాతిసంక్షయం। ఆకాశేసగుణోవాయుః ప్రళయంయాతివిశ్వభృత్। భూతాదౌచతథాకాశోలీయతేగుణసంయుతః। ఇన్ద్రియాణిచసర్వాణి తైజసేయాంతిసంక్షయం। వైకారికస్తైజసశ్చభూతాదిశ్చేతిసత్తమాః। త్రివిధో౽యమహంకారోమహతి ప్రళయంవ్రజేత్। మహాంతమేభిస్సహితం ప్రకృతిర్గ్రసతేద్విజాః."=பிரம விஷ்ணு உருத்திரர்கள் தேவர்கள் இலயத்தை அடைந்தபின்பு, பிரிதிவிபூதம் தனது எல்லாக்குணத்தோடும்நீரில்ஒடுங்கும், அச்சலபூதத்தைஅதன்குணத்தோடு அக்கினி உண்டுவிடும். அந்தத்தீ தன்னுடைய குணத்தோடு வாயுவில் முடிவை அடையும். உலகத்தைத் தாங்கும் அவ்வாயுதன் குணத்தோடு ஆகாயத்தில் அடங்கியொழியும். அந்த ஆகாயம் தன்குணத்தோடு பூதாதியில் எனவே அகங்காரதத்துவத்தில் ஒடுங்கும். எல்லா இந்திரியங்களும், தைஜசத்தில் அடங்கும். வைகாரிகம். எனவும், தைஜசம் எனவும், பூதாதி எனவும் மூவகைப் பட்ட அகங்காரங்களும் மகத்தத்துவத்தில் ஒடுங்கும். இவற்றோடு கூடியிருக்கும் மகத்தத்துவத்தை மூலப்பகுதி விழுங்கும். சாதுக்களாகிய அந்தணர்களே! கேட்பீராக. எ-று. இவ்வாறே விஷ்ணுபுராணம் முதலியவற்றுள்ளும் பிராகிருதப் பிரளயமும் கூறப்பட்டன. அதனை யங்கு காண்க.

இங்ஙனமாகப்பிரளயத்தைஉடன்பட்டு,பகவர்-வாதராயணாசாரியர் பிரமசூத்திரத்துள்ளுங்கூறினர். வருமாறு, "విపర్యయేణక్రమో౽తఉపపద్యతేచ." = "అతః" = இச்சிருட்டி முறையினும் "విపర్యయేణ"=மாறாக "క్రమః."=பிரளயக்கிரமம் உடன்படத் தக்கது. அவ்விடத்துள்ள முன்னைய சூத்திரங்களில், சிருட்டி முறையை விசாரஞ் செய்து இருப்பதால், "అతః" என்றமொழி அதனை நோக்கு கின்றது. "ఉపపద్యతేచ."=இம்முறைமை நியாய நிறைவையுடையது அன்றோ, எ-று. உபாதாந காரணம்=முதற்காரணமாகிய மண்ணிருக்கச்சிதேயும் காரியமாகிய குடம்கெடுதலையடைதலின். சிருட்டி முறையே ஒடுக்கத்திற்கும் ஆதரிக்கப்படுமேயானல், குடமிருக்கும் போதே மண் அழியவேண்டிவரும். அவ்வாறு ஓரிடத்தும் காணப்படுவதில்லை. ஆதலின், ஒடுக்கத்திற்கு விபரீத முறையென்று கூறியது நியாய நிறைவை யுடையதாகவிருக்கின்றது.

அற்றேல், சிருட்டியில், பிரமம்முதல் இந்தவுடம்புவரையி லும் முறைகூறுவார் ஆதலின், ஒடுக்கத்தில் அதற்குமாறுக நமது உடம்புமுதல் பிரமம்வரையிலும் ஒடுக்கமுறைகூறுவது,ஒத்தபடி யாம். பிராகிருதப் பிரளயத்திலாணுலோ? பிரகிருதி வரையிலும் கூறவேண்டும் எனில்?

## இனி, உபநிடதத்துட்கூறிய உலகஒடுக்கம்.

இதற்குவிடை நன்றுகக் கூறப்படும். பிரமத்தினதே பகுதித் தன்மையாமாதலின். அவ்வாறு, இருக்கு வேத உபநிடதத்தி லும் பிரமமே உலகத்திற்குப் பிரகிருதி என்று கூறப்படுகின்றது. வருமாறு, ஐதரேய உபநிடதம். "ఆత్మా వా ఇదమేక ఏవాగ్ర ఆసీన్నాన్యత్కించన మిషత్ - స ఈక్షత లోకాన్ను సృజా ఇతి స ఇమాన్ లోకానసృజత ఇతి."=முதற்கண் இங் கே ஆன்மா ஒருவனுகவே இருந்தான் வேறொன்று ஒருசிறி தும் தோற்றியதில்லை. அவ்வான்மா உலகங்களைச் சிருட்டிக்க வேண்டுமென்று நோக்கினன். அவன் இவ்வுலகங்களைப் படைத் தான். எ-று.

ஆயின், சுவேதாசுவதரோபநிடதத்தில் மாயைக்கே பிரகிரு தித்தன்மையும் அதற்குப்பிரமத்தின் ஆணையுடைமையும்,கூறப்படு கின்றது. வருமாறு. "మాయాం తు ప్రకృతిం విద్యాన్మాయినం తు మహేశ్వరం."= பிரகிருதியை மாயையாகவும், மஹேச்சுரனை மாயனுகவும் அறி யத்தக்கது. எ-று. மாயன்=மாயையை உடையவன். * என்ற தென்னெனில்?

இது தோஷமன்று. மாயை பிரமத்தின் சத்தியாதலால். சத் தியை யுடையவனுயினும் அவ்வான்மாவினது பிரகிருதித்தன்மை இன்றியமையாது=அவசியம் ஆதலாலும், தகிக்க வல்ல தீயி னிடத்து, தாஹகன் என்னும் விவகாரமுண்டாதல் காண்கையா லும் என்க. மாயை ஆன்மாவிற்குச் சத்தியாயிருப்பது அதே உப நிடதத்திற்கூறப்பட்டது. வரும்மாறு "తే ధ్యానయోగానుగతా అపశ్యన్ దేవాత్మశక్తిం స్వగుణైర్నిగూఢాం."=தியானயோகங்களிற் கூடினவர்கள், தன்

* இவ்வாறு பிரகிருதிவேறு ஆன்மாவேறு என்று கூறியிருத்தலால், ஆன்மாவே பிரகிருதி யென்று எவ்வாறு கூறப்படும் என்பது. மேலைய வினு வின்கருத்து.

குணத்தோடும் அடங்கி யிருக்கின்ற கடவுளுடைய சத்தியைப் பார்த்தார்கள். எ-று. காண்க.

இங்ஙனம் வாதராயணு சாரியரும், பிரமசூத்திரம், முதல் அத்தியாயத்தின் ஈற்றுக் கயலாகிய அதிகரணத்தில், மாயை யோடு கூடியிருக்கும் பிரமத்தின் பகுதித்தன்மை=முதற்காரண மாதல், நிமித்தத்தன்மை=நிமித்தகாரணமாதல், என்னும் இரு வகைக் காரணமும் குறித்திருக்கின்றனர். (எனவே, பிரமமே இருவகைக்காரணம் என்பதுகருத்து.) என்னை எனின்? குயவனைப் போலச்சேதநன் ஆதலால், பிரமம், நிமித்தகாரணமாம். குடத்தி னிடத்தில் மண்ணைப்போல, காரிய சாமாநியத்தில் பிரமம் ஒத்து நிற்றலாற் பகுதியாகின்றது.

உலகத்தினிடத்தில் பிரமம், மாயாவிசிட்டமாய் தெரியவரு கின்ற தல்லவா? அவ்விடத்து, சச்சிதாநந்தத்துவம்=மெய், அறிவு, இன்பமாதல் பிரமத்துக்கு இலக்கணம். விகாரியாதல், மாயைக் கிலக்கணம். இவ்விரண்டனையும் உலகத்தின் கண்ணே பார்க்கின்றனம். எங்ஙனமெனில் ? "ఘటోஸ్తి"=குட முள்ளது, என்புழி, சத்துரூபத்துவம் = உவ்ளவடிவைச் காண்கின்றோம். "ఘటోభాతి" குடம்தோன்றுகின்றது; அல்லது,பிரகாசிக்கின்றது. எனவே, தெரியவருகின்றது. என்புழி, சித்துருபத்துவம்=அறி வுருவாதலைப் பார்க்கின்றோம். "ఘటః ప్రియః"=குடம் விருப்பமா னது. என்புழி, ஆநந்தரூபத்துவத்தைப் பார்க்கின்றனம். "ఘటఙ్ జ్జాయతేనశ్యతిచ" = குடம் பிறக்கின்றது; நாசத்தையும் அடைகின் றது, என்புழி, விகாரத்தன்மையைக்காண்கின்றோம். இக்கருத்து, உத்தரதாபிநியோப நிடதத்தில், கூறப்படுகின்றது. வருமாறு, "సచ్చిదానందరూపమిదంసర్వంతత్సదితిచితిప్రకాశతేచేత్యాది."="ఇదం." = இது. எனவே காணப்படுகின்ற காட்சி உலகம். "ఇత్థం."=இவ்வாறு. எனவே, தோற்ற ஒடுக்கமுதலிய விகாரமுள்ளது. "సర్వం."=எல் லாம். சச்சிதாநந்த ரூபமானது. எவ்வாறெனில் ? உள்ள துள் ளது; என்றும், அல்லது. இருக்கின்றதிருக்கின்றது என்றும். சித் தினிடத்தில் பிரகாசிக்கின்றது. எ-று. காண்க.

ஆதலால், உபநிடதசம்மதமாகிய மதத்திற் பிரமமே மூலப் பகுதியாதலாலும், ஸ்மிருதிகளும், புராணங்களும், சுருதிகளைத்

தொடர்ந்துநிற்றலாலும், இங்ஙனம் கூறப்பட்டது. இவ்விடத்தில், பிரமமுதல் எல்லாப் பிரபஞ்சத்தினுடைய ஒடுக்கமும் சொல்ல வேண்டி வந்ததென்று உணரத்தக்கது.

வைசேடிகர் முதலிய மதங்களில், கூறப்பட்டுள்ள ஒடுக்கம் ஈண்டு எம்மால் விரித்துக்கூறப்படுவதில்லை. ஏனெனில்? அவை, மானிடர் புத்திவடிவமாகிய தருக்கமே மூலமாக வுண்டாயிருத்தலால் விவேகிகள், அவற்றைத் தாங்களே உணர்ந்து கொள்ளக் கூடுமானதாகவிருக்கின்றது.

## வேதத்துட் கூறிய சிருட்டிமுறை.

இனி, வேதத்துட்கூறியபடி, சிருட்டிசொல்லப்படுகின்றது. சிருட்டியை விரித்துக் கூறுகின்ற சுருதிகள், மிகுதியாகவுள்ளன அன்றே?அவையாவையெனின்? "ఆత్మావాఇదమేకఏవాగ్రఆసీదిత్యాది"= இவ்வுலகமுதல் ஆன்மா வொருவனேயாகி இருந்தான். என்பது முதலிய அருத்தத்தை யுடைய இருக்குவேதம் ஐதரோயோபநிடத வாக்கியம் முன்னமே உதகரிக்கப்பட்டது.

"సత్యంజ్ఞానమనంతంబ్రహ్మ." = சத்திய வடிவம், ஞானவடிவம் உடையது; முடிவற்றது; பிரமம். என்றவாறுந் தொடங்கி, "తస్మాద్వాఏతస్మాదాత్మ నఆకాశస్సంభూతః." = இவனைச் சொல்லப்பட்ட அந்த ஆன்மாவினாலேயே அந்த ஆகாயம் பிறந்தது. என்பது முதலிய கிருஷ்ண யஜுர்வேதம் தைத்திரீயோபநிஷத்து வாக்கியம்.

"సదేవసోమ్యేదమగ్రఆసీత్."=ஓய்! சுவேதகேதுவே! இவ்வுலகு முதலில், சத்துரூபமாயிருந்தது. என்று தொடங்கி, "తదైక్షతబహుస్యాంప్రజాయేయేతి తత్తేజో஽సృజత."=சத்தினுருவமாகிய அந்தப்பிரமம்,அநேகம் பிரஜைகளைச்சிருட்டிப்பவனாகின்றேன்.அல்லது,பலவாகப் பிறக்கின்றவனாகின்றேன். என்றுநோக்கினான். எனவே சங்கற்பித்தான் = நினைத்தான். அல்லது, விரும்பினான். பின்பு, அப்பிரமம், தேஜஸ=ஒளியையுடைய தீயைப்படைத்தது. எ-று.(இதுசாமவேதம், சாங்தோக்கியோப நிஷத்துவாக்கியம்).

"యథాసుదీప్తాత్పావకాద్విస్ఫులిఙ్గాఃసహస్రశఃప్రభవంతేసరూపాః। తథాక్షరాద్వివిధాస్సోమ్యభావాః ప్రజాయంతేతత్రచైవాపియంతి," = ஒளிசெய்திருக்

கும் தீயினின்றும் அதுபோலும் உருவமுடைய பொறிகள் அநேகமாய் எவ்வாறு வெளிப்படுகின்றனவோ? அவ்வாறே நாசமற்ற ஆன்மாவினின்றும் சீவர்கள் பிறக்கின்றார்கள். அவ்விடத்தே ஒடுக்கத்தையும் அடைகின்றார்கள். எ-று. * இது அதர்வண வேதம், முண்டகோப நிஷத்துவாக்கியம்.

"தத்³தே⁴த³ம் தர்ஹ்யவ்யாக்ருதமாஸீத்தந்நாமரூபாப்⁴யாமேவ வ்யாக்ரியதே." —ஆனால் அப்பிரமம் இவ்வாறு பிரிக்கப்பட்டிருக்கவில்லை. அதே பிரமமே, பெயராலும், உருவத்தாலும், பிரிக்கப்படுகின்றது. எ-று. (எனவே, நாமரூபமற்ற பிரமமே நாமரூபமுடைய பிரபஞ்சமாயிற்று. என்பது). இது சுக்கில யஜுர்வேத உபநிஷத்து வாக்கியம்.

ஆயின், இவ்வாக்கியங்களில், சிருட்டியை ஒருவகையாக நிச்சயிப்பதற்கு அமையாது. விப்பிரதிபத்தி மிகுதியா யிருப்பதால். (விப்பிரதிபத்தி=ஐயத்திற்கிடமாக முன்னொடு பின்மலைவாதல்). ஆன்மா, பிரமம், சத்து, அக்ஷரம், அவ்வியாகிருதம், என்னும் இவ்வாக்கியங்களால் வாச்சியமாகிய=சொல்லப்பட்டவைகளாகியபொருள்கள் காரணமாய்க்கூறப்படுகின்றது. ஆகவே, ஒரு உலகத்திற்கு வேறுவேறு இலக்கணமுடைய பல உபாதாநகாரணம்=முதற்காரணம் இல்லையே எனில்?

அது குற்றமன்று. ஆன்மா முதலிய அச்சொற்களால் ஒரே பொருள் கூறப்படுதலின். ஆன்மா, பிரமம், இவ்விரண்டு மொழிகட்கும் ஒரேபொருள் உண்டாயிருப்பது, விளங்குகின்றது. எங்ஙனமெனில்? மேற்பிரமவாக்கிய சேடத்தில் "தஸ்மாத்³வா ஏதஸ்மாதா³த்மந ஆகாஶஸ்ஸம்பூ⁴த:" என்று கூறப்பட்டிருத்தலின். எனவே, சச்சிதாநந்த வடிவம் பிரமம் என்றுகூறி அந்த ஆன்மாவால் அந்த ஆகாயம் பிறந்தது என்று மேலே கூறப்பட்டது, அன்றோ? அவ்விடத்து,

* எனவே, மஹாகாயத்தால், குடமுதலிய உபாதியையுடையசிறியஆகாயங்கள் பிறந்து உபாதி ஒழிந்தால், சிறிய ஆகாயங்கள் மஹாகாயத்தில் ஒடுக்கமுற்றதுபோலத் தோன்றுகின்றது. அவ்வாறே, கேடற்ற பிரமத்தினால், கேட்டையுடைய அவித்தை=மாயை உபாதியோடு சீவான்மாக்கள் பிறந்ததாகவும் இறந்ததாகவும் தோற்றுவர். தோற்றஒடுக்கங்கள் உபாதிகளுக்கே அன்றி ஆன்மாவுக்கல்லவென்று, சங்கரபாஷ்யக்கருத்து. உபாதி-எ-து. அடுத்ததால் வருந் துன்பம். இதனை ஏனையர் மறுப்பர் அவையாண்டுணர்க.

பிரமத்தை அந்த ஆன்மா என்று கூறியதால், பிரமம் ஆன்மா என்னும் சொல்லிரண்டும் ஒருபொருள்குறித்த பரியாயச்சொல் லென்பது.

சத்து, ஆன்மா, என்னும் இவ்விரண்டு மொழிகளுக்கும், ஒரே பொருளா யிருப்பது நியாயத்திற்கு ஒத்ததாக விருக்கின்றது. எவ்வாறெனில்? ஆன்மாவென்னும் சொல், சொரூபவாசக மாதலாலும், சத்தாவினதும் உபநிடதப்பிரமாண முடையவர்களால் சருவசொரூபத்தன்மை எனஉடன் படுதலினாலும். சத்தா என்பது, சருவசொரூபமாயிருப்பது அநுபவத்தின்க ணுள்ளது அல்லவா? "மனிதன்கோடு" முதலியவற்றிற்கும் ஞாநத்தை யுண்டுபண்ணுதல் என்னும் ஆகாரத்தால் சத்தாகிய வடிவமாதலின். *

அக்ஷரம், என்னும் சொல்லும் "అశ్నుతఇత్యక్షరం" அநுபவிப்பதால் அக்ஷரம் என்னப்படும். "నక్షరతీతివా" "అక్షరం" சுதம்= நாசம் அற்றது ஆதலால் அக்ஷரம் என்னப்படும். ஆதலால் இச் சொல், பரமான்மாவைக்குறிக்கின்றது.

அவ்வியாகிருதம்,என்னும்சொல்லும்,அதனிடத்தேதானே சேர்ப்பதற்குக் கூடுமானதா யிருக்கின்றது. என்னே? "వి" "ఆ" "కృతం" "వ్యాకృతం" என்பதனுள் "వి"' விசேடம். "ఆ" அவ்வளவில் "కృతః" செய்யப்பட்டது. இந்தவியுத்பத்தி=மொழியாக்கத்தால், வியாகிருதம் என்னும்சொல், உலகந்தோற்றுவதற்குத் தகுதியான தூலதசையைக் குறிக்கின்றது. தூலதசை=பெருங் காலம். அதன்மேல். அ. என்னும் எதிர்மறை யுபசருக்கத்தால் அவ்வியாகிருதம் என்றாயிற்று. அது. சூக்குமமாகிய தசையை= நுண்ணிய காலத்தைக் குறிக்கின்றது, ஒரே பொருளினுடைய தூல சூக்குமதசைகள் சுகம், பிரமம், என்னும் மொழிகளால் கூறப்படுகின்றன. (எனவே, தூலதசையோடுங் கூடியது சகம், சூக்குமதசையுடன் கூடியது, பிரமம் என்பது. (என்றால் கால

* (எனவே, "மனிதன்கோடு" என்பது, இல்லாப்பொருளாயினும், அந்தமொழியால் உண்டான அறிவிலே உள்ளதாகத் தோற்றியவிடயம் அறிபவனுடைய வடிவமே என்பதுகருத்து) சருவசொரூபத்தன்மை=எல்லா வடிவம். ஆகாரம்=உருவம். கோடு=கொம்பு. இது. பிறர்மதம்.

பேதமன்றிப் பொருட்பேத மில்லை பொருள்ஒன்றே என்பது கருத்து.,). இதுபரிணாமோபாதான வாதி பக்ஷ தாற்பரியம்.

விவர்த்தோபாதான வாதிகளும் "அகண்டைகரசமாகிய"=பிரிவற்ற வொருமைச் சுவையாகிய பிரமமே உலகவடிவமாகத் தோற்றுகின்றதென்று உடன்படுகின்றனர். ஆதலால், அவ்வியாகிருதம் பிரமம் முதலியஐந்துமொழிகளுக்கும் ஓரே பொருளென்றுணர்க.

அற்றேல், சிலவிடங்களில் உலககாரணம் சூநியம்=இல்லாததொன்றேயென்றுவேதத்துள்ளேகூறப்படுகின்றது. என்னை? "అసద్వా ఇదమగ్రఆసీత్ - తతో వై సదజాయత." = முதற்கண் சத்தில்லாததேயாகியிருந்தது. பின்பு, சத்துப்பிறந்தது. எ-று. கிருஷ்ணயஜுஸ்-தைத்திரீய உபநிஷத்து வாக்கியம். என்பதியாதெனில்? (இங்கு அசத்துஎன்னும் சொல்லுக்கு இல்லாதபொருள்.எனவே அபாவமே பொருளென்று பூர்வபக்கத்தார் தாற்பரியம்).

அங்ஙனமன்று. அவ்விடத்து, சத்து, அசத்து, என்னுமொழியால், வியாகிருதம், அவ்வியாகிருதங்களே கூறப்படுதலின்.

அன்றியும், மற்றொருசுருதியில் "కథమసతస్సజ్జాయేతేతి."=அசத்தாகியபொருளினின்றும் சத்தாகியபொருள், எவ்வாறுபிறக்கும்? என்று எதிர் மறுத்தலின். அபாவத்தால் பாவம் பிறப்பதில்லை. ஆதலால், சூநியப்பொருள் உலகத்திற்குக் காரணம் என்று கூறுவது ஒத்தவழக்கன்று; என்று சூநியகாரணத்து வாதம் விலக்கப்பட்டுள்ளது.

ஆயின், தோற்றிவருகின்ற இந்த வுலகத்திலுள்ள எந்தவடிவமும் இல்லாதது, சூநியமாகாதே விலக்ஷணமாம். என்றால், அப்பிரமம் எப்படிப்பட்டதென்றுகருத்துட்கொள்ளப்படும். எனில்?

ஈண்டு நீர்வினவுவதற்கு, யாது உம்மால் கூறப்பட்டதோ? அந்த வாசகத்துக்கு இலக்கியமானதே அது என்று உள்ளத்துட் சமாதானம்செய்க. அதற்கு வேறு உவமை வேண்டின்கூற எம்மால்அமையாது. என்னை? அதனோடு ஒத்தபொருள் வேறொன்று இல்லாமையின். இங்ஙனம் சுருதியும்கூறிற்று. வருமாறு, சுவேதாசுவதரோபநிஷத்து, "నతస్య కార్యం కరణం చ విద్యతే న తత్సమశ్చాభ్యధికశ్చదృ

శ్యతే." = அவனுக்குத் தொழிலுமில்லை; கரணமுமில்லை; அவனோடு ஒத்தவனும் ஒருவனில்லை; அவனுக்கு உயர்ந்தானுங் காணப்படுவ தில்லை. எ-று. காண்க.

ஒருக்கால், மாணாக்கர்க்கு அறிவுஉண்டாதற் பொருட்டு, உவமைகளை எடுத்தாளவேண்டி யிருக்குமாயின், அத்துவித ரூப மாகிய சுழுத்தியை எடுத்துக் காட்டாக அமைத்துக்கொள்க.

புருடார்த்த மென்பது தனதுவடிவமே என்பதற்கு, விடய இன்பத்தை எடுத்துக்காட்டாகக் கொள்க. எடுத்துக் காட்டு, நிதர்சனம், ஒரேபொருள். இங்ஙனம் கிருஷ்ணய ஜஸு உபநிஷத் துள்ளுங் கூறிற்று. அதுவருமாறு. "ఆనందో బ్రహ్మేతి వ్యజానాత్." = இன்பமே பிரமம் என்று உணர்ந்தான். எ - று. இன்னும், "విజ్ఞానమానందంబ్రహ్మ" = பிரமம் விஞ்ஞான வடிவமும் இன்ப வடிவ மும்ஆனது. எறு. மற்றும் வருவன வற்றாலும் உணர்க. இந்த ஐயங்களைப்பற்றற வொழிக்க வேண்டின், பிரமமீமாம்ஸ நூலா லுணர்க. இனிவிரித்துக் கூறலமையும்.

எவ்வளவுகாலம், பிரமம்அபிவியக்தமாகிய = வேறுபாட்டோ டுங் கூடிய உலகத்தின் வடிவத்தோடு முன்னங் கூடியிருப்பதா யிருந்ததோ ? அவ்வளவுகாலம் பின்பு, உருவு வெளிப்படாத தசையிலிருந்து, மறுபடியும், உருவத்தோடும்வெளிப்படுகின்றது.

ஆனால், மஹாப்பிரளயத்தில், காலமாவது அதனது அள வையாவது எவ்வாறுபெறப்படு மெனில்? (எனவே, பிரளயத் தில் உலகமே தோன்றா திருக்கச்சிதே அவ்வுலகத்துள்ள பொ ருள்களில் ஒன்றாகிய காலம் மாத்திரம் எங்ஙனம் உணரப்படும்? அது அநுவாதத்துக்கு முரணாதலால் இத்தனைவருடம் பிரளயமி ருந்த தென்னும் வரையறைகூறலாகாது. என்றது அவ்வினாவின் கருத்து).

அற்றன்று. இவ்வதிசயம் யாரைவினாவுவது? பிரமவாதி யைக் குறித்ததன்று. அவன் மதத்துள் ஆகாயமுதலிய பலபேத முடைய உலகத்தினுடைய தோற்றத்தைக் கற்பித்து வைத்தி ருக்கும் மஹா மாயைக்கு ஒரோவொருபிரளயம் இவ்வளவுகால அளவை யுடையதா யிருந்தது என்று, இவ்வாறாகிய தோற் றத்தை மாத்திரம் உண்டு பண்ணுவதில் அருமை என்னையுள் ளது? ஒன்றுமில்லை.

* பரமாணு வாதத்திலும், இதேவகையாகிய காலம் நித்த மாகவிருக்கும்.

§ பிரதான வாதத்திலும், இருபத்தைந்து தத்துவங்களினும் வெளிப்பட்ட காலதத்துவ மென்பது இல்லாமையால், பிரதான தத்துவமே, காலம் என்னும் மொழியால் விவகரிக்கப்படும்.

---

* எனவே, பரமாணுவாதிகளாவார் தருக்கர். அவர்கள்மதத்தில் "జన్యమాత్రంకాలోపాధి." பிறந்த பொருளெல்லாம் காலவுபாதியுடையன. எனவே, பிறந்தது எனில் ? எப்போது ? என்னும் வினாவிற்கு இடனாகின்றது. ஈண்டு, உலக அழிவே பிரளயமென்று கூறப்படுதலின், தோற்றத்தையுடைய அழி வாகிய இல்லாமை=துவம்ஸாபாவத்திற்கு அதிகரணம்=இடமாகிய கால முண்டு. எனில் ? உலகமழிந்து இல்லாம லிருந்தது என்றால், எப்போது? என் னும் வினாவிற்கு இடனாகின்றது. "అతీతాదివ్యవహారహేతుః కాలః। సచైకోవిభుర్నిత్యశ్చ" இது அன்னம்பட்டீயதருக்கசங்கிரகவாக்கியம் "వ్యవహర్తవ్యవహర్తవ్యతావచ్ఛేదకస్యకారణత్వం"இது நீலகண்டப் பிராகாசிகாவாக்கியம் "వ్యవహారోనామశబ్దప్రయోగః" இது நிருத்திநூல்வாக்கியம், காலம் என்பது, ஆனது, ஆகின் றது, ஆவது, என்னும்விவகாரத்திற்கு, எனவே, சொல்லின் பிரயோகத்திற் குக் காரணமானது. எவ்வாறெனில்? புசித்து ஆயிற்று என்புழி, இறந்தகாலத்தை யுடைய புசிப்பு எது, விவகரிக்கத்தக்கது. அப்படிப்பட்ட புசித்தற்றன்மை எனவே இறந்தகாலத்தோடுங் கூடியிருத்தல், விவகர்த்தவ்விய தாவச்சேதகம் என்று சொல்லப்படும். அது இறந்தகால மன்றோ ? ஆதலால், புசித்தாயிற்று என்னும் வழக்கில் இறந்தகாலம் காரணமாக இருக்கின்றது. இக்காரணத் தன் மையால் இறந்தகாலம் என்னும் பொருள், உண்டாகின்றது. இவ்வாறே ஏனைய நிகழ்கால எதிர்காலங்கட்குங்கொள்க. அப்படிப்பட்டகாலம் ஒன்றே யாம். அன்றியும் விபு, எ-து, எல்லாவுருவப்பொருளினுடைய கூட்டமும் உடையது. உருவப்பொருள்=மூர்த்தத் திரவியம், என்பது, அசைதற் றொழிலுடையது. அவை, மண், நீர், தீ, காற்று, மனம், என்னும் ஐந்துமாம். அன்றியும் காலம் நித்தியம், எனில், அழிவற்றது. காலம், எல்லாவற்றிற்கும் இடமாதலால் பிர ளயத்திற்கும் ஆதாரமானது. ஆகவே பிரளயத்தில் நித்தியமாகக் காலம்உண்டு என்று கூறுகின்றனர்.

---

§ பிரதானவாதிக ளாவார் சாங்கியர். அவர்கள் மதத்துள்பிரதான தத்து வம் முதலிய இருபத்தைந்து தத்துவங்களே கூறப்பட்டது. அதற்குமேல் இரு பத்தாறுவதாயுள்ள பொருளொன்றில்லை. அவ்விருபத்தைந்தனுள் காலங்கூறப் படவில்லை. ஆகவே, காலம் எதனுள்ளடங்கும் எனில் ? அவர் கூறும் பிரதான தத்துவ மென்பதனையே காலமென்று கூறப்படும் என்பது கருத்தென்க.

ஈச்சுரசங்கற்பவிசாரம்.

ஆதலால், பிரளயகாலத்தின் முடிவிலே, இறைவன் சிருட்டியை விரும்புகின்றான். என்று சுருதிகூறிற்று. வருமாறு "கிருஷ்ணயஜுஸு அருணத்துள்" "காமஸ்தத³க்³ரேஸமவர்த்ததாதி." அவ்வுலகத்தோற்றத்தின்முதற்கண்காமமே அதிகாரியாய் இருந்தது. எறு (என்பது, கடவுளுடையது). எம்; தைத்திரியத்துள், "ஸோகாமயத³ப³ஹுஸ்யாம்ப்ரஜாயேயேதி." = "பலபிரசைகளைப் பிறப்பிப்பவனாவேன்" என்று அவன் விரும்பினான். எறு. எம்; சாமம், சாந்தோக்கியத்தில் "ததை³க்ஷதப³ஹுஸ்யாம்ப்ரஜாயேயேதி."="பலவகையாகப் பிறப்பன வாகின்றேன்" என்று அப்பிரமம் நோக்கிற்று. எறு. எம், "ஸஈக்ஷாஞ்சக்ரே." அவன் நோக்குதலைச் செய்தான். எறு. எனவும் வருவனபிறவும் என்க. (உலகத்தைப்படைக்கும் பொருட்டு, கடவுள் இச்சித்தார், நோக்கினார், என்பது அவ்வேதப்பொருள்.

அங்ஙனமாயின், காமம் என்பது மனத்தி லுண்டாகும் உணர்ச்சி விருத்தியுள் ஒன்றாக இருக்கின்றது. எங்ஙன மெனில்? "சுருதி" "காமஸ்ஸங்கல்போவிசிகித்ஸாஶ்ரத்³தா⁴ஶ்ரத்³தா⁴த்⁴ருதிரத்⁴ருதிர் ஹ்ரீர்தீ⁴ர்பீ⁴ரித்யேதத்ஸர்வம்மனஏவேதி." காமம்=விருப்பம், சங்கற்பம்= எண்ணம், விசிகிச்சை=செய்யவேண்டும், சிரத்தை=ஐதம்பரியநிச்சயம்=இதுவே சிறந்ததெனத்துணிந்துகொள்கை, அசிரத்தை=அத்துணிவில்லாமை, திருதி=தரித்தல் விருத்தி, அதிருதி=அஃதில்லாமை, "ஹ்ரீ" "ஹ்ரீ"=நாணம், "தீ⁴" தீ=திருத்தியை உண்டுபண்ணும் சித்தம், "பீ⁴:" பீ=பயம்=அச்சம், இவைகளெல்லாம் மனமேயாம். எறு. இங்ஙனமாகிய மனம் பௌதிகமானது = பூதசம்பந்தத்தாற் பிறந்தது. இவ்வாறு, சாந்தோக்கிய உபநிடதமுங் கூறிற்று. என்னை? அன்னமயம்ஹிஸோம்யமன:."=பிரியதரிசனாகிய ஓ! சுவேத கேதுவே! எந்தக்காரணத்தால், மனம், அந்நமயமாயிற்றோ? எறு. ஆகவே, பூதங்களினது தோற்றத்திற்குமுன்னே, பௌதிகமாகிய மநம் இல்லையல்லவா? மநமேஇல்லாவழி அம்மநத்தின் விருத்தியாயுள்ளகாமம் எவ்வாறு உண்டாம்? ஆதலால், சிருட்டிக்குமுன் அச்சிருட்டியின் பொருட்டு, கடவுள் இச்சித்தார் என்று கூறுவது ஒத்தவழக்கன்று. எனில்?

விடைகூறுதும். சிருட்டிகாலத்தில் இது ஓர் ஆச்சரியமாகப் பிறப்பதில்லை. ஏனெனில்? அந்தமனத்திற்கு பூதத்தாற்பிறக்

கும் தன்மையில்லை. அன்றியும், நித்தியமாகிய இறைவன் இச்சைக்கு மநத்தினிருப்பு வேண்டுகையு மில்லை. (எனவே, அழியத்தக்க விருப்பமானால் மநத்துட் பிறக்கும்; கடவுளிச்சை என்றும் உள்ளது ஆதலால், அதற்காக மநம் வேண்டுவதில்லை. மனமின்றியே யிச்சையுண் டென்பது கருத்து.) அக்கடவு ளிச்சை யென்றும் உள்ளதே யாயினும் அது சருக்கம் = சிருட்டியோடு * உபஹிதமாதல் என்னும் வடிவத்தால், "ஸிஸ்ருக்ஷா" சிருட்டிசெய்ய வேண்டுமென்னும் விருப்பமே யாவது ஒத்தவாறுகின்றது:

ஔபநிடத மதத்தில், சிவனது இச்சை, பௌதிகமாகிய மனத்திற்குக்காரியமான போதிலும், எனவே மனத்தால் பிறப்பதானாலும், கடவுள் இச்சை என்பது, மாயையின் பரிணாமவடிவமாதலால். அதற்கு மனம் வேண்டுவதில்லை. பரிணாமம்=திரிபு. அது தனுகரணங்கள் முதலியவை இல்லாவிட்டாலும் பரமேச்சுரனுடைய எல்லாம் வல்லமை, இவ்வளவினது இன்னதன்மை

* விசிட்டம், உபஹிதம், உபலக்ஷிதம், சுத்தம், எனப்பொருள் நால்வகைப்படும். அவற்றுள், விசிட்டம், எது, நிகழ்காலத்துக் கூடியிருப்பது. உபஹிதம் - எது. இறந்தகாலத்துக் கூடியிருந்து நிகழ்காலத்தில் கூடாம லிருப்பது. எனவே யில்லாமையா யிருப்பது. உபலக்ஷிதம் - எது, இறந்தகாலத்துக் கூடியிருந்ததாகத் தோற்றி நிகழ்காலத்திற் கூடவில்லை என்புழி அவ்வில்லாமை வடிவாயுள்ளது. சுத்தம் - எது, தான் தன்னளவி லுள்ளது. இதற்கு உதாரணம். "ঘটবদ্ভূতলং." குடமுடையது நிலம் எனவே குடத்தோடு கூடிய நிலத்திற்குக் கடவிசிட்டம் என்பது பெயராம். அங்கு நிலம் விசேடிக்கப்பட்டது; குடம் விசேடிப்பது. குடமிருந்த நிலம் என்புழி. அந்நிலத்தைவிட்டு அக்குடத்தை வேற்றிடத்தில் வைப்புழி, அவ்விடம் குடத்தால் உபஹிதம் - என்று கூறப்படும். எனவே அவ்விடத்திற் குடமில்லா விட்டாலும் வேற்றிடத்தி லாயினும் இருப்பதால், முன்னிருந்த விடத்தில் அக்குடம் உபஹிதமா யிருக்கின்றது என்பது கருத்து. அக்குடமுற்றும் அழிந்த விடத்து, முதற்கண் இருந்த நிலம்குடத்தால் உபலக்ஷிதம்என்னப்படும், என்பது, குடம் முழுவதும் அழிந்துவிட்டாலும், அக்குடம் இன்ன இடத்தில் இருந்தது என்னும் விடயம் கருத்துக்குத் தோற்றுவதால், அவ்விடம் குடத்தால் உபலக்ஷிதம் என்று கூறப்படும். எனவே, குடம் உபலக்ஷிதமா யிருக்கின்ற தென்பது கருத்து. அந்த ஞாபகமும் இல்லாதொழியில் அது சுத்தநிலமென்று கூறப்படும். இந்த வுதாரணங்களின் படி, மாயை, அவித்தை, அவற்றின் காரியம் முதலிய விசேடணங்களால், ஆன்மாவை விசேடியமாக வைத்துக் கொண்டு, பற்று, வீடு, என்னும் விவகாரங்கள் சொல்லப் படுகின்றது.

யது என்று நாம் மதிப்பதற்கு முடியாததாக விருக்கின்றது. இக்கருத்துச் சுருதிகளால் விளங்கும். வருமாறு, " న తస్య కార్యం కరణం చ విద్యతే న తత్సమశ్చాభ్యధికశ్చ దృశ్యతే। పరాస్య శక్తిర్వివిధైవ శ్రూయతే స్వాభావికీ జ్ఞానబలక్రియా చ." = அவனுக்குத் தொழிலில்லை. அவனுக்குக் கரணமில்லை. அவனுக்கு ஒத்தவனும் உயர்ந்தவனும் காணப்படுவதில்லை. அவனுடைய மிகச் சிறந்தவல்லமை பலவிதமாகவுடையதாக்கேட்கப்பட்டது. ஞானம், பலம், தொழில், முதலிய அவனுக்கு இயற்கையாயுள்ளன. எ-று. எ-ம்; " అపాణిపాదో జవనో గ్రహీతా పశ్యత్యచక్షుస్స శృణోత్యకర్ణః." = கைகாலில்லாதவன், ஏற்றுக்கொள்ளுகின்றான். விரைந்து நடக்கின்றான். கண்ணில்லாதவன் பார்க்கின்றான், காதில்லாதவன் கேட்கின்றான், அவன், இப்படிப்பட்டவன். எ-று.

இங்ஙனமாதலின், கூடுதலில்லாதவனுக்குச் சிருட்டிசெய்யுந் தன்மை எவ்வண்ணம் உண்டாயிற்று ? பிறக்கப்போகின்ற ஆகாயமுதலியபொருள்கள் அதற்குத்தக்க கருவிகளில்லாமலே எவ்வாறு பிறக்கும் ? என்பன முதலியவாகவரும் வியப்பு=அதிசயங்களுக்கு இடனில்லாமலே யிருக்கின்றது. மிக்க பிற அதிசய வினைக்கள்ளத்துணையிருக்கினும், ஈச்சுரனுக்கு, முடிவிலாற்றலுடைமையுள்ளதென்பதே அவற்றிற்கெல்லாம் விடையாகக்கொடுக்கப்பட்டு இருக்கின்றது. ஆதலால், சுருதியெவ்வாறு கூறியிருக்கின்றதோ? அவ்வாறு, ஐயமற்றவர்களால் சிருட்டி உடன்படத்தக்கது.

## ஆகாயமுதலியவற்றின் சிருட்டிமுறை.

இனி, சுருதி கூறியது ; வருமாறு, தைத்திரீய உபநிஷத்து. "తస్మాద్వా ఏతస్మాదాత్మన ఆకాశస్సంభూతః। ఆకాశాద్వాయుః। వాయోరగ్నిః। అగ్నేరాపః। అద్భ్యః పృథివీ। పృథివ్యా ఓషధయః। ఓషధీభ్యోఽన్నం। అన్నాత్పురుషః।" = அத்தன்மையுடையதென இங்கு கூறிய ஆன்மாவால் ஆகாயம் பிறந்தது! ஆகாயத்தால்வாயு, வாயுவால் தீ, தீயால் நீர், நீரால் மண், மண்ணால் பைங்கூழ், அப்பைங்கூழால் அன்னம், அவ்வன்னத்தால் புருடன், பிறந்தான் - எ-று. அவ்விடத்து, புருடன் என்னுமொழியால், தலை, கை, முதலிய அவயவங்களோடு கூடியிருக்கும் உடம்பினைக்கூறப்பட்டது. அவ்வுடம்பு, பிரமன்முதல் ஸ்தம்பம் வரையிலும் பலவகைப்பட்டுள்ளன. ஈண்டுத்தம்பம் என்பது நுண்ணியதோர் ஜந்து.

அவற்றுள், பிரமனதுதேகம் ஒப்புயர்வற்ற புண்ணியத்தின் கூட்டத்திற்குப் பயன்வடிவா யுள்ளது. ஏனையவெல்லாத் தேகங்களுக்கும் காரணமாதலால், அது அநாதியென்று கூறப்படுகின்றது. இங்ஙனம் சுருதியுங்கூறிற்று. அதுவருமாறு, கிருஷ்ணயஜஸ— " హిరణ్యగర్భస్సమవర్తతాగ్రేభూతస్యజాతఃపతిరేకఆసీత్. "=முதற்கண், இரணியகருப்பன் ஒருவனேபிறந்திருந்தான். அவன்எல்லாப்பூதங்களுக்கும் ஒரோதலைவன் ஆயினன். எ-று. எ-ம் " బ్రహ్మాదేవానాంప్రథమస్సంబభూవ విశ్వస్యకర్తాభువనస్యగోప్తా " பிரமதேவன்தேவர்களுடையமுதல்வனாயினன். உலகத்தினுடைய கருத்தன், உலகத்தைக் காப்பவனும் எ-று. எ-ம்,ஸ்மிருதி. "సవైశరీరీప్రథమస్సవైపురుషఉచ్యతే। ఆదికర్తాసభూతానాంబ్రహ్మాగ్రేసమవర్తత. "=அவனே முதலுடம்பினை யுடையவன். புருடன் என்று சொல்லப்படுகின்முன். பூதங்களுக்கு அவனே முதற்கருத்தன். அப்படிப்பட்ட பிரமன்முதலில் இருந்தான். எ-று. எனவும் வரும்.

இதனல், விஷ்ணு உருத்திரர்களுக்கும் ஆதியுண்டென்று உரை செய்யப்பட்டது. ஒருசேதநமே = அறிவே, முக்குணங்களையும் வகுப்பதற்கு மூன்றுதேகங்களைக் கொண்டது. இங்ஙனம் மைத்திரேயசாகை யென்னும் சுருதியிற்கூறப்பட்டது.

" తస్యప్రోక్తా అగ్ర్యాస్తనవో బ్రహ్మావిష్ణూరుద్రఇత్యథయోవైఖలువావాస్యరాజసోంశోసౌసయోయంబ్రహ్మాయథా హఖలువా వాస్యతామసోంశోసౌసయోయంరుద్రోయథాఖలువావాస్యసాత్వికోంశోసౌసయోయంవిష్ణుస్సవాఏషఏక స్త్రిధాభూతః. " = அவனுடைய சிறந்தமுதற்றேகங்கள் பிரமன், விஷ்ணு, உருத்திரன், என்று சொல்லப்படுகின்றன. அவற்றுள், இராஜசகுணத்தின் கூறு எதுவோ? அதுவே இப்பிரமன், தாமசகுணத்தின் கூறு எதுவோ? அதுவே இவ்வுருத்திரன், சாத்துவித குணத்தின் கூறு எதுவோ? அதுவே இவ்விஷ்ணு, அவனே, இவன்; ஒருவனே மூவராயினன். எ-று. உத்தரதாபி நீயோப நிடதத்திலும், மாயையை இங்குமுன்னிட்டுக்கொண்டு கூறப்படுகின்றது. " సైషాచిత్రాసుదృఢాబహ్వంకురాస్వయంగుణభిన్నాంకురేష్వపిగుణభిన్నా సర్వత్రబ్రహ్మ విష్ణుశివరూపిణీచైతన్యదీప్తాతస్మాదాత్మనఏవ త్రైవిధ్యంసర్వత్ర. " = அப்படிப்பட்ட இம் மஹாமாயை, சித்திரிப்புடையது. மிகுந்த வலிவுள்ளது. பல முளைகளை யுடையது தான் குணத்தொடுகூடி வேறுபட்டிருப்பது.

மூளைகளிலும் எப்போதும் குணவேறுபாட்டோடுங்கூடியுள்ளது. பிரமன், விஷ்ணு, சிவன்என்னும்வடிவத்தையுடையது. அறிவுவிளக்கமானது. ஆதலால், எப்போதும் ஆன்மாவினது திறம்மூவகைப்பட்டிருக்கும். எ-று, இனி, ஸ்கந்தபுராணத்துள்ளும், "ఏక ఏవ శివస్సాక్షాత్ సృష్టిస్థిత్యంతసిద్ధయే। బ్రహ్మవిష్ణుశివాఖ్యాభిః కలనాభిర్విజృంభతే." = பிரத்தியக்ஷமாகஅச்சிவனொருவனேசிருட்டிதிதிசங்காரத்தொழில்களை அடையும் பொருட்டுப் பிரமன் விஷ்ணு உருத்திரன் என்னும் பெயராலும் தொழிலாலும் சிறந்தோனாகின்றான். எ-று. எனவும் கூறுதல் காண்க.

இவ்வகையாகப்பிரமா, விஷ்ணு, உருத்திரர்கள் தங்கள்மஹாகற்பம் முடியும்போது ஒடுக்கத்தை அடைகின்றனர். மீட்டும் அக்கற்பத்தின் முதலில் தோற்றுகின்றனர் என்பதே தேற்றமானது. மூலத்திலுள்ள எழுத்துக்களின் பொருளோ எனில்? "లయోత్పత్త్యా" = ஒடுக்கத்தோடு கூடியது தோற்றம் அதனோடு "உபலக்ஷிதா" ஆகின்றனர்என்றபடி. இவ்வாறு, அந்தந்த அவாந்தர கற்பங்களுடைய முடிவிலும் முதலிலும் சுருதி முதலியவற்றைத் தோற்றுவிப்பவர்கள், ஒடுக்கத் தோற்றங்களோடு உபலக்ஷிதர் ஆகின்றனர். உபலக்ஷிதர்-எது, ஒத்த இயல்பினர்.

## வேதவிளக்கஞ்செய்பவர்கள்.

அவற்றுள், சுருதிகளைத் தோற்றுவிப்பவர்கள் யார் எனில்? வேதத்தைப்பிரித்தருளினவர் வியாசர். அவ்வேதங்களின்சாகைகளுடைய சம்பிரதாயங்களை விளக்கஞ் செய்யுமவர்கள் கடர், கௌதுமர், முதலியோர். அதன்பிரயோகங்களைத்தெரிவிக்கின்ற கற்பசூத்திரக்காரர்கள், போதாயநர், ஆசுவலாயநர், ஆபஸ்தம்பர், காத்தியாயநர், முதலியோர்கள். பூருவபக்கம் சித்தாந்தம் என்னும் விசாரவடிவமாகிய வேத மீமாம்ஸா சாஸ்திரங்களுக்குச் சூத்திரக்காரர்களாவார் ஜைமினிமுதலியோர்கள்.

## ஸ்மிருதிகருத்தர்கள்.

அவற்றுள், ஸ்மிருதிகளை விதிசெய்தவர்களாவார், மநு முதலியோர் உலகறிந்தவர்களா யிருக்கின்றனர். அவருள், பைடீநஸ்மிருதி, "తేషాం మన్వంగిరోవ్యాసగౌతమాత్ర్యుశనోయమాః। వసిష్ఠదక్షసంవర్త

శాతాతపపరాశరాః। దక్షాపస్తంబహారీతాః శంఖః కాత్యాయనో భృగుః। ప్రచేతా నారదో యోగీ బోధాయనపితామహా। సుమంతుః కశ్యపో బభ్రుః పైఠీనో వ్యాఘ్ర ఏవ చ। సత్యవ్రతో భరద్వాజో గార్గ్యః కార్ష్ణాజినస్తథా। జాబాలిర్జమదగ్నిశ్చ లోకాక్షి బ్రహ్మసంభవః ఇతిధర్మప్రణేతారః షట్త్రింశదృషయస్తథా,'—

| | | |
|---|---|---|
| ௧. மநு. | ௧௪. ஆபஸ்தம்பர். | ௨௭. பைட்டீநஸி. |
| ௨. ஆங்கிரசு. | ௧௫. ஹாரீதர். | ௨௮. வியாக்கிரர். |
| ௩. வியாசர். | ௧௬. சங்கர். | ௨௯. சத்தியவிரதர். |
| ௪. கௌதமர். | ௧௭. காத்தியாயநர். | ௩௦. பரத்துவாசர். |
| ௫. அத்திரி. | ௧௮. பிருகு. | ௩௧. கார்க்கயர். |
| ௬. உசநஸு. | ௧௯. வருணர். | ௩௨. கார்ஷ்ணுஜிகர். |
| ௭. இயமர். | ௨௦. நாரதர். | ௩௩. ஜாபாலி. |
| ௮. வசிட்டர். | ௨௧. யாஞ்ஞவற்கியர். | ௩௪. ஜமதக்கினி. |
| ௯. தக்ஷர். | ௨௨. போதாயநர். | ௩௫. லோகாக்ஷி. |
| ௧௦. சம்வர்த்தர். | ௨௩. பிரமா. | ௩௬. பிரமசம்பவர். |
| ௧௧. சாதாதபர். | ௨௪. சுமந்து. | ஆக முப்பத்தறு |
| ௧௨. பராசரர். | ௨௫. கசியபர். | வரும்தருமநூல் கூறி |
| ௧௩. விஷ்ணு. | ௨௬. பபுரு. | னோர். |

இங்ஙனம் இலக்கமிடும்வகை என்னை? அங்ஙனம் கூறினுல், வச்சர், மரீசி, தேவலன், பாரஸ்கரர், புலஸ்தியர், புலகர், இருசியசிருங்கர், இலிகிதர், சாகலேயர், ஆத்திரேயர்=தூருவாசர், முதலியவர்கள் தருமநூல்களை சொல்லினவர்கள் அல்லராவர். அன்றியும், மஹாபாரதம் அசுவமேத பர்வத்திலும், அவ்வம்முனிவராற் கூறப்பட்ட தருமங்களை எல்லாம் முறையாகக் கூறியிருக்கின்றனர். ஆதலின் மற்றுஞ் சில தருமசாத்திர நூலாசிரியர்கள் உள்ளவராக வெளிப்படுகின்றனர். அது வருமாறு.

“ శ్రుతామేమానవాధర్మాః.” என்று தொடங்கி இங்ஙனம் கூறப்படுகின்றது. என்னை? “ఛాగామాహేశ్వరాశ్చైవనందిధర్మాశ్చపావనాః। బ్రహ్మణా కథితాశ్చైవకౌమారాశ్చశ్రుతామయా। ధూమ్రాయణకృతాధర్మాః కణ్వావైశ్వానరా అపి। భార్గవాయాజ్ఞవల్క్యాశ్చమార్కండేయాశ్చకౌశికాః। భరద్వాజకృతాయేచబృహస్పతికృతాశ్చయే। కుణిశ్చకుణిబాహుశ్చవిశ్వామిత్రకృతాశ్చయే। సుమంతుజైమినికృతాః శాకునేయాస్తథైవచ।పులస్త్యపులహోద్గీతాః పావకీయాస్తథైవచ।అగస్త్యగీతామౌద్గల్యాశాండిల్యాస్సాలభాయనాః।వాలఖిల్యకృతాయేచయేచసప్తర్షిభిఃకృతాః। వైయాఘ్రావ్యాస

గీతాశ్చభాండకృతాశ్చయే। తథాపమర్వాణ్యానిభృగ్వంగిరసస్తథా। వైశంపాయనగీతా శ్చయేచాన్యేచైవమాదయః." =என்பன.

மநு.
உமாமகேசர்.
நந்தி.
பிரமா.
குமரர்.
தூமிராயநர்.
கண்ணுவர்.
வைசுவாநரர்.
பிருகு=பார்க்கவர்.
யாஞ்ஞுவற்கியர்.
மார்க்கண்டேயர்.
கௌசிகர் = இந்திரன்.
பரத்துவாசர்.
பிரஹஸ்பதி.

குணி.
குணிபாகு.
விசுவாமித்திரர்.
சுமந்து.
ஜைமினி.
சகுநி.
புலத்தியர்.
புலகர்.
வாயு.
அகத்தியர்.
மௌத்கல்லியர்.
சாண்டிலியர்.
சுலபாயநர்.
வாலகில்லியர்.

சத்தரிஷி.
வியாக்கிரர்.
வியாசர்.
விபாண்டகர்.
விதுரர்.
பிருகு.
அங்கிரசு.
வைசம்பாயநர்.

இவ்வாறே இன்னும் அநேகர்களால், கூறப்பட்ட தரும விடயங்களைகேட்டேன் என்று கூறியவாறு.

நல்ல ஒழுக்கம் உலகத்தில் உற இடபம், எச்சம், முதலியவற்றைச்செய்தவர்கள் அவ்வக்குல முதலிகளாகிய பெரியரும் உளரோ எனில்? "చ" என்றது சொல்லப்பட்டிருப்பனவற்றையும் சொல்லப்படாதிருப்பனவற்றையுங்கூட்டியுரைக்கின்றது. காண்க. இனி, அவற்றுள் மநுவாதிகளும் பிரமாதிகளும், ஸ்மிருதிசாஸ்திரக் கருத்தர்கள் என்று சொல்லப்பட்டது.

தருமம்சொல்லப்படாதது. அத்தருமத்திற்கு, முன்னையகற்பத்தினுடைய முடிவில் இறந்துபோய்விட்டதற்குவருங்கற்பத்தின்முதலில்சிருட்டிஆகின்றது. அவ்வாறே, வாஜஸநேய பிராமணத்தில், சிருட்டிப்பிரகரணத்தில்பிரஜாபதி=பிரமா, மனிதர்முதல் எறும்புகடையானபிராணிகளும், நான்குவருணங்களின் அபிமானிகளாகியதேவர்களும்ஆகியஇவர்களுடையசிருட்டியைச்செய்தார்என்று சொல்லி, பின்அதிகவுக்கிரமாகியக்ஷத்திரியர் முதலியோரைவகுத்தேற்படுத்துவதற்கு வல்லமையுடையதாகிய தருமத்தினுடைய சிருட்டி, சொல்லப்படுகின்றது. வருமாறு. "స నైవవ్యభవత్తచ్ఛ్రేయో రూపమత్యసృజతధర్మంతదేతత్క్షత్రస్యక్షత్రంయద్ధర్మ స్తస్మాత్పరంనాస్తి." = அவன்

வைபவங்களைப் பொருந்தினவனுகவில்லை யாதலால், செல்வரூப மான தருமத்தை எல்லா வற்றிற்கும் மேலாகச்சிருட்டித்தான். அங்ஙனம் இத்தருமம் க்ஷத்திரியத்துவத்திற்கு க்ஷத்திரியத்துவ மாயிற்று. எதுதருமமோ? அதற்காயினும்சிறந்தது இல்லை. எ-று.

இச்சுருதிக்கு இனிவருவதும் பொருளாம். "సః"=பிரமன் மநுமுதலிய உருவத்தைத் தரித்த உலக கருத்தாவாகிய பரமேசு வரன், பிரசைகளைச் சிருட்டித்து, அவற்றை ஆள்வாரில்லாத படியால் "నైవవ్యభవత్"="நான்செய்த தொழில் பலித்தது!" என்று திருத்தி யடையவில்லை. "తత్."=அதனாலே விசாரித்து, "శ్రేయో రూపం." = ஆளப்படுதலால் சிறப்பினையடைந்த. "ధర్మం" புண் ணியம்என்னும்பொருளை, அல்லது தருமதேவதையை. "అతః."= பெருமுயற்சியால். "అసృజత." = சிருட்டித்தார். "తదేతత్క్షత్రస్యక్ష త్రం." = இது பெரிய வியப்பு தருமத்தின் வல்லமை மிகப் பெரியது. எங்ஙனமெனில்? உலகத்தில், கொடியனுகிய அர சன் கொல்வதில் வல்லவனே யாயினும் தருமத்தால் பயந்து கொண்டு, இறை வரி முதலியவற்றைக்கொடாமலிருக்கிற யாசகர் களையும் வேதியரையும் துன்பப்படுத்தாது விடுவதே யன்றி, மீட் டும் அவர்களுக்குத் திரவியத்தையும் கொடுக்கின்முன். காலாட்க ளும், அதிசூரரும், வில் வாள் முதலிய பிடித்த படைவீரரும், பல்லாயிரம்பே ரிருக்கின்றனர். அவர்க ளெல்லாரும், நிராயுதனு கிய ஒரோஒரு இறைவனுல் ஆள்ப்படுவோராயும் அடிக்கப்படுவோ ராயும் இருப்பினும், சுவாமித் துரோகத்தினின்றும் அச்சப் பட்டு, அடங்கி யிருக்கின்றனர். "యద్ధర్మస్తస్మాత్పరంనాస్తి." = ஆத லால், தருமத்திற் காயினும் சிறந்த ஆளும்பொருள், ஒருசிறிது எதுவுமில்லை. எ-று. காண்க.

இனி, பிரளய காலத்தில், தருமத்திற்கும் ஒடுக்கம் வருவ துண்டல்லவா? அதன்பின் ஆகத்தக்க சிருட்டியில், வித்தில் லாமற் போதலால், தருமகாரியத்திற்கு, அசம்பவ தோஷம் வருகின்றதே. எனில்? அசம்பவம் = தோற்றமின்மை.

அங்ஙனமன்று, முன்னையகற்பத்தில், அனுட்டித்த சஞ்சித வினையினுடைய பயன் வித்தாகிய தரும அதிருஷ்ட சத்தியின் சங்காரத்தைப்பிரளயத்தில் உடன்படவில்லை. திரவியம், குணம் கிரியை, வடிவமாகிய தருமமேசங்காரப்படுகின்றது. மீட்டும்,

படைக்கப்படுகின்றது "సర్వదా"=எப்போதும் என்ற இச்சொற் பிரயோகத்தால் சிருட்டி பிரளயம் என்பவற்றின் வெள்ளப் பெருக்கு அநாதியாயுள்ளதென்று குறிப்பிக்கின்றார். (௨0௭)

## வேதத்திற்குக் கருத்தா இல்லையென்பது.

మూ॥ నకశ్చిద్వేదకర్తాచ వేదంస్మృత్వాచతుర్ముఖః।
తథైవధర్మాన్ స్మరతి మనుఃకల్పాంతరేంతరే ॥౨౦౮॥

என்றது. எதன்பொருட்டு சிருட்டி சங்காரங்கள் சுருக்கிக் கூறப்பட்டனவோ? அவ்வெள்ளப்பெருக்கின் அழிவில்லாமையை ஈண்டுக்கூறுகின்றது.

(இ-ள்.) வேதத்திற்குக்கருத்தாவொருவனுமில்லைசதுர்முகப் பிரமன் வேதத்தைக்கேட்டு கற்பத்தின் அந்தராந்தரம்=இடையிடையே மநுவாய் அவ்வாறேதருமங்களை நினைக்கின்றான். எ-று.

ஸ்மிருதிநூலைத்தோற்றுவித்தவர்களாகியமநுமுதலியோரே அதற்குநூலாசிரியராயிருக்கவேண்டுமென்பதுகாணப்படுதலின், அதுபோலவே, சுருதிகளுக்கும் நிச்சயித்தவர்களே கருத்தர்களாயிருக்கின்றார்களென்னுஞ்சங்கையை ஒழிக்கின்றார். "வேதத்திற் கருத்தன் ஒருவனுமில்லை" யென்று. சங்கை=ஐயம். அது எங்ஙனமெனில்?

வியாசர் வேதத்தின் கருத்தாவல்லவாம். அவர் அவ் வேதத்தைப் பிரித்தன்மாத்திரையே செய்தமையின். பிரமனும் வேத கருத்தாவன்று. பரமேச்சுரனால் அந்நான்முகனுக்கு வேதங்கள் கொடுக்கப்பட்டமையின். இனி அவ்விறைவனும் வேதத்திற்குக் கருத்தா அல்லனும், அவர்வேதத்தின் றோற்றத்திற்கு நிமித்தனாதலின். இங்ஙனம் மச்சபுராணத்துள்ளும் கூறப்பட்டது. வருமாறு, "అస్యధర్మస్యసర్వజ్ఞః కల్పాదౌపరమేశ్వరః। వ్యంజకః కేవలంవిప్రా నైవకర్తా నసంశయః। బ్రహ్మాణంమునయఃపూర్వం సృష్ట్వాతస్మై మహేశ్వరః। దత్తవానఖిలాన్వేదాన్విప్రా ఆత్మనిసుస్థితాన్। బ్రహ్మణాచోదితోవిష్ణుర్వ్యాసరూపీద్విజోత్తమాః। హితాయసర్వభూతానాంవేదభేదాన్ప్రకాశసః."=இந்தத் தருமத்திற்குச் சருவஞ்ஞனாகிய பரமேச்சுரன் கற்பமுதலில்தோற்றும்படிவெளிப்படுத்துவோன் அவ்வளவேயல்லாமல்கருத்தாவல்லன். வேதியர்களே! இதில், ஐயமில்லை. ஓ! முனிவர்களே! முன்னாளில்மஹேசுரர், பிர்மாவைச்சிருட்டித்து அவன் பொருட்டுத் தன்னிடத்துள்ள எல்லாவேதங்களை

யும் கொடுத்தருளினர். ஓ! வேதபாரகர்களே; கேட்பீர்களாக! ஓ! இருபிறப்பாளரே! பிரமனால் ஏவப்பட்ட விஷ்ணு வியாசர் உருவத்தை அடைந்தவராய், அந்தவியாசர், எல்லாவுயிர்களுடைய இன்பத்தின்பொருட்டு வேதப்பிரிவுகளைச் செய்கின்றார். எ-று. இனி, ஏனையர்க்கோ? வேதத்தின் க்ருத்தாவாந்தன்மை தூரத்தே தொலைக்கப்பட்டது. இவ்விடயத்தில் வேண்டிய நியாயஅளவைமுதலிய எடுத்துக்காட்டுகளை "వేదాపౌరుషేయత్వం" என்னும் அதிகரணத்திற்காண்க.

அற்றேல், (சாஸ்திரயோநித்துவாதி) "శాస్త్రయోనిత్వం" என்னும் அதிகரணத்தில், பிரமத்திற்குப்பேரறிவும், எல்லாம் வல்லமையும் உடைமை வற்புறுத்தும் பொருட்டு வேதத்திற்குக் கருத்தாவாந்தன்மைவியாசரால் "శాస్త్రయోనిత్వాత్" என்ற பிரம சூத்திரத்தினால் குறிப்பிக்கப்பட்டது. இன்னும் அப்பிரம சூத்திரத்திற்றானே அதற்கு விரோதமாய் தேவதாதிகரணத்தில் வேதத்தினது நித்தியத்துவத்தை "* అతఏవచనిత్యత్వం" என்றசூத்

* "నిత్యం" = நித்தியம் என்பது முதலற்றது என்பர்சிலர். முடிவற்றது நித்திய மென்பர் வேறுசிலர். அழிவில்லாதது எதுவோ? அதுநித்தியமென்பது பலர்கருத்து. முதலுமுடிவும், எனவேதோற்றமும் நாசமும் இரண்டுமில்லாதது நித்தியமெனில் வழக்கற்ற தாகவிருக்கின்றது. இவ்விடத்து நையாயிகர், = தருக்கர், ధ్వంసాప్రతియోగిత్వంనిత్యత్వం" என்று இலக்கணம் கூறுகின்றனர். காரியத்தோற்றத்திற்குமுன் "భవిష్యతి" ஆவது என்னும் "ప్రతీతేః"=வழக்கினுக்குச் சான்றாகவுண்டாகியஇல்லாப்பொருள் "ప్రాగభావః (பிராகபாவம்) என்னப்படும். முன்னில்லாமை என்றது. அதற்கு முதலில்லாவிடினும் முடிவுண்டு. ஆதலின் அதுநித்தமல்ல. "ధ్వస్తః." = நாசமுற்றது என்னும் வழக்கினுக்கு இடமாகிய பொருள் "ప్రధ్వంసాభావః." (பிரத்துவம்சாபாவம்) என்னப்படும் = பின்னில்லாமை. அதற்கு முதலிருந்தாலும் முடிவில்லாமையால் அதுநித்தமானது. இதனால் நாசமற்றது நித்தமென்னும் வழக்குண்டாயிருக்கின்றது. இந்த நையாயிகர் மதத்தின்மேல், "ధ్వంసః అనిత్యః కార్యత్వాత్ ఘటవత్." நாசம் அநித்தமானது; அதற்குத் தோற்ற முடைமையின். குடம்போலும், என்னும் அநுமானம் = கருதலளவையின் நிந்தைவருகின்றது. ஆதலால், "ప్రాగభావాప్రతియోగిత్వే సతి." = தோற்றமில்லா திருந்தது. என்ற விசேடணத்தை இலக்கணத்தோடு சேர்க்கின், "ధ్వంస" = நாசத்தினிடத்தில் நித்தியத்துவ விலக்கணத்திற்கு அதிவியாத்தி தோஷம் வருவதில்லை. ஆகலின்முதலுமுடிவுமிரண்டும் இல்லாததுநித்தியமென்பதுவழக்கதென்பர்சிலர்.

திரத்தால் குறிக்கப்பட்டது. இங்ஙனமாஞல் இம்மாறுபாடு எவ்வாறொழியும் எனில் ?

கூறுதும், எழுத்தும், சொல்லும் சிலபொருளும், அவ்விரண்டற்குரியசம்பந்தமுமாகிய இவற்றிற்கும் வாக்கியங்களுக்கும் அநித்தியத்தை, வைசேடிகர், காஞதர்கள், முதலியோர் கூறுகின்றனர். அவர்களைப்பற்றி, அவர்கள்வாதங்களுக்கு மாருக மீமாம்ஸகர், ஜைமினிசூத்திரம் முதல் அத்தியாயம் முதற்பாதத்தில், காலத்திற்கும் ஆகாயத்திற்கும் எவ்வாறே ? அவ்வாறே, ஒலிஎழுத்துக்களுக்குநித்தியத்துவம் கூறியுள்ளனர். "ஸ்வஹஸ்தே ஸ்வஃ:."=நியாயவிவகாரத்தில் பாட்டர் கூறியதே எமக்குடன்பாடு. என்றவாறும் தம்முடன் பாட்டினைவிளக்குவதற்கு வேதாந்த சூத்திரத்தில் தேவதாதிகரணத்தில் அதேவியவகாரிகநித்தியத்துவம் = சாதாரண நித்தியத்துவம், குறிக்கப்பட்டது. அதனல், காளிதாசர்முதலிய வித்துவான்கள் கூறிய செய்யுட்களைப்போல, அருத்தஞானமே முதற்கணுடையதாய்ச் சிலசொற்களைக் கூட்டலும், கழித்தலும், பொருந்துவதாகத் தோற்றியவற்றை நிறுத்தலுமாகிய இச்செய்கைகளை யுடைய தொடர்மொழிச்சுவை=வாக்கியரசனை யில்லாமையால், வேதம் அபௌருஷேயம்=ஓர்புருடனுற் செய்யப்பட்டதன்று; என்பது நியாயத்திற்கு ஒத்தவாறும்.

இனி, பிரமவிவர்த்தத்துவம், (விவர்த்தம் = வேற்றுருக் காட்டுதல்.) = * பிரமமே விவர்த்தோபாதானமாதலையுடைய

---

* பிரமவிவர்த்தத்துவம். எது, வேதத்திற்குப் பிரமம் எப்படிகாரணம்? என்றால், விவர்த்தோ பாதானகாரணம் என்னப்படும். பிரமம் என்னும் காரணத்திற்கு வேதம் எப்படிப்பட்ட காரியமெனில் விவர்த்தகாரியமாம். விவர்த்தம், என்பதற்கு, சாதாரணமாய் வேறுவடிவுஎன்பது பொருள். உதாரணம், இந்திரசால விஞ்சையன், நிராதாரமாக வோர் புதிய வியப்புள்ள உலகைப்படைத்துக் காட்டுகின்றனன் அல்லவா ? அவ்வுலகு அச்சாலவித்தையுடையோனது வேறுவடிவு என்றுசொல்லப்படும். ஆதலால், அவ்வுலகுக்கு அவன் விவர்த்தோபாதான காரணம் என்று கூறப்படும். எனவும். இன்னும், கயிறு, பழுதை என்று உணர்ந்து கொள்ளமாட்டாத மயக்கத்தால் அதனிடத்துப்பாம்பு என்னும் தோற்றமுண்டாய்க் காணப்படுகின்றது. அவ்வாறு யார்குத் தோற்றியதோ ? அவனது விவர்த்தமென்று சிலர்கூறுவர். அம்மதத்தில் அதற்கு அவனே விவர்த்தோ பாதானகாரணம். அங்ஙன

தென்பதாம். ஆகாயமுதலியவற்றிற்குள்ளது போலும், வேதங்களுக்கும் உண்டு; என்று கொண்டு, சாஸ்திரயோநித்துவாதிகரணத்தில், பிரமத்திற்கு வேதத்தின் கருத்தாவாதலுடைமை குறிக்கப்பட்டது. அதனுனே,பட்டபாதாசாரியர்,புருடசம்பந்தமுடையதாயிருப்பினும். சுதந்தரத்தன்மையை முற்றுமொழித்தனர். அதுவருமாறு, "యత్నతః ప్రతిషిధ్యాసః పురుషాణాం స్వతంత్రతా, . "= புருடர்களுடைய சுதந்தரமுடைமை எமக்கு முயற்சியோடும் விலக்கத்தக்கதாயுள்ளது. எ-று. ஆதலால், "స్వతంత్రః కర్తా" என்றது ஆசிரியர் பாணிநியார்சூத்திரம், இதன்பொருள். சுதந்தரமுடையவன் கருத்தா. எ-று. என்னுமிலக்கணத்தால், அமைந்தகருத்தாவேதத்திற்கு ஒருவனும் இல்லை.

"ச", இந்த அவ்வியயம், "ஏவ" என்னும் அவ்வியத்தினுடைய பொருளில்வந்து, சுருதிக்குஞ் ஸ்மிருதிக்கும்உள்ள இலக்கணவேறு பாடுகளை உணர்த்திற்று. சதுமுகன்மநுமுதலிய பல ஸ்மிருதி கருத்தர்கள். இருக்கின்றனரன்றே ? அங்ஙனம் வேதத்திற்குத் தலைவன் ஒருவனுமில்லை. என்பதே இலக்கணவிசேடம்.

"ఇదంశ్రుత్యాచతుర్ముఖః" என்னுந்தொடர் மொழிக்கண்ணேபுராணங்களுடைய அநுஷங்க "நியாயத்தால் இரண்டாம் வேற்

மானல் பலர்க்கு அவ்வாறு தோற்றியபோது, ஒருபிராதிபாதிக சருப்பத்திற்கு = தோற்றப்பாம்புக்கு பலவிவர்த்தோ பாதானகாரணங்களை உடன்படுவது, நூல் வழக்கில் மிகைபடக் கூறல் என்னும் குற்றந் தங்குகின்றது. ஆதலால் அத்தோற்றப்பாம்புக்கு மூலமாகிய பழுதையே விவர்த்தோ பாதான மென்று வேறு சிலர் கூறுவர். அறியாமையாலுண்டாம் பிராந்தி = திரிபுணர்ச்சி பலவாதலால் அவனவனுக்குத் தோற்றிய பாம்பு அவனவனுக்கும் வேறுவேறுஎன்று, அம்மிகைபடக் கூறலென்னும் குற்றத்திற்கு இடனில்லாது சிலர்கூறுவர். எனவும், இன்னும், கனவிற்கண்டதாகிய உலகத்திற்கு அனுபவித்தவனே விவர்த்தோபாதாநகாரணம், அவ்விடத்து அஞ்ஞானமே பரிணும உபாதானகாரணம், ஈசுவரன், அதிர்ஷடம்= சஞ்சிதவினை, முதலியவையே நிமித்தகாரணம். குடத்திற்கு மண்பரிணும உபாதானகாரணம்; குயவன், நிமித்தோபாதாந காரணம்; அதற்கு அதிஷ்டானம் = மூலமாகிய அறிவு விவர்த்தோபாதான காரணம், என்று. அத்துவிதிகள் கூறுவர். ஆதலால், இங்குவேதத்திற்கு ஈசுவரன் விவர்த்தோபாதான காரணம். ஈசுவரன் விவர்த்தமேவேதம். என்பது சாஸ்திர யோநித்துவாதிகரணமொழிக்குத் தாற்பரியமென்று இவ்வுரையாசிரியர் கருத்து. உபாதானம்- இருவகை- விவர்த்தம், பரிணுமம், என, அறிக.

றுமைப் பொருளையடந்த மூன்றுசொற்களையும் தந்துமுடித்துக்கொள்ளல் வேண்டும் " அநுஷங்க " நியாயம், ஆசிரியார் ஜைமினியார் சூத்திரம் இரண்டாம் அத்தியாயம் முதற்பாதத்திற் கூறப்பட்டது.

அங்ஙனமாயின், ஜோதிட்டோமயாகக் கிரியையில், " ఉపసదః. "=உபசத்துக்கள் என்னப்பட்ட உபஹோமங்களில், மூன்று மந்திரங்கள் விதிக்கப்பட்டது. " యాతేఅగ్నే యాశయా౨ జాశయా హరాశయాత నూర్వర్షిష్ఠాగహ్వరేష్ఠోగ్రంవచో అపావధీం త్వేషంవచో అపావధీగ్ స్వాహా. " இவ்விடத்து, " అయాశయా,౨జాశయా, హరాశయా " என்ற பதபேதங்களால் மந்திரபேதமுண்டாகின்றன. அவற்றுள். முதன் மந்திரத்தின் "తనూః" என்பது முதலிய ஏனைய வாக்கியங்களின் வேண்டுகையுள்ளது. ஈற்றுமந்திரம் " యాతేఅగ్నే " என்னும்வாக்கியத்தின்முதலை அவாவிநிற்கின்றது, இடையின்கணுள்ளமந்திரம் முதலையும்முடிவையும் வேண்டி நிற்கின்றது. அவ்விடத்து. இப்படிப்பட்ட சந்தேகமுள்ளது. *

இங்ஙனம் அம்மந்திரத்தால் விரும்பப்ப்ட்டபொருளை நிரப்புவதற்காக லௌகிகம் ஆகிய சிலபதப் புணர்ச்சிகளை " அத்தியாஹாரம் " = வருவித்துக் கொள்ள வேண்டியதா ? (எனவே ஆராய்ந்து வருவித்துக் கொள்ள வேண்டுமா ? என்பது) அங்ஙனமின்றி, வேதத்துள் கூறப்பட்ட பதக்கூட்டங்களையே " அநுஷங்கம் " செய்துகொள்ள வேண்டுவதா ? (அநுஷங்கம் = கொண்டு கூட்டுவது). என்று வினவதுமேல் குறித்த சமுசயத்தின்வடிவம் (சமுசயம் = சந்தேகம்)

வாக்கியத்தினுடையமுதற்பாகத்திற்கு முதல்மந்திரத்தோடு சம்பந்தத்தினாலும், வாக்கியத்தின் முடிவுக்கு இறுதிமந்திரத்தோடே சம்பந்தத்தினாலும், லௌகிக பதம் = உலகமொழிகளை வருவித்துக் கூறிக்கொள்ள வேண்டுவதென்று கூறினால். வருங் குற்றம் யாதெனில் ?

* எனவே முதல்மந்திரத்திற்கு சம்பந்தமில்லாத இறுதிபாகமும், இறுதி மந்திரத்திற்குச் சம்பந்த மில்லாத மந்திர முதற்பாகமும் அநுஷங்கம் = கொண்டு கூட்டுவதிலும் அம்மந்திரத்துள்ள, வைதிகபதம் = வேதமொழிகளை விட்டு உலகமொழிகளை வருவித்துரைக்கலா மென்பது பூருவபக்கத்தார் கருத்து.

அற்றன்று.வைதிகமாகிய வினைக்கள் நேரிடுவதாயின், வைதிக மொழிகளானே முற்றுமுடித்துக் காட்டுவதற்குத் தக்கதாயிருத்தலின், வேறுமந்திரங்களின் சம்பந்த முண்டாகிய சொற்களிலும் தன்னறிவுள்ளமைந்திருத்தலினால் வருவித்துக் கொள்ளத்தக்கசொற்களினும், மிகவும் அண்மைநிலையிலிருத்தலின் கொண்டு கூட்டலே செய்யவேண்டுவது..வருவித்துரைத்தல் அமையாது. அண்மைநிலை = அடுத்துநிற்பது.

இங்ஙனமாக, ஈண்டு, அக்கொண்டுகூட்டலாகிய வழக்கு அமைதியால் "కల్పాంతరే," "ధర్మాన్" "స్మరన్," என்னு மூன்று மொழிகளையும் மூலசுலோகத்தின் பூர்வார்த்தத்தில் கொண்டு கூட்டி முடித்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு செய்தால் சதுமுகன் அந்தந்தமஹா கற்பத்தில் பரமேசுவரனால் கொடுத்தருளப் பெற்ற வேதத்தை ஞாபகஞ்செய்து, அவற்றுள், சிதறிக் கிடப்பனவும் தவறிவிட்டனவு மாகிய வருணாச்சிரம தருமங்களைச் சேரத்திரட்டி ஸ்மிருதியாகிய தருமநூல்வடிவாய் வகுத்து யாத்தனர். (யாத்தல்=ஈண்டு செய்யுளாகக் கட்டுதல்) அவ்வாறு, "பிதாமகன்" மொழிகளும் அவ்வவ்விடங்களில் பலவுரையாசிரியர்களால் உதகரிக்கப் படுகின்றன. சதுமுகனது ஸ்மிருதிநூலாசிரியத்தன்மை, சுவாயம்புவ மநுவினாலும் கூறப்பட்டது.

வருமாறு, "ఇదంశాస్త్రంతుకృత్వా సౌమామేవస్వయమాదితః। గ్రాహయామాసమరీచ్యాదీనహంమునీన్" =இந்த சதுமுகப்பிரமன் தானுக முதற்கண் இந்நூலைச்செய்து, விதிப்படி, என்னையே கொள்ள வைத்தார். நான், மரீசிமுதலியமுநிவர்களைப்பயிற்றினேன். எ-று.

## தருமம்வெள்ளம்போலு நித்தமென்பது.

எவ்வாறு, சதுமுகனே? அவ்வாறேசுவாயம்புவமநுவும்அந்தந்த அவாந்தரகற்பம் = இடையிட்ட சிறுகற்பங்களிலும் வேதத்தாற் கூறப்பட்ட தருமங்களை ஞாபகஞ்செய்து, நூல்யாத்து வகுக்கின்றனர். மநுஎன்னும் மொழியைக் கொண்டு கூறியதால் ஈண்டு, யாஞ்ஞவற்கியர், விஷ்ணு, முதலியோர்கள், உபலக்ஷிக்கப் படுகின்றார்கள்(எனவே,உபலக்கணத்தாற் கொள்ளப்படுகின்றார்கள் என்பது). ஆதலால, இவ்வண்ணமாக ஒவ்வொரு மஹாகற்பத்திலும், அந்தந்த சதுமுகப் பிரமர்களாலும், ஒவ்வொரு

இடையிட்ட சிறுகற்பத்திலும் அந்தந்த மநுமுதலியவர்களாலும் ஸ்மிருதிகள் கூறப்பட்டதனால், தருமமுதலியவற்றிற்கு வெள்ளப் பெருக்கே போலும் நித்தியத்தன்மை நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. இக்கருத்தை யுடன்பட்டு, மஹாபாரதம் அசுவமேத பருவத்தில், கூறப்பட்டதாவது. "యుగేష్వావర్తమానేషు ధర్మోప్యావర్తతే పునః। ధర్మేష్వావర్తమానేషు లోకోప్యావర్తతే పునః." யுகங்கள்சுற்றி வட்டமிட்டுக்கொண்டு வருகையில், மீட்டும் தருமமும் வட்டமிட்டு வருகின்றது. தருமங்கள் வட்டமிடுகையில், மறுபடியும் உலகமும் வட்டமிடுகின்றது. எ-று; காண்க. யுகபேதத்தால் தருமவிசேட விலக்கணத்தை யுடன்பட்டு "ధర్మాః" எனப் பன்மையாற் கூறினார். (௨௪)

## யுகபேதத்தாலுள்ள தருமவிசேடம்வருமாறு.

శ్లో॥ అన్యేకృతయుగేధర్మాస్త్రేతాయాంద్వాపరేయుగే।
అన్యేకలౌయుగేనౄణాంయుగరూపానుసారతః ॥౨౫॥

என்றது. அந்தவிசேட விலக்கணத்தை நான்முகமாக வுணர்த்து கின்றது.

(இ-ள்.) கிருதயுகத்தில் மனிதரின் தருமங்கள்வேறு. திரேதாயுகம், துவாபரயுகம் கலியுகத்துள்ளும் வேறுவேறு. அவை அந்தந்தயுகங்களைஅநுசரித்து ஏற்றபடி இருக்கும். எ-று.

ஈண்டு, வேறு என்பது தருமவடிவத்தை வேறு என்றதன்று. பிறவெனின்,தருமத்தின் செய்கைவேறு என்றவாறு. இங்ஙனமில்லையேல், அத்தருமங்களில், பிரமாணங்களாயிருக்கின்றவேதவிதியும், யுகபேதங்களால், வேறுவேறுபடவேண்டியதாகமுடியும் ஆதலால். அங்ஙனமன்று. வேதத்துள்ள இவ்விதி, கிருதயுகத்தில் இவ்வாறு ஓதல்வேண்டும். இதுதிரேதாயுகத்தில், என்பனமுதலிய வகைமைகளை வகுக்கும் வகைப்பாடுகளில்லை. ஆகலின் தருமவடிவத்திற்கு எப்பொழுதும் வேறுபாடில்லை.

யுகபேதத்தால், தருமத்தின் செய்கை வேறுபடுவதற்கு எடுத்துக்காட்டு உள்ளது. (எடுத்துக்காட்டு = திஷ்டாந்தம்.) ஒரே.வேள்வித்தீக் காரியத்திற்குக் காலை மாலை என்னும் காலபேதத்தால் அநுட்டானஞ் செய்யுமுறை வேறுபடுவது வேதத்தாற்

கூறப்படுதலின், வருமாறு, "ఋతంత్వాసత్యేనపరిషిఞ్చామీతిసాయంపరిషిఞ్చతి। సత్యంత్వర్తేనపరిషిఞ్చామీతిప్రాతః." = "పరిషిఞ్చతి." = "పరిషేచనం." = ஓமத்தீ, அவிசு, நிவேதநப்பொருள், உண்டியங்கம், இவற்றிற்கு நீர்வளை யக்கட்டுதலாம். உண்மையான உன்னை சத்தியத்தால் அவ்வள வில் நினைக்கின்றேன். என்ற பொருளினையுடைய மந்திரத்தைக் கூறி மாலையில் பரிஷேசநம் செய்கின்றான். சத்தியமாகிய உன்னை யதார்த்தத்தினால் அவ்வளவில் நினைக்கின்றேன். என்றபொருளினை யுடைய மந்திரத்தைக்கூறி காலையில் பரிஷேசனம் செய்கின்றான்- எ-று. இது கிருஷ்ண யஜுஸு பராயாதம் வாக்கியக் கிரந்தத்துட் கூறியது. (அவற்றை முறையேகாலை, சூரியன் முன்னிலையிலும், மாலை, தீமுன்னிலையிலும்கூறுப.)

இனி அவ்விடத்தில் அருத்தவாதத்தால், மந்திரம் வேறு வகையாற் கூறப்பட்டுள்ளது. வருமாறு "అగ్నిర్వావృతం। అసావాదిత్య స్సత్యం। అగ్నిమేవతదాదిత్యేనసాయంపరిషించతి। అగ్నినాదిత్యంప్రాతి స్సహ." = அக்கினி யதார்த்தவடிவனென்பது உலகறிந்தது. இச்சூரியன் சத்தி யம். ஆதலால், அக்கினியையே சூரியனால் சாயுங்காலத்தில் பரி ஷேசனம் செய்கின்றான். சூரியனை அக்கினியோடுகாலையில். எ-று.

ஆயின், ஈண்டும், இவ்வாறு "యుగధర్మానుసారతః" என்பத னால் யுகதருமத்தை அநுசரித்து, தரும அநுட்டானத்தின் செய் கை வேறுபாடு முற்றுகின்றது.

யுகங்களின் வடிவம், அநுட்டிப்பவர்களாகிய புருடரின் ஆற் றலின் ஏற்றத்தாழ்ச்சியின்படி, கூடிக்கொண் டிருக்கின்றது. அத னைப்பற்றி அநுட்டானத்துள் ஒவ்வாமைநேரிடுகின்றது. எவ் வளவு வல்லனாவனோ? அவ்வளவு செய்வன். என்று நித்தகருமங் களில் நிச்சயித்திருத்தலின்.

அற்றேலற்றாக. பூருவமீமாம்ஸம். ஜைமினிசூத்திரம், ஆறா வது அத்தியாயம் மூன்றாம்பாதத்துள் கூறப்பட்டதாவது. "యావ జ్జీవమగ్నిహోత్రంజుహుయాత్" = பிழைத்துள்ள வரையில் வேள்விக் காரியம் செய்யவேண்டும். எ-று. எனவேதத்தாற் கூறப்பட்டது. ஆயின் ஆண்டு ஐயமுள்ளது. என்னை? எல்லா அவயவங்களோடு மே செய்துமுடிப்பதில் அதிகாரமோ? அல்லது, எப்போது, எவ்வளவு அவயவங்களைக் கொள்வதில் சத்தனாகின்றானோ? அப்

போது, அவ்வளவு அவயவங்களோடு கூடிக்கொண்டிருக்கின்ற முக்கியகருமங்களைச்செய்பவனுகி அதிகரிக்கின்றனே? என்று.

ஆயின் எல்லா அங்கத்தோடும் கூடியமுக்கிய சருமங்களே பயனுக்குச் சாதனமாதலினுனும், அங்கங்களில், வைகல்லியம்= தவறுதல்உண்டாறுற் பயன் பிறவாமையினுனும், எல்லா அங்கங்களையும் ஏற்றுக்கொள்வது தக்கது எனில்?

அங்ஙனமன்று, இவ்விடத்து, பிழைத்திருப்பது, வேள்வியின் பொருட்டே என்று விதிக்கப்பட்டது. அன்றி, அதனது அங்கங்களைப் பற்றியன்று. ஆகலின். நிமித்தம் ஒன்றுனல் நைமித்திகம் அவசியமாயினு மாக; அங்ஙனமில்லையேல், அதற்கு நிமித்தமாந் தன்மையே யுண்டாதலில்லையாம். ஆதலால், செய்து முடிக்கலாகாத அங்கங்களை ஒழித்தாலும் முக்கியமானதை ஒரு தலையாகச்செய்தல் வேண்டும். அவ்வளவினுனே சாஸ்திரப்பிரமாணத்தால் பயனுண்டாகின்றது. என்பது நிச்சயப் படுகின்றது.

இன்னும் இக்கருத்தைப் போதாயநரும்குறித்திருக்கின்றனர். வருமாறு. "యథాశక్తంచిన్నిత్యానిశక్త్యవస్థానురూపతః। యేనకేనాపికార్యాణి నైవనిత్యానిలోపయేత్." = சத்தி=ஆற்றல், அவஸ்தை=பருவம் இவற்றிற்குத் தக்கவாறு, எவ்வளவு முயற்சியாவதுபட்டு எவ்வகையாலாயினும் நித்தகருமங்களைச் செய்யவேண்டும். உலோபம் செய்யலாகாது=விடலாகாது-எறு. புருடர்களுடைய ஆற்றலின் ஏற்றக்குறைவால் செய்யப்பட்டது, அநுட்டானத்தினுடைய வைஷம்மியமாம். (வைஷம்மியம் = வேற்றுமை.) என்று கூறவேண்டி "నృణాం" = மனிதர்க்கு. என்று கூறப்பட்டது. (உஉ௯)

## யுகதருமபேதங்கள்வருமாறு.

శ్లో॥ తపఃపరంకృతయుగే త్రేతాయాంజ్ఞానముచ్యతే।
ద్వాపరేయజ్ఞమిత్యాహుర్దానమేకంకలౌయుగే ॥౨౩॥

என்பது. பின்பு, பிரதிஞ்ஞை செய்யப்பட்ட = வைலக்ஷணியங்களை= விசேட விலக்கணங்களை ஆறுசுலோகத்தான் முறையே கூறுகின்றுர். அவற்றுள், நான்குயுகங்களி னிடத்தும் முக்கியத்தன்மையால் அநுட்டானம் செய்யும் பொருட்டு, இனிது

முடியத்தக்கவாயும், மேலான புருடார்த்தங்களுக்கு ஏதுவாயும் உள்ளதருமங்களைப் வகுத்துக் கூறுகின்றது.

(இ-ள்.) கிருதயுகத்தில், தவமே சிறந்தது. திரேதாயுகத்தில், ஞானமுயர்ந்தது. துவாபர யுகத்தில், வேள்வி உத்தம மானது. கலியுகத்தில், தானமே முக்கியமா யுள்ளது. என்று உணர்ந்த பெரியோர் கூறுகின்றனர். எ-று.

தவம், என்பது, * "கிருச்சிரவிரதம்." † சாந்திராயணவிரதம், முதலியவற்றால் உண்டிவெறுத்தல். என்னை? "తపో నానశ నాత్పరం" = உண்டியை வெறுத்தொழித்தலினும் சிறந்த தவம் இல்லை - எ-று. இது கிருஷ்ணய ஜுஸு, அஉ - வது, பிரசிநம். அங்ஙனமாயினும், தானத்திற்கும் தவமாந்தன்மையும் விதிக்கப்பட்டது. என்னை? "ఏతత్ఖలువాహతపోయద్దానం." = தன்னுடைய உடைமையாகிய தனத்தைக் கொடுக்கின்றான் என்பது எதுவோ? அதனையன்றோ? தவமென்று கூறுகின்றனர். எ-று. இங்ஙனம் சுருதி, கூறினும், இங்கு அது சொல்லக் கருதியவா றல்லவாம். தானத்தை வேறு கூறியிருத்தலின்.

ஆயினும், வியாசரால், தவம் வேறுவிதமாகக் குறிக்கப்பட்டது. வருமாறு. "తపస్స్వధర్మవర్తిత్వం శౌచంసంకరవర్జనం." = தனக்குரியதருமத்தில் இருப்பதேதவம். வேற்றுக்கலப்புஇல்லாததேசுத்தி. எ-று. என்னெனில்? இது குற்றமன்று. கிருச்சிரமுதலியவையும் தனக்குரியதரும விசேடமாகவே யிருத்தலின். "తపఃసంతాపః." =

---

* கிருச்சிரம் - எது. இத்தனைகாலம்வரையில், இன்னஉணவை, இவ்வளவு, இந்தமுறையாலேகொண்டு, அவ்வளவிலே பிராணனைத் தரிக்கச்செய்து பசியைப்பொறுத்தல் என்பதுமுதலிய இலக்கணத்தோடு பிராயச்சித்தகாண்டத்திற் கூறப்படும் விரதவிசேடங்கள். அது, பிராஜாபத்தியம், பராகம், சாந்தபனம், தப்தம்முதலிய பெயர்களையுடையன.

† சாந்திராயணம்-எது. ஒருதிங்கள்வரையும் செய்யத்தக்க உண்டி இவ்வளவு என்னும் வரையறையுடைய விரதம். திங்கள் = மாசம். இது பூரணை முதல் மறுபூரணைவரையிலும் செய்யத்தக்கது எனவும், அமாவாசை முதல் மறுஅமாவாசை வரையிலும் செய்யத்தக்கது எனவும்இருவகைப்படும். கிருஷ்ணபக்ஷம்=தேய்பிறையில் உணவைக்குறைப்பது. சுக்கிலபக்ஷம்=வளர்பிறையில் உணவை விருத்தி செய்வதுமாம். இதுவும் பிராயச்சித்த காண்டத்தில் கூறப்படும்.

"తప" என்னும்தாதுவிற்கு "సంతాపే" என்பது புலர்த்தல் = சுடுதல்=வற்றச்செய்தல் என்பது பொருள். இது" தாதுபாடம்" இந்தப் பகுதியிற் பிறந்த "తపః" என்னும் மொழிக்குத் தேகத்தை வற்றச் செய்வது என்னும்பொருளில் ஆற்றல் மிக்கது. அதனாலேயே ஸ்காந்தத்துள்ளுங்கூறப்பட்டது. வருமாறு. "వేదోక్తేనప్రకారేణ కృచ్ఛ్రచాంద్రాయణాదిభిః। శరీర శోషణంయత్తత్తప ఇత్యుచ్యతేబుధైః." =வேதத்துட்கூறப்பட்டவகைமையால், கிருச்சிரமம் சாந்திராயணம்முதலியவிரதங்களால்இவ்வுடம்பினைவற்றச் செய்வதே தவமென்று அறிவுடையோராற் கூறப்படுகின்றது.எ-று.

"కోహంమోక్షఃకథంకేన సంసారంప్రతిపన్నవాన్। ఇత్యాలోచనమర్థజ్ఞాఃతపశ్శంసంతి పండితాః." = இவன்யார்? மோக்ஷம்எப்படி? சமுசாரத்தை எவ்வாறு அடைந்தான்? என்று ஆராய்வதையே பொருளையுணர்ந்த அறிஞர்கள், தவம் என்றுபுகழ்ந்து கூறுகின்றனர். என்றவாறுக யாதுகூறப்பட்டதோ? அது வேறேயாம். ஆண்டு "తపఆలోచనే." "తప" என்னும் பகுதிக்கு ஆராய்ச்சி என்னும்பொருள். ஆதலால் அப்பகுதியா லீண்டுக் கூறியதவம் என்னுமொழியாக்கம் பிறந்துள்ளது. இது (பாணிநிவியாகரணம் தாதுபாடத்திற் கண்டது). அங்குதவம் என்றது இங்கு ஞானமென்னு மொழியாற் றெருக்கப்பட்டிருக்கின்றது. (அங்குஎன்றது திரேதாயுகம்என்றபடி) "పరం," என்னுமொழி முக்கியமாக அனுட்டிக்கத் தக்கதென்னும் பொருளைத் தருகின்றது.

ஆனால், திரேதாதியுகங்களில்,தவம்என்பது ஆதரிக்கப்படாதொழியும்? கிருதயுகத்திலும், ஞாநம், வேள்வி, தானங்களை ஆதரணை செய்யாதுவிடுவார், எனில்? அங்ஙனமன்று.

வேறுசெய்யலாகா, இஃதொன்றனையே செய்தல்வேண்டும் என்னும் வரம்பிட்ட நியமம் இவ்விடத்துச் சொல்வதற்கு எண்ணமல்லவாதலின். ஈண்டுஒருஅநுட்டானவிதியாவது?சொல்லத் தொடங்கியதில்லையன்றே. எந்தக் காரணம்பற்றி விதிவாக்கியத்தினால் விதிக்கப்பட்டிருக்கின்றதோ? அதன்கணெழுந்த ஐயத்தையொழிக்கும்படி, அதன்பொருளைக்கூட்டி முடிப்பதற்குக் கூறவேண்டிய எண்ணிட்ட வரம்பு இவ்விடத்து எண்ணிடப்பட்டது எனில்? "షట్కర్మాభిరతః,, அறுவகைத்தொழிலினும் அசத்தனு

யிருத்தல் வேண்டும். என்பதுமுதலியவற்றால் அதனதுதோற்றம் முன்னர்க்கூறப்படும். இவ்விடத்திலோ ? யுகவல்லமையை மாத்திரம் விளக்கப்படுகின்றது. என்னை ? இளவெனில் = வசந்தகாலத்தில் பூக்களின் விசேடம், முதுவேனிலில், வெப்பமிகுதி, என்று இவ்வாறு பருவபேதங்களின் ஆற்றல் கூறுவது போலும், கிருதமுதலிய யுகங்களின் வல்லபத்தால் தவம் முதலியவற்றின் ஏற்றப்பாடு இவ்விடத்துச் சொல்லவேண்டியிருக்கின்றது. ஆதலாலே, யுக யுகத்திற்கு முரிய வல்லபமிது என்று கூறப்பட்டது. இந்த வல்லமையைத்தெரிந்து கொள்வதினால் வரும்பயனையும் மேற்கூறுவர். "తేషాంనిందానకర్తవ్యాయుగరూపాహితేద్విజాః" என்று. இவ்வாற்றலே பிரகற்பதியும் கூறித்திருக்கின்றனர். "తపోధర్మఃకృతయుగే జ్ఞానంత్రేతాయుగేస్మృతం। ద్వాపరేచాధ్వరఃప్రోక్తస్తిష్యే దానందయాదమః." = கிருதயுகத்தில்தவமேதருமம், திரேதாயுகத்தில் ஞானமாகக்கூறப்பட்டது. துவாபரயுகத்தில் வேள்வியைக்கூறப்பட்டது கலியுகத்தில், தானம். தயை, தமம்=பொறிவழிசொல்லாது புலன்களையடக்கல் தருமம். எ-று. காண்க. (உ௩௭)

## யுகபேதத்தாற்பிரமாணபேதமாமாறு.

శ్లో॥ కృతేతుమానవాధర్మాః త్రేతాయాంగౌతమాస్స్మృతాః
ద్వాపరేశంఖలిఖితాః కలౌపారాశరాస్స్మృతాః ॥౨౪॥

என்பது. தருமங்களைப் பிரித்து, பிரித்தமுறையே அவற்றிற்குரிய பிரமாணங்களையும் வகுக்கின்றது.

(இ-ள்.) கிருதயுகத்தில் மநுதருமநூலும், திரேதாயுகத்தில் கௌதமதருமநூலும், துவாபரயுகத்தில் சங்கலிகித தருமநூலும் கலியுகத்தில் பராசர தருமநூலும் பிரமாணங்களாக விருக்கின்றன. எ-று.

மநுமுதலிய நூல்களிற் கூறப்பட்ட தருமங்களினுடைய பெருவழக்கத்தினால் நூற்பிரமாணத்தினுடைய விளக்கமும் அதன் அருத்தத்தினாலே தேற்றப்படுகின்றது. (உ௪௭)

## காலம்பற்றியிடத்தால் விளையுங்குற்றம்.

శ్లో॥ త్యజేద్దేశంకృతయుగే త్రేతాయాంగ్రామముత్సృజేత్
ద్వాపరేకులమేకంతు కర్తారంతుకలౌయుగే ॥౨౫॥

என்பது. தருமத்தைப் போலவே அதருமத்தையும் கூற வேண்டுதலால், அதனை அடைவிக்கும் இடவிசேடத்தை விலக்கு முகமாகப் பிரித்துக் கூறுகின்றது.

(இ-ள்.) கிருதயுகத்தில் பாவஞ்செய்தவனிருக்குந் தேயத்தையே விட்டொழிய வேண்டும். திரேதாயுகத்தில், அப்படிப் பட்ட கிராமத்தை விட்டொழிய வேண்டுவது. துவாபரயுகத்தில் அப்பாவியின் குடிவழி ஒன்றினைமாத்திரம் விட்டொழியவேண்டியது. கலியுகத்தில் அப்பாவியை மாத்திரம் விட்டொழிதல் போதுமானதாக விருக்கின்றது. எ-று.

பதிதனாகிய புருடன் எந்தநாட்டில், இருக்கின்றானோ? அப்படிப்பட்டவன் செய்தபாவத் தொழிலின் ஆற்றலால் அந்தத்தேயமே அதருமத்தை விளைக்கின்றது. இந்நியாயத்தைக்கிராமத்திற்குங் கூட்டி யுரைத்துக்கொள்க. பதிதன் = தரும வொழுக்கங் கெட்டவன். இனி குலத்தை விட்டொழிவது என்றால், பதிதனுடைய கால்வழியில் மணவினை உணவுவினை முதலியவற்றிற்குத் தரும சீலர்கள் உடன்படலாகாது. பாவியைவிட்டொழிதலாவது, அவனோடு பேசுதல் பழகுதல் முதலியவற்றை யொழித்தல். (உ௫௭)

## ஒழிக்கத்தக்க பாவங்களினது நிமித்தவகை.

శ్లో॥ కృతేసంభాషణాదేవ త్రేతాయాంస్పర్శనేనచ
ద్వాపరేత్వన్నమాదాయ కలౌపతతి కర్మణా ॥௨௬॥

என்பது, விடத்தக்க இடமுதலியன போல ஒழிக்கத்தக்க ஏதுக்களையும் வகுக்கின்றது.

(இ-ள்.) கிருதயுகத்தில் பதிதனோடு பேசுதலினாலும் திரேதாயுகத்தில் அவனைத் தொடுதலாலும், துவாபரயுகத்தில், அவனதுகை யுணவைப் புசித்தலாலும், கலியுகத்தில், தான்பாவ கருமங்களைச் செய்தலினாலும், மனிதன் பதிதனாகின். எ-று.

கிருதமுதலிய யுகங்களிலேஆவதுபோலக்கலியுகத்தில்பதிதனோடு பேசுதல் முதலியவற்றால் தான்பதி தனாவதில்லை. பிறவெனில்? கொலைமுதலிய தீவினைகளைச் செய்தலால் பதிதனாகின்றான். எ-று. (உ௬௭)

## சாபம்பலிக்குங்காலபேதம்வருமாறு.

శ్లో॥ కృతేతత్‌క్షణికశ్శాపస్త్రేతాయాందశభిర్దినైః
ద్వాపరేచైకమాసేనకలౌసంవత్సరేణతు ॥౨౭౪॥

என்பது, பெரியோர்களை அவமதித்தல் முதலியவற்றில் அவராற் சாபமுண்டானால் அதுபக்குவப்பட்டு அத்தீயவினை செய்தவனுக்குத் துன்பப்பயனைக்கொடுப்பதற்கு ஏற்றகாலத்தை வகுக்கின்றது.

(இ-ள்.) கிருதயுகத்தில் சாபமானது அதேகணத்திலும், திரேதாயுகத்தில் பத்துநாளிலும், துவாபரயுகத்தில் ஒரு திங்கள் அளவிலும், கலியுகத்தில் ஒருவருட அளவிலும் பலிக்கும். எ-று. உஎ௪.

## தருமத்தின்ஏற்றக்குறைவுக்குரியநிமித்தம்.

శ్లో॥ అభిగమ్యకృతేదానంత్రేతాస్వాహూయదీయతే
ద్వాపరేయాచమానాయసేవయాదీయతేకలౌ ॥౨౭౫॥

என்பது, தருமத்தின் ஏற்றக்குறை வினுகரு நிமித்தங்களை வகுக்கின்றது.

(இ-ள்.) கிருதயுகத்தில் கொடுப்பவன் ஏற்பவனிடஞ்சென்று கொடுத்துவருவன். திரேதாயுகத்தில் தனே அழைப்பித்துக் கொடுப்பன். துவாபரயுகத்தில் வந்து இரந்தவனுக்குக் கொடுக்கின்முன். கலியுகத்தில் காத்தவனுக்குக்கொடுக்கின்முன். எ-று.

கிருதயுகத்தில் ஏற்பவன் எங்குள்ளானே ? கொடையாளன் அங்குதானுக வலிதிற்சென்று, தனது ஆசிரியனைப்போல அவனை உபசரித்து வேண்டித் தானத்தைக் கொடுக்கின்முன். திரேதாயுகத்தில் ஏற்பவனைத் தன்னிடத்திற்கு அழைப்பித்துத் தானத்தைக் கொடுத்தனுப்பு கின்முன். "త్రేతాను"=இவ்விடத்துப் பன்மையீறு, கிருத துவாபர கலியுகத்துள்ள ஒருமை யீற்றுக்குச் சாதிஒருமையைக் குறிக்கின்றது, துவாபரயுகத்தில். ஏற்பவன் தானேவந்துஇரந்தபோது, கொடுக்கப்படுகின்றது. கலியுகத்தில், அங்ஙனம்வந்து கேட்டளவிலேயன்று. பிறவெனில் ? அடுத்துக் காத்தலால், என்றுணர்க. பிரகற்பதியும் இங்ஙனம் கூறினர்.

"కృతెప్రదీయతేగత్వా త్రేతాస్వాహ్వయతేగృహే। ద్వాపరేచప్రా ర్థనయాత్ కలావనుగ మాన్వితః ,,=கிருதயுகத்தில்சென்று கொடுக்கப் படுகின்றது. திரேதத்தில் அழைத்துவரப்படுகின்றான். துவாபரத்தில் வந்துவேண்டுவானுக்கு. கலியில்செவிப்பவன். எ-று. காண்க. (உஅ௯)

## நிமித்தத்தாலுண்டாகிய தானத்தின் அளவு.

శ్లో॥ అభిగమ్యోత్తమందానమాహూయైవతుమధ్యమం।
అధమంయాచమానాయ సేవాదానంతునిష్ఫలమ్ ॥२९५॥

என்பது. காரணம் பற்றிச்செய்த கொடையின் ஏற்றக் குறைவாகிய அளவையுணர்த்துகின்றது.

(இ-ள்.) வலிது சென்று கொடுக்கும் கொடையேதலைப்பட்டது; அழைத்துக்கொடுப்பது இடைப்பட்டது; கேட்டபின் கொடுப்பது கடைப்பட்டது; காத்தபின்கொடுப்பது பயனற்றது. எ-று.

தலைப்பட்டது முதலிய உட்பிரிவுகள் புராணசாரமென்னும் நூலில், பயன் முன்னிலையாகக் கூறப்பட்டது. வருமாறு, "గత్వాయద్దీయతేదానం తదనంతఫలంస్మృతం। సహస్రగుణమాహూయ యాచితంతు రర్థకం। అభిగమ్యతుయద్దానం యద్వాదానేప్వయాచితం। విద్యతేసాగరస్యాంత స్తస్యాంతోనైవవిద్యతే. ,, = சென்றுகொடுக்குந் தானத்திற்குப் பலம் அளவிறந்தது; அழைத்துக் கொடுக்குந் தானபலம் ஆயிரமடங்காம்; கேட்டுக்கொடுக்குந் தானபலன் அரைப்பங்காம், கடலுக்கு முடிவுண்டு, சென்று கொடுத்து வரும் தானத்திற்கும் கேளாமலே கொடுக்குந் தானத்திற்கும் முடிவில்லையாம். (உ௯௯)

## கலிவல்லமை.

శ్లో॥ జితోధర్మోహ్యధర్మేణసత్యంచైవానృతేనచ।
జితాశ్చోరైస్తురాజాన స్త్రీభిశ్చపురుషాః కలౌ ॥३०५॥

శ్లో॥ సీదంతిచాగ్నిహోత్రాణి గురుపూజాప్రణశ్యతి।
కుమార్యశ్చ ప్రసూయంతే తస్మిన్కలియుగేసదా ॥३०५॥

என்பன இந்நூலுள் கலிதருமத்தையே சிறப்புவகையாகக் கூறுவராதலின் முன்னர் அக்கலியின் ஆற்றலை விசேடமாக விரித்துணர்த்துகின்றது.

(இ-ள்.) கலியுகத்தில் தருமம் அதருமத்தாலும், உண்மை பொய்யினுலும், அரசர்கள் கள்ளராலும், புருடர்கள் மாதர்களாலும், வெல்லப்படுகின்றுர்கள். வேள்வித்திக்காரியம், மிருத்துள்ளது வரவரத்தேய்ந் தொழிந்து போகின்றது. குருபணிவிடை அழிந்து போகின்றது. கன்னிகைகள் பிள்ளைகளைப் பெறுகின்றுர்கள். அக்கலியுகத்தில் எப்போதும் இவ்வாறும். எ-று.

அதருமம் வெல்லுகின்றது என்றுல் முக்காற்பங்கு பாவமாகவே யிருக்கின்றது. தருமம்தோற்றுப் போகின்றது எனில்? காற்பங்கு புண்ணியமிருப்பது. அதனை பிரகற்பதியும் கூறினுர். வருமாறு, "త్రిపాద్యధర్మశ్చక్రే పాదైకో ధర్మసంస్థితః" கலியுகத்தில் பாவம், மூன்று காலினுலும், அறம் ஒருகாலினுலு நிற்கின்றது. எ-று. சத்தியம், பொய், என்பன தருமம், பாவம், என்பவற்றின் வடிவாகவே யிருப்பினும் வேறுபிரித்தது யாதுகுறித்தற் கெனில்? தருமம் அதருமம் என்பன இதுவென்று எடுத்துக் காட்டும் பொருட்டு. எவ்வளவு எவ்வள்வு கலிவிருத்தி அடைகின்றதோ? அவ்வளவு அவ்வளவு பாவமும் விருத்தியடையும். என்று கூறவேண்டி கள்ளர்முதலிய உதாரணங்களை விரித்துக் கூறினர். அங்ஙனம், விஷ்ணு புராணத்துள்ளும் கூறப்பட்டது. வருமாறு, "యదాయదా సతాంహాని ర్వేదమార్గానుసారిణాం। తదాతదా కలేర్వృద్ధి రనుమేయా విచక్షణైః। నప్రీతిర్వేదవాదేషు పాషండేషుదయారసః। తదాతదా కలేర్వృద్ధి రనుమేయా ద్విజోత్తమైః = வேதவழியைத் தொடர்ந்து நடக்கும் பெரியோர்களுக்கு எப்போதெப்போது கெடுதிவருகின்றதோ? அப்போது அப்போது கலி உயர்ந்தது என்று அறிவுடையோர் மதித்தறிய வேண்டுவது. மக்களுக்கு வேதவொழுக்கத்தில் இச்சையொழிந்துபோனுலும், பாசண்டர்மேல் தயவுடைமை பிறந்தாலும் கலிவிருத்தியாயிற்று என்று, அறவோராகிய அந்தணர் அறிவார். எ-று. காண்க.

(௩கஉ)

## யுகதருமபேதங்களுக்குக்காரணம்.

శ్లో॥ కృతేత్వస్థిగతాఃప్రాణా స్త్రేతాయాంమాంసమాశ్రితాః।
ద్వాపరేరుధిరంచైవ కలౌత్వన్నాదిషుస్థితాః॥　　　3౫॥

என்றது. கிருதயுகத்தில் தவஞ்சிறந்தது என்றதுமுதலியனவாக மேற்கூறப்பட்டுள்ளனவற்றிற்குக் காரணங் கூறுகின்றது.

(இ-ள்.) கிருதயுகத்தில் உயிர் உடம்பிலுள்ள எலும்பு அழியாமலிருக்குமளவு மிருக்கின்றது; திரேதாயுகத்தில், அது அவ்வுடம்பின் தசையில் நிற்கின்றது; துவாபரத்தில், இரத்தத்திலே; கலியில் சோறு முதலியவற்றுள் இருக்கின்றது. எ-று.

## பிராணசொரூபவிசாரம்.

"ప్రాణాః"=பிராணன் எது. இதயமுதலிய தானங்களிலிருப்பதும், ஐவகைத் தொழிலையுடைய தாகியதோர் காற்றின் விசேடம். இனி அந்தப்பிராணனதுவடிவு "மைத்திரேயசாகை"யில்விளங்க விதிக்கப் பட்டது. வருமாறு, "ప్రజాపతిర్వా ఏకో౽గ్రేతిష్ఠత్ సనారమతైకస్సఆత్మాన మభిధ్యాయద్బహ్వీఃప్రజాఅసృజతతా అస్యైవాప్రబుద్ధా అప్రాణాస్థాణురివసంతిష్ఠ మానాఅపశ్యత్ సనారమత్ సో౽మన్యత ఏతాసాం ప్రతిబోధనాయాభ్యంతరం విశానీతిసవాయుమివాత్మానం కృత్వాభ్యంతరంప్రావిశత్ సఏకో నాశకత్ సపంచధాత్మానంప్రవిభజ్యోచ్యతే - యఃప్రాణో౽పాన స్సమాన ఉదానో౽వ్యానఇతి - అథయో౽య మూర్ధ్వముత్క్రామయతి ఏషవావసప్రాణః అథయో౽యమవాచం సంక్రామతిఏషవావసో౽పానో౽థ యో౽యంస్థవిష్ఠమన్న ధాతుమపానేస్థాపయతి అణిష్ఠం చాంగేసమాన యత్యేషవావసమానో౽థ యో౽యంపీతా శితముద్గిరతినిగిరతి ఏషవావస ఉదానో౽థ యఏతాస్సిరా అనువ్యాప్త ఏషవావసవ్యానః." = முதலில் பிரசாபதி ஒருவனே, தன்னைத்தானே யெண்ணிக்கொண் டிருந்தான். அவன் களிக்க வில்லை. (அதனால்) அநேகமுயிர்களைப் படைத்தான். அவ்வுயிர்கள் சத்தியில்லாமலும் எழுந்திருக்காமலும் கல்லைப்போற்கிடக்கக் கண்டான். அவனுக்குக் களிப்புண்டாக வில்லை. இவற்றை உயிர்ப்பிக்கும்படி இவற்றுள் நானேபுகுவேன் என்று சிந்தித்தான். அவன் தன்னைக்காற்றாகச்செய்து உட்புகுந்தான். அவன் ஒருவனால் முற்றும் வல்லவனாகாதவனானான். (பின்) அவன் ஐவகையாகத்தன்னைப்பிரித்து, பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், என்று கூறப்பட்டான். அவற்றுட்பிராணன், உள்வளிமேலெழுந்திருத்தல். (உள்வளி = மூச்சு) அபானன், அதனை கீழ்நோக்கச் செய்தல். சமானன், உண்டவுணவினது தூலத்திற்கழியத்தக்கதை அபானத்திற்றள்ளிச்சூக்குமபாகத்தை அவயவங்களில் விரவச்செய்வது. உதானன், குடித்ததும், உண்டதுமாகிய பண்டங்களைச் சலமலங்களாகக் கக்கவும் கீழ்போக்கவுஞ் செய்வது. வியானன், நாடிகளிற்கலந்துநின்றவற்றைத்தளரவும்பந்திக்கவும்செய்வது. எ-று. காண்க. "అశ్మేవ" எது. கல்லைப்போல எ-று.

இனி, வாய், கண், முதலியபொறிகளும் பிராணனுக்குள்ளடங்கியதாய்த்தொழிற்படுதலால், அப்பிராணன் என்னு மொழியால் உபசரித்துக் கூறப்படுகின்றது. அதனுலே சந்தோகர்கள்= சாமவேதமுடையார்கூறுவது, "சாந்தோக்கியஉபநிடதம்" "నవైవాచోనచక్షూంషినశ్రోత్రాణినమనాంసీత్యాచక్షతే ప్రాణఇత్యేవాచక్షతే."=வாய், கண், செவி, மனம், என்று கூருர். பிராணன் என்றே கூறுகின்றனர். எ-று - காண்க.

ஆதலால், பொறிகள் வாயுக்கள் இவற்றின் பொதுவடிவாகியும், அந்நிய வுலகங்களினும் சஞ்சரித்துவர வல்லதுமாகிய இலிங்கசரீரம்=சூக்கும உடம்பு, பிராணன் என்னு மொழியால் சொல்லவேண்டிவந்தது.

அந்த இலிங்க சரீரமானது, எலும்பு, தசை, முதலியவற்ருலாய தூலஉடம்பினிடத்துக் கருமமாகிய கயிற்றினுல் கட்டப்படுகின்றது. அக்கட்டு, அந்தந்த யுகங்களினுடைய வல்லமையால், எலும்பு முதலியவற்றுள் சேர்ந்திருக்கின்றது. அங்ஙனமாதலின், "கிருச்சிரம், சாந்திராயணம்" முதலிய விரதங்களில், அந்நமுதலிய உணவுகளை வெறுத்துவிடுதலினுலே தசைமுதலியனவற்றினவிடத்தும் எலும்புகள் விரைவில் அழியாதிருத்தலினுல் பிராணனுக்கு ஊறுபாடு இல்லையென்றும், கிருதயுகத்தில் தவம் எளிதாகச் செய்து முடிக்கலாம் என்றும் கூறப்பட்டது. திரேதாயுகமுதலியவற்றில் தசைமுதலியன அழிதலினுல் பிராணன் ஒழிந்துபோதலை யுடையது. அதனுல் தவம்செய்தல் வருந்தினுலும் முடியாது.

அங்ஙனமாயினும், பிராணன் தசை முதலியவற்றைப் பற்றியிருத்தலினுல் ஞாநமுதலியவற்றுள் உபயோக விசேடம்சொல்வதற்குஅமையாது. அவ்வாருயினும் தவம் கூடுவதனைச்சொல்லும் பொருட்டு அதைச்சிறப்பிக்கப்பட்டது. அதனுனே, கூர்மபுராணத்துள், அந்நிய யுகங்களை யுள்ளிட்ட கருத்தால், வேறுதவம், சிறப்பித்துக் கூறப்பட்டது. வருமாறு, "అహింసాసత్యవచన మానృశంస్యంతపో ఘృణా। ఏతత్తపోవిదుర్ధీరా నశరీరస్యశోషణం." = பிறிதோருயிர்க் கொலையொன்றும் செய்யாதொழிதல், மெய்கூறல், கொடியவனுகாதிருத்தல் = இரக்கமுடையனுதல், அறத்தையும் கடவுளையும் பற்றி

விசாரித்தல், இவற்றை அறிந்தோர் தவமென்பர். உடலை வற்ற வருத்துவதன்று. எ-று. காண்க. (கூஉ௭)

## யுகவல்லமையுணர்ச்சியாலாம்பயன்.

శ్లో॥ యుగేయుగేచయేధర్మా స్తత్రతత్రచయేద్విజాః।
తేషాంనిందానకర్తవ్యా యుగరూపాహితేద్విజాః ॥33౪॥

என்பது, இனி யுகவல்லமையைக்கூறி அதற்குப்பயன்வருத்துக் கூறுகின்றது.

(இ-ள்.) ஒவ்வொரு யுகத்திலும் தருமங்கள் எவ்வெவையோ? அவற்றுள், இருபிறப்பாளர் யாரோ? அவர்களுடைய குற்றம் கூறலாகாது. எந்தக்காரணத்தால் அவ்விருபிறப்பாளர், யுக தருமத்தைப்பற்றி யிருப்பாரோ? எ-று.

“యుగరూపాః”=யுகத்திற்குத்தக்கவர்கள். எனவே, காலத்தின் வசப்பட்டுள்ளவர்கள். என்றபடி. ஆரணியபருவத்திலும். “భూమిర్న ద్యోనగాశ్చ తేసిద్ధాదేవర్ష యస్తథా। కాలంసమనువర్తంతేతథాభావాయుగేయుగే। కాలంకాలం సమాసాద్య నరాణాంనరపుంగవాః। బలవర్ణ ప్రభావాహి ప్రభవంత్యుద్భవంతిచ.”=பூமி, ஆறு, மலை, மரம், சித்தர், தேவர், முனிவர், காலத்தை நன்குணர்ந்து அதற்கு ஏற்றபடி ஒழுருகின்றனர். அவ்வாறே யுகங்கள்தோறும் பிறக்கும்பொருள்கள் யுகத்தைப்பற்றி நிற்கின்றன. அந்த ஒவ்வொரு காலத்தையும் கூடி, மனிதருள் வலி, நிறம், சாதி, ஆற்றல், உடையவர்களாய்ப் பிறக்கின்றார்கள். எ-று. காண்க.

அங்ஙனமானல், கலியுகத்தில் பாவிகளைப்பழிகூறவேண்டுவது இல்லையாதலால், இதுஅறம், இதுபாவம், என்று வகுக்கின்ற நூல்கள் அனைத்தும். முழுகிப்போகவேண்டுவதே யாம்.

எங்ஙனமெனில்? மேலே “அதருமத்தால் தருமஞ்செயிக்கப்படுகின்றது” என்று கூறியது, “ధర్మంచర” அறத்தைச்செய் என்ற சுருதி மொழியோடு முரணுகின்றது. ஆதலால்.

பொய்யால் மெய்வெல்லப்படுகின்றது என்றது, “నాస్తిసత్యాత్పరోధర్మో నానృతాత్పాతకంపరం। స్థితిర్హిసత్యేధర్మస్య తస్మాత్సత్యంనలోపయేత్.”= வாய்மையிலுஞ்சிறந்த தருமமில்லை. பொய்கூறுவதிலும் மிகுந்த

பாவமில்லை. தருமமென்பது சத்தியத்துள்ளே யிருக்கின்றது. ஆதலின் உண்மையைக்கெடுக்கலாகாது. என்று மஹாபாரதம் இராஜநீதியிற் கூறியவிதியோடு முரணுகின்றது.

"கள்ளரால் அரசர் வெல்லப்படுகின்றார்கள் என்று சொல்லியது. "అదండ్యాన్ దండయన్ రాజా దండ్యాంశ్చైవాప్యదండయన్। అయశో మహదాప్నోతి నరకం చాధిగచ్ఛతి." என்ற மநுவிதியோடு முரணுகின்றது. (இதற்குரை முன்னரே கூறப்பட்டது, அதனை உக-வது பக்கத்திற்காண்க.

"மாதராற் புருடர்கள் வெற்றிப்படுகின்றனர்" என்றமொழி. "స్త్రీభిర్భర్తృవచః కార్యమేషధర్మః పరః స్త్రియాః."=மனைவியால் கணவனுடைய சொல்லின்வழிசெய்யத்தக்கது. இது அந்த மாதர்க்குத் தலைமைப்பட்ட தருமமாம். என்ற யாஞ்ஞவற்கியதருமநூல் வாக்கியத்தினையும், "భర్తారం లంఘయేద్యాతు జాతిస్త్రీగుణదర్పితా। తాంశ్వభిః ఖాదయేద్రాజా సంస్థానే బహుసంస్థితే."=எந்தக்குலமாதுகுணமுடைமையால் அகங்கரிக்கப்பட்டுக் கணவனைக்கடந்து நடக்கின்றாளோ? அந்த மாதினை அரசன் பலருநிறைந்துள்ள சபையிலே நாயால் தின்னப்படச் செய்ய வேண்டும். என்ற மநுமொழியும், "పరిత్యాజ్యాత్వ యాభార్యా భర్తుర్వచనలంఘినీ। తత్రదోషో నచాస్తీతి త్వాహి వేత్థయథాతథం। సర్వలక్షణయుక్తాపి యాతుభర్తుర్వ్యతిక్రమం। కరోతి సాపరిత్యాజ్యా హ్యేష ధర్మస్సనాతనః."=கணவன் வார்த்தையைக்கடக்கும் மனைவியை விட்டுவிடவேண்டுவது. அப்படி விடுவதனாற் குற்றமில்லை என்பது உனக்கே தெரியும். எல்லா நல்ல இலக்கணங்களும் அமைந்திருந்தாலும் கொழுநன் சொல்லைக்கடக்கும் கெட்ட குணமொன்றிருக்குமேயானால் அப்படிப்பட்டமனைவியை ஒழிப்பதே அழியாததருமமாம். என்ற பிரம புராணத்துட்கூறிய மஹாரிஷிவாக்கியமும் ஆகிய இம்மூன்றனையும் முரணுகின்றது.

"வேள்வி குறைந்துபோகின்றது என்றது, வேதத்துள் அச்சித்திரகாண்டத்தில் கூறப்பட்டிருக்கும்வேள்வித்தீக்காரியப்பிராயச்சித்த விதிவாக்கியத்திற்கும், "హోతవ్యం విధివద్రాజన్ ఊర్ధ్వామిచ్ఛంతి యేగతిం। అజస్రమగ్రమేతత్స్యాద్ అగ్నిహోత్రం యుధిష్ఠిర। నత్యాజ్యం క్షణమప్యేతద్గృహీతవ్యం ద్విజాతిభిః। యచ్చైతత్సర్వం పృథివ్యాం హి కించిదస్తి చరాచరం। తత్సర్వమగ్నిహోత్రస్య కృతే సృష్టం స్వయంభువా। నావబుధ్యంతి యే చైతన్నరాస్తమసావృతాః। తేయాంతినర

కం ఘోరం రౌరవంనామవిశ్రుతం." = ஓய்: தருமராஜரே! கேளும். யார் மேலுலகத்தை விரும்புகின்றார்களோ? அவர்கள் பிறந்ததுமுதல் செய்யவேண்டிய வேள்வியாகிய இந்தத்தீக்காரியத்தை விதிப்படி வேட்டல் செய்யவேண்டுவது. இருபிறப்பாளர் கணமேனும் இதனை விட்டிருக்கலாகாது. பெற்றுக் கொள்ளவேண்டுவது. இந்நிலவுலகத்தில், இருக்கும் உயிர்களாகிய நடப்பனவு நிற்பனவும் எல்லாம் "அக்கினி ஹோத்திரத்தின்" பொருட்டே பிரமன் படைத்தனர். எந்த மனிதன், தாமசகுணத்தாற் சூழப்பட்டு, இந்தரகசியத்தையுணர்ந்துகொள்வதில்லையோ? அவன் இரௌரவம் என்னும் புகழ்பெற்ற கோரநரகத்தை யடைகின்றான். என்ற மஹாபாரத அசுவமேதபருவ மொழிக்கும் முரணுதல் உண்டாகின்றது.

"குருபூசை நாசமடைகின்றது" என்றுகூறப்பட்டசொல், "గురోరనిష్టాచరణం గురోరిష్టవిసర్జనం। గురోస్సేవాద్యకరణం జ్ఞానానుత్పత్తికారణం। ఆచార్యనిందాశ్రవణం తద్బాధస్యచదర్శనం। వివాదశ్చతథాతేనజ్ఞానానుత్పత్తికారణం" குருவுக்கு விருப்பமில்லாத காரியத்தைச்செய்தல், அவர் விரும்பியதைச் செய்யாதொழிதல், குருபணிவிடை செய்யாதுவிடுதல், இவை ஞானம்பிறவாமற் போதற்குக் காரணம். தன்னாசிரியனை, அந்நியர்கள் பழிக்கும்போது தான்கேட்டிருப்பது, அவனுக்குத் துன்பம் உண்டாகும்போது தான் பார்த்திருத்தல், அவரோடு வாதிடுவது, இவையும்ஞானம்பிறவாமைக்குக்காரணமாம். எனவே ஞானம்பிறப்பதற்குத் தடையாகின்றது என்பதுகருத்து. என்ற காந்தபுராணவுரையோடு முரணுகின்றது.

"கந்நியர் பிள்ளை பெறுகின்கின்றார்கள்" என்ற சொல், "ప్రాప్తేతుద్వాదశేవర్షేయః కన్యాంనప్రయచ్ఛతి। మాసిమాసి రజస్తస్యాః పితాపిబతిశోణితం."=பன்னிரண்டாவது ஆண்டு பிறந்தும் தன் கந்நிகையைத் தானஞ் செய்யாமலிருக்கிற அந்தப் பிதா அந்தக்கன்னியின் ஒவ்வொரு திங்களிலும் உண்டாகும், மாதவிடா யுதிரத்தை குடிக்கவனுகின்றான். (எனவே, அவ்வளவு பாவத்தையடைகின்றான். அல்லது, மறுமையில், அவ்வாறு யமதண்டனையை அடைகின்றான் என்பதுகருத்து. ஆண்டு=வருடம். திங்கள்=மாசம்.) என்னும் யமஸ்மிருதிமொழியும், "పితుర్గృహేతుయాకన్యా రజఃపశ్యత్యసంస్కృ

తా। భ్రూణహత్యా పితుస్తస్యా స్సాకన్యావృషలీస్మృతా." = தந்தை வீட்டிலி ருக்கும் கந்நிகை மணமில்லாமலே பூத்தலை யடைந்தால் அவளுடைய பிதாவுக்கு, இளங்குழவியைக் கொன்றபாதகம் வருகின்றது. அந்தக்கந்நிகை "விருஷலீ" என்று கூறப்படுகின்றாள். குழவி=சிசு = சிறுமகவு. விருஷலீ=காமுகி = அயோக்கியமானவள்.) என்ற ஸ்மிருதிவாக்கியமும் முரணுகின்றது.

இனி, இம்மூலத்துள், "తేషాంనిందానకర్తవ్యా" அவர்களைக்குற்றங் கூறத்தக்க தல்லஎன்று கூறியிருப்பது, பாவியை, பொய்கூறுவோனை, திருடனை, பதிவாக்கியங்கடந்த மனைவியை, வேள்வித்திக்காரியத்தைவிட்ட இருபிறப்பாளனை, குருபணிவிடைசெய்யாத மாணுக்கனை, பூக்குமளவும்தன்மகளுக்கு மணம்புரிவிக்காததந்தையை, பழிக்கின்றதாகிய மேற்குறித்த சுருதி மிருதி புராணமொழிகளுக்குமாறுகொளல் ஆகின்றதே என்னை? என்றபடி. (௩௩௨)

శ్లో॥ యుగేయుగేతుసామర్థ్యం శేషంమునివిభాషితం।
పరాశరేణచాప్యుక్తం ప్రాయశ్చిత్తంవిధీయతే. ॥౩౪౫॥

என்பது மேல் வினவுக்கு விடைகூறுகின்றது.

(இ-ள்.) யுகா யுகங்கள்தோறும் இவராற் கூறுது ஒழிந்துள்ள யுகங்களின் வல்லபம் ஏனையமுனிவர்களாற் கூறப்பட்டுள்ளது. பராசரராலும் கூறப்பட்டிருக்கிற பிராயச்சித்தம் விதிக்கப்படுகின்றது. எ-று.

"శేషం"=மிகுந்திருந்த அந்தந்தயுகங்களின் ஆற்றல், ஏனைய முனிவர்களால் விசேடமாகக் கூறப்பட்டுள்ளது. அவ்வாறு, ஆரணியபருவத்தில், "కృతంనామయుగంశ్రేష్ఠం యత్రధర్మస్సనాతనః। కృతమేవనకర్తవ్యం తస్మిన్కాలేయుగోత్తమే॥ నతత్రధర్మాస్సీదంతి నజీర్యంతేచవైప్రజాః। తతఃకృతయుగంనామ కాలేనగుణతాంగతం। కృతేయుగేచతుష్పాదః చాతుర్వర్ణ్యంచశాశ్వతం। పాదేనగ్రసతేధర్మో రక్తతాంయాతిచాచ్యుతః। జ్ఞానప్రవృత్తాశ్చనరాః క్రియాధర్మపరాయణాః। తతోయజ్ఞాః ప్రవర్తంతే ధర్మాశ్చవివిధాః క్రియాః। స్వధర్మస్థాః క్రియావంతో జనాస్త్రేతాయుగేభవన్। విష్ణుః పీతత్వమాయాతిచతుర్థా వేదఏవచ। సత్యానాస్త్యేవవిభ్రంశో సత్యేకశ్చిదవస్థితః। సత్యాత్ప్రచ్యవమానానాం వ్యాధయోబహవోభవన్। కామాశ్చోపద్రవాశ్చైవ తథాదైవతకారితాః। కామకామా స్స్వర్గకామాయజ్ఞాంస్తన్వంతిచాపరే। ఏవంద్వాపరమాసాద్య ప్రజాః క్షీయంత్యధర్మతః। పాదేనైకేనకౌంతేయ ధర్మఃకలియుగే

స్థితః। వేదాచారాః ప్రణశ్యంతి ధర్మయజ్ఞక్రియాస్తథా। ఆధయో వ్యాధయస్తంద్రీ దోషాః క్రోధాదయస్తథా." = கிருதம் என்பது யுகங்களுட்சிறந்தது. அதனுள் தருமம் அழிவற்றது. ஆதலால் அவ்வுத்தமமான காலத்தில் செய்யப்பட்டதேயொழியச்செய்யத்தக்கதில்லை. (எனவேஒருகாற் செய்தளவே. அச்செய்கை பயனைத்தந் துவிடுமன்றி மீட்டும்செய்யவேண்டா என்பது). அப்போது, தருமம் அழிவதில்லை. தருமஞ்செய்பவர்துன்பப்படுவதில்லை. மனிதர்க்குக்கிழத்தனம்இல்லை. காலம் அதிகருணமுடையது. தருமம் நான்குகால்களோடு நிறைந்திருக்கும். நான்கு வருணமும் சீர்பெற்றிருக்கும். அக்கால் நான்கனுள் ஒன்றனைப் பற்றுவதுபோல அதருமமானது காத்து நிற்கும். தருமவடிவனாகிய விஷ்ணு சிவந்த நிறமுடையவராயிருக்கின்றார். திரேதாயுகத்தில் மனிதர்கள், தருமம், கிரியை, வேள்வி, ஞானம், உடையவர்களா யிருப்பர்கள். விஷ்ணு பீதவண்ணரா யிருப்பர். (பீதம்=பொன்மை). துவாபரயுகத்தில், வேதம்பிரிக்கப்படும். எனவே அதற்குமுன்வேதம் ஒன்றேயென்பது கருத்து சத்தியத்தின் மகிமைகுன்றாது. யாராயினும் ஒருவன் சத்தியமுடையவனாகவே யிருப்பன். சத்தியம் தவறினவனுக்குக் காமமும்நோயும் தெய்வச்செயலால் உண்டாய் உண்மை வெளிப்படும். பயனைக்குறித்துவேள்விசெய்வர். பாவத்தின் வளர்ச்சியால் பிரஜைகள் நாசத்தையும் அடைவர். கலியுகத்தில் தருமம், ஒற்றைக்காலுடனிருக்கும். வைதிக ஒழுக்கங்களும், தருமவேள்விக் கிரியைகளும் அடங்கிவிடும். மனநோய், உடம்புநோய், சோம்பல், உறக்கம், பலவகைப்பட்ட குற்றங்கள், கோபம் முதலிய துர்க்குணங்கள் மேற்சொல்லிய நல்லவை அடங்கின அளவும் விருத்தியாகும்.

இன்னுமவ்விடத்தில். "బ్రాహ్మణాః క్షత్రియావైశ్యాః సంగిరంతః పరస్పరం। శూద్రతుల్యా భవిష్యంతి తపస్సత్య వివర్జితాః। స్వభావాత్క్రూర కర్మాణశ్చాన్యోన్యమవిశంకితాః। భవితారో నరాస్సర్వే సంప్రాప్తే యుగసంక్షయే ॥" அந்தணன், அரசன், வைசியன், ஒருவர்க்கொருவர் மனம் சென்றவழியே வார்த்தைசொல்லி, சூத்திரர்க்கு ஒப்பானவர்களாகின்றனர். தவத்தையும் சத்தியத்தையும் விடுவர். இயற்கையாகவே கொடுந்தொழிலைச் செய்வர். அந்தயுகமுடிவில், ஒருவர்பயம் ஒருவர்க்கில்லாமற்போம். எ-று. காண்க.

## కలివర్జ్యాని.

## கலியுகத்தில் ஒழிக்கத்தக்கன.

*பிரம புராணத்திலும்.* "దీర్ఘకాలబ్రహ్మచర్యం ధారణంచ కమండలోః। గోత్రాన్మాతృసపిండాత్తువివాహోగోవధస్తథా। నరాశ్వమేధౌమద్యంచ కలౌవర్జ్యాద్విజాతిభిః ॥

క్రతురపి ॥ దేవరాచ్చసుతోత్పత్తి ర్దత్తాకన్యానదీయతే। నయజ్ఞేగోవధః కార్యః కలౌనచ కమండలుః.॥

పురాణేపి॥ ఊఢాయాఃపునరుద్వాహం జ్యేష్ఠాంశంగోవధంతథా। కలౌపంచనకుర్వీతభ్రాతృజాయాంకమండలుమ్.॥

తథాన్యేపిధర్మజ్ఞ సమయప్రమాణాకాస్సంతి॥ విధవాయాంప్రజోత్పత్తౌ దేవరస్యనియోజనం। బాలికాక్షతయోన్యోశ్చవరేణాన్యేన సంస్కృతిః। కన్యానామసవర్ణానాం వివాహశ్చద్విజాతిభిః। ఆతతాయిద్విజాగ్ర్యాణాం ధర్మయుద్ధేనహింసనం। * ద్విజస్యాబ్ధౌతు నౌయాతు శ్శోధితస్యాపిసంగ్రహః। సత్రదీక్షాచ సర్వేషాం కమండలువిధారణం। మహాప్రస్థానగమనం గోసంజ్ఞప్తిశ్చగోసవే। సౌత్రామణ్యామపిసురా గ్రహణస్యచసంగ్రహః। అగ్నిహోత్రహవణ్యాశ్చ లీఢాలేహ్యాపరిగ్రహః। † వానప్రస్థాశ్రమస్యాపిప్రవేశోవిధిచోదితః। వృత్తస్వాధ్యాయసాపేక్షమఘసంకోచనంతథా। ప్రాయశ్చిత్తవిధానంచ విప్రాణాంమరణాంతికం। సంసర్గదోషఃస్తేనాద్యైర్మహాపాతకనిష్కృతిః। వరాతిథిపితృభ్యశ్చపశూపాకరణక్రియా। దత్తౌరసేతరేషాంతు పుత్రత్వేనపరిగ్రహః। సవర్ణానాంతథాదృష్టే స్సంసర్గశ్శోధితైరపి। అయోనౌసంగ్రహేవృత్తే పరిత్యాగో గురుస్త్రియాః। అస్థిసంచయనాదూర్ధ్వం అంగస్పర్శనమేవచ। శామిత్రంచైవవిప్రాణాం సోమవిక్రయణంతథా। షడ్భక్తానశనేనాన్నహరణంహీనకర్మణః। శూద్రేషుదాసగోపాల కులమిత్రార్ధసీరిణాం। భోజ్యాన్నతాగృహస్థస్యతీర్థసేవాతిదూరతః। శిష్యస్యగురుదారేషు గురువద్వృత్తిరీరితా। ఆపద్వృత్తిర్ద్విజాగ్ర్యాణా మశ్వస్తనికతా తథా। ప్రజార్థంతుద్విజాగ్ర్యాణాం ప్రజారణిపరిగ్రహః। బ్రాహ్మణానాంప్రవాసిత్వం ముఖాగ్నిధమనక్రియా। బలాత్కారాదిదుష్టస్త్రీ సంగ్రహోవిధిచోదితః। యతేస్తుసర్వవర్ణేభ్యో భిక్షాచర్యావిధానతః॥ నవోదకేదశాహంచ దక్షిణా గురుచోదితా। బ్రాహ్మణాదిషు శూద్రస్య పచనాది క్రియాపిచ। భృగ్వగ్నిపతనాద్యైశ్చ

---

* పాఠాంతరం॥ ద్విజస్యాబ్ధౌతునిర్యాణం॥ என்று॥ శోధితస్యాప్యసంగ్రహః॥ என்று॥ శోధితస్యాపిసంగ్రహః। என்று॥ ప్రమాణాంతరం॥ ద్విజస్యాబ్ధౌతునౌయాతు శ్శోధితస్యాప్యసంగ్రహః॥ எனவும்வரும்.

† పాఠాంతరం॥ వానప్రస్థాశ్రమశ్చాపి. என்பதுபாடம்.

వృద్ధాదిమరణంతథా। గోత్ర త్తిశిష్టైపయసి శిష్టైరాచమనక్రియా। పిత్రాపుత్రవిరోధేషు సాక్షిణాందండకల్పనం। యతేస్సాయంగృహస్థత్వం సూరిభి స్తత్త్వసత్వరైః। ఏతానిలోకగు ప్త్యర్థం కలేరాదౌమహాత్మభిః। నివర్తితానికర్మాణి వ్యవస్థాపూర్వకంబుధైః। సమయ శ్చాపిసాధూనాం ప్రమాణంవేదవద్భవేత్." (இவற்றின்பொருள்.

க-வது. நெடுங்காலம் பிரமசரியத்தைத் தரிப்பதுவும், உ-வது. கமண்டலத்தைத் தரிப்பதுவும், ங-வது. தாய்பிறந்த கோத்திரத்தின் சபிண்டர்கள் கன்னிகையை மணம்புணர்வதுவும், ச-வது. கோவதையும், ரு-வது. நரமேதயாகமும், சு-வது. அசுவமேத வேள்வியும், எ-வது. மதுபானமும், இவைகளை இக்கலியுகத்தில் பிரம க்ஷத்திரிய வைசியர்கள் ஒழிக்கவேண்டுவது. எ-று, காண்க.

க-வது. நெடுங்காலம் என்பது, பன்னிரண்டுவருடத்திலும் அதிகமான காலம் பிரமசரியங்காத்தல் கூடாது. எனவே, இக்காலத்தில் அவ்விரதத்தைக் காத்துக்கொள்வது அருமைஎன்றபடி, உ-வது. சந்நியாசம் எ-று. ங-வது. அம்மான்மகளை மணஞ்செய்வது போல்வன எ-று. ச-வது. மதுபர்க்கத்தின்பொருட்டுப் பசுஇறைச்சிதருவது. எ-று. மதுபர்க்கம்.=விருந்தாகவந்தபெரியர் முதலியோரை அப்போது பழம்முதலியசிலதிரவியங்களைக்கொண்டு உபசரிக்கச்சொல்லியகருமம். ரு-வது. சு-வது. வெளி. எ - வது. வேள்வியில், வைதிக விதியால் சோமபானம்போலும் வந்த சுராபானமும். தாந்திரீகசாத்தேயமதத்துட் கூறும் மதுபானமுமாம்.

கிரது என்பவர் செய்த தருமநூலிலும், பிள்ளையில்லாவிட்டால் கணவனிறந்தபின்னும் அவனுக்கு இளையவனைச்சேர்ந்து பிள்ளையைப்பெறுதலும், பெண்மகவைத் தத்தாகக்கொடுத்தலும், வேள்வியின் பொருட்டுப்பசுக் கொலைசெய்தலும், சந்நியாசம் செய்தலும், கலியுகத்தில் ஆகாது. எ-று. காண்க.

புராணத்துள்ளும் * முன்னொருவனால் மணம்புணர்ந்தவளைப் பின்னொருவன் மணம்புணர்தலும், † மூத்தமகன் எடுகூறும், கோவதையும், தமையன் மனைவியோடு புணர்தலும், கமண்டலமும், இவ்வைந்தும் கலியுகத்தில் செய்ய லாகாது. எ-று. காண்க.

அவ்வாறே, தருமமுணர்ந்தபெரியர்கள்கூறிய சமயப்பிரமாணத்துள்ளும் வேறு சில கூறப்பட்டுள்ளன. அவையாவைஎனின்?

* கைம்பெண்ணை மணத்தல் † தாயகபாகத்தில் மூத்தமகன்என்று ஒரு பங்கு விசேடமாக எடுத்துக்கொடுப்பது.

(க0) கைம்பெண்ணி னிடத்துச் சந்ததியை யுண்டாக்கும் பொருட்டு அவளது கணவனுக்கிளையோனை யேவுதலும், (கக) பாலியைக்கும், யோனிக்ஷத மில்லாதவளுக்கும் வேறு ஒருவரோடு மணம்புணர்த்தலும், (கஉ) இரு பிறப்பாளராகிய மூவரும் தம் வருணமல்லாத வேறு வருணத்து மாதரை மணம் புணர்தலும், (கங) ஆததாயியா யிருப்பவர்களையும், உயர்ந்தஇரு பிறப்பாளரையும் தருமயுத்தத்தினல் கொலைசெய்தலும், (கச) இருபிறப்பாளன், சமுத்திரத்தின்மீது யாத்திரைசெய்தால் பிராயச்சித்தஞ்செய்து அவனை அங்கீகரித்தலும், அல்லது. இருபிறப்பன்கடலிலே கலத்தின் மேற்செல்லுதலும், (கரு) "ஸ்ரீதிஷதஸ்யாஸ்ரஂ ந்ருஹ:."=ஒருவன்தானே பிரமகத்திசெய்து பின்தக்கப் பிராயச்சித்தஞ் செய்துகொண்டால் அவனை கூட்டத்தார் ஒழியாதுவிடுதலும்,(கசு)யாவரும்வேள்விக்குத்தீக்ஷைசெய்துகொள்ளுவதும், (கஎ)கமண்டலத்தைத்தரித்தலும்,(கஅ)மஹாப்பிரஸ்தானத்திற்குச்செல்லுவதும் (ககூ) கோமேதயாகத்தில் கோவதைசெய்வதும், (உ0) சௌத்திராமணியென்னும் வேள்வியில் சுராக்கிராஹம் என்பதைக்கொள்ளுதலும், (உக) அக்கினிஹோத்திரஹவணீ என்னும் பாத்திரத்தில் எச்சில் குற்றமன்று என நக்குதல் செய்வதும் (உஉ) வானப்பிரஸ்தாச்சிரமமும், (உங) விதிக்கப்பட்டபடி புகுதலும் (உச) நியமமான ஓதலே வேண்டும், அல்லது, ஒத்த நடை, ஒத்த ஓதலுடையனாய் இருப்பவன் வேண்டும் என்னும் விருப்பமும், (உரு) பாவத்தைச் சுருக்குவதும், (உசு) வேதியனுக்கு மரணாந்தப் பிராயச்சித்தத்தை விதிப்பதும், (உஎ) கள்ளர்முதலியவர்களோடு சேர்ந்ததோஷ முண்டென்பதும் (உஅ) மஹா பாதகங்களுக்குத் தக்க பிராயச்சித்தமும், (உகூ) மணத்தில் மணமகன், அதிதி, பிதிரர், இவர்கள்பொருட்டுப் பசுவைப் பாகத்திற்காகத் தருதலும், (ங0) தத்தபுத்திரன், ஔரச புத்திரன் ஒழிய ஏனைய புத்திர பேதங்களைப் புத்திரராகக் கொள்ளுதலும், (ஙக) சுத்தஞ்செய்வித்துக் கொண்டுவந்தவர்களோடு அவர்களுடைய ஒத்த மரபினர்க்கு உடனுறைவு கூடும் என்பதும், (ஙஉ) அயோநி = மரபில்லாதவ னிடத்து ஒருபொருளைக் கொள்ளுதலும், (ஙங) குருமனைவியைக் கைவிடுதலும், (ஙச) அஸ்திகளுக்குச் சஞ்சயநம் = பாற்றெளிக் கருமமான பின்பு

தொடுதலும், (௩௫) பிராமண சாமித்திரமும், = வேள்வியில் அந்தணன் பசுவதை செய்தலும், (௩௬) வேதியன்சோமக்கொடி விற்றலும் (௩௭) ஆறுபொழுது உண்டி கிடையா விட்டால் இழிதொழில் செய்வோன் கையுணவையும் அருந்தலா மென்பதும், (௩௮) சூத்திரருள் அடிமை, இடையன் குலமித்திரன், பயனுண்டாக்குவோன், இவர்களுடைய உண்டியைப் பெற்றிருத்தலும் (௩௯) கிரகத்தன் நெடுந்தூரம் தீர்த்தயாத்திரை செய்தலும், (சo) மாணக்கன் குருபணியைப்போலும் குருபத்நிக்கும் பணிவிடைசெய்தலும், (சக) உயர்ந்தஇருபிறப்பாளருக்குரிய ஆபற்காலத்தொழிலும், (சஉ) நாளையிருப்போமோ இல்லையோ? என்னும் அழுந்திய வைராக்கிய சித்தமும், (சஙு) இருபிறப்பாளருட் சிறந்தோர் சந்ததியின்பொருட்டு "பிரஜாஅரணி" என்பதை கொள்ளுதலும். (ச௩) அந்தணர்கள் வேறுதேயம் செல்லுதலும், (சச) வாயால் நெருப்பையூதுதலும், (ச௫) விதியாணை இல்லாமலே வலிமையாலே இழிகுலத்தவளைத் தேடுதலும், (ச௬) எல்லாவருணங்களிலும் துறவிபிச்சையெடுத்தலும், தன்குலமில்லாதவர் பிச்சைகூடாது என்றபடி (ச௭) புதுநீரில் தசாஹம்=பத்துநாட்கோடலும், அதுகன்மாந்திரம் (ச௮) குரவன்கூறிய அளவுதக்ஷிணை கொடுத்தலும், (ச௯) வேதியன்முதலிய மூவர்பால் சூத்திரன் சமயல் முதலிய பணிவிடைசெய்தலும், (௫o) வயது முதிர்ந்தோன் முதலியவர்கள் மலைச்சாரல், நெருப்பு முதலியவற்றில் விழுந்து மரணமடைதலும், (௫க) ஆன்குடித்துமிகுந்த நீரில்உயர்ந்தவர் ஆசமித்தலும், (௫உ) தந்தைமகனுக்கு வழக்குநேர்ந்தவிடத்துச்சான்று கூறினவனைத் தண்டித்தலும், (௫௩) துறவிமாலைப் பொழுதினுக்கு மேல்கிரகத்தனு யிருத்தலுமாகிய இவைகளெல்லாவற்றையும், காலதத்துவ வுணர்ச்சிபெற்ற மஹான்களாகிய புலவர்கள் தவவன்மையால் கட்டுப்பாடாகக் கலியுகத்தில் கூடாதென்று ஒழித்துவிட்டார்கள். தருமமுணர்ந்தவர்களாகிய அந்தப்பெரியோர்களுடைய சமயக்கட்டு வேதம்போலும் பிரமாணமாயிருக்கும்.

(௬க.) வது. பாலியை - எது, பூத்தலில்லாத கன்னிகை. யோநிக்ஷத மில்லாதவள் - எது, பூத்த பின் புணர்ச்சியில்லாதவள். இவ்விருவர்க்கும் கைம்பெண்டன்மைவந்தால், வேறுமணம்செய்தல் கலியிற்கூடாது. எ-று.

கஉ. வது. அந்தணமாதுமுதலிய நால்வருணப்பெண்களையும் வேதியன் மணத்தலும்,அரசன்மூன்றுவருணத்துள்ளும்,வைசியன்இரண்டிலும், எனவே, தன் சாதியிலுந் தனக்குத் தாழ்ந்த சாதியிலும் மணம்புணர்தல் வழக்கமிக் கலியிலாகாது. எ-று.

(கங.) ஆததாயி எது "అగ్నిదోగరదశ్చైవ శస్త్రపాణిర్ధనాపహః। క్షేత్రదారాపహర్తాచషడేతే ఆతతాయినః." = மனை முதலியவற்றிற்குத் தீயிட்டவனும், விடம்வைத்தவனும், படைக்கலந் தொட்டவேதியனும், பிறர்பொருள் வவ்வினோனும், பிறர்நிலங்கவர்ந்தவனும், பிறர்மனையாளைப் புணர்ந்தவனும் ஆகிய அறுவரும் ஆததாயிஎனப்படுவார். எ-று. "ఆతతాయినమాయాంతం హన్యాదేవావిచారయన్." இந்த ஆததாயிகளைக் கொலையே செய்யவேண்டுவது விசாரித்தல் வேண்டாம். எ-று. "ధర్మేణయుద్ధ్యతంహన్యాత్." = தருமமாகச் சண்டைசெய்து அவனைக் கொல்லவேண்டும் என்று முன்னையவிதி, இக்கலியில் அவன்வலியவனுயின் தருமச்சண்டையால் முடிவுபெறுன்; ஆதலால் போரில் வஞ்சித் தாயினும் தண்டிக்கலாம். எ-று.

வேதியன் போர்க்கேவரலாகாது, வந்தால், தருமமாக அவனோடு போர் செய்யவேண்டுவது என்பது முன்னைய ஏற்பாடு. இக்கலியில் அவ்வாறில்லை துவாபரத்தின் முடிவில் கலிவழக்கத்தைப்பற்றி, திருஷ்டத்துய்மன் வில்லாசிரியனுகிய துரோணரைக் கொன்றனன். எ-று. காண்க.

(கச.) பிரம க்ஷத்திரிய வைசியர்களாகிய இருபிறப்பாளர்கள், முன் மரக்கலம் ஏறிச்சமுத்திரத்தின்மேல் யாத்திரைசெய்துவந்தனர், இப்போது அது ஆகாது. ஏனெனில்? கருமம்நடவாது ஆசாரங்கெடும். அந்நியர்கலப் புண்டாகும். இவ்விடத்து, இருபிறப்பாளர் என்பது வேதியர்கள் மட்டில் இடுகுறியாலும் காரணத்தாலும் செல்லுகின்றது. அரசவைசியர்களிடத்தில் காரணமாத்திரையாற் செல்லுகின்றது. "యోగాద్రూఢిర్బలీయసీ"=காரணத்திலும்இடுகுறிசிறந்தது. என்பதனுல் ஈண்டுதுவிசர்என்பதற்குஅந்தணரொன்பதே சிறந்த பொருளாகின்றது. கலியுகத்தில் சமுத்திரயானம் = கலத்திற்மேற் செல்லுதல் கூடாதென்னும் விலக்குவேதியனுக்கு மாத்திரமேயென்று சிலர் கூறுவர். அங்ஙனமாளுல், "కన్యానామసవర్ణానాం వివాహశ్చద్విజాతిభిః" என்று இதேப்பிரகரணத்தில் மேற்கூறப்பட்ட இருபிறப்பாளர் என்பதற்குபொருள் மாறுபாடு வருகின்றது ஆகலின்கலியில் பரிசுத்தராகிய பிரம க்ஷத்திரிய வைசியர் மூவரும் "சமுத்திரயானம்" செய்யலாகாது என்று இக்கலிவிலக்கு வாக்கியத்திற்குக் கருத்தாகின்றது.

பாடபேதங்களின்படி இக்கலியுகத்தில் கடல்யாத்திரைசெய்த இருபிறப்பாளனுக்குப் பிராயச்சித்தஞ் செய்தாலும் அவனை அக்குலத்தவர்கள் உடனுண்ணுதல் முதலிய விவகாரத்துள் சேர்க்கலாகாது.

வேறு சிலர் மதப்படி, மற்றையயுகங்களில் சமுத்திரயானஞ் செய்த இருபிறப்பாளனுக்குப் பிராயச் சித்தஞ்செய்து குலத்துட்சேர்த்து வந்தனர் இப்போது பிராயச்சித்தஞ்செய்து கொள்ளினும் சேர்க்கலாகாது,

வேறு சிலர்மதத்தின் பாடபேதப்படி, கப்பலின்மேற் செல்வதேகூடாது என்பது ஒருகலியுகவிலக்கு. "ద్విజస్యాబ్ధిసంగ్రహః." =என்றவிலக்கு வேறு விடயம் பற்றிய கலிவிலக்கு. எனவே, சாதி, குலம், சமயம் = மதநிலை கெட்டவனுக்கு மறுபடியும் உபநயநமுதலிய பிராயச் சித்தங்களைச்செய்து அவனை யம்மரபிலுள்ளோர் சேர்த்து வந்திருந்தார்கள், இப்போது அது ஆகாதென்பது. அந்தப்பக்ஷத்தில், "సంసర్గదోషశ్శుద్ధైరపి" = என்றுபின் கூறிய வற்றிற்குக் கூறியது கூறலென்னும் குற்றம்வருகின்றது ஆதலின் அது பொரு ளன்று,

வேறுபிரமாணங்களின்படி, கலியுகத்தில் கடன்மேற்சென்ற இருபிறப் பாளரில், வேதியனுக்குப் பிராயசித்தம் செய்தாலும் குலத்தில் உடனுறை வுஇல்லை; அரசவைசியர்களுக்குப் பிராயச்சித்தஞ் செய்தால் மரபிலுடனுறை தல் வழக்கங்கூடும், சூத்திராதியர்க்கு எனவெ உபநயநச்சடங்கேயில்லாத வர்களுக்குக் கடல்யாத்திரை விலக்கே யில்லையாம்,

"ప్రాగుపనయనాత్ కామచార కామవాద కామభక్షాః" = உபநயந அதிகார முடைய பிரம க்ஷத்திரிய வைசியர்களில் அக்கருமகாலத்திற்கு முன் இளை யோர் விரும்பியவாறு போகலாம்! விரும்பியவாறு பேசலாம்; விரும்பியவா றுபுசிக்கலாம். எ-று, என்றகௌதமர் மொழி, இவ்வுரையிற் சூடாகன்மவி தியில், மேல், உதசரிக்கப்படும். ஆதலின் கலியில் கடல்யாத்திரை செய்த அவ்வகைச் சிறுவர்க்குக் குற்றமுமில்லை. கழுவாயு மில்லையென்று சிலர் கூறுவர்.

அங்ஙனமன்று. மனஞ்சென்ற வழிச்செல்லலாம் என்றது. சாதாரணமா கக் காலநியமக் கட்டில்லாமற் சஞ்சரிக்கலாம்என்றபடி. உபநயநகருமமுடிந்த வன் சந்திகாலங்களில் வேண்டியவாறு திரியலாகாமையின். உபநயனமில் லாதவனுக்கு அந்த நியமம்இல்லையெனக்கொள்க. வேண்டியதைப் புசிக்கலாம் என்றது, பழஞ்சோறுமுதலியன புசிக்கலாமென்ப தன்றி சூத்திரர் சமைத் தனவும் உண்ணப்படாதனவும் உண்ணலாகாது. வேண்டியவாறு பேசலாம் என்றது, தரத்துக்குத் தக்கபடி பன்மை யீறுமுதலிய வற்றால் வார்த்தை சொல்லவேண்டிய தடையில்லையே யன்றி, வைதல், துன்பவிளைவாகிய பொய் கூறல் முதலியன கூடாதென்றபடி. அந்தக் கௌதமமொழிக்குப் பெரியோர் பொருள் கூறியிருக்கின்றனர். அதற்குப் பிரமாணமாக "వృత్యా శూద్రసమః"= அப்படிப்பட்ட சிறுவன் ஒழுக்கத்தால் சூத்திரனோடொப்பாவான். எனவே சூத் திரனல்லன் உபநயந அதிகாரம் உண்மையின். சூத்திரனிற் சிறந்தவன் என்ற வசிட்டமொழியையும் "యథోపపాదితమూత్ర పురీషొభవతినతస్య చమనకల్పోవి

ద్యాత్.''=உபநயநமில்லாத அச்சிறுவனுக்கு மலமூத்திர ஒழிவுகாலங்களில், அலம்பல் மண்ணிட்டுச் சுத்திசெய்தல் சுத்தஆசமனம் செய்தல் விதியில்லை என்ற கௌதமமொழியும் உதகரிக்கப்பட்ட நன்றி, சூத்திர விருத்தியினும் இழிந்த தொழிலுக்குக் கட்டளை கொடுக்கப்பட்டதில்லை. அன்றியும், அவ்வகைப்பட்ட இலக்கணத்திற்குப் பத்துவருடத்திற்கு அதிகரிக்காத வயதின்கால அளவையும் கூறப்பட்டுள்ளது. அதன்பிரமாணங்களை இவ்வுரையில் அவ்வவ்விடங்களிற் கூறப்படும். ஆதலின் அக்கௌதமமொழிப்படி உபநயநமில்லாதவனுக்குக் கடலிற் சஞ்சரித்தல் குற்றமில்லை என்பது கூடாது.

(கக) வது. சத்திரயாகம்-எது. సర్వేయజమానా స్సర్వేఋత్విజః'' = அந்த வேள்வியில் அனைவரும் யஜமானர்களும் அனைவரும் இருத்துவிக்குகளும், என்றலின், அனைவரும் யஜமான தீக்ஷைசெய்து கொள்ளலாகாது. ஏனெனில்? தலைவன் செய்யவேண்டிய தொழில் மிகுதியாயிருக்கின் அவற்றை இருத்துவிக்குகளும் செய்யக்கூடும், இருத்துவிக்குகள் செய்யவேண்டுந் தொழில் மிகுதியாயிருக்கின் அவற்றைத் தலைவனும் செய்யலாம். அல்லது, அந்தவேள்வியில் ஒருவர்க்கொருவர் உதவியாக எல்லாத்தொழிலையும் யாவரும் செய்யலாம் ஆதலின், இத்தொழிற்கு இவனே தீக்ஷிதன் = உரியவன் என்று வேறுவேறாக இக்கலியில் தீக்ஷைசெய்து கொள்ளலாகாது = உரிமைசெய்து கொள்ளலாகாது. என்று சிலர் கூறுகின்றனர் இக்கலியில் சத்திரயாகமே கூடாதென்பது சிலர்கருத்து.

''సత్రదీక్షాచసర్వేషాంకమండలువిధారణం.''=சத்திரவேள்வியில் தீக்ஷை, அல்லது, சத்திரயாகம், தீக்ஷை, சந்நியாசம், இவைகள் முன் அனைவர்க்கு. மிருந்தன இக்கலியில்கூடாது. எ-று.

(கஅ) வது. மஹாப்பிரஸ்தான கமநம், எது, அரித்துவாரம் கங்கோத்தரி, வதரிகாச்சிரம வழியாக இமயமலையை யேறிக்கடந்து சென்று சுவர்க்கமடைதற்குரிய இடத்தில் தேகத்தை ஒழிப்பது, இதனைத் துவாபரத்தின் முடிவில், பாண்டுமக்களைவரும் செய்தனர். அவ்வாறு இக்கலியில் யாருஞ் செய்யலாகாது. எ-று.

(உ0) வது. சௌத்திராமணி-எது, இந்திரனுக்குப் பிரீதியாகும்படிச்செய்யும் ஒருவகை வேள்வி. அதனுள், ''గ్రహః''=ஹோமத்திரவியங்களைச் சேர்த்துவைத்தற்குரிய ஒருவகை மரப்பாத்திரம், ''సోమగ్రహాగ్ శ్చసురాగ్రహాగ్ శ్చగృహ్ణాతి'' = சோமத்தைப்பெய்துவைத் தகிரகத்தையும் சுராவைப்பெய்துவைத்த கிரகத்தையும் கொள்ளுகின்றான், எனற வேத வாக்கியப்படி, '' సురా, '' ''పరిస్రుత్,''=மூலிகைகளைக்கிள்ளுவதினால் வடிந்தகள்ளினை (எனவே வேள்வியின்பொருட்டுக் கூறப்பட்ட சிலமூலிகைகளைக் கொண்டுவந்து உரிய விதிப்படி அவ்விடத்திற்றானே ஆக்கப்பட்டு திருத்திவைத்திருக்கின்ற ஒருவிதமான

கள்ளின்வேறுபாடு அது, "గౌడీ, పైష్టీ, హాలా, మదిరా, మద్యం," என்பன முதலிய பெயரை உடைய பத்துவகைக் கள்ளினுள்ளுஞ் சேர்ந்ததன்று அப்படிப்பட்ட சௌளதமாயுள்ள சுருவினைக்கிரகம் என்னும் பாத்திரத்திருந்து திருத்தப்பட்டு ஓமம்செய்து, அந்த சேடத்தை விதிப்படி முன் ஆசமனஞ்செய்திருந்தார்கள். இக்கலியில் "சௌத்திராமணி" யாகம்செய்தாலும் சுராக்கிரகத்தால் ஹோமஞ்செய்யலா மன்றி, சோமபானம் செய்வதுபோற் சுராபானம் செய்தல் கூடாது. "అపి," "చ," இந்த அவ்வியயத்தினுல் வேறுஸ்மிருதிகளில் கூறப்பட்டுள்ள பிரமாணங்களை அனுட்டித்து, சாத்தேயதீக்ஷாவிதிப்படி' செய்யப்பட்டிருந்த மதுபானமும் இக்கலியுகத்தில் கூடாதென்று விலக்கப்பட்டது.

(உக) வது. "అగ్నిహోత్రహవణీ". எது, நாடோறும் வேள்வி செய்பவன் காலை மாலை வேள்வித்தக்காரியத்தில் ஹோமஞ்செய்கின்ற பால்முதலிய அவித்திரவியங்களைச்சேகரித்து வைத்துவைக்கும்படித்திருத்தப்பட்ட ஓர்வகை மரக்கலம்=மரப்பாத்திரம்அதனுல்ஓமம்செய்தபின்பு அச்சேடத்தை அப்பாத்திரத்தோடுநக்குதல்செய்து, தருப்பைசலத்தினுல்அலம்பிச் சுத்திசெய்துவைத்திருந்தனர். அவ்வழக்கம்இந்தயுகத்திலாகாது. நக்குதல்செய்தால் எச்சிலாம். எ-று.

(உஉ) வது. வானப்பிரஸ்தம் மேற்கூறப்படும்.

(உங) வது. பாடபேதம். "ప్రవేశః" = கங்கையமுனை சரச்சுவதி என்னும் திரிவேணி சங்கமம் மூன்றியாறு கூடுமிடம் பிரயாகை (அது அலஹாபாத்) இதில் பாய்ந்திறத்தல், இதுவே கங்கைபாய்தல்என்பது. இதனை,இருக்குவேதம், "సితాసితే సరితే యత్రసంగతే తత్రాప్లుతాసో దివముత్పతంతి। యే వై తన్వం విసృజంతి ధీరాస్తే జనాసో అమృతత్వం భజంతే." = கங்கையமுனையாறு எங்குகூடுகின்றனவோ அவ்விடத்து நீராடினோர் சுவர்க்கத்தைப் பறந்தடைகின்றனர். யார்? அங்குதேகத்தை ஒழிக்கின்றார்களோ ? அவ்வகைப்பட்ட அறிவாளர் அமிர்தத்துவத்தை அடைகின்றனர். என்று விதித்தபடி முன்னாளில் அத் திருவேணியில் விழுந்து தேகத்தைவிட்டு வந்தனர். அதைக்குறித்து. முன் செய்யத்தக்க "అగ్నిహోత్రసమార్పణం," = நித்தவேள்வித் தீக்காரியத்தை முடித்தல். "ఆత్మశ్రాద్ధ," = தனக்குத்தானே சிராத்தகருமத்தை முடித்துக்கொள்ளல் முதலிய விதிகளும்கூறப்பட்டன. அவ்வாறுதேகத்தை யொழித்தால் அது "ஆன்மஹத்தி" = தற்கொலை அன்று. என்று முன்செய்து வழங்கினர். இக்கலியிலது கூடாது. ஏனெனில் ?

"సితాసితే," என்ற சுருதிமொழிக்கு கங்கையமுனை என்பது பொருளல்ல. வெள்ளைகறுப்பு என்றது பொருள். அதுபுராணக் கூற்றின்படி கங்கையமுனையாறென்றே பொருள் கூறப்படினும் யோக நூலுடையார்கூறியபடி இடைபிங்கலை என்னு நாடிகளாகின்றது. சுழுமுனையோடு கூடி திரிகூடம்

திரிவேணியென்னும் பெயரையுடைய புருவநடுவிடத்தில் தியானம் செய்பவனுக்குப் பயன் சுவர்க்கமுறுதல். என்னை? "ஶ்ரீமத்யாஸ்நாநமாசேத்" என்னும் ஸ்மிருதிமொழிப்படித் தாரகயோகத்தில் பிரமரந்திரத்தைப் பீறிக்கொண்டுஉயிர் துறக்கும் சித்தபுருடனுக்கு "தயோர்த்வமாயன்னம்ருதத்வமேதி"= அந்நாடியோடு மேற்சென்றவன் அமிர்தத் துவத்தை அடைகின்றான் என்ற "கடவல்லியுபநிடத" மொழிப்படி வீட்டை அடைகின்றான் என்று மேற்கூறிய இருக்குமொழிக்குப் பொருளாகின்றது. ஆதலின் அவ்வாறு செய்யவேண்டுமேயன்றி நீரில் விழுந்து தேகத்தை யொழிக்கலாகாதென்று முன்னுளிலேயே சிலர்கொள்கையாக விருந்தது. ஆயினும், அதற்கு ஆற்றலில்லாத அநாதிகாரிகள், தலதீர்த்த விசேடங்களைத் தெரிவிக்கின்ற ஸ்மிருதிபுராணப்படி கங்கை யமுனையாற்றுக் கூட்டத்தில் விதிப்படி உயிர் விடுதலைச்செய்து வந்தனர். இவ்வாறே. குருக்கேத்திரத்திலும் அரசர்கள் போர்செய்து வெட்டுண்டு இறந்தனர். அதுவும் இப்போதாகாதென்று கலிவிலக்கில் ஒழிக்கப்பட்டது.

மற்றொருசாரார். அச்சுருதிமொழிக்கு நினைப்பு மறப்பெனப்படுவனவே கங்கையும் யமுனையுமாமாகலின் அவ்விரண்டுங் கூடுமிடனுவது ஆன்மநிலையாம் அவ்விடநதுத்தியானயோக நீராடினரும், தத்துவத்தேக நியதிசெய்தாரும் அமிர்தத்துவம் = சாகாநிலைபெறுவர் எனவும் பொருள்கூறுவர். இவ்வாறே ஏனையவிரதவேள்வி முதலிய நித்த நைமித்திய கருமங்களனைத்திற்கும், உள்ளுறைப்பொருள் உள்ளன என்பர். அவற்றை வல்லுநர்பாற் கேட்டுணர்க.

(உச) முறைப்படி ஓதினுல் ஓதவேண்டும் இல்லையேல் வேண்டுவதில்லை; என்றுவிட்டால் இக்கலியில் நியமம் முழுவதும் நடத்தலில்லை யாதலால் ஓதலே ஒழிந்துவிடும். ஆதலின் அவ்வளவு கட்டுப்பாடு வைத்துக்கொள்ளலாகாது. எனவே, எவ்வளவாறுைம் ஓதல்வேண்டும் என்பது.

அவ்வாறே, இருந்தால் நல்லொழுக்கமுற்றும் இருக்கவேண்டுவது. அன்றி சிலபாக மிருந்து சிலபாகம் இல்லாது ஒழிதலால் பயனில்லை என்றுவிட்டுவிடுவதால் ஒழுக்கமே முழுவதும் கெடும். ஆதலின் சத்தியுள்ளவளாயில் சிறிதாவது இருந்தாற்போதும் எல்லாம் இருக்கவேண்டும் என்னும் விருப்பம் வேண்டுவதில்லை.

அல்லதூஉம், பிதிர்க்கடன் பொருட்டு அந்தணனை வருத்துக் கொள்ளுங்கால் அவ்வேதியன் முறையேசெய்த வேதாத்தியயனத்தையும் தவறாத நல்லொழுக்கத்தினையும் உடையவனுகவே கொள்ளவேண்டும் ஏனையோனை ஒழிக்கவேண்டுமென்பது. இக்கலியில் விசாரிக்கப்புகின் அவ்வளவு வேதியனே கிடையாதொழிவன். ஆதலால், அத்துணைவிருப்பம் வேண்டாவென்றபடி.

(உரு) அல்லதூஉம், மேற்பாவத்தைக் குறைத்தல் என்றதனையும் இதனோடு ஒன்றுசேர்த்துக் கொள்ளினும் கொள்க. என்னெனில்? நல்லொழுக்கத்தையும், நியமமான அத்தியயனத்தையும் வேண்டிப் பாவத்தைக் குறைத்தல் எனினும் அமையும். எனவே, அப்படிப்பட்டவர்களுக்குப்பாவம் குறைவு ஏனையர்க்கு

மிக்குள்ளது, என்றபடி. உம். திருந்திய வொழுக்க முடையவன், முற்று மோதியவன், இறந்தால், அவன்சம்பந்தியர், அச்சம்பந்தத்திற்குஒத்தபடி,கூறி யிருக்கப்பட்ட சம்பந்த ஆசூசம் முழுவதையும் அனுட்டித்தால், அவ்வாறில் லாதவன் இறந்தால் அவ்வளவுதினம் ஆசூசத்தைக் குறைத்துச் செய்து வந் தனர். அதனை "சம்பந்தாசௌச அகசங்கோசபக்ஷம்" என்பர். இக்கலி யில் அது கூடாது என்றபடி.

(உஅ) மஹாபாதகநிஷ்கிருதி. சிலமகாபாதகங்களுக்கு மரணாந்தப் பிரா யச்சித்தங் கூறப்பட்டது. அது இக்கலியில் ஆகாது. ஆயினிது மேலே கூறப் பட்டது. ஆதலின். ஈண்டு, மஹா பாதகங்களுக்கு மிருதியாகவும் செய்து முடித்தற்கு அருமையதாகவும் பிராயச்சித்தங் கூறப்பட்டுள்ளது ஆதலில், அவ்வளவு இக்கலியில் செய்யவமையாது. என்பதுகருத்து. மேலும்மகாபாத கங்களுக்குக்கலியில் பிராயச்சித்தம் கூடாதென்பதே சிலர்கருத்து. அதுமுறை யன்று. இவ்விடயம் முன்னம் பிராயச்சித்தகாண்டத்தில், பிரமகத்திப் பிர கரணத்தில் விசாரித்து வரம்புசெய்யப்படுகின்றது.

(௩0) புத்திரபேதங்கள் வருமாறு. ஔரசன், க்ஷேத்திரஜன், தத்தன், கிருத்திரிமன், கூடோற்பந்நன், அபவித்தன், காநீநன், சகோடன், கிரீதன், பௌநற்பவன், சுயந்தத்தன். சௌத்திரன் எனப்புத்திரர் பன்னிருவகைப் படுவர். அவருள் ஔரசனும் தத்தனுமொழிய மற்றைப் பதின்மரும் இக்கலி யுகத்திற்காகார் என்றபடி.

(௩க) இது பிராயச்சித்தசாண்டத்தில் பிரமகத்திப் பிராயச் சித்தத்தில் கூறப்படும். ஆதலின். அந்த நிஷேதம், இக்கலியில் துறவிக்கன்றிக் கிரகத்த னுக்கு அல்லவென்பது.

(௩உ) குருபத்தினி ஒழுக்கந்தவறின் அவளைக் காப்பாற்றுது விடுவது கூடாது என்பது.

(௩௩) "ஶாமித்ரம்"=பசுவைக் கொலைசெய்தல் இதற்காக ஒரு இருத்து விக்கு ஆனாலும் வேதத்தில் ஏற்படுத்தப்பட்டதில்லை. பசுவதை செய்யுங்காலத் தில் யஜமானன் இருத்துவிக்கு யாரும் அதைப்பார்க்கலாகாது. கொலைசெய்த வனுக்கும் பிராயச்சித்தமுண்டு. ஆயின் வேள்வியிற் பசுக்கொலை செய்தல் வேதவிதி சித்தமானது. இத்தொண்டமண்டலத்தும் சோழமண்டலத்தும் வடநாடு சில பாகத்தும் வேதியன் "சாமித்திரம்" செய்வதில்லை. சற்சூத் திரன் என்று குயவனால் செய்விக்கின்றனர். இக்கலிவர்ச்சியம் மைசூர்தேசம் மேற்றிசைநாடு முதலிய சில நாட்டுகளில் வழக்கத்தின்கண் வரவில்லை. அங்கு இப்பொழுதும்வேதியரே அந்தச் சாமித்திரத்தைச்செய்கின்றனர். ஏனெனில்? பிராமணன் சாமித்திரஞ்செய்து பின்பு பிராயச்சித்தம் செய்துகொள்ளும் படி வேதத்தால் விதிக்கப்பட்டது. ஆதலால் இதுவிடயத்தில் பிராமணர்க ளுள் விவாதப்பட்டுக் கொண்டிருக்கின்றது.

(௪க) ஆபத்துத் தருமங்கள், மஹா பாரதத்துள் விசேடமாகக் கூறப் பட்டது. ஸ்மிருதிகளிலும் உரைக்கப்பட்டது. அவை வருமாறு வேதியன்

பிழைக்க வகையில்லாதபோது உழுது பயிர்செய்தல். பிதுர் சிராத்தஞ் செய்வதற்கு வழியில்லாவிட்டால் அன்று காளைச்செடியைத் தழுவிக்கொண்டழுது பட்டினி யிருக்கை. நோய் ஒழிதலின்பொருட்டு அநாசாரங்களையும் புசிக்கத் தகாதனவற்றையும் புசித்தல். இவைபோல்வன கலியில் ஒழிக்கத் தக்கன. ஆயின் இக்கட்டுப்பாடு இப்போது சில இடங்களில் வழுவிவருகின்றது.

(சஉ) கணவன் உடன்பாட்டினால் அவன்மனைவியிடத்து அந்நியன் புத்திரோற்பத்தி செய்தல். இது கலியிலாகாது.

(சரு) வேதியன் வேறுதேயத்திற்குப் போதலால் அக்கினிஹோத்திரம் கெடுமென்பது. ஆகவே அது இக்கலியில் ஆகாது.

(ருரு) இக்கலியில் துறவி எப்பொழுதும் கிரகத்தன் வீட்டில், படுத்துறங்கலாகாது. முன் அதுசெய்திருந்தனர்.

மேற்கூறியனவும் பிறவும் ஆகிய பல விடயங்களையும் இக்கலியில் செய்யலாகாதென்று, இக்கலிதொடக்கத்தில் ஸ்ரீகனன்முதலியவர்கள் கட்டுப்பாடு செய்தனர். அந்தச் சமயக்கட்டின்படி அச்செய்கைகளை கலியொழிப்பு என்று எல்லாரும் விட்டிருந்தார்கள். இவ்வாறிருக்க, ஸ்ரீசங்கராசாரியர் அவதரித்து, சந்நியாசம் கூடுமென்று நிச்சயித்தனர். இவ்வுரையாசிரியராகிய மாதவாசாரியர் வேதபாஷியங்களைச்செய்து அம்மான்மகளை மணம்புணரலாம் என்பது முதலியவற்றைச் சித்தாந்தஞ்செய்தார். மைசூர் முதலிய தேசங்களில் முன்னோர்களில் யாரோ சில பெரியர்கள் "பிராமணசாமித்திரத்தை" வழங்குவித்தனர். இவை இப்போதும் யாவருக்கு முடன்பாடாக வழங்கிவருகின்றன. ஆனல் இவர்கள் இவ்வாறு சாதித்தது, மேற்கூறிய கலியொழிவின் கட்டுப்பாடுகள் படிப்படி தளர்ந்துபோவதற்கு வழிகாட்டியானதாக விருக்கின்றது. என்பது சிலர் கருத்து.

இக்கருத்து ஆபத்தம்பராலும் கூறப்பட்டது. வருமாறு, "ధర్మజ్ఞసమయః ప్రమాణంవేదాశ్చ,"=தரும முணர்ந்தவர்கள் ஏற்படுத்திய சமயங்களும் வேதங்களும் பிரமாணமாம். எ-று. இவ்வாறே ஏனையர் மொழிகளுள்ளும் வருவனவெல்லாம் உதாரணமாகக் கொள்க.

எவ்வாறு முனிவர்களால் அந்தந்த யுகங்களுடைய ஆற்றல் விதிவிலக்குகளோடு விசேடமாகக் கூறப்பட்டிருக்கின்றதோ? அவ்வாறே விதிக்கப்பட்டனவற்றைக் கடத்தலும், விலக்கப்பட்டனவற்றைச்செய்தலுமாகிய இவைகட்குப்பிராயச்சித்தமும் முன்னோராகிய ஆசிரியர் பராசரனர் கூறினர்.

விருத்த பராசருடைய மொழிகளும் ஓதப்பட்டு வருகின்றனவன்றோ? வருமாறு. "జరాయుజాండజాశ్చైవజీవాస్సంస్వేదజాశ్చయే। అవధ్యాస్సర్వఏవైతేబుధైస్సమనువర్ణితం। నిశ్చయార్థంవిబుధానాం ప్రాయశ్చిత్తంవిధీయతే।

అనస్థిమత్స్యమేకంతు యదిప్రాణైర్వియోజయేత్। ఉపోష్యైకాహమాదధ్యాత్ప్రాణాయామాంస్తుషోడశ। త్రిస్నానముదకేకృత్వా తస్మాత్పాపాత్ప్రముచ్యతే। అస్థిబంధేషుద్విగుణం ప్రాయశ్చిత్తం విధీయతే। అనేనవిధినావాపి స్థావరేషునసంశయః। కాయేనపద్భ్యాంహస్తాభ్యామపరాధాద్విముచ్యతే। చతుర్గుణంకర్మకృతేద్విగుణంవాక్ప్రదూషితే। కృత్వాతుమానసంపాపం తత్రైవైకగుణంస్మృతం" = ஜராயுஜம் = கருப்பையிற்றோன்றுவன. அண்டஜம் = முட்டையிற் றோன்றுவன. சுவேதஜம் = வியர்வையிற் றோன்றுவன வொன்றுங் கொல்லப்படாததாம் என்று உணர்ந்தோராற் கூறப்பட்டது. உண்மையான அருத்தங்களை யுணர்ந்தவர்க்குப் பிராயச்சித்தம் விதிக்கப் படுகின்றது. எலும்பில்லாதன, சிறியன வாகிய ஒருவுயிரையும் கொன்றால் ஒருநாள் முழுவதும் பட்டினிகிடந்து பதினாறு பிராணாயாமஞ் செய்து நீரில் மூக்கால் முழுகினால் அப்பாதகம் ஒழியும். எலும் புடைய வுயிராயிருந்தால் அதற்கிரட்டிப்புப் பிராயச்சித்தம் விதிக்கப்படுகின்றது. இதேவிதியால் தாவரவிடயங்களிலும் ஐயமில்லை, உடம்பினால் காலினால் கையால்தவறிய குற்றத்தினின்றும் விடப்படுகின்றான். காயத்தால்செய்தால், நாலுமடங்குபாவமாம். வாயாற்கூறினால்இரண்டுமடங்குபாவமாம். மனத்தால்நினைத்தால் ஒருபங்குபாவமாம். என்றுகூறப்பட்டது. எ-று காண்க.

இனி, மூலத்துள், "ச" என்ற அவ்வியயம், யாஞ்ஞாவற்கியர், மநு, முதலியோரையுந் தழுவிற்று ஆகலின் அவர்கள் நூலில் பிராயச்சித்த அத்தியாயங்கள் விளங்கவுரைக்கப்பட்டிருக்கின்றன.

ஆ-பராசரனைக்கூறியதனால் அதுகலியுகக்கருத்துடையது எல்லாக் கற்பத்திலும் பராசரஸ்மிருதிக்குக் கலியுக தருமத்தில் பக்ஷபாதமுண்டா யிருத்தலின். பிராயச்சித்தங்களிலும் கலியுக விடயத்தில் பராசரரே தலைமையாகக் கொள்ளத்தக்கவராகவிருக்கின்றார். ஆதலின், பராசரர், மநு, முதலியவர்களாற் கூறப்பட்டிருக்கும் பிராயச்சித்தங்கள், அந்தந்தபாவங்களின் பரிகாரத்தின் பொருட்டு, அறிஞர் கூட்டத்தினால் விதிக்கப்படுகின்றது. ஆகவே இதுவும் கூறப்பட்டதாகின்றது. அந்தந்த யுகவல்லமையும், பிராயச்சித்தங்களும், பலமுனிவரால் விரித்துக் கூறப்பட்டிருத்தலின்.

அவ்விரண்டினையுஞ்சீர்தூக்கியாராய்ந்து, நிந்தைஅநிந்தை, இவற்றிற்கு வகைமைப்பாடுசெய்யவேண்டும். எங்ஙனமெனில்?

எந்தபுருடன் யுகவல்லமையை அநுசரித்து, விதிக்கப்பட்டன வற்றைச் செய்துமுடித்தல், விலக்கப்பட்டனவற்றை யொழித்தல், மறந்தபடியாகச் செய்யப்பட்ட பாவத்திற்குப் பிராயச் சித்தம், இவற்றைச் செய்யும்பொருட்டுச் சத்தியுடையவனு யிருந்தவிடத்தும் செய்யமாட்டானோ? அவனைக்குறித்தது. என்னை? "భూ్రిణ హత్యాపితుస్తస్య సాకన్యావృషలీస్మృతా" என்றது முதலிய விலக்கு வசனம். "తేషాంనిస్నానకర్తవ్యా" என்றவாக்கியம் அசத்தனைக்குறித்தது.

அதனுலேயே, சைவாகமத்துள்ளுங் கூறப்பட்டது. வருமாறு, "అత్యంతరోగయుక్తేంశె రాజచోరభయాదిషు। గుర్వగ్నిదేవకృత్యేషు నిత్య హానౌనపాపభాక్." = உடம்புக்கு மிகநோய் வந்திருந்தாலும், இராஜபயமிருந்தாலும் கள்ளர் பயமிருந்தாலும், இன்னும் பெரிய பயங்களு மிருந்தாலும், ஆசிரியன்பணி, அக்கினி ஹோத்திரம், தேவர்பணி, இவைகள் அவசியமான தாயினும், அப்போது, நித்தமாகிய விதி நிடேதங்களை விட்டால் குற்றத்தை யடைந்தவன் ஆகான். எ-று. காண்க.

ஆதலால், தருமாதரும சாத்திரத்திற்கு ஒரு விப்பிலவமும் இல்லை (விப்பிலவம்=கெடுதி) எனவே, இதுதருமம் இது அதருமம் என்று, வகுக்கின்ற நூல்களுள் ஒரு கூறுயினும் முழுகிப் போவதில்லை. என்றபடி. (௩௪௨)

శ్లో॥ అహమద్యైవతత్సర్వమనుస్మృత్యబ్రవీమివః।
చాతుర్వర్ణ్యసమాచారంశ్రుణ్వంతుమునిపుంగవా॥ ॥౩౫॥

என்பது. ஆனல் கூறப்பட்டபடி யுகவல்லமை எல்லாமும் உணர்வதற்குப் பலநூல்களையும்ஆராயாமலே உள்ளம் பொருந்துவதில்லை யாதலின், மந்த அறிவினை யுடையவர்களுக்கும் சில்வாழ் நாளுடையவர்க்கும் யுகவல்லமையைப் பின்பற்றின நான்கு வருணங்களின் ஒழுக்க வேறுபாடு எங்ஙனம் உள்ளங் கொள்ளும் எனில்? மேற் கூறுகின்றது.

இ-ள். நான் இப்போதே அவ்வெல்லாவற்றையும் ஞாபகத்திற்றந்து உங்களுக்குக் கூறுகின்றேன், முனி சிரேட்டர்கள், நான்குவருணங்களின் ஒத்த ஒழுக்கங்களைக்கேட்கக்கடவர். எ-று. இதுபராசரவாக்கியம்.

"అనుస్మృత్య"=ஞாபகத்திற்றந்து, எ-து, அனைத்தினையுங் கூட்டி முடித்து முடிந்ததைக் கூறுதலினல், மந்த அறிவினை யுடைய

வர்க்கும் இது எளிதாக உள்ளத்திற் கொள்ளப்படும் என்பது குறித்தது.

"అద్య"= இப்போதே, என்பது, காலநீட்டித் தலை ஒழித்த லால், சில்வாழ் நாளையுடையவர்க்கும் இந்நூலில் அறம் பாவங் களின் நிச்சயம் இனிது முடியும் என்பது குறிக்கின்றது.

"చాతుర్వర్ణ్యసమాచారం" இது சமாச வாக்கியம் = தொகை நிலைத் தொடர்மொழி, "చాతుర్వర్ణ్యం" நான்குவருணங்கள் (அத னுடைய.) "సమాచారః" = தருமம் அல்லது "ఆచారః" எது-ஒழுக்கம். இம்மொழி உலக சம்பந்தமாகிய நன்னடக்கையைக் குறிக்கின்றது. நல்லதுஎன்பது, சிட்டர்களுக்குஉடன்பாடானது. (சிட்டராவார் நல் லறிவுடையராற்றம்மிற் சிறந்தாரெனக் கொள் ளப் படுவார். வேதமுணர்ந்தா ரெனவும், விதிதவறுது வேத முணர்ந் தவ்வொழுக்கவழியில் நின்றேரெனவும் கூறுப). இப்ப டிப்பட்ட ஒழுக்கம் எந்த தருமத்திற்குக் காரணமா யிருக்கின்ற தோ? வேட்டல், வேட்பித்தல் முதலிய கருமமேகுறியாக வுடை யஅந்தத் தருமமே "சமாசாரம்" என்னப்படும். எனவே ஒத்த ஒழுக்கம் என்றபடி.

அதனாலேயே ,, ఆచారోధర్మపాలకః"= ஒழுக்கமேதருமத்தை க்காப்பது. என்றதனால் ஆசாரதருமங்களுக்குக் காரண காரியவடி வத்தால் வேறுபாடுகளை மேற்கூறுகின்றார். காரண காரியத்தை ஹேது ஹேதுமத்பாவம் என்ப.

வேதமும், தருமத்தையும், ஒழுக்கத்தையும் வேறுபிரித்துக் கூறுகின்றது. வருமாறு, "యథాకారీయథాచారీ తథాభవతి"=எப்படிப் பட்ட தொழிலுடையவனே? எப்படிப்பட்ட வொழுக்கமுடைய வனே? அப்படிப்பட்டவனுவன். எ-று. காண்க.

மற்றேரிடமாகிய, தைத்திரீயோப நிடதத்தில், கருமத்திற் கும் நடைக்கும்வேறுபாடுவிதிக்கின்றது. வருமாறு, "అథయదితేకర్మ స్యావిచికిత్సావావృత్తవిచికిత్సావాస్యాత్" = பின்பு உனக்குக் கருமத்தைச் செய்வதற்கு விருப்பமாயினும், ஒழுக்கத்தைச் செய்வதற்கு விருப்பமாயினும், உண்டாஞல் எ-று. காண்க.

"శృణుపుత్రప్రవక్ష్యామి శృణ్వంతుమునిపుంగవాః" = என்று மனச் சோர்வில்லாமலே இருப்பது, எனவே ஊக்கத்தோடு கூடியிருப் பது. முன்னமே கூறப்பட்டது. ஆயினும், யுகவல்லமையைவிரித்

துக் கூறியதனல் இடையீடுபட்டமையின் ஈண்டும் அதனை நினைப்பூட்டும்படி "శ్రుణ్వంతుమునిపుఙ్గవః" என்றுராதலிற் கூறியது கூறலென்னும் குற்றமன்றெனக்கொள்க.

இல்லையேல் முன்னர்க்கூறியது யுகவல்லமையைக் கேட்க வென்றது. ஈண்டுக்கூறியது தருமத்தைக் கேட்க வென்றவா றெனினும் அமையுமென்க. (கூஙு)

శ్లో॥ పరాశరమతంపుణ్యం పవిత్రంపాపనాశనమ్।
చింతితంబ్రాహ్మణార్థాయధర్మసంస్థాపనాయచ॥ ॥3౬౫॥

என்பது. இனி, சொல்லப்படுகின்ற வீடுபேற்றிற்குக்காரணமாகும் தருமசமூகத்தின் ஏதுத்தன்மை * "கைமுதிகந்நியாயத்தினலே" கூறுவதற்குக்கிரந்தபாடத்தையும் அதனுடைய பொருளுணர்ச்சியையும், சிறப்பித்துக்கூறுகின்றது.

(இ-ள்) புண்ணியகரமாகியும், பரிசுத்தமாகியும், பாவங்களையொழிக்கத்தக்கதாயும், உள்ளபராசரருடையமதம், வேதியரின் பிரயோசனத்தின்பொருட்டும்,தருமங்களை நிலைநிறுத்தற்பொருட்டும் ஆராயப்பட்டிருக்கின்றது. எ-று.

பராசரராற் கூறப்பட்டநூல்கள் "పరాశరమతం"=பராசரமதம் என்றுகூறப்படும். அது, பாடமாத்திரையானே "పుణ్యం".= புண்ணியத்தைக்கொடுக்கத்தக்கது.அதுஇருவகைப்படும்; அவை, விரும்பிய இன்பத்தைக் கொடுக்கத்தக்கது ஒன்று. துன்பத்தையொழிப்பதொன்று எனவாம். இவ்விருவகைப்பட்ட புண்ணியமும், "పవిత్రం, పాపనాశనం" = "பவித்திரம், பாபநாசநம்," என்னும் இருமொழிகளால் கூறவேண்டுவதாகின்றது. அப்படிப்பட்ட இந்நூற் றுகை "చింతితం"=உண்மைப் பொருட்டிறமாக விசாரிக்கப்பட்டதாய் முன்கூறியவாறு புண்ணியத்தைத் தரத்தக்கதாகவிருக்கின்றது.இங்ஙனம்,பொருட்டிறத்தை ஆராய்தலின் பயன் இருவகைப்பட்டிருக்கின்றது. அவற்றுள், ஒன்று, தானேயனுட்டிப்பது. மற்றொன்று, பிறனுக்குணர்த்துவதுமாம். அவ்வி

* "கைமுதிகந்நியாயமென்பது. "கிமுத".=என்பதனுள் "கிம்"=என்னே? "உத"=சொல்லத்தக்கது. எனவே, மிகுத்த அருமையைஅல்லதுமிகுத்த எளிமையைக்குறிக்கவேண்டுழி "என்னைசொல்லத்தக்கதுஎனவரும்பொருட்டு. "கிமுதசம்பந்தம், கைமுதிகம்." உம். பிரமாதியர்இறந் தொழிவார்களானல் பிரளயவிசேடத்தைஎன்னைசொல்வது? என்றுற்போல்வருவன.

ரண்டும் "బ్రాహ్మణార్థాయ, ధర్మసంస్థాపనాయ" என்றமொழிகளாற்கூறப் பட்டிருக்கின்றது. "బ్రాహ్మణార్థః"=வேதியன்பொருட்டு சுதருமா னுட்டானமென்று தொகைப்பொருளைத் தருகின்றது. "ధర్మసంస్థాపనం"=பிறர்க்குத் தருமங்களை உணர்த்துவதனால், அனுட்டிக்கச் செய்வது."చ" என்றது. நூற்பாடத்தினுக்கும்அதன்பொருளுணர் ச்சிக்குமேஅவ்வளவுசிறப்பாயின், அனுட் டிப்பது,புருடார்த்தங் களுக்குக்காரணம் என்றுவேறு கூறத்தக்கது என்னுளது? என்ற கைமுதிகநியாயத்தை" உணர்த்துகின்றது.

இதுவும் ஒத்தபடியாம் என்னை? இப்பராசரர்க்குப் புலத் தியனார், வசிட்டனார், அருளாலடையப்பட்டவரத்தினால் எல்லா நூல்களினுடைய உட்கருத்தினையும் நன்குணர்ந்திருத்தல், என் பது. அவ்வண்ணம் விஷ்ணுபுராணத்துட் கூறப்பட்டது.

அதுவருமாறு, "వైరేమహతిమద్వాక్యా ద్గురోరప్యాశ్రితాక్షమా। త్వయా తస్మాత్సమస్తాని భవాంఛాస్త్రాణివేత్స్యతి। సంతతేర్నమమచ్ఛేదః క్రుద్ధేనాపియతఃకృతః। త్వయాతస్మాన్మహాభాగ దదామ్యన్యమహంవరం। పురాణసంహితాకర్తా భవాన్వత్స భవిష్యతి। దేవతాపారమార్థ్యంచ యథావద్వేత్స్యతేభవాన్। ప్రవృత్తేచనివృత్తేచకర్మణ్యస్తమలామతిః। మత్ప్రసాదాదసందిగ్ధాతవవత్సభవిష్యతి."=பெரும்பகையுண்டா யிருப்பினும் என்னுரையாலும் உன் குரவனுரையாலும் பொறு மையுன்னால் ஆதரிக்கப்பட்டது. ஆதலின் ஓ! குழந்தாய்! நீ எல்லாச்சாத்திரங்களையும் இனி துணரப்போகின்றாய், வெகுளி கொண்ட உன்னாலும் எந்தக்காரணத்தால் என்சந்ததி அழிக்கப் படவில்லையோ? ஓ! சிறந்தோனே! அந்தக்காரணத்தால் நான்வேறு வரமுங் கொடுக்கின்றேன், ஓ! குழந்தாய்! நீ புராண சங் கிதைக்குக் கருத்தாவாகின்றாய். தேவர்களுட் சிறந்த தெதுவோ? அவ்வருத்தத்தை நீ யுண்மையாகவுணரப்போகின்றாய். அன்புள் ளமைந்தா! என்னருளால் உன்னறிவு உலகநெறி முயற்சியிலும் வீட்டுநெறி முயற்சியிலும் அழுக்கு முழுவதும் அற்றதாய் ஐய மில்லாது தெளிந்ததே யாகும். எ-று. காண்க. (ரு-சூஉ)

இங்ஙனம் ஆசாரகாண்டத்தில்
முதல் அத்தியாயத்துள் ஆசாரத்தோற்றம்
முற்றிற்று.

# ஆசாரவிளக்கம்.

శ్లో॥ చతుర్ణామపివర్ణానామాచారోధర్మపాలకః।
ఆచారభ్రిష్టదేహానాం భవేద్ధర్మఃపరాఙ్ముఖః ॥౩౭౫॥

என்பது. யாதுவினவப்பட்டதோ? அந்த "చాతుర్వర్ణ్యస్యసమాచారంకించిత్సాధారణంవద" என்ற அதற்கு விடை கூறுகின்றது.

(இ-ள்.) நான்கு வருணத்திற்கும் ஒழுக்கம், தருமத்தைக் காக்கத்தக்கதாம். ஒழுக்கந்தவறின உடம்பை யுடையவனுக்குத் தருமம், முதுகுகாட்டிவிடும். எ-று.

உடன்பாட்டெதிர் மறைகளால்ஒழுக்கம், இம்மைமறுமைச் செல்வங்களுக்குக் காரணமென்பதும், அவ்வொழுக்கவிலக்கணமும், பாரதம் அநுசாசநீக பருவத்திற்கூறப்பட்டது. வருமாறு.

"ఆచారాల్లభతేచాయురాచారాల్లభతేశ్రియం। ఆచారాత్కీర్తిమాప్నోతి పురుషః ప్రేత్యచేహచ। దురాచారోహిపురుషో నేహాయుర్విందతేమహత్। త్రసంతిచాస్యభూతాని తథాపరి భవంతి చ। తస్మాత్కుర్యాది హాచారం యదిచ్ఛేద్భూతిమాత్మనః। అపిపాప శరీరస్య ఆచారోహంత్యలక్షణం। ఆచారలక్షణోధర్మ స్సంతశ్చాచారలక్షణాః। సాధూనాంచయథావృత్త మేతదాచారలక్షణం."=புருடன் ஒழுக்கத்தால்ஆயுளைச் சம்பாதித்துக்கொள்ளுகின்றான். செல்வத்தையடைகின்றான். இம்மையினும்இறந்தபின்னும் புகழைப்பெறுகின்றான். ஒழுக்கங்கெட்டவன், இங்குதீர்க்காயுளைப் பெறமாட்டான். அவனுக்காகப்பூதங்களும் அஞ்சுகின்றன. அவ்வாறே அவனை வெறுக்கின்றது. அல்லது, இகழ்கின்றது. ஆதலால் தனக்குச்செல்வம்வேண்டுமென்று விரும்புகின்றவன், இவ்வுலகத்தில் ஒழுக்கமே புரிவான். பாவவுடம்பினையுடையவனுக்காயினும், ஒழுக்கம், அவலக்ஷணங்களை ஒழிக்கின்றது. தருமத்திற்கு அவ்வொழுக்கமே இலக்கணமாம். * சற்புருடர் என்பாரும் ஒழுக்கமே இலக்கணமாக வுடையராம். பெரியர் எவ்வாறு நடப்பாரோ? ஒழுக்க விலக்கணமும் அவ்வாறேயிருக்கும். எ-று. காண்க.

---

* வின. சாதுக்களென்பாரோ, சற்புருடராம் ஆகவே அவர் யார்? விடை. ஒழுக்கமுடையவர். வின. அவ்வொழுக்கம் என்பதியாது? விடை, சாதுக்களி

இதனினும், எண்ணுகின்றனர். ஸ்மிருதி "సాధవః క్షీణదోషాః స్యుస్సచ్ఛబ్దస్సాధు వాచకః। తేషామాచరణం యత్తు సదాచారస్స ఉచ్యతే." அழிவுபட்ட குற்றத்தை யுடையவர்கள் சாதுக்களாவார் "సత్" என்ற மொழி சாதுக்கள் வாசகமாம். அவர்கள் அனுட்டிப்பது யாது? அதுவே நல்லாசாரமென்று கூறப்படுகின்றது. எ-று. காண்க.

இங்ஙனம் மநுவுங் கூறினர் - வருமாறு, "యస్మిన్దేశే య ఆచారః పారంపర్యక్రమాగతః। వర్ణానాం సాంతరాళానాం స సదాచార ఉచ్యతే ,,= "அந்தராளம்" = இடையிட்டோடும் கூடிய வருணங்களையுடையவர்க்கு எந்தநாட்டில் எந்த ஒழுக்கம் குலமரபோடு கூடிவந்ததோ? அதுவே சதாசாரமென்று கூறப்படும். எ-று. காண்க.

## சிட்டரிலக்கணம்.

சற்புருடராவார் சிட்டராம், அவர்களிலக்கணத்தை, பகவர் - போதாயநர் கூறினர். அதுவருமாறு. "శిష్టాః ఖలువిగతమత్సరాః నిరహంకారాః కుంభీధాన్యా అలోలుపా దంభదర్పలోభమోహక్రోధవివర్జితాః." = அழுக்காறு விட்டவர்கள், அகங்கார மற்றவர்கள், குடநெல்லையுடையவர்கள், வெறுத்தவர்கள், இடம்பம்=மேற்பிலுக்கு, தருப்பம்=செருக்குடைமை, உலோபம் = இவறல் = கொடாதிறுகப் பற்றுதல், மோகம்=ஆசைமயக்கு, கோபம், இவைகளால் விடப்பட்ட இவர்களன்றோ? சிட்டர் எனப்படுவர். எ-று. காண்க.

இனி ஆரணிய பருவத்தில், "అక్రుధ్యంతోఽనసూయంతో నిరహంకారమత్సరాః। ఋజవశ్శమసంపన్నాః శిష్టాచారా భవంతి తే॥ త్రైవిద్యవృద్ధాశ్శుచయో వృత్తవంతో యశస్వినః। గురుశుశ్రూషవో దాంతా శిష్టాచారా భవంతి తే." = சினஞ் செய்யாதவர்கள், பொறுமைப் படாதவர்கள், அகங்காரமும் பிடிவாத

---

னுடைய நடையாம். எனவே சாதுக்களிலக்கணம் ஒழுக்கத்தையும், ஒழுக்கவிலக்கணம் சாதுக்களையும் பற்றுதலின், ஒன்றையொன்று பற்றுதலென்னும் குற்றம் தங்குகின்றதே யெனில்? சான்றோராயுள்ளார் கூறுவர். அல்லது, சாதுக்கள் நடை எவ்வாறுள்ளதோ? அவ்வாறே ஒழுக்கமிருக்குமென்று வேறுபாடுகூறப்பட்டது. அன்றியும் சான்றோர்நடைபோன்றது ஆசாரம், அது சற்புருடராவார்க்கிலக்கணம். என்று, சாதுக்களுக்கும்சற்புருடர்க்கும், அல்லது அவர்க்கும் அவர்நடைக்கும், சிறிதுபேதம் கூறப்பட்டது. ஆதலின், அந்நியோந்நி யாசிரயதோஷம் = ஒன்றையொன்று பற்றுதல் குற்றமில்லை என்றுகொள்க.

மும் இல்லாதவர்கள், செவ்வனுகியநடுவு நிலைமையுடையவர்கள், சாந்தத்தால் நிரம்பினவர்கள், இவர்கள் சிட்டாசாரமுடையவர்கள் ஆகின்றார்கள். எ-ம். மூன்று வேதமு முணர்ந்தவிருத்தர்கள், சுத்தமாயிருப்பவர்கள், நன்னடையுடையவர்கள், புகழுடையோர், குருபணிசெய்யும் விருப்பமுடையவர்கள், ஐம்பொறியடக்கினவர்கள், இவர்களனைவருஞ்சிட் டாசாரமுடையவர்களாகின்றார்கள். எனவும் வருதல் காண்க.

இவ்விடத்து, சிட்டரானவர்களுடைய தயை, கண்ணோட்டம் = தாக்ஷிணியம், விநயம் = அடக்கமுடைமை, முதலிய சுகுணங்களோடு கூடியிருக்கும் விசேடமான நல்லநடையே ஒழுக்கமென்று கூறியவாறாயிற்று. அந்தஒழுக்கம், சுரௌத தருமத்தையும் ஸ்மார்த்த தருமத்தையும் காக்கின்றது.

தருமத்தைக் கெடுக்கத்தக்க தயவில்லாமை, வெகுளி=கோபம் முதலிய துர்க்குணமில்லாமலே ஒழியும்பொருட்டு ஆசாரம் இருக்கவேண்டும். ஆசார மில்லாவிட்டால், பகையிருத்தலினால் தருமம் வெளிப்படுதலே யில்லையாம். அவ்வாறாயினும், பெரிய வுழைப்பினால் ஒருபோது, எங்காயினும் தருமம் வெளிப்படுமேயானால், அது, உடனே பின்னிட்டுக்கொண்டே சென்றொழிவது. ஆதலால் அவ்வொழுக்கம் நான்கு வருணங்களுடைய தருமத்தையும் காக்கத்தக்கதாம். ஆகலின் அந்நான்கு வருணத்திற்கும் அது பொதுவாயிற்று.

ஆயின், "కించిత్సాధారణంవద." என்று பொதுத்தருமம் வினவப்பட் டிருக்கின்றது. அதற்கு விடையோ? ஆசாரவிடயம் கூறப்பட்டது. ஆனால்இது ஒவ்வாது. (எனவே வினவுக்குத்தக்க விடையல்ல என்பது கருத்து.) எனில்? அங்ஙனமன்று. தருமத்திற்கு ஒழுக்கம் நிமித்தமாமாதலின், நிமித்தத்திற்கும் நைமித்திகத்திற்கும் வேறுபாடில்லை என்னுங் கருத்தால் தருமத்தை வினவியவழி ஆசாரம்கூறப்பட்டது. ஆகலின் இதுவிடையேயாம். (௩௭௨)

## அந்தணர் சிறப்புத்தருமம்.

శ్లో॥ షట్కర్మాభిరతోనిత్యం దేవతాతిథిపూజకః।
హుతశేషంతుభుంజానో బ్రాహ్మణోనావసీదతి। ॥౨౮౪॥

என்பது, இனிவேதியனுக்குச்சிறப்பாகியதருமத்தைக்குறிக்கின்றது.

(இ-ள்.) அறுவகைத்தொழிலினிடத்தும் நிரம்பிய விருப்பமுடையவனும், நித்தமும் தேவர்களையும் அதிதிகளையும்பூசிப்பவனும், வேள்விசெய்து மிக்க அவியின்சேடத்தைப் புசிப்பவனுமாகிய அந்தணன் கெடுவதில்லை. அல்லது, கீழ்ப்படுதலில்லை. துன்பத்தை யடைவதில்லை. எ - று. அவி = தேவர்பொருட்டுச் சமைத்தசோறு.

## அறுதொழில்.

யஜநம்=வேள்விசெய்தல், யாஜனம்=வேள்விசெய்வித்தல், அத்தியயநம்=வேதமோதல், அத்தியாபனம் = வேதமோதுவித்தல், தாநம் = கொடுத்தல், பிரதிக்கிரகம்=ஏற்றல். இந்தவாறுங் கருமங்களாம்,

இதனைமநுகூறினர். "అధ్యాపనం చాధ్యయనం యజనంయాజనం తథా। దానంప్రతిగ్రహంశ్చాపి షట్కర్మాణ్యగ్రజన్మనః."=முழுதுமாகிய வேதத்தைப் பிறனொருவனுக்கு ஓதுவித்தலும், அவ்வேதத்தைக் குருமுன்னிலையில்தானே ஓதுதலும், வேள்விதானேசெய்தலும், பிறனொருவனால் செய்வித்தலும், ஒருவனுக்குத் தான்ஈகையீதலும், ஒருவன்கொடுத்த தானத்தை ஏற்றுக்கொள்ளுதலும்ஆகியஆறும் முதற்பிறந்தவனாகிய வேதியனுக்கு உரியகருமங்களாம். எ-று. எனவேஇவைசிறப்பு என்பதுகருத்து. ஈகை=கொடை=தானம்.

## ஓதுவித்தல்.

இவ்விடத்து ஓதுவித்தல், கூர்மபுராணத்துள் விரித்துரைக்கப்பட்டது. வருமாறு. "ఏవమాచారసంపన్న మాత్మవంతమదాంభికం। వేదమధ్యాపయేద్ధర్మ పురాణాఙ్గాని నిత్యశః."=இவ்வாறு, ஒழுக்கத்தோடு கூடினவனையும், "ఆత్మవంతం"=கடவுளுண்டு என்ற நம்பிக்கையுடையவனையும், (அல்லது, மனத்தையடக்கினவன் எனினும், தன்னையுணர்ந்தவன்எனினும், நல்லியற்கைக்குணமுடையவன்எனினும் அமையும்). அடக்கமுடையவனையும் உள்ளமாணாக்கனை வேதத்தையும், தருமநூலினையும், புராணங்களையும், ஆறு அங்கங்களையும் நாடோறும் விதிப்படி யோதுவிக்கவேண்டுவது. எ - று.

சிக்ஷா, வியாகரணம், சந்தசு, நிருத்தம், சோதிடம், கற்பசூத்திரம், இவைகளே அங்கமாம். * இது ஓதலின்கண்வந்த செயப்படுபொருளிரண்டுடைத் தொடர்மொழி.=துவிகர்மகத்துவம்.

## ஓதுவியா விடிற்பாவம்.

கூர்ம புராணம். "సంవత్సరోషితేశిష్యే గురుజ్ఞానమనిర్దిశన్। హరతే దుష్కృతంతస్య శిష్యస్యవసతోగురుః." = மாணாக்கன் ஆசிரியனிடத்துஒருவருடபரியந்தம்பணிசெய்து காத்திருக்கவேண்டுவது. அதன்பின்பும் ஆசிரியன் ஞானத்தை யுணர்த்தாவிட்டால் அம்மாணாக்கனது பாவத்தை அக்குரவன் அநுபவிக்கவேண்டுவதாம். எ-று.

## கற்பிக்கப்படுவோராகிய மாணாக்கர் பதின்மர்.

கூர்மபுராணம், "ఆచార్యపుత్రశ్శుశ్రూషుర్జ్ఞానదోధార్మికశ్శుచిః। ఆప్తశ్శక్తోర్థదస్సాధుస్స్వాధ్యాప్యాదశధర్మతః." ஆசான்மகன் (தனக்குக் கல்வி கற்பித்தவன்மகன்)கேள்விவிருப்பமுடையவன்,"జ్ఞానదః" தனக்கு வேறு கல்விகற்பித்து அதற்குக்கைமாறாகத்தன்கல்வியை விரும்புகிறவன், அல்லது, தன்னிடத்தில் ஓதுங்கால் தனக்கும் அறிவைக் கொடுக்கத்தக்க அறிவுடையவன் எனினுமாம் "జ్ఞానార్థి" எது, பாடமாஞல், ஞானத்தை விரும்பினவன் என்க. தருமத்திற்குக் கட்டுப்பட்டவன், சுத்தமுடையவன், "ఆప్తః" ஆப்தன்=

---

* என்னே? ஆசிரியர். பாணினியார். அஷ்டாத்தியாயி - அத்: க- பாதம்: ச-சூ: ருஉ - "గతిబుద్ధిప్రత్యవసానార్థశబ్దకర్మాకర్మకాణామణికర్తాసణౌ." =நடை, அறிவு, உண்டி, இப்பொருளையுடையபகுதிகளுக்கும் சத்தமேசெயப்படுபொருளாகவுடையபகுதிகளுக்கும்,செயப்படுபொருளில்வினைப்பகுதிகளுக்கும் அணிஜந்தத்திலுள்ள எழுவாய் ணிஜந்தத்தில் செயப்படுபொருளுருபையேற்கின்றது. எ-று. ணிஜந்தம். எது. ணிச்சுஎன்னும் இறுதிநிலையையுடையது. எ-று. உதாரணம். "శత్రూన్ గమయత్స్వర్గం, వేదార్థంస్వానవేదయత్,। ఆశయచ్చామృతందేవాన్, వేదమధ్యాపయద్విధిం।ఆసయత్సలిలేపృథ్వీం,యస్సమేశ్రీహరిర్గతిః." என்பது, முறையே, சத்துருக்களைச் சுவர்க்கத்தை யுறுவித்தான். எ-ம், அறிவுப்பொருட்பகுதிக்கு, உம், தன்னவனை வேதப்பொருளை அறிவித்தான். எம். உண்டிக்கு. உம். தேவர்களை அமுதை யுட்டுவித்தான், எம். சத்தப்பொருட்பகுதிக்கண்ணே. உம். பிரமனை வேதத்தை ஓதுவித்தான். எனவும் வரும். செயப்படுபொருள் வினைப்பகுதிக்கு. உம். நீரில் பூமியையிருத்தலைச் செய்வித்தான். எனவரும்.

உண்மை கூறுவோன். நம்பிக்கை யுடையவனுமாம், "శక్తః" = உரைகோளாளன் = சொல்லியதைக் கொள்ளவல்லவ னெனினுமாம். அல்லது, தன்னிடத் துணர்ந்ததைப்பிறர்க்குரைத்துவிருத்திசெய்ய வல்லவனென்பதுமாம். "అర్థదః" = பொருணனிகொடுப்போன் = ஆசிரியன் வேண்டிய பொருளைக் கொடுப்பவன், "సాధుః" = சாந்த குணமுடையவன், (எனவே தீக்குணங்க ளில்லாதவன்.) "స్వః" தன்னவன் எனவே ஔரசன்=தன்மகன், அவருள்ளும் முக்கியமாய்த்தலைமகன், தத்தமகன். இன்றியமையாவிடத்துச்சகோதரன்மகன், நன்மருமான், தௌஹித்திரன்=மகள்வழிப்பேரன், பௌத்திரன் = மகன்வழிப்பேரன், தன்னுடன்பிறந்த இளையோன், ஞாதிமகன், நண்பன்மகன், என்னு மிவராம். இப்பதின்மரும் தருமத்தால் கற்பிக்கப்படுவோராம். எ-று.

## இனிவிதிப்படி கற்பிக்கப்படுவோர் அறுவர்.

கூர்மபுராணம், "కృతజ్ఞశ్చతథాద్రోహీమెధావీశుభకృన్నరః। ఆప్తప్రియోథవిధివత్షడధ్యాప్యాద్విజోత్తమైః." = செய்நன்றிமறவாதவன், அபகாரஞ்செய்யாதவன், சிறந்த அறிவுள்ளவன், நல்லகருமத்தையே செய்பவன், நம்பிக்கை யுடையவன், நண்பன், இவ்வறுவரும் உத்தம இருபிறப்பாளரால் விதிப்படி, கற்பிக்கப்படுவோராவார். எ-று. (இவ்விடத்து, இருபிறப்பாளர் என்பது, அந்தணர்மேற்று. அரசருக்கும் வைசியருக்கும் ஓதுவித்தற் றொழிலுரிமை யில்லாமையின்.)

## இனிகற்பிக்கப்படாதோர்.

விஷ்ணுஸ்மிருதி, "నాపరీక్షితంయాజయేన్నాధ్యాపయేన్నోపనయేత్." = சோதிக்கப்படாதவனை, வேள்விசெய்விக்கலாகாது. ஓதுவித்தல் கூடாது. உபநயநம் செய்விக்கலாகாது. எ-று.

வசிட்டர், "విద్యాహవైబ్రాహ్మణమాజగామ।గోపాయమాంసేవధిష్టేహమస్మి। అసూయకాయానృజవేశఠాయ। నమాంబ్రూయావీర్యవతీతథాస్యాం." = வித்தைத்தெய்வம், சத்தவடிவமா யெதிர்தோன்றி, அந்தணனிடத்து வந்தது. இரகசியமாக என்னைக் காப்பவனிடத்தும், எல்லை கடவாதவனிடத்தும், இருக்கத்தக்கவளானேன். பொறாமையுடையவன், நடுவு நிலைமை யில்லாதவன், அசட்டைசெய்பவன், இவர்களுக்கு

என்னைக் கூறுதொழிக. அங்ஙனமானால், நான், வல்லபமுடையவளாயிருப்பேன் எ-று. "గోపాయమా నె వధిష్ఠే హమస్మి" எனவும், "నెవధిష్ఠే" எனவும் பாடமாயின், என்னைக்காப்பாற்று எடுக்கக்குறையாத, நிதியைப்போலும், நீரூற்றினைப்போலும் உள்ளவனிடத்தே நான்யிருக்கத்தக்கவள்;எனினும், பொன்புதையலைப்போலும் என்னைக் காப்பவனிடத்தில் இருக்கத்தக்கவளாகின்றேன் எனினுமாம்.

## ஓதுவிக்குமுறை, அல்லது ஈதலியல்பு.

யமஸ்மிருதி, "సతతం ప్రాతరుత్థాయ దంతధావనపూర్వకం। స్నాత్వాహుత్వాచశిష్యేభ్యః కుర్యాదధ్యాపనంనరః" நாடோறும் ஆசிரியன், உதயத்தில் எழுந்து, கால்கழுவல் பல்விளக்கல் முதலிய சுத்தங்களைச் செய்து, நீராடி, வேள்வித் தீக்காரியங்களை முடித்து, பின்பு மாணாக்கருக்கு ஓதுவித்தற் கருமத்தைச் செய்யவேண்டுவது. எ-று.

மநுவும், "అధ్యేష్యమాణస్తుగురు ర్నిత్యకాలమతంద్రితః। అధీష్వభో ఇతిబ్రూయా ద్విరామోస్త్వితిచారమేత్." என்பதனுள், "అధ్యేష్యమాణః" = சீடனுக்கு வேதத்தைச் சொல்லப்புகுவோன், நித்தமும், அத்தியயனஞ்செய்விக்குங் கருமந் தொடங்கும்போது, தான்உறக்கம், சோர்வு இல்லாதவனாய் "అధీష్వభో" ஓய்! ஓதுவீராக, என்று முன்கூறிப் பின்தொடங்க வேண்டுவது. "విరామోస్తు" = முடித்தலைச்செய்க, என்று கூறிவிடவேண்டும்; கடவுளற்பிதமாகும் பொருட்டு. என்பதுகருத்து.

இவற்றினை எல்லாம் கருத்துள்ளடக்கி, சுருதியும் கூறிற்று. வருமாறு, "అష్టవర్షం బ్రాహ్మణముపనయీత తమధ్యాపయీత." = எட்டு வயதினையுடைய அந்தண குலத்தனை உபநயநகருமத்தினாற் றிருத்தஞ் செய்யவேண்டும். இங்ஙனம் திருத்தமுற்ற பிரமசாரியனை வேத மோதுவிக்க வேண்டும். எ-று. காண்க.

பிரபாகரர். (எனபவர் வேதபூர்வமீமாம்ஸையுள் ஒருமதவாதிஆசிரியர்.) "ఉపనయీత." = உபநயநம் செய்யவேண்டும். எ-று. இது விதிப்பொருட்டாகிய வேதத்துள்ள வினைச்சொல் "நயதி" என்னும் வினைக்கு "ஆத்மனேபதத்தில்" ஆசிரியகாரணத்தில் – ஆசிரியர் – பாணினியாரால், சூத்திரிக்கப் பட்டதனால், "உபநயநத்திற்கும், அத்தியாபனத்திற்கும்" அங்காங்கிவடிவாக

வே, ஒருவனே கர்த்தாவாதலின், ஆசிரியத் தன்மை விரும்புவோன் உபநயநத்துள் அதிகாரியாகின்றான். *

ஆதலானே, மநுவினாலும் உணர்த்தப்பட்டது. "ఉపనీయతు యశ్శిష్యం వేదమధ్యాపయేద్ద్విజః। సకల్పంసరహస్యంచ తమాచార్యంప్రచక్షతే." = எந்தஇருபிறப்பாளன் மாணாக்கனை உபநயனஞ்செய்வித்துக்கற்பசூத்திரத்தோடும் இரகசியத்தோடும் விதிப்படி வேதத்தை ஓதுவிக்கின்றானோ? அவனை ஆசிரியன் என்றுகூறுவர். எ–று. காண்க.

---

* "సమ్మాననోత్సంజనాచార్యకరణజ్ఞాన భృతివిగణనవ్యయేషునియః" முதல், அத்: முதல் பாதம், ந-ம்-சு: எத். "నీఞ్" என்னும் பகுதிக்கு ஈண்டுள்ள, "ஞானம், பிருதி, விகணநம், வியயங்கள்" கூறத்தக்கது. ஏனைய பிரயோகமே உபாதியுள்ளன. என்பது கருத்து. சம்மானனத்தின் உதாரணம், "శాస్త్రేనయతే."= சாத்திரத்திலுள்ள முடிபுகளை மாணாக்கர்பொருட்டு உறுவிக்கின்றான். என்று பொருள்படுகின்றது. அதனால் மாணாக்கருடைய சிறப்பு = சம்மானம்பலித்தது. உத்ஸஞ்சனத்தின் உதாரணம். "దణ్డమున్నయతే." = தடியைமேலெடுக்கின்றான். என்பதுபொருள். ஆசிரியகரணத்திற்கு உதாரணம், "మాణవకముపనయతే." =மாணாக்கனைவிதிப்படி தன்னருகே உறுவிக்கின்றான் என்பது பொருள். உபநயநத்தை முன்னிட்ட ஓதுவித்தலினாலன்றோ? உபநேதத்தில் ஆசிரியத்துவம் செய்யப்படுகின்றது. ஞானத்தில் - உம். తత్త్వంనయతే."= உண்மையை நிச்சயிக்கின்றான். எனவரும். பிருதியில் - உம் - "కర్మకరానుపనయతే." =பணிசெய்பவர்களைக் கூலிகொடுத்தலால்தன்னை அடுக்கச்செய்கின்றான் - எனவரும். பிருதி=கூலி. விகணநத்தில், உம் "కరంవినయతే." அரசனுக்குக்கொடுக்கத்தக்கபாகத்தைச்சோதிக்கின்றான் - எனவரும். விகணநம்= கடன்முதலியவற்றை ஒழிப்பித்தல். கரம்=அரசிறை. வியயத்தில் - உம். "శతంవినయతే." = நூற்றைத்தருமத்தின் பொருட்டு வினியோகிக்கின்றான் வினியோகம் = உபயோகம். எனவரும் ஆதலின்.

ஈண்டு, "ఉపనయీత." என்றவினைச்சொல் "ఉప," எனவும், "నయ" எனவும், பிரிக்கப்படும். அவற்றுள் "ఉప," எது "பிராதிகணத்துள்" எடுத்தஉபசருக்கம். "నీఞ్ " என்பதுதாது. அதற்கு உறுவித்தல்பொருள். அந்த தாது "நயதி" விவகரிக்கப்படும். "ஆத்மநேபதி, பரஸ்மைபதி, உபயபதி" என்னும் மூவகைவினைச் சொற்களுள்ளன, அவை. வினைச்சொல்லின் உருபுவேறுபாடுகளும் வேதத்துள் "சுவரம்"=ஒலித்தலின் காரியவிசேடங்களும் பயனாகவுடையன. அவற்றுள், ஈண்டு "நயதி," "கரோதி ,, என்பன "பரஸ்மைபதம், ,, ஆம். "நயதே, குருதே ,, என்றாற்போல்வன ஆத்மனேபதமாம்.

## ஓதுதலின்மரபு.

இங்ஙனம் அத்தியாபனவிதி=கற்பித்தலின் மரபுநிலைபெற்ற வாறுயது. ஆகவே ஓதலின்மரபு=அத்தியயனவிதிவேறு கூறத் தக்கதில்லை. விதிக்கப்பட்ட ஓதுவித்தலுக்கு, ஓதுவது இல்லா வழி,இடன் அமையாவாகவே ஓதுதல்பொருட்டிறத்தினுல்உள்ள தாமாகலின். மரபு=விதி=இலக்கணம்.

அற்றேல், ஓதுதல் மரபின்கண்ணே கற்பனையாகத் தக்க தில்லை. என்னை ? சுருதியுள், "స్వాధ్యాయోధ్యేతవ్యః."= வேதம்ஓதத் தக்கது என்னும் விதிவாக்கிய மிருத்தலின் எனில் ?

அங்ஙனமன்று. அதிகாரி கூறப்படாமையின், அந்தவிதிக்கு அனுட்டிக்கச் செய்யத்தக்கதிறம் கூடாது நிற்றலின்.

## ஓதும்அதிகாரியாகியமாணுக்கன்மரபு.

மேற்கூறப் படுகின்றது. "விசுவஜித்து யத்தினுலேனும்," "இராத்திரிசத்திரநியாயத்தினுலேனும்," அதிகாரிவிதிக்கப்படு கின்றுன்.

என்னை ? சுருதியுள், "విశ్వజితా యజేత." = "விசுவஜித்து" என்னும் கருமத்தால் வேள்விசெய்யவேண்டுவது. எ-று.

விசுவஜித்துயாகம், என்பது, உலகமுழுவதும் வென்று, தேடிக்கொண்ட பொருளையெல்லாந்தந்து வேள்விசெய்து செலவழித்தல்.

இங்கே, அவ்விருப்பமுடையவன் என்று கூட்டிவிசேடணம் கூறப்படாமையின் அவ்வனுட்டானமே இல்லையாக முடிதலால், சுவர்க்கம்யாவரானும் விரும்பப்படுதலுண்மையாமாதலின் அவ் விருப்பமுடையவனே ஆண்டுவிசேடணமாக விதிக்கப்பட்டிருக் கின்றுன். அவ்வாறே ஈண்டுசுவர்க்கம் வேட்டோனுகிய சிறுவன் கூட்டியுரைக்கப்பட்ட அதிகாரியாகுக. வேட்டோன் = விரும்பி னேன்.

இனி "இராத்திரிசத்திரத்தில்" சுருதி. "ప్రతితిష్ఠంతిహవాఏతే యఏతారాత్రీరుపయంతి."=யாவர் இவ்விராத்திரங்களை விதிப்படி அடை கின்றுர்களோ ? அவர்கள் புகழையடைகின்றுர்கள். எ-று. என் னும் அருத்தவாதத்தால் கூறப்பட்டபுகழ், பெரும்பாலும் ஆண்டு கூறப்படாதசுவர்க்கத்தினும் அண்மையதாமாகலின் "இராத்திரி

சத்திரத்தில்" புகழைவேட்டோன் அதிகாரியாக விதிக்கப்பட்டான். அண்மை=சமீபம்.

அவ்வாறே, ஈண்டும், "పయః కుల్యాదికామః."=பாலோடுகால்வாய்=பாலோடும்படிச்செய்தவாய்க்கால் முதலியவற்றினை விரும்ஞேன் அதிகாரியாகவிருக்கக்கடவன். என்னை? சுருதியுள், "యద్ఋచో ధీతే పయసః కుల్యా అస్య పితౄన్ స్వధా అభివహంతి యద్యజూంషి ఘృతస్య కుల్యా యత్సామాని సోమఏభ్యః పవతే."=எதனால் இருக்குகளை ஓதுகின்றானோ? அவனுடையபிதிர்க்களைப் பாலின்கால்வாய்கள், "சுவதா" வை (எனவேபிதிர்திருத்தியை) செய்கின்றன. யஜுஸுக்களை ஓதினால் நெய்யின்கால்வாய்கள், அவ்வாறுசெய்கின்றன. சாமங்களைஓதினால் "சோமம்" இவர்களின்பொருட்டு பரிசுத்தஞ்செய்கின்றது. எ-று. இந்த அருத்தவாதவாக்கிய முண்மையின்.

அங்ஙனமன்று. அப்பாலோடு கால்வாய்முதலியன "பிரமவேள்வி" விதியில் விசேடமாதலின், மாணக்கனுக்குப்புத்தி யறியாமையினால் சுவர்க்கவேட்கை உண்டாகாதாகலின். பேருழைப்பினால் நேர்ந்ததாயினும், ஒன்றை யொன்றுபற்றுதலென்னுங்குற்றம் ஒழிப்பதற்கு முடியாததாக விருக்கும். எவ்வாறெனில்? சுவாத்தியாயம்=வேதத்தை யோதினால், பின்பு விதியுணரப் படுகின்றது; என்றும், விதியுணர்ந்தன்றோ? ஓதல்வேண்டும். என்றும் வருதல்காண்க. அதனால், ஓதுதலானது ஓதுவித்தலினால் உண்டாவதாமாதலின் அவ்வோதுவித்தலே விதிக்கப்படுகின்றது. ஓதுதல் விதிக்கப்படுவதில்லை. என்று கூறுவையேல்.

இப்பெருவிடயத்தை ஏனையவாதிகள்உடன்படார். என்னை? ஓதுவித்தல் நித்திய மானதல்ல, அதனால், நித்தியமாகிய ஓதுதலை ஆக்கப்பட்டது என்று கூறுவது அமையாதாகலின். ஓதுவித்தல் அநித்தமேயாம். சீவனத்தை விரும்பினவன் அதனிடத்து அதிகாரமுடைமையின்.

என்னை? அங்ஙனம் மநு கூறுதலின், வருமாறு, "షణ్ణాంతు కర్మణామస్య త్రీణికర్మాణిజీవికా। యాజనాధ్యాపనే చైవ విశుద్ధాచ్చ ప్రతిగ్రహః."=அறுதொழிலில் இந்தவேதியனுக்கு மூன்று தொழில் பிழைப்பின் பொருட்டாக விருக்கின்றது. வேள்விசெய்வித்தல், ஓதுவித்தல், பரிசுத்தனிடத்திருந்து தானம்பெறுதல் எனவாம். எ-று.

இனி ஓதுதலோ? நித்தமானது. செய்யாவிட்டால் பாவம் உண்டென மநுவால் உணர்த்தப்பட்டமையின். வருமாறு, "యో నధీత్యద్విజో వేదానన్యత్రకురుతేశ్రమమ్। సజీవన్నేవశూద్రత్వమాశుగచ్ఛతిసాన్వయః."= எந்த விருபிறப்பாளன் வேதத்தை யோதாமலே ஏனையவற்றி லுழைத்துத் திரிகின்றானோ? அவன் பிழைத்திருக்கும்போதே தனது சந்ததியாரோடு விரைவாகச் சூத்திரத்தன்மையை அடைகின்றான். எ-று. காண்க.

அதனால், ஓதுதல் தன்விதியாற்றான் உண்டாயதே யன்றி ஓதுவித்தலாலே உண்டாயதொன்றல்லவாம்.

ஒன்றை யொன்று பற்றுதலென்னும் குற்றமும் இன்று; ஓதுதலுக்கு முன்னமே சந்தியாவந்தன முதலிய கருமங்களில் எவ்வாறோ? அவ்வாறே தந்தைமுதலியோர் முன்னிலையில் விதியின் பொருள் உணரப்படுதலின்.

தந்தைமுதலியவரால், நியமிக்கப்பட்டிருத்தலினாலும், திருத்தப்பட்டிருத்தலினாலும், இவ்வாறே மாணக்கனுக்கும் தன்னுணர்ச்சியில்லாமையென்னும் குற்றமும் இருப்பதில்லை.

எவ்வாறாயினும், தைத்திரியசாகையில், "స్వాధ్యాయోధ్యేతవ్యః" என்றவாக்கியம் ஐம்பெரும் வேள்வி கூறிய இடத்தில் ஓதப்பட்டிருத்தலின், இது பிரமயாக விதியாக விருக்கின்றது. அவ்வாறாயினும், எல்லா ஸ்மிருதிகளிலும் உபநயந பூர்வமாய் "స్వాధ్యాయం" எனில்? ஓதுதலையே பெரும்பாலுங் கூறியிருத்தலின் அதற்கு மூலமாகிய சுருதியு மிருக்குமென்று கருதல்வேண்டும்.

விவராணசிரியரும், "అధ్యాపయీత" என்ற வாக்கியத்தில் "ணிச்சுப்பிரத்தியயத்திற்கு" ஏவனம் பொருளாமாதலினால், இச்சையாலடையப் படுகின்றதாமாதலின், ஈண்டுகூறப் பட்ட ஓதுதலே விதிக்கத்தக்கது என்னுங்கருத்தால், "అష్టవర్షం బ్రాహ్మణముపనయీతతమధ్యాపయీత" என்றஅவ்வாக்கியத்தை "అష్టవర్షో బ్రాహ్మణ ఉపగచ్ఛేత్సోధీయీత." என்று வேறுவகையால் பரிணமிக்கச் செய்து உபபாதனஞ் செய்தார் = உருவஞ் செய்து முடித்தனர். எல்லாவகையாலும் வேதத்தினுடைய ஓதுதல் விதி, நித்தியமாக விருக்கின்றது.

சுரௌதவிதி. "స్వాధ్యాయోఽధ్యేతవ్యః." எ-து. வேதமோதத் தக்கது எ-று. ஸ்மிருதிகளும் அவ்வாறே. "తపోవిశేషైర్వివిధైః వ్రతైశ్చ విధిచోదితైః। వేదఃకృత్స్నోఽధిగంతవ్యస్సరహస్యోద్విజన్మనా," = பலவகைப்பட்ட தவங்களின்விசேடங்களாலும் விதியால் ஏவப்பட்ட சுரௌதகருமங்களாலும் இரகசியத்தோடும் கூடியிருக்கப்பட்ட வேதங்களெல்லாம் அந்தணனால் பொருளுணர்ச்சி யுண்டாகிறவனையில் ஓதப்படுமாக. எ-று. காண்க.

## வேதமோதாவிடினும் அதன்பொருளுணராவிடினும் பாவமென்பது.

இன்னும் அவ்வாறே கூர்மபுராணத்திலும், வேதம் ஓதுதலும் அதன்பொருளை விசாரித்தறிதலு மில்லாவிட்டால் பாவமென்று பெரியோர்களால் எண்ணப்படுகின்றது. "యోఽన్యత్ర కురుతేయత్నమనధీత్య శ్రుతింద్విజః। సవై మూఢో నసంభాష్యో వేదబాహ్యోద్విజాతిభిః। నవేదపాఠమాత్రేణసంతుష్టో వైభవేద్ద్విజః। పాఠమాత్రావసాయీతుపంకే గౌరివసీదతి। యోఽధీత్యవిధివద్వేదం వేదార్థంనవిచారయేత్। ససాన్వయశ్శూద్రసమః పాత్రతాం నప్రపద్యతే."=எந்த வேதியன் வேதத்தை யோதாமலே வேறு நூல்களில் முயற்சிக்கின்றானோ? அவனே மூடன், அவனே வேதத்திற்குப் புறம்பானவன். இருபிறப்பாளர் அவனோடு பேசலாகாது. அந்தணன் வேதத்தைக்கண்ட பாடம் செய்தமாத்திரையிற்றானே திருத்தியடையலாகாது. அவ்வளவிலேயே வாசித்தலைமுடித்துக் கொண்டவன் அளற்றில் அகப்பட்டுக்கொண்ட பெற்றம்போலத் துன்பத்தை அடைவன். விதிப்படியார் வேதத்தையோதி அதன் பொருளை யுணர்தலில்லையோ? அவன், அவன் கால்வழியோடு சூத்திரனுக்கு ஒப்பானவனாய் நிற்பதன்றித் தகுதியை யடைவதில்லை. எ-று. காண்க.

## ஓதுதல் முறை.

வேதம், இவ்வாறு ஓதவேண்டுமென்பதை யாஞ்ஞவற்கியர் கூறினர். வருமாறு, "గురుంచైవాప్యుపాసీత స్వాధ్యాయార్థంసమాహితః। ఆహృతంచాప్యధీయీత లబ్ధంచాస్మైనివేదయేత్। హితంచాస్యాచరేన్నిత్యం మనోవాక్కాయకర్మభిః."=வேதத்தின்பொருட்டுஒத்தமனத்தையுடையவனாய், விரைவாக, ஆசிரியனை அடைந்து வழிபடுதல் வேண்டுவது. வாசி

யென்று விதித்தபின்பு வாசிக்கவேண்டுவது. தனக்குக்கிடைத் தனவற்றை ஆசிரியன் முன்னர் வைத்துவிடவேண்டுவது. மன மொழி மெய்களால் ஆசிரியனுக்கு எப்பொழுதும் விருப்பமான காரியங்களையே செய்யவேண்டும். எ-று. காண்க.

விஷ்ணுபுராணத்திலும், "ఉభెసంధ్యేరవింభూపతథైవాగ్నింసమాహితః। ఉదతిష్ఠేత్తథాకుర్యా ద్గురోరప్యభివాదనం। స్థితేతిష్ఠేద్వ్రజేద్యాతే నీచైరాసీతచాసనే। శిష్యోగురోర్నరశ్రేష్ఠప్రతికూలంనసంచరేత్ । తేనైవోక్తఃపఠేద్వేదం నాన్యచిత్తఃపురస్థితః। అనుజ్ఞాతశ్చభిక్షాన్న మశ్నీయాద్గురుణాతతః। శౌచాచారవతాతత్ర కార్యాంశుశ్రూషణం గురోః। వ్రతానిచరతాగ్రాహ్యో వేదశ్చకృతబుద్ధినా।,"=ஓய்! அரசனே! கேட் பீராக. இரண்டு சந்திப்பொழுதிலும் சூரியனையும் அக்கினியை யும் நன்றாகத்தொழுது எழுந்துவந்து, குரவனுக்கு மெய் மண் பட வணங்கவேண்டுவது, ஆசிரியனிருந்தால் மாணுக்கன்நிற்றல் வேண்டும். குருவெளிப் புறப்பட்டாற் றன் பின்தொடரவேண்டு வது. ஆசானிருக்கும்பொழுது அவனுசனத்திற்கும் தாழ்ந்த ஆசனத்திலிருக்கவேண்டுவது. அவனாலேயே ஓதுவிக்கப்பட்டவ னாய் வேதத்தை யோதவேண்டும். மனத்தை வேற்றிடத்தில் விடலாகாது. எதிராகவிருக்கவேண்டுவது. குருவால் கட்டளை கொடுக்கப்பட்டவனாய்ப் பிச்சையேற்றுப் புசிக்கவேண்டுவது. தான் நன்றாக சௌசசுத்தி ஆசாரசுத்தங்களைச் செய்துகொண்டு, பின்பு குரவனை வணங்கவேண்டும். விரதங்களை யனுட்டித்து, மனத்தைத் திருத்திக்கொண்டு, வேதத்தைக் கொள்ளவேண்டு வது. எ-று. காண்க.

கூர்மபுராணத்துள்ளும், "ఆహూతోధ్యయనంకుర్యా ద్వీక్షమాణోగు రోర్ముఖం। నిత్యముద్ధృతపాణిస్స్యాత్సాధ్వాచారస్సుసంయతః।"= அழைக்கப்பட்ட வனாய்க் குருமுகத்தையேநோக்கிக் கையைமேலெடுத்து ஏந்திக் கொண்டுநல்லொழுக்கமுடையவனாய்ப்பொறிகளையடக்கிவேதாத் தியயனம் செய்யவேண்டுவது. எ-று. காண்க.

## ஓதல்.

தன் குலவழக்கப்படி வந்தசாகைகளைப் பாடம்செய்வது அத்தியயனம் = ஓதுதல் என்னப்படும். அதனைவசிட்டர் கூறினர் அதுவருமாறு, "పారంపర్యాగతోయేషాం వేదస్సపరిబృంహణః। తచ్ఛాఖాకర్మ కుర్వీత తచ్ఛాఖాధ్యయనంతథా." தம்மரபில் தொண்டு தொட்டியாருக்கு

வேதங்களில் எந்தசாகை வழங்கிவந்ததோ? அவர்கள் அந்தசாகையின்படி, கருமஞ்செய்யவேண்டுவது. அந்தசாகையையே ஓதவேண்டுவது. எ-று. காண்க.

### தன் சாகையை விடலாகாது.

தன்சாகையை விட்டுவிடுதலை, அவரேவிலக்குகின்றார். வருமாறு, "యస్స్వశాఖాంపరిత్యజ్యపారక్యామధిగచ్ఛతి। సశూద్రవద్బహిష్కార్య స్సర్వ కర్మసుసాధుభిః। స్వీయశాఖోజ్ఝితాయేన బ్రహ్మతేనోజ్ఝితంపరం। బ్రహ్మహైవసవిజ్ఞేయ స్సద్భిర్నిత్యంవిగర్హితః" = யார்தன்சாகையையொழித்து அந்நியசாகைகளையடைகின்றானோ? அவனைப் பெரியோர்கள், எல்லாக்கருமங்களிலும் சூத்திரனைப் போலப் புறங்கழிக்கவேண்டுவது. தன்சாகை யாரால்விடப்படுகின்றதோ? அவனால்வேதமேயொழிக்கப்படுகின்றது. (எனவே அந்நியசாகையாற் பயனில்லையென்பது கருத்து) அவனேபிரமகத்தி செய்தவனென்று உணரத்தக்கது. நல்லோர்களால் எப்பொழுதும்இகழப்படுகின்றான் எ-று.காண்க.

### வேறுசாகைகளைக்கற்குங்காலம்.

முதற்கண் தன்சாகையை யோதிப் பின்பு எல்லாச்சாகைகளையும் ஓதவேண்டுவதென்று அவராலேயுடன் படப்பட்டது. வருமாறு, "అధీత్యశాఖామాత్మీయాంపరశాఖాంతతఃపఠేత్- தன்சாகையை யோதிப்பின்புவேறுசாகைகளையோதவேண்டுவது. எ-று.காண்க.

### இனி சுருதியைப்போலவே ஸ்மிருதிகளும் ஓதவேண்டுமென்பது.

அவ்வாறே ஸ்மிருதிகளையும் ஓதவேண்டுவது. அதனைப் பிரகற்பதிகூறினர். வருமாறு, "ఏవందండాదిభిర్యుక్తంసంస్కృత్యతనయం పితా। వేదమధ్యాపయేత్పశ్చా చ్ఛాస్త్రంమన్వాదికంతథా॥ బ్రాహ్మణోవేదమూలస్యాన్య చ్ఛ్రుతిస్మృతోఽస్యసమస్మృతః। సదాచారస్యచతథాజ్ఞేయమేతత్త్రికంసదా॥ అధీత్యచతురోవేదాన్సాంగోపాంగపదక్రమాన్ । స్మృతిహీనానశోభంతేచంద్రహీనేవశర్వరీ ॥" = இவ்வாறுதண்ட முதலியவற்றோடு கூடியிருக்கப்பட்ட புத்திரனை உபநயநத்தால் திருத்துதல்செய்து, தந்தை வேதத்தை ஓதுவிக்கவேண்டுவது. பின்பு மநுமுதலிய நூல்களையும் ஓதுவிக்க வேண்டுவது. - வேதியன் வேதத்தையே மூலமாக வுடையவனாகின்றான். சுருதி ஸ்மிருதிகளிடத்தில் ஒத்தவனாகக் கூறப்பட்டி

ருக்கின்றான். ஒழுக்கத்திற்கும் அவ்வாறே. இம்மூன்றும் எப்போதும் உணரத்தக்கது. நான்குவேதங்களும், அவற்றின் அங்க நூல்களும், உபாங்கநூல்களும், பதங்களும், கிரமங்களும், ஓதியும் ஸ்மிருதியை யுணராவிட்டால், சந்திரனில்லாத இரவைப் போல வொளிபெறமாட்டார்கள். எ-று. காண்க. (தண்டம் எது. எல்லை கடவாது நிற்கும்படி யொறுத்தல். அது மூவகைப்படும் மனோதண்டம், வாக்கு தண்டம், காயதண்டம், என்பன).

## ஓதுதலின் வகைப்பாடு.

ஈண்டு, அத்தியயனம், என்பதனால். ஐவகையாகிய வேதாப்பியாசத்தையும் கூறப்பட்டவாறாயிற்று. அதனைத்தக்ஷர்கூறினர். வருமாறு, " వేదస్వీకరణంపూర్వం విచారోధ్యయనంజపః । తద్దానంచైవశిష్యేభ్యో వేదాభ్యాసోహిపంచధా॥ ,"=முதலில் வேதத்தைப் பெறவேண்டுவது, பின் விசாரித்தல்வேண்டுவது, ஓதிப்பலகாலும்பயிலவேண்டுவது, அவ்வேத மந்திரங்களைச் செபிக்கவேண்டுவது, இதனைமாணாக்கர்க்கு ஓதுவிக்கவேண்டுவது, என வேதமோதுவது ஐவகைப் படும். எ-று. காண்க.

இன்னும் இதனை ஹாரீதரும் கூறினர். வருமாறு, " మంత్రార్థజ్ఞోజపన్ జుహ్వంస్తథైవాధ్యాపయన్ద్విజః । స్వర్గలోకమవాప్నోతి నరకంతువిపర్యయే. " = மந்திரத்தை யறிந்தவன், அருத்தத்தை அறிந்தவன், செபஞ்செய்தவன், வேள்விசெய்தவன், மாணாக்கனை ஓதுவித்தவன், இப்படிப்பட்ட வேதியன் சுவர்க்கலோகத்தை யடைகின்றான். வேறுபட்டால் நரகத்தையடைகின்றான். எ-று. காண்க.

## குருமுன்னிலையாலன்றி ஏடுமுன்னிலையால் ஓதலாகாதென்பது.

அவ்வேதம். குருமுகமாகவே ஓதற்பாலது. எழுதி யிருந்த ஏடுநோக்கி ஓதலாகாது. என்பதனை நாரதர் கூறினர். வருமாறு, " పుస్తకప్రత్యయాధీతం నాధీతంగురుసన్నిధౌ । భ్రాజతేనసభామధ్యే జారగర్భఇవస్త్రియాః" = எழுதப்பட்ட ஏட்டின் நம்பிக்கையால் குருமுகமில்லாமலே ஓதப்பட்ட கல்வி, கள்ளபுருடனோடு சேர்ந்தவள் கருப்பம் போலச்சபையில்விளக்கத்தை யடையமாட்டாது. எ-று. காண்க. (எனவே, ஆசிரியன் இவன், மாணாக்கன் இவன், என்னும் மரபு

தகுதி யின்றி, அவமானத்தை யடைதல் முதலிய குற்றம் விளையு மென்பது கருத்து).

## ஓதுங்காலத் தொழிக்கத்தக்கவை.

ஓதுதலின் கண்ணே ஒழிக்கத்தக்கவைகளை மநு கூறினர். வருமாறு "నాఽవిస్పష్టమధీయీతనశూద్రజనసన్నిధౌ । ననిశాంతేప్రతిశ్రాంతో బ్రహ్మాధీత్యపునఃస్వపేత్" திருத்தமின்றிக் குழறுதலாக ஓதலாகாது. சூத்திரர்கள் சமீபத்தி லிருக்கும்போது ஓதுவதாகாது. இரவின் கடைப் பாகத்தில் வேதத்தையோதி இளைப்பை யடைந்து மறுபடியும் உறங்கலாகாது. எ—று. காண்க.

நாரதருங் கூறினர். வருமாறு, "హస్తహీనస్తుయోఽధీతే స్వరవర్ణవివర్జితః। ఋగ్యజుస్సామభిర్దగ్ధో వియోనిమధిగచ్ఛతి. = வாக்கியங்களைக் கையால் இலக்கம் வையாமலே, சரியானசுவரம் இல்லாமலே எழுத்துக்களைச்சரியாக வுச்சரியாமலே யாவன் அத்தியயனம் செய்கின்றானோ? அவன் இருக்கு, யஜுஸு, சாமம் இவ்வேதங்களால் சுடப்பட்டவனாய் இழிந்த பிறப்பையுடைய வேற்று யோநியை அடைகின்றான். எ—று. காண்க.

வியாசரும், "అనధ్యాయేష్వధీతంయ ద్యచ్చశూద్రస్యసన్నిధౌ । ప్రతిగ్రహనిమిత్తంచ నరకాయతదుచ్యతే.," ஓதக்கூடாத காலங்களில் ஓதப்பட்டதுஎதுவோ? அதுவும், சூத்திரன்முன்னர் ஓதப்பட்டது எதுவோ? அதுவும், பொருட்பேற்றின் பொருட்டாகவே ஓதப்பட்டது எதுவோ? அதுவும், நரகத்தின்பொருட்டென்று கூறப்படுகின்றது. எ—று. காண்க. இங்ஙனமாக - ஓதல்விதியும் ஓதுவித்தல் விதியுமுற்றுப்பெற்றது.

## அநத்தியாயவிடயம்.

இனி, அநத்தியாயம் என்பது மேல் வியாசவாக்கியத்துட் கூறிப்போந்தமையின் அதனைவிளங்கக் கூறுகின்றது.

அது, இருவகைப்படும். நித்திய மெனவும் நைமித்திகம் எனவும், அவற்றுள் நித்தியத்தைக்கூறினார்; ஹாரீதர். வருமாறு, "ప్రతిపత్సుచతుర్దశ్యా మష్టమ్యాంపర్వణోర్ద్వయోః। శ్వోఽనధ్యాయేద్యశర్వర్యాంనాధ

யீతకదాచన. " = பிரதமையிலும் * சதுர்த்தசியிலும், அஷ்டமியிலும், இருபருவகாலத்திலும், அநத்தியாயதினத்தின் முன்னநாள் இரவிலும், எப்பொழுதும் விடாதும் அத்தியயனம் செய்யலாகாது. எ-று. காண்க.

இனி நைமித்திகாநத்தியாயத்தை யாஞ்ஞவற்கியர் கூறினர். வருமாறு, " శ్వక్రోష్టుగర్దభోలూక సామబాణార్తనిస్వనే। అమేధ్యశవశూద్రాంత్య శ్మశానపతితాంతికే। దేశేஉశుచావాత్మనిచ విద్యుత్స్తనితసంప్లవే। భుక్త్వార్ద్రపాణి రంభోంత రర్ధరాత్రేతిమారుతే। పాంసుప్రవర్షే దిగ్దాహే సంధ్యానీహారభీతిషు। ధావతః పూతిగంధేచ శిష్టేచగృహమాగతే। ఖరోష్ట్రయానహస్త్యశ్వ నౌవృక్షేరిణరోహణే। సప్తత్రింశ దనధ్యాయా నేతాంస్తాత్కాలికాన్విదుః। " = நாய், நரி, கழுதை, கூகை=கோட்டான் இவைகள் கூச்சலிடும்போதும், வேறு ஒருவன் சாமவேதத்தைக் கூறியிருக்கும்போதும், ஒருவன்பாணமுதலிய ஆயுதங்களால் அபாயமடைந்துகூச்சலிடும்போதும், விபத்து அடைந்தவர்கள் கூச்சலிடும்போதும், புரீடம்=மலம், பிணம், சூத்திரன் = சதுர்த்தன் அல்லது அழுபவன், அந்தமானவன்=கடையன், சுடுகாடு=மயானம், பதிதன், இவர்கள்சமீபத்திலும், சுத்தமில்லாத விடத்திலும், தான் அசுத்தனாயிருக்கும்போதும், மின்னல், இடி, குமுறல், பெருமழை, உண்டாயிருக்கும்போதும் உண்டகைகழுவின ஈரத்தோடும்,சலத்திலும், அரையிருள்=பாதிராத்திரியிலும், பெருங் காற்றிலும் மண்மாரி பெய்யும் போதும், திசைகளிற்றீப்பற்றிச்சூழ்ந்து எரியும்போதும், சந்தியாகாலத்திலும்,பனியிலும், பயத்திலும், ஓடும்போதும், பொறுக்கமுடியாத கெட்டநாற்றத்திலும், பெரியோர்கள் வந்தபோதும்,கோவேறுகழுதை,ஒட்டகம், வாகனம், யானை, குதிரை, கப்பல், படகு, மரம், நீரில்லாவிடம், இவைகளின்மேல் இருக்கும் பொழுதும், ஆகிய இம்முப்பத்தேழு நிமித்தங்களோடுங் கூடிய காலத்தைஅனத்தியாயமென்று தெரிந்துகொள்வார்கள். எ-று. காண்க.

நாய்க்குரைப்பு, கள்ளர்வரத்தை யுணர்த்தும். நரியூளை, குரூரவிலங்குகளின் வரவைக்குறிக்கும், கழுதையினைச்சல் கேட்பவர் செவிக்குத் துன்பத்

---

* சதுர்த்தசி; அஷ்டமி, என்பனவிரண்டும் ஒருமையீருக மூலத்திருத்தலின், அவ்விரண்டு திதிகளும் கிருஷ்ணபக்ஷத்தில் மாத்திரமே அநத்தியயனகாலமென்பது அந்த ஸ்மிருதி நூலாசிரியர் கருத்துப்போலும்.

தை விளைவிக்கும், கூகைகுழறல் பயத்தைவிளைவிக்கும், அன்றியும் இவ்வோசைகள் சுரபேதஞ் செய்யும். சாமவேத கானமுமது. அந்நியர் துக்கவோசையைக் கேட்டுழித் தன்றொழிலை விடுத்துத் தயவோடும் விசாரித்தல் வேண்டுமென்பதுநீதிமுடிபு. அமேத்தியம் = அருவருப்பு. பிணத்தைநோக்கின்துன்பம் வைராக்கியம் பயம் உண்டாம். சூத்திரனிடத்து ஓதில் அவன்கேட்டுத் தானுங் கற்றுணர்வன். அல்லது, அழுபவனிடத்து ஓதுவது வருத்தத்தை யுண்டுபண்ணும். அந்தமானவன் = தாழ்ந்த சாதியிற் கடையன். அவன், பஞ்சமர், சக்கிலியர், மிலேச்சருளுள்ளான். பதிதன் = சாதி, குலம், மதம் இவற்றினொழுக்கங் கெட்டவன். இவர்களருகில் அத்தியயனம் செய்தால் நாத்திகம் உண்டாம். மயானத்தில், கெட்டநாற்றம் பயம் நோய் விளையும். சுத்தமில்லாத பூமியென்பது, மிலேச்சதேசம், மான்வழங்காதநாடு, கொலைநிகழும் இடம், கள் ஊன் விற்குமிடம், வேசிமனை,சூதாடுமிடம், விளக்காதஇடம், குப்பைமேடு, கைவிலக்கமானவள் இருந்தவிடம், எச்சில் மயங்கிடம், மூத்திரபுரீடங்கள் கிடந்த இடம், இறப்பும் பிறப்பும்ஆகிய ஆசூசமனை முதலியனவாம். அசுத்தமாகிய ஆன்மாளனவே, மூத்திரபுரீடங் கழித்துச் சுத்திசெய்து கொள்ளாதிருப்பது; ஆசூச முதலியவற்றால் துக்கத்தை யடைதல்; அப்படிப் பட்டகாலத்தில் அத்தியயனம் பலியாதென்பது கருத்து. மின்னல், இடிமுழக்கம், பெருமழை, நீர்நிலை,இவைகள்அபாயம்விளையிடமாதலின், சாக்கிரதையாயிருக்கவேண்டுமென்பது. உண்டவுடன் ஓதில் உடம்புக்குக் கேடுபண்ணும். அரையிருளில் ஓதல்யார்க்கும் துன்பத்தை விளைவிக்கும். பெருங்காற்று, மண்மாரி, பனி, முதலியவை ஓதலுக்குத் துன்பஞ்செய்யும். திசை தீப்பற்றியெரிதல் முதலிய வுற்பாதங்கள் அநிஷ்டத்தை முன்தெரிவிக்கும் அசுப சகுனங்களாம். சந்திகாலத்தில் ஓதுதலால் நித்தியகருமந் தப்பும். ஓடும்போது ஓதுதல் தேகத்துன்பமும், மனம் பற்றாமையுமாம். பெரியோர்கள் வருங்கால்ஓதுவது அவர்களை யுபசரித்தலுக்குத் தடையாம். பிரயாணத்திலும், படகிலும், ஓதுதலிலிருந்தால், அபாயகாலத்தின் முன்னுணர்ச்சி யில்லாமற் போம். நீரில்லா இடத்தில் ஓதுதலால், நெஞ்சுலர்ந்தவழி யாற்றுதலில்லையாம். என்றகருத்தால் ஓதுவோர் சுகத்தின்பொருட்டு நைமித்திகாநத்தியாயத்தை யாஞ்ஞவற்கியர் கூறியவாறாக வெளிப்படுகின்றது.

வேறுசில அநத்தியாயங்கள் அங்கங்கு ஸ்மிருதிகளில்கூறப்படுகின்றது. அவைவருமாறு.

நாரதர். "అయనేషువిషువేచైవ శయనేబోధనే హరేః। అనధ్యాయస్తు కర్తవ్యో మన్వాదిషు యుగాదిషు"=தக்ஷிணாயனம், உத்தராயணம்,மேஷசங்கிராந்தி,துலாசங்கிராந்தி,விஷ்ணுசயனகாலம்,பள்ளிஎழுச்சிகாலம்,பதினான்கு மனுவாதிகாலம், நான்குயுகாதிகாலம், இவற்றுள்ளும்வேதாத்தியயனம்செய்யலாகாது. எ-று. காண்க.

அயனம். என்பது, வழி. பூகோளத்திலாயினும், பசக்கிரத்திலாயினும், மத்தியசூத்திரரோகாஸ்தானத்திற்கு, விஷுவ, என்று பெயர். அது, பூகோளத்தில், யவகோடி, இலங்கை, உரோமகம், சித்தபுரிகளுக்குச் சரியான விஷுவன்மண்டலரேகை என்று கூறப்படும். இதனை, ஆங்கிலேயர் இக்குவேட்டர் (Equater) என்று கூறுகின்றனர். இதற்குச் சமசூத்திரத்தில் சூரியன் வருங்காலம், துலாயநம் மேஷாயனம் என்னப்படும். இவைஎப்பொழுதும், மார்ச்சு (March) ௴ - 21௳ செப்டம்பர் (September) ௴ - 24௳ தொடங்குகின்றது. ஏப்பிரல் (April) ௴ 11௳ மேஷசங்கிரமணம். அக்டோபர். (October) ௴ - 15௳ துலாசங்கிரமணம், உண்டாகின்றது. அவையே விஷுவத் புண்ணியகால மென்னப்படும். அவ்விஷுவன் மண்டலரேகைக்குத் தெற்குவடக்கு என்னும் இரண்டுபக்கங்களிலும்-உ௪ - இருபத்துநாலுபாகம் (Degree) டிக்ரீ தூரத்தில், கிராந்திமண்டல வட்டமிருக்கின்றது. அதுவரையிலும் தெற்கு வடக்கில் சூரியகோளம் சாய்கின்றது, அவற்றுள் வடக்கேசாய்ந்து, அங்கிருந்து தெற்கே புறப்படுகின்ற காலம் தக்ஷிணாயநமெனப்படும். தெற்கிருந்து வடக்கே புறப்படுகின்ற காலம் உத்தராயணம் எனப்படும். திருக்கு கணிதப் பிரகாரம் இதுவே சங்கிரமணகாலமாம்,

இனிச் சித்தாந்தப்படி அயநகாலமான பின்பு, அப்போதைக்கு அயநபாகங்கள் எவ்வளவுகழிந்திருக்கின்றதோ? அத்தனை நாளைக்குப் பின்புசங்கிராந்தி காலம் வருகின்றது. அது இப்போது, உக - இருபத்தொருநாள் வித்தியாசம் உண்டா யிருக்கின்றது.

விஷ்ணுசயனகாலம் என்பது. சாந்திரமானப்படி ஆஷாடசுத்த ஏகாதசியாம். அவர் திருப்பள்ளி எழுச்சிகாலம்என்பது, அச்சாந்திரமானப்படி,கார்த்திகைசுத்த ஏகாதசியாம். இந்தநான்கு திங்களுக்கும் சாதுர்மாசியம் என்று பெயராம்.

மனுஎன்பவர், இந்திரபட்டத்தை யடைந்தவர். அவர்பிறந்தநாளே மனுவாதியாம்.

யுகங்களுக்கு ஆரம்பமான நாளே யுகாதியாம்.

## மனுவாதி.

மனுவாதியைமச்சபுராணத்துட் கூறப்பட்டது வருமாறு, "ఆశ్వయుచ్ఛుక్లనవమీ కార్తికీద్వాదశీతథా। తృతీయాచైత్రమాసస్య తథాభాద్రపదస్యచ। ఫాల్గునస్యత్వమావాస్యా పుష్యస్యైకాదశీసితా। ఆషాఢస్యాపిదశమీ మాఘమాసస్య సప్తమీ। శ్రావణస్యాష్టమీకృష్ణాఆషాఢస్యాపిపూర్ణిమా। కార్తికీఫాల్గునీచైత్రీజ్యైష్ఠీపంచదశీసితా। మన్వంతరాదయశ్చైతేదత్తస్యాక్షయకారకాః." = சாந்திரமானப்படி சைத்திரமாசத்தில், சுத்த திரிதியையும், பூரணையும், ஜேஷ்டமீ சுத்தபூரணையும், ஆஷாடமீ சுத்ததசமியும், பூரணையும்,சிரா

வணமீ பகுளஅஷ்டமியும், பாத்திரபதமீ, சுத்ததிரிதியையும், ஆசுவீஜமீ சுத்தநவமியும்,கார்த்திகமீ சுத்ததுவர்தசியும், பூரணையும்,புஷியமீ சுத்தஏகாதசியும், மாகமீ சுத்தசத்தமியும், பால்குணமீ சுத்தபூரணையும்,பகுள அமாவாசையும், இப்பதினான்கும் மனுவாதிகாலங்கள் தானத்திற்குளன்றுங்கெடாதபயனைக்கொடுக்கத்தக்கன. எ—று, காண்க.

பூருவபக்ஷத்தில் வரத்தக்க மனுவாதிகளை, பூர்வான்னமாகிய காலையும், கிருஷ்ணபக்ஷ மனுவாதிகளை அபரான்னமாகிய பகற்போதைக்கு மேலும் அனுட்டிக்கத்தக்கவென்று, நிர்ணயசிந்துவாகிய பிராமணகமலாகரத்திற்கூறப்பட்டது.

### யுகாதிகள்.

யுகாதிகள்விஷ்ணு புராணத்துட் கூறப்பட்டன. வருமாறு, "వైశాఖమాసస్యచయాతృతీయానవమ్యసౌకార్తికశుక్లపక్షే।నభస్యమాసస్యచకృష్ణపక్షే త్రయోదశీపంచదశీచమాఘే,"=வைசாகசுத்ததிரிதியையும், கார்த்திகசுக்கிலநவமியும், பாத்திரபதகிருஷ்ணதிரயோதசியும், மாகசுத்த பூரணையும், யுகாதிகாலங்களாம். எ—று. (மாதங்களைச் சாந்திரமானப்படிகொள்ளவேண்டுவது.)

### நைமித்திக அநத்தியாயவிசேடம்.

கூர்மபுராணத்துள், "ఉపాకర్మణిచోత్సర్గే త్రిరాత్రంక్షపణంస్మృతం। అష్టకాసుత్వహోరాత్రమృత్వంతాసుచరాత్రిషు,"=உபாகரும காலத்திலும்= வேதத்தைஓதத்தொடங்குங் கருமகாலமும்,உத்ஸர் ஜனகாலமும் =ஓதுவதை நிறுத்துங்காலமும், (அதுபுஷியசுத்தபூரணை). இவற்றுள் மூன்றிராப்பகலோதுவதை யொழிதல் வேண்டும்.அஷ்டகாசிராத் தகாலத்தில் ஒருபகலிரவு ஓதல்ஒழிக. இருதுக்களின் கடைநாளிரவிலும்ஒழிக. எ—று.

சிங்கராசியிற் சூரியனிருக்கும்போது, அல்லது, கர்க்கடகம், கந்நியிலிருக்கினும் வாதையில்லை; பயிர்கள் முளைத்திருக்கும்போது, குரு, சுக்கிரக்கிரகங்களுக்கு மூடதோஷ மில்லாம லிருக்கையில், எதனெவ்வாறிருக்கினும், முக்கியமாய்ச்சாந்திரமானசிராவண மாதத்திலும்இருக்குவேதிகள் திருவோணநக்ஷத்திரத்திலும், யஜுர்வேதிகள்பூரணையிலும், சாமவேதிகள் அஸ்தநக்ஷத்திரத்திலும், பூர்வான்னத்துள் வேதவுபாகருமஞ் செய்யவேண்டுவது.

### அஷ்டகாசிராத்தகாலம்.

கூர்மபுராணத்துள், "మార్గశీర్షేతథాపౌషే మాఘమాసేతథైవచ। తిస్రోష్టకాస్సమాఖ్యాతాః కృష్ణపక్షేతుసూరిభిః" = மார்க்கசிரமும், புஷியமும்,

மாகமும், ஆகியஇம்மூன்றுதிங்களின் கிருஷ்ணபக்ஷத்தில், மும்மூன்று அஷ்டகாசிராத்த காலங்கள் அறிவுடையோராற் கூறப்பட்டன. எ-று. காண்க.

கௌதமர். "కార్తికీ ఫాల్గునీమాషాఢీ పౌర్ణమాసీః తిస్రోష్టకాః"=ஆஷாடம், கார்த்திகம், பால்குணம், இம்மூன்று திங்களின் பூரணைகள் மூன்று அஷ்டகாசிராத்தமாம். எ-று. காண்க.

மேற்கூறிய கூர்மபுராண வசனத்துள் "త్రిరాత్రం" மூன்றிராத்திரி என்பன, கூறப்பட்ட பூரணைமுதல் மூன்றுதினமென்னும் பொருள், "తిస్రోష్టకాః" = சத்தமிமுதல் மூன்றுதிதிகளாம். "ఋంతాసుచరాత్రిషు" இருதுக்களின் கடையில் மூன்று இராத்திரிகளில் அத்தியயனம் கூடாது. (பன்மையீற்றினாற் கூறுதலின் மூன்றெனப் பொருள் கூறப்பட்டது).

பைட்டீநசி, "కృష్ణపక్షాత్తిస్రోష్టకామార్గశీర్షప్రభృతియఇత్యేకే"=மார்க்கசிரமுதலிய மூன்றுதிங்களில், கிருஷ்ண பக்ஷத்தில், சத்தமிமுதல் மூன்றுதினங்கள் (எனவே சத்தமி, அஷ்டமி, நவமி) அஷ்டகங்கள் என்னப்படும் என்று சிலர்கூறுவர். எ-று. காண்க.

ஆபத்தம்பர், உபாகருமமுதல்ஒருதிங்கள்வரையில் பிரதோஷத்தில் அத்தியயனம் செய்யலாகாதென்றுகூறினர். வருமாறு, "శ్రావణ్యాంపౌర్ణమాస్యామధ్యాయముపాకృత్యమాసం ప్రదోషేనాధీయీత"=சிராவணசுத்த பூரணையில் வேதமோதுவதற்கு விதிப்படி, தொடங்கிப், பின்பு ஒருதிங்கள் வரையில் பிரதோஷத்தில் அத்தியயனம் செய்யலாகாது. எ-று. காண்க.

"ప్రదోషః என்றது ஈண்டு, இரவின்முதற்பாகத்தை. திரயோதசி முதலிய பிரதோஷ காலங்களிலும் ஓதலாகாது.

ஆதித்தியபுராணம், "మేధాకామస్త్రయోదశ్యాం సప్తమ్యాం చవిశేషతః। చతుర్థ్యాంచప్రదోషేషు నస్మరేన్నచకీర్తయేత్" "మేధా." எது, சிறுகக்கூறினும் விரித்துணர்ந்து கொள்ளத்தக்க சூக்குமமும் விரைவும் வரம்பு கடவாவுண்மையுமுடைய வைதிக வுணர்ச்சியாம். இது மேதை என்னப்படும். அதனை விரும்புவோர் திரயோதசி, சத்தமி, சதுர்த்தி, இப்பிரதோஷங்களில் வேதத்தை நினைக்கலாகாது. வாயாற்கூறலாகாது. எ-று. காண்க.

மேற்கூறிய சதுர்த்தி முதலியதிதிகள் இருவகைப்பட்டால், நிச்சயிக்கவேண்டிய வகையைப் பிராஜாபதி கூறினர். அதுவருமாறு, " షష్ఠీచద్వాదశీచైవ అర్ధరాత్రోనసాడికా। ప్రదోషేనత్వధీయీత తృతీయానవనాడికా. " = ஷஷ்டி, துவாதசி, நாழிகை பாதிஇரவுக்குங் குறைவா யிருக்கினும், சாயுங்காலமானபின்பு திரிதியை யொன்பதுநாழிகை வரையிலு மிருக்கினும், அந்தத்தினப்பிரதோஷகாலத்தில் ஓதலாகாது. எ—று. காண்க.

யாஞ்ஞுவற்கியர், " త్ర్యహం ప్రేతేష్వనధ్యాయశ్శిష్యర్త్విగ్గురు బంధుషు। ఉపాకర్మణిచోత్సర్గే స్వశాఖాశ్రోత్రియేమృతే। సంధ్యాగర్జితనిర్ఘాత భూకంపోల్కానిపాతనే। సమాప్యవేదంద్యునిశ మారణ్యకమధీత్యచ। పంచదశ్యాంచతుర్దశ్యా మష్టమ్యాంరాహుసూతకే। ఋతుసంధిషుభుక్త్వాచ శ్రాద్ధికంప్రతిగృహ్యచ। పశుమండూకనకుల శ్వాహిమార్జారమూషకైః। కృతేంతరేత్వహోరాత్రం శక్రపాతేతథోచ్ఛ్రయే. " = மாணுக்கன், இருத்துவிக்கு, குரு, பந்து, தன்னுடைய சாகையை முற்றும் ஓதிய சுரோத்திரியன், இவர்கள் இறந்து மூன்றுநாள் வரையும், உபாகருமம், உத்ஸர்ஜனம், நடந்த மூன்றுநாள் வரையும், அத்தியயனம்கூடாது. சந்திகாலத்திலும், குமுறுதலும், இடிவிழுதலும், பூமிஅதிர்தலும், விண்வீள்கொள்ளி விழுதலும், இப்படிப்பட்ட வுற்பாதகாலங்களிலும் அத்தியயனத்தை ஒருபகலும் இரவும் நிறுத்திப் பின்பு " ஆரணியகவேதத்தை " ஒதியதன்மேல் அத்தியயனம் செய்யவேண்டும். சாந்திரமாசம் பிறந்த, அட்டமி, சதுர்த்தசி, பஞ்சதசி தினங்களில், சூரியசந்திர கிரகணகாலத்தில், சூதககாலத்தில், ஒருஇருதுகழிந்து வேறொருஇருது வருகின்ற சந்திகாலங்களில், சிராத்தவுணவுகளை யுண்டதினத்தில், தானம் வாங்கின தினத்தில், ஆசிரியனுக்கும் மாணுக்கனுக்கும் நடுவே பசு, தவளை, நரி, நாய், பாம்பு, பூனை, எலி, புகுந்து சென்றாலும், இந்திரத்துவஜம் எடுத்தாலும் முறிந்து விழுந்தாலும். ஒருபகலிரவு அத்தியயநம் செய்யலாகாது. எ—று. காண்க. (இந்திரத்துவசம் என்பது, திருவிழாப்பொருட்டுக் கொடியேற்றுதல் போல்வன என்பர்).

மனு, " చోరైరుపప్లుతేగ్రామే సంభ్రమేచాగ్నికారితే। ఆకాలికమనధ్యాయం విద్యాత్సర్వాద్భుతేషుచ. " = ஊரில் கள்ளருபாதி உண்டானுலும், தீப்பற்றினுலும், பயத்தால் விரைதலுண்டாயினும், இன்னும் வேறு

ஆச்சரியங்களிலும், அகாலமே யானாலும் ஓதல் ஒழிய வேண்டு வது. எ-று.

கூர்மபுராணம், "శ్లేష్మాతకస్యఛాయాయాం శాల్మలేర్మధుకస్యచ। కదాచిదపినాధ్యేయం కోవిదారకపిత్థయోః." = "శ్లేష్మాతకః" = நருவிலிமரம். "శాల్మలి." = இலவமரம். "మధుకం." = இலுப்பை. "కోవిదారం" = மலையகத்தி, அல்லது, மந்தாரைமரம். "కపిత్థం" = விளாமரம். இம்மர நீழலில் அத்தியயநஞ்செய்யலாகாது. எ-று. காண்க.

## இவ்வநத்தியாயத்திற்குஒழிபுகூறுகின்றது.

மனு, "వేదోపకరణేచైవ స్వాధ్యాయేచైవనిత్యకే। నానురోధోస్త్యనధ్యాయే హోమమంత్రేషుచైవహి" வேதத்தினுடைய உபகரணங்களிலும், நித்தியந்தான் சுவாத்தியாயஞ் செய்வதிலும், ஹோமத்திற்குக் கூறு மந்திரங்களிலும், அநத்தியாய தோஷமில்லை. எ-று. காண்க.

வேதஉபகரணம் என்பது, ஆறு அங்கநூல்கள், நித்திய சுவாத்தியாயம் என்பது, பிரமவேள்வி=வேதபாராயணம்.

சௌநகர், శౌనకః॥ "నిత్యేజపేచకామ్యేచ క్రతౌపారాయణేపిచ। నానధ్యాయోస్తివేదానాం గ్రహణేగ్రాహణేతథా," = நித்தமுஞ் செய்யும் மந்திரஜபம், காமியஜபம், வேள்வி, பாராயணம், உபாகருமம், உபதேசித்தல், உபதேசம் பெறுதல், இவற்றிற்கும் அநத்தியாய தோஷமில்லையாம். எ-று. காண்க.

கூர்மபுராணம். కౌర్మే॥ "అనధ్యాయస్తునాంగేషు నేతిహాసపురాణయోః। నధర్మశాస్త్రేష్వన్యేషు పర్వణ్యేతానివర్జయేత్" = ஆறு அங்கங்கள், இதிகாசம், புராணம், தருமசாத்திரம், ஏனையகலைகள் இவைகட்கு அநத்தியாய தோஷமில்லையாம். ஆயின் அமாவாசையும் பூரணையுமாகிய பருவங்களிற் கூடாது. எ-று. காண்க.

அநத்தியாயப் பிரகரணமுற்றிற்று.

---

# யஜ்நப்பிரகரணம்=வேள்விக்காரியம்.

---

முன்னர், ஓதுவித்தலும், ஓதுதலும். இவ்வாறு செய்ய வேண்டுவது என்று கூறப்பட்டன. இனிவேட்டலையும், வேட்பித்

தலையும் கூறுதும், அவற்றுள், வேட்டலினுடைய தோற்றத்தையும் பயனையும், ஸ்ரீகண்ணன் கூறினர். வருமாறு.

பகவற்கீதை, "సహయజ్ఞాః ప్రజాస్సృష్ట్వా పురోవాచ ప్రజాపతిః। అనేన ప్రసవిష్యధ్వ మేషవోஸ్త్విష్టకామధుక్। దేవాన్భావయతానేన తేదేవాభావయంతువః। పరస్పరంభావయంతశ్శ్రేయః పరమవాప్స్యథ। ఇష్టాన్భోగాన్హివోదేవా దాస్యంతేయజ్ఞభావితాః। తైర్దత్తానప్రదాయైభ్యో యోభుఙ్క్తేస్తేనఏవసః" = பிரமன்முதலில் பிரஜைகளை வேள்வியோடு பிறப்பித்துக் கூறியதாவது, இந்தவேள்வியால் நீவிர்பிரசவிப்பீர்களாக=பிறப்பிப் பீர்களாக. இதுநுங்கட்கு இச்சித்தவைகளைக் கறப்பதாகுக=கொடுப்பதாக. இதனால் தேவர்களை நீவிர் நினைமின், அத்தேவர்கள் நும்மை நினைக்கக் கடவர், நீவிரிருவரும் ஒருவரையொருவர் ஒருமையோடும் எண்ணி மேலான செல்வத்தைப் பெறுவீர்கள். நீவிர்செய்த வேள்வியால் உபசரிக்கப்பட்ட அவ்வானவர்கள் நும்மிச்சையான இன்பநுகர்ச்சியைத் தருவர். அவர்களாற் கொடுக்கப்பட்டவைகளை மீட்டும் அவர்கள் பொருட்டுக் கொடாமலே யாரொருவன்தானே துய்ப்பானோ? அவனேகள்ளன். எ-று. காண்க.

## வேள்விபேதங்கள்.

அந்தவேள்வி, சாத்துவிகம், இராஜசம், தாமசம் என்னும் குணபேதத்தால்மூன்றுவகையென்று அவரேகூறினர். வருமாறு, "అఫలాకాంక్షిభిర్యజ్ఞో విధిదృష్టోయఇజ్యతే। యష్టవ్యమేవేతిమనస్సమాధాయ ససాత్త్వికః। అభిసంధాయతుఫలం డంభార్థమపిచైవయత్। ఇజ్యతేభరతశ్రేష్ఠతంయజ్ఞంవిద్ధిరాజసం। విధిహీనమసృష్టాన్నం మంత్రహీనమదక్షిణం। శ్రద్ధావిరహితంయజ్ఞంతామసంపరిచక్షతే" = பயனைவிரும்பாது செய்யவேண்டுவதே கடன் என்ற உறுதியையுடைய உள்ளத்தொருப் பாட்டோடு விதியாற் காணப்பட்ட வேள்வியைச் செய்வதே சாத்துவிக வேள்வியாம். பயனை வேண்டியாயினும், பிறர்மதிக்கும் பொருட்டாயினும், செய்யப்பட்ட வேள்வியை, ஓ! அருச்சுன! இராஜசமென்று உணரக்கடவாய். விதியினுடம்பாடு, அந்நதானம், மந்திரமுறை, தக்ஷிணைதானம், சிரத்தை= இதுவே சிறந்ததென்னும் பிறழாத நம்பிக்கையோடும் கூடியகொள்கை, இவைகளின்றிச்செய்த வேள்வியைத்தாமசவேள்வி யென்னப் பெரியர் கூறுவர். எ-று. காண்க.

## உலகப்படைப்புவேள்வியின்பொருட்டு.

மஹாபாரதம், அசுவமேதபருவத்திலும், பிராமணர்முதலியோர் சிருட்டி வேள்வியின் பொருட்டுக் கடவுள் படைத்தார் என்று சிறப்பிக்கப்பட்டது. అశ్వమేధపర్వణి ॥ "యజ్ఞార్థం ద్విజా సృష్టా స్తారకాదిషుదేవతాః। గావోయజ్ఞార్థముత్పన్నా దక్షిణార్థం తథైవచ। సువర్ణం రజతం చైవ పాత్రం కుంభార్థ మేవచ। ఇధ్మార్థమథయూపార్థం బ్రహ్మచ క్రేవనస్పతిం। గ్రామ్యారణ్యాశ్చపశవో జాయంతేయజ్ఞ కారణాత్,"=வேதியர், வேள்வி செய்யும் பொருட்டே படைக்கப்பட்டார்கள். (எனவே, எல்லாவேள்வியிலும், தலைவன், புரோஹிதன், இருத்துவிக்கு, என்று நின்று வேதியனேவேட்டல்செய்கிறான். பிரமமேதவேள்வியில் பசுவுமாகின்றான். நரமேதத்தில் மனிதனே பசுவாகின்றான். என்பதுகருத்து). நக்ஷத்திரங்கள்,ஆகாயத்தின்கணுள்ளதேவர்கள், இவையெல்லாம்வேள்வியின் பொருட்டேயாம். கோக்கள்=பசுக்கள், வேள்விக்குக் கருவியும் தக்ஷிணையும் ஆகின்றன. ஆதலின் வேள்வியின் பொருட்டே பிறந்தன. பொன், வெள்ளி, தக்ஷிணைக் குதவுகின்றன. பாத்திரங்கள் வேள்விக் கலயமாகின்றன. யூபத்தம்பங்களுக்கும், "ఇధ్మం" = ஹோமஞ் செய்யும்பொருட்டுச் சமித்துக்களைச் சேர்த்துக் கட்டிய கற்றையின் பொருட்டும் பிரமன் மரங்களைப் படைத்தார். ஊரிலும், காட்டிலும் உள்ள பசுக்கள் மிருகங்கள் எல்லாம் வேள்வியின் பொருட்டே பிறக்கின்றன. எ-று. காண்க.

அந்வயவியதிரேகங்களால், வேள்வியின் பெருமை ஹாரீதனர் குறிப்பிக்கின்றனர். హారీతః॥ యజ్ఞేనలోకావిమలావిభాంతి । యజ్ఞేనదేవా అమృత్వమాప్నువన్। యజ్ఞేనపాపైర్బహుభిర్విముక్తః। ప్రాప్నోతి లోకానపరస్య విష్ణోః। నాస్త్యయజ్ఞస్యలోకోవై నాయజ్ఞో విందతేశుభం। అనిష్టయజ్ఞోపూతాత్మా భ్రశ్యతి ఛిన్నపర్ణవత్," = வேள்வியால் உலகங்கள் நிருமலமாய் ஒளிசெய்கின்றன. வேள்வியால் தேவர்கள் சாவில்லாமையை யடைந்தார்கள். வேள்வியால் பாவம் ஒழிந்தவனாய் சாவில்லாத விஷ்ணு வுலகங்களை யடைகின்றான். வேள்வி யில்லாதவனுக்கு யாருமறிய உலகமில்லை = கதியில்லை. வேள்வியில்லாதவன் சுபத்தை யறியான். வேள்வி செய்யாதவன் சுத்தமில்லாத ஆன்மாவை யுடையவனாய் கிழிந்த இலைகளைப்போல விழுந்துவிடுவான். எ-று. காண்க.

## வேள்விவிசேடம்.

வேள்விவிசேடமெனப்படுவது, அக்கினிஹோத்திரமுதலிய வையாம். அங்ஙனம் வேதத்தாற் கூறப்படுகின்றது. வருமாறு, "ప్రజాపతిర్యజ్ఞానసృజతాగ్ని హోత్రంచాగ్నిష్టోమంచపౌర్ణమాసీంచోక్థ్యం చామావాస్యాంచాతిరాత్రంచ" = பிரஜாபதி வேள்விகளைப்படைத்தார் அக்கினி ஹோத்திரம், அக்கினிஷ்டோமம், பௌர்ணமாசியம், உக்தியம், அமாவாசை, அதிராத்திரம், இவைகளையும். எ-று. காண்க. இது சுருதி.

அக்கினிஹோத்திரமுதலிய கருமங்கள் திருத்தஞ்செய்யப் யப்பட்டதீயினாலேயேமுடிக்கத்தக்கவாயிருத்தலின் அப்படிப்பட் டதிருத்தத்தைஉண்டாக்கும் ஆதானதருமம், முதலிலேயேசிந் திக்கவேண்டுவது.

## ஆதானகருமவிடயம்.

அவ்விடயத்திற்பிரஜாபதிகூறினர். வருமாறு, "సర్వ సంస్థాధికారస్స్యా దాహితాగ్నేర్ధనేసతి। ఆదధ్యాన్నిర్ధనో౽ప్యగ్నీన్ నిత్యంపాపభయాద్ద్విజః।" = ஆஹிதாக்கினியானவனுக்கு=ஆதானகரும்த்தால் தீயைப்பெற்றுக் கொண்டவனுக்குத் திரவிய முண்டாயிருந்தால்எல்லா "ஸமஸ் தை" களையும்=வேள்விக்கருமங்களையும் செய்வதற்கு அதிகார முண்டாம். தனஹீனனுைலும் இருபிறப்பாளன் பாவபயத்தினல் நாடோறும் நடத்த ஆதானகருமத்தால் தீயைத்தேடி வைத்து வைக்கவெண்டுவது. எ-று. காண்க.

அதனைச்செய்யாவிட்டால், பாவம்வருமென்று கூர்மபுரா ணத்துட்குறிப்பிக்கப்பட்டது. "కూర్మే॥ నాస్తిక్యాదథవాలస్యా దగ్నీన్నాధాతుమిచ్ఛతి। యజేతవానయజ్ఞేన సయాతినరకాన్బహూన్। తస్మాత్సర్వప్రయత్నేన బ్రాహ్మణోవావిశేషతః। ఆధాయాగ్నింవిశుద్ధాత్మాయజేత పరమేశ్వరం" = நாத்திகத்தினு லாவது, அன்றறிவோமென்னும் ஆலசியத்தினுலாவது,யார் அக் கினிகளை ஆதானகருமத்தோடு திருத்தஞ்செய்து வைத்துக் கொள்வதற்கு விரும்புவதில்லையோ? யார்வேள்வியால் தேவர் களைப் பூசிப்பதில்லையோ? அவன் பலநரகங்களை யடைகின்றுன். ஆதலால், வேதியனே யாயினும் வேறு அதிகாரியேயாயினும் எல்லாமுயற்சியாலும் அக்கினியை ஆதானகருமத்தால் திருத்தி

வைத்துக்கொண்டு பரிசுத்தமாகிய ஆன்மாவை யுடையவனாய் வேள்வியால்பரமேச்சுரனைப்பூசிக்கவேண்டுவது. எ-து. காண்க.

## ஆதானகாலம்.

வேதமும் காலமுதலியவற்றோடு கூடியிருக்கும் ஆதானகருமத்தை விதிக்கின்றது. శ్రుతిః॥ "వసంతేబ్రాహ్మణోఽగ్ని మాదధీత । వసంతోవై బ్రాహ్మణస్యర్తుః। స్వఏవైనమృతావాధాయ। బ్రహ్మవర్చసీభవతి । గ్రీష్మేరాజన్యఆదధీత। గ్రీష్మోవై రాజన్యస్యర్తుః। స్వఏవైనమృతావాధాయ। ఇంద్రియావీభవతి। శరదివైశ్యఆదధీత। శరద్వైవైశ్యస్యర్తుః। స్వఏవైనమృతావాధాయ। పశుమాన్భవతి," = இளவேனிற் பருவத்தில் வேதியன் அக்கினியை ஆதானம்செய்யவேண்டுவது அவ்விளவேனிற் காலமே வேதியனுடைய பருவமென்பதுலகறிந்தது. தனது பருவத்திலேயே இந்தத் தீயை ஆதானஞ்செய்து, பிரமவர்ச்சசு=தேஜஸ=ஒளியையுடையவனாகின்றான். க்ஷத்திரியன் முதுவேனிற் பருவத்தில் ஆதானம் செய்யவேண்டுவது.அம்முதுவேனில் அரசனுடைய பருவமாம். தனது பருவத்திலேயே இதனை ஆதானஞ்செய்து, இந்திரியங்களைக் காத்துக்கொள்பவன் ஆகின்றான். சரற்காலத்தில்=கூதிர்ப்பருவத்தில் வைசியன் ஆதானஞ் செய்யவேண்டுவது. அக்கூதிர் வைசியன் பருவமாம். தனதிருதுவிலேயே ஆதானஞ்செய்து பசுநிரையையுடையவனாகின்றான். எ-று. காண்க.

வியாசபாரதம் அசுவமேத பருவத்திலும், అశ్వమేధపర్వణి॥ "వసంతేబ్రాహ్మణస్యస్యాదాధేయోఽగ్నిర్నరాధిప। వసంతోబ్రాహ్మణఃప్రోక్తోవేదయోనిస్స ఉచ్యతే। అగ్న్యాధేయంతుయేనాథవసంతేక్రియతేనృప। తస్యశ్రీర్బ్రహ్మవృద్ధిశ్చ బ్రాహ్మణస్య వివర్ధతే। క్షత్రియస్యాగ్నిరాధేయో గ్రీష్మేశ్రేష్ఠస్సవైనృప। ఏనాధానంతువైగ్రీష్మే క్రియతే తస్యవర్ధతే। శ్రీఃప్రజాఃపశవశ్చైవ విత్తంచైవబలంయశః। శరత్కాలేతువైశ్యస్యాప్యాధానీయోహుతాశనః। శరద్రాత్రిస్స్వయంవైశ్యో వైశ్యయోనిస్సఉచ్యతే। శరద్యాధానమేవంవై క్రియతేయేనపాండవ। తస్యైవశ్రీఃప్రజాయుశ్చపశవోఽర్థశ్చవర్ధతే," = வேதியனுக்கு அக்கினிவசந்தகாலத்தில் ஆதானஞ் செய்யத்தக்கதாம். வசந்தம் வேதியனென்று கூறப்பட்டது. அது வேதத்திற்கு யோனி என்று கூறப்பட்டது. எந்தக்காரணத்தினால் அக்கினி ஆதானம்வசந்தகாலத்தில் செய்யப்படுமோ? அந்தவேதியனுக்கு ஒளி, பிரமவர்ச்சசு, வேதம், ஆன்மஞானம், சிவம், வைதிகச் செல்வம், விருத்தியாகின்றன. அரசனுக்கு கிரீஷ்மருதுவில்

அக்கினி ஆதானஞ்செய்யத்தக்கது. அதுவேசிறந்தது. கிரீஷ்மத்தில் ஆதானஞ்செய்தால் அவனுக்கு செல்வம், மக்கள், பசுநிரைகள், தனம், வல்லமை, புகழ், விருத்தியாகும். வைசியனுக்கு சரற்காலத்தில் அக்கினி ஆதானம் செய்யவேண்டுவது. வைசியன்தானே சரற்காலத்தினுடைய இராத்திரியாக விருக்கின்ருன். அந்த சரற்காலம் வைசியயோனி என்று கூறப்படுகின்றது. சரற்காலத்தில் ஆதானஞ் செய்வதால் அவனுக்குச் செல்வம், மக்கள், பசுநிரை, பொருள் விருத்தியாகின்றன. எ-று. காண்க.

"వేదయోని" =வேதத்திற்குக்காரணம். எம்,வேதத்தையேகாரணமாகவுடையதுஎனவுமாம். வேதம் எது - தீ = அக்கினி. என்னை? "జాతవేదాః" என்றலின்.வேதம்சுருதியுமாம். வேதத்திற்கூறப்பட்டது. வேதயோனி, தீயுண்டாவதற்குக் காரணமானது வேதயோனி எனப்படும். "బ్రహ్మ" வேதம், ஞானம், தீ, சிவம், என்னும்பொருள. "బ్రాహ్మణః" = பிரம சம்பந்தமானது எம், வேதியனுக்கு வேண்டுவது எனவுமாம். "శరద్రాత్రిః" = சரற்காலத்திணிரவுகளிப்புக்கு ஏதுவாயவாறு, களிப்புடை யவன். அல்லது சரற்காலத்தில் தீக்களை ஆதானஞ்செய்து கொண்டுவருபவன் "వైశ్యయోనిః"=வைசியத்துவமென்னும் வருணச்சிரமத்திற்குக் கருவியான அக்கினி ஹோத்திரம் வைசியமென்னு மொழியால் கூறப்படுகின்றது. அதற்குயோனியெனவே, காரணம்,நிமித்தம்என்னும்பொருட்டு.காலமாதலின்அந்தக்கருமத்திற்குஆதாரமாயுள்ளது சரற்காலமென்பது கருத்து.

அங்ஙனம் வசிட்டரும் கூறினர். வருமாறு, వశిష్ఠః ॥ "అవశ్యం బ్రాహ్మణోగ్నీనాదధీతదర్శపూర్ణమాసాగ్రయణేష్టిచాతుర్మాస్యపశుసోమైశ్చయజేత"= வேதியன் ஒருதலையாக அக்கினிகளை ஆதானம் செய்ய வேண்டுவது. தரிசயாகம், பூரணமாசேஷ்டி, ஆக்கிரயணேஷ்டி, சாதுர்மாசேஷ்டி, பசுயாகம், சோமயாகங்கள், இவற்ருலும் வேட்டல்கருமத்தைச்செய்யவேண்டுவது. எ-று. காண்க.

ஹாரீதனரும், హారీతః ॥ "పాకయజ్ఞాన్యజేన్నిత్యం హవిర్యజ్ఞాం స్తునిత్యశః। సోమ్యాంశ్చవిధిపూర్వేణయఇచ్ఛేద్ధర్మమవ్యయం"=நாள்தோறும் பாக எச்சத்தையும், ஹவிர் எச்சத்தையும், சௌமிய எச்சத்தையும், விதிப்படி அழியாத அறத்தை விரும்பினவன் செய்ய வேண்டுவது. எ-று. காண்க. எச்சம்=வேள்வி. அது இக்காலத்தில்யக்கியம் என்று வழங்குகின்றது.

அவை கௌதமரால் விளக்கப்பட்டன. "గౌతమః॥ అష్టకా పార్వణశ్శ్రాద్ధం శ్రావణ్యాగ్రహాయణీచైత్ర్యాశ్వయుజీతి సప్తపాకయజ్ఞసంస్థాః॥ అగ్న్యాధేయమగ్నిహోత్రం దర్శపూర్ణమాసావాగ్రయణం చాతుర్మాస్యం నిరూఢపశుబంధ సౌత్రామణీ తిసప్తహవిర్యజ్ఞ సంస్థాః॥ అగ్నిష్టోమోత్యగ్నిష్టో మఉక్థ్యష్షోడశీవాజపేయోతి రాత్రోప్తోర్యామఇతిసప్తసోమసంస్థాః॥" =

## பாகஎச்சசமஸ்தை எழுவகை.

அஷ்டகம், பார்வணம், சிராத்தம், சிராவணி, ஆக்கிரஹாயணி, சைத்திரி, ஆசுவயுஜி, இவ்வேழும் பாகஎச்ச சமஸ்தை யென்னப்படும்.

## ஹவிர்எச்சசமஸ்தை எழுவகை.

அக்கினி ஆதானம், அக்கினிஹோத்திரம், தரிசபூரணமாசங்கள், ஆக்கிரயணம், சாதுர்மாசியம், நிரூடபசுபந்தம், சௌத்திராமணி, இவ்வேழும் ஹவிர்எச்ச சமஸ்தைகள் என்னப்படும்.

## சோமசமஸ்தை எழுவகை.

அக்கினிட்டோமம், அத்தியக்கினிட்டோமம், உக்தியம், ஷோடசீ, வாஜபேயம், அதிராத்திரம், அப்தோரியாமம், இவ்வேழும் சோமசமஸ்தை யென்னப்படும்.

## மஹாஎச்சமாகிய கிரதுக்கள்.

வேறுவித மஹா எச்சமாகிய கிருதுக்களை, தேவலர்குறிப்பித்தனர். வருமாறு, దేవలః॥ "అశ్వమేధరాజసూయ పౌండరీకగోసవాదయో మహాయజ్ఞక్రతవఇతి" = அசுவமேதம், இராஜஸூயம், பௌண்டரீகம், கோசத்திரம், முதலியவை மஹாஎச்ச வேள்விகள் எனப்படும். எ-று. காண்க.

## வேள்விமூவகைஎன்பது

மதாலசர். మదాలసః॥ "నిత్యంనైమిత్తికంకామ్యంత్రివిధంకర్మపౌరుషం" = புருடன் செய்யத்தக்க கருமம், (எனவே எல்லாவேள்வியும்) சில நித்தமெனவும், சிலநைமித்திகம் எனவும், சிலகாமியம் எனவும் மூவகைப்பட்டுள்ளன. எ-று. காண்க.

## நித்தவேள்வி.

அவற்றுள். வேள்விகட்கு, நித்தத்தன்மை, அதர்வசாகையில் கூறப்படுகின்றது. வருமாறு, முண்டகோபநிஷத்து. ముండకో. పనిషత్ ॥ " మంత్రేషుకర్మాణికవయో యాన్యపశ్యంస్తానిత్రేతాయాం బహుధాసంతతాని । తాన్యాచరథనియతం " = மந்திரங்களில் எந்தக்கருமங்களை அறிவுடையோர் (வெளிப்படக்) கண்டார்களோ? அவை, திரேதாயுகத்தில்பலமுகமாக நித்தியமாய்ச்செய்யப்பட்டிருந்தன. பின்பு, அவைகளை, நித்தியமென்று கூறினர். எ—று. காண்க.

வாயஜஸநேயசாகையில், ஈசாவாஸியோபநிஷத்து. ఈశావాస్య॥ " కుర్వన్నేవేహకర్మాణి జిజీవిషేచ్ఛతం సమాః ॥" = இவ்வுலகத்தில் கருமங்களைச்செய்துகொண்டேநூறுவருடம் பிழைத்திருப்பதற்கு விரும்பவேண்டுவது. எ—று. காண்க.

சுருதிவிதிவாக்கியங்கள் " ఏతద్వైజరామర్యమగ్నిహోత్రం। జరసావాహ్యేవాస్మాన్ముచ్యతే। మృత్యునావా "=இந்த அக்கினிஹோத்திர மன்றே? மூப்புமரணமற்றது.(மூப்பிலுமரணம்வரையிலும்செய்யத்தக்கது என்பாருமுளர்)இதனால் மூப்பு=கிழத்தனம்ஒழியும். மரணமும் ஒழிக்கப்படும். எ—று.காண்க. பிழைத்திருக்கும் வரையில் என்று காலவரையறைசெய்தது, இக்கருமம் நித்தியமென்பதற்கு இலக்கணமாக விருக்கின்றது. என்க.

அவ்வாறே " యావజ్జీవ మగ్నిహోత్రం జుహుయాత్ । యావజ్జీవందర్శపూర్ణమాసాభ్యాంయజేత్ "=உடம்போடு கூடியுயிருள்ளவரையில் அக்கினிஹோத்திரத்தை ஹோமஞ்செய்ய வேண்டுவது. சீவனுள்ளவரையில்தரிசபூரணமாசயாகங்களால்வேள்விசெய்யவேண்டுவது என்றுவேதவாக்கியமே நித்தியத்துவத்தை விளக்குகின்றது.

செய்யாவழிபாவம்வருதலும் நித்தியத்துவத்திற்குஞாபகம். அங்ஙனம் அதர்வணவேதத்துட் கூறப்படுகின்றது. வருமாறு, முண்டகோபநிஷத்து. " యస్యాగ్నిహోత్రమదర్శమపౌర్ణమాసమచాతుర్మాస్యమనాగ్రయణమతిథివర్జితంచాహుతమవైశ్వదేవమవిధినాహుతమాసప్తమాంస్తస్యలోకాన్హినస్తి " = யார்க்கு அக்கினி ஹோத்திரமே யில்லையோ? இருக்கினும் தரிசபூரணமாசயாகமில்லையோ? ஆக்கிரயணேஷ்டியில்லையோ? அதிதிசற்கார மில்லையோ? ஹோமமில்லையோ?

வைசுவதேவமில்லையோ? அவிதியாக ஹோமஞ் செய்யப்படுகின்றதோ? அவை, ஏழுவரையில் அவனுடையபுண்ணிய லோகத்தைக் கெடுக்கின்றன. எ-று. காண்க. அவிதி=விதியற்றது.

அவ்வாறேமற்றொரு சுருதியிலும், "యస్యపితాపితా మహోవా సోమంనపిబేత్సవ్రాత్యః" = யார்க்குத் தந்தையாயினும் பாட்டனாயினும் சோமபானஞ் செய்யவில்லையோ? அவன்விராத்தியன்=எனவே சமஸ்காரமில்லாதவன். எ-று. காண்க

## நைமித்திகவேள்வி.

சீவனவிருப்பத்திற்கு வேறுபாடானது, மனைவேகுதல்முதலியநியதியில்லாத நிமித்தங்களை அனுசரித்து வந்தது, நைமித்திகமாம். அங்ஙனம் சுருதி கூறுகின்றது. வருமாறு, "యస్యగృహందహత్యగ్నయే క్షామవతే పురోడాశమష్టాకపాలంనిర్వపేత్" = யார்க்குமனை தீப்பட்டதோ? அவன், க்ஷாமவாந்-என்னும்-பெயருண்டாகிய அக்கினியின் பொருட்டு எட்டுக்கபாலத்தில் திருத்தஞ் செய்து வைக்கப்பட்ட புரோடாசத்தை வைத்து, ஹோமஞ்செய்கின்ற இஷ்டிகருமத்தைச் செய்யவேண்டுவது. எ-று. கபாலம் = மண்ஓடு. அதனை முன்கூறப்பட்டது.

## காமியவேள்வி, பசு, இஷ்டி.

இச்சையால் நடத்தப்பட்ட கருமம், காமியமெனப்படும். எங்ஙனமெனில்? கிருஷ்ண யஜுர்வேதம். உ-வது காண்டம். "వాయవ్యగ్ శ్వేతమాలభేత భూతికామోవాయుర్వైక్షేపిష్ఠాదేవతా" = வாயுவையே தெய்வமாகவுடைய வெள்ளைப்பசுவைச்செல்வத்தை விரும்பினோன்வேள்வி செய்யவேண்டுவது. வாயு எடுத்துக் கொடுக்கத்தக்க பலமுள்ளதெய்வம். எ-று. காண்க. இவைமுதலியன வெல்லாம் காமியபசுக்களாம்.

சுருதி, "ఐంద్రాగ్నమేకాదశకపాలంనిర్వపేత్ప్రజాకామః" = மக்கட்பேறு விரும்பினோன்இந்திரன், அக்கினியையே, தெய்வங்களாகவுடையதைப் பதினொருகபாலத்தின்மேல் வைத்து சமஸ்கரித்து ஹோமஞ்செய்யவேண்டுவது. எ-று. காண்க. இதுமுதலியன காமியேஷ்டிகள்.

அவற்றுள், காமிய கருமங்களுக்கு இச்சித்த பொருள் கிடைப்பதேபயன். நித்திய நைமித்தியங்களுக்கோவெனில்? விதிப்படி அனுட்டிக்கப்பட்டால் இந்திரலோகத்தை யடைதல் பயனும். அங்ஙனம் அதர்வணவேதத்துட் கூறப்படுகின்றது.

## தீக்கடவுளின் எழுநாக்கள்.

முண்டகோபநிஷத்து, "కాళీకరాళీచ మనోజవాచ సులోహితాయా చసుధూమ్రవర్ణా । స్ఫులిఙ్గినీవిశ్వరుప్రీచ దేవీలేలాయమానా ఇతిసప్తజిహ్వాః । ఏతేషుయశ్చరతే భ్రాజమానేషు యథాకాలం చాహుతయోహ్యాదదాయన్ । తన్నయన్త్యేతా సూర్యస్య రశ్మయోయత్రదేవానాం పతిరేకోధివాసః ॥ ఏహ్యేహీతితమాహుతయస్సువర్చసస్సూర్యస్యరశ్మిభిర్యజమానం వహన్తి । ప్రియాంవాచమభివదన్త్యోర్చయన్త్య ఏషవఃపుణ్యస్సుకృతోబ్రహ్మలోకః" = காளி, கராளி, மனோஜவை, சுலோகிதை, சுதூம்பரவருணை, ஸ்புலிங்கினி, விசுவரூபி, என்றுதீக்கடவுளின் எழுநாக்குகள் நக்குவனபோலும் உள்ளன. இவை ஒளிசெய்யும்போது, யார் காலந்தவறாது ஹோமாகுதிகளைக் கொடுத்துக்கொண்டு கருமஞ் செய்கின்றானோ? அவனைச் சூரியகிரணவடிவமாகிய அந்தநாக்கள் தேவர்க்களுக்கெல்லாம் ஒருவனே தலைவனுயுள்ளவ னிருக்கும் இடத்திற்குக் கொண்டு போகின்றன= பொருந்தச்செய்கின்றன. அவன் ஹோமஞ்செய்த ஆகுதிகள் நல்லவொளியை யுடையனவாய் அக்கருமத்தலைவனை வா! வா! என்று பிரியமான சொற்களைக் கூறிக்கொண்டு உபசரித்து, சூரியகிரணங்களால் சுமந்து கொள்ளுகின்றன, இது உனக்கு நல்லகருமத்தாலுண்டாகிய புண்ணிய கரமானபிரமலோகம். எ-று. காண்க.

## அநுசாசநீகபருவத்தில்.

ఆనుశాసనికే॥ "సుశుద్ధైర్యజమానైశ్చఋత్విగ్భిశ్చతథావిధైః। శుద్ధైర్ద్రవ్యోపకరణైర్యష్టవ్యమితి నిశ్చయః। తథాకృతేషుయజ్ఞేషు దేవానాంతోషణంభవేత్। తుష్టేషుదేవసంఘేషు యజ్ఞీయజ్ఞఫలంలభేత్। దేవాస్సంతోషితాయజ్ఞైర్లోకాంత్సంవర్ధయంత్యుత। ఉభయోర్లోకయోర్దేవభూతిర్యజ్ఞైఃప్రదృశ్యతే । తస్మాదజ్ఞాద్దివంయాతి సోమరైస్సహమోదతే। నాస్తి యజ్ఞసమందానం నాస్తియజ్ఞసమోవిధిః। సర్వకర్మసముద్దేశో దేవియజ్ఞేసమాహితః," = பரிசுத்தனாகிய யஜமானனாலும், அப்படிப்பட்ட இருத்துவிக்குகளாலும், சுத்தமாகிய ஏனைய வுபகரணங்களால், வேள்வி செய்யப்படுமாக. அவ்வாறு செய்யப்பட்ட வேள்விகளிடத்தில்,

தேவர்களுக்குக் களிப்புண்டாம். தேவர்கூட்டங்களிப் பினையடைந்தால், வேள்வி செய்தவன் அதன்பயனை யடைவன். வேள்விகளால் களிக்கப்பெற்ற தேவர்கள், உலகங்களை விருத்திசெய்கின்றார்கள். ஓ! உமையே! இரண்டுலகங்களினுடைய செல்வமும் வேள்வியால் வெளிப்படுகின்றது. ஆதலால் வேள்வியால் சுவர்க்கத்தை யடைகின்றான். தேவர்களையும் களிப்பிக்கின்றான். வேள்வியோடு ஒத்ததானம் வேறில்லை. அவ்வேள்வியோடு ஒத்தவிதியுமில்லை. எல்லாக்கருமங்களின் நோக்கமும் வேள்வியில் அடங்கி இருக்கின்றன. எ-று. காண்க.

## நித்த கருமஞ்செய்யாத குற்றத்திற்குப் பிராயச்சித்தம்.

ஒருவேளை எவ்வாறாயினும் நித்தக்கருமம் நடவாது தப்பிவிடுமாயின், அப்போது அதற்குப்பரிகாரம் பிரஜாபதிகூறினர். வருமாறு, ప్రజాపతిః ॥ "దర్శంచపూర్ణ మాసంచ లుప్త్వాథో భయమేవవా । ఏకస్మిన్కృఛ్రపాదేన ద్వయోరర్ధేనశోధనం। హవిర్యజ్ఞేష్వశక్తస్య లుప్తమప్యేకమాదితః। ప్రాజాపత్యేనశుధ్యేత పాకసంస్థాసుచైవహి । సంధ్యోపాసనహానౌతు నిత్యస్నానంవిలుప్యచ । హోమంనైమిత్తికంశుధ్యే ద్గాయత్ర్యష్టసహస్రకృత్ । సమాంతేసోమయజ్ఞానాం హానౌచాంద్రాయణంచరేత్ । అకృత్వాన్యతమంయజ్ఞం యజ్ఞానామధికారతః । ఉపవాసేనశుధ్యేత పాకసంస్థా సుచైవహి," = தரிசேஷ்டியேனும், பூரணமாசேஷ்டியேனும், அவ்விரண்டு மேனும் நடவாது விடுபட்டால், ஒன்று தவறினால், "பாதகிருச்சிரம்" = கால்கிருச்சிரம் பிராயச்சித்தமாம். இரண்டு தவறினால், அரைகிருச்சிரம் பிராயச்சித்தம். ஹவிர் எச்சம் செய்வதற்கு அசத்தனானவனுக்கு முதலிலிருந்து ஒன்றுசெய்யாது விட்டாலும் "பிராஜாபத்திய கிருச்சிரத்தால் சுத்தியுண்டாம். பாகவேள்வியிலும் இவ்வாறே. சந்தியாவந்தனம் ஔபாசனம், நித்தியஸ்நாநம்லோபித்துப்போனால், எண்ணாயிரம் உருகாயத்திரி ஜபஞ்செய்தலினாலும், நைமித்திக ஹோமத்தினாலும் சுத்தியாம். வருடமுடிவில் சோமயாகம் செய்யாவிட்டால், சாந்திராயண விரதஞ் செய்யவேண்டுவது. வேள்விகட்கு அதிகாரியா யிருந்துகொண்டு, அவ்வேள்வியுள் எதுவாயினும் ஒரு வேள்வியைச் செய்யாவிட்டால் அவன் உபவாச விரதத்தால்= பட்டினி கிடத்தலால் சுத்தனாவான். பாகவேள்வியிலும் அவ்வாறே. எ-று. காண்க.

காத்தியாயனரும், కాత్యాయనః ॥ పితృయజ్ఞాత్యయేచైవ వైశ్వదేవాత్యయేపివా। అనిష్ట్వానవయజ్ఞేన శవాన్నప్రాశనే తథా । భోజనే పతితాన్నస్య చరుర్వైశ్వానరోభవేత్ " = பிதுர்வேள்வி தவறினாலும், வைசுவதேவம் தவறினாலும், புதிய அன்னத்தை உண்ணும் பொழுது செய்யத்தகும் புது வேள்வி செய்யாவிட்டாலும் (எனவே ஆக்கிரயணேஷ்டி செய்யாவிட்டாலும், பதிதனுடை அன்னத்தைப் புசித்தாலும், வைசுவாநரனையே தெய்வமாகவுடைய சருஹோமஞ் செய்யவேண்டுவது. எ-று. காண்க.

## நித்த கருமத்தை விடலாகாது.

சொல்லப்பட்டதக்ஷிணை யவ்வளவுகொடுக்கத்தக்க தனமில்லாவிட்டாலும் நித்தகருமத்தைச் செய்யாது விடலாகாது. அதனைப்போதாயனர் கூறினர். வருமாறு, " బోధాయనః ॥ యస్యనిత్యాని లుప్తానితథైవాగంతుకానిచ॥ సుపథస్థోపినస్వర్గం గచ్ఛేత్సపతితోహిసః॥ తస్మాత్కందైఫలైర్మూలైర్మధునాథరసేనవా। నిత్యంనిత్యానికుర్వీతనచనిత్యా నిలోపయేత్ ,"=யார்க்கு நித்திய கருமமும், அவ்வாறே நைமித்தகங்களும் உலோபித்து விடுமோ? அவன் நல்லமார்க்கத்திலிருப்பவனாயிருந்தபோதினும், சுவர்க்கத்தை யடையமாட்டான். அவன் பதிதனாகிப் போகின்றானல்லவா? ஆதலால், கிழங்கு, வேர், பழங்கள், தேன், இரதம், இவைகளாலாயினும் நாடோறும் நித்தகருமங்களைச் செய்யவேண்டுவது; நித்தகருமங்களைவிடலாகாது. எ-று. காண்க.

## மேல்வினா.

அற்றேல்,திரவியம்போதாவிடின்சோமயாகம்செய்யவேண்டுவதில்லை அதனைமனுகூறினர். మనుః ॥ యస్యత్రైవార్షికంభక్తం పర్యాప్తంభృత్యవృత్తయే। అధికంవాపివిద్యేత ససోమంపాతుమర్హతి " = யாருக்குப் பரிசனங்களோடுதிருத்தியடையும் பொருட்டு மூன்றுவருடத்திற்குப்போதுமானதிரவிய முள்ளதோ? அதற்கும் அதிகமாக விருக்கின்றதோ? அவன், சோமபானஞ் செய்வதற்குத் தக்கவனாக விருக்கின்றான். எ-று. காண்க.

யாஞ்ஞவற்கியரும், యాజ్ఞవల్క్యః ॥ " త్రైవార్షికాధికాన్నోయస్సహి సోమంపిబేద్ద్విజః " = மூன்றுவருடத்திற்குப்போதுமானதற்காயினும் அதிகமாகிய ஆகாரம் உண்டாயுள்ள வேதியன்யாரோ? அவன்

சோமத்தைப்பானஞ் செய்வதற்குத் தக்கவனாக விருக்கின்றான். எ-று. காண்க.

மூன்றுவருடத்திற்குப் போதுமான வுணவுகிடையாவிட்டால், சோமயாகத்திற்கு முன்செய்யத்தக்க சிறுகருமங்களாகிய தரிசயாக முதலியனவற்றைச் செய்யவேண்டுவது. இதனையும், அவரேகூறினர். வருமாறு, యాజ్ఞవల్క్యః॥ ప్రాక్సౌమికీః క్రియాః కుర్యాద్యస్యాన్నం వార్షికం భవేత్ " = யாருக்கு வருடத்திற்குப்போதுமான உணவுள்ளதோ? அவன், சோமயாகத்திலும்முன்செய்யத்தக்க கருமங்களைச்செய்யவேண்டுவது. எ-று. காண்க.

அற்பமாகிய பொருளுடையவனுக்கு வேள்வி தகாதென்று மனுவால் விலக்கப்படுகின்றது. வருமాறு, పుణ్యాన్యన్యాని కుర్వీత శ్రద్దధానో జితేంద్రియః ॥ న త్వల్పదక్షిణైర్యజ్ఞైర్యజేతేహ కథంచన ॥ ఇంద్రియాణి యశః స్వర్గమాయుః కీర్తిం ప్రజాః పశూన్। హంత్యల్పదక్షిణో యజ్ఞస్తస్మాన్నాల్పధనో యజేత్ "= வேறாகிய புண்ணிய காரியங்களைச் செய்துகொண்டு ஜிதேந்திரியன் = பொறிபுலனடக்கினவனா யிருக்கவேண்டுமே யல்லது. எவ்வளவு அசந்தர்ப்ப மாயினும் குறைந்த தக்ஷிணையோடுங்கூடிய வேள்வியை வேட்டலாகாது. குறைந்த தக்ஷிணைகளையுடைய வேள்வியையும், பொறிகளையும், யசஸையும், சுவர்க்கத்தையும், ஆயுளையும், கிர்த்தியையும், மக்களையும், பசுக்களையும், கெடுக்கின்றது; ஆதலின், அற்பதனமுடையவன் வேள்விசெய்யலாகாது. எ-று. காண்க.

மச்சபுராணத்திலும், మత్స్యపురాణే॥ " అన్నహీనో దహేద్రాష్ట్రం మంత్రహీనస్తు ఋత్విజః। ఆత్మానం దక్షిణాహీనో నాస్తి యజ్ఞసమో రిపుః। " = அங்கசாந்தியில்லாத வேள்வி, இராச்சியத்தைச் சுட்டுவிடும். மந்திரமில்லாத வேள்வி, அவ்வாறே யிருத்துவிக்குகளைச்சுடும். தக்ஷிணைகுறைந்த வேள்வி, தலைவனைச்சுடும். ஆதலால், வேள்வியோடு ஒத்தபகையில்லை. எ-று. காண்க.

இங்ஙனம் கூறுதலின், இப்பிரமாண வுரைகளெல்லாம், " కందైర్మూలైః " என்றபோதாயன வுரையோடு முரணுகின்றதே எனில்?

## மேல்விடை.

அங்ஙனமன்று. இவ்வுரைகளெல்லாம், காமியவேள்வியைக் குறித்ததாகலின். முற்றும் அனுட்டிக்கத்தக்க ஆற்றலிருந்த விடத்தே காமியகருமஞ் செய்யவேண்டுவது; என்று, பூருவமீமாம்ஸம். சூ-வது அத்: கூறுதலால். அவ்வாறே சுருதி “ఐంద్రాగ్నమేకాదశకపాలంనిర్వపేత్ప్రజాకామః”=மக்களிச்சையுள்ளோன் இந்திரன் அக்கினியென்னு மிரண்டு தெய்வங்களையுடையதற்குப் பதினொரு கபாலத்தில் வைத்துசமஸ்கரிக்கப்பட்டஅவிசைஅர்ப்பிக்கவேண்டும். எ-று. காண்க இது அதிகரண விடயவாக்கியம்.

இங்கே சத்தியுள்ளமட்டில் செலுத்துவதற்காயினும் அதிகாரமுண்டோ? அங்ஙனமன்றி எல்லா அங்கத்தோடும் நிறைவேற்ற வேண்டுவதோ ? என்பது ஐயவினா. இதுசமுசயம்; அல்லது விசயவாக்கியம்.

நித்திய கருமங்களின் விடயமாக இயன்றமட்டில் நடத்தலாமென்று மேலே அதிகரணத்தில் நிச்சயிக்கப்பட்டிருத்தலின், அவ்வாறே யிதனையும் செய்யக்கூடுமேயெனில்? கூறுதும் இது சங்கதி = மேற்கூறப்பட்டதனோடியையும் பூருவபக்கமும் கூறிய வாக்கியமாம்.

அசத்தனே யாயினும் நித்த கருமங்களை விடக்கூடாதாமாகலின் இயன்றளவேனும் செய்யவேண்டுவது. நித்தகருமங்களை விடக்கூடாது. ஏனெனில்? பிழைத்திருத்தல் முதலிய நிமித்தங்களினால் அந்தநித்தகருமங்களின்வெளிப்பாடு, அல்லது, செய்யத்தக்க கடமையுண்டாயிற்று. நைமித்திகத்தைப்பற்றி அப்படிப்பட்ட வெளிப்பாட்டுக் கடமை யில்லா விட்டால் நிமித்தத்தன்மைக்கே கெடுதி வருகின்றது. காமியமோ? நிமித்தமாகாது. இதனால் ஒருதலையாக வேள்வியை வெளிப்படச்செய்தலின். அதனால், காமிய கருமத்தைவிடக் கூடாததல்ல. அங்ஙனமானால், பயன்சித்திக்கும்பொருட்டே காமியகருமம் அனுட்டிக்கத்தக்கதா யிருத்தலினானும், எல்லா அங்கத்தோடுங்கூடிய முதற்கருமத்தை யொழித்துப் பயனுண்டாகாதாம் ஆதலினானும் எப்போது எல்லாஅங்கத்தையும் அனுட்டிப்பதில் ஆற்றலுண்டாயிருக்கின்றதோ? அப்போதே, காமியகருமத்தை அனுட்டிக்க

வேண்டுவது, என்பது சித்தாந்தமாம். இங்ஙனம் வேட்டல் விடயமுற்றிற்று.

### வேட்பித்தல்.

இங்ஙனம்.வேட்டல்விளக்கப்பட்டது. இனிவேட்பித்தலின் விடயமோ வெனில்? அவ்விதி வேதத்துட் கூறப்படுகின்றது.வருமாறு, "ద్రవ్యమార్జయన్బ్రాహ్మణః ప్రతిగృహ్ణీయాద్యాజయేదధ్యాపయేద్వా"=திரவியத்தைத் தேட விரும்பிய வேதியன் தானம்வாங்க வேண்டுவது. வேட்பித்தலைச் செய்யவேண்டுவது. ஓதுவித் தலையேனும் செய்யவேண்டுவது. எ-று. காண்க.

இது நித்தியமான விதியல்ல.செய்யாவிட்டால்பாவம்வரும் என்பது முதலிய நித்தவிலக்கண மின்மையின். பிறவெனின். காமிய விதியாக விருக்கின்றது. பொருளைத் தேடுவதில் இச்சையையுடையவன் அவ்விடயத்தில் அதிகாரியாயிருத்தலின். அதனுள்ளும் இது அரியவிதியன்று. (அரியவிதி=அபூர்வவிதி, அபூர்வம் = புண்ணியமு மாம்). யாஜனம் = வேட்பித்தல் என்பது சீவனஉபாயமாக வந்ததாமாகலின். வேட்பித்தல் சீவனத்திற்கு ஹேதுவென்பது மார்க்கண்டேய புராணத்துட் கூறப்பட்டது. வருமாறு, "యాజనాధ్యాపనే శుద్ధే తథా శుద్ధప్రతిగ్రహః। ఏషా సమ్యక్సమాఖ్యాతా త్రితయం తస్య జీవికా"=வழுவற்றவேள்விசெய்வித்தல்,குற்றமற்ற வோதுதலைச் செய்வித்தல், அவ்வாறேஇழுக்கற்றதானம் வாங்குதலாகியஇம்மூன்றும்அவனுக்குச் சீவனஉபாயமென்று நன்றாகக்கூறப்பட்டது. எ-று. காண்க.

இது பரிசங்கியா விதியுமன்று; நித்தியப்பேறு இல்லாமையின். அதனால், சார்பில் நேர்ந்ததாமாகலின் இது நியமவிதியாக விருக்கின்றது.

அந்த நியமம் புருடார்த்த மாவதன்றி கிரதுவர்த்த மல்லவாம். (வேள்வியின் பொருட்டல்ல என்பதுகருத்து. அருத்தம்= பயன்). என்னை? பொருளைத்தேடும் வழக்குடைமை புருடார்த்தமென்று பூருவமீமாம்ஸம்."லிப்ஸா"சூத்திரத்தில் விசாரிக்கப்பட்டிருத்தலின்.

அதுவருமாறு. பொருட்பேறு வேள்வியின் பொருட்டோ? புருடன்பொருட்டோ? என்பது சமுசயம்=ஐயம்.

வேள்வியின் பொருட்டே என்பது. அவ்விடத்துப் பூருவ பக்கமாம். அங்ஙனங்கொள்ளில், நியமத்திற்குப்பயனுண்டாதலின். வேதியனுக்கு வேட்பித்தலாதியானும் வைசியனுக்கு உழவுமுதலியவற்றானும் பொருட்பேறு உண்டாக வேண்டுமென்பதன்றோ? நியமம். அது புருடார்த்தமென்னும் பக்ஷத்தில் அநர்த்தமாகின்றது. என்னை? வேறு உபாயத்தால் சம்பாதிக்கப் பட்ட பொருளும் பசியையொழித்தன் முதலிய புருடப் பிரயோசனத்தைத் தருதலால். வேள்விக்காரியமோ? வேறுவகைப்பொருளாலுண்டாவதல்ல. ஆதலால், அங்கு = அவ்வேள்விக் காரியத்தில் நியமம் பயனுள்ளதே யாம். எனில்?

அங்ஙனமன்று. திரவியமல்லவோ? தேடப்பட்டதாய் புருடனைத் திருத்திசெய்விக்கின்றது. அதனால் அதற்குப் புருடார்த்தமென்பதே காட்சியளவை யாற் காணப்படுகின்றது. வேள்விக்காரியத்தின் பொருட்டாயின், நியமத்திற்கு வேறுபட்ட வகையால் முடிவதன்றா மாதலின், அது கற்பிக்கப்படுகின்றது. "க்லுப்தம் கல்ப்யஸ்ய ஸாதகம்" = உரியவாக வகுக்கப்பட்டது, கற்பிக்கப்பட்டதற் காயினும் ஆற்றலுடையது. எ - று. ஆயின், புருடார்த்தத்தின் பொருட்டே பொருள்தேடுவதாமாயின், உண்டிமுதலியனபோல் வேள்விக்காரியமும்புருடனுடையபயனாகவேயிருத்தலின், அதன் பொருட்டு என்றும் பொருட்டிறத்தால் கொள்ளப்படுகின்றது. இனி, நியமமோ? புருடனுடைய பயன்பொருட்டேயாயினும், தேடும்வகையில் சிறிது அதிஷ்டத்தை=புண்ணியத்தை யுண்டு பண்ணுகின்றது. (எனவே, புருடார்த்தமேயாயினும் புண்ணியமாகின்றது என்பதுகருத்து). ஆகவே, கிரதுவின்பொருட்டு என்றே வாதிப்பதில், சீவனலோபத்தினால் வேள்வியும் பலியாதுவிடும். ஆதலால், வேட்பித்தல் முதலிய கருமங்கள் புருடார்த்தத்தின் பொருட்டே என்று தேற்றப்படுகின்றது. இது சித்தாந்தம்.

இருத்துவிக்குகள் ஒழிய வேட்பிக்கும் புரோகிதன் வேறு ஒருவனும் இல்லையே எனில்?

அங்ஙனமன்று. ஆபத்தம்ப சூத்திரத்தில். பதினாறுஇருத்துவிக்குகளையும் கொள்ளவேண்டியவகைமைசொல்லி, யாஜனம்

செய்விக்கும் பதினேழாவதாவானைக் கொள்ளுவதை வேறாகக் கூறுதலின். வருமாறு.

ఆపస్తంబసూత్రం॥ "సదస్యంసప్తదశంకౌషీతకినస్సమామనంతిసకర్మణాముపద్రష్టా భవతి". = கௌஷீதகி சாகையை யுடையவர்கள். "சதசியன்"= சபைக்குரியன் என்பவனை பதினேழாவதோனாகக் கூறுகின்றனர். அவன் கருமங்களுக்கு அருகிருந்து பார்ப்பவனாக விருக்கின்றான். எ-று. காண்க.

ஆதலால், வசிட்டவமிசத்தில் பிறந்த சாத்திய ஹவ்விய னென்னும் மஹாரிஷியினுடைய தேவபாகத்தின் பிரசினவாக்கி யத்தில் = கேள்வியில், சிருஞ்சயர் என்னும் அந்தணர்களைக் குறித்து தைத்திரீயசாகையின் பிராமணத்தில் வேதங் கூறு கின்றது. வருமாறு, "వాసిష్ఠో హసాత్యహవ్యో దేవభాగం పప్రచ్ఛయత్సృంజ యాన్బహుయాజినో யంయజఇతి" = வசிட்டர் மரபிலுதித்த சாத்திய ஹவ்வியனென்பவர் தேவபாகனையடைந்துபலவேள்விகள்செய்த சிருஞ்சயரால் வேள்வி செய்வித்திரன்றோ? என்று வினவினர். எ-று. காண்க.

அவ்வாறே, கௌஷீதகிப்பிராமணத்தில், சித்திரன் என்ப வனை நோக்கிச் சுவேதகேது என்பவனுக்கு வேள்விசெய்வித்தற் றலைமை கூறப்பட்டது. வருமாறு, "చిత్రోహవైగార్గ్యాయణిర్యక్ష్యమాణ ఆరుణిం వవ్రేసహపుత్రంశ్వేతకేతుంప్రతిహయాయయాజయేతి" = சித்திரனென்று புகழ்பெற்ற கர்க்கர் கோத்திரத்திற் பிறந்தவன் வேள்வி செய்யக் கருதினவனாய், அருணன் புத்திரனாயும் தன்மகனோடு கூடியிருப் பவனாயு முள்ள சுவேதகேது என்பவனை அழைத்து. என்னால் வேள்விசெய்வியும் என்று கோடித்தார். எ-று. காண்க. கோடித் தல் = ஏற்றுக்கொள்ளுதல்.

ஆதலால் இருத்துவிக்குகளே யன்றி வேறுஒருவன் சதசி யன் என்பவன் வேள்வி செய்விப்பவனாம்.

இருத்துவிக்குகள் வேட்பிப்பவராக விருக்கினுமிருக்க.எவ் வகையாலும் வேட்பித்தல்என்பது,வேதியர்க்குச்சீவனப்பொருட் டாக விருக்கின்றது.

## வேட்பித்தலில் உபவீதவிடயம்.

அவ்விடத்து வேட்பித்த லிவ்வாறு செய்ய வேண்டுவ தென்னும் வடிவத்தால். மான்றோல், நூலாடை என்னும், இரண்டி லொன்றினால் உபவீதமுண்டா யிருத்தல் தைத்திரீய சாகையில் விதிக்கப்படுகின்றது. வருமாறு, శ్రుతి ॥ "తస్మాద్యజ్ఞోపవీత్యేవాధీయీత యాజయేద్యజేత వా యజ్ఞస్య ప్రసృత్యా అజినం వాసో వా దక్షిణత ఉపవీయ" = அதனால் வுபவீதமுடையவனாகியே ஓதல் வேண்டும், வேட்பித்தல் செய்யவேண்டும். வேள்வியும் செய்தல்வேண்டும். வேள்வி நடக்கும்பொருட்டு மான்றோலாயினும் நூலாடையாயினும் வலமாக வுபவீதமாகும்படி தரித்து. எ-று. காண்க.

## வேட்பித்தலாதியில், இருடி, தேவதை, சந்தசுவிடயம்.

மந்திரங்களில், இருடி, தேவதை, சந்தசு, முதலியவற்றை யுணர்ந்திருப்பது வேட்பித்தலுக்கு அங்கமென்று, சந்தோகப் பிராமணத்தில் நன்றாகக் கூறப்பட்டுள்ளது. வருமாறு, "యో హవా అవిదితార్షేయచ్ఛందో దైవత బ్రాహ్మణేన మంత్రేణ యాజయతి వా అధ్యాపయతి వా స్థాణుం వర్చ్ఛతి గర్తం వా పద్యతే ప్రవా మీయతే పాపీయాన్భవతి యాతయామాన్యస్య ఛందాంసి భవంత్యథ యో మంత్రే మంత్రే సర్వమాయురేతి శ్రేయాన్భవత్యయాతయామాన్యస్య ఛందాంసి భవంతి తస్మాదేతాని మంత్రే మంత్రే వింద్యాత్" = யார் இருடி, சந்தசு, தேவதை, பிராமணம் இவற்றைத்தெரிந்துகொள்ளாம லிருக்கிற மந்திரங்களால் வேள்வி செய்விக்கின்றானோ? ஓதுவிக்கின்றானோ? அவன்கல்லை யாவது அடைகின்றான் குழியிலாவது விழுகின்றான். செத்தாவது ஒழிகின்றான். பாவியாகின்றான் அவன் கற்றவேதம் பழமைப்பட்டு = பாசியால் மூடப்பட்டுப் போகின்றது. மேலும், யார்? ஒவ்வொரு மந்திரத்திலும் அவற்றையெல்லா முணர்ந்து மேற்கொண்டு செல்லுகின்றானோ? அவன் தீர்க்காயுளை யடைகின்றான். புகழுடையவனாகின்றான். சிறந்தோனாகின்றான். அவன்கற்றவேதம் பாசியால் மூடப்படாதது ஆகின்றது. அதனால் இவற்றை ஒவ்வொரு மந்திரத்திலும் அறிந்துகொள்ளவேண்டுவது. எ-று. காண்க.

## வேட்பித்தலேபாவமென்றுபூர்வபக்ஷம்.

அற்றேல், ஒவ்வோரிடங்களில்வேட்பித்தலும், தானம்வாங்குதலும், பழிக்கப்பட்டிருத்தலின், அவற்றைச்செய்தவனுக்குவேத

பாராயணம்.காயத்திரிஜெபம்,செய்வது பிராயச்சித்தமென்றுவே தத்தாற்கூறப்பட்டது. வருமாறு, " రిచ్యతఇవవాఏష ప్రెవరిచ్యతెయోయాం జయతి ప్రతివాగృహ్ణాతియాజయిత్వా ప్రతిగృహ్యవానశ్నన్ త్రిస్స్వాధ్యాయంవెదమధీయీ తత్రిరాత్రం వాసావిత్రీంగాయత్రీమన్వాతిరేచయతి " = கீழ்வீழ்பவனைப்போல, அல்லது,புறம்பாக்கப்பட்டவனைப்போல;யார்? வேள்விசெய்விக்கின்றானோ? யார்தானம் வாங்குகின்றானோ? அவன் நன்றாகக் கீழ் விழுகின்றான்;அல்லது, புறம்பாக்கப்படுகின்றான். வேள்விசெய்வித்தாலும், தானம்வாங்கினாலும்,உண்டியையொழித்து,மூக்காலும் வேதமுழுவதும் பாராயணஞ் செய்யவேண்டுவது. மூன்றுபகலிலும் மூன்று இரவிலும் * சாவித்திரிமந்திரத்தையாவது,சவித்துருவைத்தெய்வமாகவுடைய காயத்திரிமந்திரத்தையாவது, செபம் செய்யவேண்டுவது. உடனே மேலெழுகின்றான் எ-று. காண்க.

அவ்வாறே வேறுமற்றோரிடத்தும், சுருதி " దుహాహవాఏషఛందాగంసియోయాజయతిసయేనయజ్ఞక్ర తునాయాజయేత్సోరణ్యం పరేత్యశుచౌదేశేస్వాధ్యాయమెవైన మధీయన్నాసీతతస్యానశనందీక్షా స్థానముపసదఆసనగ్ం సుత్యావాగ్జుహూమనఉపభృద్ధృతిర్ధ్రువా ప్రాణోహవిస్సామాధ్వర్యుస్స్వా ఏషయజ్ఞః ప్రాణదక్షిణోనంత దక్షిణస్సమృద్ధతరః " = யார்! வேள்வி செய்விக்கின்றானோ? அவன்வேதங்களைப் பிழிகின்றவனாகின்றான், எந்த வேள்விக்காரியத்தினால் வேட்பித்தலைச் செய்கின்றானோ? அவன் காட்டிற்குச்சென்று பரிசுத்தமான இடத்தில் அந்த வேதத்தையே ஓதிக்கொண்டு உட்காந்திருக்கவேண்டுவது. அவனுக்கு உணவையொழித்தலே தீக்ஷையாம். அசைவற்றிருத்தலே "உபசதம்" என்னும் வேள்வியங்கமாம். ஆதனமிட்டிருத்தலே "சுத்தியா" என்னும்வேள்வியங்கமாம்.அவனதுவாக்கே=சொல்லே, జుహూః என்னும் ஹோமபாத்திரமாம். அவன்மனமே "உபபிருது" என்னும்

* " సావిత్రీ " என்பது " షూఙ్ " தாது. இதற்கு பெறுதல் பொருள். " సవితా " = பெறுகின்றவன். இதற்குப் பிராதிபதிகம் " సవితృ " சவித்துரு சம்பந்தம் சாவித்திரி என்றபடி. எனவேஇவ்வுலககருத்தாவின் மந்திரம் .எறு. " గాయత్రీ " என்பதற்கு. "గాతారంత్రాయతేయస్మాద్గాయత్రీత్యభిధీయతే" என்பதனால், செபிக்கின்றவனை எதுகாக்கின்றதோ? அது அந்தகாரணத்தால்காயத்திரி என்று சொல்லப் படுகின்றது. அந்தக்காயத்திரி மந்திரம் இயற்கையாகவே மூன்று பாதங்களோடும் கூடியது. அதற்குப்பாதப்பிரிவின் முறைப்படி வியாஹ்ருதிகளைச் சேர்த்துக் கூறினால் அதுவே சாவித்திரி மந்திரம் என்னப்படும்.

வேள்விக்கருவியாகியவோர்வகைப்பாத்திரமாம். அவனது மன ஊக்கமே "துருவ" என்னும் வேள்வியில் நெய்வார்க்குமோர்வகைத் துடுவை = அகப்பை போல்வது. பிராணனே அவிசாம். சாமவேதமே "அத்வரியு" என்னும் இருத்துவிக்கு இங்ஙனங் கூறப்பட்ட பிரசித்தியையுடைய வேள்வி பிராணனே தக்ஷிணையாகவுடையது அப்படியாயின் அது அநந்தமாகிய தக்ஷிணையையுடையதாம். மிகவும் திருத்தியையுடையதும் ஆகின்றது. எ-று. காண்க.; எனில்?

## அநாதிகாரிக்காகாதென்று மேல்மறுப்பு.

அங்ஙன மது குற்றமன்று. என்னே? அச்சுருதி வேள்வி செய்யுந் தரமல்லாதவனைக்கொண்டு வேட்பித்தலைச்செய்த வழி வருங்குற்றத்தின்பொருட்டுச் செய்வதாமாதலின்.

## ஆபற்காலவிடயம்.

உயிர்துறக்கத்தக்க ஆபத்தையடைந்தவன் தன்னுயிரைக் காக்கும்பொருட்டு வேள்விசெய்யலாகாத ஒருவனால் வேள்வி செய்வித்தலும் ஒத்தபடியாகவே யிருக்கின்றது. அங்ஙனம், வாஜஸநேயப்பிராமணம்=சுக்கிலயஜுர்வேதம் கூறுகின்றது. வருமாறு; "ప్రాణస్యవైసమ్రాట్ కామాయాయాజ్యం యాజయత్యప్రతిగ్రాహ్యస్యాపి ప్రతిగృహ్ణాతి" = பிராணத்தி னுடைய தலைமைபெற்ற வேட்கைக்கு வேள்வி செய்விக்காதவனாலும் வேள்வி செய்விக்கின்றான் வாங்கத்தகாதவனிடத்துந் தானம் வாங்குகின்றான். எ-று. காண்க.

அவ்விடத்துக் கழுவாயும் சந்தோகர்கள் = சாமவேதிகள் கூறுகின்றனர். வருமாறு சாமவேதம் "అయాజ్యయాజనేదక్షిణాస్సృష్ట్వా మాసం చతుర్థకాలేభుంజాన స్తత్సంత్రాన్గాయేత్" = வேள்வி செய்விக்கத் தகாதவனால் வேள்வி செய்வித்தால் அதனாற்றான் தேடிய தக்ஷிணைப் பொருண் முழுவதையும் ஒழித்துவிட்டு ஒருதிங்கள் வரையில் பகல் மூன்றுபாகத்தை யொழித்து நாலாம்பாகத்தில் புசிப்பவனாய், அந்த மந்திரத்தையே பாடிக்கொண் டிருக்கவேண்டுவது. எ-று. காண்க.

அங்ஙனம் சுமந்துவும் கூறினர். வருமாறு. సుమంతుః॥ "శూద్రయాజకస్సర్వపతితస్య పతితాన్ప్రాయశ్చిత్తీ భవతి. అభిశప్త, పతిత, పౌనర్భవ, భూర్తిణాం,

పుంశ్చ, ల్యశుచి, శస్త్రికార, తైలిక, చాక్రిక, ధ్వజి, సువర్ణకారా, లేఖ్యక, షణ్డక, వర్ధకి, గణక, గణికా, సౌనిక, వ్యాధ, నిషాద, రజక, ఋరాడ, చర్మకారా, అభోజ్యాన్నా, అప్రతిగ్రాహ్య, అయాజ్యాశ్చ" = சூத்திரனல் வேள்வி செய்வித்தவன் பொருளை யெல்லாம் விட்டொழிதலினற் பரிசுத்த ஞகின்முன். அபவாதமடைந்தவன்; கரும்வொழுக்கங் கெட்டவன், புனர் விவாக மானவளுடைய மகன், கருவழித்தவன் அல்லது சிசுக் கொலைசெய்தவன், ஆணவாயபெண், சுத்தமில்லாதவன், ஆயு தங்கள் செய்பவன், எண்ணெய் வாணிபஞ்செய்பவன், குயவன், கொடி பிடிப்பவன், அல்லது, குறியிடப் பட்டவன், (స్వర్ణకార) தட்டான், (அரிப்பாளன், அல்லது ஆகாரத்துநின்றும் பொன் னெடுப்பவன் எனவுங்கூறுவர்). சித்திரக்காரன், பேடி, தச்சன், ஒட்டன், மண்வேலைசெய்பவன், கொல்லத்துக்காரன்; கணக் கன், கணிகை = வேசி, சூனன் = ஊன்விற்குமவன் அல்லது பரதவன்=செம்படவன், வேடன், நிஷாதன்=காட்டில் வசிப் பவன், வண்ணுன், குடுகுடுப்பைக்காரன், (పా॥ శాకునిక). சகுனஞ் சொல்பவன், தோல்வேலைசெய்பவன்=மதங்கன், எம், வெட்டி யான், எனவும் கூறுவர், இவர்கள் கைப்பொருளைப் புசிக்க லாகாது; தானம் வாங்கலாகாது; இவர்களால் வேள்வி செய் விக்கலாகாது. எ-று. காண்க.

இன்னும் வசிட்டரும் கூறினர். வருமாறு, వశిష్ఠః "దక్షిణా త్యాగాచ్చ పూతో భవతీతి విజ్ఞాయతే" = தக்ஷிணையை விட்டுவிட்டால்பரி சுத்தனுகின்முன் என்று தெரியவருகின்றது. எ-று. காண்க.

போதயநரும் அக்கருத்தே கூறினர். வருமாறு, బోధాయనః॥ "బహ్వప్రతిగ్రాహ్య స్యవాప్రతిగృహ్య యాజ్యంయాజ యిత్వానాశ్యాన్న స్యవాన్న మశి త్వాపతేత్" = வாங்குதற்குத் தகாதவன்கைப்பொருளை விசேடம் வாங்கினுலும், வேள்வி செய்விக்கப்படாதவனல் வேட்பித்தா லும், உண்ணத்தகாதவன்கையுணவை யுண்டாலும் பதிதனுகின் முன். எ-று. காண்க.

வேள்விசெய்யத் தகாதவனல் வேட்பிப்பவனிலக்கணம், தேவலரால் கூறப்பட்டது. வருமாறு, దేవలః॥ "యశ్శూద్రాన్ పతితాం శ్చాపి యాజయేదర్థకారణాత్। యాజితో వాపునస్తా భ్యాంబ్రాహ్మణో యాజ్యయా జకః" = யார் ? பொன்னுசையால் சூத்திரராலும் பதிதராலும்

வேள்வி செய்விக்கின்முனே? அவனும், சூத்திரனுலேனும் பதித னுலேனும் தான் வேள்வியைச் செய்வித்துக் கொள்பவனும் ஆகிய அந்த வேதியன் அயாஜியயாஜகன் என்று கெட்டபெய ராற் கூறப்படுவன். எ-று. காண்க.

"యజనం" என்பதன், యజ - எது, தாது. தேவர் பூசைஎன்பது அதன் பொருள். செய்பவன் யாஜி. செய்விப்பவன்யாஜகன். செய்வதுயஜனம். அது வே வேள்வி.

வேட்பித்தல் முற்றிற்று.

இங்ஙனம் வேட்பித்தல் கூறப்பட்டது. மேல்கொடுத்த லாகிய தானமும், வாங்குதலாகிய பிரதிக்கிரஹமும் வருமாறு.

## கொடைவிடயம் தானச்சிறப்பு.

அவ்விடத்து, தானவிடயமாக வேதப்பிரமாணம்வருமாறு, கிருஷ்ணயஜுஸு. அஉ-பிரசினம்=உபநிடதம். "దానమితిసర్వాణి భూతానిప్రశగ్ంసంతిదానాన్నాతి దుష్కరం తస్మాద్దానేరమంతే" = தானம் என்று எல்லாப் பூதங்களாலும் சிறப்பித்துக் கூறப்படுகின்றன. (பூதம்= சீவகோடிகள்.) தானமென்பதினும்செய்தற்குஅருமையான தொ ழில்பிறிதொன் றில்லை. ஆதலால் தானத்தில் பெரியோர் களித் தலைச்செய்கின்றனர். எ-று. காண்க.

இன்னும் அவ்வுபநிடதத்தில் "దానంయజ్ఞానాం వరూథం దక్షిణా లోకే దాతారగ్ం సర్వభూతాన్యుపజీవంతిదానేనారాతీరపానుదంతదానేనద్విషంతోమిత్రా భవంతిదానే సర్వంప్రతిష్ఠితం తస్మాద్దానం పరమంవదంతి." = தானம் என்பது எல்லாவேள்விகட்கும் ஊர்தியாகவும்=ஏறிச்செல்லுவ தாகவும், சிறந்த தக்ஷிணையாகவுமிருக்கின்றது. உலகத்தில் எல் லாவுயிர்களும் கொடுப்பவனை யடுத்துப்பிழைக்கின்றன. தானத் திஞல் பகைவரை ஒழித்து விடுகின்ருர்கள். தானத்திஞல், பகைத்தவர் நட்பினராகின்றனர். எல்லாப்பயனும் தானத்திலே ஸ்தாபிக்கப்பட்டன. அதனுல் முற்றுமுணர்ந்தவர்கள் தானத்தை எவற்றினுஞ் சிறந்ததாகக் கூறுகின்றனர். எ-று. காண்க.

"భగవాన్" =, அறுகுணச் செல்வர். அவர் கடவுள். அவரருளால் அவதரித்தவரும் பகவான் எனப்படுவர். ஆறுவிடயங்களையு முணர்ந்தவர் களும் பகவர் எனப்படுவர். அவ்வாறு விடயம் வருமாறு, "ఉత్పత్తించవినాశంచ

భూతానామాగతింగతిం। వేత్తివిద్యామవిద్యాంచసవాచ్యోభగవానితి. ”= உயிர்கள் தோற்றமும், ஒடுக்கமும், வருதலும், செல்லுதலும், அறிவும், அறியாமையும், யாருணர்ந்துள்ளாரோ? அவர் பகவன் என்று கூறப்படுவர். இது இராமாயணவுரையிலெடுத்துக் காட்டிய வுதாரணம்.

ஆதித்திய புராணத்துள்ளும், ఆదిత్యపురాణే॥ “ నదానాదధికం కించద్దృశ్యతే భువనత్రయే। దానేనప్రాప్యతేస్వర్గః శ్రీర్దానేనైవలభ్యతే। దానేనశత్రూన్‌జయతివ్యాధిర్దానేననశ్యతి। దానేనలభ్యతే విద్యాదానేన యువతీజనః। ధర్మార్థకామమోక్షాణాం సాధనంపరమం స్మృతం. ” = தானத்திலும் உயர்ந்தது மூன்றுலகத்துள்ளுஞ் சிறிதுங்காணப்படுவதில்லை. தானத்தால் சுவர்க்கப்பேறுண்டாகின்றது. செல்வம்தானத்தாலே யடையத்தக்கதாக விருக்கின்றது. தானத்தால் சத்துருக்களை வெல்லுகின்றான். தானத்தால் நோய் நீங்குகின்றது, தானத்தால் கல்விசித்திக்கின்றது, தானத்தால் இளம்பெண்களுங் கிடைக்கின்றனர். அறம், பொருள், இன்பம், வீடு, என்பனவற்றிற்கும் தானமேதுணைக் கருவியென்று கூறப்படுகின்றது. எ-று. காண்க.

இவ்வாறு. சுருதிமிருதிகளால் புகழ்ச்சி முன்னிலையாகத்தானஞ் செய்யவேண்டுமென்னும் விதியுண்மை கொள்ளக்கிடந்தவாறுகாண்க.

## தானவிதி.

யாஞ்ஞவற்கியர். நேரோதானத்தை யுடன்பட்டு விதித்தனர். வருமாறு, యాజ్ఞవల్క్యః॥ “ దాతవ్యంప్రత్యహంపాత్రే నిమిత్తేషువిశేషతః। యాచితేనాపిదాతవ్యం శ్రద్ధాపూర్వంతుశక్తితః। గోభూతిలహిరణ్యాది పాత్రేదాతవ్యమర్చితే। నాపాత్రేవిదుషాకించి దాత్మనఃశ్రేయఇచ్ఛతా ” = நாடோறும் தானஞ்செய்யவேண்டுவது அது தக்க பாத்திரத்திலேதானே செய்யவேண்டும். நிமித்த முண்டான போது, விசேடமாகச் செய்யவேண்டுவது. இரக்கப் பட்டவனுலும் தானஞ் செய்யப்படும். தனதுசத்திக்குத் தக்கபடி சிரத்தையோடும் கொடுக்கவேண்டும் சற்பாத்திரமானவர்களைப் பூசித்து, கோதானம், பூதானம், திலதானம் (திலம் = எள்.) ஹிரணியதானம் (ஹிரணியம் = பொன்) (முதலிய வென்றதனுல் “గోభూతిలహిరణ్యాజ్య వాసోధాన్యగుడానిచ । రౌప్యంలవణమిత్యాహు ర్దశదానానిసూరిణః ” = பசு, பூமி, எள், பொன், நெய், ஆடை, தானியம், வெல்லம், வெள்ளி, உப்பு. இவைபத்துந்தசதா

னத்திற்குரிய என்று உணர்ந்தோர் கூறினர். என்பதனுற் பிறவுங் கொள்க.) முதலியவற்றைக் கொடுக்கவேண்டும். தனக்கு நன்மைவேண்டுமென்று விரும்பின அறிவுடையோன், தகாதவனுக்குச் சிறிதும் கொடுக்கலாகாது. எ—று. காண்க.

* அவ்விரண்டனுள், யாதேனும் ஒன்று சொரூபவிதியாக விருக்கின்றது. வேருனது குணவிதியாக விருக்கின்றது.

மனுவுங் கூறினர். வருமாறு, మనుః "దానంధర్మంనిషేవేత నిత్యనైమిత్తసంజ్ఞకం। పరితుష్టేనభావేనపాత్రమాసాద్యశక్తితః." = சற்பாத்திர மானவர்களைப்பெற்றுத் திருத்தியடைந்த மனத்தோடு சத்தியுள்ளவளையில்நித்தியதானமும், நித்தியதருமமும், நைமித்திகதானமும், நைமித்திக தருமமும், செய்து பணிசெய்து கொண்டிருக்கவேண்டும். எ—று. காண்க.

## தானஞ் செய்யாவழி வருங்குற்றம்.

அக்கினி புராணத்துள்ளும், தானத்தைச் செய்யாவிட்டால் பொருள் வீணுகின்றது என்பது முன்னிலையாகத் தானத்தை விதிக்கப்பட்டது. అగ్నిపురాణే॥ "యస్యవిత్తంనదానాయ నోపభోగాయదేహినాం। నాపికీర్త్యైనధర్మాయ తస్యవిత్తంనిరర్థకం। తస్మాద్విత్తంసమాసాద్య దైవాద్వా పౌరుషాదథ। దద్యాత్సమ్యగ్ద్విజాతిభ్యః కీర్తనానినకారయేత్." = யாருடையபொருள் தானத்திற் கில்லையோ? புகழ்க்கு உதவுவதில்லையோ? புண்ணியத்திற்குதவுவதில்லையோ? அப்பொருளுக்குப் பயனில்லையதுவீணும். ஆதலால், அதிருஷ்டத்தாலாயினும், முயற்சியா லாயினும், பொன்னை யடைந்தபின் வேதியர்களுக்கு நன்ருகக் கொடுக்க வேண்டுவது. தான்செய்த தானத்தைத் தானே பிறரறியக் கூறலாகாது. எ—று. காண்க.

## தானம்செய்யாவழி நரகம் என்பது.

இனி, விஷ்ணு தருமோத்திரத்தில். தானங்கொடாவிடத்து வருங்கெடுதி கூறினர். வருமாறு, విష్ణుధర్మోత్తరే॥ "సీదతేద్విజముఖ్యాయ

---

* "దద్యా" என்ற பிரத்தியயம்விதிப்பொருளைத்தரும் விகுதியாம். மேலைய யாஞ்ஞாவற்கிய மிருதிவாக்கியத்துள் அவ்விகுதி வினைமுக்கா லுபயோகிக்கப் பட்டதா மாகலின். அவற்றுள் முன்னையவிரண்டும் தானம் செய்யத் தக்கது என்று அதன்சொரூப மாத்திரையில் விதிப்பதால் சொரூபவிதியாம். ஏற்றதொன்றும் சற்பாத்திரத்தில் தானஞ்செய்தால் நன்மையைத்தருகின்றது என்னும் குணத்தை விதித்தலால் குணவிதியாம்.

యోర్థినేనప్రయచ్ఛతి। సామర్థ్యేసతియదుర్బుద్ధి ర్నరకాయోపపద్యతే"=வருந்தி யிரத் தலைச்செய்கின்ற உயர்ந்த வேதியனுக்கு, யாவன் கொடுக்கத்தக் கசத்தியுள்ள விடத்தும் கெட்ட எண்ணத்தால் கொடுப்பதில்லை யோ? அவன் நரகத்திற்கு ஆஸ்தியுடையவனாக விருக்கின்றான். எ-று. காண்க.

## கொடாதவன் நிலைமை.

பிரமபுராணத்தில், బ్రహ్మపురాణే॥ "సదాచారాన్కులీనాశ్చ రూపవంతః ప్రియంవదాః। బహుశ్రుతాశ్చధర్మజ్ఞా యాచమానావరాన్గృహాన్ । దృశ్యంతేదుఃఖిత స్సర్వే ప్రాణినస్సర్వదామునే। అదత్తదానాజాయంతే పరభాగ్యోపజీవినః" = நல்ல ஒழுக்கமுடையவர்கள், உயர்குலத்திற் பிறந்தவர்கள், தக்க உருவமுடையவர்கள் (எனவே அழகுடையவர், நல்லஇயற்கைக் குணமுடையவர், நல்ல புகழுடையவர், எனவுமாம்) கேட்பவர்க்கினிமையுண்டாகும்படிப் பேசவல்லவர், பலவித்தைகளை நன்குணர்ந்தவர்கள், தருமங்களையுணர்ந்தவர்கள், இவர்களெல்லாம் பெருஞ்செல்வரிடஞ் சென்று இரத்தலைச்செய்கின்றனர். இரக்கும் சீவர்களனைவரும் எப்பொழுதும் துக்கப் படுபவராகவே யிருக்கின்றனர். முன்தானத்தைச் செய்யாதவர்கள் அந்நியர் செல்வத்தால் சீவிப்பவர்களாகப் பிறக்கின்றனர் எ-று. காண்க.

வியாசரும், "అక్షరద్వయమభ్యస్తంనాస్తినాస్తీతియత్పురా। తదిదందేహిదేహీతి విపరీతముపస్థితం" = முன்னைய பிறப்பில் இல்லை என்று ஒருவன் பழகிய சொல்லானது மறுபிறப்பிலவனைக் கொடுவென்னுஞ் சொல்லாக வேறுவிதத்தா லுருவப்பட்டுப் பற்றிக் கொள்ளுகின்றது. எ-று. கூறுதல்காண்க.

## ஈவோன் ஏற்போன் தரத்தைக் கூறுகின்றது.

காந்தத்துள், స్కాందే॥ "దేహీత్యేవంబ్రువన్నర్థీజనంబోధయతీవసః । తదిదంకష్టమర్థిత్వం ప్రాగదానఫలంహితత్। ఏకేనతిష్ఠతాధస్తా దన్యేనోపరితిష్ఠతా। దాతృయాచకయోర్భేదః కరాభ్యామేవసూచితః। దీయమానంతుయోమోహా ద్గోవిప్రాగ్నిసురేషుచ। నివారయతిపాపాత్మా తిర్యగ్యోనింవ్రజేత్తుసః" = தேஹீ = கொடு என்று இரக்கும் இரப்போன் உரைஎன்னும் இவ்வருத்தமானது இவ்விரப்பு முற்பிறப்பில் இரப்பவர்க்குக்கொடாத குற்றத்தின் பயனிதுவென்று மக்களுக்குப்போதிக்குஞ் சொல்லாக விருக்கின்றது. கீழிருப்பது கேட்பதாகிய ஒருகை, மேலிருப்பது கொடுப்

பதாயதொருகை. யிவ்விரண்டு கைகளுமே ஈவோன் இரப்போனுடைய உயர்வு தாழ்வுகளைக் குறிக்கின்றன. பசுக்களுக்கு, வேதியர்க்கு, அக்கினிஹோத்திரத்திற்கு, தேவர்களுக்குக்கொடுப்பதனையாவன் அறியாமையால் கொடுக்கவேண்டாமென்று விலக்குகின்றானே? அவன் பாவியாய் விலங்கின் பிறப்பை யடைவன் எ-று. கூறுதல்காண்க.

## கொடையை விலக்கினோன்விடயம்.

சாதாதபர் கூறினர். வருமாறு, శాతాతపః "మాదదస్వేతియోబ్రూయా ద్గవ్యగ్నౌబ్రాహ్మణేషుచ। తిర్యగ్యోనిశతంగత్వా చండాలేష్వపిజాయతె" = பசுவுக்கும், நெருப்பிற்கும், வேதியர்க்கும், தேவர்கட்கும், கொடுக்கும்பொழுது கொடுக்கவேண்டா மென்று யார்விலக்குகின்றானே? அவன் நூறுதரம் பசுமுதலிய விழிந்தயோனிகளிற் பிறந்து பின்பு நீசனுகப்பிறக்கின்றான். எ-று. காண்க.

தானத்தின் சொரூபத்தையும், செய்யும் வகையையும், பிறவற்றையும் தேவலர் கூறினர். வருமாறு.

## தானத்தின்சொரூபம்.

దెవలః "అర్థానాముచితేపాత్రే శ్రద్ధయాప్రతిపాదనం। దానమిత్యభినిర్దిష్టం వ్యాఖ్యానంతస్యవక్ష్యతే। ద్విహేతుఃషడధిష్ఠానం షడంగంషడ్విపాకయుక్ ॥ చతుష్ప్రకారం త్రివిధం త్రినాదందానముచ్యతే॥." = அருத்தங்களைச் சிறந்தவிடனறிந்து சிரத்தையோடு கொடுத்தலே தானமென்று யாண்டுந் துணிந்து கூறப்பட்டது. அதனுரையீண்டு கூறப்படும். இரண்டு ஹேதுக்களையுடையது. ஆறுஆதாரங்களை யுடையது, ஆறுஉறுப்புக்களை யுடையது. ஆறுவிபாகங்களை யுடையது. நான்கு பிரகாரங்களை யுடையது. மூன்றுவகைகளை யுடையது. மூன்று நாதங்களையுடையது. தானமென்று கூறப்படுகின்றது. எ-று. காண்க.

## ஏதுக்களிரண்டாமாறு.

దేవలః "నాల్పత్వంవాబహుత్వం వాదానస్యాభ్యుదయావహం। శ్రద్ధాభక్తీచదానాం వృద్ధిక్షయస్కరేహితే" = சிறிதாகவே யாயினும், பெரிதாகவே யாயினும் இருப்பது, தானத்திற்கு நன்மைசெய்வதல்ல. சிரத்தை பத்தி யிவ்விரண்டும் தானங்களுடைய விருத்தியையும் சிறப்பையும் செய்யத்தக்க இதங்களாம். எ-று. என்க.

## ஆறு அதிஷ்டானமாமாறு.

దేవలః " ధర్మమర్థంచ కామంచ వ్రీడాహర్ష భయానిచ। అధిష్ఠానాని దానానాంషడేతాని ప్రచక్షతే. " = அறம், பொருள், இன்பம், நாணம், உவப்பு, அச்சம், இவ்வாறையும் ஈகைக்கு ஆதாரமென்று கூறுகின்றனர். எ-று. என்க.

## அவற்றுள், முதல்-அறநிலைத்தானமாமாறு.

దేవలః " పాత్రేభ్యోదీయతే నిత్యమనపేక్ష్య ప్రయోజనం। కేవలం ధర్మబుద్ధ్యా యద్ధర్మదానం తదుచ్యతే. " = கைம்மாறு வேண்டாமலே தருமம் ஒன்றே பயன் என்னுங் கருத்தால் தக்கோர்க்கு நித்தமும் கொடுக்கப் படுவது எதுவோ? அது அறநிலைக் கொடையென்று கூறப்படும். எ-று. என்க.

## உ. வது - பொருணிலைத்தானம்.

దేవలః " ప్రయోజనమపేక్ష్యైవ ప్రసంగాద్యత్ప్రదీయతే। తదర్థదానమిత్యాహురైహికంఫలహేతుకం. " =பயனையேவேண்டிச் சம்பந்தத்தினுல் எது கொடுக்கப் படுகின்றதோ? அது இவ்வுலகசம்பந்த முடைய பயனுக்குக் காரணமாகிய பொருணிலைக் கொடையென்று கூறுவர். எ-று. என்க.

## ௩. வது - இன்பநிலைத்தானம்.

దేవలః " స్త్రీపానమృగయాక్షాణాం ప్రసంగాద్యత్ప్రదీయతే। అనర్హేషుచరాగేణ కామదానంతదుచ్యతే॥ " = பரத்தை மாதர்கள், கள், வேட்டை, சூது இவைகளின் வலியசம்பந்தத்தால் தகாதவர்களுக்கே யாயினும் விருப்பத்தா லெது கொடுக்கப் படுகின்றதோ ? அது காமநிலைக் கொடையென்று கூறுவர். எ-று. என்க.

## ச. வது - நாணநிலைத்தானம்.

దేవలః " సంసదివ్రీడయాస్తుత్యా చార్థిభ్యోయత్ప్రయాచితం। ప్రదీయతేచయద్దానం వ్రీడాదానమితిస్మృతం. " = சபையில் புகழப்படுதலினுல் நாணமுற்று இரந்த பொருளை ஏற்போர்க்குக் கொடுப்பது எதுவோ ? அது நாணநிலைக் கொடையென்று கூறப்படும். எ-று. என்க. நாணம் = வெட்கம்.

## ரு. வது - உவப்புநிலைத்தானம்.

దేవలః " దృష్ట్వాప్రియాణిశ్రుత్వావా హర్షాద్యస్య ప్రయచ్ఛతి । హర్షదానమితి ప్రాహు ర్దానంధర్మ విచింతకాః " = விரும்பியவைகளைக் கண்டாயினும் கேட்டாயினும் களிப்பினால் எதனை யெதனைக் கொடுத்துவிடுகின்றனனோ? அதனைத் தருமசிந்தை யுடையவர்கள் உவப்புநிலைக் கொடையென்று கூறுவர். எ-று. என்க-உவப்பு = களிப்பு.

## சு. வது - அச்சநிலைத்தானம்.

దేవలః "ఆక్రోశనార్థం హింసానాం ప్రతీకారాయయద్భవేత్ । దీయతేవాపకర్తృభ్యో భయదానం తదుచ్యతే. " = கோபத்திற்கஞ்சியாயினும், இமிசை தப்புவதற்காயினும், தீங்கு செய்வார்களுக்கு எது கொடுக்கப் படுகின்றதோ? அது அச்சநிலைக் கொடை யென்று கூறப்படுகின்றது. எ-று. என்க.

## இனி - ஆறுஉறுப்பாவன.

దేవలః "దాతాప్రతిగ్రహీతాచ శ్రద్ధాదేయంచధర్మయుక్ । దేశకాలౌచదానానా మంగాన్యేతానిషడ్విదుః. " = கொடுப்பவன், ஏற்பவன், சிரத்தை, தருமத்தோடு கூடியதாகிய கொடைப் பொருள், தக்கவிடம், தக்க காலம், என்றவாறும் தானத்திற்கு உறுப்பு என்று உணர்வர். எ-று. என்க-உறுப்பு=அங்கம்.

## கொடுப்போனிலக்கணம்.

దేవలః " అపాపరోగీధర్మాత్మా దిత్సురవ్యాజతత్పరః । అనింద్యజీవకర్మాచ షడ్భిర్దాతాప్రశస్యతే " = பாவமற்றிருத்தல், நோயற்றிருத்தல், தருமசிந்தையுண்டா யிருத்தல், காரணமில்லாமலே கொடுக்கும் இச்சை யுண்டா யிருத்தல், சுத்தமுடைமை, பழிக்கப்படாத சீவனத்தொழிலுடைமை, என்னு மிவ்வாறினால், கொடுப்பவன் சிறந்தவனாகின்றான். எ-று. என்க.

## ஏற்பவனிலக்கணம்=சற்பாத்திரம்.

దేవలః " త్రిశుక్లశ్శుక్లవృత్తిశ్చ ఘృణాళుస్సం యతేంద్రియః । విముక్తో యోనిదోషై భ్యో బ్రాహ్మణఃపాత్రముచ్యతే. = மூன்றினால் சுத்தனானவனும், குற்றமற்ற நடையை யுடையவனும், தயவோடுங் கூடிய வியற்கைக் குணமுடையவனும், பொறிகளை யடக்கினவனும், யோனிதோ

ஷத்தினால் விடப்பட்டவனுமாயுள்ளவேதியனே பாத்திரமென்று கூறப்படுவன். எ-று. என்க. பாத்திரம் = கொடைப் பொருளை ஏற்கத்தக்க விடம். மூன்றுற்சுத்தன்-என்பது-தாய், தந்தை, ஆசிரியனிவர்களாற்றிருத்தப்படுதலினாற் பரிசுத்தன் என்றவாறு. (குற்றமற்ற நடையையுடையனெனவே, அறநூல்களான் மறுத்த கருமஞ் செய்யாதவன். எ-று. எனவே பழிக்கப்படாதவன் என்பது கருத்து. யோனி தோஷத்தால் விடப்பட்டவன்-எது, அவன்பிறப்பின் காரணங்கள் குற்றமற்றதா யிருத்தல் வேண்டும் என்றபடி).

## சிரத்தையினிலக்கணம்.

దేవలః "శౌచం శుద్ధిర్మనః ప్రీతి రర్థినాం దర్శనే తథా । సత్కృతిస్సానసూయా చ దానే శ్రద్ధేత్యుదాహృతా." = (உடலைச்) சுத்தஞ்செய்து கொள்ளுதலும், (மனத்தைச்) சுத்தஞ்செய்து கொள்ளுதலும் இச்சையா லிரப்பவரைக் கண்டவிடத்துமிக்க அன்புடனிருத்தலும், இரப்பவரை நன்குமதித்து (இனியகூறி) உபசரித்தலும், அழுக்காறு அற்றிருத்தலும், இவையெல்லாம் கொடை விடயத்தில் சிரத்தையென்று உதகரிக்கப்பட்டன. எ-று. என்க.

## கொடைப்பொருளிலக்கணம்.

దేవలః "అచారాబాధమక్లేశ స్వయత్నేనార్జితం ధనం। స్వల్పం వా విపులం వాపి దేయమిత్యభిధీయతే." = ஒழுக்கத்திற்கு விரோத மல்லாததும், வருத்தப்படாது தனதுமுயற்சியாற் றேடியதும், சிறிதேயாயினும், பெரிதேயாயினும் கொடைக்குத் தக்கது என்று சொல்லப் படுகின்றது. எ-று. என்க. வருத்தப்படாதது=பாவமற்றது.என்றபடி.

## கொடைக்குரிய இடமுங்காலமும்.

దేవలః "యద్యత్ర దుర్లభం ద్రవ్యం యస్మిన్కాలేపి వా పునః। దానార్హౌ దేశకాలౌ తౌ స్యాతాం శ్రేష్ఠౌ న చాన్యథా."=எந்த விடத்தில் வேண்டிய எந்தப் பொருள் கிடைப்பது அருமையோ? அந்த இடமும்; எந்தக் காலத்தில் எந்தப் பொருள்கிடைப்பது அருமையோ? அந்தக் காலமும், அந்தப்பொருளைத் தானஞ்செய்வதற்குச் சிறந்ததாக விருக்கின்றன: அன்றி வேறுவகையில்லை. எ-று. என்க.

## இனி ஆறுவிபாகங்கள்வருமாறு.

దేవలః " అవస్థాదేశకాలానాంపాత్రదాత్రోశ్చసంపదా । హీనంచాపిభవేచ్ఛ్రేష్ఠంశ్రేష్ఠంవాప్యన్యథాభవేత్ ॥ దుష్ఫలంనిష్ఫలంహీనం తుల్యంవిపులమక్షయం । షడ్విపాకయుగుద్దిష్టంషడేతానివిపాకతః." = அனுபவம், தேசம், காலம், ஏற்போன், கொடுப்போன் இவ்வைந்தின் செல்வமுடைமை திருந்த முற்றிருந்தால் சிறுபொருட் கொடையேயாயினும் சிறந்தனவேயாகின்றது. அச்செல்வந் திருந்தாதவிடத்துச் சிறந்தபொருட் கொடையேயாயினும் வேறுகிவிடுகின்றது. இதுவே விபாகமாம். [விபாகம்=வேறுகத் திரிதல்]. அவை, துஷ்பலம், நிஷ்பலம், ஈனம், துல்லியம், விபுலம், அக்ஷயம், என்ற ஆறுவிபாகத்தால் தானம் கூடியிருப்பதாக எண்ணப்பட்டது. இவ்வாறும்விபாகத்தானே உண்டாகின்றன. எ-று. என்க.

## தானத்தின் துஷ்பலவிபாகம்.

దేవలః॥ "నాస్తికస్తేనహింస్రేభ్యో జారాంయపతితాయచ । పిశునభ్రూణహంతృభ్యాం ప్రదత్తందుష్ఫలంభవేత్." = நாத்திகனுக்கும், கள்ளனுக்கும், கொலைசெய்பவனுக்கும், பிறன்மனையவளைப்புணர்வோனுக்கும், பதிதனுக்கும், கோள்சொல்பவனுக்கும், சிசுக்கொலைசெய்பவனுக்கும், விசேடமாகவே கொடுக்கப்பட்டிருந்தாலும் அதுகெட்டபயனைத் தரத்தக்கதாம். எ-று. காண்க.

## தானநிஷ்பல விபாகம்.

దేవలః॥ "మహదప్యఫలందానం శ్రద్ధయాపరివర్జితం" = பெரியதானமேயானுலும் சிரத்தையில்லாமலே கொடுத்தால் அதற்குப் பயனில்லாமலொழியும். எ-று. காண்க.

## தானஹீன்விபாகம்.

దేవలః॥ "పరబాధాకరందానం స్ఫీతమప్యూనతాంవ్రజేత్." = மிகுதியுடைய தானமேயானுலும் அந்நியர்களை வருத்தப் படுத்துவதற்குக் காரணமாகுமேயானுல் அது தாழ்வையடையும் எ-று. காண்க.

## தானதுல்லியவிபாகம்.

దేవలః॥ "యథోక్తమపియద్దానం చిత్తేనకలుషేణతు। తత్తుసంకల్పదోషేణ దానం తుల్యఫలంలభేత్" = நூல்களில் விதித்தவாறே செய்யப்பட்டதாமா

யினும் கலக்கப்பட்டுச் சுத்தியில்லாத மனத்தோடு கொடுக்கப் பட்டதாமாயின், அது எண்ணத்தின் குற்றத்தினுல் கொடைக் குத்தக்க அளவே பயனைத்தரும். எ-று. காண்க.

## தானவிபுலவிபாகம்.

దేవలః॥ "యుక్తాంగైస్సకలైష్షడ్భిర్దానంస్యాద్విపులోదయం" = பூரணமாகிய ஆறு அங்கங்களோடுகூடிய தானம் விரிவாகக்காணத் தக்கதாக விளையும். எ-று. காண்க.

## தான அக்ஷயவிபாகம்.

దేవలః॥ "అనుక్రోశవశాద్దత్తం దానమక్షయతాంవ్రజేత్" = தயவோடும் கொடுக்கப்பட்ட தானம் என்றுங் கெடாததாக முடியும். எ-று. காண்க.

மேற்கூறிய ஆறனுள், க, உ, ங, ச, விலக்கப்பட்டன. ரு, சா, விதிக்கப்பட்டனவாம்.

## தானத்தின் நால்வகைமார்க்கம்.

దేవలః॥ "ఏవమాజస్రికంకామ్యంనైమిత్తికమితిక్రమాత్। దివ్యంచదానమార్గోయం చతుర్ధావర్ణ్యతేబుధైః."= ஆஜஸ்ஸிரிகம், காமியம், நைமித்திகம், திவ்வியம், என்று தானமார்க்கம் நான்குவகைப்பட்டுள்ளனவென்று அறிவுடையோர் கூறுவர். எ-று. காண்க.

## ஆஜஸிரிகமார்க்கதானம்.

దేవలః॥ ప్రపారామతటాకాదిసర్వకామఫలప్రదం। తదాజస్రికమిత్యాహుర్దీయతే యద్దినేదినే." = தண்ணீர்ப்பந்தர் வைத்தலும், தோப்பு சோலைமுதலிய சமைப்பித்து நிழலுண்டாக்குவதும், ஏரி குளங்கள் செய்து நீர்நிலை யுண்டுபண்ணலும், பிறவுமாகச் செய்ததானம் எப்போதைக்கும் சீவர்களுக்குப் பயன் றருதலாலது, ஆஜசிரிக தானம் என்று கூறப்படும். எ-று. காண்க. ஆஜசிரிகம் = எப்பொழுதும் நிலைபெற்றுள்ளது.

## காமியமார்க்கதானம்.

దేవలః॥ "అపత్యవిజయైశ్వర్య స్త్రీబాలార్థంయదిష్యతే। ఇచ్ఛాసంజ్ఞంతుయద్దానం కామ్యమిత్యభిధీయతే." = தன் பிள்ளைபெண்கள் நிமித்தமும், பகையை

வெற்றி கொள்ளு நிமித்தமும், ஐசுவரிய மடையும் பொருட்டும், மாதர்கள் விடயமாகவும், குழந்தைகட் காகவும், எதனைக் கொடுக்க மனம் சம்மதிக்கின்றதோ? அப்படிப்பட்ட ஆசையைக்குறியாகவுடைய தானம் காமியம் என்னப்படும். எ-று. காண்க.

### நைமித்திகமார்க்கதானம்.

దేవలః॥ "కాలాపేక్షంక్రియాపేక్ష మర్థాపేక్షమితిస్మృతం। త్రిధానైమిత్తికం ప్రోక్తం." = இன்னகாலத்தில் கொடுக்கத்தக்கது, இன்ன கருமத்தில் கொடுக்கத் தக்கது, இன்னதன் பொருட்டுக் கொடுக்கவேண்டுவது என்று, காலம், தொழில், பயன் என்ற மூன்று நிமித்தங்களோடு கூடியதானம்நைமித்திகதானமெனப்படும். எ-று. காண்க.

### திவ்வியமார்க்கதானம்.

దేవలః॥ "సహోమందివ్యముచ్యతే." = வேள்விசெய்து கொடுத்ததே திவ்வியதானமாம். எ-று. காண்க.

### மூவகைத்தானம்.

దేవలః॥ "నవోత్తమానిచత్వారి మధ్యమానివిధానతః। అధమానితుశేషాణి త్రివిధత్వమిదంవిదుః." = ஒன்பது உத்தமதானம், நான்குமத்திம தானம், மற்றையவெல்லாம் அதமதானமாம். இவையே மூவகைத்தானமென்றுணர்வுடையோர் கொள்வர். எ-று. காண்க.

### உத்தமதானம்.

దేవలః॥ "అన్నవిద్యావధూవస్త్ర గోభూరుక్మాశ్వహస్తినాం। దానాన్యుత్తమదానాని ఉత్తమద్రవ్యదానతః." = அன்னதானம், வித்தியாதானம், கந்நியாதானம், வஸ்திரதானம், கோதானம், பூதானம், சுவர்ணதானம், அசுவதானம், கசதானம், இவற்றை யுத்தமத்திரவியத் தோடுங் கொடுத்தால் இவ்வொன்பதும் உத்தமதானமாம். எ-று. காண்க.

### மத்திமதானம்.

దేవలః॥ "విద్యాదాచ్ఛాదనావాస పరిభోగౌషధానిచ। దానానిమధ్యమానీతిమధ్యమద్రవ్యదానతః."=போர்வைக்குரிய ஆடை, மனை அல்லது இருப்பிடம், அனுபவிப்பதற்குரிய ஏனையபண்டங்கள், அவிழ்தம், மத்தியமத் திரவியத்தோடும் கொடுத்தால் மத்திமதானமென்பர். எ-று. காண்க.

## அதமதானம்.

దెవలః॥ ఉపానత్ఛత్రయానానిచ ఛత్రపాత్రాసనానిచ । దీపకాష్ఠఫలాదీనిచ రమంబహుసాక్షికం। బహుత్వాదర్థజాతానాంసంఖ్యాశేషఘునెష్యతే। అధమాన్యవశిష్టాని సర్వదానాన్యతోవిదుః. ”=பாதரக்ஷை, பணிசெய்வோர், ஊர்தி=வாகனம், குடை, பாத்திரங்கள், ஆசனம்=படுத்தல் முதலிய வற்றிற்குரியன, விளக்குகள், விறகு, பழவகை, முதலியன பலர் பார்க்கத்தக்க பொருள்களாமாதலின் கடைப்படுவகையன. பயனுக்கு வரத்தக்கபொருளின் கூட்டமிகுதியாதலின்வேறு யவற்றை க்கணக்கிடுவதற்கு அமையாமையினொழிக்கப்பட்டன. அதனால், கூறுதொழிந்த எல்லாத்தானங்களும் அதமமென்று உணரத் தக்கன. எ—று. காண்க.

## நாதமூன்றுவன.

“ దెవలః॥ ఇష్టందత్తమధీతంవా ప్రణశ్య త్యనుకీర్తనాత్। శ్లాఘానుశోచనాభ్యాం వాభగ్నతేజావిపద్యతే। తస్మాదాత్మకృతంపుణ్యం నవృథాపరికీర్తయేత్. ”= ஒருவன் தான்செய்யப்பட்ட நல்லகருமம், கொடை, கற்றகல்வி, இம்மூன்றையும் தானே கூறுவானாயின் அழிந்து விடுகின்றது. தன்னைத்தானேபுகழ்ந்துகொண்டால் ஒளிமழுங்கி விடுகின்றது. செய்தபின்வியசனப்பட்டாலும் விபத்தை யடைகின்றான். ஆதலால் தன்னாற்செய்யப்பட்ட நல்லகாரியங்களை வீணாகத் தான்கூறலாகாது. எ—று. காண்க.

புராணசாரத்துள், தானங்கள், நித்தியம், நைமித்தியம்,காமியம், விமலம், என நான்குவகையாகக்கூறப்பட்டன.

சாத்துவிகம், இராஜசம், தாமசம் என்னுமூன்றுபேதங்களைப்பகவற்கீதையுள் கண்ணன் கூறினர்.

## சாத்துவிகதானம்.

பகவற்கீதை. “ దాతవ్యమితియద్దానం దీయతేనుపకారిణే। దేశేకాలేచపాత్రేచతద్దానం సాత్వికంస్మృతం. ” = கொடுக்கத்தக்கது என்னுந் துணிவுடைய வுணர்ச்சியால் கைம்மாறு வேண்டாமலே நல்ல இடத்தில் நல்லகாலத்தில் நல்லபாத்திரமாகிய தக்கோர்க்குக்கொடுத்த தானம் சாத்துவிகதானமென்று கூறப்படுகின்றது. எ—று. காண்க. கைம்மாறு=பிரதியுபகாரம்.

## இராஜசாதனம்.

அதேகீதை, "యత్తుప్రత్యుపకారార్థం ఫలముద్దిశ్యవాపునః। దీయతేచపరిక్లిష్టంతద్రాజసముదాహృతం."=கைம்மாறுவேண்டிக்கொடுக்கப்பட்டதும், தானப்பயனை நாடிக்கொடுக்கப்பட்டதுமாகிய, கிலேசம்=கவலையோடுங்கூடிய அந்தத்தானம் இராஜசதானமென்று கூறப்படும். எ-று. காண்க.

## தாமசதானம்.

அதேகீதை, "అదేశకాలేయద్దానమపాత్రేభ్యశ్చదీయతే। అసంస్కృతమవిజ్ఞాతంతత్తామససముదాహృతం." = தகாதவிடத்திற் கொடுக்கப்பட்டதும், தகாதகாலத்திற் கொடுக்கப்பட்டதும், தகாதவர்களுக்குக்கொடுக்கப்பட்டதும், சமஸ்காரமில்லாதபண்டம் = சுத்திசெய்யாததும், அறிவின்றிக் கொடுப்பதும் தாமசதானமென்று கூறப்பட்டன. எ-று. காண்க.

இவற்றின் பயன் விசேடம் விஷ்ணு தருமோத்தரத்தில் குறிப்பிக்கப்பட்டன.

## தாமசதானப்பயன்.

விஷ்ணு தருமோத்திரம், "తామసానాంఫలంభుజ్తే తిర్యక్త్వేమానవస్సదా। వర్ణసంకరభావేనవార్థకేయదివాపునః। బాల్యేవాదాసభావేన నాత్రకార్యావిచారణా,"=மனிதன் தாமசதானஞ்செய்தால் திரியக்கு ஜந்துக்களாகப்பிறந்து அப்பயனை அனுபவிக்கின்முன். அத்தாமசதானமே சிறிது உத்தமமாயின் மானுடசரீரமெடுத்தாலும் வருணசங்கரமாய் அப்பயன் வடிவாகிய போகத்தை அனுபவிக்கின்முன். அதனிலும் உத்தமமாயின். கிழத்தனத்தில் அப்பயனையனுபவிக்கின்முன். அதனிலும் சிறந்ததேயாயின்மிக்க இளமையில் வேறொருவர் சார்பிலிருந்து அப்பயனை அனுபவிக்கின்முன். இவ்விடயத்தில் விசாரிக்கத்தக்கது வேறில்லை. எ-று. காண்க.

## இராஜசதானப்பயன்.

இதுவுமது. "అతోన్యథాతుమానుష్యే రాజసానాంఫలంభవేత్।" = இராஜசதானத்திற்குப்பயனை மானுடதேகத்திலேயே அந்தத் தாமசம்போலாகாது யோக்கியமாக அனுபவிக்கின்முன். எ-று. காண்க.

## சாத்துவிகதானப்பயன்.

இதுவுமது, "సాత్త్వికానాంఫలంభుంక్తే దేవత్వేనాత్రసంశయః."=தெய்வவுடம்பினையடைந்து சாத்துவிகதானப்பயனையடைகின்ருன். இக்கருத்தில் ஐயமில்லை. எ-று. காண்க.

## இனி தானபாத்திரம் வருமாறு.

யாஞ்ஞவற்கியர்கூறினர். "నవిద్యయాకేవలయాతపసావాపిపాత్రతా। యత్రవృత్తమిమేచోభే తద్ధిపాత్రంప్రచక్షతే."=தானத்தைப் பெற்றுக்கொள்ளத் தக்கதரம் கல்வியொன்றினுலே அமைவதல்ல. தவத்தாலுமன்று (பிறவெனின்) யாரிடத்து நல்லொழுக்கமும் அக்கல்வியுந்தவமும் கூடியிருக்குமோ? அவனே தானம்பெறத்தக்க இடமாவன் என்று கூறுகின்றனர். எ-று. காண்க.

இயமனும் கூறினர். "విద్యాయుక్తోధర్మశీలః ప్రశాంతః। క్షాంతోదాంత స్సత్యవాదీకృతజ్ఞః। స్వాధ్యాయవాన్ స్మృతిమాన్ గోశరణ్యో। దాతాయస్స్యాద్బ్రాహ్మణః పాత్రమాహుః." = கல்வியுடையவன், புண்ணிய சீலமுடையவன், மனச்சாந்தமுடையவன், பொறுமையுடையோன், ஐம்பொறிகளையும்வென்றவன், மெய்கூறுவோன், பிறர்செய்த நன்றிமறவாதவன், வேதமுணர்ந்தவன், தருமநூலுணர்ந்தவன், பசுக்களைக்காப்பவன், கொடுப்பவனுக விருக்கவேண்டுவது. அல்லது இவ்வளவு குணமுமுண்டாயிருந்து தானே கொடுப்பவன் யாவனே? அப்படிப்பட்டவேதியன் தானத்தை வாங்குவதற்குத்தக்கவன் என்று பெரியர் கூறுவர். எ-று. காண்க.

வசிட்டர். "వశిష్ఠః॥ కించిద్వేదమయంపాత్రం కించిత్పాత్రంతపోమయం। పాత్రాణామపితత్పాత్రం శూద్రాన్నంయస్యనోదరే." = வேதமுணர்ந்தவனைச்சிறிதுதக்கோனெனக் கூறப்படும்; தவமுடையோனும் சிறிதே தக்கோனுவன்; யார்வாயில் சூத்திர சம்பந்தமான அன்னம் விழுகின்றதில்லையோ? அவன் பாத்திரமென்னும் தக்கோருளெல்லாஞ் சிறந்த தக்கோனும். எ - று. காண்க.

பிரகற்பதி. బృహస్పతిః॥ "ఆగమిష్యతియత్పాత్రం తత్పాత్రంతారయిష్యతి"= தானம் பெறத்தக்க பாத்திரனுயுள்ளவன் தானத்தை விரும்பி வந்தால் அவனே கொடுப்போனைத் தீவினையினின்றுங் கடப்பிப்பவனுவன். எ - று. காண்க.

## பாத்திரமென்றசொல்லின்பொருள்.

விஷ்ணுதருமோத்தரம். "విష్ణుధర్మోత్తరే॥ పతనాత్త్రాయతేయస్మాత్ తస్మాత్పాత్రం ప్రకీర్త్యతే." = கீழ்விழுதலினின்றும் தப்புவிப்போன் யாரோ? அவன் பாத்திரமென்னப்படுவான். எ-று. காண்க.

## பாத்திரவிசேடம்.

ஸ்காந்தம். "స్కాందపురాణే॥ ప్రథమంతుగురోర్దానం దద్యాచ్ఛ్రేష్ఠమనుక్రమాత్। తతోన్యేషాంచవిప్రాణాం దద్యాత్పాత్రానుసారతః। గురోరభావేతత్పుత్రంతదాభార్యాంతత్సుతాంతథా। పౌత్రంప్రపౌత్రం దౌహిత్రమన్యం వాతత్కులోద్భవం। తద్దానాతిక్రమేదానం ప్రత్యుతాధోగతిప్రదం." = மிகச்சிறந்த தானத்தை முதலில் குருவுக்குக் கொடுத்துப்பின்பு மற்றைய தானங்களை முறையே அந்தந்த அந்தணர்களுடைய யோக்கியதையின் ஏற்றக் குறைவின்படிக் கொடுக்கவேண்டுவது. ஆசிரியனில்லாவிட்டால், குருபுத்திரனுக்குக் கொடுக்கவேண்டும். அவனில்லையேல் குருபத்தினிக்கும், அவளில்லையாயின் குருமகளுக்கும், அவளில்லாவிடின் குருமகனுடையமகனுக்காவது, இல்லையேல்அவன்மகனுக்காவது, குருவின்மகளுடைய மகனுக்காவது, யாருமில்லாவழி அக்குருவின் குலத்திற் பிறந்தவனுக்காவது தானம் கொடுக்கவேண்டும். ஆசிரியனுக்குக் கொடுக்கவேண்டிய தானத்தைச் செய்யக்கடந்தானாயின், கொடுப்போன், புண்ணியத்தைக் கெடுப்பது மல்லாமல் நரகத்தையும் அடைகின்றான். எ - று. காண்க.

## பாத்திரவிசேடத்தாலுறும் பயன்விசேடம்.

இயமன். "యమః॥ సమమబ్రాహ్మణేదానం ద్విగుణంబ్రాహ్మణబ్రువే। ప్రాధీతేశతసాహస్రమనంతం వేదపారగే." =வேதியனல்லாதவனுக்குக் கொடுத்தால், கொடுத்தளவிற்குச் சமமான பயனுண்டாம். வேதியன் என்ற மாத்திரையிலுள்ளவனுக்குக் கொடுத்தால் இரட்டிப்புப் பயன். வேதமோதத் தொடங்கினவனுக்குக் கொடுத்தால் நூறுயிரம்பங்கு அதிகபயனும். முற்றும் ஓதினவனுக்குக் கொடுத்தால் வரும்பயனுக்கு முடிவில்லையாம் எ - று. காண்க.

## வேதபாரகனிலக்கணம்.

இயமன். "యమః॥ ఉత్పత్తింప్రళయంచైవభూతానామాగతింగతిం। వేత్తివిద్యామవిద్యాంచ సభవేద్వేదపారగః." = ஆன்மாக்களின் உற்பத்தி நாசமும்,

போக்குவரவும், அறிவும், அறிவுடைமையும், யார் அறிந்திருக்கின்றனரோ? அவன்வேதத்தை முற்றும் உணர்ந்தவனாவான். எ-று. காண்க. பாரகன்=முற்றுமுணர்ந்தோன்.

## சூத்திரர் முதலியோர்க்குக் கொடுத்தலின் விடயம்.

இயமன். "యమః॥ శూద్రేసమగుణాదానంవైశ్యేతద్విగుణంస్మృతం। క్షత్రియేత్రిగుణంప్రాహుఃషడ్గుణంబ్రాహ్మణేస్మృతం."=சூத்திரனுக்குக் கொடுத்தால்கொடுத்தளவிற்குச் சமனானபயன். வைசியனுக்குக்கொடுத்தால் இரண்டத்தனைப்பயன். க்ஷத்திரியனுக்குக்கொடுத்தால் மூன்றத்தனைப்பயன். வேதியனுக்குக் கொடுத்தால் ஆறத்தனைப் பயன் வரும். எ-று. காண்க.

இம்மிருதி வசனங்களால் க்ஷத்திரிய வைசிய சூத்திரரும் தானத்தை வாங்குவதற்கு அதிகாரியா யிருக்கலாமென்று தோற்றும். ஆயின் அங்ஙனமன்று, என்னை? பிரதிக்கிரகம் என்னும் கருமத்தின் அதிகாரம் வேதியனுக்கொழிய ஏனையர்க் கில்லையென்று எல்லா மிருதிகளிலும் நிச்சயிக்கப்பட் டிருக்கின்றது. அங்ஙனமாயின் மேலையவசனத்தில், சூத்திரவைசிய க்ஷத்திரியர் கட்குக்கொடுத்தால் இவ்வளவு பயனென்று கூறப்பட்டுள்ளதே யிதன்கருத் தென்னை யெனில்? இவ்வசனம் அன்னதானத்தைப் பெற்றுக்கொள்ளும் அதிகாரம் சூத்திராதியர்க்கும் உண்டென்ற கருத்தாகின்றது. அவ்வாறே தாற்பரியங் கூறவேண்டுமென்னும் நியமம் என்னை யெனின்? அதற்கு உடன்பட்டு வேறுமிருதிகளும் கூறுகின்றன. வருமாறு (కృతాన్నమితరేభ్యః)=வேதியனொழிய ஏனையர்க்குக் கொடுப்பதாயின் சமைத்தசோறே யிடுக. என்று கௌதமர் கூறினர்.

## சுற்றத்தினர்க்களிக்குங்கொடை.

வியாசர். "వ్యాసః॥ మాతాపిత్రోశ్చయద్దత్తంభ్రాతృస్వసృసుతాసుచ। జాయాత్మజేషుయద్దత్తంసోనంత్యఃస్వర్గసంక్రమః। పితుశ్శతగుణందానం సహస్రంమాతురుచ్యతే। అనంతందుహితుర్దానం సోదర్యేదత్తమక్షయం."=தாய்தந்தையர்க்கும், தமையன் தம்பியர்க்கும், தமக்கை தங்கைகட்கும், தன் பெண்களுக்கும், மனைவிக்கும், புத்திரர்க்கும் கொடுத்தவன் நிந்தை யில்லாமலே சுவர்க்கத்தை யடைவான். தன்பொருளைத் தந்தைக்குக்

கொடுத்தால் நூறுபங்கு விசேடம்; தாய்க்கானல் ஆயிரம்பங்கு; மகளுக்கானல் முடிவேயில்லை; உடன்பிறந்தார்க்குக் கொடுத்தால் என்றுங் கெடாதுவளரும். எ-று. காண்க.

பவிஷியோத்தரம். "భవిష్యోత్తరే॥ నకేవలంబ్రాహ్మణానాందానంసర్వత్ర శస్యతే। భగినీభాగినేయానాం మాతులానాంపితృష్వసుః। దరిద్రాణాంచబంధూనాందానం కోటిగుణంభవేత్." = வேதியர்க்குமாத்திரமே தானம் கொடுக்க வேண்டுமென்பது விரதமாகக்கொண்டால் எல்லாவிடயத்திலும் அது சிறந்ததல்ல, தன்னுடன் பிறந்தபெண்கள், அவர்கள் பிள்ளைகளாகிய நன்மருமக்கண்மார், அம்மான்மார், தந்தையுடன் பிறந்த அத்தைமார், மற்றும் வறியவர்களாயிருக்கிற தனதுசுற்றத்தார்க்கும் கொடுத்தால் அதனுற் கோடிபங்கு அதிகமானபயனுண்டாம். எ - று. காண்க.

## தக்கவேதியற்குக்கொடாமையின் விடயம்.

சாதாதபர். "శాతాతపః॥ సన్నికృష్టమతిక్లిష్ట మతిక్రామతియోద్విజం। భోజనేచైవదానేచసహంత్యాసప్తమంకులం." = மிகவருத்தப்படுகின்ற வேதியன் சமீபத்திலிருக்கும் போது உண்டிவிடயத்திலாவது தானவிடயத்திலாவது அவனைக் கடந்தொழித்து எவன்அப்பாற்செல்லுகின்றனே? அவன் ஏழுதலைமுறைவரையில்தன்குலத்தை நாசஞ்செய்து விடுகின்றன். எ-று. காண்க.

## தான விசேடபயன்.

மஹாபாரதம். "మహాభారతే॥ హృతస్వాహృతదారాశ్చ యేవిప్రాదేశవిప్లవే। అర్థార్థమభిగచ్ఛంతి తేభ్యోదత్తంమహాఫలం."=தன்னுட்டுக்கு உபாதியுண்டான காலத்தில் தன்பொருளை யிழந்தும், மனைவியையிழந்தும், பொருள் நிமித்தமாகவந்தவேதியற்குக் கொடுக்கப்பட்டதானம் சிறந்த பயனைத்தரும். எ-று. காண்க.

## தானம் பெறத்தகாதவர்கள்.

மனு. మనుః॥ నచాప్యపిప్రయచ్ఛేత్తు బైడాలవ్రతినిద్విజే। నబకవ్రతికేపాపే నావేదవిదిధర్మవిత్। త్రిష్వప్యేతేషుదత్తం హివిధినాప్యార్జితంధనమ్। దాతుర్భవత్యనర్థాయ పరత్రాదాతురేవచ."=வறியவனே யாயினும் "பைடாலவிரதம்" உடையவேதியனுக்கும், பகவிருத்தியுடையபாவிக்கும்வேதத்தை அறி

யாதவனுக்கும், தருமத்தையுணர்ந்தவன் தானத்தைக்கொடுக்கலாகாது. விதிப்படி தான்றேடியபொன்னை இம் மூவர்க்குங் கொடுத்தால், கொடுத்தவனுக்குக்கேடுண்டாகும். மறுமையிலும் ஒன்றும் கொடாதவனே யாவன். எ—று. காண்க.

### பைடாலவிரதவிலக்கணம்.

மனு. "మనుః॥ యత్కారణంపురస్కృత్యవ్రతచర్యాంనిషేవతే। పాపంవ్రతేన సంఛాద్యబైడాలంనామతద్వ్రతం." = எவன்? யாதேனுமொருநிமித்தத்தை முன்னிட்டுக்கொண்டு ஒருவிரதத்தை அனுட்டிக்கின்றான் அவ் விரதத்தால் தன் பாவத்தை யொளித்துவைத்திருக்கின்றான் அப்படிப்பட்டவிரதத்திற்குப்பைடாலவிரதமென்றுபெயராம். எ—று. காண்க. இது கூடாவொழுக்க மெனினும் அமையும்.

### பகவிருத்தியிலக்கணம்.

மனு. "మనుః॥ అధోదృష్టిర్నైకృతికస్స్వార్థసంధానతత్పరః। శఠోమిథ్యావినీతశ్చబకవ్రతికరోద్విజః."=கீழ்ப்பார்வையையுடையவன், வஞ்சகன், தன் பயனைத்தேடிக் கொள்வதிலேயே கருத்துடையவன், உலோப குணமுடையவன், அடக்கமுடையவனைப்போலப்பொய்யாகநடிப்பவன், என்ற இந்தப்பார்ப்பான் பகவிருத்தியுடையவனும். எ—று. காண்க. பகம்=கொக்கு. விருத்தி=சீவனத்தொழில்.

சாதாதபர். "శాతాతపః॥ నష్టందేవలకేదత్తమప్రతిష్ఠంచవార్ధుషే। యచ్చవాణిజ్యకేదత్తం నతత్ప్రేత్యచనోఇహ." = தேவலகனுக்குக் கொடுத்த தானம் நட்டத்தை யடையும். வட்டியால் சீவிக்கின்றவனுக்குச்செய்ததானத்தால் உயர்ந்தநிலைமை கெட்டுவிடும். வியாபாரம்செய்பவனுக்குக் கொடுத்தால் அது இம்மை மறுமை யிரண்டிற்கும் பயனைத்தராது வீணும். எ-று. காண்க.

### தேவலகனிலக்கணம்.

ஸ்காந்தம். స్కాందే॥ "దేవార్చనరతోవిప్రో విత్తార్థీవత్సరత్రయం। సవైదేవలకోనామ హవ్యకవ్యవిగర్హితః." = எந்த அந்தணன் பொருளை இச்சித்து மூன்றுவருடம் வரையில் அந்நியனுக்காக தேவர்களைப் பூசிக்கின்றானே? அவனுக்குத் தேவலகன் என்று பெயராம். அவன், தேவகருமங்களிலும் பிதிர்கருமங்களிலும் தகாதவன் என்று இகழப்பட்டான். எ-று. காண்க.

### வீண்செலவுசெய்பவனுக்குத் தானமாகாது.

விருத்தமனு. వృద్ధమనుః॥ "పాత్రభూతోపియోవిప్రః ప్రతిగృహ్యప్రతిగ్రహం। అసత్సువినియుంజీత తస్మైదేయంనకించన." =எந்தவேதியன் [தானம்பெறத்தக்க தரத்தை யுடையவனே யாயினும்] தானத்தைப் பெற்றுக்கொண்டு கெட்டவழியில் செலவழித்து விடுவானோ? அவனுக்கு எதுவும் ஒருசிறிதும் கொடுக்கலாகாது. எ-று. காண்க.

### தருமஞ்செய்யாது பொருள் வைத்திருப்பவன் விடயம்.

விருத்தமனு. "వృద్ధమనుః॥ సంచయంకురుతేయశ్చ ప్రతిగృహ్యసమంతతః। ధర్మార్థంనోపయుంజీతనతం తస్కరమర్చయేత్." = யார்? எல்லாவிடங்களிலும் தானம் வாங்கிப்பொருளிருப்புச்செய்துவைத்துக்கொண்டு, தருமத்தின் வழியி லுபயோகிக்காம லிருக்கின்றனோ? அந்தக் கள்ளனைப் பூசிக்கலாகாது. எ-று. காண்க.

### வீணாய்விடும்கொடைபதினாறுவன.

விஷ்ணு தருமோத்தரம். "విష్ణుధర్మోత్తరే॥ పరస్థానేవృథా దానమశేషంపరికీర్తితం। ఆరూఢపతితేచైవ అన్యధాప్తార్థసంచయాత్। వ్యర్థమబ్రాహ్మణేదానంపతితేతస్కరేతథా। గురోశ్చాప్రీతిజనకే కృతఘ్నేగ్రామయాజకే। వేదవిక్రయిణేచైవయస్య చోపపతిర్గృహే। స్త్రీభిర్జితేషుయద్దత్తంవ్యాళగ్రాహేతథైవచ। బ్రహ్మబంధౌచయద్దత్తం యద్దత్తంవృషలీపతౌ। పరిచారేషుయద్దత్తం వృథాదానానిషోడశ." = முதல் அந்நியர் வாசஞ்செய்யு மிடத்தில் கொடுத்த எல்லாத் தானமும், உ-வது, ஆரூடபதிதன் = ஏறிவிழுந்தவன். எனவே, மேல்நிலைக்குச் சென்றும் நிலைதவறிக் கீழ் ஒழுக்கத்திற்கு வந்தவனுக்குக் கொடுத்த தானமும், ௩-வது, வேறுவகையாற் றேடிய பொருளாற் செய்யும்தானமும், [வேறுவகையாவது - பாவவழியாற் சம்பாதித்தது] ௪-வது – வேதியனல்லாதவனுக்குக் கொடுத்ததானமும், ௫ - வது, பதிதன் = பிரஷ்டனானவனுக்குக் கொடுத்ததானமும், ௬-வது, திருடனுக்குக் கொடுத்ததானமும், [கள்ளனாவான் மேலே குறிக்கப்பட்டான்]. ௭-வது, குருவுக்கு விருப்பஞ் செய்யாதவனுக்குக் கொடுத்ததானமும், ௮ - வது, செய்நன்றி மறந்தவனுக்குக் கொடுத்ததானமும், ௯ - வது, கிராமபுரோகிதனுக்குக் கொடுத்த தானமும், ௧0 - வது, வேதத்தை விற்பவனுக்கு [கூலிக்கு வேதஞ்சொல்வது சொல்விப்பது] கொடுத்த தான

மும், ௧௧ - வது, உபபதியைத் தன்னில்லத்தில் வைத்திருப்பவனுக்கு (எனவே, வியபசாரியினுடைய கணவன் என்பது) கொடுத்த தானமும், ௧௨ - வது, பெண்வழி நிற்பவனுக்குக் கொடுத்த தானமும், ௧௩ - வது, பாம்பு பிடிப்பவனுக்குக் கொடுத்த தானமும், ௧௪ - வது, வேதியன் பந்துவுக்குக் கொடுத்த தானமும், ௧௫ - வது, விருஷலீபதிக்குக் கொடுத்த தானமும், [விருஷலீபதி = பூத்தபின்மணந்தவள் கணவன்]. ௧௬ - வது, பரிசாரகனுக்குக் கொடுத்த தானமும், ஆகிய இப்பதினாறும் பயனற்று வீணானதானமாம். எ-று. காண்க.

## தானமின்றியுபசரிக்கத்தக்கவர்கள்.

மஹாபாரதம். మహాభారతే॥ "పంగ్వంధబధిరామూకా వ్యాధినోపహతాశ్చయే। భర్తవ్యాస్తేమహారాజ నతుదేయః ప్రతిగ్రహః." =காலில்லாதவன்=முடவன், குருடன், செவிடன், ஊமை, நோயால்பீடிக்கப்பட்டவன்=ரோகி, இவர்களனைவரும் அன்னபானாதிகளாலுபசரிக்கத்தக்கவர்களாவார்களன்றித்தானத்திற்குத்தக்கவர்களல்லர். எ-று.காண்க.

## தக்கவர்களைவிடுத்துத்தகாதவர்க்குக்கொடுத்தல்.

இதனை மனுவிலக்கினர். మనుః॥ "అనర్హతే యద్దదాతి నదదాతియదర్హతే। అర్హానర్హాపరిజ్ఞానాద్దానాద్ధర్మాచ్చహీయతే." =தக்கவனுக்குக் கொடாதுவிடுதலும், தகாதவனுக்குக் கொடுத்தலு மாகிய காரியத்தைச் செய்தலில் இவன்தக்கவன்இவன்தகாதவன் என்றுஉணராத குற்றத்தால் தான்செய்த தானதருமங்களைக் கெடுத்து விடுகின்றான். எ-று. காண்க.

## தானஞ்செய்யத்தக்கபொருளிலக்கணம்.

பவிஷியோத்தரம் விதித்தது. భవిష్యోత్తరే॥ "యద్యదిష్టం విశిష్టం చ న్యాయప్రాప్తంచ యద్భవేత్। తత్తద్గుణవతే దేయమిత్యేతద్దానలక్షణం." = எது எது தனக்கு இச்சையான பொருளோ? எது விசேடமுள்ள பொருளோ? எதுதருமத்தோடு சம்பாதிக்கப்பட்டதோ? அப்பொருளையெல்லாம் பாத்திரமான குணமுடையவனுக்குக் கொடுக்க வேண்டுவது. இதுவே தானத்திரவியவிலக்கணமாம். எ-று. காண்க.

## அவற்றுள்விசேடம்வருமாறு.

எல்லாவற்றையும் கொடுக்கவேண்டுமென்பதனுள்ளும் சில விசேடம் யாஞ்ஞவற்கியரால் கூறப்பட்டது. యాజ్ఞవల్క్యః॥ "స్వ

కుటుంబాభిరోధేన దేయందారసుతాదృతే। నాన్వయేసతిసర్వస్వం యచ్చాన్యస్మై ప్రతిశ్రుతం." = தன்குடும்பப் பாதுகாப்பினுக்குத் தடையில்லாத பொருளையும், மனைவியையும், தலைமகனையும் = மூத்தமகனையும்தவிரமற்றையவெல்லாப்பொருளையும் கொடுத்துவிடப்படும். வமிசமில்லாவழி, விசாரிப்பின்றியுள்ளனவெல்லாம் கொடுத்து விடலாம். ஒருவனுக்குக்கொடுக்கிறேன் என்று கூறியிருந்த பொருளாயின் எப்படிப்பட்டதாயினும் கொடுத்துவிட வேண்டுவது. எ-று. காண்க.

பிரகற்பதி. బృహస్పతిః॥ "కుటుంబభక్తవసనా ద్దేయంయదతిరిచ్యతే." = தன்குடும்பத்திற்கு வேண்டிய உணவு ஆடைகளைவிட மேற்பட்ட பொருளெல்லாம் கொடுக்கத்தக்கனவாம். எ-று. காண்க.

## தானஞ்செய்யவேண்டிய பொருட்பிரிவு.

சிவதருமம். శివధర్మే॥ "తస్మాత్తుభాగంత్రస్య జీవనాయప్రకల్పయేత్। భాగద్వయంతుధర్మార్థ మనిత్యంజీవనంయతః." = வாழ்நாள்அறிவுசிறிதேயாமாதலின், தான் தேடும்பொருளை மூன்று கூறுசெய்து, அவற்றுள் ஒருபங்கு தன்சீவனத்தின் பொருட்டு வைத்துக்கொண்டு மற்றைய விரண்டுபாகத்தையும் தருமத்தின் பொருட்டுக் கொடுக்க வேண்டும். எ-று. காண்க.

## மேலையதனெழிபுவருமாறு.

வியாசர். వ్యాసః॥ కుటుంబంపీడయిత్వాపి బ్రాహ్మణాయమహాత్మనే। దాతవ్యంభిక్షవేచాన్న మాత్మనోభూతిమిచ్ఛతా." = மஹான்மாவாகிய பிராமணசந்நியாசி அன்னபிக்ஷைக்கு வந்தபோது, தனதுமேன்மையை விரும்பின இல்லறத்தான் தன்குடும்பத்தையேனும் வருத்தி அவனுக்கு அந்நதானம் செய்யவேண்டுவது. எ-று. காண்க.

## தானங்களுக்குரியபயன்.

மனு. మనుః॥ "వారిదస్తృప్తిమాప్నోతిసుఖమక్షయమన్నదః। తిలప్రదః ప్రజామిష్టాం దీపదశ్చక్షురుత్తమం। భూమిదోభూమిమాప్నోతి దీర్ఘమాయుర్హిరణ్యదః। గృహదోగ్ర్యాణివేశ్మాని రూప్యదోరూప్యముత్తమం। వాసోదశ్చంద్రసాలోక్యమశ్విసాలోక్యమశ్వదః। అనడుహః శ్రియంజుష్టాం గోదోబ్రధ్నస్యవిష్టపం। యానశయ్యాప్రదోభార్యామైశ్వర్యమభయప్రదః। ధాన్యదశ్శాశ్వతంసౌఖ్యం బ్రహ్మదోబ్రహ్మశాశ్వతం। సర్వేషామేవదానానాం బ్రహ్మదానంపరంస్మృతం." = தண்ணீர் கொடுத்தவன், திருத்தி

யையடைவன். அந்நதானஞ் செய்தவன் அழியாத சுகத்தைப்பெறுவன். எள்ளைத் தானஞ்செய்தவனுக்கு, இச்சைக்குரிய நன்மக்களைப் பெறுதலுண்டாம். விளக்குத்தானஞ் செய்தால் நல்லபார்வையுண்டாம். பூதானஞ் செய்தவன்பூமிகளுக்குத்தலைவனுவான். பொன்னைத் தானஞ்செய்தவனுக்குத்தீர்க்காயுளுண்டாம். மனை=வீடு (இதனை வீடென்று சிலர் வழங்குவர்) தானஞ் செய்தவன் சிறந்த மாளிகைகளைப் பெறுவன். வெள்ளியைத் தானஞ் செய்தவன் விசேடம் வெள்ளியை யடைவன். ஆடையைத் தானஞ்செய்தவன் சந்திரனுலகத்தைப் பெறுவன். குதிரையைத் தானஞ்செய்தவன் அசுவனிதேவருலகத்தை யடைவன். இடபத்தைத் தானஞ் செய்தவனுக்குச் செல்வம் வலிதில் வந்துசேரும். (இடபம்=எருது). கோதானஞ் செய்தவன் பிரமலோகத்தையடையவன். வாஹனம், படுக்கைதானஞ் செய்தவனுக்கு மனத்திற்கினிய மனையாள் வருவாள். அபயதானஞ் செய்தவனுக்கு எல்லா அதிகாரச்செல்வமுமுண்டாம். (அபயம் = பிறர் அச்சம் ஒழித்தல்) தானிய தானஞ்செய்தவனுக்கு நித்தசுகமுண்டாம். பிரமம் என்பது வேதம். அதைத்தானஞ் செய்தவனுக்கு, பிரமம் எ-து. அழியாமுத்திகிடைக்கும். இவ்வெல்லாத் தானங்களிலும் பிரமதானமே சிறந்ததென்று, ஸ்மிருதிகளிற் கூறப்பட்டது. எ-று. காண்க.

## இத்தானங்களைப்பெறுதற்குரியார்.

பவிஷியோத்தரம். భవిష్యోత్తరే "తథాద్రవ్యవిశేషాంశ్చ దద్యాత్పాత్రే విశేషతః। ఆర్తానామన్నదానంచ గోదానంయజ్వనేతథా। తథాప్రతిష్ఠాహీనానాం క్షేత్రదానంవిశిష్యతే। సువర్ణంయాచకానాంచ విద్యాంచైవోర్ధ్వరేతసాం। కన్యాంచైవానపత్యానాం దదతాంగతిరుత్తమా." = விசேடமான பொருள்களை மிகத்தக்கோர்க்கே கொடுக்க வேண்டுவது. பசியால் பீடிக்கப் படுகிறவனுக்கு அந்நமிடவேண்டுவது. விதிப்படி வேள்விசெய்து அவ்வேள்வித்தீயை வைத்துப் பாதுகாப்பவனுக்குக் கோதானஞ் செய்யவேண்டுவது. இருக்க இடமில்லாமல் அலைபவனுக்கு மனையை நிலத்தைத் தானஞ்செய்யவேண்டுவது. வந்து இரப்பவனுக்குப் பொன்னைக் கொடுக்கவேண்டுவது. சுக்கிலத்தைக்கீழ்விடாதவன்=பிரமசாரிக்கு வேதம்சொல்லவேண்டுவது, மக்களில்லாத

வனுக்குக் கந்நிகாதானஞ் செய்யவேண்டுவது. இவ்வாறுதானஞ் செய்தவர்க்கு மேலான கதிகிடைக்கும். எ-று. காண்க.

ஸ்காந்தம். స్కాందే "శ్రాంతస్యయానంతృషితస్యపానం మన్నంక్షుధార్తస్య నరోనరేంద్ర। దద్యాద్విమానేనసురాంగనాభి స్సంస్తూయమానస్త్రిదివంప్రయాతి." = நடக்கமாட்டாது இளைத்தவனுக்கு வாஹனமும், தாகமெடுத்தவனுக்குத் தண்ணீரும், பசித்தவனுக்குச்சோறும், கொடுக்க வேண்டும். அங்ஙனம் கொடுத்தவன் தெய்வப்பெண்களால் துதிக்கப்பட்டு விமானமேறிச் சுவர்க்கம்புகுவன். எ-று. காண்க.

## புண்ணியத்தைக்கொடுப்பது.

அங்கிரா. అంగిరాః॥ దేవతానాంగురూణాంచమాతాపిత్రోస్తథైవచ। పుణ్యం దేయంప్రయత్నేన నాపుణ్యంచాదితంక్వచిత్." = தேவர்களுக்கும், குருவுக்கும், தாய்க்கும், தந்தைக்கும், தான்செய்த புண்ணியத்தை முயன்றும் கொடுக்கவேண்டுவது. தான்தேடிய பாவத்தை யார்க்குங் கொடுக்கலாகாது எ-று. காண்க.

விஷ்ணு தருமோத்தரம். విష్ణుధర్మోత్తరే "యస్యోపయోగియద్ద్రవ్యం దేయంతస్యైవతద్భవేత్." =யாருக்கு எந்தப்பொருளுபயோகிக்கத்தக்கதாக விருக்குமோ? அவனுக்கு அந்தப்பொருள் கொடுக்கத் தக்கதாக விருக்கும். எ-று. காண்க.

## தானத்திற்குத்தக்ககாலம்.

சாதாதபர். శాతాతపః॥ "అయనాదౌసదాదేయం ద్రవ్యమిష్టంగృహేషుయత్। షడశీతిముఖేచైవ విమోక్షేచంద్రసూర్యయోః। సంక్రాంతౌయానిదత్తాని హవ్యకవ్యాని దాతృభిః। తానినిత్యందదాత్యర్కః పునర్జన్మనిజన్మని." = விருப்பமாகிய மனைமுதலிய பொருள்களை அயனகாலமுதலிய வற்றில் எப்பொழுதுந் தானங் கொடுக்கவேண்டியது. ஷடசீதிமுககாலத்திலும் சந்திர சூரிய கிரஹண மோக்ஷகாலத்திலும் தானஞ் செய்யவேண்டும். சங்கிரமண காலத்தில் தேவகருமத்திலும் பிதிர்கருமத்திலும் எந்தப்பொருள் தானஞ் செய்யப்படுகின்றதுவோ? அந்தப்பொருள் ஒவ்வொருபிறப்பிலும்அவனுக்குநித்தமாய்க்கிடைக்கும்படிச் சூரியன் கொடுக்கின்றான். எ-று. காண்க.

## அயனாதிகள் வருமாறு.

விருத்தவசிட்டர். వృద్ధవశిష్ఠః॥ "మృగకర్కటసంక్రాంతీ ద్వేతూదగ్దక్షిణాయనే। విషువేచతులామేషౌ తయోర్మధ్యేతతోపరాః। వృషవృశ్చికకుంభేషుసింహే చైవయదారవిః॥ ఏతద్విష్ణుపదంనామ విష్ణుపాదాధికంఫలం। కన్యాయాం మిథునేమీనే ధనుష్యపిరవేర్గతిః। షడశీతిముఖాఃప్రోక్తాః షడశీతిగుణాఃఫలైః." = மேட சங்கிரமணம்=சித்திரை மாசப்பிறப்பு விஷுவத்து புண்ணியகாலம். விருஷபசங்கிரமணம் = வைகாசி மாசப்பிறப்பு விஷ்ணு பதபுண்ணியகாலம். மிதுனசங்கிரமணம் = ஆனிமாசப்பிறப்பு ஷடசீதி புண்ணிய காலம். கர்க்கடக சங்கிரமணம் = ஆடிமாசப்பிறப்பு தக்ஷணாயன புண்ணியகாலம். சிங்கசங்கிரமணம்=ஆவணி மாசப்பிறப்பு விஷ்ணுபத புண்ணியகாலம். கந்நியாசங்கிரமணம்=புரட்டாசிமாசப்பிறப்புஷடசீதிபுண்ணியகாலம். துலாசங்கிரமணம்= ஐப்பசிமாசப்பிறப்பு விஷுவத்து புண்ணியகாலம். விருச்சிகசங்கிரமணம் கார்த்திகைமாசப்பிறப்பு விஷ்ணுபத புண்ணியகாலம். தனுஸ்ஸங்கிரமணம் = மார்கழி மாசப்பிறப்பு, ஷடசீதி புண்ணியகாலம். மகரசங்கிரமணம்=தைமாசப்பிறப்பு, உத்தராயண புண்ணியகாலம். கும்பசங்கிரமணம் = மாசிமாசப்பிறப்பு, விஷ்ணு பதபுண்ணியகாலம். மீனசங்கிரமணம்=பங்குனி மாசப்பிறப்பு ஷடசீதி புண்ணியகாலம். எ - று. காண்க.

விஷுவத்து - என்பது, ஆகாயத்திலிருக்கும் பசக்கிரத்தில் துலாமேஷ ராசிகள் நடுப்பாகத்தில் சமசூத்திர மாகவிருத்தலின் அவற்றிற்கு விஷு என்னும் அப்பெயர் உண்டாயிற்று.

விஷ்ணுபதம்-என்பது, இடபம், சிங்கம், விருச்சிகம், கும்பம், இந்தத் திர ராசிகளுக்குச் சூரியன் புகும் காலத்தில் செய்த தானாதி நல்ல கருமங்கள் விஷ்ணுபாத சந்நிதியிற் செய்ததிலும் அதிகபுண்ணிய பலத்தைத் தருதலினால் அந்த சங்கிரமணத்திற்கு விஷ்ணுபதம் என்னும் பெயர் வந்ததென்றுகூறுவர்.

ஷடசீதிமுகம்-என்பதனுள். "ஷட்டு.=ஆறு. அசீதி=எண்பது. கணக்கிற்கு இடப்புறமிருந்து வலப்புறம் போதல் வழக்காதலின் எண்பத்தாறு என்றபடி. அவ்வளவுபாகம் அதிகமான புண்ணியத்தைத் தரும் காலமாதலின், மிதுனம், கன்னி, தனசு, மீனம், என்னும் உபயராசிகளுக்குச்சூரியன் புகும்காலம், ஷடசீதிமுகம் என்று கூறுவர்.

தக்ஷணாயநம் - என்பது சூரியன் வடக்கிலிருந்து தென்றிசைக்கு நடக்கத் தொடங்குங்காலம். அது கர்க்கடக சங்கிரமணம் ஆதலால் அப்பெயராயிற்று.

உத்தராயணம் - என்பது, சூரியன் தெற்கிருந்து வடக்கே செல்லத் தொடங்கும் மகரசங்கிரமணகாலத்திற்கு உத்தராயணம் என்றுபெயராம்.

இப்பன்னிரண்டு சங்கிரமணமும் ஸ்நாநதானமுதலிய நல்ல கருமங்களைச் செய்பவர்க்கு அக்கருமபலத்தைக் காலவிசேடத்தால் அதிகரிக்கச்செய்தலினால் அவற்றிற்குப் புண்ணியகாலமென்று பெயராயிற்று.

## பூரணையிற்செய்யுந்தானம்.

விஷ்ணுதருமோத்தரம். విష్ణుధర్మోత్తరే "వైశాఖీకార్తికీమాఘీ పూర్ణిమాతుమహాఫలా। పౌర్ణమాసీషుసర్వాసు మాసర్క్షసహితాసుచ । దత్తానామిహదానానాం ఫలందశగుణంభవేత్." =வைகாசி, கார்த்திகை, மாசி, இந்த மூன்று திங்களின் பூரணைகள் விசேடபயனை யுடையனவாம். அன்றியும், ஏனை யொவ்வொருமாதங்களின் நக்ஷத்திரங்களோடு கூடிய எல்லாப் பூரணையிலும் கொடுக்கப்பட்ட தானத்திற்கும் பதின்மடங்கு பயன் அதிகமாம். எ - று. காண்க.

மாதங்களின் நக்ஷத்திரமாவன. சித்திரைமீ க்கு சித்திரை நக்ஷத்திரம். வைகாசிமீ க்கு விசாகநக்ஷத்திரம். ஆனிமீ க்கு கேட்டைநக்ஷத்திரம். ஆடிமீ க்கு பூராடநக்ஷத்திரம். ஆவணிமீ க்கு திருவோண நக்ஷத்திரம். புரட்டாசிமீ க்கு பூரட்டாதி நக்ஷத்திரம். ஐப்பசிமீ க்கு அசுவனிநக்ஷத்திரம். கார்த்திகைமீ க்கு கிருத்திகை நக்ஷத்திரம். மார்கழிமீ க்கு மிருகசிரநக்ஷத்திரம். தைமீ க்கு பூசநக்ஷத்திரம். மாசிமீ க்கு மகநக்ஷத்திரம். பங்குனிமீ க்கு உத்திரநக்ஷத்திரம். இம்மாதங்களின் பூரணை திதியில் இந்தநக்ஷத்திரங்களுக்குச் சரியாகச்சந்திர னிருக்கவேண்டுவது. இது சாந்திரமானத்தின்படி சொல்லப்பட்டது. ஆனால் சாந்திரமானத்தில் சிலகாலத்தில மேற்கூறிய நக்ஷத்திரங்களுக்குப் பின்னக்ஷத்திரமாவது முன்னக்ஷத்திரமாவதுசேர்ந்து வருவதுமுண்டு. ஆதலின், சௌரமான வகையாலாயினும் ஆகலாம். கூறிய நக்ஷத்திரங்களோடு கூடிய பூரணை திதியெல்லாம் பதின்மடங்கு புண்ணியந்தரத்தக்க புண்ணியகாலமாம். ௧௨ - மாதங்களின்பெயரும் அக்காரணத்தினாலேயே வழங்குகின்றது.

## காலவிசேடத்தினால் தானத்தின்பலவிசேடம்.

மனு మనుః॥ "సహస్రగుణితందానం భవేద్దత్తంయుగాదిషు। కర్మశ్రాద్ధాదికంచైవ తథామన్వంతరాదిషు." = நான்கு யுகாதிகாலங்கள், பதினான்கு மந்வந்தராதி காலங்கள் இவைகளில் கொடுக்கப்பட்ட தானமும் செய்யப்பட்ட சிராத்தமுதலிய கருமங்களும் தான்கொடுக்கத்தக்கதின் பலனுக்காயினும் ஆயிரம்பங்கு அதிகமான பலனைக்காலபலத்தினாற் கொடுக்கின்றன. எ-று. காண்க.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "శతమిందుక్షయేదానం సహస్రంతుదినక్షయే। విషువేశతసాహస్రం వ్యతీపాతేత్వనంతకం." = "சந்திரனுடைய க்ஷய" காலத்தில் தானஞ்செய்யின் நூறுமடங்கு பயனதிகமாம் "தினக்ஷய" காலத்தில் செய்யப்பட்டதானம் ஆயிரம்பங்கு அதிகபயனைத் தருகின்றது. விஷுவத்துப் புண்ணியகாலத்தில் செய்த தானம் இலக்ஷம்பங்கு அதிகமானபயனைத் தருகின்றது. வியதிபாதத்திற் செய்யப்பட்ட தானம் முடிவற்றபயனைத் தருகின்றது. எ-று. காண்க.

"ఇందుక్షయే." என்பதனுள், இந்து=சந்திரன். க்ஷயம்=குறைந்துபோதல். ஆகவே சந்திரனுடையகுறைவாங்காலமென்று, ஷஷ்டி தற்புருடசமாசார்த்தம்=ஆறும்வேற்றுமைத் தொகைப்பொருளாகின்றது. இது வாச்சியார்த்தம். இனிசந்திரன் ஏறுவதும் குறைவதுமில்லையாமாதலின் இச்சொற்பொருளீண்டு ஒவ்வாது; இப்படிப்பட்டவிடங்களில், வாக்கியங்களுக்குக்கருத்துப்பொருத்தமாம்படி, அதற்கிலக் கியார்த்தத்தைக் கற்பிக்கவேண்டுகின்றது. இலக்கியார்த்தம்-எது, சொல்லுக்குரிய பொருளோடு சம்பந்தமுடைய வேறோர்பொருள். அல்லது. ஆகுபெயர்ப்பொருள். ஈண்டு இந்து என்னும் மொழிக்குச் சந்திரன் சொல்லுக்குரியபொருள். அவனொடு சம்பந்தமுடைய கலைகளே லக்ஷியார்த்தமாம். அதனுடைய க்ஷயம் என்னவே. அமாவாசையென்று பொருளாகின்றது. அல்லது, சந்திரனுக்குச் சம்பந்தமானது தின நக்ஷத்திரங்களாம். அதனுடைய குறைவு என்னவே. ஒரு இராப்பகலில், = சூரியோதயமுதல் மறுபடியும் சூரியோதயத்துக்குள் மூன்று நக்ஷத்திரங்களின் சமசூத்திரத்திற்குச் சந்திர சஞ்சாரம் உண்டாம்காலம். (உதாரணம். காலை-௨-நாழிகை,அசுவனி. பின்பு, ௫-நாழிகை, பரணி. மேல்-மூன்று நாழிகை, கிருத்திகை. ஆக நாழிகை. ௬௦. இப்படிப்பட்ட நாளாம்). அதுவுமன்றி, சந்திரனுக்குச் சம்பந்தமானது, அச்சந்திரனது நித்தியகதி, அது நாளொன்றுக்கு சராசரி ௮௦௦-கலைகளிருக்கவேண்டுவது. அக்கலைகள் ௯௦௦-வரையில் ஏறுவதுமுண்டு, ௭௦௦-வரையில் குறைவதுமுண்டு, அங்ஙனம்குறைந்தகாலம் "இந்துக்ஷய" மென்று கூறப்படும். அப்போது, நித்த நக்ஷத்திரங்களினுடைய பரமநாழிகை = ஆதியந்த மொத்த நாழிகை -௬௦-க்கு ஆயினும் அதிகமாகின்றது. (உதாரணம். ஞாயிற்றுக்கிழமை அசுவனி, ௫௮-திங்கட்கிழமை பரணி, ௬௦-செவ்வாய்க்கிழமை பரணி, ௩-ஆதியந்த நாழிகை-௬௫-ஆக; ஞாயிறு, திங்கள், செவ்வாய் என்னும் மூன்று வாரத்திற்கும் பரணி, சம்பந்தப்பட்டது. அவற்றுள் திங்கட்கிழமையை இந்துக்ஷய புண்ணிய காலமென்றும் கூறப்படும். மேற்கூறியபடி நக்ஷத்திர ஏற்றக்குறைவு காலங்களை அப்போதைக்கப்போது பஞ்சாங்கத்துள் பார்த்துக்கொள்ள வேண்டும். இம்மூவகையான லக்ஷியார்த்தத்தில் யாஞ்ஞவற்கியர்கருதியது யா

து? என்றுவிசாரிக்கு மிடத்தில் மூன்றுமெனச்சிலர், இரண்டேயெனச்சிலர், ஒன்றெனச்சிலர், நிச்சயவகையின்றிக்கூறுகின்றனர். யாஞ்ஞுவற்கியமிருதிக்கு வியாக்கியானஞ் செய்த, விஞ்ஞானயோகி முதலியோர் இவ்விடயங்களைத் தேற விசாரித்தாரில்லை ஆதலின், இந்தக்ஷயமென்பதோடு மூலத்தில் தின க்ஷயம் என்று கூறப்பட்டுள்ள அத்தினக்ஷயமென்பதற்கு எல்லாமிருதியி லுங் கூறப்பட்டுள்ள விலக்கணத்தை இவ்வுரையாசிரியரோ உதகரித்தெழு துகின்றனர். அதன்னேக்கத்தால், இப்போது, மேற்கூறிய மூன்றுவகை உரை யில் இரண்டாவது உரையையே சிறந்ததாகக் கொள்வது யுத்திசம்மதமாக விருக்கின்றது.

## வியதிபாதத்தில்தானம்.

பாரத்துவாசர். భరద్వాజః॥ "వ్యతీపాతె వైధృతౌ చ దత్తమక్షయకృద్భ వేత్." = வியதீபாதத்திலும் வைதிருதியினும், (எனவே அந்த யோகத்தில்) அல்லது (மஹாபாதகாலத்தில்) கொடுக்கப் பட்டது கெடாதபயனைக் கொடுப்பதாம். எ-று. காண்க.

விஷ்ணு. విష్ణుః॥ "దినక్షయే దినచ్ఛిద్రే పుత్రజన్మాదికేపి చ। ఆదిత్యాదిగ్రహాణాం చ నక్షత్రైస్సహ సంగమే। విజ్ఞేయః పుణ్యకాలోయం జ్యోతిర్విద్భిర్విచార్య చ। తత్ర దానాదికం కుర్యా దాత్మనః పుణ్యవృద్ధయే."=தினக்ஷயகாலமும், தினசித்திரகாலமும், மக்கள்பிறத்தல் முதலியகாலமும், சூரியன் முதலியகிரகங்கள் அந்தந்த நக்ஷத்திரங்களோடு கூடுங்காலமும், புண்ணியகாலமென்று உணர்ந்து கொள்ளத்தக்கது. சோதிட முணர்ந்தவர்களால் அந்தந்தகாலங்களைத் தெரிந்துகொண்டு, அப்பொழுது தானமுதலிய நல்லகருமங்களைத் தனக்குப் புண்ணியத்தை விருத்தி செய்து கொள்ளும்படிக்குச் செய்யவேண்டுவது. எ-று. காண்க.

## தினக்ஷயவிலக்கணம்.

வசிட்டர்கூறினர். వసిష్ఠః॥ "ఏకస్మిన్ సావనే త్వహ్ని తిథీనాం త్రితయం యదా। తదా దినక్షయః ప్రోక్త శ్శతసాహస్రకం ఫలం."=ஒருசாவனதினத்தில்மூன்றுதிதிகள் எப்பொழுதுசேருகின்றனவோ? அப்பொழுது தினக்ஷயமென்று கூறப்பட்டது. அந்தகாலத்தில்செய்தஸ்நாநந் தானமுதலிய நல்லகருமங்களினால். இலக்ஷம் பங்கு அதிகபயன் உண்டாம். எ-று. காண்க.

சாவனதினம். என்பது, சூரியோதயமுதல் மறுபடியும் சூரியோதயம் ஆகிறவரையிலாகிய ஒரு அஹோராத்திரத்திற்கு மொத்தநாழிகை அறுபது கொண்டது ஒருசாவனதினமாம்.

## தினச்சித்திரவிலக்கணம்.

சோதிடநூலுள். జ్యోతిశ్శాస్త్రే॥ "తిథ్యృక్షతిథియోగర్క్ష ఘటాదిశ్చపర్వ ణః। సదృశోదివసశ్చంద్ర సమాఖ్యాప్రోహభార్గవః." = திதியும் நக்ஷத்திரமும் ஒரேகாலத்தில் முடிவதும், திதியும் யோகமும் ஒரேகாலத்தில் முடிவதும், யோகமும் நக்ஷத்திரமும் முடிவதும், திதியோகம்நக்ஷத்திரமும் ஒன்றாகமுடிவதும், ஆகியயிப்படிப்பட்டகாலம், சந்திரன்பருவகாலத்தோடு ஒத்தனவாம், இவற்றைச் சித்திரகாலமென்றும் சமகாலமென்றும் சுக்கிரன் கூறினர். எ-று. காண்க.

## சேதாதிகாலம்.

சோதிடநூல். జ్యోతిశ్శాస్త్రే॥ "యుక్తాదిసంగమోపేతంతచ్ఛేదత్వఫలైర్యుతం। షట్షోడశభిర్యుక్తం నాడికాద్వితయంయుతే। ఘటాదిసమయఃప్రోక్తో దానేనంతఫలప్రదః." = நக்ஷத்திரத்தினுடைய கலப்போடு கூடியிருப்பது, அதனுடைய சேதங்களின் பலத்தோடு கூடியிருப்பது, ஆகியஇவ்விரண்டிலும் இரண்டுநாழிகை பதினாறுவிநாடிகள் புண்ணியகாலமென்று கூறப்பட்டது. அக்காலத்தில் தானஞ்செய்தால் முடிவில்லாத பயனுண்டாம். எ-று. காண்க.

திதி, நக்ஷத்திரம், யோக முதலியவற்றிற்குக் கூடுங்காலம் தொடக்கத்தில் நாழிகையிரண்டும் விநாடிபதினாறு. சேதகாலம் என்பது, விட்டுப்போம்பொழுதாகிய மோக்ஷகாலம்முடிவில் இரண்டுநாழிகை பதினாறுவிநாடியாம். (உதாரணம்) ஞாயிற்றுக்கிழமை, சஷ்டி ஒன்பதுநாழிகை. சனிக்கிழமை பஞ்சமி ஐந்துநாழிகை. அச்சனிக்கிழமை ஐந்துநாழிகை முதல் ஏழுநாழிகை-பதினாறுவிநாடி வரையில் ஷஷ்டி சங்கமகாலம், ஞாயிற்றுக்கிழமை, ஏழுநாழிகை நாற்பத்துநான்கு விநாடிமுதல் பத்தாவது நாழிகை தொடக்கவரையிலும் ஷஷ்டிசேதகாலமாம். இவ்வாறு மற்றைய வெல்லாவற்றிற்கு முணர்ந்துகொள்ளவேண்டும்.

## தானத்திற்கு நிஷேதகாலம். நிஷேதம்=விலக்கு.

சங்கலிகிதர். శంఖలిఖితౌ॥ "ఆహారంమైథునంనిద్రాం సంధ్యాకాలేషువర్జయేత్। కర్మచాధ్యయనంచైవ తథాదానప్రతిగ్రహం." = சந்தியாகாலத்தில் உண்டி, உறக்கம், புணர்ச்சியும், சந்தியாவந்தனமொழிய வேறு கருமங்களும், வேதமோதலும், தானம் கொடுத்தலும், வாங்குதலும் ஆகிய இவற்றை விட்டுவிடவேண்டுவது. எ-று. காண்க.

## இராத்திரி தானங்கூடாது.

ஸ்கந்தபுராணம், స్కాందపురాణే॥ "రాత్రౌ దానం న కర్తవ్యం కదాచిదపి కేనచిత్। హరంతి రాక్షసాయస్మాత్తస్మాద్దాతుర్భయావహం। విశేషతో నిశీథేతు న శుభం కర్మశర్మణే। అతో వివర్జయేత్ప్రాజ్ఞో దానాదిషు మహానిశాం." = இராக்காலங்களில் எப்போதும் எவ்விதத்தும் தானம் செய்யலாகாது. ஏன் எனில்? அந்தத்தானபலனை இராக்கதர்கள் கொள்ளுவார்கள். ஆதலால் கொடுப்பவனுக்குப் பயமுண்டுபண்ணும். அவற்றுள்ளும், அரையிருளில் எந்தச்சுபகருமங்களும் சுகங்கொடுக்க மாட்டாது. ஆதலால், அறிவுடையோன் தானமுதலியகருமங்களில் நடுஇரவை விட்டுவிடவேண்டியது. எ - று. காண்க.

## அதன் ஒழிபு.

அங்கு மேற்கூறியதிற் சிறப்பாகத் தேவலர்கூறினர். దేవలః॥ "రాహుదర్శన సంక్రాంతి యాత్రా దారప్రసవేపిచ। దానం నైమిత్తికం జ్ఞేయం రాత్రావపి తదిష్యతే." = இராகுதரிசனம் = கிரஹணகாலம், சங்கிராந்தி= சூரியன் ஒவ்வொரு இராசியிலும் பிரவேசிக்குங்காலம், பிரயாணமுதலிய செய்யும்காலம், பிள்ளைபெறுதல், இப்படிப்பட்ட நிமித்தங்களுண்டானால் இரவிலும் நைமித்திக தானங்கள் உடன்பட்டன வென்று உணரத்தக்கன. எ-று. காண்க. இவ்விடத்து, "சங்கிராந்தி" என்றதனால்மகரசங்கிரமணம்=தைமாசப்பிறப்பு, கர்க்கடக சங்கிரமணம் = ஆடிமாசப்பிறப்பு மாத்திரமென்றுணரத்தக்கது. ஏன் எனில்? வேறுமிருதிகளில் "ముక్త్వా మకరకర్కటౌ." கர்க்கட சங்கிரமணம், மகரசங்கிரமணம். இவ்விரண்டினையுமொழித்து, ஏனைய வெல்லாச் சங்கிர மணத்திலும் இராக்காலத்தில் ஸ்நாநதானங்கள் செய்யலாகாது என்று விலக்கப்பட்டிருக்கின்றன.

## தானத்திற்குரிய இடம்.

மச்சபுராணம். మత్స్యపురాణే॥ "ప్రయాగాదిషు తీర్థేషు పుణ్యేష్వాయతనేషుచ। దత్వాచాక్షయమాప్నోతి నదీపుణ్యవనేషుచ." = பிரயாகைமுதலிய புண்ணியதீர்த்தங்கள், புண்ணியகரமான தெய்வ க்ஷேத்திரங்கள் புண்ணியநதிகள், புண்ணியவனங்கள், இவற்றில் தானங்களைச் செய்து கெடாத பயனை அடைகின்றான். எ - று. காண்க.

வியாசர். వ్యాసః॥ " గంగాద్వారే ప్రయాగేచా విముక్తేపిచ పుష్కరే। మకరేచాట్టహాసేచ గంగాసాగరసంగమే। కురుక్షేత్రే గయాతీర్థే శథాచామరకంటకే। ఏవమాదిషుతీర్థేషు దత్తమక్షయతామియాత్." = கங்கத்துவாரம்=இமயமலையில் கங்கைபிறக்குமிடம், பிரயாகை = கங்கையமுனைகூடும் இடம், அவிமுக்தம்=எந்தஇடத்தில் இறந்தவருள் முத்தியடையாதவனில்லையோ? அது. சிவனாலும் ஞானிகளாலும் விடப்படாதது எனவுமாம். விசேடமாக முத்தியையடைந்தது எனினுமமையும். அதுகாசியாம். புஷ்கரம் = பிரபாசக்ஷேத்திரம். அல்லது, சரச்சுதியாற்றங்கரையி லுள்ளதுமாம். இல்லையேல் பிரகற்பதி யொவ்வோரிராசியில் இருக்குங்கால் ஒவ்வொருயாறு புஷ்கரம் என்னப்படும். அதுவருமாறு,குருதுலாத்திலிருக்கும்போது காவேரி புஷ்கரம் - என்றாற்போலவன. மகரக்ஷேத்திரம் = கஜேந்திரன் முத்தியடைந்த இடம். அட்டகாசம் = சிவன் நகைத்த இடம். இது சிவஹாஸக்ஷேத்திர மென்னவும் படும். அது புராணபேதப்படி, இமயமலைக்கீழ்ச் சிகரம், திருத்தணிகை, மதுரை யாதி இடம். இதைத்திரிபுரதகனக்ஷேத்திர மெனவுங் கூறுவர். கங்காசாகரசங்கமக்ஷேத்திரம் = வங்காளம் காளிகட்டம். குருக்ஷேத்திரம், குச்சிலிநாட்டுக்கும் டில்லிக்கும் நடுவே பாரதயுத்தம்நடந்தபெருவெளி. கயாதீர்த்த மென்பது. பல்குனி நதி விஷ்ணுபாதக்ஷேத்திரமாம். அமரகண்டகம் = தேவர்கட்கு அரக்கர் துன்பமொழித்த உஞ்சேனைமாகாள க்ஷேத்திரம். அது உச்சயினிமஹாகாளி என்று வழங்குகின்றது. இவைமுதலிய க்ஷேத்திரங்கள் எனவே யமுனை, கோகுலம், பிருந்தாவனம், அயோத்தி, பிரமகபாலம், கேதாரம், அரித்துவாரம், இரேவணம், நாராயணம், சுவாலாமுகி, கண்டகி, நருமதை, ஓங்காரம், சந்திரபாகை, விருபாக்கம், துவாரகை, சோமநாதம், அவந்தி, பூநாபி, சகந்நாதம், விந்தவாசினி, ஸ்ரீ சைலம், கோதாவிரி, கிருஷ்ணை, கோகரணம், திருவேங்கடம், கசாரணியம்,சாரச்சுதம், ரிஷியசிருங்கம், கரளபுரம், திருக்காளத்தி, திருக்காஞ்சி, ஆலவனம், சிதம்பரம், அண்ணாமலை, காவேரி, கமலாலயம், திருவானைக்கா, ஸ்ரீ ரங்கம், திருவிடைமருது, அனந்தசயநம்,தாம்பரவருணி, இராமேச்சுரம், முதலியதிருப்பதிகளுமாம். இவற்றுள்ளும் செய்யப்பட்ட தானகருமங்கள் கேடாதபயனைத்தரும். எ - று.

தானவிதி முற்றிற்று.

# இனி ஏற்றல் வருமாறு.

அவ்வேற்றல் விடயத்தில் வேதத்தாற் கூறப்பட்ட விதி முன்னர்க் கூறப்பட்டது. என்னை? "ద్రవ్యమార్జయేత్ బ్రాహ్మణః ప్రతి గృహ్ణీయాత్." = பொருளைத் தேடவேண்டின வேதியன் தானமேற்றலைச் செய்யவேண்டுவது. எ-று. காண்க. அவ்விடத்து வேள்வி செய்வித்தலில் முன்சம்பந்தப் பட்டிருந்த இந்தவிடயம் ஏற்றலிலும் நேரிடுமவ்வளவும் கூட்டத்தக்கது. என்றுணர்க.

அற்றேல், ஏற்றல் என்பது மனுவால் இழித்துக் கூறப்பட்டது. என்னை? மனு, మనుః॥ "ప్రతిగ్రహః ప్రత్యవరస్సతువిప్రస్యగర్హితః."= ஏற்றலென்பது, எவற்றினு மிழிந்தது வேதியனுக்கோ வெனில்? அது நிந்திக்கப்பட்டது. எ-று. எனில்?

## ஈனக்கொடை யாகாதென்பது.

அங்ஙனமன்று. தாழ்ந்ததாகிய ஏற்றல்வேதியனுக்குக்கூடாதென்ற அவ்வசநத்தா லுண்டாகிய பழிப்பு நீசரால் ஒன்றும் பெறலாகாதென்று கூறியவாறுகக்கொள்ளத் தக்கது. அதுமேற்கூறும் மனுவசனத்தாலேயே விளக்கப்பட்டது. என்னை? மனு. మనుః "ప్రతిగ్రహాద్గర్హితాచ్ఛూద్రాదప్యంత్యజన్మనః." சூத்திரனுலும் கடையனுலும் தானமேற்றல் பழிக்கப்பட்டதாம். எனவே நீசனிடத்தில் வாங்கப்படாது என்பது. தக்கவராற் பெறுகையோ வெனில்? அது அவரானேயுடன்பட்டுவிதிக்கப்பட்டது. என்னை? மனு. మనుః "విశుద్ధాచ్చప్రతిగ్రహః." = பரிசுத்தன் கையினின்றும் பெறுதல்கூடும். எ-று. காண்க. ஏற்றல்=வாங்குதல்.

## ஏலாமையின் சிறப்பு.

பழிக்கப்படாத ஏற்றலே யாயினும். அவ்வேற்றலைச் செய்தலினும், செய்யாதிருத்தலே சிறந்தது. அங்ஙனம், யாஞ்ஞவற்கியர் கூறினர். வருமாறு. యాజ్ఞవల్క్యః "ప్రతిగ్రహసమర్థోపి నాదత్తేయః ప్రతిగ్రహం। యేలోకాదానశీలానాం సతానాప్నోతిపుష్కలాన్."=தானத்தைப் பெற்று அதனுல் வருங்குற்றத்தை நீக்கிக்கொள்ள வல்லவனேயாயினும், யார்? தானம் வாங்குதலையேயொழித்திருக்கின்றுனே? அவன் எப்பொழுதும் பலபெரிய தானங்களைச் செய்துகொண்

டே யிருக்குங் கொடையாளருக்குளந்தபுண்ணியலோகம் கிடைக் குமோ ? அந்தச்சிறந்த புண்ணியலோகத்தைப் பெறுவன். எ-று. காண்க.

## ஏற்றல் சிறப்பு.

ஆற்றேல், யமன் ஏற்றலைச் சிறப்பிக்கின்றனர். வருமாறு. యమః "ప్రతిగ్రహాధ్యాపనయో జనానాంప్రతిగ్రహంశ్రేష్ఠతమంవదంతి। ప్రతిగ్రహాచ్ఛుధ్యతిజప్యహోమైర్యాజ్యంతుపాపైన్నపునంతివేదాః." = ஏற்றல், ஓதுவித் தல், வேட்பித்தல், என்னு மிம்மூன்றனுள், ஏற்றல் மிகச்சிறந் தது எனப்பெரியர்கூறுவர். ஏனெனில்? செபம், ஹோமம், இவற் றைச்செய்தால் இந்த ஏற்றலால் வரும் பாபத்தை விலக்கிக் கொண்டு சுத்தனுவன், வேட்பித்தலா லுண்டாகிய பாவத்தை வேதமும் ஒழிக்கலாற்ருது. எ-று.

மனு இம்முறைக்கு வேறுபடாதுகூறினர். வருவாறு. మనుః। "జపహోమైరపైత్యేనో యాజనాధ్యాపనైఃకృతం। ప్రతిగ్రహనిమిత్తంతు త్యాగేనతపసైవచ." = செபத்தினுலும் ஹோமத்தினுலும் வேட்பித்தலின் பாபமும் ஓதுவித்தலின் பாவமும் ஒழிகின்றது. ஏற்றலால் வரும் பாபமோ? கொடுத்தலாலும் தவஞ்செய்தலாலும் ஒழிகின்றது. எ-று. என்னையெனில் ?

இங்ஙன கூறியவாறு குற்றமன்று. இருபிறப்பாளரினின் றும் ஏற்றுக்கொள்வது சிறந்தது. சூத்திரனினின்றும் ஏற்றுக் கொள்வது பழிக்கப்பட்டது என்ற தேற்றவுரையெளிது கூறலா மாயிருத்தலின்.

அற்றேல், தக்கோரினின்றும் பெறுவதிலும் யாதோ? ஒரு பாவமிருப்பதாகத் தோற்றுகின்றது. என்னை ? ஏற்றலைச் சிறப் பித்துக் கூறிய இயமன் வசனத்திலும். "ప్రతిగ్రహాచ్ఛుధ్యతిజప్యహోమైః" = செபத்தாலும் ஹோமத்தாலும், ஏற்றலானுகிய குற்றத்தி னின்றும் சுத்தனுகின்ருன் என்றலின்; எனின் ?

ஆம், வேதத்தை முற்றுமுணர்தல் முதலிய ஆற்றலில்லாத வனுக்கு ஏற்றலாலே குற்றம் ஒருதலையாகவே யிருக்கின்றது. ஒருதலை=நிச்சயம். இக்கருத்தை யுள்ளிட்டு வேதமுற்றுமுணர்ந் தவனுக்கு ஏற்றலால் குற்றமில்லையென்று ஸ்காந்த புராணத்துட்

கூறப்பட்டது. வருமாறு. సాంగం॥ "షడంగవేదవిద్విప్రో యదికుర్యాత్ప్రతిగ్రహం। నసపాపేనలిప్యేత పద్మపత్రమివాంభసా." = ஆறு அங்கநூலோடுங் கூடிய வேதமுணர்ந்த வேதியன் தானமேற்ருல் தாமரையிலை நீரோடு கலவாதவாறுபோல பாவத்தோடு கலப்பதில்லை. எ-று. காண்க.

இந்தநியாயமே வேட்பித்தலுக்கும் ஓதுவித்தலுக்கும் கொள்ளத்தக்கது. எவனால் வேள்வி செய்விக்கப்பட்டதோ ? அவனால் வேள்வி செய்வித்தல், கூலிக்கு வேதமோதுவித்தல், தகாதவனால் தானமேற்றல், இவற்றில் பாபம் மிருதியாகவரும். தன்னிடத்தில் சிறிது அதிகாரம் சிதறிக்கிடந்தால் நடத்தத்தொடங்கினவனுக்குச் சிறிதுபாவம் உண்டாம். சிறந்தஅதிகார முடையோன் விதிக்கப்பட்டதாகிய வேட்பித்தல், உத்தமமான வோதுவித்தல், சுத்தமாகிய ஏற்றல் இவற்றிற் பிரவேசித்தலால் யாதொரு பாவமும் இல்லை. இதுவே புணர்வுடைமையாம்.

## ஏற்றலினுயர்வுதாழ்வு வருமாறு.

வியாசர். వ్యాసః॥ "ద్విజాతిభ్యోధనంలిప్సేత్ప్రశస్తేభ్యోద్విజోత్తమః। అపివా జాతిమాత్రేభ్యో నతుశూద్రాత్కథంచన." = இருபிறப்பாளர் மூவருளுஞ் சிறந்த அந்தணன் ஒருவன் தனத்தைத் தானமாக வேற்றலுக்கு அதிகாரியாவான். அவ்வந்தணன் அச்சிறந்த விருபிறப்பாளராலேயே அப்பொருளைப் பெற விரும்பவேண்டும். இல்லையேல் சாதிமாத்திரையால் இருபிறப்பாளரா யிருப்பினும் அவரிடத்திலாவது அவ்விருப்பஞ் செலுத்தலாம். எவ்வளவு துன்பம் வந்தபோதிலுஞ் சூத்திரனால் பொன்னைப்பெற விரும்பலாகாது. எ-று. காண்க.

## ஒழிபு. "சதுர்விம்சதிமதம்."

தக்ககொடையாளர் கிடையாவழி தகாதாரிடத்திற் பெறுதலும் கூடுமென்று. " சதுர்விம்சதிமதம் " என்னு நூலுள் விதிக்கப்பட்டது. చతుర్వింశతిమతే॥ సదాచప్రతిగృహ్ణీయాద్బ్రాహ్మణేభ్యస్తతోన్యపాత్। తతస్తువైశ్యాచ్ఛూద్రాద్ద్వాశంఖస్యవచనంయథా." = எப்பொழுதும்வேதியன் வேதியனிடத்திலேயே ஏற்றல் செய்யவேண்டுவது. கிடைப்பதரிதாயின் பின் அரசனாற்பெறுக. அஃது மருமையேல் மேல்

வைசியனுற்பெறுக. அதுவுங் கிட்டாவிட்டால் முடிவில் சூத்திரனுலேனும் பெறுக; என்று சங்கர் கூறினர். எ-று. காண்க.

## சூத்திரனுற் பெறுவதினும் ஏற்றக்குறைவு.

அங்கிரா. అంగిరాః॥ "యత్తురాశీకృతంధాన్య మితిక్షేత్రేథవాభవేత్। శూద్రాదపిగృహీతవ్య మిత్యాఙ్గిరసభాషణం." = நெற்களத்திலேனும் மனையிலேனும் தானியம் குவியல் செய்திருக்கின் அதனிடத்திருந்து சூத்திரன் கொடுத்ததாமாயினும் பெறலாம் என்று ஆங்கிரசம் கூறிற்று. எ-று. காண்க,

## அதன் விசேடம்.

வியாசர். వ్యాసః॥ "కుటుంబార్థేతుసచ్ఛూద్రాత్ప్రతిగ్రాహ్యమయాచితం। క్రత్వర్థమాత్మనేచైవ నహియాచేతకర్హిచిత్." = சூத்திரருள்ளுஞ் சிறந்த உத்தமனேல் அவன் இரவாமலே வலிது கொடுப்பானுயின் அந்த பொன்னைக் குடும்பப் பாதுகாப்பின் பொருட்டு ஏற்றுக் கொள்ளலாம். வேள்வியின் பொருட்டாயினும் தன்சீவனப் பொருட்டாயினும் எத்துணையுங் கொள்ளலாகாது. எ-று. காண்க.

மனுவும். మనురపి॥ "నయోగార్థంధనంశూద్రాత్ద్విజోభిక్షేతధర్మవిత్। యజమానోహిభిక్షిత్వా చండాలఃప్రేత్యజాయతే." = தருமத்தை அறிந்த விருபிறப்பாளன் சூத்திரனுலும் பொன்னை வேள்வியின் பொருட்டு இரக்கலாகாது. வேள்வித் தலைவனுயினும் அங்ஙனம் இரத்தலைச் செய்தால் இறந்தபின்பு சண்டாளனுகப்பிறப்பன். எ-று. காண்க.

## மேற்பெறுகையின்காலம்.

அங்ஙனம் சூத்திரன் கைப்பொருட்டானம் பெறுங்காலம் காந்தத்துட் கூறப்பட்டது. స్కాందపురాణే॥ "దుర్భిక్షేదారుణేప్రాప్తేకుటుంబేచ సీదతిక్షుధా। అసతఃప్రతిగృహ్ణీయాత్ ప్రతిగ్రహమతంద్రితః." = கொடியபஞ்சகாலம்வந்தபோதும், குடும்பம்பசியால்நொந்து இளைத்தகாலத்திலும், சாக்கிரதை யுடையனுய்த் தகாதானிடத்திலேனும் தானமேற்றலாம். எ-று. காண்க.

யாஞ்ஞவற்கியரும். యాజ్ఞవల్క్యోపి "ఆపద్గతస్సంప్రగృహ్ణన్భుంజానోవాయతస్తతః। నలిప్యేతైనసాఽపో జ్వలనార్కసమప్రభః." = ஆபத்தை யடைந்தவன்தகாதவனிடத்து ஏற்றாலும், கிடைத்தவிடத்தில்புசித்தாலும்

விப்பிரனுதலின் தீயோடும் சூரியனோடும் ஒப்பாவன் அவனுக்குப்பாவம் வருவதில்லை. எ-று. காண்க.

மனு. మనుః "వృద్ధౌచమాతాపితరౌ సాధ్వీభార్యాసుతశ్శిశుః। అప్యకార్యశతంకృత్వా భర్తవ్యామనురబ్రవీత్। జీవితాత్యయమాపన్నో యోన్నమత్తియతస్తతః। ఆకాశమివపంకేనన సపాపేనలిప్యతే." = முதியதாய் தந்தையர், பதிவிரதையாகிய மனையாள், சிறுகுழவியாகிய மகன். இப்படி நேரிடப்பெற்றுடையவன் செய்யத்தகாதன நூறுகரும மாயினுஞ் செய்து அவர்களைக் காக்கவேண்டுவது ; என்று மனுகூறினர். உயிர்துறக்கத்தக்க ஆபத்தை யடைந்தவன் கிடைத்தவிடத்தில் அன்னம்புசித்தால் ஆகாயம் சேற்றுற் பூசப்படாதவாறுபோல அவன் பாவத்தாற் பூசப்படுகிறதில்லை. எ-று. காண்க.

## ஏற்றலி னளவை.

கருடபுராணத்தில் ஏற்கத்தக்க பொருள் இவ்வளவு இருக்கவேண்டு மென்னும் அளவை குறிக்கப்பட்டது. గరుడపురాణే: "యావతాపంచయజ్ఞానాం కరణంనియతంభవేత్। తావద్గ్రాహ్యంసదైవస్యాత్కుటుంబస్యాత్మనస్తథా." = எவ்வளவு திரவியத்தால் ஐம்பெரும் வேள்விகளைச் செய்வது தவருமல் நடக்குமோ ? அவ்வளவுதிரவியத்தை யெப்போதும் கொள்ளத்தக்கது. அவ்வாறே குடும்பத்திற்கும் தனக்கும் இன்றியமையாவளவு பெற்றுக்கொள்ள வேண்டுவது. எ-று. காண்க.

வியாசர். వ్యాసః "ప్రతిగ్రహాధికరుచి ర్యాత్రార్థంతుసమాహరేత్। స్థిత్యర్థమధికంగృహ్ణ న్బ్రాహ్మణోయాత్యధోగతిం। వృత్తిసంకోచమన్విచ్ఛే న్నేహేతధనవిస్తరం। ధనలాభేప్రవృత్తస్తు బ్రాహ్మణ్యాదేవహీయతే."=தானமேற் பதில் விசேடம் பெற்றுக்கொள்ள வேண்டுமென்னும் இச்சையிருந்தால் புண்ணியக்ஷேத்திர தீர்த்தயாத்திரையின்பொருட்டுப் பெற்றுக்கொள்ளலாம். தான் ஓரிடத்தில் சுகமாயிருக்கும் பொருட்டு விசேடமாகப் பெற்றுக்கொண்டால் அந்த வேதியன் அதோகதி=நரகத்தையடைவன். சீவன உபாயத்தைச் சுருக்கமாகவே வைத்துக்கொள்ள விரும்பவேண்டுவது. பெரும்பொருளை விரும்பலாகாது. தனலாபத்திற் பிரவேசித்தவனுலோ? பிராமணீகத்தில் நின்றும் பிரஷ்டனுகின்றனன். எ-று. காண்க.

பாடவேறுபாடு. పాఠాంతరే "ప్రతిగ్రహేయాఽరుచిస్స్యాత్" స్థిత్యర్థాదధికంగృహ్ణన్" என்பனபாடமாயின், தானமேற்பதிலே விருப்பமின்றியிருக்கவேண்டுவது. ஆனால்யாத்திரையின்பொருட்டுப்பெற்றுக்கொள்ளலாம். தன்னிடத்திலே தானே இருக்கும்பக்ஷத்தில் அதற்குவேண்டுவதற்காயினும் அதிகமாகப்பெற்றுக்கொண்டால் அவன் அதோகதியடைவன். என்று பொருளுரைத்துக்கொள்க.

## தானமேலாத காலமும் இடமும்.

ஆபத்து இல்லாதகாலத்தில் அரசனிடத்தில் தானம் ஏற்கலாகாது என்று யாஞ்ஞவற்கியர் கூறினர். యాజ్ఞవల్క్యః॥ "నరాజ్ఞః ప్రతిగృహ్ణీయాల్లుబ్ధస్యోచ్ఛాస్త్రవర్తినః। ప్రతిగ్రహేసూనిచక్రిధ్వజివేశ్యానరాధిపాః। దుష్టాదశగుణంపూర్వాత్పూర్వాదేతేయథోత్తరం."=உலுத்தன், சாத்திர எல்லையைக்கடந்து நடப்பவன், இப்படிப்பட்ட அரசனிடத்திலிருந்து தானம்பெறலாகாது. ஏற்றல் விடயத்தில் * சூனி, சக்கிரி, துவஜி, வேசி, அரசன், [என்பவருள்] பின்னவனுக்காயினும் முன்னவன் பதின்மடங்கு அதிகபாவமுடையோன் எ-று. காண்க.

## அரசனாற்பெறுதலே யாகாதென்பது.

சம்வர்த்தர். సంవర్తః "రాజప్రతిగ్రహోఘోరోమధ్వాస్వాదోవిషోపమః। పుత్రమాంసంవరంభోక్తుం నతురాజప్రతిగ్రహః"=அரசனாற் பெறுகிறதானம் மிகவும் அச்சத்தை விளைப்பதாம். தேன்போலும் மிகவினிமையுள்ளதாயிருக்கும் ஆயின் விடத்தைப்போலும் நாசத்தைச் செய்யும். உண்டிக்கும் வழியில்லாவழித்தான் பெற்ற பிள்ளையின் உடம்பிலுள்ள தசையாவது சிறந்ததாம். அரசனாற் பெறுவது சிறந்ததல்லவாம் எ-று. காண்க.

ஸ்காந்தம். స్కాందే "మరుదేశేనిరుదకే బ్రహ్మరక్షస్త్వమాగతః। రాజప్రతిగ్రహాత్పుష్టిః పునర్జన్మనవిందతి। బ్రాహ్మణ్యాలయఃపరిత్యజ్య ద్రవ్యలోభేనమోహితః। విషయామిషలుబ్ధస్తు కుర్యాద్రాజప్రతిగ్రహం। నరకేఘోరవేఘోరే తస్యైవపతనంధ్రువం। వృక్షావవాగ్నినాదగ్ధాః ప్రరోహంతిఘనాగమే। రాజప్రతిగ్రహాద్దగ్ధా నప్రరోహంతికర్హిచిత్."= நீர்நிழல் பச்சையற்ற வறும்பாலைநிலத்திற் பிரமராக்ஷச

---

* சூனி. என்பதனுள் - சூநா=ஜீவஹிம்சை அதைச்செய்பவன் சூனி. சக்கிரி=செக்கான்=எண்ணெய்-சமைப்போன். துவஜி=கள்முதலியன விற்பவன். அவன்மரக்கொடியிட்டுத் தன்பெயர்முதலிய வெளிப்படுத்தலின் அப்பெயராயிற்று. வேசி=விலைமாது. அரசன்=மன்பதைத்தலைவன். மன்பதை=மனிதர்கூட்டம். விஞ்ஞானேஸ்வரீயம். ஆசாரகாண்டம். கசo-வதுசுலோகம்.

ஜன்மத்தை யடைந்தவன் யாரெனில்? அரசனிடத்தில் தானமேற்றுச் செல்வனானவனேயாம். மீட்டும் அவனுக்கு வேறுபிறப்பு வருதலில்லை. யார்? அந்தணரொழுக்கத்தை விடுத்துப் பொருளாசையால் மோஹப்பட்டு விடயபோகங்களை விரும்பி அதன் பொருட்டு அரசனிடத்தில் கொடைபெற்றுக் கொள்வானோ? அவன் பெரும்பயத்தைச் செய்கின்ற நரகத்தில் விழுகின்றான் இஃதுண்மை. காட்டுத்தீயால் கொளுத்தப்பட்ட வனவிருக்ஷங்கள் மழைகாலத்தில் தளிர்க்கும்; அரசன் கொடைபெறுதலென்னும் பாவத்தால் சுடப்பட்டவர்கள் எப்போதுந் தளிர்ப்பதில்லை. எ-று. காண்க.

விஷ்ணு தருமோத்தரம். విష్ణుధర్మోత్తరె "దశసూనిసమశ్చక్రీ దశచక్రిసమోధ్వజీ। దశధ్వజిసమావెశ్యా దశవెశ్యాసమోనృపః। దశసూనాసహస్రాణియో వాహయతిసౌనికః। తేనతుల్యస్మృతోరాజా ఘోరస్తస్మాత్ప్రతిగ్రహః." = சீவக்கொலைசெய்பவன் அல்லது, ஊன்விற்பவன் சூனன். செக்கான் அச்சூனர் பதின்மரோடு ஒப்பாவன். கள்முதலிய விற்பவன் அச்செக்கான் பதின்மரோடு ஒப்பாவன். விலைமாது அக்கள் முதலிய விற்பவர்கள் பதின்மரோடு ஒப்பாவள். அரசன் அவ்வேசியர் பதின்மரோடு ஒப்பாவன். பதினாயிரம் சூனபாவத்தை யார் சுமத்துகின்றானோ? அவன்சௌனிகன், அரசன் அவனுக்கு ஒப்பானவன். ஆதலின், அரசனிடத்திருந்து பெறுங்கொடை பெரும் பயத்தை விளைவிப்பது. எ-று. காண்க.

இப்பழிப்பு தருமியல்லாத அரசன் விடயம். அவ்வாறு. அதே நூலுட் கூறப்பட்டது. విష్ణుధర్మోత్తరె॥ "యెషాంనఃపయెవిప్రాయజ్ఞైర్యజ్ఞపతింహరిం। యజంతేభూభృతాంతేషా మెతత్ప్రోదితంఫలం। యెషాంపాషండసంకీర్ణం రాష్ట్రంనబ్రాహ్మణాస్పదం। ఏతెసూనా సహస్రాణాం దశానాంభాగినోనృపాః। యెషాంనయజ్ఞపురుషః కారణాపురుషోత్తమః। తెతుపాపసమాచారా సూనాపాపాహితెస్మృతాః." = யாருடையதேசத்தில் வேதியர் எச்சத்தலைவன்= வேள்வித் தலைவனாகிய விஷ்ணுவை வேள்வியால் பூசிப்பதில்லையோ? அந்தஅரசர்களுக்கு இந்தச் "சூநாதோஷ" பலம் வரும். எந்தஅரசனுடைய அரசாட்சி பாஷண்டர்களால் விரவப்பட்டு வேதியர்க்கு இடனில்லாது விடுமோ? அந்தஅரசன் பதினாயிரம் "சூநாதோஷத்தைத்" தங்கள் பங்காகும்படி அனுபவிக்

கின்றார்கள். எந்த அரசர்களுக்குப் புருடோத்தமனான வேள்வித் தலைவன் நிமித்தகாரண னுவதில்லையோ? பாவவொழுக்க முண்டாகிய அந்த அரசர்கள் "சூநாபாவம்" உடையவர்கள் என்று சொல்லப்படுகின்றனர். எ-று. காண்க.

## ஏற்கத்தக்க அரசன் விடயம்.

அதருமியல்லாத அரசனிடத்தில் தானமேற்றால் குற்றமில்லையாதலால் சாமசாகையில் பிராசீநசாலர் முதலிய மஹாமுனிவர்களை அரசன் கொடையேற்றலில், முன்னிற்கச்செய்யவேண்டி அசுவபதி என்னும் பெயரையுடைய அரசனால் தோஷமில்லை என்பது குறித்துரைக்கப்பட்டது. அதுவருமாறு. ஶ்ருதி: " న మే స్తేనో జనపదే న కదర్యో న మద్యపః। నానాహితాగ్నిర్నా విద్వాన్న స్వైరీ స్వైరిణీ కుతః. "= என்தேசத்தில் கள்ளரில்லை, உலோபகுண முடையவனில்லை, கள்குடிப்போனில்லை, வேள்விக்குரிய அக்கினி ஹோத்திரத்தைத் தேடிவைத்திராதவனில்லை, வித்துவான் அல்லாதவனில்லை, தன்மனஞ்சென்றவழி செல்லுவோனில்லை, வியபசாரஸ்திரீயில்லை, எ-று. காண்க.

யாஞ்ஞுவற்கியருரையிலும், அரசன்கொடையை யேற்றுக் கொள்வதைப்பற்றிப் பழிக்கும்விடயத்தில் ("లుబ్ధస్యోచ్ఛాస్త్రవర్తినః") என்று சிறிதுவிசேடம் கூறப்பட்டிருத்தலின் துட்டனுகிய அரசன் யாரோ? அவ்வரசன் கொடுக்கும் கொடையைப்பெறுவதே பழிக்கப்படுவது என்று தெரியப்படுகின்றது.

நாரதரும் அங்ஙனம் கூறினர். நாரத:। " శ్రేయాన్ప్రతిగ్రహో రాజ్ఞాం నాన్యేషాం బ్రాహ్మణాదృతే। బ్రాహ్మణశ్చైవ రాజా చ ద్వావప్యేతౌ ధృతవ్రతౌ। నైతయోరంతరం కించిత్ ప్రజాధర్మాభిరక్షణాత్। శుచీనామశుచీనాం చ సన్నిపాతో యథాంభసాం। సముద్రే సమతాం యాతి తద్వద్రాజ్ఞాం ధనాగమః। యథాగ్నౌ సంస్థితం చైవ శుద్ధిమాయాతి కాంచనం। ఏవం ధనాగమాః సర్వే శుద్ధిమాయాంతి రాజని. " = அரசனிடத்திருந்தும் கொடையேற்றல் சிறந்தது. அந்தணனொழிய வேனையரால் பெறுவதும் சிறந்ததல்ல. அந்தணன் அரசன் என்னு மிவ்விருவரும் விரதங்களைத் தரித்தவர். சீவர்களையும் தருமங்களையும் காப்பவர்களா மாதலின் இவ்விருதிறத்தருக்கும் ஏற்றத்தாழ்ச்சியில்லை. நன்னீரும் கெட்டநீரும் கடலிற்கலந்தவழி யொத்தவாறுபோல அரசனிடத்துச்சேரும் எவ்வகைப்பட்டதனமும்

ஒருதன்மைய வாகின்றன. தீயினிடத்துக்கூடி எவ்வகைப்பட்ட பொன்னும் மாற்றுயர்ந்த வாறுபோல எவ்வகைப்பட்ட பொருளும் அரசனிடத்துச் சுத்தமாகின்றது. எ-று. காண்க.

அற்றேல், தானம் வாங்குதலே யாகாதென்று கூறிய பிரமாணமொழிக்கு, துட்டரது கொடையை ஏற்கலாகாது என்ற கருத்து வேறு பிரமாணங்களால் ஏற்பட்டவிடத்தும், ஆபற்காலத்தில் இழிந்தோர் கைப்பொருளும் கூடுமென்று ஸ்காந்த புராணத்துட் கூறப்பட்டதன்றே? அவ்வாறே நல்ல தானங்களை யேற்றுக்கொள்ளுதலும் ஆபற்காலத்தினுக்கே யொத்தவாறுறுக. ஆபத்து இல்லாதகாலத்தில் நல்ல தானமும் இல்லையென்று ஏன் கூறலாகாது எனின்?

அங்ஙனமன்று. என்னை? பிரமபுராணத்து, ஆபத்து இல்லாவிடத்தும் நல்லதானம் விதிக்கப்பட்டதென்று கூறியிருத்தலின். வருமாறு, బ్రహ్మపురాణే॥ "అనాపద్యపిధర్మేణ యాజ్యతశ్శిష్యతస్తథా। గృహ్ణన్ప్రతిగ్రహాన్విప్రోనధర్మాత్పరిహీయతే। గృహ్ణీయాద్బ్రాహ్మణాదేవ నిత్యమాచారవర్తినః। శ్రద్ధయాపావితందత్తంతథాధర్మోనహీయతే." = ஆபத்து இல்லாதகாலத்திலும் தருமமாக வேள்வி செய்விக்கப்படுகின்ற சீடனிடத்திருந்து இரப்பவனாகிய வேதியன் தனத்தைப் பெற்றுக்கொண்டால் தருமத்தினின்றுந் தாழ்வடைவதில்லை. எப்பொழுதும் நல்லொழுக்கத்தில் நடந்துகொண் டிருக்கின்ற வேதியனிடத் திருந்தே சிரத்தையோடும் கொடுக்கப்பட்ட சுத்தமான திரவியத்தைப் பெற்றுக்கொள்ளவேண்டுவது. அவ்வாறுசெய்தால் தருமங்குறைவதில்லை. எ-று. காண்க.

சில பண்டங்கள் தான் இரவாமலே வலிதிற் கிடைக்கும் வழிப்பெற்றால் குற்றமில்லையென்று பாரத்துவாசர் கூறினர். வருமாறு, భారద్వాజః॥ "అయాచితోపపన్నేషు నాస్తిదోషఃప్రతిగ్రహే। అమృతంతంవిదుర్దేవాః తస్మాత్తన్నైవనిర్ణుదేత్." = இரவாமலே வலிதுவந்த பொருளின் விடயத்தில் வாங்குதற்குற்றமில்லை. தேவர்களதனை அமுதமென்றுணர்வர்; ஆதலின் அதனைத் தள்ளலேயாகாது.

அவ்விடத்துப்பரத்துவாசர் கருதிய அப்பொருள்விசேடங்களை யாஞ்ஞுவற்கியர் கூறினர். యాజ్ఞవల్క్యః॥ కుశాశ్శాకంపయోమత్స్యా గంధాఃపుష్పందధిక్షితిః। మాంసంశయ్యాసనంధాన్యంప్రత్యాఖ్యేయంనవారిచ। అయాచి

తాహృతంగ్రాహ్యమపీదుష్కృతకారిణః। అన్యత్రకులటాషండపతితేభ్యస్తథాద్విషః.”= தருப்பை, காய்வகை, பால், மீன், சந்தனம், பூ, தயிர், மண், ஊன், படுக்கை, ஆசனம், தானியம், நீர், இவைகள் கேளாமல் வந்தால் பாபஞ்செய்தவனால் கொடுக்கப்படினும் வாங்கலாம். ஆயின், பரபுருடனோடுசேர்பவள், நபுஞ்சகன், பதிதன், பகைவன், இவர்களிடத்திருந்து வாங்கலாகாது. எ-று. காண்க.

“ధానాః” = வறுத்தயவம் அல்லது பொரி “క్షితిః”=சௌசத்துக்கு மண் = மிருத்திகை. யாஞ்ஞாவற்கியம்-முதல் - அத்: உ௧௪. ௬.

மனு, మనుః॥ “శయ్యాంకుశాన్గృహాన్గంధంవాసఃపుష్పంమణిందధి। మత్స్యాన్ధానాః పయోమాంసం శాకం చైవన నిర్ణుదేత్। ఏధోదకంమూలఫలమన్నమభ్యుద్యతంచయత్। అసతఃప్రతిగృహ్ణీయాన్మధుచాభయదక్షిణాం.”=படுக்கை, தருப்பை, மனை, சந்தனமுதலிய வாசனைப்பண்டம், ஆடை, பூ, இரத்தினம், தயிர், மச்சங்கள், விதைகள், பால், இறைச்சி, காய்வகை, இவற்றைத் தள்ளலாகாது; எரிகரும்பு = விறகு, நீர், கிழங்கு, பழவகைகள், சமைத்தசோறு, மது, அபயம், இவைகளைத் துன்மார்க்கனாலும், பெற்றுக்கொள்ளலாம். எ-று. காண்க.

పాఠాంతరం॥ సర్వతఃప్రతిగృహ్ణీయాత్ మధ్వథాభయదక్షిణాం॥ எனவும்பாடம் மனு. ௪ - அத். உ௪௭ - ௬. విజ్ఞానేశ్వరోదాహృతపాఠః॥ గంధోదకంమూలఫలం॥ எம்। మధ్వాజ్యాభయదక్షిణాం॥ எனவும்பாடம்.

## தானம் வாங்கத் தகாதவன்.

தானமேற்றலுக்குத் தகாதவனை மனுகூறினர். మనుః॥ “హిరణ్యంభూమిమశ్వంగామన్నంవాసస్తిలాన్ఘృతం। అవిద్వాన్ప్రతిగృహ్ణానో భస్మీభవతికాష్ఠవత్.”=பொன், நிலம், குதிரை, பசு, எருது, சோறு, ஆடை, எண்ணெய், இவைகளைக் கல்வியில்லாதவன் தானம்வாங்கின் விறகு,தீயால் சுடப்பட்டுச் சாம்பலாயவாறுபோலாகின்றான். எ-று. காண்க.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః। “విద్యాతపోభ్యాంహీనేన నతుగ్రాహ్యఃప్రతిగ్రహః। గృహ్ణన్ప్రదాతారమధోనయత్యాత్మానమేవచ.” = வித்தை, தவம், இல்லாதவன் தானம் வாங்கலாகாது. வாங்கினால், கொடுத்தவனையும், கீழேதள்ளித் தானும் விழுகின்றான். எ-று. காண்க.

## கற்றவன் விடயம்.

வித்துவானுக்கு ஆனாலோ? எப்படிப்பட்ட தானமேற்ற லாலும் எந்தக் குற்றமு முண்டாகுவ தல்லவென்று, சுக்கில யஜுர்வேத பிராமணத்தில், காயத்திரி வித்தையில் கூறப்படு கின்றது. వాజసనేయబ్రాహ్మణే గాయత్రీవిద్యాయాం శ్రూయతే॥ "యదిహవా అప్యేవం విద్వాన్బహ్వివ ప్రతిగృహ్ణాతి నహైవతద్గాయత్ర్యా ఏకంపదంప్రతి సంధాయస ఇమాంస్త్రీన్లోకాన్పూర్ణాన్ప్రతిగృహ్ణీయాత్సోస్యా ఏతత్ప్రథమంపాదమాప్నుయాదథయావతీయం త్రయీవిద్యాథతావత్ప్రతిగృహ్ణీయాత్సోస్యా ఏతద్ద్వితీయం పాదమాప్నుయాదథయావతీదం ప్రాణియస్తావత్ప్రతిగృహ్ణీయాత్సోస్యా ఏతత్తృతీయం పాదమాప్నుయాదథాస్యా ఏతదేవ తురీయం దర్శితం పదంపరో రజాయ ఏషతపతినైవకేనచనాప్యం కుత ఏతావత్ప్రతిగృహ్ణీయాత్." = இங்ஙனம் வேதவித்தையை யறிந்த இருபிறப்பாளன் ஒருவேளை எந்தத் தானம்வாங்கினாலும் உடனே இந்தக் காயத்திரியின் ஓர்பதத்தைச்சரியான குறிப்பின் கண்ணே வைத்தால் இம் மூன்றுலகத்தையும் முழுவதும் வாங்கவல்லவ னவன். யார்? இந்தக் காயத்திரியின் ஒரு பாதமுழுவதும் தேடி அடைவானோ அவன் இம்மூன்று வேதத்தின்வித்தை எவ்வள வுண்டோ? அவ்வளவையும் சம்பாதிக்கமாட்டுவன். யார்? இந்த காயத்திரியினுடைய இரண்டாவது பாதத்தைப் பெறுவானோ? அவன் அதன்பின் இந்த பிரபஞ்சம் எவ்வளவு அசைவுள் ளதோ? அவ்வளவையும் தன்வசமாக்கிக்கொள்ள வல்லவனாம். யார்? இந்த காயத்திரியின் மூன்றுவது பாதத்தைப்பெற்றுக் கொள்வானோ? அவன் இந்த காயத்திரியின் நாலாவது பாதத் தைக்காண்பிப்பவனவன். அந்தநான்காவது பாதமே இரஜசு= குற்ற, மற்றபரமபதமாம். அதுவே இந்தச்சூரியனாக விளங்குகின்ற து. அதனையாரும் ஜபிக்கலாகாது. இவ்வளவு தேடுவதென் செய் ய-எ-று. காண்க.

ஏற்றல் விடய முற்றிற்று.

# சத்தாந்தராதிகரணநியாயம்.

இங்ஙனமாக விதிக்கப்பட்ட ஓதுவித்தல் முதல் வேற்றலீருக வுடைய வக்கருமங்களுக்குச் சத்தாந்தராதிகரண நியாயத்தால் கருமபேதங்களைக் கருதிமூலத்துள் "ஶப்தாந்தரே கர்மபேத:" என்று கூறப் பட்டது. இனிஅந்தநியாயம்வருமாறு, "யஜதி," "ததாதி," "ஜுஹோதி" என்பது உதாரணமாம். முறையே யவற்றின்பொருள், வேள்வி செய்கின்ருன், கொடுக்கின்ருன், ஹோமஞ்செய்கின்ருன், எனக் கொள்க.

(சமுசயம்) அங்குஎல்லாத்தாதுக்களுடையபொருள்களிலும் (அநுரக்தமாகியபாவனை)=நோக்கமாகியகருத்து, ஒன்றேயோ? ஒவ்வொரு தாதுவினிடத்தும் வேறுவேருக விருக்கின்றதோ? என்பது.

(பூர்வபக்ஷம்) அவ்விடத்துக்கருதியபாவனைக்கு வாசகமாகிய "ஆக்கியாதம்"=சொல்லாக்கக் காலஇடைநிலைவிகுதி, வேறுபாடு ஒன்றேயாதலின், பகுதிப்பொருள் வேறு வேருகவிருப்பினும் அப்பகுதி உபசர்ஜனம்=உறுப்பு, மாத்திரையே ஆதலாலும், பிரதானம் = தலைமையதை, (விகுதிகளை) வேறுபடுத்தமாட்டாது செல்லுதலினுலும் ஒரேபாவனை=கருத்து, என்னுமோ வெனின்?

(சித்தாந்தம்) பகுதியினுடைய பொருளைச் சுவைப்படுத்துவ தொழியவீண்ன காலவிடைநிலை விகுதியால்மாத்திரம் கருத்துப் புலப்படுவதில்லையாமாதலானும், தோற்றத்தோடு கூடியிருக்கும் பகுதிப்பொரு ளொன்றினேடுமாத்திரம் செயற்கை நோக்கமுடைய அச்சொல்லாக்க இடைநிலை விகுதிப்பொருளில் வேறு பகுதிகளின்பொருள் புகுதலில்லையா மாதலானும், ஒவ்வொரு பகுதியின்பொருளிலும் கருத்து வேறு வேருக விருக்கின்றது. என்பது. இதுவே சத்தாந்தராதிகரணநியாயம்.

இங்ஙனமாதலின் ஓதுவித்தன் முதலிய ஆறுபகுதிகளின் பொருளால் கருத்து ஆறுவகையாக வேறுபடுதலின் ஆறுதொழி லாகின்றன; என்பது கருத்து.

இனி "శ్రద్ధః" என்றது. அபிரதியையடைந்தவன். எ-று. "శ్రద్ధః" என்பது, சிரத்தையோடுங்கூடிய அநுட்டானம்-எ-று.

## சிரத்தையில்லாக்கருமவிடயம்.

சிரத்தையின்றி அநுட்டிக்கப்பட்டது பயனற்றதாம். அங்ஙனம், கண்ணன்கூறினர். வருமாறு, பகவற்கீதை. భగవద్గీతాయాం॥ "అశ్రద్ధయాహుతందత్తం తపస్తప్తం కృతంచయత్। అసదిత్యుచ్యతేపార్థ నచతత్ప్రేత్యనోఇహ." = சிரத்தையின்றி ஹோமஞ் செய்யப்பட்டதும், கொடுக்கப்பட்டதும், தவஞ்செய்யப்பட்டதும், அனுட்டிக்கப் பட்டதும்ஆகியகருமம் "అసత్" சத்தில்லாது = பயனற்றது, என்று கூறப்படுகின்றது. ஓ! அருச்சுன! அந்தகருமம்மறுமையினும் பயன்றருவதல்ல;இம்மையினும் பயன்றருவதல்லவாம்.எ-று.காண்க.

இனி மூலத்துள். "నిత్యం" என்றது. எப்பொழுதும் என்றவாறு. எனவே ஒருதலையாக – என்பது கருத்து. இம்மொழியை மூலத்துள் "ஷட்கருமாபிரத" என்றபின்னொழித்து. முன்வரும் "தேவதாதிதிபூஜகஃ" என்பதனேடுகூட்டுக. என்னை? மேல் அறுவகைத் தொழிலினுள்ஓதுவித்தல், வேட்பித்தல், ஏற்றல், என்னு மூன்றுகருமமுள்ளன. அவைஅனித்தமாமாதலின் அவற்றை எப்பொழுதுஞ் செய்கஎனப்போதரும்; போதரவே அதுமுறையன்றுமாகலின்.

இனிமூலத்துள் "దేవతాతిథిపూజకః" என்றது. தேவதையும் அதிதியும் என துவந்தசமாசம் = உம்மைத்தொகை, யாக்கி அவ்விருவரையும் நித்தமும் பூசிப்பவன் என்று பொருளுரைத்துக்கொள்க.

இங்ஙனம் "துவந்தசமாசம்" = உம்மைத்தொகை, யாக்காவழித்தேவதையாகிய அதிதிஎன்னக் "கருமதாரையசமாசம்" = இருபெயரொட்டாக்கித் தேவர்களைச் செய்யாதொழிவர். அதுமரபன்றென்பது.

## அத்தேவதாசொரூபநிச்சயம்.

அத்தேவதையின் சொரூபமாறலோ? வாஜஸநேயப் பிராமணத்தில், "சாகலியர் யாஞ்ஞவற்கியர்களின் சம்வாதத்தில் விசாரித்துத் தீர்மானிக்கப்பட்டது. அங்கு "சாகலியர்" வினவுவோர். "யாஞ்ஞவற்கியர்" விடைகூறுவோர். தேவதைகளின் விஸ்தாரம் = பன்மை. சம்க்ஷேபம் = சுருக்கம், அல்லது ஒரு

மை கேட்கத்தக்க விடயம். (எனவே பலதேவரோ? ஒரு தெய்வமோ? என்பது). இது அச்சுருதியின்கருத்து. பிருஹதாரணியகோபநிஷத்து. బృహదారణ్యకోపనిషది॥ పంచమాధ్యాయె॥ నవమబ్రాహ్మణె॥ "అథహైనంవిదగ్ధ శ్శాకల్యఃపప్రచ్ఛ కతిదేవా యాజ్ఞవల్క్యేతిసహైతయైవనివిదాప్రతిపెదెయావన్తో వైశ్వదేవస్య నివిద్యుచ్యన్తె త్రయశ్చత్రీచ శతాత్రయశ్చత్రీచ సహస్రేత్యో మితిహోవాచకత్యేవ దేవాయాజ్ఞవల్క్యేతిత్రయస్త్రిగ్ంశదిత్యోమితిహోవాచకత్యేవ దేవాయాజ్ఞవల్క్యేతి షడిత్యోమితిహో వాచకత్యేవ దేవాయాజ్ఞవల్క్యేతి త్రయఇత్యోమితిహోవాచకత్యేవ దేవాయాజ్ఞవల్క్య తిద్వావిత్యో మితిహోవాచకత్యేవ దేవా యాజ్ఞవల్క్య త్యధ్యర్థ ఇత్యోమితిహో వాచకత్యేవ దేవాయాజ్ఞవల్క్యత్యేక ఇత్యోమితిహోవాచ కతమెతె త్రయశ్చత్రీచ శతాత్రయశ్చత్రీచ సహస్రేతి ॥ ౧ ॥ సహోవాచమహిమాన ఏవైషామెతెత్రయస్త్రిగ్ంశత్త్వేవ దేవాఇతికతమెతెత్ర యస్త్రిగ్ంశదిత్యష్టౌవసవ ఏకాదశ రుద్రాద్వా దశాదిత్యాస్త ఏకత్రిగ్ంశదిన్ద్రశ్చైవ ప్రజాపతిశ్చత్రయస్త్రిగ్ంశావితి ॥ ౨ ॥ కతమెవసవ ఇత్యగ్నిశ్చపృథివీచవాయుశ్చాన్త రిక్షంచాదిత్యశ్చ ద్యౌశ్చచన్ద్రమాశ్చ నక్షత్రాణిచైతెవసవఏతేషుహీదంవను సర్వగ్ంనిహితమితితస్మాద్వసవఇతి ॥ ౩ ॥ కతమెరుద్రా ఇతిదశేమె పురుషెప్రాణా ఆత్మైకాదశస్తెయ దాస్మాచ్ఛరీరాన్మర్త్యాదుత్క్రామన్త్యథరో దయన్తి తద్యద్రోదయన్తి తస్మాద్రుద్రాఇతి ॥ ౪ ॥ కతమ ఆదిత్యా ఇతిద్వాదశవై మాసాస్సంవత్సరస్యైత ఆదిత్యాఏతే హీదగ్ం సర్వమాదదానా యన్తితెయదిదగ్ంసర్వమాదదానా యన్తితస్మా దాదిత్యాఇతి ॥ ౫ ॥ కతమఇన్ద్రఃకతమః ప్రజాపతిరితిస్తన యిత్నురెవేన్ద్రో యజ్ఞః ప్రజాపతి రితికతమస్తనన యిత్నురిత్య శనిరితికతమో యజ్ఞఇతిపశవఇతి ॥ ౬ ॥ కత మెషడిత్యగ్నిశ్చ పృథివీచవాయుశ్చాన్త రిక్షంచాదిత్యశ్చ ద్యౌశ్చైతె హీదగ్ంసర్వగ్ంషడతి ॥ ౭ ॥ కతమెతెత్రయోదేవా ఇతీమ ఏవత్రయోలోకా ఏషుహీమెసర్వె దేవాఇతికతమౌతౌద్వౌ దేవావిత్యన్నంచైవ ప్రాణశ్చేతికతమోధ్యర్థ ఇతియోయం పవత ఇతి ॥ ౮ ॥ తదాహుర్య దయమెక ఇవైవపవతె థకథమధ్యర్థఇతియదస్మిన్ని దగ్ంసర్వమధ్యార్ధ్నో త్తెనాధ్యర్థ ఇతికత మఏకోదేవ ఇతిసబ్రహ్మత్యదిత్యాచక్షతె ॥ ౯ ॥ = பின்னர் புகழ்பெற்ற (அந்தயாஞ்ஞவற்கியரை) நோக்கி விறுவுணர்ச்சிவல்லராகிய (சாகல்லியர்) தேவர்கள்எத்துணையொன விறுவினர் (அந்தயாஞ்ஞவற்கியர்) "నివిత్సు" = நிவிது என்னும் "சந்தஸ்ஸினால்" விடைகூறத் தொடங்கினராய், வைசுவதேவமென்னும் "சஸ்திரமந்திரங்களில்" "நிவிது" என்றுள் வைதிகபதங்களின்கூட்டத்தில் எத்துணைத்தேவர்கள் கூறப்பட்டனரோ? அத்துணைத்தேவர்கள்மூன்று, மூன்று, நூறு; மூன்று, மூன்று, ஆயிரம், ஆம் என்றுகூறினர்.

(சாகலியர்) அவையெல்லாங்கூடி யெத்தனையாமென்று மீட்டும் வினவினர்.

(யாஞ்ஞுவற்கியர்) முப்பத்துமூன்றுமென்றனர்.

(சாகலியர்) மீட்டும் அவைஎத்தனை யுளமையுமென்று வினவினர்.

(யாஞ்ஞாவற்கியர்) ஆறு என்று கூறினர்.

(சாகலியர்) மீட்டுமவை எத்தனையுளடங்குமெனவினவினர்.

(யாஞ்ஞுவற்கியர்) மூன்று என்று கூறினர்.

(சாகலியர்) மீட்டும் எத்தனை என்று வினவினர்.

(யாஞ்ஞுவற்கியர்) இரண்டு என்றனர்.

(சாகலியர்) மீட்டும் எத்தனை என்று வினவினர்.

(யாஞ்ஞுவற்கியர்) ஒன்றரை என்றனர்.

(சாகலியர்) மீட்டும் வினவினர்.

(யாஞ்ஞுவற்கியர்) ஒன்று என்றார்.

பின்பு (சாகலியர்) மூன்று, மூன்று, நூறு, எனவே முந்நூற்று மூன்று, எனவும், மூன்று, மூன்று, ஆயிரம், எனவே, மூவாயிரத் தொருமூன்று, எனவும், கூறியவாறு என்னை? என்று வினவினர்.

(யாஞ்ஞுவற்கியர்) முப்பத்துமூன்று தேவர்களுடைய மகிமையே மூவாயிரத்து முந்நூற்றாறு பேதமாயின என்று கூறினர்.

(சாகலியர்) அம்முப்பத்து மூவராவார் யார்? என்று வினவினர்.

(யாஞ்ஞுவற்கியர்) வசுக்கள் எண்மர், உருத்திரர் பதினொருவர், ஆதித்தியர் பன்னிருவர். ஆகமுப்பத்து ஒருவராம். இந்திரன் – பிரஜாபதியுங்கூடி முப்பத்து மூவராயினர். என்றுகூறினர்.

(சாகலியர்) அவ்வசுக்களாவார்யார்? என்றுவினவினர்.

(யாஞ்ஞுவற்கியர்) அக்கினி, பிருதிவி, வாயு, அந்தரிக்ஷம்= ஆகாயம், ஆதித்தியன், "த்யௌ:" தியௌ=சுவர்க்கம், சந்திரன் நக்ஷத்திரம், ஆகஎட்டும் வசுக்கள் என்னப்படும். இவற்றினிடத்

தன்றே? இவ்வசுக்கள் எல்லாம், (எனவே, வசு=தனம்.அல்லது, கருமத்திற்குப் பலனைத் தருகின்ற சத்திகாரியம். அது, கருவிக் கூட்டவடிவமாகிய பிரவஞ்சம்) பற்றி நிற்கின்றனவாதலின்.

(சாகலியர்) உருத்திரராவார் யாரென்று வினவினர்.

(யாஞ்) புருடனிடத்தில், உள்ள இப்பத்துப் பிராணனும் ஆன்மா பதினொன்றாவதாவானுமாம். இவர்களே ஏகாதச உருத்திரராம். அவர்கள் எப்பொழுது மரண வியற்கையை யுடைய இந்த தேகத்தினின்றும் புறப்பட்டுப் போவாரோ? அப்பொழுது, அழுகையைச் செய்விக்கின்றனர். அங்ஙனம் அழுதலைச் செய்வித்தலால் உருத்திரர் எனப்படுவர். என்று கூறினர்.

(பிராணன் - என்பது ஈண்டுபுறத்துள்ள பத்து இந்திரியங்களாம்.) ஆன்மா-என்பது ஈண்டு அந்தக்கரணமாம்.

(சாக) ஆதித்தியராவார் யார்? என்றார்.

(யாஞ்) வருடத்திற்குப் பன்னிரண்டுமாசங்கள் உலகறிந்தவாறுயுள்ளன. அவையன்றே? இவ்வெல்லாவற்றையும் வாங்கிக் கொண்டுசெல்கின்றன. அவை இவ்வெல்லாவற்றையும் வாங்கிக் கொண்டு போதலினால் "ஆதித்தியர்" எனக் கூறப்படுகின்றன. என்று கூறினர்.

(சாக) இந்திரன் யார்? பிரஜாபதியார்? என்றனர்.

(யாஞ்) ஸ்தநயித்துநுவே (ஸ்தநயித்நு) இந்திரன். (யஜ்ஞம்) எச்சமே பிரஜாபதி. என்று கூறினர்.

(சாகலி) ஸ்தநயித்துநுயார்? என்றார்.

(யாஞ்) இடி என்று கூறினர்.

(சாகலி) (யஜ்ஞம்) எச்சம்யார்? என்றார்.

(யாஞ்) பசுக்கள் என்று கூறினர்.

(சாகலி) ஆறுஎன்பன யாவை? என்றார்.

(யாஞ்) அக்கினி, பிருதிவி, வாயு, அந்தரிக்ஷம், ஆதித்தியன், தியௌ. இவை ஆறு அன்றே? என்றனர்.

(சாகலி) அம்மூன்று தேவராவார் யார்? என்றார்.

(யாஞ்) இம்மூன்று உலகமே, இவற்றினிடத்தன்றோ இத் தேவரனைவரும் உள்ளனர்; என்றார்.

(சாகலி) அவ்விரண்டு தேவர்யார்? என்றார்.

(யாஞ்) அந்நம், பிராணம், என்று கூறினர்.

(சாகலி) அவ்வொன்றரை என்பதென்னே? என்றார்.

(யாஞ்) யார் வீசுகின்றானோ? அவனேயாம். எனவே, வாயு என்று கூறினர்.

(சாகலி) யார் வீசுகின்றானோ? அவனே ஒருவனென்றே கூறுவாராக, ஒருவனைப்போன்றே வீசுகின்றான். இங்கு அவனே ஒன்றரையென்று எவ்வாறு கூறுதல் கூடும்? என்றனர்.

(யாஞ்) எதனால் இவ்வுலகமெல்லாம் யாரிடத்தில் அதிகமானவிருத்தியை யடைந்தனவோ? அதனால் ஒன்றற்கு அதிகம்என்று கூறப்படுகின்றான் என்றனர்.

(சாகலி) தேவர் ஒருவராவார்யார்! என்றனர்.

(யாஞ்) பிராணன். அதுவே, பிரமம் * "த்யத்" = எட்டாது போல, எனக் கூறுகின்றனர்; என்றுகூறினர்.

---

* "த்யத்" என்பதற்கு பரோக்ஷம்=எட்டாதுபோலஎன அத்துவிதிகள் கூறுவர். எல்லாவிலக் கணங்களோடுங்கூடி வேறிருப்பது; என்று விசிட்டாத்துவிதிகள் கூறுவர். எட்டாதத=அதுவெனச்சுட்டியறியப்படுவது.

நூறு, ஆயிரம், என்ற எண்ணுப்பெயர்களுக்கு அவ்வளவேபொருளன்று; அநந்தம் என்பது கருத்து என்று சங்கரபாஷியத்தின் கருத்தாக ஆனந்தகிரியர் கூறினர்.

ஆன்மவுணர்ச்சியே முதற்றெய்வம் அதன் மகிமையே எல்லாத் தேவரும் என்பது அத்துவிதிகள் கருத்து. பரமசிவனேயாக, பரவாசுதேவனேயாக முதற்கடவுள்என்பது விசிட்டாத்துவிதிகள் கருத்து.

இச்சுருதித் தொடர்ச்சியில் சிவன் விஷ்ணுவென்ற விசாரம் வந்ததில்லை; பிராணன் வரையில் அந்நியான்மதத்துவங்களைக் கூறி முடிவில் பரமான்ம அறிவைக்கூறியிருத்தலின் பிரமசைதனியமே பரதேவதையென்று சுருதியுரை கூறும் என்பர் அத்துவிதிகள். பிரமசூத்திரங்களில் பிராணசத்தத்திற்கு வாயுவென்பது முக்கியமானபொருளல்ல. பிரமவுணர்ச்சியே முக்கியப் பொருளென்று பிராணாதி கரணத்தில் கூறப்பட்டிருக்கின்றது. அப்படிப்பட்ட பிரமம் பிராணன்முதலிய மொழிகளுக்குச் சிவனேஎன்று சைவரும், நாராயணனே என்று வைஷ்ணவரும், பராசத்தி என்றுசாத்தேயருமாக அந்தந்த மூவாதியரும் கூறுகின்றனர்.

## இனி, அச்சுருதிக்கு மாத்வாரியர் கூறியவுரை.

உபாசனை செய்வித்துக் கொள்வதற்குத் தக்கவர்களாகிய தேவர்களுடைய எண்ணின்வகை விடயமாகச் சாகலியரால் வினவப்பட்ட யாஞ்ஞவற்கியர் வெற்றி யடையவேண்டிய வாதத்தில் தொடங்கி யிருந்ததால் அந்நியர் புத்தியைப் பிரமிக்கச் செய்யும் பொருட்டாக "நிவித்து" வினால் (எனவே, சங்கேதக் குறிப்பினால்)விடைகூறினர். "நிவித்து" என்னும்சந்தஸையுடைய வைசுவதேவமென்னும் பெயரையுடைய தேவஸ்துதி சஸ்திரமந்திரங்களில் இருக்கும் எண்ணுப் பெயர்களாகிய மொழிகளுடைய கூட்டத்தை "நிவித்து" என்னுமொழிகள் கூறுகின்றன என்று வைதிகமாகிய பிரசித்தி யடைந்திருக்கின்றது. அதனால் எத்துணைத் தேவர்கள் வைசுவதேவத்தின் "நிவித்துவில்" கூறப்படுகின்றனரோ? அத்துணைத்தேவர்கள் நம்மால் உபாசிக்கத்தக்கவர்களாமென்று கூறியவாறாயிற்று.

அந்த "நிவித்து" என்னும்பதங்கள் "త్రయశ్చ్రీచ శతా-త్రయ శ్చ్రీచ సహస్రేతి" என்பது முதலியன. முந்நூறு, மூவாயிரம், ஆறு, தேவர்விரிவகையென வாகின்றன.

"కత్యేవ" எத்துணையவரோ?என்றஅங்குள்ளதேற்றேகாரத்தால் இன்னும் தேவர் இருக்கினு மிருக்கலாமென்னும் ஐயத்தை யொழிக்கப்படுகின்றது. எந்தத்தேவர்கள் ? முன்விரித்துக் கூறப்பட்டனரோ ? அந்தத்தேவர்களே தொகுத்தலினால் எத்துணையர் என்று அங்குள்ள வினவுக்குப்பொருள். அவற்றுள், "కతి"=எத்துணையர் என்பது எண்வினா.

"కతమేతి"=அவர்யாவர்?என்றது உருவவிசேடம்பற்றியவினா.

அங்கு, நூறு, ஆயிரம், என்னும் கணக்கினை யுடையராய் எந்தத்தேவர்கள் கூறப்பட்டனரோ ? அவரனைவரும் முதற்கடவுளர் அல்லராம். மற்றென்னை எனில் ? தலைமையால் அவிர்ப்பாகத்தைப் புசிக்கின்ற முப்பத்துமூன்று தேவர்களுடைய யோகமகிமையால் உடன்பட்டுக் கொள்ளப்பட்ட சுவேச்சையாதீனமாகிய வுருவத்தை யுடையவராம் என்பது. ஆகலின், அவர்களுடைய சொருபவிசேடங்கள் வேறுவேறாக வகுத்துக் கூறவேண்டுவதில்லை.

முப்பத்து மூன்று தேவர்களில், வேதத்தாற் கூறப்படுகின்ற வசுமுதலிய தேவர்கள்புராணத்துள்ளே விளங்கக்கூறப்பட்டவசு முதலிய தேவரினும் வேறேயானவராம். அவர்களிடத்தில் வசு வாதி மொழிகள் செல்லுவது காரணக்குறியாலென்றுணர்.

"பிராணன்" என்பது. புறத்துள்ள இந்திரியங்களாம். ஆன் மாஎன்பது அந்தக்கரணமாம்.—

"இந்திரன், பிரஜாபதி," என்னு மிவ்விரண்டு மொழிகளும், "இலக்கணையால்" மேகம், வேள்வி, என்னு மிரண்டிற் செல்லு கின்றன. (இலக்ஷிதலக்ஷணை) இருமடியாகு பெயரால் முறையே இடி, பசுஎன்னும் பொருண்மேற் செல்லுகின்றன (எனவே, இந் திரன், என்னுமொழிக்கு தேவர்களினிறைவன் என்பது வாச்சி யார்த்தம் = சொல்லுக்குரியபொருள். மேகம்என்பது லக்ஷியார் த்தம் = குறித்த ஆக்கப்பொருள்=ஆகுபெயர்ப் பொருள். இடி (லக்ஷிதலக்ஷியார்த்தம்) இருமடியாகு பெயர்ப்பொருள் எனவும், பிரஜாபதி என்னுமொழிக்குப் பிரமன்என்பது சொல்லுக்குரிய பொருள், வேள்வி, ஆகுபெயர்ப்பொருள், பசு இருமடிஆகு பெ யர்ப்பொருள் எனவும் கொள்க.

"அந்நம், பிராணன்," என்னு மிவ்விருமொழியும், போக் கியம் = உண்ணப்படும் பொருளையும், போத்தா = உண்பவனை யும் உணர்த்துகின்றது. (எனவே, அந்நம், என்பதனுல் அனுப விக்கத்தக்க விடயங்களுக்கு அபிமானி தேவதையையும்; பிரா ணன்என்பதனுல் அனுபவிக்கின்ற அந்தக்கரண விசிட்டாபிமானி தேவதையையும், குறிக்கின்றது.

"அத்யர்த்த:" என்பது இடுகுறிவழக்கால் ஒன்றரை என்னும் எண்ணினையும். காரணக்குறியால் நன்றாக விருத்தியை அடைவிக் கின்ற வாயுவையும் உணர்த்துகின்றது. வாயுஎன்பது, சூத்திரமா யுள்ள ஆன்மாவாம். "வாயுர்வை கௌதம ஸூத்ரம்." = ஓ! கௌதமரோ! வாயுஎன்பது பிரசித்தியாகிய சூத்திரமாயுள்ள ஆன்மா. எ-று. இது சுருதிப்பிரமாணம்.

இறுதியிலிருக்கும் "பிராணன்" என்னு மொழிபரமான் மாவை யுணர்த்துகின்றது. அதனை விளங்கச்செய்யும் பொருட்டு "பிரமம்" என்றமொழி கூறப்பட்டது. "ச்ருதி, ப்ராணோ ப்ரஹ்ம இதி"

என்றமொழி எட்டாப்பொருளை யுணர்த்து மொழியாம். பிரம விசாரத்தைச் செய்யாத ஆன்மகனைப்பற்றி நூல் ஒன்றினாலே யுணரத்தக்கபிரமத்தைச்=சுட்டுப்பொருட்டாகத்தெரிவித்தது.

ஆண்டு, "பிராணன்" என்னுமொழிக்குப் பொருள் பரமான்மா ஒன்றே முதற்கடவுளாக விருக்கின்றான். அவன்சொரூபத்தை "சுவேதாசுவதரோபநிஷத்திலுள்ள மந்திரங்கள் விசேடமாக விளங்கக் கூறுகின்றது. வருமாறு.

## முதற்கடவுளிலக்கணம்.

శ్వేతాశ్వతరోపనిషది॥ "ఏకో దేవస్సర్వభూతేషు గూఢస్సర్వవ్యాపీ సర్వభూతాంతరాత్మా। కర్మాధ్యక్షస్సర్వభూతాధివాసస్సాక్షీచేతా కేవలోనిర్గుణశ్చ."

ఏకః=ஒருவன், உம் ("ఏకమేవాద్వితీయంబ్రహ్మ" = ஒன்றேயாம் இரண்டாவதில்லாதது பிரமம். ("ఏకఏవరుద్రోన ద్వితీయాయతస్థే"= உருத்திரன் ஒருவனே யிரண்டாவதானில்லை) (என்று சுருதி கூறுகின்றன).

இனி "దేవః" = தேவன், (దివ్) என்பது தாது "క్రీడావిజిగీషా వ్యవహారమోదమదస్వప్న కాంతిగతిషు" என்பதனால். தேவன் - எது-கிரீடிப்பவன், எனவே ஆடுவோன்(அரசன் செண்டுமுதலியவிளையாடுறுப்போலும் இவ்வுலகைப் படைத்தாடுகின்றான் என்பது-உம் ["లోకవత్తులీలాకైవల్యం"=என்றதுபிரமசூத்திரம்.] ["భోగార్థంసృష్టిరిత్యన్యే క్రీడార్థమితిచాపరే। దేవస్యైషస్వభావోయం" என்றதுமாண்டூக்கியோபநிஷத்து.] ["తగ్ంహదేవమాత్మ బుద్ధిప్రకాశం" = ஆன்மபுத்தியிலொளிவிட்டுக் கொண்டிருப்பவன், ஆன்மாவாகப் புத்தியில் ஒளிவிடுபவன், ஆன்மாக்களின் அறிவை விளக்குவோன், அத்தேவன். என்பது சுவேதா சுவதரோபநிஷத்து.] ["విశ్వాధికోరుద్రోమహర్షిః। హిరణ్యగర్భంపశ్యత జాయమానంసనోదేవః" = மஹாரிஷி யாகிய உருத்திரன் யாவரினு முயர்ந்தோன்; அவன் பிறக்கின்ற பிரமனைப் பார்த்துக்கொண்டே யிருந்தான் அவன் எமக்குத் தேவன்; என்றது தைத்திரீய மஹாநாராயணோபநிஷத்து.] ["భర్గోదేవస్య ధీమహి"] என்பதுகாயத்திரி. ["భవాయదేవాయనమః। రుద్రాయదేవాయనమః। పశుపతయేదేవాయనమః। ఉగ్రాయదేవాయనమః। భీమాయదేవాయనమః। మహతేదేవాయనమః। భవస్యదేవస్యపత్న్యైనమః."] முதலியன கிருஷ்ணயஜுர்

வேதம். அஉ-வது. பிரசினம். [ " తత్పురుషాయవిద్మహే। మహాదేవాయధీమహి। తన్నోరుద్రఃప్రచోదయాత్ " ] இதுஉருத்திரகாயத்திரி; தைத்திரீய மஹாநாராயணோப நிஷத்து. இவ்வாறு வேதமொழி யாண்டும் மஹாதேவர் பரமாகக் கூறப்பட்டுள்ளவாறு காண்க.

" సర్వభూతేషుగూఢః " = எல்லாப்பூதங்களிலும் இரகசியமாக ஒளித்திருப்பவன் - உம். [ " సర్వభూతేషుచాత్మానం " என்றது சுருதி. " ఈశ్వరస్సర్వభూతానాం హృద్దేశేర్జునతిష్ఠతి। భ్రామయంత్సర్వభూతాని యంత్రారూఢానిమాయయా। తమేవశరణంగచ్ఛ సర్వభావేనభారత. " = எல்லாவுயிர்களின் இதயத்துள்ளும் ஈசுவரன் இருக்கின்றான் தன்னுடைய எந்திரத்தை யடைந்திருக்கு மெல்லாவுயிர்களையும் மாயையால் மயக்குவித்துச் சமுசாரத்தில் சுழலப்பண்ணுகின்றான். ஓ! அருச்சுநா! எல்லாக்கருத்தாலும் அவனையே காப்போனாக நம்பி வழிபடுதலைச்செய்து ] என்று கண்ணன் உபதேசித்தனர். இது பகவற்கீதை.

" సర్వవ్యాపీ " = எல்லாவற்றுள்ளுங் கலந்து நிற்பவன். உம். [ " విశ్వంభూతంభువనం చిత్రంబహుధాజాతంజాయమానంచయత్। సర్వోహ్యేషరుద్రస్తస్మైరుద్రాయనమోఅస్తు " = விசித்திரமாகியும், விஸ்தார மாகியும், இடமாயும், பலவகையாயும், பிறந்திருக்கும், பிறக்கும், 'உலகமெதுவோ? அவ்வுலகமுற்றும் உருத்திரனேயாம் அவ்வுருத்திரனுக்கு நமஸ்காரம்]. இதுதைத்திரீய மஹாநாராயணோபநிஷத்து. ஆறாவது பிரபாடகம். [ " అష్టమూర్తిర్మహాదేవ స్సర్వవ్యాపీనిరంజనః. " என்றது ஸ்காந்தம்.

" సర్వభూతాంతరాత్మా " = எல்லாப்பூதங்களிலும் அந்தரியாமியாயுள்ளவன். உம். [ ఏషసర్వేశ్వరఏష సర్వజ్ఞఏషోన్తర్యామ్యేషయోనిః। శివమద్వైతంచతుర్థంమన్యన్తేస ఆత్మాసవిజ్ఞేయః ] இது மாண்டூக்கியோபநிஷத்து. அந்தரியாமி=உயிர்க்குயிர்.

" కర్మాధ్యక్షః. " = கருமங்களுக்குத் தலைமையாக உபாசிக்கப் படுவோன் எ-று. உம். [కూర్మపురాణే॥ వ్యాసగీతాయాం॥ బ్రహ్మయజ్ఞ సనాదేయజుర్వేదస్సాక్షీవావమాహా॥ యజుర్వేదః॥ యోయజ్ఞైరఖిలైరీశో యోగేనచసమర్చ్యతే। తమాహురీశ్వరందేవం సదేవస్స్యాత్పినాకధృత్. " = எந்தக்கடவுள் எல்லா வேள்விகளாலும் யோகங்களாலும் அருச்சிக்கப் படுகின்றானோ?

யாரை உலகநாதனாகக் கூறுவரோ? அவன்யாரெனின்? பிநாக மென்னும் வில்லையுடையசிவனேயாம். எ-று.] இதுகூர்மபுராணம், வியாசகீதையில், பிரமவேள்வி வினவுத்தரத்தில் எஜுர்வேதஞ் சான்று கூறியவாறு என்று கூறியது. [ స్కాందే॥ "సనత్కుమార సంహితాయాం" "అంబికాపతిమీశాన మధ్యక్షంసర్వకర్మణాం। ఉపాస్యంఫలదాతారం ప్రపద్యేపరమేశ్వర మితివిష్ణువచనం." ] என்று ஸ்காந்தம் கூறியவாறு காண்க.

"సర్వభూతాధివాసః." = எல்லாப்பூதங்களுமிருப்பதற்கு ஆதாரமாகிய இடமானவன். எ-று. உம். [ కూర్మపురాణే తత్రైవ ॥ ఋగ్వేదః॥ "యస్యాంతస్థానిభూతాని యస్మాత్సర్వంప్రవర్తతే। యమాహుస్తత్పరంతత్త్వం సదేవ స్స్యాన్మహేశ్వరః." = பூதங்கள் எவனுள்ளடங்கி யுள்ளனவோ? எல்லாமும் எவனால் நடக்கின்றனவோ? எவனைப்பரதத்துவம்=முடிவான சத்தியப்பொருளென்று கூறப்படுகின்றதோ? அந்தத்தேவனே மஹேச்சுரனும் எ-று]. இதுவும் கூர்மபுராணத்தது; இருக்குவேதம்சாக்ஷி கூறியவாறென்பது காண்க.

"సాక్షీ." = ஒன்றோடுங்கலவாது எவற்றிற்குஞ் சாக்ஷியாயுள்ளவன். எ-று. உம். [కూర్మపురాణే॥ ఈశ్వరగీతాసూపనిషత్సు ద్వితీయాధ్యాయే॥ "వదంతివేదవిద్వాంస స్సాక్షిణంప్రకృతేఃపరం." = வேதத்தை யுணர்ந்தவர்கள் பரமேச்சுரனைச் சர்வசாக்ஷியாகவும் மஹாமாயையைக் கடந்து மேல்நிற்பவனாகவுங் கூறுகின்றனர். எ-று.] இதுகூர்மபுராணம் ஈசுவரகீதை இரண்டாமத்தியாயம் கூறியது.

"చేతాః." என்பதனுள் "చితీ" என்றதாதுவுக்கு సంజ్ఞానే= நல்லறிவு என்பது பொருள். చేతనః = அறிவுடையவன் చైతన్యం= ஞானம். "చేతాః." அறிவிப்பவன். ஆன்மலிங்கம், ஞானலிங்கம், சிதம்பரம், ஞானசொரூபன், ஞானத்தை யளிப்போன், உலககுரு, பரமசிவன், என்பதொருபொருட்கிளவி. உம். [ కూర్మపురాణే ఈశ్వరగీతాయాంతత్రైవ॥ "అస్తిసర్వాంతరస్సాక్షా చ్చిన్మాత్రస్తమసఃపరః। సోంతర్యామీసపురుష స్సప్రాణో వైమహేశ్వరః." = எல்லாருள்ளும் பிரத்தியக்ஷமாக விருக்கும் அறிவுமாத்திரையே வடிவமா யுடையவன் இருளுக்கு அப்புறப்பட்டுள்ள அந்தமஹேச்சுரனே அந்தரியாமியாயும்புருடனாயும்=உயிராயும் பிராணனாயுமிருக்கின்றான். எ-று.] இதுவுமது.

"కేవలః"=தனியன். எ-று. உம் [ కూర్మపురాణె ఈశ్వరగీతాయాం॥
"యదాపశ్యతిచాత్మానం కేవలంపరమార్థతః। మాయామాత్రంజగత్సర్వం తదాభవతిని
ర్వృతః. = எப்பொழுது கேவலம் = தனியாகிய ஆன்மாவை யுண்
மையாக மேலான பொருளென்று உணர்ந்துகொள்வானோ? அப்
போது இவ்வுலகமெல்லாம் பொய்வடிவமாய் மாயையாக வொ
ழியும் பின்பு அவன் துன்பமற்றவனுவன். எ-று]. இதுவுமது. ["ఏ
కీభూతఃపరేణాసౌ తదాభవతికేవలః." = இந்தச்சிவன் பரத்தோடு கூட
ஒன்று பட்ட போது "கேவலன்" தான்தனியனே யாகின்
ருன். எ-று.] இதுவுமது [యదాజన్మజరాదుఃఖ వ్యాధీనామేకభేషజం। కేవలం
బ్రహ్మవిజ్ఞానం జాయతేకేవలశ్శివః. = எப்பொழுது பிறப்பு, மூப்பு, துக்
கம், நோய், இவற்றைஎல்லா மொழிக்கவல்ல ஓரேமருந்தாகிய
பிரமஞானத்தை யடைகின்றானோ? அப்போது சிவனே யாகின்
ருன். எ-று] இதுவுமது.

"నిర్గుణః." = தன்னில்வேறாகிய குணமில்லாதவன். எனவே
நிர்விசேட சின்மாத்திர சத்தாரோப மென்பர் அத்துவிதிகள்.
ஹேயகுணம் = பழிக்குணமில்லாதவ னென்பர் ஒருசார் விசிட்
டாத்துவிதியர். மூலப்பகுதியி னின்றும் பிறந்த முக்குணங்க
ளோடுங்கலவாதவன். எ-று.உம். [నిర్గుణం నిష్క్రియంశాంతం నిరవద్యంనిరం
జనం] என்றதுசுருதி.

"చ" = மற்றும். எ-று. எனவே. [ ఉమాసహాయంపరమేశ్వరం విభుం
త్రిలోచనంనీలకంఠం ప్రశాంతం। ధ్యాత్వామునిర్గచ్ఛతిభూతయోనింసమస్తసాక్షింతమ
సఃపరస్తాత్] இதுகைவலியோப நிஷத்து.

இவைமுதலிய விலக்கணங்களை யுடைய பரமேஸ்வரனே
யாவர்க்கும் ஒருதலையாக உபாசிக்குங் கடவுள்என்று மேற்கூறப்
பட்ட பிரமாணங்களின் முடிவுப்பொருள் என்றது அந்த சுவே
தாசுவதரோபநிஷத்தின் உரையெனக்கொள்க.

இனி இக்கடவுளையே சாத்திரக்காரர்கள் அவ்வவ்விசேடச்
சொற்களால் பலவகையாக விவகரிக்கின்றனர். அங்ஙனம் வேத
மந்திரமே கூறுகின்றது. வருமாறு. మంత్రః॥ "సుపర్ణం విప్రాః కవయోవ
చోభిరేకంసన్తం బహుధాకల్పయంతి." = சிறந்த இருசிறைப்பக்கங்களை
யுடைய ஓரான்மாவை யுடையவன். புனைவுசெய்து பாடவல்ல

வேதியர் அவ்வொருவனையே சொற்களால் பலவாறாகப் புனைந் துரைக்கின்றார்கள். எ-று. காண்க. புனைதல் = அலங்கரித்தல் துதித்தலுமாம்.

அவ்விசேடமான சொற்கள் மற்றொரு வேதமந்திரத்துள் கூறப்படுகின்றது. வருமாறு, இருக்குவேதம். ఋగ్వేద॥ "ఇన్ద్రంమిత్రం వరుణమగ్నిమాహురథో దివ్యస్సుసుపర్ణో గరుత్మాన్। ఏకంసద్విప్రాబహుధావదంత్యగ్నిం యమం మాతరిశ్వానమాహుః." = இந்திரன், சூரியன், வருணன், அக்கினி, திவ்வியமூர்த்தி, சுபர்ணன், கருடன், என்றிவ்வாறு பலவகையாக உடைய உண்மை வடிவசத்தாகிய அவ்வொரு பிரமத்தையே வேதமுணர்ந்தவர்கள் அக்கினியெனவும், இயமன் எனவும், வாயுஎனவும் கூறுகின்றனர். எ-று. காண்க.

## மேல் வினா.

அற்றேல், மேற்கூறிய இந்திரமித்திர வருணன் முதலிய அவ்வச்சொற்கள் வேறுவேறு தேவர்கட்குப் பெயராக விருக்கின்றதே யல்லது அம்மொழிகளெல்லாம் ஒருகடவுளைக் குறித்ததில்லை என்று நிச்சயிக்கவேண்டுவது. அங்ஙனமில்லையேல் வருணவேள்விக்கு இந்திரமந்திரத்தைக் கூறப்படுமாக எனில்?

## விடை.

அதுகுற்றமன்று ஒரேகடவுட்கே மூர்த்தி வேறுபாடு பலவாயிருத்தலின் அந்தந்தமூர்த்திக்கு அந்தந்த மந்திரங்களைக்கூறுவது ஓர்நியமமாக விருக்கின்றது. என்பது. மாறுபாடற்ற தகுதியாக விருக்கின்றது. எங்ஙனமெனில்? சைவாகமத்துள் விளங்கக் கூறப்பட்ட பிராசாத தக்ஷிணாமூர்த்தி, சோமாஸ்கந்த மூர்த்தி, சிந்தாமணி மூர்த்தி, மிருத்திஞ்சய மூர்த்தி முதலியமூர்த்தி விசேடம் ஒரேசிவனுக்குக்கூறப்பட்டுள்ளது.வேறுவேறாகஅந்தந்தமந்திரங்களையே அந்தந்த மூர்த்திக்கு விநியோகிக்க வேண்டுவதாகக் கட்டளையிடப்பட் டிருக்கின்றது. அதுபோலும், வைணவாகமத்திலும், கோபாலர், வாமநர், நரசிங்கர், இராமர், முதலியமூர்த்திகளின் மந்திரங்கள் வேறுவேறு கூறப்பட் டிருக்கின்றன. அவ்வாறே வேதத்துள்ளும் ஏன் இருக்க லாகாது? (இது வினாவிறுப்பு-எது, விடைவினாவுதலைப் போற்கூறுவது.

## மேல் வினா.

அற்றன்று, தேவதா சொரூபங்களையே வேறுவேறுஎன்று கூறவேண்டும், என்னை? திரவியமும், தெய்வமும், ஆகிய விரண்டும் வேள்விக் கருமத்திற்கு உறுப்பாமன்றோ? அங்ஙனம் சொரூபம் வேறுபடுதலால் கருமவேறுபாடும் கூறப்பட்டுள்ளது. வருமாறு, சுருதியுள், శ్రుతిః॥ "తప్తేపయసిదధ్యానయతిసావైశ్వదేవ్యామిక్షా వాజిభ్యోవాజినం." = காய்ச்சினபாலில் தயிரைவிடுகின்றான். அதிற்பிரிந்த தயிர்க்கட்டிவிசுவேதேவர்களுக்குச் சம்பந்தமான "ஆமிக்ஷா" என்னும் பெயரையுடைய ஹோமத்திரவியமாம். அதில் வேறுபிரிந்த நீர் "வாஜி" என்னும் தேவர்களுக்குச் சம்பந்தப்பட்ட "வாஜனம்" என்ற ஹோமத் திரவியமாம். எ-று. இவ்விடத்துஎவ்வாறு "ஆமிக்ஷா" என்னும் திரவியத்திற்கும், "வாஜநம்" என்னும் திரவியத்திற்கும் பேதமுள்ளதோ? அவ்வாறே விசுவேதேவர்கட்கு வாஜியென்னும் தேவரினும் சொரூப வேறுபாடு உள்ளவா றுடன்பட வேண்டுமே எனில்:-

## மறுத்தல் விடை.

நல்லது உடன்படுகின்றோம் ஆயின். உண்மையாகவுள்ளவன் ஒருவனே கடவுள் அவனுக்கு உபாசிப்பவர்கள் செய்கின்ற கரும அனுட்டான காலத்தில் உபாதிபேதத்தால் = செய்கை வேறுபாட்டால், வேறுபாடு உண்டாகின்றது. அதனானேவாஜசநேயப் பிராமணத்தில் இஷ்டிப் பிரகரணத்தில் கருமஅனுட்டானத்தின் பொருட்டு விளக்கப்பட்ட தேவதைகளின் வேறுபாடுகளை அநுவாதமாகக்கூறி அவையெல்லாம்உண்மையல்ல வென்று மறுத்து ஓரேகடவு ளென்பதே சத்தியமென்று துணிவுசெய்து நிச்சயிக்கப்பட்டது. வருமாறு. వాజసనేయబ్రాహ్మణే॥ "తద్యదిదమాహురముం యజాముం యజేత్యేకం దేవంతస్యైవసా విసృష్టి రేషవ స్సర్వేదేవాః." = வேள்விக் கருமத்தால் இந்தக்கடவுளைத் தொழுவாய் இந்தக்கடவுளைத் தொழுவாய்என்று வேறுவேறாகக்கூறுகின்றனர். அது ஓரேகடவுளைக் குறித்ததாம். இவ்வொரு கடவுளுடைய மாயாவிகார சிருட்டியேயல்லவா எல்லாக்கடவுளரும். எ-று. காண்க.

## உபாசனை அனுட்டானபேதத்தால் பயன்வேறுபாடு.

ஓரே கடவுளானே வேறு வேறாகிய பயனை அடைவது அருமையென்று சங்கிக்கலாகாது. அங்ஙனம் உபாசிக்கும் தொ

ழில் வகை வேறுபாட்டானே பயன் வேறுவேருக வுண்டாகின்றன என்ப துடன்படத் தக்கதாகின்றது. என்னை? சுருதியுள், ශ්‍රු: "තංයථායථෝපා සතේතදේවභවති." =அவனை? யெவ்வாறு எவ்வாறு உபாசிக்கின்ருனே? அவ்வாறே யாகின்ருன். எ-று. காண்க. எவ்வாறு அரசன்ஒருவனேயாயினும் குடை கவரி முதலியனவுபசரிக்கும் பரிவாரங்கட்கு அவரவர் தொழிற்குத் தக்கவாறுபயன் வேறுபாட்டைத் தருவதற்குக் காரணனுக விருக்கின்ருனே? அவ்வாறுஎன உணர்க.

கடவுள் பயனைத் தருகின்ருரோ? அவனவன் செய்யும் பாவ புண்ணியகருமம் பயனைத் தருகின்றதோ? வென்பது விசாரம்.

கடவுள் பயனைத் தருகின்ருரென்பதை பூருவமீமாம்ஸகர் உடன்படுகிறதில்லை. அங்ஙனம்பூருவமீமாம்ஸத்தின் "ஜைமினிசூத்திரத்தில்" ஒன்பதாவது அத்தியாயத்தில் விவகரிக்கப் பட்டது. "మీమాంసాయాం నవమాధ్యాయే అధికరణం" = (சமுசயம்) வேள்வியால் பூசிக்கப்பட்ட தேவதைகளாற் பயனுண்டாகின்றனவா? அல்லது அவ்வேள்விக் கருமம் (அபூர்வம்) அதிருஷ்ட முன்னிலையாகப் பயனைத் தருவதற்குக் காரணமாகின்றதா? என்பது.

(பூர்வபக்ஷம்) அவ்விடத்து. வேள்விசெய்து முடித்துவிட்டவுடனே தோற்றமின்றி யழிந்து விடுகின்றது ஆதலால் அக்கருமம் அனித்தியமாக விருக்கின்றது. அப்படிப்பட்ட நிலையற்றகருமம் எப்போதோ உண்டாகும் பரிபாககாலத்தில் கிடைக்கும் பயனுக்குக் கருவியாவதில்லை. எனவே கூடுவதற்கு நியாயமில்லை என்றவாறு. ஆதலால் அக்கருமம் பயன்றருவதற்கு வேருென்றைத் தோற்றுவித்து அதன் முன்னிலையாகப் பயனைத் தருகின்றது என்று பயனைத்தருகின்ற முன்னிலையை ஒருதலையாக= அவசியமாக ஏற்படுத்திக் கொள்ளவேண்டும் அல்லவா? அந்த முன்னிலையாவது? சுருதிப் பிரமாணங்களும், கடவுள் அனுக்கிரஹமுமே யாக விருக்கின்றது. என்னை? சுருதி. ශ්‍රු:॥తృప్త ఏవైనమిన్ద్రః ప్రజయా పశుభిస్తర్పయతి." = வேள்விக் கருமத்தினல் திருத்தியடைந்தவனுகிய இந்திரனே வேள்விசெய்த தலைவனை மக்களாலும் பசுநிரைகளாலும் திருத்தி யடைவிக்கின்ருன். எ-று.

காண்க. இனி யுத்திப்பிரமாணம்வருமாறு. * கருத்தாதொழிலால் அடைவதற்கு மிகவிருப்பப் படுகின்றது ஆதலின்கருமம் = தொழில், காரகம் என்று சொல்லப்படுகின்றது. அதுவே பிரதானகருமம் = அதனால் வியாபிக்கப்பட்டது = கவரப்பட்டதாதலின் சம்பிரதான கருமம் அதனினுஞ் சிறந்ததாகின்றது. ஈண்டுதலைவனே கருத்தா, வேள்வியேகருமம், 'இந்திராதி தேவர்கள் சம்பிரதானகருமம், ஆகவே அவர் முக்கியராதலின் இந்திராதி தேவர்கள் பூசையைப் பெறுதற்குத் தக்கவராகின்றனர். வேள்வியென்பது ஓர்வகைப் பூசைவடிவமே யாதலின், அதிதிகளுக்கு=விருந்தினர்க்கு உண்டி எவ்வாறோ? அவ்வாறே தேவர்களுக்கு வேள்வி அங்கமாகின்றது. அதனால், பணிவிடையால் திருத்தியடைந்தஅரசன் அப்பணிசெய்யும் பரிவாரம்=சேவகர்க்குப் பயன் கொடுப்பதுபோல வேள்வியால் திருத்தியடைந்த தேவதை அவ்வேள்வி செய்த தலைவனுக்குப் பயனைத்தரும் - என்பது.

---

* கருத்தா, "కర్తా" என்பது செய்பவன் "స్వతంత్రః కర్తా" என்றது பாணிநீசூத்திரம். அதன்பொருள். வினையிற் சுதந்தரமுடையோன் கருத்தன். எ-று.

கருமம். "కర్మ" எதனைச் செய்கின்றானோ? அது. எம், எது செய்யப்படுகின்றதோ? அது. எனவுமாம். "కర్తురీప్సితతమం కర్మ" = கருத்தாவுக்குக் கிரியை=தொழிலால் பொருந்தும்படி சிறந்து வேண்டிநிற்குங் காரகம்கருமம் என்னும் பெயரை அடைகின்றது. எ-று. இதுவும்பாணிநீசூத்திரம். (காரகம்= வினைகொண்டுமுடியும் இரண்டனுருபுமுதல் எழனுருபுவரையுமானஆறுவேற்றுமையுருபுகளும் அதன்பொருளும். கருமம். எது. செயப்படுபொருளெனவும் படும். கிரியை, "క్రియా"=தாதுவின்பொருள் அல்லது தொழில். எனவே பயனிலை, அதனையுணர்த்திக் கருத்தொன்றச்சொற்றொடரை முடிக்கவல்ல திங்ஙந்தபதம்=வினைப்பகுபதமாம்.

சம்பிரதானம், "సంప్రదానం" = கருத்தாவின் றொழிலுக்கு உத்தேசம் = முன்னிலையாயுள்ளது. "కర్మణాయమభిప్రైతి స సంప్రదానం" கொடைத்தொழிலால் யாரைக்குறித்துக் கருத்துற்றுப் பொருந்துவானோ? அப்பொருந்தலையேற்றவன்சம்பிரதானமாம்-எ-று. இதனை நான்காம் வேற்றுமைக்குரிய கோளிப்பொருளாகக்கொள்க. இதுவும்பாணிநீசூத்திரம். முதல். அத்: ௧-ம்-பாதம்: ௩௨-ம்-சூ. இனி அச்சூத்திரத்திற்கு ஆசிரியர்-வரருசியார். வார்த்திகம் வருமாறு. "క్రియయాయమభిప్రైతి స సంప్రదానం" = கருத்தாதொழிலால்

(இனிச்சித்தாந்தம்) ஈண்டுகூறப் படுகின்றதாவது. வேள்விக்கும் தெய்வத்திற்கும் முறையே அங்கம் அங்கியென்னும் கருத்து என்று எதுகுறித்து எடுத்துக் கூறப்பட்டதோ? அதுசொல்லின் வேண்டுதலை அனுசரித்தலினால் வேறுபாட்டை யடைகின்றது. (எனவே அங்கம் அங்கியாயும் அங்கி அங்கமாயும் திரிகின்றது).

---

யாரைப் பொருந்துகிறானோ? அப்பொருத்த முடையோன் சம்பிரதானமாம். உ-ம். "పత్యే శేతే" கணவன் பொருட்டுச் சயனிக்கின்றாள் - எனவரும். அல்லதூஉம். அதற்கே அவ்வரருசியார் செய்த மற்றொரு வார்த்திகம் வருமாறு. "కర్మణః కరణసంజ్ఞా సంప్రదానస్య చ కర్మసంజ్ఞా వక్తవ్యా."=கருமமாகிய செயப்படு பொருட்குக் கரணம் = கருவியாக மூன்றாம்வேற்றுமையாற் கூறவேண்டுவது. சம்பிரதானமாகிய நான்காவதற்கு இரண்டாவதாய செயப்படு பொருளாற் கூறவேண்டுவது. எனவே வேற்றுமை மயக்கங் கூறியவாறு. உ-ம். "పశునా రుద్రం యజతే" "పశునా" = பசுக்களால் என்ற கருவிப்பொருளுக்குச்செயப்படு பொருட்குறியாயும் "రుద్రం" = உருத்திரனை யென்னும் செயப்படுபொருட்குக் கோளியாகிய சம்பிரதான மென்னும் நான்காவதனுருபினையும்அமைத்துக்கொண்டு. "పశుం రుద్రాయ దదాతి" = பசுக்களை யுருத்திரனுக்குக் கொடுக்கின்றான் என்று பொருள் கூறவேண்டுவது.

சாதாரணமாகச் செயப்படுபொருட்கு இரண்டனுருபுவரும். "కర్మణి ద్వితీయా" = என்றதுபாணிநீசூத்திரம்.

கருத்தா = எழுவாயினும், கரணம் = கருவியிலும், மூன்றனுருபுவரும். "కర్తృకరణయో స్తృతీయా" என்றது பாணிநீசூத்திரம்.

சம்பிரதானம்=கோளிப்பொருளில் நான்கனுருபு வரும். "చతుర్థీ సంప్రదానే" என்றது பாணிநீசூத்திரம். கோளி = கொள்வோன்.

அங்கம், "అంగం" = உறுப்பு = அவயவம். அப்பிரதானம் = முக்கியமில்லாமை = தலைமையற்றது.

அங்கி, "అంగి" = அங்கத்தையுடையது. பிரதானம் = முக்கியம்= தலைமையது.

மேற்கூறிய பூர்வபக்ஷத்தில் தேவதை அங்கி, வேள்வி அங்கம். இனி வரும் சைமினிசித்தாந்தத்தில் வேள்வி அங்கியும் தேவதை அங்கமுமாம். இனி இந்தச்சைமினியார் கூறிய பூர்வமிமாம்ஸக சித்தாந்தமே வேதாந்திகளாகிய விசிட்டாத்துவிதி அத்துவிதி முதலியோர் சித்தாந்தமாக விருக்கின்றது.

அங்ஙனமாதலினன்றோ? "யஜேத,,=வேள்விசெய்யவேண்டுவது என்றது விதிப்பொருட்டாகிய வினைச்சொல். அதனுள் "யஜ" "யஜ" என்பதுதாது அதின்மேல் "ஏத" "ஏத" என்றுவதற்குவந்த "திப்" திப்புமுதலிய விகுதியுறுப்பு "ஆக்கியாதம்" என்னப்படும் அந்தப்பகுதிக்கு வேள்விபொருள் அந்த உறுப்புக்குச் செய்வோன் என்பது கருத்துப்பொருள் என்று கூறப்படுகின்றது. அந்தக்கருத்து "கிம்" எதனை, கேந=எதனால், கதம்=எவ்வாறு என்று, கருதத்தக்கது, கருவி, இவ்வாறு செய்யத்தக்கது, என்னு மிலக்கணத்தோடுங் கூடிய மூன்றினையும் முறையேவேண்டுகின்றது.

ஆண்டு, வேள்வியது ஒத்தபதத்தால் அண்மைநிலைசெய்யப்பட்டதாமாயினும் தகுதியன்மையின் அதற்குக் கருதப்படுந் தன்மையில்லை.

எனவே. "யஜாம்யஜேத" = வேள்வி வேட்டான் - என்புழி "யஜ" என்றபகுதி யொன்றினனே "திப்" என்னும் வினைப்பகுபதவுறுப்பாகிய விகுதிகூடி வேட்டான் என்னும் பாவனைப்பொருளும், "ஸுப்" சுப், என்னும் பெயர்ப்பகுபதவுருபுகூடி, யாகப்பொருளாகிய வெள்விஎன்பதுவும் ஆதலின் யாகமென்னும் பொருட்டாகிய பெயர்ச்சொல்லுக்கும். பாவனைப்பொருட்டாகிய வினைச்சொல்லுக்கும். "ஸமாநபதோபநீதத்வம்." ஒரே பதத்தா லண்மையிற் கொள்ளப்படுகை 'என்னும் சமீபம் சம்பந்த முண்டாயிருக்கின்றது. இதுவே "சந்நிதி" என்னப்படும். "ஆகாம்க்ஷை"=அவாயநிலை, "யோக்கியதை"=தகுதிநிலை, "சந்நிதி"=அண்மைநிலை, என்னும் மூன்றுநிலைமையும்தொடர்மொழிப் பொருளுணர்ச்சிக் காரணமாகவிருக்கின்றன. உலகத்தில், சாதாரணமாக, வள்ளலானவன் ஒன்றனைக் கொடுக்கும்பொழுது தான்விரும்பினவனுக்கும், ஏற்றலுக்குத் தகுதியானவனுக்கும் அடுத்திருக்கும் சம்பந்தமுடையவனுக்கும் அன்றோ? கொடுக்கின்றான்: அவ்வாறே பாவனை என்னும் வள்ளலுக்கு யாகம் என்பது அண்மை நிலை என்னும் அடுத்திருக்கும் சம்பந்த முண்டாயிருத்தலின் பாவனையாகத்தையே பற்றவேண்டுவதாயினும் அந்தபாவனையின் இலக்கியம்=குறிப்புக்கு வேள்விதக்கதகுதி நிலையுடைய தல்லாமையின் அதுபாவிக்கப்படுகின்றதில்லை. அதனனே அந்தயாகத்திற்குக் கருதப்படுந்தன்மையில்லை - என்றவாறு. பாவனை=கருத்து.

சுவர்க்கமென்பதுவோ? தொடர்மொழித்தொடக்கத்தானே கொள்ளப்பட்டதாமாயினும் புருடார்த்த மாதலின். தகுதியுடைமையின் கருதத்தக்கதாகின்றது.

జ్యోతిష్టోమేన స్వర్గ కామో యజేత என்றது சுருதிவிதிவாக்கியம். இதனுள் அதிகாரியையுணர்த்துமொழியாகிய "స్వర్గ కామః" என்னும் விசேடணத்தொடர் மொழியில் சுவர்க்கம்என்பதுகொண்டுவரப்பட்டது. அவ்வளவன்றி "யஜேத" என்றமொழியிலுள்ள விகுதியால் உணர்த்தப்பட்ட பாவனைக்கும், சுவர்க்கம் என்னு மொழியா லுணர்த்தப்பட்ட சுவர்க்கத்திற்கும் "சமானபதோபாதத் துவ" மென்னும் அண்மைநிலைமை யில்லை ஆயினும், சுவர்க்கம் புருடார்த்த மாக விருக்கின்றது: செய்பவனுக்குப் பயனாக விருக்கின்றது. அருத்தமென் பது பயனாக விருத்தலின், கருத்தாவின்கருத்துக் குறித்தது முக்கியமாய்ப் பயனாகுமே யன்றி அதன்கருவிகள் அவ்வளவு குறிப்பையுடைய வல்லவன் றோ? சுவர்க்கத்தை விரும்புவோன் ஜோதிட்டோமம் என்னும் வேள்வியால் "யஜனம்" = என்னும் தேவதா ஆராதனை = பூசை செய்யவேண்டுவது. என்று மேற் சுருதிவாக்கியத்திற்குப் பொருளாதலின் சுவர்க்கமே கருதத்தக் கபொருளாகின்றது என்பது.

அந்தச்சுவர்க்கத்துக்கு எதுகருவி? எனவே, எதனாலந்தச் சுவர்க்கத்தை யடையலா மென்னும் கருத்தில்=அவாயநிலையில்- வேள்விஎன்பது கருவியாகச் சம்பந்தப்பட்டு வருகின்றது. என வே, வேள்வியால் சுவர்க்கத்தைப் பெறலாமெனவும், சுவர்க்கத் திற்கு வேள்வி கருவியெனவும் பொருள் படுகின்றது. பெறத் தக்க சுவர்க்கத்தைப் பெறுதற்கு முதற்கண் கருவியாகிய வேள் வியைச் செய்து முடிக்கவேண்டுதலின் சுவர்க்கக் கருவியாகிய அவ்வேள்வியே செய்து முடிக்கவேண்டிய பொருளாகின்றது. அது, தனக்கு "నిష్పాదకం" நிஷ்பாதகம் = நிறைவேற்றுவது= பிறப்பிப்பது. எனவே கருவியாகிய பொருளையும் தேவதையை யும், இவ்வாறு பெறவேண்டுவதுஎன்னும் வகைமையோடுவேண் டுகின்றது. (எனவே யாகமானது தான்முடிவதற்குப் பசுவாகிய அவிசினால் தேவதையை இவ்வாறு என்னும் வகைமை வேண்டு கின்றது. என்பதுகருத்து.) அதனால் யாகம் அங்கி, அதற்குத் தே வதை அங்கம், எனமுடிதலின், உண்டியால் விருந்தினர் உபசரிக் கப் பட்டாற்போல் வேள்வியால் தேவதை பூசிக்கப் படுகின்ற தில்லை.

வேள்வியென்னும் கருமத்தால் இந்திராதி தேவதைகளைப் பூசிக்கின்றான் என்று உரைசெய்து யாகமென்னும் கருமத்திற்காயினும் கோளிப் பொருட் டாகிய குறியையடைந்த இந்திராதி தேவர்கள் முக்கியராதலின் பயனைத் தருகின்றானென்று பூர்வபக்ஷத்தான்யுத்திகூறினன்.

சுவர்க்கமடைய விரும்பியகருத்தா வொருவன் அச்சுவர்க்கத்தை யடையும்பொருட்டு வேள்வியைச் செய்கின்றான் அந்தவேள்வியே சுவர்க்கப்பயனைத் தருகின்றது. ஹவிர்த்திரவியம், தேவதை, தொழில்வகையுமாகிய இவைகள் அந்தவேள்விக்கு அங்கமாகின்றது. ஆதலின் அது முக்கியமல்ல. வேள்வியே அங்கியாதலின் முக்கியமாக நின்று பயனைத்தருகின்றது என்பது சைமினிசித்தாந்த முடிபு. இதுவே அப்பூர்வமீமாம்ஸையின் இந்த அதிகரணத்தின் யுத்திநியாயக்கருத்தின் பொருள்.

இனி இச்சித்தாந்தி பூர்வபக்ஷத்தோன் கூறிய சுருதிவிரோதத்தை விலக்குவான் றொடங்கினர். வருமாறு. "తృప్త ఏవైనమిన్ద్రః ప్రజయా పశుభిస్తర్పయతి" என்று எந்தச்சுருதி தேவதை பயனைத் தருகின்றது என்று எடுத்துக் காட்டப்பட்டதோ? அது, தன்னுரைப் பொருளில் கருத்துடையதல்ல, காட்சிமுதலிய பிரமாணங்களுக்கு விரோதமாதலின். என்னை? யாதொரு தேவதையானாலும் சரீரியாக வந்து அவிசைப்புசித்துத் திருத்தியடைந்து பயனைக் கொடுப்பதாக யாருக்கும் கண்காண வெளிப்படுத வில்லாமையின். அன்றியும், அவ்வாறில்லாமலே போதலென்னும் " அபாவம் "= இல்லாமை. காட்சிப் பிரமாணத்தாலும், " யோக்கியாநுபலத்தி " என்ற பிரமாணத்தினாலேயும் தெரிவிக்கப் படுகின்றது. "யோக்கியாநுபலத்தி " என்பது. தெரியத்தக்கது தெரியாமற்போதல்.

அல்லதூஉம், அசுவமேதப் பிரயோகத்தில் சுருதி, శ్రుతిః॥ " స్తెగాంద్రంష్ట్రాభ్యాం మండూకాంజంభ్యేభిః " இதுமுதலியவற்றுள் தேகவுறுப்புக்களாகிய கோரைப்பற்கள் முதலிய திரவியங்கள் அவிசைத்தின்னுவதனால் " స్తెగా " ஸ்தைகா, தவளை, முதலியதிரியக்கு உயிர்களும் ஒருவிசேட்மான தேவதைகள் என்று வேதத்துட் கூறப்படுகின்றது அப்படிப்பட்ட தெய்வங்களெல்லாம்பயனைத்தருகின்றது என்று நம்பத்தக்கதா? தக்கதல்ல. வன்றோ? ஸ்தைகா= ஒருவகை ஜந்து.

சுருதி. శ్రుతిః॥ " ఓషధీభ్యస్స్వాహా వనస్పతిభ్యస్స్వాహా మూలేభ్యస్స్వాహా." என்றது முதலியவற்றுள் அறிவற்ற ஓஷதிகள்=பயிர்வகை மூலிகை முதலிய வனஸ்பதி=மரவகைகள் அவற்றின் உறுப்புகளாகிய வேர்முதலியனவும் தேவதைகள் என்று கூறப்படுகின்றன.

ஆண்டு, அப்படிப்பட்ட தேவர்கள் எந்தஹேதுவினால் அவிசைப் புசிப்பார்கள்; புசிப்பேயில்லாதவழித் திருத்தி எங்ஙன

முண்டாம்; திருத்தி என்பதில்லாவிடின்பயனையெவ்வாறுதருவர். ஆதலின் சரீரமுதலிய வுடையதேவர்கள் என்பார் ஒருவருமில்லை யாதலால் தேவதாப்பிரசாதம் யாகபயனைத் தருவதற்கு முன்னிலையல்லவாம்.

பிறவெனில்? அவ்வேள்விப்பயனுக்கு முன்னிலை = வரும் வழியாதெனில்? சுருதியால் உணரப்படுகின்றபடிக் கருமம் கருவியாக வேண்டுவதன்றே? அது வேறுவகையாற் பொருந்துவதில்லையா மாதலின் கற்பிக்கத்தக்க ஊழே அதற்குவரும் வழியென்றுடன்பட்டு அந்தத்தேவர்களிலும் அந்த அபூர்வமே பயன் வருவழியென்று ஒருதலையாக கூறவேண்டுவது. (எனவே.வேதத்துட் கூறப்பட்ட கருமங்கள் அதிருஷ்டத்தை யுண்டுபண்ணுகின்றது, அந்த அதிருஷ்டம் பயனைத்தருகின்றது. என்பது கருத்து.)

மந்திரங்கள், அருத்தவாதம், இதிஹாசங்கள், புராணங்கள், முதலியவற்றுள் தேவதைகளும் தவங்களைச்செய்தனர்; வேள்விகளை யனுட்டித்தார்கள்; பிரமாஸ்திரமுதலிய மந்திரங்களைப் பிரயோகித்தனர்; எங்கெந்தக்கருமங்களைச்செய்து எவ்வெவ்வளவு அதிருஷ்டத்தை யடைந்தனரோ? அவ்வளவுபயன் சித்திபெற்றார்கள் என்று கூறப்பட்டிருக்கின்றன.

ஆதலின், அவனவன்செய்த கருமம் அதிருஷ்டத்தை யுண்டுபண்ணி அந்தவழியால் அவ்வவனுக்கும் பயனைத் தருகின்றது. அக்கருமத்துள் தேவதை ஓர்அங்கமாகவே யிருக்கின்றது. அவ்வளவேயன்றித் தேவதை பயனைத்தருவதில்லை என்று சித்தாந்தமாகின்றது. (அதிருஷ்டம்=அபூர்வம்=ஊழ்=புண்ணியபாவம்.) இத்துணையும் பூருவமீமாம்ஸாதி கரணவிசாரம்.

இனி உபநிடதங்களின் கருத்தின்படி உத்தரமீமாஞ்சகர்களாகிய வேதாந்திகள்கூறும் முடிபு அவர்கள்நூலில், இரண்டாவது. அத்தியாயத்தில் அதிகரணவிசாரம் செய்யப்பட்டிருக்கின்றதாவது.

## கடவுளே பயன்றருவோர் என்பது.

(சமுசயம்) தருமமா? அல்லது ஈசுவரனா? பயனைக்கொடுப்பது என்பது.

(பூர்வபக்ஷம்) மேல் மீமாம்ஸகர் கூறிய நியாயத்தினால் அதிருஷ்டமே பயனைத்தருகின்றது. என்பது.

(சித்தாந்தம்) அதிருஷ்டமெனவே புண்ணியம்; அது தருமம்அன்றோ? அத்தருமம்எப்பொழுதும்தருமியைப்பற்றியேநிற்க வேண்டுவது. தருமிஎன்பவன் தருமத்தைச்செய்தவன்அன்றோ? ஓ!மீமாம்ஸகரே! தருமம்அசேதனம்=அறிவற்றதைப், பற்றியா? சேதனம் = அறிவுள்ளதைப், பற்றியா நின்று பயனைத் தருகின்றது? முதற்பக்ஷமாகிய அசேதனத்தைப்பற்றி நிற்பது என்று உடன்படுகின்றாயோ? ஆண்டு ஏற்றத் தாழ்வுகளை யறியமாட்டாத அசேதனம் தக்கவாறு பயனைக் கொடுப்பதற்குத் தகுதியுடைய தல்லவாம் ஆதலின் அது ஒத்ததல்லவாம். இரண்டாம் பக்ஷமாகிய சேதனத்தைப்பற்றி நிற்பதை யுடன்படுவதில் ஆனலோ? தருமம் எந்த அறிவைப்பற்றி நின்று பயனைத் தருகின்றது என்பாயோ? அந்தச்சேதனனே பயன் கொடுப்பவன் என்றாற் சாலுமே அதுமற்றும் எளிதன்றோ?

அங்ஙனமாயின், தருமம் என்னும் பொருளுக்குப் பயனே யில்லாது போதலின் அது வீணே? என்று வினவுதல் வேண்டா. எல்லாப் பயனையுந் தரவல்ல முற்றுணர்வனாகிய ஈசுவரனுக்கு "வைஷம்மியம்"=நடுநிலை, யின்றிச்சிலர்க்குமிகுதியாகவும் சிலர்க்குக் குறைவாகவும் கொடுப்பது, "நைர்க்ருண்யம்" = தயவில்லாமை, என்ற குற்றம் தங்காமையின் பொருட்டுத் தருமம் என்பது வேண்டி யிருத்தலின்.

தருமமே யில்லாவழி சிலர்க்கு மிகச்சிறந்த தலைமைச் சுகத்தையும், சிலர்க்கு இடையிட்ட சுகத்தையும், சிலர்க்குக் கடைப்பட்ட சுகத்தையும் ஊட்டுவித்த இறைவன்=கடவுள், செய்கை எவ்வாறு விஷமமல்லாததாகும். பலவகைப்பட்ட துன்பங்களை யுண்டுபண்ணு மவனாய் எவ்வாறு தயவில்லாதவனாகாமற்போவான் அங்ஙனமாகக் கூடாமையின் அவனவன்செய்த புண்ணியத்திற்கீடாக அவனவனுக்குச் சுகமும், பாவத்திற்கிடாகத் துன்பமும், ஆசிரியன், பிதா, அரசனைப்போல ஊட்டுவிக்கின்ற இறைவனுக்கு நடுநிலையில்லாமை, தயவில்லாமை என்னும் குற்றம் தங்குதலில்லை. ஆதலால், துட்டருக்குத் தண்டனையும், சிட்ட

ருக்குக் காத்தலாகிய அருளும்செய்கின்ற ஆசிரியன், பிதா, அரச னுக்கும் நடுநிலையில்லாமை யேனும், தயவில்லாமையேனும் இல் லையல்லவா ? அவ்வாறே இறைவனுக்கு மென்றுணர்க.

"స్థాణు," ஸ்தைகம்,தவளை,முதலியதிரியக்குஉயிர்களும்,(வன ஸ்பதி) பயிர்வகைசெடிபுதல்வகைமரவகைவேர் முதலிய நிலைத்தி ணைப்பொருள் = அசைவற்றனவும், பயனைத் தருகின்ற தரத்தை யுடையனவல்லவாதலின்பயனைக்கொடுக்கமாட்டாது என்பதல்ல வோ?நின்கருத்து;அஃதங்ஙனமாக.எல்லாவல்லமையும் எல்லாத் தகுதியு முடைய பரமன் எல்லாவற்றுள்ளும் நிறைந்தவனா யிருத் தலின் அவ்வெல்லா வடிவனுமிருந்து பயன்றருகின்றான் என்ப தற்குத் தடையென்னுளது ?

శ్రుతిః॥ "తృప్తఏవైనమిన్ద్రః ప్రజయాపశుభిస్తర్పయతి" என்றசுருதிக்குத் தன்னுரைப் பொருளிற் கருத்தில்லை என்றல்லவோ? கூறியது. பின்னெங்குள தென்னில்? இலக்கணைப் பொருளில் என்றுணர்க. இந்திரன் என்னுமொழிக்கு இந்திரன் என்கின்ற தேவதைக்குள் ளிருக்கும் அந்தரியாமியாகிய பரமேச்சுரனே பயனைத்தருகின்ற வன் என்று அந்தசுருதிக்குக் கருத்து. என்னை ? அந்தக்கருத்தை யே மற்றோரிடத்து அவ்வேதமே கூறுகின்றது. வருமாது. "అంతః ప్రవిష్టశ్శాస్తా జనానాం" = உடம்பினையடைந்த பிராணிகளின் உள் ளத்துள்ளே புகுந்து பரமேச்சுரன் நடத்துவோனாக விருக்கின் றான். எ-று. காண்க. கடவுளென்பதும் இப்பொருட்டு எனக் கொள்க.

ஆதலால் கடவுளருளே பயனுக்கு வழிஎன்றுணர்க.

இனி, சைமினி மதமாகிய பூருவமீமாம்ஸத்திற்கும், வியாச மதமாகிய வுத்தரமீமாம்ஸத்திற்கும், தம்முள் ஒன்றற்கொன்று முரணுதலுண்டாயிற்றே யெனின்? அஃதின்று அவ்வவரும் சொல்லப்புகுந்த விசேடங்களை நன்கு உள்ளுறுத்திவிசாரிப்பின் சமாதானமுண்டாகின்றது.

எங்ஙனமெனில்? தேவதத்தன் என்பவனே பாகஞ்செய்த வன்=சமையல் செய்தவனாயினும், நன்றாக எரிந்ததைச் சொல் லத்தொடங்கி இன்று விறகுசமைத்தது என்று கூறும் உலக

வழக்குப்போலப் பரமேசுவரனேபயனைத் தருபவனுயிருப்பினும், யார்க்கும் ஒருபடித்தாகாது ஏற்றக்குறைவாகப் பயனை ஊட்டுவித்தற்கு நிமித்தமாதலின் அதிருஷ்டமே சிறந்ததெனச் சொல்லக்கருதித் தருமமே பயனைத் தருகின்றது என்று ஜைமினியார் கூறிய விவகாரம் ஏன் உலகசம்மதமாகா தொழியும் என்பது சித்தாந்தமுடிபு.

அதனுல், அவ்விரண்டு மதங்களும் விரோத மில்லாமையால் பயனைத்தரத்தக்க இறைவன் ஒருவனே. எல்லா விடங்களினும் யாவராலும் எல்லாவகையாலும் விதிப்படி பூசிக்கப்படும் முதற்கடவுள் ஒருவனுகவிருக்கின்முன் என்பது துணிபு. இஃதுஇத்துணையினமைக.

முதற்கடவுளிலக்கண முற்றிற்று.

---

# அதிதிபூசை=விருந்தோம்பல்.

அதிதி=விருந்தினர்க்கு,இலக்கணத்தை நூலாசிரியரோமேற்கூறுவர். இனி மூலத்துள் "దేవతాతిథిపూజకః" = தேவர்களையும் அதிதிகளையும் பூசிப்பவன். என்றது. பூசிக்கும்வகையை வருஞ்சுலோகத்திற் கூறுதும்.

மூலத்துள். "నావసీదతి." = துக்கப்படுவதில்லை - எ-று. தேவர்களையும் அதிதிகளையும் பூசிப்பவன் துயரமடைவதில்லை. எனவே பூசிக்காதவன் "అవసీదతి" = துயரப்படுகின்முன் என்பது தானே போதருகின்றது.

## பூசியாதவன்றுன்பமுறுவன்.

அஙஙனம் கூர்மபுராணத்துட் கூறப்பட்டது. வருமாறு, కూర్మపురాణే॥ "యో మోహాదథవాలస్యా దకృత్వా దేవతార్చనం। భుఙ్క్తే సయాతినరకం సూకరేష్వి హజాయతే। అకృత్వా దేవపూజాంచ మహాయజ్ఞాన్ద్విజోత్తమః। భుంజీతచేత్సమూఢాత్మా తిర్యగ్యోనించనిగచ్ఛతి" = யார் ? அறிவில்லாமையாலாயினும் நெடுநீர்மை = ஆலசியத்தாலாயினும், தேவ பூசையில்லாமல் புசிக்கின்முனே ? அவன் அச்சத்தைத் தருகின்ற நரகத்தை யடை

ந்து பின்பன்றியாகப் பிறப்பன். வேதியரிற் சிறந்தோனும் யார்? தேவர்பூசையையும் ஐம்பெரும் வேள்விகளையும் செய்யாமற் புசிப்பானோ ? அந்தமூடபுத்தி யுடையவன் திரியக்குயிர்கள்= மிருகங்களாகப், பிறக்கின்றான். எ-று. காண்க.

## விருந்தினர்புலந்துபோதலால் வரும்பயன்.

மார்க்கண்டேயர், మార్కణ్డేయః॥ "అతిథిర్యస్యభగ్నాశో గృహాత్ప్రతినివర్తతే। సతస్యదుష్కృతందత్త్వా పుణ్యమాదాయగచ్ఛతి." = உண்டிவேட்டு= உணவைவிரும்பிவந்த, விருந்து தன்விருப்பம் பங்கப்பட்டு, யார் வீட்டினின்றும் பின்செல்வானோ ? அவ்விருந்து தன்பாவத்தை யவ்வீட்டிலிருக்கும் தலைவனுக்குக்கொடுத்து, அவ்வில்லத் தலைவனுடைய புண்ணியங்களைக்கைக்கொண்டுசெல்லுகின்றான். எ-று. காண்க.

தேவலர். దేవలః॥ "అతిథిర్గృహమభ్యేత్య యస్యప్రతినివర్తతే। అసత్కృతోనిరాశశ్చ ససద్యోహంతితత్కులం." = விருந்து எந்த இல்வாழ்வான் மனைக்குட் சென்று உபசரிக்கப்படாமலே ஆசைகெடுக்கப் பட்டவனாய்ப் பின் திரும்பி வீணாகச் செல்லுகின்றானோ? அவன் அப்பொழுதே அவ்வில்வாழ்வான்குலத்தை நாசஞ் செய்கின்றான். எ-று. காண்க.

## பூசித்தவன் பெறும்பயன்.

பூசித்தால் துயரமில்லையென்ப தொன்றுமாத்திரமே யன்று சுபம்=நன்மையு, முண்டு. அங்ஙனம் விஷ்ணுதருமோத்திரத்தில் கூறப்பட்டது. విష్ణుధర్మోత్తరే॥ "యేర్చయంతి సదావిష్ణుం శంఖచక్రగదాధరం। సర్వపాపవినిర్ముక్తా బ్రాహ్మణ్యం ప్రవిశంతితే," = யார் சங்குசக்கரகதைகளைத் தரித்த விஷ்ணுவை யெப்பொழுதும் பூசிக்கின்றரோ? அவர்கள் எல்லாப்பாவத்தினின்றும் விடப்பட்டவர்களாய் வேதியர்களாகப் பிறக்கின்றார்கள். எ-று. காண்க. (బ్రహ్మాణం ప్రవిశంతితే) என்பது பாடமாயின் சதுமுகப் பிரமனுலகத்தையடைகின்றான், என்று பொருளுரைத்துக் கொள்க. (బ్రహ్మాణంప్రవిశంతితే) என்ற பாடமாயின் பிரமத்தோடு கலப்பை யடைகின்றார்கள். என்றுரைக்க.

கூர்மபுராணம், కూర్మపురాణే॥ "వేదాభ్యాసోన్వహంశక్త్యా మహాయజ్ఞక్రియాతథా। నాశయత్యాశుపాపాని దేవానామర్చనంతథా." = நாடோறும் சத்தியுள்ள வளவையிற்செய்த வேதமோதலும், அவ்வாறே செய்த ஐம்பெரும் வேள்வித்தொழிலும், அவ்வாறே தேவர்களைப் பூசித்தலும் பாவங்களை யொழிக்கின்றன. எ-று. காண்க.

மனு. మనుః॥ "అతిథింపూజయేద్యస్తు శ్రాన్తంచాదృష్టమాగతం। సవృషం గోశతంతేన దత్తంస్యాదితిమేమతిః." = யார்! தன்மனைக்கு இளைப்படைந்து வந்தகுற்றமற்ற விருந்தினனைப்பூசிக்கின்றானே? அவனால் நூறு கோதானம் ஒரு இடபதானம் அல்லது, இடபத்தோடு நூறுகோதானம் செய்யப்பட்டதாக கொள்வதுஎன்கருத்து. எ-று.காண்க.

விஷ்ணு. విష్ణుః॥ "స్వాధ్యాయేనాగ్నిహోత్రేణ యజ్ఞేనతపసాతథా। నావాప్నోతి గృహీలోకాన్ యథాత్వతిథిపూజనాత్." = இல்லறத்தானனவன் அதிதியைப் பூசிப்பதால் எவ்வாறாகப் புண்ணியலோகத்தை யடைகின்றானே! அவ்வாறாக வேதமோதலினாலும், அக்கினி ஹோத்திரத்தைஹோமஞ்செய்தலாலும், வேள்வியாலும், தவத்தாலும், பொருந்துவதில்லையாம். எ-று. காண்க.

## தனக்கென்றுலையேற்றலாகாது.

வைசுவதேவம், முதலியவேள்வியின்பொருட்டுச்சமைத்து, அவிசினைத் தேவர் முதலியோர்க்கு ஹோமமுதலிய வடிவாக வூட்டுவித்து. "హుతశేషంభుంజీత." ஹுதசெடம் என்னும்பெயரையுடைய = வேள்விசெய்து மிகுந்தமிச்சிலாகிய அந்தப் பரிசுத்தமான அந்நத்தைப் புசிக்கவேண்டுமேயல்லாது, தானே யுண்ணும் பொருட்டாக அடுப்பில் உலையேற்றிச் சமைப்பிக்கலாகாது.

அங்ஙனம் கண்ணன் கூறினர். வருமாறு, பகவற்கீதை భగవద్గీతాయాం॥ "యజ్ఞశిష్టాశినస్సంతో ముచ్యంతే సర్వకిల్బిషైః। భుంజతేతేత్వఘం పాపా యేపచంత్యాత్మకారణాత్." = வேள்வியின் பொருட்டு உதவிமிக்க அந்நத்தைப் புசிப்பவர்களானல் எல்லாப் பாவங்களாலும் விடப்படுகின்றார்கள் எந்தப்பாவிகள் தம்பொருட்டே சமையல் செய்வித்துக் கொள்கின்றார்களோ? அவர்கள் பாவங்களை யனுபவிக்கின்றார்கள். எறு. காண்க.

## ஹுதம் என்னுஞ் சொல்லின் பொருள்.

இனி மூலத்துள். "హుతశేషం," = என்றது. ஆண்டு ஹுதம் என்னும் மொழிமஹாபாரதத்தில் பொருளுரைக்கப்பட்டது. మహాభారతే॥ "వైశ్వదేవాదయో హోమాః హుతమిత్యుచ్యతే బుధైః"=வைசுவதேவ முதலியஹோமங்கள் அறிவுடையோரால் ஹுதம்என்று கூறப்படுகின்றன- எ-று. காண்க.

ஹுதத்தினுடையமீதி "ஹுதசேஷ:" என்னப்படும். அந்த ஹுதசேடமொழிதேவர்கள், முனிவர்கள், மனிதர், இவர்கள் பூசைக்குதவிமிகுந்துள்ளதை இலக்கணையால் உணர்த்துகின்றது.

அங்ஙனம் மனுவுங்கூறினர். வருமாறு, మనుః॥ "దేవానృషీన్మనుష్యాంశ్చ పితౄన్గృహ్యాశ్చ దేవతాః। పూజయిత్వా తతః పశ్చాద్గృహస్థః శేషభుగ్భవేత్। అఘం స కేవలం భుఙ్క్తే యః పచత్యాత్మకారణాత్। యజ్ఞశిష్టాశనం హ్యేతత్ సతామన్నం విధీయతే."=தேவர்களையும், இருடிகளையும், மனிதர்களையும், பிதிரர்களையும், மனைத்தேவதைகளையும் பூசித்துப் பின்பு இல்வாழ்வான்மிகுந்த மிச்சிலுணவைப் புசிப்பவனாகவேண்டுவது. யார்? தன்பொருட்டாகவே பாகஞ்செய்து கொள்ளுகின்றானோ? அவன் பாவத்தை யனுபவிக்கின்றான். வேள்விக்கு உதவி மிகுந்த இந்த உண்டிப்பொருளன்றோ? நல்லறிவுடையோர்க்கு அங்கமாக விதிக்கப்பட்டது. எ-று. காண்க.

## இனி வேதியனிலக்கணம்.

மூலத்துள். "బ్రాహ్మణో నావసీదతి" = என்றது. அவ்விடத்து, எந்தவிலக்கணமுடைய வேதியனை ஆசிரியர்-பராசரனார் கூறவெடுத்துக் கொண்டாரெனின்? அதுமஹா பார்ரதத்துட் கூறப்பட்டது. మహాభారతే॥ "సత్యం దానం తపశ్శౌచ మానృశంస్యం క్షమా ఘృణా। దృశ్యంతే సత్కులం యత్ర స వై సద్బ్రాహ్మణస్స్మృతః."=சத்தியம், தானம், தவம், சுத்தமுடைமை, வன்செய்கையில்லாமை=பிறிதோருயிர்க்குத் துன்பம் விளைத்த லில்லாதிருத்தல், பொறுமை, தயவு, நல்ல வேதியர் குலத்துட்பிறந்திருந்தல், இந்த இலக்கணமுடையவன் வேதியன் என்று கூறப்பட்டான். எ-று. எம்.

இதுவுமது. "జితేంద్రియో ధర్మపరః స్వాధ్యాయనిరతశ్శుచిః। కామక్రోధౌ వశే యస్య తం దేవా బ్రాహ్మణం విదుః."=ஐம்பொறிகளையும் அடக்கினவன்,

தருமமே சிறந்ததென விரும்பிக்கொள்பவன், ஒழியாது வேத மோதுபவன், பரிசுத்தனானவன், காமத்தையும் குரோதத்தையும் தன்வசமாக்கி வைத்திருப்பவன் யாரோ? அவனைத் தேவர்கள் வேதியனாக மதிப்பார்கள். எறு. எம்.

இதுவுமது. "యస్యచాత్మసమోలోకో ధర్మజ్ఞస్యమనస్వినః। స్వయంధర్మణచరతి తందేవాబ్రాహ్మణంవిదుః." = தருமங்களையுணர்ந்து நல்ல மனத்தையுடையவனாய்த் தான் தருமவழியில் நடந்துகொண்டு தன்னைப்போல உலகுயிர்களையும் சமமாக நினைப்பவன் யாரோ? அவனை வேதியனாகத் தேவர்களறிவர். எறு. எம்.

இதுவுமது. "యోధ్యాపయేదధీతేవా యాజయేద్వా యజేతవా। దద్యాద్వాపి యథాశక్తి తందేవాబ్రాహ్మణంవిదుః=யார்? தனக்கு இயன்றமட்டில் வேதத்தை யோதுவனோ? ஓதுவிப்பானோ? வேள்விசெய்வனோ? செய்விப்பனோ? தானத்தைக்கொடுப்பனோ? அவனையே வேதியனென்று தேவர்களறிவர். எறு. எம்.

இதுவுமது. "అహేరివఋణాద్భీతస్సన్మానాన్మరణాదివ।కుణపాదివయస్త్రీభ్యస్తందేవాబ్రాహ్మణంవిదుః" = பாம்புக்கு அஞ்சுவதுபோலக் கடன்கோடலுக்குபயந்தவன், சாதலுக்குப் பயந்தவனைப்போலப் பிறன்தன்னை உயர்ந்தோனென நன்குமதிப்பதில் பயந்தவன், பிணத்தைக்கண்டு அருவருப்பதுபோல அன்னியன் மனைவியைப் புணர்வதற்குப் பயந்தவன் யாரோ? அவனே வேதியனென்று தேவர்களறிவர். எறு. எம்.

இதுவுமது. "క్షమాదయాచవిజ్ఞానం సత్యంచైవదమశ్శమః। అధ్యాత్మనిరతిజ్ఞాన మేతద్బ్రాహ్మణలక్షణం"=பொறுமை, சீவகாருணியம், விஞ்ஞானம், உண்மைகூறுதல், புறக்கரணங்களை யடக்குதல், அந்தக்கரணங்களை யடக்குதல், வேதாந்தங்களை அறிதலிலும் யோகப்பழக்கத்திலும் ஒழியாமற் றன்வாழ்நாளைச் செலுத்துதல், பிரமஞானம், இவைகளே வேதியனுக்குரிய இலக்கணமாம் - எறு. விஞ்ஞானம். விசேடமாகிய உலகுணர்ச்சி, சாத்திரவுணர்ச்சி, சிற்பவுணர்ச்சி, என்னப்படும். சிற்பம் என்பது சுரௌத சூத்திரங்களிற் கூறப்பட்டுள்ள "కల్పం" சுற்பம் என்னும் வித்தையாம். புறக்கரணமடக்கல் = ஐம்பொறிமுதலிய வடக்கல். அந்தக்கரணமடக்கல் = மனமடக்கல். என்வும் கூறுமாறுகாண்க.

இங்ஙனம் கூறியதால் முடிந்த தென்னையெனின்? வேதியன் ஆஹிதாக்கினி=அந்தந்த நிலைமைக்குத்தக்க வேள்வித்தீயுடையனுயிருத்தல், ஒருக்கால் அவ்வாறில்லாவிடினும் மேற்கூறிய விலக்கணங்களுட் சிலவேனுமுடையனுய் வேதியர் குலத்துட் பிறந்தவன் யாரோ? அவனும் ஈண்டு வேதியன் என்று நினைக்கப்படுகின்ருன். என்ற முடிபுடைய தாகின்றது.

இனி மூலத்துள். (கஅ) வது சுலோகத்தில் "చతుర్ణామపి వర్ణానాం" என்று வினவப்பட்டது. (௩௬) வது சுலோகத்தில் "చాతుర్వర్ణ్యసమాచారం" என்று கூறப்பது. இவை சாதாரண தருமத்தைக்குறித்தன. (௩௬) வது சுலோகத்தில் "షట్కర్మాభిరతః" என்று கூறப்பட்ட்து. இது அந்தணனுடைய சிறப்புத்தருமம்.

ஈண்டு, ஓதுவித்தல், வேட்பித்தல், தானமேற்றல், இம்மூன்றுமே வேதியனுக்குச் சிறப்புத்தருமமென்று கூறவேண்டியதென்பது ஒத்தவாறே. ஓதல், வேட்டல், கொடுத்தல், இம்மூன்றுகருமமும் மூன்று வருணத்திற்கும் பொதுத்தருமமாகவேயிருக்கின்றன. ஆயினும், அறுவகைக் கருமங்களையும் செய்தற்குரிய அதிகாரமுடைமை ஏனையார்க்கு இல்லையாமாதலின் அக்கருத்தினுல் அறுவகைத்தொழிலும் வேதியனுக்குச் சிறப்புத்தருமமென்று கூறப்பட்டன. இங்ஙனங்கூறின் எவ்வகைமுரணுமின்ரும். (௩௬)

## பொதுநித்தவநுட்டானம்.

శ్లో॥ సంధ్యాస్నానం జపో హోమో
దేవతానాంచపూజనం।
ఆతిథ్యంవైశ్వదేవంచ షట్కర్మాణి
దినేదినే॥ ॥౪౦౪॥

என்னுதலிற்ருேவெனின்? சிறப்பாகிய ஓதல் முதலியவற்றைக்கூறு முகத்து மூன்று வருணத்திற்கும் பொதுவாகிய நித்த கருமத்தைச் சுருக்கிக் கூறுகின்றது.

(இ-ள்.) நீராடலோடு சந்தியாவந்தனம், செபித்தல், தீவேட்டல், தேவர்களைப்பூசித்தல், விருந்துபசரித்தல், வைசுவதேவம், என்னும் ஆறுகருமங்களும் நாள்டோறுஞ்செய்யத்தக்கனவாம். எ-று.

"సంధ్యాస్నానం" என்புழி "యవాగూపాకన్యాయః" = யவாகூபா கநியாயத்தால், சந்தியாஸ்நாநம் என்பதனை. ஸ்நாநம் சந்தியா வென மாறிப்பொருள்கொள்க.

அந்தநியாயமோ? பூருவமீமாம்ஸம் ஜைமினி சூத்திரம். ரு-வது அத்தியாயம். ௲ - பாதத்திற் கூறப்பட்டது.

## யவாகூபாகநியாயமாமாறு.

జైమినిసూత్రే॥ పంచమాధ్యాయ ప్రథమపాదేయ వాగూపాకన్యాయాధి కరణా ర్థసంగ్రహః॥ యథా॥ விடயவாக்கியம், சுருதி. విషయవాక్యం "అగ్నిహో త్రం జుహోతియవాగూంపచతి" = அக்கினிஹோத்திரத்தை ஹோமஞ் செய்கின்றான். (యవాగూ) யவாகூ என்னும் பெயரையுடைய ஓர்வ கைக்கஞ்சியைச் சமைக்கின்றான். எறு.

(சமுசயம்)அக்கினிஹோத்திரத்தைஹோமஞ்செய்வதூஉம், யவாகூவைச் சமைப்பதூஉம், என்னு மிரண்டனுள் வைப்பு முறை, முறையானதோ? தவறியதோ? எப்பொழுது முறையா னதோ? அப்பொழுது அவ்வைப்பு முறையில் பாடத்தால் சொன்மாத்திரையில் முறையானதோ? அல்லது பொருளாலும் முறையானதோ? என்பது.

பூர்வபக்ஷம். ௲ - வது. ஆண்டுவிதிகள் அனுஷ்டான மாத் திரையில் முடிவதாதலாலேயும், ஈண்டுக்கூறியதே முறையென்ப தற்கு வேறுநியமம் = விதியில்லாமையாலும், முறை யென்பது விதிக்கப்பட்டவாறல்ல என்பது.

பூர்வபக்ஷம். உ-வது. இதற்குமேற்கூறிப்போந்த அதிகர ணங்களில், சுருதி ప్రుతిః॥ "అధ్వర్యుర్గృహపతిందీక్ష యిత్వాబ్రహ్మాణందీక్షయతి" அத்துவரிஎன்னும்இருத்துவிக்குத் தலைவனைத்தீக்ஷைசெய்வித்து பிரமாஎன்னும் இருத்துவிக்கைத் தீக்ஷைசெய்விக்கின்றான். எறு. இவ்விடத்துப் பாடமுறையே நியமமானது, என்று உடன்பட் டிருத்தலினால் இந்த அதிகரணத்தும் அந்த நியமம் நேரிடுகின்ற தாகலின் வேதத்தின் பாடமுறை யெவ்வாறிருக்கின்றதோ? அவ் வாறே பொருளனுட்டான முறையு நியமமாக விருக்க வேண்டு வது என்பது.

(சித்தாந்தம்) சுருதி. శ్రుతిః॥ "యవాగ్వా" = கஞ்சியால். எ-று. இங்ஙனம் மூன்றும் வேற்றுமைக்குரிய கருவிப்பொருளின்வந்த "ஆல்" உருபினோடுவந்த சுருதியால், கஞ்சி வேள்விக்கு கருவியான பொருள் என்று தெரியவருகின்றது ஆதலானும் கருவியாகியபொருள் முதற்கண் உண்டாகாவிடின் முடிக்கத்தக்கஹோமம்=வேள்வி, நிறைவேறாது ஆதலானும், பொருளொக்கத்தைப் பற்றி முதலிலே "யவாகூ" = கஞ்சியைப்பாகஞ் செய்துகொண்டபின்பு அக்கஞ்சியால் வேள்வித் தீயைச் செய்யவேண்டுவதாமாகலின் பாடமுறை நியமமானதல்ல என்பது.

அந்தச் சுரௌத நியாயப்படி இந்தமிருதியிலும் சந்தியாஸ்நாநம் என்னும் பாடமுறையையே சிறந்தவாகக் கொள்ளாது, அனுட்டான முறையில் "ஸ்நாநம் சந்தியா" வென்று பொருளை மாறிக்கொண்டு ஸ்நான அனுட்டானத்தை முதற்கண் செய்யவேண்டுவது. என்னை! ஸ்நானம் சுத்திக்குக் காரணமானது. அந்த சுத்தி சந்தியாவந்தனஞ் செய்தற்குத் தகுதியை உண்டாக்கின்றது. ஸ்நானஞ்செய்தவனே சந்தியாவந்தனஞ் செய்வதற்கு அதிகாரியாகின்றான். ஆதலால் சந்தியாவந்தனத்துக் காயினு முன்பாக ஸ்நாநமே செய்யத்தக்கதென் றுணர்க.

அந்தஸ்நாநம் என்னும்மொழி, அதற்காயினு முன்னர்செய்யவேண்டுங் கருமங்களை, எனவே, பிராமிமுகூர்த்தத்தில் விழித்துக்கொள்ளுகை, செய்யத்தக்க நல்ல காரியங்களை நினைத்தல் முதலியவெல்லாக் கருமங்களையும் உபலக்கணத்தால் உணர்த்துகின்றது. அங்ஙனம் யாஞ்ஞவற்கியர்கூறினர். வருமாறு.

### படுக்கைவிட் டெழுங்காலமும், செய்யத்தக்கதும்.

యాజ్ఞవల్క్యః॥ "బ్రాహ్మే ముహూర్తే చోత్థాయ చింతయేదాత్మనో హితం। ధర్మార్థకామాన్ స్వే కాలే యథాశక్తి న హాపయేత్"=பிராம்மம் என்னும் முகூர்த்தத்தில் துயிலுணர்ந்தெழுந்து = நித்திரைவிட்டெழுந்து, தனக்கு எது நன்மையானகாரியமோ? அதைமுன்னர் நினைக்கவேண்டுவது. அறம், பொருள், இன்பம், என்னும் மூன்று புருடார்த்தங்களையும் அததற்குரியகாலத்தில் அல்லது தனக்கு அனுகூலித்த காலத்திலேனும் இயன்றமட்டில் செய்து முடிக்கவேண்டுவது. அவற்றைக்கெடுத்துவிடலாகாது. எ-று. காண்க. பிராமி

என்பது விடிவதற்கு ஐந்துநாழிகைக்கு முன். இதனை உஷக் காலமென்றும் கூறப்படும். வைகறை யென்பதுமது. முகூர்த் தம்=என்பதீண்டு உரியகாலம் என்னும் பொருட்டு.

**மநு.** మనుః॥ "బ్రాహ్మే ముహూర్తే బుధ్యేత ధర్మార్థావనుచింతయేత్। కాయక్లేశాంశ్చ తన్మూలాన్వేదతత్త్వార్థమేవచ"=வைகறையி லுணர்ந்தெழுந்திருக்க வேண்டுவது. தருமத்தையும் பொருளையும் சிந்திக்கவேண்டுவது. அதனிமித்தத்தால் உண்டாகும்உழைப்பு வருத்தத்தையும் யோசிக்கவேண்டுவது. வேதத்தின் உண்மைப்பொருளையும் சிந்திக்கவேண்டுவது. எ-று. காண்க. வேதத்தின் உண்மைப்பொருளாவது, கடவுட்டிறம்.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ "బ్రాహ్మే ముహూర్తే ఉత్థాయ ధర్మమర్థం చ చింతయేత్। కాయక్లేశం తదుద్భూతం ధ్యాయేత మనసేశ్వరం" = விடியுமுன் னெழுந்து, தருமத்தையும் பொருளையும் அவற்றாலுண்டாம்தேக வுழைப்பையும் யோசிக்க வேண்டுவது. மனத்தால் ஈசுவரனைத் தியானிக்க வேண்டுவது. எ-று. காண்க.

விஷ்ணுபுராணம், విష్ణుపురాణే॥ "బ్రాహ్మే ముహూర్తే ఉత్థాయ మానసే మతిమాన్నృప। విబుధ్య చింతయేద్ధర్మ మర్థం చాప్యవిరోధినం। అపీడయా నయోః కామముభయోరపి చింతయేత్। పరిత్యజేదర్థ కామౌ ధర్మపీడాకరౌ నృప। ధర్మమప్యసుఖోదర్కం లోకవిద్విష్టమేవచ" = உதயத்துக்கு முன் எழுந்திருந்து, அறிவுடையவன் மனத்தில் உணர்ச்சியைத் திருத்தஞ்செய்து கொண்டு தருமத்தைச் சிந்திக்கவேண்டுவது. அவ்வறத்திற்கு விரோதமில்லாத பொருளையும் சிந்திக்கவேண்டுவது. அவ்வறத்திற்கும் பொருளுக்கும் கெடுதியில்லாதபடிக் காமம் = இன்பத்தையும் சிந்திக்கவேண்டுவது. தருமத்திற்குக் கெடுதியாகிய பொருளையும் காமத்தையும் ஒழிக்கவேண்டுவது. நல்லபயனைக் கொடாததாயிருந்தாலும், உலகத்திற்கு விரோதமானதா யிருந்தாலும், அது தருமமாயினும் விட்டுவிடவேண்டுவது. எ-று. காண்க. உலகு= உயர்ந்தோர்.

சூரியன் உதயமாவதற்கு முன்பு அரையாமம் (கூஅ) மூன்றேமுக்கால் நாழிகையில் இரண்டு முகூர்த்தம் இருக்கின்றன. அவற்றுள் முதலாவது பிராமமுகூர்த்தம். இரண்டாவது இரௌத்திர முகூர்த்தமாம்.

## பிராமிமுகூர்த்தத்தில் சிந்திக்கத்தக்கபொருள்விசேடம்.

பிராம முகூர்த்தத்தில் நினைக்கத்தக்க பொருள் விசேடங்களை விஷ்ணு கூறுகின்றனர். வருமாறு, విష్ణుః॥ ఉత్థాయోత్థాయబోద్ధవ్యం కిమద్యసుకృతంకృతం। తత్వంవాపి హుతంవాపి వాక్సత్యావాపిభాషితా॥ ఉత్థాయోత్థాయబోద్ధవ్యం మహద్భయముపస్థితం। మరణవ్యాధిశోకానాం కిమద్యనిపతిష్యతి. " = எழுந்தெழுந்து (நாடோறுமெழுந்து) நானென்னை புண்ணியத்தைச்செய்தேன்? இப்பொழுது நான் எந்தத்தானத்தைச் செய்தேன்? எந்த வேள்விசெய்தேன்? உண்மையாகிய வுரை எதனைக்கூறினேன். என்று தான்செய்த நற்கருமங்களை விசாரித்தறிதல் வேண்டும். மேலும், இப்பொழுது மரணமோ? நோயோ? பிறதுன்பமோ? யாதுநேருமோ? வென்று மிகவும் அஞ்சி நிற்க வேண்டுவது. எறு. காண்க.

## காலையிற்கடவுளை வழிபடுதல்.

மேலெடுத்துக் கூறப்பட்ட கூர்மபுராண வசனத்துள். "ధ్యాయాతమనసేశ్వరం" = மனத்தால் கடவுளைத் தியானிக்க வேண்டுவதென்று கூறியுள்ளனவன்றே? அவ்விடயத்தில் சிறிதுவிசேட வகைமைகளை வாமனபுராணத்துட் கூறப்பட்டது. వామనపురాణే॥ " బ్రహ్మామురారిస్త్రిపురాంతకోగ్నిర్భానుశ్శశీభూమిసుతోబుధశ్చ। గురుశ్చశుక్రస్సహభా నుజేనకుర్వంతు సర్వేమమసుప్రభాతం. " = பிரமன், விஷ்ணு, உருத்திரன், தீக்கடவுள், சூரியன், சந்திரன், அங்காரகன்=செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனியோடு அனைவரும் எனக்கு இன்று காலையினை நல்லபொழுதாக்குக. எறு. காண்க. இங்ஙனம் வைகறையெழுந்து செய்யத்தக்க தனக்கியவைகளைச் சிந்தித்தலின் வகை முற்றிற்று.

## விழித்தவுடன்நோக்கத்தக்கன நோக்கத்தகாதன.

அங்ஙனம் நல்லவைகளைச் சிந்தித்தபின்னர், சுரோத்திரியன் = வேதமோதியவன் முதலியோரைப் பார்க்கவேண்டுவது. பாவிமுதலியோரை நோக்கலாகாது. அவ்வாறு காத்தியாயனர் கூறினர். வருமாறு, కాత్యాయనః॥ " శ్రోత్రియంసుభగంగాంచ అగ్నిమగ్నిచితంతథా। ప్రాతరుత్థాయయఃపశ్యే దాపద్భ్యస్స విముచ్యతే॥ పాపిష్ఠందుర్భగం మద్యం నగ్నముత్కృత్తనాసికం। ప్రాతరుత్థాయయఃపశ్యే త్తత్కలేరుపలక్షణం " = விடியு

முன்னெழுந்து யார்? வேதமோதிய சுரோத்திரியனை, நல்லப கம் = அறுகுணச்செல்வனை, அல்லது, கடவுளை, பசுவை, வேள் வித்தீயை, சுரௌதகருமத்தால் வேள்வித்தீயைத் தேடிவைத் திருக்கும் சோமயாஜிமுதலியரை, பார்க்கின்றானோ? அவன், பீடைகளால் விடப்படுகின்றான். அவ்வுதயத்தில் பாவியை, தீக் குணங்களை யுடையவனை, கள்ளினை, நக்கமானவனை = நிருவாணி யை, மூக்கறுப்புண்டவனை, நோக்குதல் கலி=பாவத்திற்கு, ஞா பகக்குறியாம். எறு. காண்க.

அறுவகைக் குணமாவன. செல்வம், காமம் = பலிக்கத்தக்க எண்ணம், பெருமை, வீரியம், முயற்சி, புகழ். என்பனவாம், இங்ஙனம் "அமரத்துள்" காண்க. பகவன் என்னுமொழியின் பொருளைவிசாரிக்கு முகத்துச் சான்றோ ராற் கூறப்பட்ட மிருதியுள் "ఐశ్వర్యస్యసమగ్రస్య వీర్యస్యతపసశ్శ్రియః। జ్ఞాన వైరాగ్యయోశ్చైవషణ్ణాంభగఇతీరణా" என்றது. ஈசுவரத்துவம்=பிறரைநடத் தும் ஆணையுடைமை, முடிவிலா வீரியமுடைமை, தவமுடைமை, செல்வமு டைமை, ஞானமுடைமை, வைராகமுடைமை என்னு மிவ்வாறனுக்கும் பக மென்னும் பெயராம். எறு. காண்க.

"చ" என்ற அவ்வியயம் = உம்மையிடைச்சொல்லால் "దర్పణంపూర్ణ కుంభంచ దక్షిణంకరమేవచ। పూజ్యాంశ్చమంగళద్రవ్యం ప్రాతఃపశ్యేన్మహీపతిం" = கண்ணாடி, பூரணகும்பம், தனதுவலக்கை, தன்னாற்பூசிக்கப்பட்ட தாய்தந் தை ஆசிரியன் பாதம், அல்லது தேவதைவடிவம், வேதமுதலிய திருமுறை கள், வில்வம், முதலிய பூக்கள், பழவகைகள், மஞ்சள் குங்குமமுதலிய வைகள், தன்னைக்காக்குந் தலைவன் முதலிய பொருள்களையும் பார்க்கத்தக் கனவென்றுணர்த்துகின்றது.

இனி பார்க்கத்தகாத விலக்கினுள், பாவிகள் = எனவே, வேதத்தால் விலக்கப்பட்ட தொழில்களைச் செய்வோர், பூனைமுதலிய இழிசெந்துக்கள் மூக்கறுப்புண்டவன் - எனவே, உபலக்கணத்தால் காதறை = செவிடு, கண் ணறை=குருடு, ஊமை, காலிலி முதலியோரையும் கொள்க. கள், என்றதனால் அருவருப்புக்கு ஏதுவாகிய ஏனையபண்டங்களுமாம்.

## மூத்திரபுரீடங்களை யொழிக்கும்விதி.

பின்பு, மூத்திரபுரீடங்களை ஒழிக்கவேண்டுவது புரீடம்=மல ம். அங்கிரா. అంగిరాః॥ "ఉత్థాయపశ్చిమేరాత్రేతతఆచమ్యచోదకం। అంతర్ధాయతృణైర్భూమింశిరఃప్రావృత్యవాససం। వాచస్సంయమ్యయత్నేనష్ఠీవనోచ్ఛ్వాసవర్జితః। కుర్యాన్మూత్రపురీషేతుశుచౌదేశేసమాహితః" = இராவின் முடிவின்விழித்துணர்ந்தெ

மூந்தபின்பு ஆசமனம் = முக்குடிநீர்செய்து புற்களால் அல்லது உலர்ந்தசருகுகளால் பூமியை மறைத்து. ஆடையாற்றலையை மூடி வாய்பேசாது மலமூத்திரங்களை விடுங்காலத்தில் சுவாசத்தை = மூச்சினை யுள்ளிழுக்காமல் சுத்தமான வெறுவெளியில் அமைவுள்ள = கவலையற்ற மனத்தோடு மலமூத்திரங்களை விடவேண்டியது. எறு. காண்க.

## மேற்பரப்பக்கூறிய புல்வகைகூறுகின்றது.

அங்கு பரப்பத்தக்கபுல், சருகு இப்படிப்பட்டதென்பதை வசிட்டர்விளங்கக்கூறுகின்றனர். "శిరః ప్రావృత్య కుర్వీత శకృన్మూత్రవిసర్జనం। అయజ్ఞియైరనార్ద్రైశ్చ తృణైస్సంఛాద్య మేదినీం" = தலைக்கு ஆடைசுற்றி வேள்விக்குதவாது ஈரமற்ற சருகுகளால் பூமியை மறைத்து, அதன்மேல் மலமூத்திரங்களை ஒழிக்கவேண்டுவது. எறு. காண்க.

## அவற்றிற்குரிய திசைகள்.

அவ்வழி, காலபேதத்தால் திசையிதுவென்னு நியமம்யாஞ்ஞுவற்கியர் கூறினர். యాజ్ఞవల్క్యః॥ దివాసంధ్యాసుకర్ణస్థబ్రహ్మసూత్ర ఉదఙ్ముఖః। కుర్యాన్మూత్రపురీషేతు రాత్రౌచేద్దక్షిణాముఖః" = பகற்போதில் வடமுகமாயும் இராப்போதில் தென்முகமாயும், காதிற்சுற்றிய பூணநூலையுடையவனாய் மூத்திரபுரீடங்களை விடவேண்டியது. எறு. காண்க. காதுஎனவே, வலக்காது. என்க. "పవిత్రందక్షిణేకర్ణే కృత్వావిణ్మూత్రముత్సృజేత్" = என்று வேறொரு மிருதியில் தருப்பையாலமைத்த பவித்திர மிருத்தல் கூறுதலின் பூணநூலுக்கும் அதேயிடமாதல் நியாயவுடன் பாடாகின்றது. என்க.

## அக்காலத்தில்பூணநூலிருக்குமிடம்.

அங்கிரசு விகற்பவகையால் வேறுஇடத்தையுங் கூறினர். விகற்பம் = இரண்டுமுடன்பாடாதல். అంగిరాః॥ కృత్వాయజ్ఞోపవీతంతు పృష్ఠతఃకంఠలంబితం। విణ్మూత్రంతుగృహీకుర్యాద్ యద్వాకర్ణేసమాహితః" = இல்லறத்தான்கவலையற்றவனாய் கழுத்தில்=நிவீதம் மாலையாகத் தொங்குகின்றபூணநூலை முதுகின்புறமாக விட்டு மலமூத்திரங்களைக் கழிக்கவேண்டும். இல்லையேல் செவிக்காயினும் சுற்றிவிடலாம். எறு.காண்க.

அங்கு செவிக்குப் பூணூல் சுற்றுவதென்பது ஒரே ஆடையுடையவன் விடயம். அங்ஙனம். சாங்கியாயனர் கூறினர். సాంఖ్యాయనః॥ "యద్యేకవస్త్రోయజ్ఞోపవీతంకర్ణేకృత్వా మూత్రపురీషోత్సర్గంకుర్యాత్" = ஒரே ஆடையுடையவனா யிருக்கின் பூணூலைச் செவிக்குச் சுற்றி மலமூத்திரங்களைக் கழிக்கவேண்டும். எறு. காண்க.

## அக்கருமத்திற்குரியதிசைகளை வகுக்கின்றது.

இங்ஙனங் கூறியதிசையின்னியமம் ஒருதன்மையவாக நிற்பதல்ல அங்கியரால் வேறுவகையாக விசாரிக்கப் படுதலின். என்னை? யமஸ்மிருதி, యమః॥ ప్రత్యఙ్ముఖస్తు పూర్వాహ్ణే పరాహ్ణే ప్రాఙ్ముఖస్తథా। ఉదఙ్ముఖస్తుమధ్యాహ్నే నిశాయాందక్షిణాముఖః" = உச்சிப் போதுக்கு முன்பாக மேற்குமுகமாயும் அதற்குமேல் மாலைவரையில் கிழக்குமுகமாயும் உச்சிப்போதில் வடக்குமுகமாயும் இரவில் தெற்குமுகமாயும் மலமூத்திரங்களைக்கழிக்க வேண்டுவது. எறு. காண்க.

இங்ஙனம் சிலர் விகற்பம்=இருவகைத் தன்மையையும் பற்றிநிச்சயிக்கின்றனர். அதுமரபன்று. சாமானிய நூலுக்கும் விசேடநூலுக்கும் ஒன்றற்கொன்று இருவேறு வகைப்படுதல் ஆகாது. ஈண்டு, பகன்முழுவதும் வடமுகமென்று கூறிய யாஞ்ஞவற்கியர் மொழி சாமானியவிதியாக விருக்கின்றது. யமனுடைய வசனமோ? அவ்வடக்குமுக முடைமையைச் சுருக்கி உச்சிப்போதில் மாத்திரம் வடக்குமுகமாக விருத்தல்வேண்டும் என்று கூறியதால் அது விசேடவிதியாக விருக்கின்றது எனில்?

அங்ஙனமாயின் அவ்விகற்பம் வேண்டா; யமன் கூறியவாறு துணிவாம் எனில்? அதுவு முறைமையன்று. என்னை? கிழக்குமுகமாயும் மேற்குமுகமாயும் இருத்தல் கூடாதென்று மறுப்பதற்கே. தேவலர், దేవలః॥ "సదైవోదఙ్ముఖఃప్రాతః స్సాయాహ్నేదక్షిణాముఖః"=எப்பொழுதும் பகல் வடக்குமுகமாயும் சாயுங்காலம் தெற்முகமாயும் என்று, கூறியிருத்தலின்.

அவ்விடத்தில், "ప్రాతః" = காலையில், "సాయాహ్నే" = சாயுங்காலையில், என்றஇவ்விரண்டு மொழிகளுக்கும் மநுவசனத்தைப்பற்றிக்காலைஎனவேபகலெனவும் சாயுங்காலம்எனவேஇரவு

எனவும் கருத்தாகக் கூறவேண்டும். இனிமனு கூறியதாவது, మనుః॥ "మూత్రోచ్చారసముత్సర్గం దివాకుర్యాదుదఙ్ముఖః। దక్షిణాభిముఖో రాత్రౌ సంధ్యయోస్తుయథాదివా" = பகலில் வடக்குமுகமாயும், இரவிற் றெற்குமுகமாயும் சந்திகளில் பகலைப்போலவும் இருந்து மலமூத்திரங்களைக் கழிக்கவேண்டுவது. எ-று. காண்க.

இங்ஙனம் கூறின் யமன்கூறியிருக்கும் மேற்குமுகம் கிழக்குமுகம் என்றசொல்லுக்கு என்னை வகைமைஎனில்? மேற்குமுகமாயிரு என்றதற்குக்கிழக்குமுகமாகாதெனவும் கிழக்குமுகமாயிருஎன்றதற்கு மேற்குமுக மாகாதெனவும் கருத்தென்க. இதனால் மேற்குமுகமும் கிழக்குமுகமும் எப்பொழுதும் ஆகாவென்றவாறாயிற்றன்றோ? இங்ஙனம் கூறுவதே முற்கூறிய யாஞ்ஞாவற்கிய மனுவின் வாக்கியத்திற்கு ஒத்தவாறாக முடிகின்றது. இங்ஙனம் கூறிய விக்கருத்து மஹாபாரதத்துள். మహాభారతే॥ "ప్రత్యాదిత్యంప్రత్యనలం ప్రతిగాంచప్రతిద్విజం। మేహంతియేచపథిషు తేభవంతిగతాయుషః" = சூரியனுக்கு எதிரில், தீக்குஎதிரில், பசுவினுக்கு எதிரில், வேதியனுக்குஎதிரில், வழிகளில்யார்? மறைவிடங்களால் வெளிப்படத்தக்க மலங்களை விடுகின்றார்களோ? அவர்கள், தங்கள்வாழ்நாளையிழந்து விடுகின்றவர்களாயிருக்கின்றார்கள். எ-று. காண்க.

## மலங்களைப்பந்திக்கலாகாது என்பது.

இனி தேவலராலும்கூறப்பட்டது. దేవలః॥ "ఉచ్చారమూత్ర మాచరేన్నిత్యం సంధ్యాసుపరివర్జయేత్" = மலமூத்திரங்களை நாடோறும் விடத்தக்க பழக்கத்தினைச் செய்யவேண்டுவது. சந்திகாலங்களில் மலமூத்திரங்களை ஒழிக்கலாகாது. எ-று. இது, மலமூத்திர பந்தமில்லாதவன் விடயம். அவற்றை யொழிக்காமலே பந்தப்பட்டவனோ எனில்? சந்திகாலமே யாயினும் விடலாம். "నవేగంధారయేన్నాప రుద్ధక్రియాంకుర్యాత్" = இதுஸ்மிருதியுமா. இதனுள். வேகத்தைத்தடுத்திருக்கலாகாது என்றுகூறியிருத்தலின்.

இனிமனுவாற் கூறப்பட்டது. మనుః॥ "ఛాయాయామంధకారేవా రాత్రావహనివాద్విజః। యథాసుఖముఖఃకుర్యా త్ప్రాణబాధభయేషుచ" = நிழலில், இருளில், பிராணனுக்குத் துன்பமுண்டாகத் தக்கபயத்தில், இருப்பதையொழித்து, சுகவகையாகப் பகலேனும் இரவேனும் இருபிறப்பாளன் தான் எத்திசையாக விருந்து மலங்க

ழிக்கக் கூடுமோ? அத்திசையாகச் செய்யலாம். எ-று. இதுவும். பனி, இருண்முதலியவற்றால் இது இத்திசையென்று தெரிந்து கொள்ளமாட்டாதவன் விடயம். (எனவே, திசை தெரிந்தவன் மேற் கூறிய நியமந் தப்பலாகா தென்பதுகருத்து).

## இனி இடநியமம்.

இடநியமம் விஷ்ணுபுராணத்திற் கூறப்பட்டது. విష్ణుపురాణె॥ "నైరృత్యామిషువిక్షేప మతీత్యాభ్యధికంబుధః। దూరాదావసథాన్మూత్రం పురీషంచస మాచరేత్." = யாரும் வாசஞ்செய்யாத தூரத்திலே நைருதி= தென்மேற்குத் திசையில் எறிந்த அம்புபோய் விழுந்தூர அளவு கடந்துபோய்மூத்திரபுரீடங்களை விடவேண்டுவது. எ-று. காண்க.

ஆபத்தம்பர். ఆపస్తంబః॥ "దూరాదావసథాన్మూత్ర పురీషెకుర్యాద్దక్షిణాం దిశమపరాంవా" = சனங்கள் வசிக்குமிடத்திற்கு தெற்கேனும் மேற்கேனும் சென்று, மலமூத்திரங்களை விடவேண்டும். எ-று. காண்க.

மனு. మనుః॥ దూరాదావసథాన్మూత్రం దూరాత్పాదావసేజనం। ఉచ్ఛిష్టాన్న నిషేకంచ దూరాదేవసమాచరేత్" = ஊருக்குத் தூரமாய்ச் சென்று மல மூத்திரங்களைக் கழிக்கவேண்டுவது. தூரமாகவே சென்று கால் அலம்பவேண்டுவது. எச்சிற் சோறுமுதலியவற்றைத் தூரத்தே யெறியவேண்டுவது. எ-று. காண்க.

## செய்யத்தகாதவிடம்.

மநு. మనుః॥ నమూత్రంపథికుర్వీత నభస్మనినగోవ్రజె। నఫాలకృష్టెనసతిలంనచిత్యాంనచపర్వతే। నజీర్ణదేవాయతనె నవల్మీకెకదాచన। నసత్త్వేషుగర్తేషు నగచ్ఛన్నాపిసంస్థితః। ననదీతీరమాసాద్య నచపర్వతమస్తకే। వాయ్వగ్నివిప్రమాదిత్యమపశ్యం స్తథైవగాః। నకదాచనకుర్వీత విణ్మూత్రస్యవిసర్జనం" = நடக்கும்வழியில் மூத்திரம் விடலாகாது. சாம்பரின்மீது மாகாது. பசுக்கள்கட்டுமிடமாகாது. ஏரால்உழுதஇட மாகாது. நீரோடுகூடிய இடமாகாது. பொறுக்கிச்சேர்த்து வைத்த குப்பலின்மீதுமாகாது. போர்செய்துவைத்திருக்கும் எவ்வகைப் பண்டத்தின் மீதும் அல்லது மிகவுயர்ந்த மேட்டிடத்திலு மாகாது. பழங்கோயிலிலாகாது. புற்றிலாகாது. பொதுவம்பலமாகிய விடங்களிலாகாது. வெட்டுவித்த

குழியிலாகாது. நடக்கும்பொழுதாகாது. வாகனமுதலியவற்றுளேறியிருக்கும் பொழுது மாகாது. ஆற்றங்கரையிலாகாது. மலையுச்சியிலாகாது. காற்றுக்கெதிரி லாகாது. நெருப்புக்கெதிரி லாகாது. வேதியனுக்கு எதிரிலாகாது. சூரியனெதிரி லாகாது. சந்திரனெதிரி லாகாது. நீரைப்பார்த்திருந்திருக்க லாகாது. பசுக்களைப்பார்த்திருக்க லாகாது. ஆகலின், எப்போதும் மலமூத்திரங்களை அவ்வகை விலக்குகளிற் கழிக்கலாகாது. எ-று. காண்க.

இயமன். యమః॥ "తుషాంగారకపాలాని దేవతాయతనానిచ। రాజమార్గ శ్మశానాని క్షేత్రాణిచఖలానిచ। ఉపరుద్ధోనసేవేత ఛాయావృక్షంచతుష్పథే। ఉదకం చోదకాంతంచపంథానంచవిసర్జయేత్। వర్జయేద్వృక్షమూలాని చైత్యశ్వభ్రబిలానిచ"= உமி, கரி, நெருப்பு, ஓடு, எலும்பு, கோயில், முறிந்து பழுதுபட்டவனங்கள், பெருவீதி = இராஜமார்க்கம், சுடுகாடு = மயானம், க்ஷேத்திரம் = எல்லைகோலிய விடம், நெற்களமுதலிய களம், நீழலுடையமரம், நாற்றெருக்கூடு மிடம் = சதுக்கம், நீர், நீர்க்கரை, வழி, படிகள், மரத்தினடி, சோலைகள், தோப்புகள், குளங்கள், பொதுத்தெற்றிகள், செந்துக்களின் வளைகள் இவைகளிலும் "చ" என்றதனால் மனுடர்முதலிய சீவர்கள்சஞ்சாரத்திற்கு உபயோகத்திற்கும் ஆகத்தக்க மற்றெல்லாவிடங்களிலும் மூத்திர புரீடங்களைக் கழிக்கலாகாது. "చ" என்றதனால் அப்படிப்பட்ட இடங்களைக் கெடுக்கலாகாது எனினும் அமையும். மலமூத்திரங்களைப் பந்தித்துக்கொண்டு இருப்பவன் அப்படிப்பட்ட இடங்களிலும் நிற்கலாகாது. எ-று. காண்க.

ஹாரீதர். హారీతః॥ "ఆహారంతురహఃకుర్యాద్విహారంచైవసర్వదా। గుప్తాభ్యాంయుజ్యతేలక్ష్మీః ప్రకాశేహీయతేశ్రియా" = ஆகாரம் = எவ்வகை உண்டியையும், விஹாரம் = மலமூத்திரமுதலிய எவ்வகை ஒழிப்பையும், எப்பொழுதும் பிறர்அறியாவகை பாராதவகையாகவே செய்யவேண்டும். அதனால் திரு = செல்வம் வந்தடையும். அக்காரியம் வெளிப்பட்டால் செல்வம்ஒழிந்துபோம். எ-று. காண்க.

ஆபத்தம்பர். ఆపస్తంబః॥ "నచసోపానాన్మూత్రపురీషేకుర్యాత్"= ஏறியிறங்கும்படிகளின்மேல் மூத்திர புரீடங்களை யொழிக்கலாகாது. எ-று. காண்க.

இயமன். యమః॥ “ప్రత్యాదిత్యంనమేహేత నపశ్యేదాత్మనశ్శకృత్। దృష్ట్వా సూర్యంనిరీక్షేత గామగ్నింబ్రాహ్మణంతథా” = சூரியனுக்கு எதிராக மறைவிடத்துச்சலமலங்களை யொழிக்கலாகாது. ஒருக்கால் பார்த்தால் அதற்குப் பிராயச்சித்தமாகச் சூரியனை, ஆன் இனத்தை, வேதியனைப் பார்க்கவேண்டுவது. எறு. காண்க.

அதன்பின் மண்கட்டி முதலியவற்ருல், குதத்தையும் குறியையும் தொடைத்துஇடதுகையால்ஆண்குறியைப்பற்றிக்கொண்டுமேலெழுந்திருக்க வேண்டும். அங்ஙனம் பரத்துவாஜர் கூறினர். భరద్వాజః॥ “యథాప్రకృష్టలోష్టమాత్రం లోష్ఠకాష్ఠతృణాదినా। ఉదస్తవాసా ఉత్తిష్ఠే ద్దృఢంవిధృతమేహనః” =மண்ணாங்கட்டி, விறகு, உதவியற்றசெத்தை முதலியவற்றினல் மலமூத்திர சேடங்களைக் கூடியவளையிற் போக்கி உடை = வஸ்திரத்தை மேலெடுத்துக் கொண்டு ஆண்குறியை நன்ருகப் பிடித்துக்கொண்டு அவ்விடம்விட்டு எழுந்து போகவேண்டுவது. எறு. காண்க. (இங்கு, மண், செத்தை முதலியவற்றை மலத்தின்மேலிட்டு எழுந்திருக்க வேண்டுவ தெனக் கூறுவாருமுளர்).

மூத்திரபுரீடங்களை யொழித்தல்விதி முற்றிற்று.

---

## சௌசம்=சுத்திவிதி.

பின்பு சௌசத்தை யாஞ்ஞவற்கியர் கூறினர். యాజ్ఞవల్క్యః॥ “గృహీతశిశ్నశ్చోత్థాయ మృద్భిరభ్యుద్ధృతైర్జలైః। గంధలేపక్షయకరం శౌచంకుర్యాదతంద్రితః” = ஆண்குறியைப் பற்றிக்கொண் டெழுந்து, சோர்வு சோம்ப லில்லாமல் மிருத்திகைகளினாலும் = மண்ணினாலும், நீர் நிலைகளினின்றும் மேலே கொண்டு வரப்பட்ட நீரினாலும், நாற்றமுழுதும்போமளவும் பூசிச்சௌசம்=கழுவுதலாகிய சுத்தியைச் செய்யவேண்டுவது. எறு. காண்க.

தேவலர். దేవలః॥ ఆశౌచాన్నోత్సృజేచ్ఛిశ్నం ప్రస్రావోచ్చారయోరపి। గుదంహస్తంచనిర్మృజ్యా న్మృదంభోభిర్ముహుర్ముహుః” = சௌசகருமம் வரையில், ஒழுகிக்கொண் டிருந்தாலும், சிதறிக்கொண் டிருந்தாலும்

பற்றிய ஆண்குறியைவிடாமல், குதத்தையும், கையையும், மண்ணிலும் நீரிலும் அடிக்கடிதேய்த்துக் கழுவுதல் வேண்டும். எ று. காண்க.

தக்ஷர். దక్షః॥ "తీర్థశౌచంనకుర్వీత కుర్వీతోద్ధృతవారిణా" = நீர்நிலையிற்றனே சௌசம் செய்யலாகாது; மேலேகொண்டுவரப்பட்ட நீரினல் செய்துகொள்ள வேண்டுவது. எ று. காண்க.

அங்ஙனம் நீரை வெளியிலெடுத்துவர முடியா விடத்திற் செய்யும் வகையாவது, "రత్నిమాత్రాజ్జలాత్తీర్థే కుర్యాచ్ఛౌచమనుద్ధృతే। పశ్చాత్తచ్ఛోధయేత్తీర్థ మన్యథాహ్యశుచిర్భవేత్" = நீரைமேல் கொண்டுவராவழி ஓர் ஓட்டை=அரைச்சாணளவு சலத்தில் சுத்தஞ்செய்து கொள்ளவேண்டுவது. அதனினும் ஆழமாகிய நீரினுட்சென்று செய்தால் அந்நீர் நிலையைச் சோதிக்கவேண்டுவது. (எனவே நீரையெல்லாம் இறைத்துச் சுத்தஞ் செய்ய வேண்டுவது). இல்லையேல் அசுசியாம். எ று. காண்க.

## சௌசத்திற்குரியமண்.

சௌசத்திற்குத் தக்க மண்ணினை இயமன்வகுத்தார். యమః॥ "ఆహరేన్మృత్తికాంవిప్రః కూలాత్ససికతాంతథా" = அந்தணன் சலக்கரையினின்று சிறிதுமணலோடு கூடியிருக்கு மண்ணைக் கொள்ள வேண்டுவது. எ று. காண்க.

அதன்விசேடத்தை மரீசிகூறினர். మరీచిః॥ "విప్రే శుక్లా తు మృచ్ఛౌచే రక్తా క్షత్రే విధీయతే। హరిద్రవర్ణా వైశ్యే తు శూద్రే కృష్ణా ప్రకీర్తితా" = வேதியனுக்கு வெள்ளைமண், வேந்தனுக்குச் சிவப்புமண், வைசியனுக்கு மஞ்சணிறமண், சூத்திரனுக்குக் கறுப்புமண், சௌசத்திற்கு உபயோகிக்க வேண்டுவது. எ று. காண்க.

இங்ஙனம்கூறிய மண்கிடையாவழி கிடைத்தமண்ணைப்பெற்றுக்கொள்ளலாம். அங்ஙனம் மனுகூறினர். మనుః॥ "యస్మిన్దేశే తు యత్తోయం యాచ యత్రైవ మృత్తికా। సైవ తత్ర ప్రశస్తా స్యాత్ తయా శౌచం విధీయతే." = எந்தநாட்டில் எந்தநீர் எந்தமண்கிடைக்குமோ? அந்தநாட்டில் அந்தநீரும் அந்தமண்ணுமே சௌசத்திற்கு விதிக்கப்பட்டிருக்கின்றது. எ று. காண்க.

## விலக்காகியமண்.

விஷ்ணுபுராணத்தில் சௌசத்திற்கு உதவாத மண்களைக் குறிக்கப்பட்டது. வருமாறு. విష్ణుపురాణే॥ "వల్మీకామూషికోత్ఖాతాం మృదమంతర్జలాత్తథా। శౌచావశిష్టాం గేహాచ్చ నాదద్యాల్లేపసంభవాం। అంతఃప్రాణ్యవపన్నాంచ లోహాత్ఖాతాంసకర్దమాం." = புற்றுமண், எலிவளைமண், நீருள்ளேகிடந்த மண், வேறுஒருவர்சௌசம்செய்துமிருந்தது, மனைச்சுவர்க்கணுள்ள மண். ஒன்றின்மேற் பூசியமண், எறும்பு முதலிய சிற்றுயிர்கள் கிடக்குமண், பொன்னிரும்பு முதலிய ஆகரங்களிலாயினும் இரும்புமுதலிய வுலோகங்களா லாயினும் தோண்டியெடுத்தமண், சேற்றுமண், முதலிய வெல்லாம் சௌசத்திற்குப் பயன்படாதனவாம். எறு. காண்க. ஆகரம் = உலோகவருக்கங்கள் விளையும் பிலம்.

நீரினுட்கிடந்ததாகாதென்றது கிணறு, குளம், கால்வாய், எரி, இவைகளை யொழித்து மற்றநீரின்கணுள்ள மண்ணைக்குறித்தது. இதனை இயமன் கூறினர். యమః॥ "వాపీకూపతటాకేషు నాహరేద్బాహ్యతోమృదం। ఆహరేజ్జలమధ్యాత్తు పరతోమణిబంధనాత్" = வெட்டிய கால்வாய், கிணறு, குளம், ஏரி யிவைகளில் வெளிமண்ணைக் கொண்டுவரலாகாது. நீருள்ளே முழத்திற்கு அப்புறஞ் சென்று உள்ளிருக்கும் மண்ணினைக் கொண்டுவந்து, வெளியிலே சௌசம்செய்துகொள்ள வேண்டுவது. எறு. எனவே, அவைதூர்ந்து போகாதபடி உதவிசெய்யவேண்டு மென்றபடி.

தேவலர், இன்னுஞ் சிலவற்றைக் கூடாதென்று விலக்கினர். வருமாறு, దేవలః॥ "అంగారతుషకీటాస్థి శర్కరావాలుకాన్వితాం। వల్మీకోపరితోయాన్తః కుడ్యాఘాతశ్మశానజాం। గ్రామబాహ్యాంతరాళస్థాం వాలుకాంపాంసురూపిణీం। ఆహృతామన్యశౌచార్థ మాదదీతనమృత్తికాం" = கரியோடு கூடியது, உமியோடு கூடியது, புழுக்களோடு கூடியது, எலும்போடு கூடியது, பருக்கைக்கற்களோடு கூடியது, மணல்மிகுதியாகக்கூடியது, புற்றின்கணுள்ளது, நீரிலுள்ளது, சுவர்க்கட்டியாயுள்ளது, சுடுகாட்டுள்ளது, ஊருக்கு உள்ளிலாயினும் புறம்பிலாயினும் நிலம் சமனாகும்படியிட்டுள்ளது, புழுதியாகி யிருக்குமது. சிறுமணலோடுகூடியது, வேறொருவர் சௌசத்தின் பொருட்டுக் கொடுவந்து

வைத்திருப்பது ஆகிய இந்த மண்ணெல்லாம் சௌசத்திற்கு ஆகாது. எறு. காண்க.

### சௌசத்துக்குரியகை.

சௌசம் இன்னகையினுற் செய்யவேண்டும் என்பதைத் தேவலர் கூறினர். దేవలః॥ "ధర్మజ్ఞ ద్దక్షిణంహస్త మధశ్శౌచేనయోజయేత్। తథా చవామహస్తేన నాభేరూర్ధ్వంనశోధయేత్" = தருமத்தை யறிந்தவன் தொப்புளின்கீழ் அலம்புவதற்கு வலக்கையை உபயோகிக்க லாகாது. அவ்வாறே அந்தவுந்திக்குமேல் இடதுகையா லலம்புதல் கூடாது. எறு. காண்க.

### சௌசத்திற்குரியதிசை.

பிரமாண்ட புராணத்துட் டிசை நியமம் கூறப்பட்டது. బ్రహ్మాండపురాణే ॥ ఉద్ధృత్యోదకమాదాయ మృత్తికాంచైవవాగ్యతః। ఉదఙ్ముఖోదివాకుర్యా ద్రాత్రౌచేద్దక్షిణాముఖః." = தண்ணீரை மேலே மொண்டு கொண்டு மண்ணையும் கொண்டு வாய்பேசாது பகல் வடமுகமாயும், இரவு தென்முகமாயும் இருந்து சௌசம் செய்யவேண்டுவது. எறு. காண்க.

### மண்ணிட வேண்டிய அளவை.

மண்ணிட வேண்டிய கணக்கினைச் சாதாதபர் கூறினர். శాతాతపః॥ "ఏకాలింగేకరేసవ్యే తిస్రోద్వేహస్తయోర్ద్వయోః। మూత్రశౌచం సమాఖ్యాతం పురీషేద్విగుణంభవేత్" = ஆண்குறிக்கு ஒருமுறை, இடதுகைக்கு மூன்றுவிசை, பின் இரண்டுகைகளுக்கும் இரண்டிரண்டுதரம், மண்ணிட்டு அலம்புவதுமூத்திரங் கழித்தலுக்குச்சௌசமென்று கூறப்பட்டது. புரீடங்கழித்தலுக்குஅதனின்இரட்டிப்புச் செய்ய வேண்டுவது. எறு. காண்க.

மனுவும்கூறினர். మనురపి॥ "ఏకాలింగేగుదేతిస్రస్తథైకత్రకరేదశ। ఉభయోస్సప్తదాతవ్యా మృదశ్శుద్ధిమభీప్సతా। ఏతచ్ఛౌచంగృహస్థస్య ద్విగుణం బ్రహ్మచారిణః। వానప్రస్థస్యత్రిగుణం యతీనాంతుచతుర్గుణం" = ஆண்குறிக்கு ஒருக்கால், குதத்திற்கு முக்கால், இடக்கைக்கு பத்துவிசை பின் இருகைக்கும் எவ்வேழுதரம் மண்ணிட்டுக்கழுவுதல். சுத்தியைவிரும்பினவனுல்செய்யத்தக்கது. இந்தச்சுத்தியில்லறத்தானுக்குக்கூறப்

பட்டது. பிரமசாரிக்கு இரட்டிப்பு, வானப்பிரத்தனுக்கு மும்மடி, சந்நியாசிக்கு நான்மடங்கு அதிகமாம். எ-று. காண்க.

**போதாயனரும்,** బోధాయనః॥ "పంచాపానేమృదోయోజ్యా వామపాణేతథాకరే। తిస్రస్తిస్రఃక్రమాద్యోజ్యా స్సవ్యేశౌచంచికీర్షతః" = நன்முகச் சுத்திசெய்ய வேண்டுமென்னும் மிச்சையுடையவன், குதத்திற்குஐந்துமுறை அவ்வாறே யிடக்காலுக்கும் இடக்கைக்கும், வலக்கைக்கும் வலக்காலுக்கும் மும்மூன்றுவிசை மண்ணிட வேண்டுவது. எ-று. காண்க. குதத்திற்கு ஐந்து, இடக்கால் கைகளுக்கு மும்மூன்று, என்று அவ்வசனத்திற்குப் பொருளாகின்றது.

வசிட்டரும், వశిష్ఠః॥ "పంచాపానేదశైకస్మి న్నుభయోస్సప్తహస్తయోః। మృత్తికాఃపాదయోస్సప్త లింగేద్వేపరికీర్తితే" = குதத்திற்கு ஐந்து, இடக்காலுக்குப்பத்து, பின் இருகைக்கும் எவ்வேழு, இருகாலுக்கும் எவ்வேழு முறைமண்ணிட்டுக் கழுவவேண்டும்.

விருத்தவசிட்டர். వృద్ధవశిష్ఠః॥ "పంచాపానేదశైకస్మి న్నుభయో స్సప్తమృత్తికాః। పాదయోశ్చతథాలింగే ద్వేమృత్స్నేపరికీర్తితే। ఏకస్మిన్వింశతిర్హస్తే ద్వయోర్జ్ఞేయాశ్చతుర్దశ" = குதத்திற்கு ஐந்து, இடக்காலுக்குப் பத்து, பின்னிரண்டு கால்களுக்கு மெவ்வேழு, ஆண்குறிக்கு இரண்டு, இடக்கைக்கு இருபது, பின்னிரு கைக்கும் பதினான்குபதினான்கு மண்ணிட்டு அலம்புக. எ-று. காண்க. இங்ஙனம் கூறிய கணக்கின் மிகுதி பிரமசாரியைக் குறித்தது. "ద్విగుణంబ్రహ్మచారిణః" = என்றதாதலின்.

## இன்னவனுக் கித்தனைசௌசம் என்பது.

ஆதித்தியபுராணம், ఆదిత్యపురాణే॥ "స్త్రీశూద్రయోరర్ధమానం ప్రోక్తంశౌచంమనీషిభిః। దివాశౌచస్యనిశ్యర్ధం పథిపాదంవిధీయతే। ఆర్తఃకుర్యాద్యథాశక్తి శక్తఃకుర్యాద్యథావిధి" = மாதருக்கும் சூத்திரருக்கும் இல்லறத்தானுக்குக் கூறியவற்றுளரைப்பங்கே போதும். ஈண்டு, கூறிய வெல்லாம் பகற்போதைக்கு. இராவிலே யாவர்க்கும் அரையரைப்பங்கேபோதும். துன்பமடைந்தவனுக்குச் சத்தியுள்ள வரையில் ஆம், சத்தியுள்ளவன் விதிப்படி முற்றுஞ் செய்யவேண்டுவது. எ-று. காண்க.

## ஒழிபு.

போதாயனர். బోధాయనః॥ "దేశంకాలంతథాత్మానం ద్రవ్యంద్రవ్యప్రయోజనం। ఉపపత్తిమవస్థాంచ జ్ఞాత్వాశౌచంప్రకల్పయేత్" = இடத்தின் ஒற்றுமை, காலத்தின் ஒற்றுமை, மனத்தின் ஒற்றுமை, தொட்ட அசுசிப் பொருளின் தரம், இனியடையும் பொருட் பயனுடைய பகுதி, தனக்கு உண்டாயிருக்கும் சத்தி, தானிருக்கும் நிலைமை, இவற்றையெல்லாம் யோசித்துத்தக்கபடி, சௌசம்செய்துகொள்ளவேண்டுவது. எறு காண்க.

விருத்தபராசர். వృద్ధపరాశరః॥ "ఉపఃష్టస్తువిణ్మూత్రె కర్తుంయస్తునవిన్దతి। సకుర్యాద్యదిశౌచంతు స్వస్యశౌచస్యసర్వదా." = மூத்திரபுரீடங் கழிப்பதற்காக இருந்து சௌசம்செய்யு முறைதெரியாது விரைவில் சௌசம்செய்துகொண்டு வரலாகாது. அவ்வாறுசெய்தால் தன்னுடைய சௌசமேதனக்குப் பயத்தை விளைவிக்கும், எறு. அல்லது, மூத்திரபுரீடங்களை ஒழித்தவன் சுத்திசெய்து கொள்வதற்குச்சென்று தெரியாமலே மலமூத்திரங்களைக் கழித்தவிடத்திலே நின்றால் எல்லாவற்றிற்கும் ஒரே சுத்தியாகின்றதல்லவோவென்று அவ்விடத்திலேயே செய்துகொள்ளலாகாது என்று சிலர் பொருள் கொள்கின்றனர். இனி "సకుర్యాద వరంశౌచం" என்ற பாடமாயின் விதிதெரியாமற்செய்த சௌசம் சிறந்ததல்ல. என்று பொருள்கொள்க.

### சௌசம் செய்யுமுறை.

பாரதம். அனுசாசனிக பருவத்தில் சௌசம் செய்யும் முறையைக் குறிப்பிக்கப்பட்டது. అనుశాసనికే॥ శౌచంకుర్యాచ్ఛనైర్ధీరో బుద్ధిపూర్వమసంకరం। వివృష్టశ్చయథానస్య ర్యథాచోరుంనచస్పృశేత్। బుద్ధిపూర్వంప్రయత్నేన యథానైవస్పృశెత్స్వజా = அறிவுடையோன் தீவிரப்படாது பொறுமையோடும் சௌசம்செய்துகொள்ளவேண்டுவது. மனமறிந்து, ஒருசௌசம் மற்றொன்றோடு கலக்கும்படி, செய்யலாகாது. நீர்த்துளிகளை மேற்றெறிக்கச் செய்துகொள்ளலாகாது. பீசத்தைத்தொடலாகாது.குறியைத்தொடலாகாது.எறு. காண்க.

தக்ஷர். దక్షః॥ "షడన్యానఖశుద్ధౌతు దెయామృచ్ఛౌచెప్సునామృదః। నశౌచం వర్ధధారా భీరాచరేత్తుక్వాచన" = சௌசம் நன்றாகமுடிக்க வேண்டிய விருப்பமுடையவன் நகங்களைச் சுத்திசெய்து கொள்வதற்கு

ஆறு முறை மண்ணிடுக. எப்பொழுதும் மழைத்தாரைநீரில் சௌசம்செய்து கொள்ளலாகாது.

**மரீசி.** మరీచిః॥ "త్రిసృభిశ్శోధయేత్పాదౌ శోధ్యాగుల్ఫౌత్రిరేవచ। హస్తౌ ద్వౌమణిబంధాచ్చ లేపగంధాపకర్షణం। యథావిధిక్రతేశౌచె గంధశ్చేన్నాపగచ్ఛతి" = பாதங்களுக்கு மும்மூன்று, கணைக்கால்களின் பக்கங்கட்கு மும்மூன்று, கைகளுக்கு மும்மூன்று, முழங்கைவரையிலு மும்மூன்று முறைமண்ணிட்டுக் கழுவுதல்வேண்டும். இவ்விதிப்படி சுத்தி செய்தவழியுந் தீயநாற்றம் போகாவழி அதுபோமளவும் ஒவ்வொருவிசையும் மண்ணிட்டுக் கழுவவேண்டும்-எ-று. காண்க.

**மனு.** మనుః॥ "యావన్నాపైత్యమేధ్యాక్తో గంధోలేపశ్చతత్కృతః। తావన్మృద్వారిదేయంస్యా త్సర్వాసుద్రవ్యశుద్ధిషు" = அசுத்தமாகிய தீநாற்றத்தின் பரமாணுசம்பந்தம் ஒழிகிறவரையில் எல்லாத்திரவியத்திலும் மண்ணொடு கலந்தநீரிட்டே வரவேண்டும். எ-று. காண்க.

திருத்தியில்லாதவழித் தேவலர். దేవలః॥ "యావత్తుశుద్ధింమన్యేత తావచ్ఛౌచంవిధీయతే। ప్రమాణంశౌచసంఖ్యాయా నశిష్టైరుపదిశ్యతే" = சுத்தியாயிற்றென்று மனதிற்குத் திருத்தியுண்டாம் வரையில் சௌசம் செய்யவேண்டுமென்று விதிக்கப்படுகின்றதே யல்லாது இத்தனை தடவையே செய்யவேண்டுவது என்று அந்தணரால் சௌசக் கணக்கு உணர்த்தப்படுகின்றதில்லை. எ-று. காண்க.

பிதாமகன். పితామహః॥ "నయావదుపనీయంతేద్విజాశ్శూద్రాస్తథాంగనాః। గంధలేపక్షయకరం శౌచమేవంవిధీయతే = பிரமக்ஷத்திரிய வைசியருமாகிய இருபிறப்பாளருள் எதுவரையிலும் உபநயனஞ் செய்யப்படுகின்ற தில்லையோ? அப்படிப்பட்ட சிறுவர்க்கும் சூத்திரர்க்கும் மாதர்க்கும் கெட்ட நாற்றத்தின் சம்பந்தம் போக்கத்தக்க சௌசம் விதிக்கப்படுகின்றது. எ-று. இவ்விடத்துச்சூத்திரர்மாதர் என்பதுமணம்புரியாத அவ்விருபிறப்பாளர் கன்னியரைக் குறித்தது. என்னை? உபநயநமில்லாத சிறுவரோடு கூட்டி யுடனெண்ணப் பட்டமையின். இதனைச் சாஹசரியமென்ப.

## சௌசமண்ணினளவை.

**சாதாதபர்.** శాతాతపః॥ "ఆర్ద్రామలకమాత్రాస్తు గ్రాసాఇందు వ్రతేస్థితాః। తథైవాహుతయస్సర్వా శ్శౌచార్థేయాశ్చమృత్తికాః" = உலராத நெல்

லிக்காயளவு சாந்திராயணவிரதத்தில் அன்னத்தின் கவளத்தி னுடைய அளவையா இருக்கின்றது. அவ்வாறே எல்லாஹோமத் துள்ளும் (சரு) அந்நத்தி னளவுமாகின்றது. சௌசத்திற்குமண் ணும்அவ்வகையாகவே நெல்லிக்காயளவாகின்றது. எ-று. காண்க.

இனி தக்ஷராலும் அங்கிராவாலும் வேறுஅளவு கூறப்பட் டது. దక్షాంగిరసౌ॥ "అర్థప్రస్ఫృతిమాత్రాతు ప్రథమామృత్తికాస్మృతా। ద్వితీయా చతృతీయాచ తదర్ధేనప్రకల్పితా। ప్రథమాప్రసృతిర్జ్ఞేయా ద్వితీయాతుతదర్థికా। తృతీయామృత్తికాజ్ఞేయా త్రిభాగకరపూరణా." "ప్రసృతి" = சேரங்கை. அரைச்சேரங்கை முதற்றடவை மண் இருக்கவேண்டுவது. இரண்டாவது மூன்றுவது அதிலரையிருக்க வேண்டுவது. இந்த அளவு தாழ்ந்தஅளவாம். முதல்மண் மூழுச்சேரங்கை யளவா யிருக்க வேண்டுவது. இரண்டாவதிலரை மூன்றுவது ஒரு சேரங்கையில் மூன்றிலொருபங்கு அளவையா யிருக்கவேண்டுவது. இவ் வளவுமிக்கது. எ-று. காண்க.

மேற்கூறிய எல்லா அளவைகளிலும் தாழ்ந்த அளவையையே முதலில் உபயோகிக்க வேண்டும். அங்ஙனமதனுல் நீநாற்றம் போகாவழி, மிகுத்தஅளவை யதை உபயோகிக்க வேண்டுவது.

## சௌசத்தைக்குறைக்கலாதென்பது.

குறைந்த அளவையதும் வேண்டாமலே கெட்டநாற்றமொழிந்திருக்கினும் நூலோர் விதித்தவாறு செய்தலே வேண்டும். எனவே, குறைக்கலாகா தென்பது கருத்து.

அங்ஙனம் தக்ஷர்கூறினர். దక్షః॥ "న్యూనాదికంన్నకర్తవ్యం శౌచె శుద్ధిమభీప్సతా। ప్రాయశ్చిత్తేనప్రూయేత విహితాతిక్రమేకృతే." = சௌசத்தில் சுத்தியை விரும்புவோன் விதியைக் குறைக்கலாகாது. அதிகரித்தலையும் செய்யலாகாது. சாத்திரவிதியைக் கடந்தால் அந்த தோஷத்திற்கு வேறுகழுவாய் செய்துகொண்டு சுத்தனுகவேண் டிவரும். எ-று. காண்க.

## மனஞ்சுத்தமாகாவழி சௌசத்தால் சுத்தமில்லை.

இவ்வாறு, கூறப்பட்ட சௌசத்தைச் செய்தவழியும் எண் ணம் சுத்தமில்லாவழி அவனுக்குச் சுத்தியேயில்லை என்று வியாக்கிரபாதர் கூறினர். వ్యాఘ్రపాదః॥ "శౌచంతుద్వివిధంప్రోక్తం బాహ్య

మాభ్యన్తరంతథా। మృజ్జలాభ్యాంస్మృతంబాహ్యం భావశుద్ధిస్తథాంతరం। గంగాతోయెన కృత్స్నేన మృద్భారైశ్చనగోపమైః। ఆమృత్యోశ్చాచరన్శౌచం భావదుష్టోనశుధ్యతి ”= சௌசம் இருவகைப்படும். புறத்ததொன்று, அகத்தது ஒன்று, என. மண்ணினாலும் நீரினாலும் செய்யப்படுவது புறத்தது. மனத்தைச் சோதித்துக் கொள்வது அகத்தது. கங்கையிலுள்ள நீரெல்லாம் சொரிந்துசாணத்தோடு மண்ணின் குப்பல்களைச் சேர்த்துச் சாமளவுஞ் சௌசாசாரத்தை அனுட்டிக்கினும் கெட்டஎண்ணத்தையுடையவன் சுத்தன் ஆவதேயில்லை. எறு. காண்க.

## சௌசம்செய்யவேண்டிய நிமித்தம்.

இருவகைப்பட்ட சௌசமும் எல்லாக் கருமங்களையும் செய்யத்தக்க அதிகாரத்தை யடைவதற்குக் காரணமாயுள்ளன என்று உடன்பாட்டு முகத்தாலும் எதிர்மறை முகத்தாலும்தக்ஷர்குறிப்பிக்கின்றனர். దక్షః॥ శౌచెయత్నస్సదాకార్య శ్శౌచమూలోద్విజస్స్మృతః। శౌచాచారవిహీనస్య సమస్తానిష్ఫలాఃక్రియాః. ” = எப்பொழுதும் சௌசத்தில் முயற்சியுள்ளவனா யிருக்கவேண்டுவது. இருபிறப்பாளன் சௌசத்தையே மூலமாக வுடையவன் என்று கூறப்படுகின்றான். சௌசவொழுக்க மில்லாதவனுக்கு எல்லாக்கருமமும் வீணாம். எறு. காண்க. (இருபிறப்பாளத் தன்மைக்குச் சௌசமே காரணமானது. எனவே, சௌசமுள்ளவழி இருபிறப்பாளத் தன்மையுள்ளது. என்பது அந்வயம். சௌசமில்லாவழி கருமத்திற்குப் பயனில்லையென்பது வியதிரேகம்).

சௌசவிதி முற்றிற்று.

---

# வாய்கழுவுதலின் வகை.

ஆபத்தம்பர். ఆపస్తంబః॥ “ ఏవంశౌచవిధింకృత్వా పశ్చాద్గండూషమాచరేత్। మూత్రేరేతసివిట్సర్గే దంతధావనకర్మణి। భక్ష్యాణాంభక్షణెచైవ క్రమాద్గండూషమాచరేత్। చతురష్టద్విషడ్ద్వ్యష్ట గండూషైర్షోడశైస్తథా। ముఖశుద్ధిం ప్రకుర్వీత హ్యాస్యధాదోషమాప్నుయాత్। పురస్తాద్దేవతాస్సర్వా దక్షిణెపితరస్తథా। పశ్చిమెమునిగంధర్వా వామెగండూషమాచరేత్। గండూషసమయెవిప్ర స్తర్జన్యాదంతశోధనం। కుర్వీతయదిమూఢాత్మా రౌరవంనరకంవ్రజేత్ ” = இங்ஙனம் சௌச விதியை

முடித்து மேல்வாய்கழுவுதல் செய்யவேண்டும். மூத்திரங் கழித்தல், சுக்கிலத்தை ஒழித்தல், புரீடத்தை விடுத்தல், பல்விளக்கல், சிற்றுண்டி தின்னல், இவ்வைந்து தொழிலிலும் முறையே நான்கு, எட்டு, பன்னிரண்டு, பதினாறு, பதினாறுவிசைவாயில் நீர் விட்டுக்கொப்பளித்து உமிழவேண்டும். இவ்வாறுசெய்தால் முகசுத்தியாம். வேறுவகையாற்செய்தால் குற்றம் வரும். எல்லாத் தேவரும் எதிரிலிருக்கின்றனர்; வலப்பக்கத்தில் பிதிர்தேவர்கள் இருக்கின்றனர்; பின்புறத்தில் முனிவரும் கந்தருவரும் இருக்கின்றனர்; ஆதலின்இடப்புறம் வாய்நீரையுமிழவேண்டுவது. வாய்கொப்பளிக்கும்பொழுதுதெரிந்துகொள்ளாமல், "தர்ஜநி"=சுட்டுவிரலால், பற்களைச்சோதித்தால் இரௌரமென்னு நரகத்தையடைவன். எ-று. காண்க. "వక్త్రేతాలనం"=என்பது பாடமாயின், சுட்டுவிரலைப்பல்லடிக்கண்ணேவைத்தால்எனப்பொருள்கொள்க.

வாய்கழுவல்விதி முற்றிற்று.

---

## ஆசமனவிதி.

விருத்தபராசரர். వృద్ధపరాశరః॥ "కృత్వాథశౌచం ప్రక్షాళ్య పాదౌహస్తౌ చమృజ్జలైః। ప్రబద్ధశిఖకచ్ఛస్తు ద్విజఆచామమాచరేత్। కృతోపవీతంసవ్యాంసె వాఙ్మనఃకాయసంయతః." = மண் நீர் இவற்றால் கைகால் கழுவிச் சுத்தி செய்துகொண்டபின்பு, குடுமியை முடிந்து, உடுத்த ஆடையின் கச்சையைத் திருத்திக்கொண்டு, போர்த்தஉத்தரீயத்தைஉபவீதமாக இடத்தோளிலிட்டு, மாலையாகத் தொங்கிய பூணநூலைக் கிரமப்படி இடத்தோளிலிட்டு, வாய்பேசாது, மனத்தை ஒருவழிப் படுத்தி, உடம்பு நேரே நிற்கச்செய்து, இருபிறப்பாளன் ஆசமனம்=முக்குடிநீர்க் கருமத்தைச் செய்தல் வேண்டும். எ – று. காண்க.

யாஞ்ஞுவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "అంతర్జానుశ్శుచౌదేశ ఉపవిష్టఉదఙ్ముఖః। ప్రాగ్వాబ్రాహ్మేణతీర్థేన ద్విజోనిత్యముపస్పృశేత్" = வடக்குமுகமாக அல்லது கிழக்குமுகமேயாக விருந்துகொண்டு, இரண்டுமுழந்தாளினடுவே கைகளிருக்கும்படி வைத்துக்கொண்டு, இருபிறப்

பாளன் நாடோறும் பிரமதீர்த்தத்தினால் ஆசமித்தல் = முக்குடி நீர்குடித்தல் செய்யவேண்டும். எ-று. காண்க.

கௌதமர். గౌతమః॥ "శుచౌదేశ ఆసీనోదక్షిణబాహుం జాన్వన్తరేకృత్వా యజ్ఞోపవీత్యా మణిబంధనాత్పాణిం ప్రక్షాళ్యవాగ్యతో హృదయంస్పృశంస్త్రిశ్చతుర్వాప ఆచామేత్పాదౌచాభ్యుక్ష్య ఖానిచోపస్పృశేచ్ఛీర్షణ్యాని మూర్ధనిచదధ్యాత్" = சுத்தமானவிடத்தி லிருந்து வலத்தோளினை முழங்காலுள்விட்டுக்கொண்டு, பூணூலை முறைப்படி திருத்திக்கொண்டு, மணிக்கட்டுவரையில் வலக்கரத்தை அலம்பிக்கொண்டு, வாய்பேசாது, மார்பை யிடக்கையாற் றங்கி, மூன்றுமுறை யல்லது நான்குமுறை நீரை ஆசமிக்கவேண்டுவது. பாதங்களின்மீதும் நீரைத் தெளித்துக்கொள்ளல்வேண்டும். தலைப்புறத்துள்ள பொறிகளை= (எனவே, கண், மூக்கு, செவி, யாம்) நீராற்றொட்டுத்தொடைத்தல்வேண்டும், உச்சிமேல் நீராற்றொடைத்தல்வேண்டும். எ-று. காண்க. மூன்று அல்லது நான்கு என்றவிகற்பம், செய்துகொள்வோன் விருப்பத்தின்பாலது.

## தீர்த்தவிலக்கணம்.

தீர்த்த பேதங்களை யாஞ்ஞவற்கியர் பிரித்துரைக்கின்றனர். యాజ్ఞవల్క్యః॥ "కనిష్ఠదేశిన్యంగుష్ఠ మూలాన్యగ్రంకరస్యతు। ప్రజాపతిపితృబ్రహ్మ దేవతీర్థాన్యనుక్రమాత్" = "கனிஷ்டகம்" = சுண்டுவிரல், "தர்ஜனி" = சுட்டுவிரல், "அங்குஷ்டம்" = பெருவிரல் ஆகிய இம்மூன்றி னடிவாரமும், கைந்நுதியுமாகிய இவைகள் இடமாக வருவது முறையே, பிரஜாபதி, பிதிர், பிரமன், தேவர், என்னும் இந்நால்வர் தீர்த்தங்களாம். எ-று. காண்க.

இதுவே சங்க லிகிதர்களால் விளங்கக் கூறப்பட்டது. శంఖలిఖితౌ॥ "అంగుష్ఠమూల స్యోత్తరతః ప్రాగగ్రాయాం రేఖాయాం బ్రాహ్మతీర్థం, ప్రదేశిన్యంగుష్ఠయోరంతరా పిత్ర్యం, కనిష్ఠికాకరతలయోరంతరా ప్రాజాపత్యం, పూర్వేణాం గుళిపర్వణాందైవం" = பெருவிர லடியினுக்கு இடதுபுறத்துக் கிழக்கு நீண்டுள்ள இரேகையின் அடியில் வருநீர் பிராமதீர்த்தம். பெருவிரலுக்கும் சுட்டுவிரலுக்கு நடுவுள்ள சந்தியில் வருந்தீர்த்தம் பிதிர்தீர்த்தம். அங்கைக்கும் சுண்டுவிரல்=கடைசிவிரலுக்கு நடுவேவருவது பிராஜாபதி தீர்த்தம். விரல்களின்

இறைகளுக்குக்கிழக்கு=நுதியால் வருநீர் தெய்வதீர்த்தம். எ-று. காண்க.

## ஆசமனதீர்த்தவிதி.

ஆசமனத்திற்குத் தக்க தீர்த்தத்தை சங்கர்விசேட மாகக் கூறுகின்றனர். శంఖః॥ "అద్భిస్సముద్ధృతాభిస్తు హీనాభిః ఫేనబుద్బుదైః। వహ్నినాచతప్తాభి రక్షారాభిరుపస్పృశేత్" = மேலெடுக்கப் பட்டதும், நுரை குமிழி யில்லாததும், தீயாற் சுடப்படாததும், உப்புமுதலிய சுவையோடு கலவாததும் ஆகிய சலத்தினுல் ஆசமிக்க வேண்டுவது. எ-று. காண்க

யாஞ்ஞுவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "అద్భిస్తుప్రకృతిస్థాభిర్హీనాభిః ఫేనబుద్బుదైః। హృత్కంఠతాలుగాభిశ్చ యథాసంఖ్యం ద్విజాతయః। శుద్ధ్యేరంస్త్రీచశూద్రాశ్చ సకృత్స్పృష్టాభిరంతతః"=இயற்கைச்சுத்தமா யிருப்பதும் நுரை குமிழி யற்றிருப்பதும் இதயம், கண்டம், தாலு என்னுமிடங்களைப் பொருந்தத்தக்கதாக விருக்கத்தக்கதுமாகிய சலத்தினுல் முறையே இருபிறப்பாளர் மூவரும் சுத்தியை யடைகின்றனர். மாதர் சூத்திரர் ஒருக்காலே தொடப்பட்ட நீரினுற்சுத்தராகின்றனர். எ-று. காண்க.

மனு. మనుః॥ "హృద్గాభిః పూయతే విప్రః కంఠగాభిస్తుభూమిపః। వైశ్యోద్భిః ప్రాశితాభిస్తు శూద్రస్స్పృష్టాభిరంతతః" = மாரளவுஞ் செல்லத்தக்க நீரினுல் வேதியனும், கண்டத்தளவு நனையத்தக்கதால் அரசனும், வாயில்பட்ட அளவுடையதால் வைசியனும், தொடப்பட்ட அளவுநீரினுற் சூத்திரனும் பரிசுத்தராகின்றனர். எ-று. காண்க.

பிரசேதர். ప్రచేతాః॥ "అనుష్ణాభిరఫేనాభిః పూతాభిర్వస్త్రచక్షుషా। హృద్గతాభిరశబ్దాభి స్త్రిశ్చతుర్వాద్విరాచమేత్"=சுடுகையில்லாததும், நுரையில்லாததும் கண்ணுலும் வஸ்திரத்தாலும் சோதிக்கப்பட்டதும், மாரளவுஞ் சென்றதும், வாயால் எவ்வகைச்சத்தமுமாகாததும் மூன்றுவிசையேனும் நான்கு விசையேனுமாகக் கொள்ளப்பட்டதுமாகிய நீரினுல் இருமுறை ஆசமிக்கவேண்டுவது. எ-று. காண்க.

மேற்கூறியவற்றிற்கு ஒழிபு யாஞ்ஞுவற்கியராற் கூறப்பட்டது. యాజ్ఞవల్క్యః॥ తత్రాపనిష్టితేనాపి శుద్ధిరుక్తామనీషిణాం। ఉదకేనాతురాణాం

చ తథోక్తైర్నోష్ణపాయినాం. " = அந்த ஆசமன விடயத்தில் நன்குணர்ந்தநூலோர்க்கு அவ்வளவு மரபினோடு மில்லாதசலத்தினாலும் சுத்தியுண்டாம். வெந்நீரையே குடிக்கத்தக்க நிலையி லுள்ளவர்கட்கு = நோயாளர்க்கு வெந்நீரினால் ஆசமன சுத்தியுண்டாம். எ-று. காண்க.

## அந்நீரளவையும்வகைமையும்.

ஆசமனத்தின் பொருட்டு நீரைக்கொள்ளும் வகையையும் அளவையும் பரத்துவாசர் கூறினர். భారద్వాజః॥ "ఆయతంసర్వతశ్చకృత్వా. గోకర్ణాకృతివత్కరం। సంహృతాంగుళినాతోయం గృహీత్వాపాణినాద్విజః। ముక్త్వాంగుష్ఠకనిష్ఠేన శేషేణాచమనంచరేత్। మాషమజ్జనమాత్రాస్తు సంగృహ్యత్రిఃపిబేదపః" இருபிறப்பாளன் தன்கையை விரியத்திறந்து பசுவின்காதுபோல வுருவம் அமைய விரல்களை நெருங்கச்சேர்த்துச் சலத்தை வாங்கிக்கொண்டு அதிகமான சலத்தைக் கடைவிரல்பெருவிரற்சந்தில் செல்லவிடுத்து உழுந்து முழுகும் அவ்வளவே நீர்வைத்துக்கொண்டு மூன்றுவிசைகுடிக்கவேண்டுவது. எ-று. காண்க. கை. என்றதனை வலக்கையெனக்கொள்க. என்னை? "త్రిఃపిబేద్దక్షిణేనాపః" வலக்கையால் முக்கால்நீர் குடித்தல்வேண்டும் என்று புராணங் கூறுதலின்.

## ஆசமனத்துள்தொடுமிடம்=அங்கஸ்பரிசம்.

முக்குடிநீர்க்கருமம் முடிந்தபின்பு செய்யத்தக்க கருமத்தினியலைத் தக்ஷர் கூறுகின்றனர். దక్షః॥ "సంహృత్యాంగుష్ఠమూలేన ద్విః ప్రమృజ్యాత్తతోముఖం। సంహతాభిశ్చతసృభిః పూర్వమాస్యముపస్పృశేత్॥ అంగుష్ఠేన ప్రదేశిన్యా ఘ్రాణంస్పృష్ట్వాత్వనంతరం। అంగుష్ఠానామికాభ్యాంతు చక్షుశ్శ్రోత్రేతతః పరం। కనిష్ఠాంగుష్ఠయోర్నాభిం హృదయంతుతలేనవై। సర్వాభిశ్చశిరః పశ్చాద్బాహూచాగ్రేణసంస్పృశేత్." =விரல்களைச் சேரவைத்து பெருவிரலடியால் இருகால் வலமாக வாய்துடைத்தல் வேண்டும். பின் பெருவிரலொழிய மற்றையநான்கு விரலைச் சேர்த்துமுகத்தை வாய்மூடித்தொடவேண்டியது. பின்புபெருவிரலையும் சுட்டுவிரலையும் சேர்த்து மூக்கினிருபுறமும் தொடவேண்டும். பெருவிரலையும் அநாமிகை=அயல்விரலையும்சேர்த்து நுதியால் கண்களையும் செவிகளையும் தொடவேண்டும். பெருவிரலையும் கடைவிரலையும்சேர்த்து உந்தி=தொப்புளைத் தொடவேண்டும். அங்கையால் மார்பைத்

தொடவேண்டும். ஐந்துவிரலையும்சேர்த்து அங்கைபடாதவகை யாய் உச்சியைத்தொடவேண்டும். ஐந்துவிரலையுஞ்சேர்த்து நுதி யால் தோள்களைத் தொடவேண்டும். எ-று. காண்க. நுதி=நுனி.

விருத்தசங்கர், వృద్ధశంఖః॥ "తర్జన్యంగుష్ఠయోగేన స్పృశేన్నాసాపుట ద్వయం। మధ్యమాంగుష్ఠయోగేన స్పృశేన్నేత్రద్వయంతతః। అంగుష్ఠస్యానామికయా యోగేనశ్రవణంస్పృశేత్। కనిష్ఠాంగుష్ఠయోగేన స్పృశేత్స్కంధద్వయంతతః। నాభించ హృదయంతద్వత్స్పృశేత్పాణితలేనతు। సంస్పృశేచ్ఛతతశ్శీర్ష మయమాచమనేవిధిః."= சுட்டுவிரலையும் பெருவிரலையும் சேர்த்து மூக்கி னிருதுளைகளை யும் தொடவேண்டும். பெருவிரலையும் நடுவிரலையும் சேர்த்து இரண்டு கண்களையும் தொடவேண்டும். பெருவிரலையும் அயல் விரலையும் சேர்த்து இரண்டு செவிகளையும் தொடவேண்டும். பெருவிரலையும் கடைவிரலையும் சேர்த்து இரண்டுதோள்களையும் தொடவேண்டும். உந்திச்சுழியையும் இதயத்தையும் அவ்வாறே தொடவேண்டும். பின்புசென்னியை=தலையுச்சியை, அங்கையாற் றொடவேண்டும். இது ஆசமனத்துள் விதியாம். எ-று. காண்க.

இவ்வாறே ஏனையரும் வேறுவிதமாக விரித்துக்கூறுகின்ற னர். ஆண்டு யார்யார் "சாகைகள்" எவ்வாறிருக்கின்றதோ? அவ ரவர் அவ்வாறுசெய்யவேண்டும். சாகை=வேதநூற்பிரிவு.

## ஆசமனத்திற்குநிமித்தம்.

ஆசமனம் செய்யவேண்டிய நிமித்தங்களை மனு கூறினர். మనుః॥ "కృత్వామూత్రంపురీషంవా ఖాన్యాచాంత ఉపస్పృశేత్। పీత్వాపోధ్యేష్యమాణ శ్చ వెదమశ్నంచసర్వదా" = மூத்திரத்தைக் கழித்தாலும் புரீடத்தைக் கழித்தாலும் சுத்தஞ்செய்து கொண்டபின்பு கையால் முக்குடி நீர் குடித்து உறுப்புக்களை உறுத்தல் = தொடல்வேண்டுவது. வேதம் ஓதப்போகின்றவனும் வேள்வித்தீயை ஓம்ப = வளர்க்கத், தொடங்குவானும்முதலில்முக்குடிநீரைக்குடித்துப்பின்றொடங்கு வதே எப்போதைக்கும் விதியாக விருக்கின்றது. எ-று. காண்க.

கூர்மபுராணத்துள். కూర్మపురాణే "చండాలమ్లేచ్ఛసంభాషే స్త్రీశూద్రో చ్ఛిష్టభాషణే। ఉచ్ఛిష్టంపురుషంస్పృష్ట్వా భోజ్యంచాపితథావిధం। ఆచమేదశ్రుపాతేవా లోహితస్యతథైవచ। అగ్నేర్గవామథాలంభే స్పృష్ట్వాప్రయతమేవవా। స్త్రీణామథాత్మసంస్పర్శే నీవీంవాపరిధాయచ." = கடைஞன், இழிஞன் இவர்களோடுஒத்

துவசனித்தாலும், மாதர் சூத்திரர் எச்சிலுடையவர்களோடு பேசினாலும், எச்சிலுடையாரைத் தொட்டாலும், எச்சிலந் நத்தைத் தொட்டாலும், கண்ணீர் சொரிந்தாலும், உதிரம் வெளிப்பட்டாலும், நெருப்பையும் பசுவையும் தொடினும், பிணத்தைத் தொட்டாலும், மாதருடம்பு தன்னுடம்பிற்படினும், கரிய ஆடைபோர்த்தாலும் ஆசமனஞ்செய்யவேண்டும். எ-று. காண்க. சூத்திரர் எச்சிலுடையாரோடு பேசுதல் என்றது ஜபமுதலிய காலத்திற் பேசினால் ஆசமிக்கவேண்டுவதென்று கொள்க.

பதுமபுராணம். పద్మపురాణే॥ "చండాలాదీన్జపే హోమే దృష్ట్వాచామే ద్ద్విజోత్తమః"—வேதியன் ஜபஞ்செய்யும்போதும் ஹோமஞ் செய்யும்போதும் தீண்டப்படாதகடைஞர்முதலியோரைப்பார்த்தால் ஆசமிக்கவேண்டுவது. எ-று. காண்க.

மனு మనుః॥ "సుప్త్వాక్షుత్వాచభుక్త్వాచ నిష్ఠీవ్యోక్త్వానృతంవచః। రథ్యాం శ్మశానంచాక్రమ్యఆచామేత్ప్రయతోపిసన్। అధోవాయుసముత్సర్గేఆక్రందేక్రోధసంభవే। మార్జాలమూషకస్పర్శే ప్రహాసేనృతభాషణే। నిమిత్తేష్వేషుసర్వేషు కర్మకుర్వన్నుపస్పృశేత్" = உறங்கினாலும், தும்மினாலும், உண்டாலும், மலமூத்திரங்களைக் கழித்தாலும், பொய்பேசினாலும், தெருவிற் சென்றாலும், மயானத்தை மிதித்தாலும், தவறுதிருக்கினும் ஆசமிக்கவேண்டுவது. அபானவாயு பறிந்தாலும், அழுதாலும், கோவம் உண்டானாலும், பூனை எலிகளைத்தொடினும், மிகுத்துநகைத்தாலும், பொய்யே பேசினாலும், இவ்வெல்லா நிமித்தங்களிலும் நற்கருமங்களைச் செய்யத் தொடங்குவோன் ஆசமனஞ்செய்து நீரினால் தொடுமுறுப்புக்களைத் தொடவேண்டுவது. எ-று. காண்க.

இயமன். యమః॥ "ఉత్తీర్యోదకమాచామే దవతీర్యతథైవచ। ఏవంస్యాత్తేజసాయుక్తో వరుణేనసుపూజితః." = நீரில் இழியும்போதும் ஏறும்போதும் ஆசமிக்கவேண்டுவது, அங்ஙனஞ் செய்தால் வருணனால் உபசரிக்கப்பட்டு ஒளியோடுகூடினவனாவான் எ-று. காண்க.

ஹாரீதர். హారీతః॥ "నోత్తరేదనుపస్పృశ్యజలం"—ஆசமனஞ் செய்யாமல் நீரிலிருந்து வெளிவரலாகாது. எ-று. காண்க.

வசிட்டர். వశిష్ఠః॥ "క్షుతేనిష్ఠీవనేసుప్తే పరిధానేశ్రుపాతనే। పంచస్వేతేషుచాచామే చ్ఛ్రోత్రంవాదక్షిణంస్పృశేత్"—தும்முதல், மல மூத்திரங்களை

விடுதல், படுத்தல், ஆடையை உடுத்தல், கண்ணீர் சொரிதல், ஆகிய இவ்வைந்திடத்தும் ஆசமித்தல் வேண்டும். இல்லையேல் வலக்காதையாவது தொடவேண்டுவது. எ-று. காண்க.

ஆசமனஞ் செய்வதற்கு முடியாவழி வலக்காதைத் தொட வேண்டுவது என்றுகொள்க. அங்ஙனம்மார்க்கண்டேயபுராணத்துட் கூறப்பட்டது. మార్కండేయపురాణే॥ "సంమ్యగాచమ్యతోయేన క్రియాః కుర్వీతవై శుచిః। దేవతానామృషీణాంచ పితౄణాంచైవ యత్నతః। కుర్వీతాలంభనంవాపి దక్షిణశ్రవణస్యవా। యథావిభవతోహ్యేత త్పూర్వభావతతఃపరం। నవిద్యమానేపూర్వోక్తే ఉత్తరప్రాప్తిరిష్యతే" = நன்றாக நீரால் ஆசமனஞ்செய்து, சுத்தனாய்க் கருமங்களைச் செய்யவேண்டுவது. முயற்சியோடு தேவகருமம் இருடிகருமம் பிதிர்கருமம் செய்யவேண்டுவது. வலக்காதையேனும் தொட்டுக் கொள்ளலாம். இதுவலிவுள்ளபடி முதலிற் செய்யவேண்டுவது. முதற்கூறிய தில்லாவழி இரண்டாமுறை கூறியது உண்டாகின்றது. எ-று. காண்க.

வலக்காதைச் சிறப்பிப்பது."ప్రభాసాదీనితీర్థాని"=என்றதுமுதலியவிதிகளால் மேற்கூறப்படும். அல்லது, போதாயனரால்சொல்லப்பட்டதனையேனுங் கொள்க. భోధాయనః॥ నీవీంవిస్రుజ్యపరిధాయోప స్పృశేదార్ద్రంతృణంగోమయం భూమింవాసంస్పృశేత్.=உடுத்த ஆடையின்கட்டு அவிழ்த்தாலும், ஆடையை உடுத்தாலும், ஆசமிக்கவேண்டுவது, பசும்புல்லையாவது, ஆவின்சாணத்தையாவது, நிலத்தையாவது தொடவேண்டுவது. எ-று. காண்க.

## ஆசமனமிருவிசைசெய்தற்குக்காரணம்.

முப்பத்தறுவர்மதம். என்பதனுள். இருகாலாசமித்தலுக்கு நிமித்தம் கூறப்பட்டது. షట్త్రింశన్మతే॥ "హోమేభోజనకాలేచ సంధ్యయోరుభయోరపి। ఆచాంతఃపునరాచామే జ్జపహోమార్చనాదిషు"=நித்த ஹோமம், உண்டி, இருசந்தி வந்தனம், ஜெபம், நைமித்திக ஹோமம், பூசை, முதலியவற்றுள் ஆசமனஞ் செய்தவன் மீட்டும் ஆசமிக்கவேண்டுவது, எ-று. காண்க.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "స్నాత్వాపీత్వాక్షుతేసుప్తే భుక్త్వారథ్యాప్రసర్పణే। ఆచాంతఃపునరాచామే ద్వాసోపిపరిధాయచ" = நீராடினாலும், நீர்குடித்தாலும், தும்மினாலும், படுத்தாலும், உண்டாலும், தெரு

விற்சென்றாலும், ஆடையுடுத்தாலும், ஆசமித்தவன் மீட்டும் ஆசமிக்கவேண்டும். எ-று. காண்க.

**போதாயனர்.** బోధాయనః॥ "భోజనే హవనే దానే ఉపహారప్రతిగ్రహే। హవిర్భక్షణకాలేచ తద్విరాచమనంస్మృతం" = உண்டல், ஹோமஞ்செய்தல், தானஞ்செய்தல், காணிக்கையைப் பெறுதல், அவிசுபுசித்தல் இவைகளில் இரண்டுமுறை ஆசமித்தலை விதித்தது. எ-று. காண்க.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ "ప్రక్షాళ్యహస్తౌపాదౌచభుంజానోద్విరుపస్పృశేత్। శుచౌదేశేసమాసీనో భుక్త్వాచద్విరుపస్పృశేత్। ఓష్ఠౌవిలోమకౌస్పృష్ట్వా వాసోఽపిపరిధాయచ। రేతోమూత్రపురీషాణా ముత్సర్గేఽయుక్తభాషణే। ష్ఠీవిత్వాధ్యయనారంభే కాసశ్వాసాగమేతథా। చత్వరంవాశ్మశానంవా సమాగమ్యద్విజోత్తమః। సంధ్యయోరుభయోస్తద్వ దాచాంతోఽప్యాచమేత్తతః" =கைகால் கழுவினும், உண்ணச்செல்லும்பொழுதும், இருவிசை ஆசமிக்கவேண்டும். பரிசுத்தமானவிடத்திலிருந்து புசித்தபின்பும் இருமுறை ஆசமிக்க வேண்டும். உரோமமில்லாத இதழ்களைத் தொடினும், ஆடையுடுக்கினும், சுக்கிலம் - மூத்திரம் - புரீடங்களை விட்டாலும், பசையற்ற வார்த்தை கூறினாலும், உமிழ்ந்தாலும், வேதமோதத்தொடங்கினாலும், காசசுவாசம் வரினும், மனைக்கு வெளிமுற்றத்திற் சென்றாலும், சுடுகாட்டிற்குச் சென்றாலும், இரண்டுசந்திகளிலும், சிறந்த விருபிறப்பாளன் பின்னர் ஆசமனஞ் செய்யவேண்டும். எ-று. காண்க. சுஷ்கபாணம்=பசையற்றவார்த்தை எனவே, வன்சொல்.

## ஆசமனத்திற்குமறுப்பு.

ஆசமனம் செய்யலாகாத விடயத்தைப் போதாயனர் கூறினார். దంతవద్దంతలగ్నేషు దంతసక్తేషుధారణే। అస్థితేషుచనాచామే త్తేషాంసంస్థానవచ్ఛుచిః=பற்களைப்போலவே யட்பல்லோடு ஒட்டிக்கிடக்கும் கறைகளும், புசிக்குங்காற்பற்சந்தில்சேர்ந்திருந்தவைகளும் அங்கு நில்லாமல் ஒழியினும் ஆசமிக்க வேண்டுவதில்லை. அவற்றிற்கு உடம்பின்கண்ணே யியற்கையாக வுள்ளதுபோலவே சுத்தமுண்டாயிருக்கின்றது. எ-று. காண்க. "దంతలగ్నం"=பற்களில் சேர்ந்து எடுக்கக்கூடுமாயுள்ளது. "దంతసక్తం"=பற்களிற்சேர்ந்தபின் எடுக்கமுடியாதது. "అస్థితేషు" = நில்லாதன; எனவே சேர்ந்த நுண்பொருள் ஆங்குநில்லாது விழுந்தன என்றுகொள்க.

## உண்டபின்பற்சோதித்தல்.

அதனைற்றேவலரும் கூறினர். దేవలః॥ భోజనేదన్తలగ్నాని నిర్హృత్యాచమనంచరేత్। దన్తలగ్నమసంహార్యం లేపంమన్యేతదన్తవత్। నతత్రబహుశఃకుర్యాద్యత్నముద్ధరణేపునః। భవేచ్చాశౌచమత్యర్థం తృణవేధాద్ర్వణేకృతే" = உண்ணும்பொழுது பற்களிற் சேர்ந்துகொண்டவற்றைப் பின்னெடுத்தால் ஆசமிக்கவேண்டுவது. பற்களிற்சேர்ந்து எடுக்கக்கூடாததா யுள்ளதைவருந்தி யெடுக்கலாகாது. அதனைப் பூச்சுப் பூசப்பட்ட பல்லாகவே யுணரத்தக்கது. அதையெடுக்கும் விடயத்தில் விசேடம் முயற்சி செய்யலாகாது. துரும்பால் எடுக்கத் தொடங்கும் வழி காயமுண்டாமாயின் விசேடம் அசுத்தமுண்டாம். எ-று. காண்க.

மனு மనుః॥ "దన్తవద్దన్తలగ్నేషు జిహ్వాస్పర్శకృతేనతు। పరిచ్యుతేషుతస్థానాన్నిగిరన్నేవతచ్ఛుచిః" = பற்களைப்போலவே அவற்றேடு கலந்திருப்பவைகளில் நாவினலே தடவுதலால் நழுவிவந் ததனை விழுங்கினல் உண்ணப்பட்ட வுண்டியை விழுங்கிய வாறு போலுஞ் சுத்தனேயன்றி யசுத்தனல்ல ஆதலின் நீராடவேண்டுவதில்லை. எனவே ஆசமித்தல் மாத்திரையிற் செய்யவேண்டுமென்றவா றுயிற்று. (இந்தவசனம் மனுமிருதியில், பிரக்ஷிப்தபாடம் = சிலபிரதிகளிற் பாட பேதமாக வழங்குகின்றது. ஆயின் மனுவியாக்கியானம் "குல்லூகபட்டீயத்தில்" இவ்வசனத்தில் "నిగిరన్నేవతచ్ఛుచిః" = என்றபாகம் கௌதமவசனமென்று குறிக்கப்பட் டிருக்கின்றது.

மேற்கூறியது விழுங்கியதன்சுவை தெரியாவிடத் தென வுணர்க. அங்ஙனம்சங்கர்கூறினர். శంఖః॥ "దన్తవద్దన్తలగ్నేషు రసవర్జనమన్యతో జిహ్వాసంస్పర్శనాత్" = பற்களைப்போலவே யப்பற்க ளோடு சேர்ந்திருப்பவைகளுக்கு நாவினலசைக்குமிடத்து வெளிப்பட்டதை சுவைதெரியாமல் விழுங்கினல் வேறுவகை (எனவேநீராடல் வேண்டா முக்குடிநீருண்டு என்றபடி) எ-று. காண்க.

## எச்சிலல்லாதன.

பழங்கள், கிழங்குகள், முதலியவற்றில் சாதாதபர் விசேடத்தைக்கூறினர். శాతాతపః॥ "దన్తశ్లేషఫలేమూలే భుక్తస్నేహావశిష్టకే। తాంబూలేచేక్షుదండేచ నోచ్ఛిష్టోభవతిద్విజః" = பழவகைகள், கிழங்குவகை

கள், வெற்றிலைப்பாக்கு, கரும்பு, இவற்றை மெல்லும்போது பற்களில் சேர்ந்துகொண்டனவற்றைத்தொட்டாலும், புசித்துக்கையலம்பியபின் அக்கையிலிருந்த நெய்ச்சிக்குப்படினும் இருபிறப்பாளன் எச்சிலுடையவனாவதில்லை-எ-று. காண்க.

முப்பத்தறுவர் மதத்துள். షట్త్రింశన్మతే॥ "తాంబూలేచైవసోమేచ భుక్త్వాస్నేహావశిష్టకే। దన్తలగ్నస్యసంస్పర్శే నోచ్ఛిష్టస్తుభవేన్నరః। త్వగ్భిఃపత్రైర్మూలపుష్పతృణకాష్ఠమయైస్తథా। ద్రవ్యైస్సుగంధిభిశ్చాన్యైర్నోచ్ఛిష్టోభవతిద్విజః=வெற்றிலைப்பாக்குத் தின்னல், சோமக்கொடி நீர்குடித்தல், புசித்துக் கையலம்பியபின்னின்ற நெய்ச்சிக்கு, பற்களில் சேர்ந்திருக்கும் நார் - இலை - கிழங்கு - வேர் - பூ - புல்-சிறுகுச்சு-ஏனையவாசனைப் பண்டம், இவைகளைத் தொட்டால் இருபிறப்பாளன் எச்சிலுடையவனாவதில்லை. எ-று. காண்க.

இது முகவாசமுண்டாகும்படி உண்ட திரவியங்களைப் பற்றியது; அடைக்காய் மெல்லுதலோடு கூறியிருத்தலின். அடைக்காய்=வெற்றிலைப்பாக்கு. பற்களிற் சேர்ந்திருப்பதைத் தொடுதல் எனவே எடுக்கமுடியாததாய்த் துன்பஞ் செய்திருப்பதை நாவினாற் பரிசித்தால் என்பது கருத்து.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "ముఖజావిప్రుషోమేధ్యాస్తథాచమనబిందవః। శ్మశ్రుచాస్యగతందన్తసక్తం త్యక్త్వాతతశ్శుచిః."=வாயினாலுண்டாகிய கபத்தின் = சளியின், சிறுதிவலை சுத்தமானது (எனவே தேகத்தின்மீதுபடாவிடின் எச்சில்செய்வதல்ல - என்பது கருத்து.) அவ்வாறே ஆசமித்தநீர்த் திவலைகள் பாதத்தின்மீதுபடின் சுத்தமேயாம். வாயுட் புகுந்தாலும், முகவுரோமம் = மீசை, எச்சில்செய்யாது. பற்களில் புகுந்த அன்னமுதலியன தானே நழுவி விழுந்தால் அதனை யெடுத்து விடுதலினாற் சுத்தனேயாம். நழுவாதது அங்குதானே யிருந்து பல்லோடொத்தது. எ-று. மீசிகை, மீசையெனத்திரிந்தது.

வாயினின்றுந் தெறித்ததிவலைகள் தேகத்தின்மீது படாவழி ஆசமனம் செய்யவேண்டுவதில்லை. அங்ஙனம் கௌதமர் கூறினர். గౌతమః॥ "ముఖ్యావిప్రుడుచ్ఛిష్టం నకుర్వన్తినచేదంగనిపతన్తి."=வாயினின்றும் தெறித்த நீர்த்திவலைதேகத்தின்மீது படாவழி எச்சிலாவதில்லை. எ-று. காண்க.

ஆசமனத்திவலைகள் தேகவுறுப்புகளின்மீது விழினும் சுத்தமேயாம் அங்ஙனம் மனுகூறினர். మనుః॥ "స్పృశంతిబిందవః పాదౌ యఆచమయతః పరాన్। భౌమికైస్తేసమాజ్ఞేయా నతైరప్రయతో భవేత్." = அங்கியர்க்கு ஆசமனத்தின் பொருட்டு சலம் கொடுப்பவனுடையகாலடியின்மேல் மாத்திரம் ஆசமித்தநீர்த்திவலை விழுந்தால்அவை சுத்தபூமியிலிருக்கும் நீரோடொப்பாம் அவை தெறித்து விழுந்தால் அவ்விழப்பட்டவன் புனிதனாகும்படித் தான் ஆசமிக்கத் தக்கவனல்லன். எ-று. (எனவே விழுந்தபோது, அவ்விழப்பட்டவனும் அவன் கைக்கணுள்ள பொருளும் சுத்தமே என்பது கருத்து.

ஈண்டு காலடியின்மேற் பட்டது என்றது ஏனைய உறுப்புக்களின் மேற்படினு மெனவுபலக்கணத்தாற் கொள்ளக்கிடந்தது. அங்ஙனம் மனுகூறினர். మనుః॥ "ప్రయాంత్యాచామతో యస్య శరీరవిప్రుషో నృణాం। ఉచ్ఛిష్టదోషో నాస్త్యత్ర భూమితుల్యాస్తుతాస్స్మృతాః." = ஆசமித்த நீரின்திவலைகள் தேகத்தின்மீது பட்டால் எச்சிற்குற்ற மில்லை. அந்நீர்மண்ணின்மே லுள்ளதோ டொப்பு, எ-று. காண்க.

## முகரோமசுத்திவிடயம்.

முகரோம விடயத்திலுள்ள விசேடத்தை ஆபத்தம்பர் கூறினர். ఆపస్తంబః॥ "నశ్మశ్రుభిరుచ్ఛిష్టో భవత్యంతరాస్యేసద్భిర్యావన్నహస్తేనోపస్పృశతి"=வாய்க்குட்சென்ற முகரோமம் கையாற் றொடுகிறவரையில் எச்சிலல்லசுத்தமாம். எ-று. காண்க.

## ஆசமிக்கத்தகாதன.

ஆசமனத்தில் விலக்கத்தக்கன வற்றைப் பிருகு கூறினர். భృగుః॥ "వినాయజ్ఞోపవీతేన తథాధౌతేనవాససా। ముక్త్వాశిఖాంవాప్యాచామేత్కృత్యస్యైవపునఃక్రియా। సోష్ణీషోబద్ధపర్యంకఃప్రౌఢపాదశ్చయానగః। దుర్దేశప్రగతశ్చైవ నాచామేచ్ఛుద్ధిమాప్నుయాత్" = பூணூலில்லா திருத்தல், மடியில்லாதிருத்தல், குடிமி முடியாதிருத்தல், முதலிய நிலைமையில் ஆசமனம் செய்யலாகாது செய்தாற் பயனில்லை. திருத்திக்கொண்டு மறுபடியும் செய்யவேண்டும். தலைக்குப்பாகை வைத்திருக்கும் பொழுதும் கட்டிலின்மே லிருக்கும் பொழுதும், காலை நீட்டியிருக்கும்பொழுதும், வாஹனங்களின்மேலேறியிருக்

கும்பொழுதும், அசுத்தமான இடங்களில் இருக்கும்பொழுதும், ஆசமனஞ்செய்தால் சுத்தமடைவதில்லை. எ-று. காண்க.

**போதாயனர்.** బోధాయనః॥ పాదప్రక్షాళనాచ్ఛేషేణ నాచామేద్యాఛమా శ్రావయిత్వాచామేన్న సబుద్బుదాభిర్న ఫేనాభి ర్నోచ్ఛిష్టాభిర్న క్షారా భిర్నవివర్ణాభిర్న కలుషాభిర్నో ష్ణాభిర్నహసన్న ప్రహ్వ్యానప్రణతో నముక్తశిఖో నాబద్ధకచ్ఛోచన బహి ర్జానుర్న వేష్టితశిరా నబద్ధకక్షోన త్వరమాణో నాయజ్ఞోపవీతీ నప్రసారితపాదశ్శృఙ్గము కు ర్వంస్త్రీరపోహ్య దయంగమాఃపిబేత్ ” = காலலம்பி மிகுந்தநீரால் ஆசமிக்கலாகாது. அந்நீரை நிலத்தின்மேற் கவிழ்த்து வேறு நீரால் ஆசமிக்க வேண்டுவது. நீர்க்குமிழி, நுரை, எச்சில், க்ஷாரம்= சுவைகள், நிறம்கெட்டுநிற்றல், கலங்கியிருத்தல், சுடுகையோடும் கூடியிருப்பது, “ ச ”=என்றதனால் புழுமுதலிய சேர்ந்திருப்பது வுமாகிய குற்றத்தோடும்கூடிய நீரால் ஆசமிக்கலாகாது - நகை செய்துகொண்டும், சாய்ந்துகொண்டும், அல்லது, உடல்கோணும் படித் திமிர்விட்டுக்கொண்டும், வளைந்துகொண்டும், குடிமி முடியாது விரித்துக்கொண்டும், கட்டிய ஆடைக்குக் கச்சம் வையாமலும், (கச்சம்=கொய்சகம்) முழங்காலுக்கு வெளியில் கைவைத்துக்கொண்டும், தலைக்கு ஆடைசுற்றியும், இருவிலாப்புடையிலும் ஆடைசுற்றியும், விரைவுபட்டுக்கொண்டும், பூணூலில்லாமலும், காலைநீட்டியும், ஆசமித்தலாகாது. சத்தப்படாமல் மார்புஉள்ளே போகும்படி முக்கால் நீர் குடிக்க வேண்டுவது. எ-று காண்க.

**தேவலர்.** దేవలః॥ సోపానత్కో జలస్థోవా ముక్తకేశోధవానరః। ఉష్ణీషీవాపి నాచామేద్వస్త్రేణాబద్ధ్యవాశిరః ”=காலில்மிதியடிமுதலியதோடும், தண்ணீரி லிருந்துகொண்டும், தலை விரித்துக் கொண்டும், தலையில் பாகைதரித்துக்கொண்டும், அல்லதுதலையில்ஆடைசுற்றிக்கொண்டும், ஆசமனம்செய்யலாகாது. எ-று. காண்க.

**ஆபஸ்தம்பர்.** ఆపస్తంబః॥ “ నవర్షధారాభిరాచామేత్ ” = மழைத்தாரை நீரால் ஆசமனஞ் செய்யலாகாது. எறு. காண்க.

**இயமன்.** యమః॥ “ అపఃకరనఖైస్స్పృష్టా యఆచామతివైద్విజః। సురాంపిబతిసవ్యక్తం యమస్యవచనంయథా. ” = கைநகம்பட்டநீரை ஆசமிக்கலாகாது, செய்தால் அவ்விருபிறப்பாளன் பலரறிய கள்ளைக் குடித்தவனேயாகின்ருன். இயமன் கூறியவாறு. எ-று. காண்க. அங்ஙனம் அறிந்து செய்க வென்பது கருத்து.

பிரமாண்டபுராணம். బ్రహ్మాండపురాణే॥ "కంఠంశిరోవా ప్రావృత్య రథ్యాపణగతోపివా। అకృత్వాపాదయోశ్శౌచ మాచాంతోప్యశుచిర్భవేత్" = கழுத்திற்கேனும் தலைக்கேனும் ஆடை சுற்றிக்கொண்டும், நடக்கும் வழியிலும், அல்லது கடைவீதியிலும், கால்அலம்பாதும், ஆசமனம்செய்தால் அவன் சுத்தனாகிறதில்லை. எ-று. காண்க.

கௌதமர். గౌతమః॥ "నాంజలినాపిబేన్న తిష్ఠన్నుద్ధృతోదకేన నాచామేత్" = இருகையாலும் ஆசமனஞ்செய்யலாகாது. நின்று ஆசமிக்கலாகாது. நீரைமேலெடுக்காது ஆசமிக்கலாகாது. எ-று. காண்க. நின்று செய்யலாகாது என்றது நிலத்தின் மேலென்று கொள்க.

நீரிலே நின்றிருந்தாலும் ஆசமிக்கலாம். அங்ஙனம் விஷ்ணு கூறினர். విష్ణుః॥ "జాన్వోరూర్ధ్వంజలే తిష్ఠ న్నాచాన్తశ్శుచితామియాత్। అధస్తాచ్ఛతకృత్వోపి సమాచాంతోనశుధ్యతి" = முழங்காலுக்கு மேலாகத்தக்க அளவுநீரில் நின்று ஆசமித்தால் சுத்தத்தை யடைகின்றான். அதற்குக் கீழாக நின்று நூறுமுறை செய்தாலும் சுத்தமில்லை. எ-று. காண்க.

## ஆசமனத்திற்குப்பவித்திரம்.

கௌசிகர். కౌశికః॥ "అపవిత్రకరఃకశ్చి ద్బ్రాహ్మణోయదుపస్పృశేత్। అపేయంతస్యతత్సర్వం భవత్యాచమనంతథా। వామహస్తస్థితేదర్భే దక్షిణేనాచమేద్యది। రక్తంతుతద్భవేత్తోయం పీత్వాచాంద్రాయణంచరేత్" = கையிற் பவித்திர மில்லாமல் யாரோனும் மோர்வேதியன் எவற்றினைத்தொடுகின்றானோ? அவையனைத்து மவனுக்குக் குடிப்பதற்குத் தகுதியற்றதாகின்றது. ஆசமனமும் அவ்வாறே. தருப்பையிடக்கரத்திலிருக்கும் போது வலக்கரத்தாலாசமித்தால் அந்நீர் உதிரத்தோடு ஒப்பாம். குடித்தால் பின்பு சாந்திராயணவிரதஞ் செய்யவேண்டும். எ-று. காண்க. உதிரம்=இரத்தம்.

மார்க்கண்டேயர் வலக்கையில் பவித்திர மிருக்கவென்று விதிக்கின்றனர். మార్కండేయః॥ "సపవిత్రేణహస్తేన కుర్యాదాచమనక్రియాం। నోచ్ఛిష్టంతత్పవిత్రంతు భుక్తోచ్ఛిష్టంతువర్జయేత్" = பவித்திரத்தோடு கூடியிருக்குங்கையால் ஆசமனகருமத்தைச் செய்யவேண்டியது. அத

னலந்தப்பவித்திரம் எச்சிலாகாது. உண்டுமிக்கதானுலோ? அந்தப்பவித்திரத்தை யொழிக்கவேண்டும். எ-று. காண்க.

கோபிலர் இரண்டுகைக்கும் பவித்திர மிருத்தல் வேண்டுமென்றனர். గోభిలః॥ "హస్తద్వయస్థితైర్దర్భైః స్సమాచామతియోద్విజః। సోమపానఫలంతస్య భుక్త్వాయజ్ఞఫలంభవేత్" = இருகையினும் தருப்பையை வைத்துக்கொண்டு எந்த விருபிறப்பாளன் ஆசமனம் செய்கின்றுனோ? அவனுக்குச்சோமபானஞ் செய்தபயனுண்டாம். அங்ஙனம் உண்டால் வேள்விசெய்த பயனுண்டாம். எ - று. காண்க.

நீராடியபின் செய்யத்தக்க ஆசமனத்தில் உள்ள விசேடத்தைத் தக்ஷர் கூறினர். దక్షః॥ "స్నాత్వాచామేత్తథావిప్రః పాదౌకృత్వాజలేస్థలే। ఉభయోరప్యసౌశుద్ధస్తతఃక్షేమోభవేదితి" = நீராடியபின் வேதியன் ஒருகால் நீரிலும் மற்றொருகால் கரையிலுமாக வைத்துக் கொண்டுஆசமிக்க வேண்டுவது; என்று சிலர்பொருள் கூறுகின்றனர். அங்ஙனமாயின் மேலேதேகம் செவ்வனேநிற்க = வளையாது நிற்க, ஆசமனஞ் செய்யவேண்டுமென்ற மிருதி வாக்கியத்திற்கு மாறுகொளக் கூறலாம் ஆகலின் அதுபொருளன்று. பிறவெனின்? நீரில்நின்று ஒருமுறையாசமித்து, கரைமேல் வந்தபின்பும் ஆசமிக்க வேண்டுவது. ஈரிடத்திலும் செய்தால் சுத்தமுண்டாய் நன்மைதரும்; என்றபொருளே தகுதியுடையதா யிருக்கின்றது.

ஹாரீதர். హారీతః॥ "ఆర్ద్రవాసాజలేకుర్యాత్తర్పణాచమనాదికం। శుష్కవాసాస్థలేకుర్యాత్తర్పణాచమనంజపం" = ஈரம்புலராத ஆடையுடையவன் நீரிலே தருப்பணம் ஆசமனம் செய்யவேண்டும். உலர்ந்த ஆடையுடையவன் நிலத்தின்மேல் தருப்பணம் ஆசமனம் ஜபம் செய்ய வேண்டும். எறு. காண்க.

## ஆசமனத்திற்குரிய பாத்திரம்.

பாத்திரத்தின் விடயத்தில் வேறுமிருதியில் சிலவிசேடங்களைக்கூறப்பட்டுள்ளது. స్మృత్యంతరే॥ "అలాభేతామ్రపాత్రస్య కరకంసకమండలుం। గృహీత్వాస్వయమాచామేన్నరోనాప్రయతోభవేత్। కరకాలాబుకాద్యైశ్చతామ్రపత్రపుటేనచ। స్వహస్తాచమనంకార్యం స్నేహలేపాంస్తువర్జయేత్। కరకపాత్రేచయత్తోయం

యత్రోయంతామ్రభాజనే। సౌవర్ణైరాజతైశ్చైవ నాశుద్ధంతుతతస్స్మృతం" = செம்பின் பாத்திரம் கிடையாவழி மண்கலயத்தையும் கமண்டலத்தையும் கொண்டு தன்கையால் ஆசமிக்க வேண்டுவது. மனிதன் முயற்சி யில்லாதவனாக விருத்தலாகாது. மண்பாத்திரம், சுரைக்குடுக்கை முதலியன, செப்புப்பாத்திரம், கல்லே=தொன்னை, இவைகளால் சலத்தை யெடுத்துக்கொண்டு தன்கையினாலேயே செய்யவேண்டுவது. சிக்கடைந்துள்ளதை விடுக்கவேண்டுவது. முக்கியமாய் மண்பாத்திரம், தாம்பிர பாத்திரம், பொற்பாத்திரம், வெள்ளி பாத்திரம், இவைகளிலுள்ள நீர் சுத்தமானது என்று கூறப்பட்டது. எ-று, காண்க. கமண்டலம் = நீர்வலயம் = சலநிரம்பிய வட்ட இடம். அல்லது பெரியோர்கள் கையது=துவிமுகி=இரண்டுமுகமுள்ளது. என்க. கௌதமர் சில பாத்திரங்களை யாகாவென விலக்கினர். గౌతమః॥ "కాష్ఠాబ్జవేణుకాలాబు చర్మాశ్మనారికేళైర్నాచామేత్। యద్యాచామేత్సదా అశుచిరేవస్యాత్"=மரம், நீரிற் பிறந்தன=சங்கு, நத்தை, தாமரையிலைமுதலியன, மூங்கல், சுரை, தோல், கல், தேங்காயோடு முதலியவற்றாற் சமைந்த பாத்திரத்தால் ஆசமனஞ் செய்யலாகாது. செய்தால் அசுத்தமாம். எ-று. காண்க.

இங்ஙனம் கூறிய விலக்கணத்தோடுங் கூடிய ஆசமனத்தை வியாக்கிரபாதர் புகழ்ந்து கூறினர். వ్యాఘ్రపాత్॥ "ఏవంచబ్రాహ్మణోనిత్య ముపస్పర్శనమాచరేత్। బ్రహ్మాదిస్తంబపర్యంతంజగత్సపరితర్పయేత్" = இவ்வாறு வேதியன் உபஸ்பரிசனம் = ஆசமனத்தைச் செய்யவேண்டுவது. பிரமன்முதல் ஸ்தம்பப் பூச்சு = சிறுஅணுக்கூட்ட ஜந்துவரையிலுமாகிய வுலகையெல்லாம் தருப்பணத்தால் திருத்தியடைவிக்க வேண்டுவது. எ-று.காண்க. தருப்பணம்=குடிநீர் உதவுதலுமாம்.

## ஆசமனத்தினால்திருத்தியடைபவர்.

விருத்தசங்கர். వృద్ధశంఖః॥ "త్రిఃప్రాశ్నీయాద్యదంభస్తు ప్రీతాస్తేనాస్య దేవతాః। బ్రహ్మారుద్రశ్చవిష్ణుశ్చ భవంతీత్యనుశుశ్రుమః। గంగాచయమునాచైవ ప్రీయేతాం పరిమార్జనాత్। పాదాభ్యాంప్రీయతేవిష్ణు ర్బ్రహ్మాశిరసికీర్తితః। నాసత్యదస్రౌ ప్రీయేతేస్పృష్టేనాసాపుటద్వయే। స్పృష్టేలోచనయుగ్మేతు ప్రీయేతేశశిభాస్కరౌ। కర్ణయుగ్మేతథా స్పృష్టే ప్రీయేతేత్వనిలానలౌ। స్కంధయోస్స్పర్శనాదేవ ప్రీయంతేసర్వదేవతాః। నాభి సంస్పర్శనాన్నాగాః ప్రీయంతేచాస్యనిత్యశః। సంస్పృష్టేహృదయేచాస్య ప్రీయంతేస

ர்வதேவதா:। மூர்த்தஸம்ஸ்பர்சனாதஸ்ய ப்ரீதஸ்து புருஷர்ஷப பவேத்" = முக்காற்குடித்த ஆசமனசலத்தினுல் பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்னு மூவரும் திருத்தியை யடைகின்றனர் எனக் கேள்விப்படுகின்றேம். நீரினுற் றுடைப்பதினுல் கங்கை யமுனைகள் திருத்தியடைகின்றனர். காலில் விஷ்ணுவும், தலையில்பிரமனும், மூக்குத் துளைகளில் அசுவனி தேவர்களும், கண்களில் அக்கினி வாயுக்களும், தோள்களில் ஏனையதேவர்களும், நாபி = உந்தியில் நாகர்களும், இதயத்தில் எல்லாத்தேவரும், உச்சியில் புருடதெய்வமும், நீரினுற்பரிசிக்க,களிப்படைகின்றனர். எ-று. காண்க.

## ஆசமனம்செய்யாவழிவருங்குற்றம்.

ஆசமனஞ் செய்யாவிடிற் பாவம் குறிக்கப்பட்டது. யஸ்த்ரியாம் குருதே மோஹாத் தநாசம்யைவ நாஸ்திக:। பவந்தி ஹி வ்ருதா தஸ்ய க்ரியாஸ்ஸர்வா ந ஸம்சய:." = யார் ஆசமன கருமத்திற்குச் சுத்தி, புண்ணியம், என்னும் பயன்உண்டு என்று நம்பாமல், நாத்திகனுய் ஆசமனஞ் செய்யாமல் அறிவின்மையால் வேறுகருமங்களைச் செய்கின்றுனே? அவன்செய்த கருமங்களெல்லாம் பயனில்லாமலே வீணுய் விடுகின்றன. இவ்விடயத்திற் சந்தேகமில்லை. எ-று. காண்க.

வடதேயத்தாரது ஆசாரங்களை விசாரிக்குமிடத்துஇங்ஙனம்உள்ளதாகத் தெரியவருகின்றது.தென்னுட்டினர்ஆசாரத்தைவிசாரிக்குமிடத்துச் சிலவிசேடம் வெளிப்படுகின்றது. அவைவருமாறு, ஆசமனத்திற்கும் நீரால் அங்கங்களைத்தொடுவதற்கும் மந்திரவிதியை வைத்துக்கொண்டிருக்கின்றனர். அதற்குஆதாரமாகப் பிரமாணவசனங்களை வேறு வேறு நூல்களில் அவரவர்கள் மதங்களுக்கு ஒத்தபடிக்குக் கூறுகின்றனர். அவற்றினுள் ஒன்றற்கேனும், வேதத்துளாயினும், தருமசாத்திரங்களுளாயினும், சுரோளதம், ஸ்மார்த்தம். என்னுமிருவகையின்ஆகமப்பிரமாணம்கிடைப்பதில்லை. சுருதி "த்ரிராசாமேத்" முக்காலாசமிக்கவேண்டுவது. "த்விஃபரிம்ருஜ்ய" இருகாற்றுடைத்து "ஸக்ருதுபஸ்ப்ருச்ய" ஒருகால் உறுப்புக்களை உறுத்தி என்றிவ்வளவே கூறுகின்றது. அதற்குப்பொருள் விளங்க மிருதிகள் மேற் கூறியவாருகக் கூறியுள்ளன. இவ்வளவே யன்றித் தேவர்களின் பெயர்களையாயினும், மந்திரலிங்கம்=மந்திரக்குறிகளையாயினும் ஆசமனத்திலும் அங்கங்களைத் தொடுதலிலும் உபயோகிப்பதற்கு விதிகூறப்படவில்லை மேலும், சத்தஞ்செய்யாது ஆசமிக்க வேண்டுமென்றுமேலே கூறப்பட்டுள்ளது: ஆனுல் விருத்தசங்கர் வாக்கியத்தைப்பற்றி மேற்கூறியபடி ஆசமனத்தொழிலுக்கும் உறுப்புகளைத் தொடுதற்றெழிலுக்கும் எந்தெந்தத்தேவதைகளின் பிரீதிபயனென்று தெரியவருகின்ற

தோ? அந்தத்தேவதையின் சொருபத்தை அநுசந்தானம்—தொடர்ந்து பற்று தலிலும் அந்தத்தேவதையின் பெயர் மந்திரங்களைக் கூறுவதும் ஒருதலையாக வேண்டுமென்பதனை யொருநியாயமாக வைத்துக்கொண்டு அவ்வகையாகச் சிலர் அனுட்டிக்கின்றனர். அதுவேவழியாகப் புராணங்களும் தந்திரங்களும், நூல்களும் ஆகமங்களும், மந்திரயோகங்களும், சங்கிதைகளும் ஆகிய இவற் றின் ஆதாரங்களை யொருவகையிலமைத்துக்கொண்டு, சிவநாமத்தாற் சைவ ரும், விஷ்ணுநாமத்தால் வைஷ்ணவரும்,அந்தந்தத்தேவர்களின் பெயர்காளல் அவ்வத்தெய்வவுபாசிகளும், தத்துவாபிமானி தேவதாவாசகத்தால் யோகப் பயிற்சிசெய்கின்ற சாங்கியர் முதலியோரும்,மந்திரபீஜ எழுத்துக்களால் தாந் திரீகரும், மந்திரலிங்கங்களால் மாந்திரீகரும், பிரணவத்தால் சந்நியாசிக ளும் ஆசமனத்தையும் உறுப்புறுத்தலையும் செய்கின்றனர். அவையெல்லாம் அவரவர் சிறப்புவிதியால் வந்தனவே யன்றிப் பொதுவகையால் வருணச் சிரம தருமங்களைப்பற்றி வந்த சுரௌதஸ்மார்த்த விதியல்லவாதலின், அவற் றை இம்மாதவாசிரியர் எடுத்துக்காட்டவில்லை ஸ்மிருதிகளில் இல்லாத விட யமாதலின்.ஸ்மிருதிகளைவிதித்தநூலாசிரியர்கள் யாரும் கூறவில்லை. ஆயினும், அதன் தோற்றத்தன்மை யறியவேண்டுதலின் குறிப்புக்காகச் சிறிதுயாம் கூறுதும்.

விசுவாமித்திர சங்கிதை, வசிட்டசங்கிதை, இவைகளில் காயத்திரியுபா சனை கூறியவழிச் சந்தியாவந்தன கருமத்திற்குச் சுருதி யாசமனம்கூறி யிருக்கின்றது. "శ్రుత్యాచమనంయథా" "దేవ్యాగపాదైస్త్రిభిరపీత్వా అబ్లింగైర్న వభిస్పృశేత్। సప్తవ్యాహృతిగాయత్రీశిరస్తుర్యద్వయంన్యసేత్।శ్రుత్యాచమనమేతద్ధి నిత్యం కార్యంద్విజోత్తమైః" = காயத்திரி மந்திரத்தினுடைய மூன்றுபாதங்களினால் மூன்றுவிசை ஆசமித்தல்வேண்டும், "ஆபோஹிஷ்டாதி" ஒன்பதுமந்திரங்க ளால் ஒன்பதுஅங்கங்களைத் தொடவேண்டுவது. ஏழு "வியாஹிருதி" மந்தி ரங்களால் ஏழுஅங்கங்கங்களைத் தொடவேண்டுவது. பின்பு காயத்திரிமூன்று, காயத்திரிசிரசு ஒன்று, துரியகாயத்திரி ஒன்று, ஆகவைந்தினுலும் ஐந்து அங்கங்களையும் தொடவேண்டுவது. இவ்வாறுஇருபத்துநான்கு மந்திரக்கூட்ட முடையது சுருதியாசமனமென்று கூறப்பட்டுள்ளது. இதனது நோக்கத் தைப்பற்றி யந்தந்தத்தேவதைகளின் அனுட்டான பக்ஷத்தாரும் அந்தந்தத் தேவதைகளின் மந்திரத்தால் வேறு வேறு சுருதியாசமனங்களைச் செய்து வருகின்றனர்.

"తకారాది యకారాంత మంత్రాక్షర సమన్వయాత్, స్మృత్యా చమనమే తద్ధినిత్యంకార్యం ద్విజోత్తమైః" = காயத்திரி மந்திரத்தின் இருபத்துநான்கு எழுத்துக்களினால் முறையே மேற்கூறியபடி இருபத்துநான்கின் கூட்ட முடையது மிருதியாசமன மென்னப்படும்.

"నామ్నాం హరిహరాదీ నాముచ్చారణే పాపనాశకః, నిత్యమాచమనే చాంగ స్పృశ్యనేపి పురాణతః" = சிவகேசவாதி தேவர்களின் புண்ணியப் பெயர்களையேற்றபெற்றி ஆசமனத்திலும் அங்கங்களைத் தொடுதலினும் உபயோகிக்கவேண்டுவது என்பது, புராணசம்பந்த ஆசமனம் என்னப்படும்.

இக்காலத்தில் ஆசமனசொருபத்தை நன்றாகவிசாரிக்குமிடத்தில், கலியுகதருமத்தைப்பற்றிப் பத்திவாதத்தால் ஸ்மார்த்தர்முதலிய சிலவேதியரொன்பாரும் வைஷ்ணவரும் மேற்கூறிய சுருதியாசமனமுதலிய வற்றைச்செய்யும் சத்தியில்லாமல் சாதாரணமாகக்கேசவாதி இருபத்துநான்குபெயர்களை மாத்திரம் வழங்கி வருகின்றனர் தருமசிந்து என்னும் நூலில் "பொப்பதேவர்" என்பவர்செய்ததியான சுலோகங்களையும் எழுதியிருக்கின்றனர். இவ்விடயத்தில்அனுட்டான முறையை விசாரிக்குமிடத்தில் "సంధ్యాసహ స్రహా" என்றபழமொழிக்கு இலக்கியமாய் அவரவர் முன்னையர் வழக்குப்பல்லாயிர வகையாக விருக்கின்றன. அவற்றின் விவரங்களையெல்லாம் விரிவஞ்சிவிடுத்தாம்.

ஆசமனபிரகரண முற்றிற்று.

---

# தந்ததாவனவிதி.

அத்திரி. అత్రిః "ముఖేపర్యుషితే నిత్యంభవత్య ప్రయతోనరః, తదార్ద్ర కాష్ఠం శుష్కంవాభక్షయేద్దన్త ధావనం" = முகம் பழைமைப்பட்டால் மனிதன்தகாதவனாகின்றான். அதனால், பசுமையவேயாகவாயினும் உலர்ந்தனவேயாக வாயினுமுள்ளகோலைப் பல்விளக்குமாறு.தின்னவேண்டுவது. எ-று. காண்க.

வியாசர் వ్యాసః "ప్రక్షాళ్యహస్తౌపాదౌచ ముఖంచసు సమాహితః, దక్షిణం బాహుముధృత్యకృత్వాజాన్వం తరంతతః, తిక్తంకషాయం కటుకం సుగంధం కంటకాన్వితం, క్షీరిణోవృక్షగుల్మాదీన్భక్షయేద్దన్త ధావనం" = கைகால்முகங்களை நன்றாகக் கழீஇக்கொண்டு அமைதியுடையவனாய் வலத்தோளினைமேலெடுத்து முழங்காலுளிருத்திக்,கைப்பு, துவர்ப்பு, கார்ப்பு = காரம், நல்லமணம், முட்கள், பால், இவைகளையுடைய மரங்களிலும் புதராக மொய்த்திருக்குமவைகளிலும் பற்கோல்கொண்டு தின்னவேண்டுவது. எ-று. காண்க.

## பற்கோலளவு.

விஷ்ணு. విష్ణుః “ కంటకి క్షీరవృక్షోత్థం ద్వాదశాంగుళ సంమితం, కనిష్ఠి కాగ్ర వత్థూలం వర్వార్ధకృత కూర్చకం, దన్తధావన ముద్దిష్టం జిహ్వోలేఖనికా తథా, సుసూక్ష్మం సూక్ష్మదన్తస్య త్రివిధం దన్తధావనం, ద్వాదశాంగుళకం విప్రేకాష్ఠ మాహు ర్మనీషిణః, క్షత్రవిట్ఛూద్ర జాతీనాం నవషట్చతురంగుళం ”=முள், பாலுடைய மரங்களிற்றோன்றியதாய்ப்பன்னிரு அங்குலநீளத்தில் கடைவிரற் பருமனுடையதாய், விரலிறைபாதி யளவு தலைக்கனமுடையதாய்ப் பல்விளக்க அனுகூலமானது பற்கோலென்றும் அவ்வாறேநாக்கு வழிக்குங்கோலெனவும் குறிக்கப்பட்டன. சிறுபற்களையுடையவர் கட்குச் சிறியது. நடுத்தரப்பற்களையுடையவர்க்கு நடுத்தரப்பற் கோல், பெரியதும் கோணலுமாகிய பற்களை யுடையவர்கட்குப் பருத்தது. இவ்வண்ணமாக பல்விளக்குங் கோல் மூவகையாக விருக்கவேண்டுவது. வேதியனுக்குப் பனிரண்டங்குலக்கோல், அரசனுக்கு ஒன்பதங்குலம், வைசியனுக்கு ஆறு, சூத்திரனுக்கு நான்குஅங்குல அளவையுடைய பற்கொம்பு இருக்க வேண்டிய தென்று, அறிவுடையோர் கூறுகின்றனர். எ-று. காண்க.

## பற்கோலுக்குரியமரம்.

அங்கிரா అంగిరాః “ ఆమ్రపున్నాగ బిల్వానామపామార్గ శిరీషయోః, భక్షయేత్ప్రాత రుత్థాయవాగ్యతో దన్తధావనం, వటాసనార్క ఖదిరకలంజ కకుభస్య చ, అరిమేదం ప్రియంగుంచ కంటకార్యస్తథైవచ, ప్రక్షాళ్య భక్షయత్పూర్వం ప్రక్షాళ్యైవతుసంత్యజేత్, ఉదఙ్ముఖః ప్రాఙ్ముఖోవా కాషాయంతిక్తకంతథా। ప్రాతర్భుక్త్వాచయతవాగ్భక్షయేద్దన్తధావనం= “ఆమ్ర” மா, “పున్నాగ” புன்னை, “బిల్వ” வில்வம், “అపామార్గ” நாயுருவி, “ శిరీష ” = காட்டுவாகை, இவற்றா லமைந்த பற்கோலைக் காலையிலெழுந்து வாய்பேசாது தின்ன வேண்டுவது. அன்றியும், “వటః” = ஆல், “అసనం = ఆసనం” வேங்கைமரம் அல்லது, கருங்குங்கிலிய மரம், “ అర్క ” = எருக்கு “ఖదిరం”=கருங்காலி, కలం=“కరవీరం”=அலரி, జ =“ జాత్యం ” சாதிக்காய்மரம், “ కకుభం ” = மருதம் “ అరిమేదం ” = கருவேல், “ ప్రియంగు ” = கருஞாழல்மரம், இன்னுமுள்ள முண்மரங்களிவற்றால் பற்கோல் அமைத்துக்கொண்டு முன்னர் அதனை அலம்பிப்பின்னர்தின்றுமேல்அலம்பி எறியவேண்டுவது. வடக்கு

முகமாக வேனும் கிழக்கு முகமாக வேனும் காலையிலிருந்து கொண்டு, துவர்ப்பு, கைப்பு, ஆகிய பற்கொம்பை வாய்பேசாது தின்னவேண்டுவது. எ-று. காண்க. எருக்கு, அலரிபற்கொம்பு தேகத்திற்கு விரோதமுள்ள விஷவிருக்ஷமாகலின் வைத்திய நூலோர்விலக்கினர்.

## பற்கோல்தொடுவதற்குரிய மந்திரம்.

காத்தியாயனர், பல்விளக்கும்பொருட்டு அக்கோலைப் பற்றுதற்குரிய மந்திரங்களைக்குறிக்கின்றனர். “ కాత్యాయనః’, ఆయుర్బలం యశోవర్చః ప్రజాః పశువసూనిచ, బ్రహ్మ ప్రజ్ఞాంచ మేధాంచత్వన్నో దేహివనస్పతే = காட்டின்தலைவனாகிய ஓய்! தருவரசே! நீர் எமக்கு ஆயுளையும், ஆற்றலையும், புகழையும், ஒளியையும், மக்களையும், பசுக்களையும், பொன்னையும், பிரமஞானத்தையும், சூக்குமவுணர்ச்சியையும் கொடுத்தருள்க. எ-று. காண்க.

## பல்விளக்குதலுக்கு விலக்காயுள்ளன.

ஒழிக்கத்தக்கனவற்றை உசனர் கூறினர். “ ఉశనాః ” నాంగుళీభిర్దన్తాన్ ప్రక్షాళయేత్, దక్షిణాభిముఖో నద్యాన్నీలద్రుక కదంబకం, తిన్దుకం గుగ్గుల బంధూకమోచా మరజబల్బజం, కార్పాసం చన్తు కాష్ఠంతు విష్ణోరపిహరేచ్ఛ్రియం, నభక్షయేత పాలాశం కార్పాసం శాకమేవచ, ఏతానిభక్షయేద్యస్తు క్షీణపుణ్యస్సజాయతే”= கைவிரலாற் பல்விளக்க லாகாது. தென்முகமாகவிருந்தும் பற்கோல் தின்னலாகாது. “ నీలద్రుక ” கருமை யுள்ளன, எனவே நொச்சிமரம், “ కదంబం ” கடம்பு, சிலர் ஈந்து = ஈச்சமரமெனவும்கூறுப, “తిన్దుకం”=புன்குமரம், காலஸ்கந்தம்=பச்சிலைமரம்=கரும்பிசினுள்ளதுபச்சென்றிருப்பதுவெடிப்பது, “గుగ్గులం” = தாபதமரம் “బంధూకం” செங்குங்கிலியம், “మోచా”=வாழை “అమరజ” தேவதாரம், “బల్బజ” = கனமற்றது = புல்வைக்கோல் அல்லது, இலவு, “కార్పాసం” = பருத்தி, இந்தப்பற்கோல்கள் விஷ்ணுவினுடைய செல்வத்தையும் அழிந்துவிடும். (எனவே, இதனாற் பல் விளக்கலாகாதுஎன்க) அன்றியும் “పాలాశ”=முருக்கு, “కార్పాసం”= செம்பருத்தி, “శాకం”=தழைகள் இவற்றை யொருவன் மென்றாலும் அவன் புண்ணியங்களைப் போக்கடித்தவனே யாகின்றான். எ-று. காண்க.

பற்கோல் தின்னலாகாததிதி=நாள்களை விஷ்ணு கூறினர். విష్ణుః “ ప్రతిపద్దర్శ షష్ఠీషు చతుర్దశ్యష్టమీషుచ, నవమ్యాం భానువారే చదన్త కాష్ఠంవర్జయేత్ ” = பிரதமை, சஷ்டி, அஷ்டமி, நவமி, சதுர்த்தசி, அமாவாசை, ஞாயிற்றுக்கிழமை இத்தினங்களில் பற்கோல் தின்னலாகாது. (எனவே, பல்விளக்கலாகாது). எ-று. காண்க.

இயமன். యమః “ చతుర్దశ్యష్టమీదర్శ ॥ పూర్ణిమాసం క్రమోరవేః, ఏషుస్త్రీ తైలమాంసానిదన్త కాష్ఠం చవర్జయేత్, శ్రాద్ధేజన్మదినే చైవవివాహే జీర్ణదోష తః, వ్రతేచైవోపవాసే చవర్జయేద్దన్త ధావనం” = சதுர்த்தசி, அஷ்ட்டமி, அமாவாசை, பூரணை, சூரியசங்கிரமணம் = மாசப்பிறப்பு ஆகிய இவ்வைந்து காலங்களிலும், பெண்புணர்ச்சி, எண்ணெயிட்டுக் கொள்ளுதல்,மாமிசமுண்ணல்,பற்கோலால் பல்விளக்குதல்இவற்றை யொழிக்கவே வேண்டும். சிராத்தம் = தென்புலத்தார் கடன் கழிக்குநாள், தான்பிறந்தநாள், மணவினைநாள்=கலியாணதினம், உண்டதுசீரணியாமலிருக்குநாள்,அல்லது வயதின்முதிர்ச்சியால் பற்களசைவுற்றகாலம், விரதநாள், உபவாசம்=பட்டினியிருக்குநாள், இவற்றில் பல்விளக்குதலாகாது. எ-று. காண்க.

வியாசர். వ్యాసః,, శ్రాద్ధేయజ్ఞే చనియమాస్నతత్ప్రోషితభర్తృకాః, శ్రాద్ధకర్తృనిషేధోయం నతుభోక్తు ॥ కదాచన”=பிதிரர்கடன்செய்யு நாளிலும், வேள்விக்காலத்திலும், விரத நியமகாலங்களிலும் பல்விளக்கலாகாது. கணவன்ஊரிலில்லாதகாலத்தில் புரோஷிதபர்த்துருகையான மனைவி பல் விளக்கலாகாது. தென்புலத்தார் கடனில்=பிதிரர்கடனில் செய்யுங்கருத்தனுக்குமாத்திரம் விலக்கப்பட்டதன்றிப் புசிப்பவர்க்குஇந்த நியமம்விதித்ததில்லை.எ-று.காண்க.புரோஷிதபர்த்துருகை=பிரியும்பதியினள்.

யாஞ்ஞுவற்கியர். యాజ్ఞవల్క్యః “ఇష్టకాలోష్టపాషాణై రితరాఙ్గులిభిస్తథా, ముక్త్వాచానామికాం గుష్ఠౌవర్జ యేద్దన్తధావనం” = இட்டிகை (செங்கல் என்று வழங்குகின்றது) மண்கட்டி, கற்கள், “తథా” என்றதனால்ஓடுகரிமுதலியவற்றாலும்,பெருவிரல்,பவித்திரவிரல், இரண்டொழிய மற்றைய மூன்று விரல்களாலும் பல்விளக்கலாகாது. எ-று. காண்க.(இதுயாஞ்ஞுவற்கியமிருதி முதல் அத்தியாயம். ௨௨ - சுலோகம். பழய பிரதிகளிலிருக்கின்ற தந்ததாவன விட

யமாகிய சுலோகம் மூன்றினையும்பின் அச்சியற்றினவர்கள் விட்டிருக்கின்றனர்.)

## ஒழிபு.

பல்விளக்காதநாளிற் செய்யத்தகுவன வியாசராற்கூறப்பட்டது. వ్యాసః “అలాభేదన్తకాష్ఠానాం నిషిద్ధదివసేతథా, అపాంద్వాదశ గండూషైర్విదధ్యా ద్దన్తధావనం”=பற்கோல்கிடையாவிட்டாலும், விளக்கக்கூடாத நாளாயினும், நீரினால் பன்னிருகால்நன்றாகக் கொப்பளித்து உமிழ்வதினால் பல்விளக்கியவாறாகின்றது. எ-று. காண்க.

கௌதமர் முதலிய முனிவர் இன்னும் சிலவிசேடங்களைக் கூறியிருக்கின்றனர். வருமாறு, కీటాద్యదూషితం= புழுக்கண்முதலியகுற்றமற்றதாகப் பற்கோலிருத்தல் வேண்டும். எ-ம். శుచ్యం=சுத்தமானவிடத்திற்றோன்றியவாயிருத்தல் வேண்டும் - எ-ம், కకుభాశోకజంబ్వామ్ర కపిత్థవకుళోద్భవం=மருதம், அசோகம், நாவல், மா அல்லது புளி, விளா, மகிழ், இவற்றது, சிறந்தது எ-ம். అపామార్గం ప్రశస్తం= நாயுருவி, இதுமிகச்சிறந்தது, எனவுங்கொள்க.

“తాళహింతాళ గువాకకేతకీమహద్వట ఖర్జూరనారికేళ రాస్సప్తైతేతృణరాజకాః తైర్దన్త ధావనం ప్రమాదాదపినాచరేత్” பனை, கருதாளம், பாக்கு, தாழை, ஆல், பேரீந்து, தெங்கு இவை ஏழும் துரும்புகளுக்கரசு ஆதலால் இவற்றால் மறந்தும் பல்விளக்கலாகாது. “ప్లక్షనిర్గుండీసూచీముఖ కార్పాసపూతిగంధవర్జ్యాదీన్వర్జయేత్”=இலவு, நொச்சி, சிறுமுட்கள் கணுக்கள் உள்ளன, பருத்தியொத்த சிறுநார்முதலிய வுடையனவாய்ப்பற்சந்தில் சிக்கிக்கொள்வன, தீநாற்றம்அல்லதுவிரோதமாகிய தீக்குணமுடையன, மூங்கல், ஆதியென்றதனால் எருக்கு, கள்ளி, சித்திரமூலம், சேமரம்=சேராங்கொட்டைமரம், கூந்தற்பனை, வன்னி, தருப்பை, அலரிபோல்வன வெல்லாவற்றையும் ஒழிக்கவேண்டுவது. என்றது “చ” என்றதனால் உப்பு சாம்பல் மணல் மற்றைய விஷமூலிகைகளையும் ஒழிக்கவேண்டும் அல்லது.’தானறியாதமரம்புதல்முதலியனவுமாகாது. எ-று.

“భానావభ్యుదితే వికృతింవినాదన్త ధావనంనకుర్యాద్యదికుర్యాద్య ఋషయోమంత్రా దేవాః పితరస్తస్య పరాఙ్ముఖాభవంతి” =நோயின்றியபோது சூரியன் உதயமானபின் பல்விளக்கலாகாது. செய்தால் அவனுக்கு முனிவர்கள், மந்திரங்கள், தேவர்கள், தென்புலத்தார்=பிதிர்கள், முகங்காட்டாது பின் திரும்பிக்கொள்வர் என்றாற்போல்வன.

தந்ததாவனவிடயமுற்றிற்று.

---

# தருப்பைவிதி பவித்திரம்.

பின்னர் நீராடல், வேள்விசெய்தல்முதலியகருமம் தருப்பை யைக்கைப்பற்றியவனுலே செய்யத்தக்கனவாதலின்முதலில் தருப் பைவிதி கூறப்படுகின்றது. ஹாரீதர் హారీతః "అచ్ఛిన్నా గ్రాస్సవిత్రాం శ్చసమూలాన్ మలాన్సుభాన్, పితృదేవర్షిపూజార్థం సమాదధ్యాత్కుశాన్ద్విజః, కుశహస్తేనయజ్జప్తం పాసంచైవకుశైస్సహ, కుశహస్తస్తుయోభుఙ్తే తస్యసంఖ్యానవిద్య తే" = நுதி = முனை, அறுமலுள்ளன, அடிவரையும் கூடியுள் ளன, பவித்திரமுடியுடையன, பரிசுத்தமானவை, மெல்லியன மங்கலகரமா யுள்ளனவாகிய தருப்பைகளைத் தென்புலத்தார், தேவர்கள், இருடிகள் பூசையின் நிமித்தம் இரு பிறப்பா ளன் விதிப்படி சேகரித்து வைத்து வைக்கவேண்டும். அப்ப டிப்பட்டதருப்பையைக் கையில் பிடித்துக்கொண்டு செபித்த தும், குடித்ததும், தின்றதும், அளவில்லாத புண்ணியத்தைத் தரும். எ-று. காண்க.

புராணபேதம். " పురాణాంతరే" కుశపూతంభవేత్స్నానంకుశేనోపస్పృ శేద్ద్విజః, కుశేనచోద్ధృతంతోయం సోమపానేనసమ్మితం" =தருப்பையோடு நீரா டல் வேண்டும். தருப்பையோடு ஆசமனம் செய்ய வேண்டும். அவ்வாறுசெய்வது பரிசுத்தமாம், தருப்பையோடு மேலெடுத்த நீர், சோமபானத்தோடு ஒப்பானது. எ-று. காண்க.

கோபிலர். " గోభిలః " కుశమూలేస్థితో బ్రహ్మా కుశమధ్యేజనార్దనః, కు శాగ్రేశంకరం వింద్యాత్త్రయో దేవావ్యవస్థితాః" = தருப்பையின் அடியில் பிரமன், நடுவில் விஷ்ணு, நுனியில் சிவன்வசிக்கின்றூர்கள். எ-று. காண்க.

கௌசிகர். "కౌశికః " శుచౌదేశే శుచిర్భూత్వా స్థిత్వాపూర్వోత్త రాము ఖః, ఓంకారేణైవమంత్రేణ కుశాంస్పృశ్యాద్ద్విజోత్తమః" = சிறந்தவேதியன் பரிசுத்தனுய்ச்சுத்தமாகிய விடத்தில் நின்று கிழக்கு அல்லதுவட க்கு முகனுகிப் பிரணவ மந்திரத்தை உச்சரித்துத் தருப்பையை த் தொடவேண்டுவது. எ-று. காண்க.

தருப்பையைப் பறிப்பதற்கு மந்திரம். దర్భోత్పాటనమంత్రస్తు॥ "విరించినాసహోత్పన్న పరమేష్ఠినిసర్గజ। నుదపాపానిసర్వాణిదర్భస్వస్తికరోభవ"—

பிரமனோடு பிறந்தோய்! பிரமனது இயற்கையோடு பிறந்தோய்! எனக்கு நன்மைசெய்யவல்ல தருப்பையே! எல்லாப்பாவங்களையும் ஒழிப்பாயாக. எ-று காண்க. ஈண்டுத் தருப்பையைக் கூறு முகத்தால் அதன் அதிதேவதையைக் கூறிற்று.

## தருப்பைவகையும் தகுதியும்.

ஒவ்வொரு கருமத்திற்கும் உரிய தருப்பையைக் காத்தியாயனர் கூறினர். కాత్యాయనః॥ హరితాయజ్ఞియా దర్భాఃపీతకాఃపాకయజ్ఞియాః। సమూలాఃపితృదైవత్యాః కల్మాషావైశ్వదేవికాః॥ மஞ்சணிறமுடைய தருப்பை வேள்விக் குரியது. பச்சைநிறமுடைய தருப்பை பாகவேள்விக்குரியது. அடியோடுங்கூடிய தருப்பை தென்புலத்தார்க்குத் திருத்தி விளைவிப்பது. பலவண்ணங் கூடிய சித்திரநிறத்தருப்பை வைசுவதேவாதி கருமத்திற்குத் தக்கது. எ-று. காண்க.

## தருப்பையில்லாவழி.

தருப்பை கிடையாவிடின் சங்கர் கூறினர். శంఖః॥ "కుశాభావే ద్విజశ్రేష్ఠః కాశైః కుర్వీతయత్నతః। తర్పణాదీని కర్మాణి కాశాః కుశసమాః స్మృతాః"=தருப்பைகிடையாதொழியிற்சிறந்தவேதியன் காசாம்புல்லைத் தேடிவந்துதருப்பணமுதலியகருமத்தைச்செய்யவேண்டுவது. காசாம்புல், தருப்பையோடொத்ததென்று கூறப்பட்டது எ-றுகாண்க.

"దర్భాః"=தருப்பை, "కుశః"=குசை, "పవిత్రం"=பவித்திரம் என்னும் இம்மூன்றுபெயரும் தருப்பையின் சிறந்தபெயர்களாம். இதற்கு బర్హిః = பருஹிः என்னுமோர் பெயருண்டு, இது அமுதத்தைச் சுத்தஞ்செய்வதற்குச் சேர்க்கப்பட்ட தேவருலகத்துப் புல் என்று புராணங் கூறிற்று. இதனுள் விசுவாமித்திர தருப்பை எனவும் வசிட்டதருப்பை எனவும் இருவகைப்பட்டுள்ளன. விசுவாமித்திரதருப்பை சிறுகியதாயும் மெல்லியதாயும் நீளமாயும் வலுவுள்ளதாயும், ஆசனமுதலிய செய்வதற்கு உபயோகமுள்ளதாயும் சுணையற்றதாயும் இருக்கும். இதன் புதரில் பாம்புகள் விசேடமாக வசிக்கும். இனி வசிட்டதருப்பை இலை, அலகுஅங்கமாயுள்ளது. நீளமின்றிக் குறுகியதாயும் முருடாயும் சுணையுள்ளதாயும் வலுவில்லாததாயும் ஆசனமுதலிய செய்ய வமையாததாயும் உள்ளது. இதனுட் பாம்பு மிகுதியும் சேராது. இவ் விருவகைத் தருப்பையும் கருமத்திற்குச் சிறந்தன. இவை பெரும்பாலும் காடு, யாறு, முதலிய இடங்களிலும் பெரியோர்களாகிய இருடியர் வசிக்கும் இடங்களிலும் தேவர்கட்குரிய புண்ணிய பூமிகளிலும் மிகுதியாகக் கிடைக்கின்றன. ஏனைய

விடங்களில் அருமையாகக் கிடைக்கும். எங்கும் சாதாரணமாக இலேசிற் கிடையாமைபற்றி இவற்றிற்கு ஒத்தனவாக வேறு அறுவகைப் பொருள்களைக் குறித்திருக்கின்றனர். இந்தத் தருப்பைகட்கும் இவற்றினையொத்த பொருள்களுக்கும் "బర్హిస్"="பருஹிசு" என்னும் பெயருள்ளன.

## தருப்பையுள் எழுவகையாகிய "பருஹிசு."

இயமன் యమః॥ కుశాః కాశా యవా దూర్వా స్తథా వ్రీహయ ఏవచ। బల్బజాని పుండరీకాణి సప్తధా బర్హిరుచ్యతే॥ = "కుశాః" = தருப்பைகள் "காசாः"=சரவணப்புல், "యవాః" = செந்நெல்லின்புல், "దూర్వాః"= அறுகம்புல், "వ్రీహయః"=நெற்பயிரின்புல், "బల్బజాః"=முஞ்சிப்புல் "పుండరీకాణి"=வெண்டாமரையிதழ், என்னு மிவ்வேழ்வகையினையும் "బర్హిస్"=பரிஹிசு என்று கூறப்படும். எ-று காண்க.

## இனி விலக்காகிய தருப்பைகள்.

ஒழிக்கத்தக்க தருப்பைவகைகளை ஹாரீதர் கூறுகின்றனர். హారీతః॥ పథిదర్భాశ్చితౌ దర్భాయే దర్భా యజ్ఞభూమిషు। తరణాసనగర్భేషు షట్సు దర్భాన్ వివర్జయేత్॥=வழிக்கண்ணேயுள்ள தருப்பை, பிணஞ் சுடுமிடத்துள்ள தருப்பை, வேள்விச்சாலைகளிலுள்ள தருப்பை, குறுக்கிட்டுத் தாண்டப்பட்ட தருப்பை, ஆசனம்=படுக்கை முதலியனவாகச் சமைக்கப்பட்டுள்ள தருப்பை, நீர்நிலைக்கணுள்ள தருப்பை என்னு மிவ்வறுவகைத் தருப்பைகளையும் விட்டொழித்தல் வேண்டும். எ-றுகாண்க.

இதுவுமது. "బ్రహ్మయజ్ఞేచయేదర్భాయేదర్భాః పితృతర్పణే। హతామూత్రపురీషాభ్యాం తేషాంత్యాగో విధీయతే"=பிரமவேள்வி= பாராயணத்துள் உபயோகிக்கப்பட்ட தருப்பை, பிதிர் கருமத்தி லுபயோகிக்கப்பட்ட தருப்பை, மலமூத்திரங்களால் சீரணித்த தருப்பை, இவைகளையு மொழிக்கவேண்டியது. எ-று காண்க.

இதுவுமது. "అపూతాగర్హితాదర్భాయే సంఛిన్నానఖైస్తథా। క్వథితానగ్నిదగ్ధాంశ్చ కుశాన్యత్నేన వర్జయేత్"=சுத்தமில்லாதது, பழிக்கப்பட்டது, நகத்தாற் கிள்ளப்பட்டது, அவிக்கப்பட்டது, சுடப்பட்டது, ஆகிய வித்தருப்பைகளையு முயற்சியோடும்விடவேண்டும். எ-று காண்க.

## தருப்பை பறிக்குங்காலம்.

தருப்பைகளைக் கொய்வதின் காலநியமத்தை ஹாரீதர் கூறினர். హారీతః॥ "మాసేనభస్య మావాస్యాతస్యాం దర్భోచ్చయోమతః। అయాతయామాస్తేదర్భానియోజ్యాస్యుఃపునఃపునః"=ஆவணிமாசத்து அமாவாசை தினத்தில் தருப்பை கொய்வது உடன்படத்தக்கது. "అయాతయామాః"=கழிந்த சாமப்பொழுதினையுடைய தல்லாதது எனவே பழைமைப்படாதது= புதியது. என்பது, கழிந்தவருடத்தியதாகாது என்றகருத்து) அப்படிப்பட்ட தருப்பையை அப்போதைக்கப்போது உபயோகித்துக் கொள்ளவேண்டுவது. எ-று. காண்க.

சங்கர். శంఖః॥ "దర్భాఃకృష్ణాజినం మంత్రాబ్రాహ్మణాశ్చవిశేషతః। అయాతయామాన్యేతానినియోజ్యానిపునఃపునః" = தருப்பைகளும், ஆண்மான்தோலும், மந்திரங்களும், வேதியர்களும், ஆகிய இவற்றினைப் புதியது புதியதாகவே யுபயோகிக்கவேண்டும். எ-று. காண்க.

## பவித்திரந்தரித்தலின்பயன்.

பவித்திரந் தரித்தலின் பயனை மார்க்கண்டேயர் கூறினர். మార్కండేయః॥ కుశపాణిస్సదాతిష్ఠే ద్బ్రాహ్మణోదంభవర్జితః। సనిత్యంహంతిపాపానితూలరాశిమివానలః"=அந்தணன் எப்பொழுதும் இடம்பத்தையொழித்து, தருப்பையைக் கையில்பற்றி யிருக்கவேண்டும். அவன் பஞ்சுப் பொதியை நெருப்புச்சுட்டதுபோலப் பாவத்தை யழிப்பன். எ-று காண்க.

சாதாதபர். శాతాతపః॥ "జపేహోమేచదానే చస్వాధ్యాయేపితృతర్పణే। అశూన్యంతుకరంకుర్యా త్సువర్ణరజతైఃకుశైః=செபத்திலும், ஹோமத்திலும், தானத்திலும், வேதமோதுதலிலும், தென்புலத்தார் கடன்கழித்தலிலும், பொன் வெள்ளி தருப்பை யிவைகளைக்கையிலணிந்திருக்கவேண்டுவது. எ-று காண்க.

## பவித்திரத் திரம்.

பவித்திரத்தின்வகைமையைக்காத்தியாயனர்கூறுகின்றனர். కాత్యాయనః॥ "అనంతర్గర్భిణం సాగ్రంకుశంద్విదళమేవచ। ప్రాదేశమాత్రం విజ్ఞేయంపవిత్రంయత్రకుత్రచిత్"பாம்பினது சுருட்சிக்கிடக்கையை யொத்த

முடிச்சூழலையுடையதும், முனையோடும் கூடியதும், தருப்பைகளா லமைந்ததும், இரட்டை யிதழாற் சமைந்ததும் "ప్రాదేశమాత్రః" = ஒரொட்டை யளவுடையதுமாகிய விதனை யாண்டாயினுமாகப் பவித்திரமெனவுணர்க. எ-று. காண்க.

மார்க்கண்டேயரும். "మార్కండేయోపి॥ చతుర్భిర్దర్భపుంజీలైర్బ్రాహ్మణస్యపవిత్రకం। ఏకైకన్యూనముద్దిష్టం వర్ణేవర్ణేయథాక్రమం"=முனைகளோடுங்கூடிய நான்கு தருப்பைகளால் வேதியனுக்குப் பவித்திரம் விதிக்கப்பட்டது; ஏனைய இருசாதிக்கும் முறையே யொவ்வொன்று குறைவுடையதாம். எ-று. எனவே. அரசர்க்கு மூன்று, வைசியர்க்கிரண்டு எனக்கொள்க.

இதுவுமது. "త్రిభిర్దర్భైశ్శాంతికర్మ పంచభిః పౌష్టికంతథా। చతుర్భిశ్చాభిచారాఖ్యం త్రిభిఃపైత్రేపవిత్రకం"=சாந்திகருமத்தில் நான்கு தருப்பையாலும், பௌஷ்டிக கருமத்தில் ஐந்து தருப்பையாலும், அபிசாரகருமத்துள் நான்கு தருப்பையாலும், பிதிர் கருமத்தில் மூன்று தருப்பையாலும் பவித்திரம் அமைக்கவேண்டும். எ-று. காண்க. சாந்திகருமம் - எது - துன்பத்தை யொழிக்குங்கருமம். பௌஷ்டிகம் - எது - இன்பத்தை விளைவிப்பது. அபிசாரம். எது - சத்துருநாசஞ் செய்வது.

அத்திரி. "అత్రిః। బ్రహ్మయజ్ఞేజపేచైవ బ్రహ్మగ్రంధిర్విధీయతే। భోజనే వర్తులంప్రోక్తమేవంధర్మోవ్యవస్థితః"= பிரமவேள்வியிலும், செபத்திலும், பவித்திரத்திற்குப்பிரமமுடி யிருக்கவேண்டும். புசித்தலில் முடியின்றியிருக்கவேண்டும்என்று ஆசாரதருமம் வகுக்கப்பட்டுள்ளன.

தருப்பைவிதி முற்றிற்று.

---

## இனி ஸ்நானவிதி வருமாறு.

---

மூலம். "సంధ్యాస్నానం" என்றதனுள் ஸ்நானம் என்றமொழிக்குஉபலக்கணத்தாற் கொள்ளக்கிடந்த வைகறையிற் றுயிலுணர்ந் தெழுதல்முதல் தருப்பைவிதிவரையிலும்கூறப்பட்டன; ஈண்டு அம்மூலத்துள்ள ஸ்நாநம்என்பது கூறப்படுகின்றது.

கூர்மபுராணத்துள், కూర్మపురాణే॥ "ప్రక్షాళ్యదంతకాష్ఠంతుభక్షయిత్వా యథావిధి। ఆచమ్య ప్రయతోనిత్యం ప్రాతస్స్నానం సమాచరేత్"=கழுவியபின்பு விதிப்படிப் பற்கோலால் பல்விளக்கிக்கொண்டு சுத்தாசமனஞ் செய்து முயற்சியோடும் வாய்பேசாது நாடோறும் உதயகாலத்தில் நன்றாக நீராடவேண்டும். எ-று காண்க.

## உதயமுழுக்கு

வியாசர் వ్యాసః॥ "ఉషఃకాలేతుసంప్రాప్తే కృత్వాచావశ్యకంబుధః। స్నాయాన్నదీషుశుద్ధాసుశౌచంకృత్వాయథావిధి। అస్నాత్వానాచరేత్కర్మ జపహోమాది కంచయత్। లాలాస్వేదసమాకీర్ణ శ్శయనాదుత్థితః పుమాన్। అత్యంతమలినఃకాయో నవచ్ఛిద్రసమన్వితః। స్రవత్యేవదివారాత్రం ప్రాతస్స్నానంవిశోధనం। ప్రాతస్స్నానం ప్రశంసంతి దృష్టాదృష్టఫలంహితత్। సర్వమర్హతిశుద్ధాత్మా ప్రాతస్స్నాయీజపాదికం"=உஷக்காலம் வந்தஅளவிலே, உணர்ந்தவன் செய்யத்தக்க ஒரு தலையான தொழிற்கடனை முடித்துவிதிப்படிச்சுத்தஞ்செய்து பரிசுத்தமாகிய யாற்றுநீரிலே நீராடவேண்டுவது. நீராடாமலே செபம் ஹோமம் முதலிய கருமங்களைச் செய்யலாகாது. வாயினின்றும் வடிநீர் (சொள் என்று வழங்குகின்றது) வியர்வை இவைகளாற் பூசப்பட்ட வுடம்பையுடையவன் படுக்கையைவிட்டெழுந்து உடம்பு மிக அழுக்கோடுங்கூடி யொளியற்றுஒன்பது துளைகளையுடையதாய் மலங்களை யவற்றின்வழியே இரவும் பகலும் மொழுகவிட்டுக் கொண்டிருக்கின்றது. ஆதலின், வைகறையில் நீராடுதல் அவ்வுடம்பினைச் சுத்தஞ்செய்வதாக விருக்கின்றது. அந்த முழுக்கு, கண் காணத்தக்க பயனையும் கண்ணாற் காணக்கூடாத புண்ணியப்பயனையுந் தருதலுடையதென்று பெரியோர் புகழ்ந்து கூறுகின்றனர். காலையில் நீராடுவோன் சுத்தமான உள்ளமுடையவனாதலின் செபமுதலிய எல்லாக் கருமங்களையும் செய்தற் குரியவனாகின்றான். எ-று காண்க.

இதுவுமது. "ఋషీణామృషితానిత్యం ప్రాతస్స్నానాన్నసంశయః। అలక్ష్మీః కాలకర్ణీచదుస్స్వప్నం దుర్విచింతితం। ప్రాతస్స్నానేనపాపాని పూయంతేనాత్రసంశయః"=இருடிகளுக்கு அவ்விருடித்தன்மை உதயமுழுக்கினாலேயே கிடைத்தது. ஒளியற்றிருத்தல் அல்லது வறுமையோடு மொத்துண்ணல், காலவேறுபாட்டால் வருங் குற்றங்கள் அல்லது நோய்முதலாயின, தீக்கனவுகள், தீயநினைவுகள், ஏனைய பா

வங்களும் காலைமுழுக்கினால் ஒழிக்கப்பட்டுச் சுத்தமுண்டாகின்றது. இவ்விடயத்தில் ஐயமின்று. எ-று. காண்க.

தக்ஷரும். దక్షోపి॥ "అజ్ఞానాద్యదివామోహాద్రాత్రౌ దుశ్చరితంకృతం। ప్రాతస్స్నానేన తత్సర్వంశోధయంతిద్విజాతయః" = அறியாமையாலாயினும், ஆசையாலாயினும், இராக்காலத்தில் செய்யப்பட்ட தீயசெய்கையால் விளைந்த குற்றங்களை யிருபிறப்பாளர் காலை முழுக்கினால் கழுவிச் சுத்தஞ்செய்து கொள்கின்றனர். எ-று. காண்க.

## ஸ்நாநவகை.

நீராடல்வகையை. "சதுர்விம்சதிமதத்துள்" கூறப்பட்டது. చతుర్వింశతిమతే॥ స్నానమబ్దైవతైర్మంత్రైర్వారుణైశ్చమృదాసహ। కుర్యాద్వ్యాహృతిభిర్వాథయజ్ఞంచేదమృచాపిచ"="ఆపోహిష్ఠా"=என்றதுமுதலிய அப்பு=ஜலத்தைத் தேவதையாகவுடைய மந்திரத்தினாலும் "హిరణ్యశృంగం" என்றதுமுதலிய வருணதேவதாக மந்திரத்தினாலும், "భూమిర్ధేనుః" என்றதுமுதலிய பூமிமந்திரத்தால் அபிமந்திரிக்கப்பட்ட மண்ணினோடும், "భూః" என்றதுமுதலிய வியாஹிருதிமந்திரங்களாலும், "యజ్ఞంచేదం" என்ற இருக்குவேத மந்திரத்தாலும் நீராடல் வேண்டும் எ-று காண்க.

## காலைநீராடல் வகை.

காத்தியாயனர். కాత్యాయనః॥ "యథాహనితథాప్రాతర్నిత్యం స్నాయాదతంద్రితః। దంతాన్ప్రక్షాళ్యనద్యాదౌ గృహేచేత్తదమంత్రవత్"=பகற்பொழுது எவ்வாறோ? அவ்வாறே நித்தமும் காலையில் உறக்கச்சோர்வை யொழித்துப் பல்விளக்கி நதிமுதலிய விடங்களிற்சென்று நீராடவேண்டும்; வீட்டிற் செய்வதாயின் மந்திரங்கள் வேண்டுவதின்று. (எனவே சுருக்கமாக மந்திரங்களைக் கூறுதலமையும் என்றபடி) எ-று.

இதுவுமது. "అల్పత్వాద్ధోమకాలస్య బహుత్వాత్స్నానకర్మణః। ప్రాతస్సంక్షేపతస్స్నానం హోమలోపోవిగర్హితః",=வேள்வி செய்யுங்காலஞ் சுருக்கமா யிருத்தலாலும் நீராடல் விதி மிகுத்திருத்தலாலும் காலையில் சுருக்கவகையால் முழுகினாற் போதும். நீராடலாற் போதைக்கழித்து வேள்விக் காரியத்திற்குக் காலத்தைக் கெடுத்துக் கொள்வதை விலக்கப்பட் டிருக்கின்றது.

## ஸ்நாநகால நியமம்.

நீராடத்தக்க காலநியமத்தை ஜாபாலி கூறினர். జాబాలిః॥ సతతంప్రాతరుత్థాయ దంతధావనపూర్వకం। ఆచరేదుషసిస్నానం తర్పయేద్దేవమానుషాన్" = எப்பொழுதும் உஷக் காலையிலெழுந்து பல்விளக்கி, நீரின்மூழ்கி தேவதருப்பணமும் இருடிதருப்பணமும் செய்ய வேண்டுவது. எ-று காண்க.

சதுர்விம்சதிமதம். చతుర్వింశతిమతే॥ "ఉషస్యుషసియత్స్నానం సంధ్యాయాముదితేపివా। ప్రాజాపత్యేనతత్తుల్యం సర్వపాపప్రణాశనం" = உஷைக்காலங்களிலும், சந்திகாலங்களிலும், சூரிய வுதயகாலத்திலும், நீராடுதல் பிரஜாபத்தியமென்னும் விரதத்தோ டொப்பானது. எல்லாப்பாவங்களையும் நன்கு ஒழிக்கத்தக்கதாம். எ-று காண்க. இவ்விடத்து "ఉదితే"=சூரியனுதயமாதலும். என்றமொழிக்கு வெளிப்பட வருமுன் என்று பொருள் கொள்க; என்னை? சூரியன் வெளிப்பட்டபின்பும் ஸ்நானத்திற்குக் காலம் வகுத்தவாறுயின் சந்தியானுஷ்டானகாலம் தவறிவிடும் நீராடியபின்னரே சந்திக்கடன் செய்தல் வேண்டுமாதலின், சூரியன் வெளிப்பட்ட பின்னரே சந்தியாவந்தனமாகவெனில்? அதனை யாஞ்ஞுவற்கியர்மறுத்தனர். அது வருமாறு.

யாஞ்ஞுவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "సంధౌసంధ్యాముపాసీత నాస్తగే నోద్గతేరవౌ।" = சந்திகாலத்தில் சந்தியாவந்தனஞ் செய்யவேண்டுவது. சூரியன் அஸ்தமயமானபின்பும் சூரிய னுதயமானபின்பும் சந்தியாவந்தனஞ் செய்யலாகாது. எ-று காண்க.

நூல்களிற் கூறியவாறு நீராடுவோன் அகமருடண கருமத்தைச் செய்யவேண்டுவது. அதனை சௌனகர் கூறினர். శౌనకః॥ "స్నాత్వాచాంతోవారిమధ్యే త్రిఃపఠేదఘమర్షణం" = நீராடி ஆசமித்து நீர்நடுவே "அகமருடண சூக்தம்" என்னும் மந்திரங்களை முக்காலோதவேண்டுவது. எ-று காண்க.

## நீராடலி னுறுப்பாகிய தருப்பணம்.

பிராமாண்ட புராணத்துள் ஸ்நாநத்திற்கு அங்கமாகிய தருப்பணத்தைக் கூறியுள்ளது. బ్రహ్మాండపురాణే॥ నిత్యంనైమిత్తికంచకామ్యం త్రి

విధంస్నానముచ్యతే। తర్పణంతుభవేత్తస్య అంగత్వేనప్రకీర్తితం” =நித்தமெனவும், நைமித்திகம் எனவும், காமியமெனவும் நீராடுதல் மூவகைப்படும். தருப்பணமும் அவற்றிற்கு அங்கமென்று கூறப்பட்டது. எ-று காண்க.

இயமனும். యమోపి॥ ద్వౌహస్తౌయుగ్మతఃకృత్వా పూరయేదుదకాంజలిం। గోశృంగమాత్రముద్ధృత్య జలమధ్యేజలంక్షిపేత్”=இரண்டு கைகளையும் ஒருங்குசேர்த்து நிரம்ப நீரைப் பூரித்துக்கொண்டு பசுவின் கொம்பினுயரமளவாகக் கைமேலெடுத்து, நீர்நிலை நடுவே யந்நீரை யிறைத்தல் வேண்டும். எ-று காண்க.

கார்ஷ்ணாசனி. కార్ష్ణాజినిః॥ “నాభిమాత్రజలేస్థిత్వా చింతయన్నూర్ధ్వమానసః।” = உந்திவரையில் நீரிலிருந்துகொண்டு மேல்நோக்கிய உள்ளத்தால் சிந்தித்து (தருப்பணம் செய்தல்வேண்டும் எ-று காண்க.

நரசிங்கபுராணம். నృసింహపురాణే॥ “పితౄనృషిగణాంస్తైవానద్భిస్సంతర్పయేత్తతః। దేవాన్దేవగణాంశ్చాపి మునీన్మునిగణానపి॥ பிதிரரையும், இருடிகணங்களையும், தேவர்கணங்களையும், களிப்பிக்கும்படிநீரினல் தருப்பணஞ் செய்யவேண்டும். தேவதைகளையும், தேவகணங்களையும், முனிவரையும், முனிகணங்களையும், நீரினற் றருப்பிக்கவேண்டுவது.எ-றுகாண்க.கணம்=கூட்டம். தருப்பணம் = திருத்தி. தருப்பித்தல்=திருத்திசெய்தல்.

சதுர்விமிசதிமதம். చతుర్వింశతిమతే॥ “స్నానాదనంతరంతత్రతర్పయేత్పితృదేవతాః। ఉత్తీర్యపీడయేద్వస్త్రం సంధ్యాకర్మతతఃపరం”=நீராடியபின் அந்த நீர்நிலையிற்றானே பிதிர்தேவர்களைத் திருத்திசெய்யவேண்டும். மேலேறி யுடுத்த வாடையைப் பிழியவேண்டுவது அதன்பின் சந்தியாவந்தனஞ் செய்யவேண்டுவது. எ-று காண்க.

பாரத்துவாஜரும். భారద్వాజోపి॥ “వస్త్రోదకమపేక్షంతేయే మృతాదాసకర్మణః। తస్మాత్సర్వప్రయత్నేన జలంభూమౌనిపాతయేత్”=அடிமைத் தொழிலே செய்திருந் திறந்துபோனவர்கள் உடுத்த ஆடைநீரை விரும்புகின்றனர் ஆதலின், எல்லா முயற்சியாலும் மண்ணின்மேல் விடவேண்டுவது. எ-று காண்க.

உடுத்த வுடையைப் பிழிவதற்குரிய மந்திரம். "యేచాస్మత్కులేజాతా అపుత్రాగోత్రిణోమృతాః। తేగృహ్ణంతుమయాదత్తం వస్త్రనిష్పీడనోదకం" = எங்கள் குலத்திற் பிறந்தவர்களும், புதல்வரில்லாதவர்களும், எங்கள் கோத்திரமுடையவர்களுமாய், யாவர் சிலரிறந்துள்ளாரோ? அவர்கள் வஸ்திரம் பிழிந்து என்னாற் கொடுக்கப் பட்டநீரைப் பெற்றுக்கொள்க. எ - று காண்க.

உதயநீராடன்மரபு முற்றிற்று.

---

## ஆடையுடுத்தல்.

நீராடியபின்பு ஆடை யுடுக்கவேண்டுவதனை வாமன புராணத்துட் கூறப்பட்டது. వామనపురాణే॥ "ఏవంస్నాత్వాతతఃపశ్చా దాచమ్యచయథావిధి। ఉత్థాయవాససీశుక్లే శుద్ధేతుపరిధాయచ" = இவ்வாறு நீராடிப் பின்பு விதிப்படி ஆசமனஞ்செய்து மேலெழுந்து பரிசுத்தமாகிய இரண்டு வெள்ளையுடையை உடுத்துக்கொண்டு (கருமஞ் செய்க) எ-று காண்க.

யோகயாஞ்ஞுவற்கியர். యోగయాజ్ఞవల్క్యః॥ "స్నాత్వైవంవాససీశుక్లే అచ్ఛిన్నే పరిధాయచ। ప్రక్షాళ్యోరూమృదాద్భిశ్చహస్తౌప్రక్షాళయేదితి" = இங்ஙனம் நீராடிக் கிழிபடாதிருக்கின்ற இரண்டு வெள்ளாடையை யுடுத்துக்கொண்டு, மண்ணினாலும் நீரினாலும் தொடைகளை அலம்பிக்கொள்ளவேண்டுவது. எ-று காண்க.

ஈண்டுச் சில விசேடங்களை வியாசர் கூறினர். వ్యాసః॥ "నోత్తరీయమధఃకుర్యాన్నోపర్యస్య ధరాంబరం। నాంతర్వాసావినాజాతు నివసేద్వసనం బుధః" = அறிந்தவன்மேற் போர்வையாடையை அரையில் உடுக்கலாகாது. அரையிலுடுக்கும் ஆடையை மேற்போர்க்கலாகாது; 'అంతర్వాసః" = உள்ளே போர்க்கத்தக்க மற்றோராடையில்லாமலே எப்போதும் மேலாடையைப் போர்க்கலாது. எ-று காண்க.

மார்க்கண்டேய புராணம். మార్కండేయపురాణే॥ "అపమృజ్యాన్నచస్నానే గాత్రాణ్యంబరపాణిభిః। నచనిర్ధునయాత్కేశాన్వాసశ్చైవనపీడయేత్" =

நீராடும்பொழுது ஆடையாலாயினும் கையாலாயினும் உடம்பைத் தொடைக்கலாகாது தலைமயிரை உதறலாகாது. உடுத்த வுடையைப் பிழியலாகாது. எ-று காண்க.

அதன் காரணத்தைத் தேவலர் கூறினர். దేవలః॥ పిబంతిశిరసో దేవాః పిబంతిపితరోముఖాత్। మధ్యతస్సర్వగంధర్వా అధస్తాత్సర్వజంతవః। తస్మాత్స్నాతో నావ మృజ్యాత్స్నానశాట్యానపాణినా"=தலையினின்றும் வடிகின்ற நீரைத் தேவர்கள் பானஞ்செய்கின்றனர். முகத்தினின்றும் விழுகின்ற நீரைப் பிதிரர்கள் பானஞ்செய்கின்றனர். இடைக்கண் ஒழுகுகின்ற நீரை யெல்லாக்கந்தருவரும் பானஞ்செய்கின்றனர். கீழ்விழுந்த நீரை யெல்லா வுயிர்களும் பானஞ்செய்கின்றன. ஆதலின் நீராடினவன் நீராடிய வுடையாலாயினும் கையாலாயினும் தொடைக்கலாகாது. எ-று காண்க.

வியாசரும், వ్యాసోపి॥ "తిస్రఃకోట్యోర్ధకోటిశ్చ యావంత్యంగరుహాణివై। స్రవంతిసర్వతీర్థాని తస్మాన్నపరిమార్జయేత్"=மூன்றுகோடியேயைம்பதுநூறுயிர வுரோமங்களினின்றும் எல்லாத் தீர்த்தங்களும் ஒழுகுகின்றன ஆதலின், அதனைத் தொடைத்தலாகாது. எ-று காண்க.

## நீராடியபின் செய்யலாகாதன.

ஜாபாலி. జాబాలిః॥ "స్నానంకృత్వార్ద్రవాసా స్తువిణ్మూత్రంకురుతే యది। ప్రాణాయామత్రయంకృత్వా పునస్స్నానేనశుధ్యతి" =நீராடியீரவுடையையுடையவனாய் மலமூத்திரங்களை விட்டால் மூன்றுதரம் பிராணாயாமஞ்செய்து மறுபடியும் நீராடலாற் சுத்தனாகின்றனன் எ-று காண்க.

## ஆடையுரிமை.

ஆடையின்விடயத்தில் பிருகு சிலவிசேடங்கூறினர். வருமாறு. భృగుః॥ "బ్రాహ్మణస్యసితంవస్త్రం నృపతేరక్తముల్బణం। పీతంవైశ్యస్యశూద్రస్య నీలంమలవదిష్యతే" = அந்தணனுக்கு வெள்ளாடை, அரசனுக்கு மிகச் சிவந்தவாடை, வைசியனுக்குப் பொன்மைநிறவாடை, சூத்திரனுக்கு நீலவாடை, அழுக்காடை, உரியவெனக்கொள்க. எறு. காண்க.

*பிர்ஜாபதி.* ప్రజాపతిః॥ "క్షౌమం వాసః ప్రశంసంతి తర్పణే పరశం తథా। కాషాయధాతువస్త్రం చ నోల్బణం తత్ర కర్హిచిత్। స్వయం ధౌతేన కర్తవ్యాః క్రియా ధర్మ్యా విపశ్చితా। న తు నేజకధౌతేన నాహతేన న కుత్రచిత్" = அறிவுடையோனால் தருமமாயுள்ள கிரியைகள் இயற்கையாகவே சுத்தஞ்செய்து வெண்ணிற முடைய ஆடையோடுசெய்யப்படும். காவிதோய்த்த ஆடையும், மிகவுஞ்சிவந்த ஆடையும் எவ்விடத்துமாகாது. நீரிற்றுவையாததும் நாஹதவஸ்திர முமாகாது. எறு. காண்க.

அஹதவஸ்திரவிலக்கணத்தைப்புலத்தியர்கூறினர். పులస్త్యః॥ "ఈషద్ధౌతం నవం శ్వేతం సదశం యన్న ధారితం। అహతం తద్విజానీయాత్ సర్వకర్మసు పావనం" = சிறிதுவெள்ளென வெளுக்கப்பட்டதும், புதியதும், மிகவெளுத்ததும், கறையிட்ட முன்றானையோடுகூடியதும், உடுக்கப்படாததுமாகிய ஆடையை அஹதம் என்று அறிக. அது எல்லாக்கருமத்திலும் பரிசுத்தமானது. எறு. காண்க. "హతం=ஹதம் = அழிக்கப்பட்டது (எனவே கெட்டது) அது ஆகாதது "అహతం=அஹதம்" (எனவேநல்லது) அஹதமல்லாதது நாஹதம் (எனவேகெட்டது) என வொருமொழி யாக்கப்பட்டது.

போதாயனர். బౌధాయనః॥ కర్తవ్యముత్తరం వాసః పంచస్వేతేషు కర్మసు। స్వాధ్యాయహోమదానేషు భుక్త్యాచమనయోస్తథా" = வேதமோதல், வேள்வி, தானம், உண்டி, ஆசமனம் என்னு மிவ்வைந்து கருமத்திலும் மேலே ஆடைபோர்த்திருக்க வேண்டுவது. எறு. காண்க. ஐந்துஎன்ற சொல் உபலக்கணவிதியால் எல்லாக் கருமத்திற்கும் எனப் பொருள் படுகின்றது. உத்தரீயம் = பூணநூலைப் போலு மிடத்தோளிலிருந்து வலக்கைகிழாகப்போர்த்துள்ள மேலாடையில்லாதவன் கருமமாத்திரத்திற்கு (எனவே எல்லாக்கருமத்திற்கும் கூடாவென்று விலக்கப்பட்டிருத்தலின்).

## தக்கஆடையில்வழிகருமஞ்செய்யலாகாது.

அங்ஙனம் பிருகுவாற் கூறப்பட்டது. భృగుః॥ "వికచ్ఛోనుత్తరీయశ్చ నగ్నశ్చావస్త్ర ఏవచ। శ్రౌతం స్మార్తం తథా కర్మ న నగ్నశ్చింతయేదపి" = கச்சம்=கொய்சகம் சோர்ந்தவன், மேலாடையில்லாதவன், நக்கினன், ஆடையே யில்லாதவன், சுரோளதகருமத்தையும் அவ்வா

ரே ஸ்மார்த்த கருமத்தையும் செய்யலாகாது. நக்கன் நினைத்த லுமாகாது. எ-று. காண்க.

## நக்கினனிலக்கணம்.

பிருகு. భృగుః॥ "నగ్నోమలినవస్త్రస్స్యా న్నగ్నశ్చార్ధపటస్స్మృతః। నగ్నస్తుదగ్ధవస్త్రస్స్యాన్నగ్న స్స్యూతపటస్తథా"=அழுக்காடையை யுடையவனும், ஈரஆடையை யுடையவனும், தீப்பட்ட ஆடையை யுடையவனும், தைத்தஆடையை யுடையவனும் நக்கினன் எனக்கூறப்பட்டான் எ-று காண்க.

## ஓராடையாகாதென்றது.

விஷ்ணு புராணம். విష్ణుపురాణే॥ "హోమదేవార్చనాద్యాసు క్రియాసుపఠనే తథా। నైకవస్త్రః ప్రవర్తేత ద్విజో నాచమనే జపే"=வேள்வி, தேவபூசை முதலிய கருமங்களிலும், பாராயணத்திலும், ஆசமனஞ் செய்கையிலும், ஜபகாலத்திலும், இருபிறப்பாளன் ஓரேயாடையுடையவனாய் யிருக்கலாகாது. எ-று காண்க.

கோபிலரும், గోభిలోపి॥ "ఏకవస్త్రో న భుంజీత నకుర్యా ద్దేవతార్చనం"=ஓராடை யுடுத்தவனாய் புசிக்கலாகாது. கடவுட்பூசையும் செய்யலாகாது. எ-று. காண்க.

## ஒழிபு.

ஆண்டு, யோகயாஞ்ஞவற்கியர். அனுகற்பங் கூறினர். அனுகற்பம் = எய்தியதன்மே லெய்துவித்தல். యోగయాజ్ఞవల్క్యః॥ "అలాభే ధౌతవస్త్రస్య శాణక్షౌమాదికానిచ। కుతపంయోగపట్టంచ వివాసాస్తున వైభవేత్"= சுத்தமான உடை கிடையாவழி நாருடை = நார்மடி, பட்டாடை, வெண்கம்பளம், யோகபட்டிகை, இவைகளைத் தரித்தல்வேண்டும். ஆடையின்றிவேள்விசெய்யலாகாது. எ-று. காண்க.

ஆடையின் விடய முற்றிற்று.

## புண்டரவிதி.

ஸ்காந்தம். స్కాందే॥ "ధృత్వాపుండ్రంలలాటేతు శ్రౌతస్మార్తక్రియాం ద్విజః। కుర్వీతపితృకర్మాణి నిత్యంకుర్యాదపుండ్రకః" = இருபிறப்பாளன் நெற்றியில்புண்டரம்=திருவெண்ணீற்றை யணிந்து சுரௌதஸ்மார்த்த கருமங்களைச் செய்யவேண்டுவது. அவற்றுட் பிதிர்கருமத்தைப் புண்டரமில்லாமலே செய்யவேண்டும். எறு. காண்க.

இதுவுமது. "తిర్యక్పుండ్రంశివప్రీత్యై పాపఘ్నంజ్ఞానకారణం। ఊర్ధ్వపుండ్రంహరిప్రీత్యై సుఖసంపుష్టివర్ధనం। అన్యాన్యపిచపుండ్రాణి తత్తద్దేవప్రియాణివై"= திரியக்காகிய புண்டரம் சிவப்பிரீதியாயுள்ளது. அது பாவத்தை யொழித்து மெய்ஞ்ஞானத்தைத் தரும். ஊர்த்துவ புண்டரம் விஷ்ணுப்பிரீதியா யுள்ளது. அதுசுகத்தையும் புஷ்டியை=விருத்தியையும் தரும். ஏனையபுண்டரங்கள் அந்தந்தத் தேவதைகளின் பிரீதியாயுள்ளன. எறு. காண்க.

### வைதிகவெண்ணீற்றுப் புண்டரவிதி.

சூதசங்கிதை வேள்வி விசேடகாண்டம் - ௧௬ - வது. அத்: సూతసంహితాయాం యజ్ఞవైభవఖండే ॥ ౧౬ ॥ అధ్యాయే॥ "అగ్నిహోత్రోద్భవం భస్మ శుద్ధమాదాయసాదరం। అగ్నిరిత్యాదిభిర్మంత్రైర్జాబాలోక్తైశ్చసప్తభిః। అభిమంత్ర్యమహాదేవం భావయిత్వాసమాహితః। భస్మనాతేనసర్వాంగం సముద్ధూళ్యతతఃపరం। తిర్యక్త్రిపుండ్రముక్తేన వర్త్మనామతిమత్తరః। లలాటేచతథాస్కంధే తథైవోరసిధారయేత్" = அக்கினிஹோத்திரத்திற் பிறந்த சுத்தமாகிய திருவெண்ணீற்றைக் கொண்டு "అగ్నిరితి" என்றதுமுதலிய "பிருஹத்ஜாபாலோபநிஷத்தி"லுள்ள எழுமந்திரங்களால் மந்திரித்து மாஹாதேவனைத் தியானித்து, அவ்வெண்ணீற்றினைச் சருவாங்கமுமாக வுத்தூளனஞ் செய்துகொள்ள வேண்டுவது. பின்பு "காலாக்கினிருத்திரம்" என்னும் பஞ்சருத்திரத்திலுள்ளதோர் உபநிடதத்தில் கூறியிருக்கும் விதிப்படித் திரியக்காகத் திரிபுண்டரத்தைச் சிரம், நெற்றி, மார்பு, தோள் முதலிய மூட்டிடங்களுமாகிய இவ்விடங்களிற் றரிக்கவேண்டுவது. எறு. காண்க.

## திருவெண்ணீறு தரியாமலிருக்கலாகாது.

இதுவுமது. "సత్యాద్ధర్మాచ్చకుశలాత్" என்று தொடங்கி "భస్మస్నానాదపి। త్రిపుండ్రధారణాచ్చైవ సదానప్రచ్యుతోభవేత్"= சத்தியத்தினும், தருமத்தினும், நல்லுணர்ச்சியாலும், திருவெண்ணீற்றினுத்தூளனத்தாலும் திரியக்காக மூன்றுபுண்டரங்களைக் குழைத்திடுதலினும் மனிதன் எப்பொழுதும் தவறுமலே யிருக்கவேண்டுவது. எ-று. காண்க.

இதுவும் சூதசங்கிதை, ௨0 - வது - அத்: "జ్ఞానాంగేభ్యస్సమాసేన భస్మైకంపరమంమతం"=ஞானத்துக்குக்காரணமாயுள்ளன வெல்லாவற்றுள்ளும் திருவெண்ணீறு சிறந்தது என்பது முன்னோர் யாவரும் துணிந்ததுணிபு. எ-று. காண்க.

பிருஹத்ஜாபாலோப நிஷத்து. బృహజ్జాబాలోపనిషద॥ "ధిగ్భస్మరహితంఫాలం ధిగ్గ్రామమశివాలయం। ధిగనీశార్చనంజన్మ ధిగ్విద్యామశివాశ్రయాం॥ ఇతి పంచమేబ్రాహ్మణే" = திருவெண்ணீறிடாத நெற்றியை நோக்காதொழிக. சிவாலயமில்லாத வூரைவிட்டொழிக. சிவபூசை செய்யாத பிறப்பை = உடம்பினை வெறுத்தொழிக. சிவனையறிந்து பற்றுத வித்தையை மறந்தொழிக. எ-று. ஐந்தாவது பிராமணத்திற் காண்க.

இன்னும் அவ்வுபநிடதம் - எ-ம் பிராமணம். "సద్యోజాతాది పంచ బ్రహ్మమంత్రైర్గృహ్యాఅగ్ని రితిభస్మేత్యభిమంత్ర్య మానస్తోకఇతిసముద్ధృత్య త్రియాయుషమితిజలేన సమ్మృజ్య త్రియంబకమితిశిరోలలాట వక్షస్కంధేషుధృత్వా పూతోమోక్షీభవతి" "సద్యోజాతం" = சத்தியோசாதம் என்றது முதலிய பஞ்சப்பிரம மந்திரத்தினல் திருவெண்ணீற்றைப் பெற்றுக்கொண்டு "అగ్నిరితిభస్మ" என்றது முதலிய மந்திரங்களாற் செபித்து "మానస్తోకే" என்றமந்திரத்தினல் மேலெடுத்து "త్రియాయుషం" என்றமந்திரத்தினல் சலம்விட்டுக் குழைத்து "త్రియంబకం" என்ற மந்திரத்தினல் தலை, நுதல், மார்பு, தோள் முதலிய விடங்களில் திரிபுண்டரமாகத் தரித்துப் பரிசுத்தனாய் முத்தியை யடைந்தவனுவான். எ-று. காண்க.

திருவெண்ணீற்றின் விளைவு முறை, திருவெண்ணீற்றின் திறம், திருவெண்ணீற்றின் வேறுபாடுகள், ஆவின் இலக்கணம்,

கோமயவிலக்கணம், அதனைச்சோதிக்கும் முறை, விரஜாஹோம விதி, அக்கினிஹோத்திரத்தின் சமஸ்காரம், அதனைச்செய்யும் வகைமை, மந்திரதீக்ஷை, தரிக்கும்முறைமை, தரிக்கத்தக்கஅதி காரிபேதம், அத்திருவெண்ணீற்றின் திருப்பெயர்கள்முதலியவை அவைவந்த காரணம், அதனதுமான்மியம், திருவெண்ணீற்றைப் பழித்தவர்களடையும் குற்றம், அத்திருவெண்ணீற்றின் இன்றிய மையாததன்மை, விபூதிஸ்நாநத்தின் மான்மியம், வெண்ணீற் றின் காப்புவிதி, ஷோடசத்தானத்தின் தேவர்கள், பஞ்சத்தான விரகசியம், முதலியவிடயங்களெல்லாம் விசேடமாக பிரஹத்ஜா பாலோபநிஷத்து, காலாக்கினிருத்திரோப நிஷத்து, அங்கிரசு சங்கிதை, சூதசங்கிதை, முதலியசுருதி மிருதி இதிகாசபுராணங் களில் கூறப்பட்டுள்ளன. அன்றி ஆகமங்களில் விரித்து கூறப் பட்டுள்ளன. ஆண்டுணர்க.

## உளர்த்துவபுண்டரம்.

பிரமாண்டபுராணம். బ్రహ్మాండపురాణే॥ "పర్వతాగ్రేనదీతీరే ధర్మక్షేత్రే విశేషతః। సింధుతీరేచవల్మీకే తులసీమూలమృత్తికా। మృదఏతాస్తుసంగ్రాహ్యా వర్జయేత్వన్యమృత్తికాః" = மலையின்மேல், நதிக்கரையில், புண்ணிய பூமியில், சமுத்திரதீரத்தில், புற்றுக்களில், துளவத்தின் அடியில், உள்ள மண்ணினைப் பெற்றுக்கொள்ள வேண்டுவது: மற்றையமண்களை விடவேண்டும். எ-று. காண்க.

இதுவுமது. "శ్యామంశాన్తికరంప్రోక్తం రక్తంవశ్యకరంభవేత్। శ్రీకరం పీతమిత్యాహు ర్వైష్ణవంశ్వేతముచ్యతే" = கறுத்தமண் அனிஷ்டங்களை யொழிக்கும், செம்மண்வசியத்தைத்தரும், பச்சைமண் செல்வத் தைத் தரும், வெள்ளைமண் வைஷ்ணவம். எறு. காண்க.

இதுவுமது. "అంగుష్ఠఃపుష్టిదఃప్రోక్తో మధ్యమాయుష్కరీభవేత్। అనామి స్నదానిత్యా ముక్తిదాచప్రదేశినీ। ఏతైరంగుళిభేదైస్తు కారయేన్ననఖైస్స్పృశేత్"= பெருவிரல் புஷ்டியைக்கொடுக்கும், நடுவிரல் ஆயுளைத்தரும், ஈற்றயல்விரல் இச்சித்தவுண்டியைத்தரும், சுட்டுவிரல் மோக்ஷத் தைக் கொடுக்கும். இவ்விரலால் செய்யவேண்டுவது நகத்தாற் றொடலாகாது. எறு. காண்க.

இதுவுமது. "వర్తిదీపాకృతింవాపి వేణుపత్రాకృతింతథా। పద్మస్యముకు ళాకారం తథైవకుముదస్యచ। మత్స్యకూర్మాకృతింవాపి శంఖాకార మతఃపరం" =

வற்றியிற் பொருத்தப்பட்ட தீபத்தைப்போலும், மூங்கலிலை யைப்போலும்; தாமரையின் அரும்புபோலும், (அரும்பு=மொக்கு) வெண்டாமரையி னிதழ்போலும், மீனைப்போலும், யாமை யைப்போலும் உருவம்அமைந்த புண்டரங்களைத் தரிக்கவேண்டுவது. எ-று. காண்க. யாமை என்பது இக்காலத்து ஆமையென மருவிற்று.

இதுவுமது. "దశాంగుళప్రమాణంతు ఉత్తమోత్తమముచ్యతే। నవాంగుళంమధ్యమంస్యా ద్దష్టాంగుళమతఃపరం। సప్తషట్పంచభిఃపుండ్రం మధ్యమంత్రివిధంస్మృతం। చతుస్త్రిద్వ్యంగుళైఃపుండ్రం కనిష్ఠంత్రివిధంభవేత్" = பத்துஅங்குலநீள மாகிய ஊர்த்துவபுண்டரம் மிகவுத்தமமானது. ஒன்பதுஅங்குல அளவையுடையது மத்தியமாம். எட்டங்குல அளவையையுடையது அதமமாம். இஃதோர்வகை. மற்றொருவகையாவது, ஏழ், ஆறு, ஐந்து, அங்குல அளவையுடைய மூன்று வகையான புண்டரமும் மத்தியமமாம். நான்கு, மூன்று, இரண்டு, அங்குல அளவையுடைய மூவகைப்புண்டரமும் கனிஷ்டமாயுள்ளது. எ-று. காண்க.

இதுவுமது. "లలాటేకేశవంవింద్యాన్నారాయణమథోదరే। మాధవంహృది విన్యస్య గోవిందంస్కంధమూలకే। ఉదరేదక్షిణేపార్శ్వే విష్ణురిత్యభిధీయతే। తత్పార్శ్వే బాహుమధ్యేతు స్మరేచ్చమధుసూదనం। త్రివిక్రమంకంఠదేశే వామకుక్షౌతువామనం। శ్రీధరంబాహుకేవామే హృషీకేశంతుకర్ణకే। పృష్ఠేచపద్మనాభంతు కకుద్దామోదరంస్మరేత్। నామానిద్వాదశైతాని వాసుదేవేతిమూర్ధని। పూజాకాలేచహోమేచ సాయంప్రాత స్సమాహితః। నామాన్యుచ్చార్యవిధినా ధారయేదూర్ధ్వపుండ్రకం" = கேசவன் முதலிய பன்னிருமூர்த்திகளையும் நெற்றிமுதலிய பன்னிரண்டு அங்கங்களிலும் தியானித்துத் தலைமேல் வாசுதேவனைத் தியானித்துப் பூசை, ஹோமம், முதலியவற்றில் காலை மாலையு மாகிய இருபோதிலும் பன்னிரண்டு ஊர்த்துவ புண்டரங்களையும் தரிக்கவேண்டுவது. எ-று. காண்க. இவை சிலபிரதிகளின் பாடமாக வழங்குகின்றன.

சத்தியவிரதன். సత్యవ్రతః॥ "ఊర్ధ్వపుండ్రంమృదాశుభ్రం లలాటేయస్య దృశ్యతే। చండాలోపివిశుద్ధాత్మా పూజ్యఏవనసంశయః"=மண்ணால் வெள்ளையாகயார்முகத்தில் ஊர்த்தபுண்டரம்காணப்படுகின்றதோ? அவன் நீசனே யாயினும் பரிசுத்தன் செய்யும் பூசையைப் பெற்றுக்

கொள்ளத்தக்க தரத்தையுடையன் இதில் ஐயமில்லை. எ - று. காண்க. இவ்வசனமும் சிலபாடங்களிலே மாத்திரம் வழங்குகின்றது.

கௌதமர். "గోపీచందనోర్ధ్వ పుండ్రధారీనిత్యం పాపంహంతి కేవలం॥ సాలగ్రామశిలాలగ్నం కుంకుమంచందనంచయః। దేహధారయతేనిత్యం సముక్తోభవతి ధ్రువం" = கோபி சந்தனத்தில் ஊர்த்துவ புண்டரத்தைத் தரித்தவன் மிகுந்த பாவங்களை யொழிக்கின்றான். சாளக் கிராமத்திற்குப் பூசித்த செஞ்சந்தனத்தைத் தேகத்திற்றரித்தவன் முத்தனாகின்றான். எ-று. முத்தன்=முத்தியடைந்தவன். இது சிலபாடங்களில் வழங்குகின்றது.

புண்டரவிதி முற்றிற்று.

---

மூலமிருதிகள் எவற்றினுள்ளும் கருமத்திற்குச் சிறந்த அங்கமாகப் புண்டரதாரணம் கூறப்படவில்லை. சுருதிகளில் ஆராயுமிடத்துத் திருவெண்ணீறு தரித்தல் பிரசித்தமாக விருக்கின்றது. மிருத்திகையாலூர்த்துவ புண்டரம் சில வுபநிடதங்களிலுள்ளதென்று சிலர் கூறுகின்றனர். மிருதிகளுள்ளே இரண்டில் மாத்திரம் வேள்வித் தீக்காரியம் முடிந்தபின்பு "காப்பிடுதல்" என்பதாக வெண்ணிறு தரித்தலைக் கூறப்பட்டுள்ளன. அவ்விரண்டு வசனங்களும் வேள்வி விதியில் இந்நூல் வடமொழி யுரையாசிரியராகிய மாதவாசிரியரால் உதகரிக்கப்பட்டுள்ளன. சாதாரணமாக எங்கும் கிடைக்கத்தக்க சூதசங்கிதை முதலிய நூல்களில் வெண்ணீறு தரித்தலை விசேடமாகவும் விரிவாகவும் கூறப்பட்டன. அவ்வாறே கோபிசந்தனவூர்த்துவ புண்டரத்திற்கும் துளவமிருத்திகை தரித்தலுக்கும் "அவிச்சின்னோர்த்துவ புண்டர வசனம்" "சிலபிரமாண்டமுதலிய புராணங்களில்" காணப்படுகின்றன. திரிசூலவடிவாக வெள்ளை மண்ணினால் ஊர்த்துவபுண்டரங்களைத் தரிப்பதற்குக் குறிப்பு மாத்திரையில் கூர்மபுராணத்துள் காணப்படுகின்றது. சில வைஷ்ணவர்கள் பாலிருந்து கிடைத்த ஹாரீதஸ்மிருதி புத்தகங்களில் சுவேத தீபத்திலிருந்து வைநதேயர் கொண்டுவந்த மேலைக்கோட்டை என்றுவழங்குந் திருநாராயணபுரத்து வெண்மிருத்திகையால் "సచ్ఛిద్రోర్ధ్వ పుండ్రధారణం" =சச்சித்திரோர்த்துவ புண்டரதாரணத்தை விதிக்கும் வசனம் காணப்படுகின்றது. காசிதேசத்தாரால் அச்சியற்றி வெளிப்படுத்திய "விம்சதிஸ்மிருதி" = இருபது மிருதிப்புத்தகங்களில் அந்த வசனமில்லை. இவ்வாறு அந்தந்தச்சமயவாதிகளின் நூலில் அநேகவிதமாக அந்தந்தப் புண்டரங்களுக்குப் பிரமாண வசனங்கள் எழுதப்பட்டுள்ளன. அவற்றுள் சிற்சிலவற்றினை மாத்திரஞ் சிற்சிலருடன்பட்டு மற்றுஞ்சிலவற்றை யுடன்படாது விட்டுவிட்டனர். பழை

மையாயுள்ள ஓலைப்புத்தகங்களில் முப்பத்தாறு மூலஸ்மிருதிகள் ஓரே யொரு கோசமாக மூன்று தேசத்திலிருந்து மூன்றுபுத்தகங்கள் எங்களுக்குக்கிடைத்திருக்கின்றன. அவற்றைப் பார்க்குமிடத்து மேற்குறித்த "ஹாரீதவசனம்" என்பது ஹாரீத ஸ்மிருதியுள் இல்லை. முக்கியமாய் இப்புண்டர வழக்குகள் எல்லாம் சமயபேதங்களால் பிரபலித்திருப்பதாகத் தோன்றுகின்றது. இவ்விடயத்தில் உண்மையை விசாரித்து வெளிப்படுத்தத் தொடங்கினால் பலருடைய விரோதங்களுக்குக் காரணமாகின்றது என்று எண்ணி அனைவருள்ளச் சுகத்தையும் விரும்பிய வெங்களிறகு மேற்கொள்ளவில்லை.

ஆயின் மைசூர் சீமை நகரம் டிஸ்டிரிக்டிலிருந்து வந்த பழமையான மாதவிய புத்தகத்துள் புண்டரப்பிரகரணமே கூறப்பட்டதில்லை. பராசரமூலத்துள்ளும் இவ்விஷயம் கூறப்பட்டதில்லை. மற்றைய மிருதிகளுள்ளும் வழங்கவில்லை. ஆதலின் இந்தப்பிரகரணம் இந்நூலில் பாடபேதமாக விருக்கலாமென்று தோன்றுவதற்கு இடமுண்டாயிருக்கின்றது. புண்டரவிஷயத்தில் எங்கருத்தோவெனில்? "పూర్వైరాచరితోధర్మః"=தன்முன்னோர் ஆசரித்தபடி தான் ஆசரிப்பதே தனக்குத் தருமம். எனவே தன்பிதாமுதலிய பெரியர் நடந்தவாறு தான் நடப்பது என்பதேயாம்.

## இதுவும் ஸ்நாநவிதி.

காலை நீராட்டலின் வழியே மற்றைய நீராட்டலின் விதி கூறப்படுகின்றது சங்கர். శంఖః॥ "స్నానంతుద్వివిధంప్రోక్తం గౌణముఖ్యప్రభేదతః। తయోస్తువారుణంముఖ్యం తత్పునష్షడ్విధంభవేత్"=ஸ்நாநம் இருவகைப்படும். பொதுவெனவுஞ் சிறப்பு எனவும். அவ்விரண்டனுள் வாருண ஸ்நாநஞ் சிறப்பு. அது அறுவகைப்படும். எ-று.

## அறுவகை நீராடலாவன.

சிறப்புடைய நீராட லாறுவகைப் படுமென்ன ஆக்கினேய புராணத்துட் கூறப்பட்டன. ఆగ్నేయపురాణే॥ "నిత్యంనైమిత్తికంకామ్యం క్రియాంగంమలకర్షణం। క్రియాస్నానంతథాషష్ఠం షోఢాస్నానంప్రకీర్తితం" = நித்தம், நைமித்திகம், காமியம், கிரியாங்கம், மலத்தை யொழித்தல், கிரியா ஸ்நாநம் என்று ஆறுவகையாக நீராடல் கூறப்பட்டது எ - று. காண்க.

## நித்தஸ்நாநம் வருமாறு.

சங்கர். శంఖః॥ "అస్నాతస్తుపుమాన్నార్హో జపాగ్నిహవనాదిషు। ప్రాతః స్నానంతదర్థంతు నిత్యస్నానంప్రకీర్తితం" = புருடன் நீராடாவிட்டால் செ

பம் ஹோம முதலிய கருமங்களைச் செய்வதற்குத் தக்கவுறைவ தில்லை. அதுநிமித்தம் உதயகாலத்தில் செய்யும் ஸ்நாநம் நித்த ஸ்நானமென்று கூறப்பட்டுள்ளது. எ-று. காண்க.

## நைமித்த ஸ்நானம்.

இதுவுமது. "చండాలశవయూపాంశ్చ స్పృష్ట్వాస్నాతాం రజస్వలాం। స్నానార్హస్తుయదాస్నాతి స్నానంనైమిత్తికంహితత్" = தீண்டாத பஞ்சமனை, பிணத்தை, பூப்பானவளை = மாதவிடாயானவளையும், "చ" என்றதனால், துருக்கர்முதலிய ஊணர்களையும், நாய், பன்றிமுதலிய வற்றையும், மலமூத்திர மெச்சில் முதலிய அருவருக்கும் பொருள்களையும், தீண்டி அந்தத்தீட்டைப் போக்கடித்துக் கொள்ளும்படி செய்யும் ஸ்நாநம் நைமித்திகம் என்னப்படும். எ-று.

## காமிய ஸ்நாநம்.

இதுவுமது. "పుణ్యస్నానాదికంయత్తు దైవజ్ఞవిధిచోదితం। తద్ధికామ్యంస ముద్దిష్టం సకామస్తత్ప్రయోజయేత్." = சோதிடநூலி னறிவன் விதியாலேவப்பட்ட நாளிற்செய்யும் புண்ணியஸ்நாந முதலியது யாது? அதுவே காமியஸ்நாநம் என்று எண்ணப்படுகின்றது. காமித்தவன் அதைச் செய்யவேண்டுவது. எ-று.

## கிரியாங்க ஸ்நாநம்.

இதுவுமது. "జప్తుకామఃపవిత్రాణి అర్చిష్యన్దేవతాఃపితౄన్। స్నానంస మాచరేద్యస్తు క్రియాంగంతత్ప్రకీర్తితం" = பரிசுத்தமா யுள்ளன வற்றைச் செபிப்பதற்கு வேண்டியாயினும், தேவர்களையும் பிதிரர்களையும் பூசிப்பதற்கு வேண்டியாயினும் யார்? ஸ்நாநஞ்செய்வனோ? அது கிரியாங்கஸ்நாநமென்று கூறப்பட்டது. எ-று.

## மலமொழிக்கும் ஸ்நாநம்.

இதுவுமது. "మలాపకర్షణంనామ స్నానమభ్యంగపూర్వకం। మలాపకర్షణార్థాయ ప్రవృత్తిస్తస్యకీర్తితా" = உடம்பிலுள்ள மலங்களை = அழுக்குகளை யொழிக்கவேண்டிச் செய்யும் அப்பியஞ்சனஸ்நாநம்=பூசிக் கழுவுதல் மலாபகர்ஷணஸ்நாநம் என்னப்படும். எ-று.

## கிரியா ஸ்நாநம்.

இதுவுமது. "సరస్సు దేవఖాతేషు తీర్థేషుచనదీషుచ। క్రియాస్నానంస ముద్దిష్టం స్నానంతత్రమతాక్రియా" = குளங்கள், சுனைகள், தீர்த்தங்கள், நதிகள் முதலிய இவற்றினுள் கருமானுஷ்டானத்தின் பொருட்டுச் செய்யும் ஸ்நாநம் கிரியாஸ்நாநமென்னப்படும். எ-று. காண்க.

## மாத்தியாந்நிக ஸ்நாநம்·

உச்சியில் நீராடலைக் கூறுவதற் கிது இடனல்லவாயினும், காலை முழுக்கினைப் போலும் உச்சியில் நீராடுதலும் நித்தமாயிருத்தலின், அதுஅதிகாரப்பட்டமையின்=மேற்கூறி வந்தமையால், ஈண்டுகூறப்படுகின்றது. மாத்தியாங்நிகஸ்நாநமும் நித்தமென்றுவியாக்கிரபாதர்கூறினர். వ్యాఘ్రపాదః॥ "ప్రాతస్స్నాయీభవేన్నిత్యంమధ్యస్నాయీతథాభవేత్" = உச்சிப்பொழுதில் தினந்தோறுந் தவறுதுநீராடுவோன் காலைமுழுக்குஞ் செய்தவனேயாகின்றான். எ-று. காண்க.

## மத்தியாந்ந ஸ்நாநவிதி.

கூர்மபுராணத்துள். కూర్మపురాణే॥ "తతోమధ్యాహ్నసమయే స్నానార్థంమృదమాహరేత్। పుష్పాక్షతాన్కుశతిలాన్ గోమయంశుద్ధమేవచ। నదీషుదేవఖాతేషు తటాకేషుసరస్సుచ। స్నానంసమాచరేన్నిత్యం గర్తప్రస్రవణేషుచ। పరకీయనిపానేషు నస్నాయాద్వైకదాచన। పంచపిండాంత్సముద్ధృత్య స్నాయాద్వాసంభవేపునః" உச்சிப்போது வந்தவுடனே நீராடுதற் பொருட்டுச் சுத்தமாகிய மண்ணினையும், பூக்களையும், அக்ஷதைகளையும், தருப்பைகளையும், எள்ளினையும் கோமயத்தையும் "ச" = என்றதனுல் கலவைத்தூள் (கந்தப்பொடி என்று வழங்கும்) உலர்ந்த நெல்லிவித்துப் பொடி, புளி, வெண்ணீறு, முதலியவற்றையுங்கொண்டு நதிகள், சுனைகள், குளங்கள், மடுக்கள், தடங்கள், கயங்கள், அருவிகள், ஊற்றுக்கள், கிணறுகள், முதலியவற்றில் நாடோறும் நீராடவேண்டுவது. அந்நியர் தொட்ட = எடுத்த நீர்நிலைகளி லாயினும், நீர் நிலைகளை அடுத்துள்ள நீர்த்தொட்டிகளி லாயினும்முழுகலாகாது. நீர்கிடையாவழி ஐந்து சேற்றுண்டைகளை வெளியிலெடுத்தெறிந்து முழுகினும் முழுகுக எ-று. காண்க.

## உச்சியின் முழுகத்தவனும் தகாதவனும்.

இதுவுமது. "స్నానంమధ్యందినేకుర్యాత్సుజీర్ణేన్నేనిరామయః। నభుక్త్వాలంకృతోయోగీ నాజ్ఞాతేంభసినాకులః" = நண்பகலில்=உச்சியில், உண்ட உணவு சீரணித்திருக்குமாயினும், தேகத்தில் நோயற்றிருக்குமாயினும் ஸ்நாநஞ் செய்யலாம். உண்டவனும், அலங்காரஞ் செய்துகொண் டிருப்பவனும், யோகப்பயிற்சியி லுள்ளவனும், தானறியாத நீர்நிலைகளிலும், ஒத்தமனமில்லாதவனும் நீராடலாகாது. எ-று. காண்க.

## ஆச்சிரமம் = நிலைமை வேறுபாட்டால் ஸ்நாநவேறுபாடு.

ஆச்சிரமபேதத்தால் ஸ்நாநவேறுபாட்டை தக்ஷர்கூறினர். దక్షః॥ "ప్రాతర్మధ్యాహ్నయోస్స్నానం వానప్రస్థగృహస్థయోః। యతేస్త్రిషవణస్నానం సకృచ్చబ్రహ్మచారిణః" = வானப்பிரஸ்தனுக்குங் கிரகத்தனுக்கும் காலைமுழுக்கும் உச்சி முழுக்குமாகிய விரண்டும் விதிக்கப்படுகின்றது. சந்நியாசிக்கு முக்காலத்திலும் நீராடுதலை விதிக்கப்படுகின்றது. பிரமசாரியனுக்கு ஓரேதடவை நீராடலை விதிக்கப்படுகின்றது. எ-று. காண்க.

## நீராடலின் விசேடம்.

உடன் பாட்டுவகையாலும் எதிர்மறை வகையாலும் நீராடலுக்கு மந்திரமுண்டா யிருத்தல் வேண்டுமென்று வியாசர் கூறினர். వ్యాసః॥ "మంత్రపూతంజలేస్నానం పాహులస్నానఫలప్రదం। నవృథావారిమగ్నానాం యాదసామివతత్ఫలం" = மந்திரங்களால் பரிசுத்தமாகும்படி நீரிலே முழுகிய கருமத்தாலடையும் பயனைத்தரும் என்று பெரியர்கூறுவர்அப்படிப்பட்டஸ்நாநத்தின்பயன் அந்நீரில்முழுகியியற்கையாகவே கிடக்கும் நீர்வாழ்வன = மீன் தவளை முதலிய பிராணிகளைப்போல் வீணாகாவாம். எ-று.காண்க.

யோகயாஞ்ஞவற்கியர். యోగయాజ్ఞవల్క్యః॥ "మత్స్యకూర్మకమండూకా స్త్రాయేమగ్నాదివానిశం। వసంతిచైవతేస్నానాన్నా ప్నువంతిఫలంక్వచిత్" = மீன், யாமை, தவளை, முதலியன இரவும்பகலும் நீரினுள்ளேயே முழுகிக்கிடக்கின்றன. அவை அம்முழுக்கினால் யாண்டும் பயனையடையமாட்டாது. எ-று. காண்க.

## மந்திரம்வேண்டாதார்.

நீராடலுக்கு மந்திரமிருக்கவேண்டுவது என்றது இருபிறப் பாளரையே குறித்தது அங்ஙனம் விஷ்ணுகூறினர். విష్ణుః॥ "బ్రాహ్మక్షత్రవిశాంచైవ మంత్రవత్స్నానమిష్యతే। తూష్ణీమేవహిశూద్రస్య స్త్రీణాంచకురునందన" = அந்தணர்க்கும், அரசர்க்கும், வசியர்க்கும் மந்திரத்தோடுங்கூடிய ஸ்நாநத்தையுடன்படுகின்றது. மாதர்க்குஞ்சூத்திரர்க்கு மந்திரமின்றி வெறும் நீராடலேபோதும் என்பது தருமராசனுக்குக் கண்ணன் கூறியவாறு. எ-று. காண்க.

## நீராடலுக்குரிய மண்ணின்விசேடம்.

நீராடலின்பொருட்டு மிருத்திகைகொள்ளவேண்டுமென்று கூறியிருப்பதனுள் உள்ள விசேடத்தைச் சாதாதபர் கூறினர். శాతాతపః॥ "శుచౌదేశేతుసంగ్రాహ్య శర్కరాశ్మాదివర్జితాః। రక్తాశ్వేతాతథాగౌరా మృత్తికాత్రివిధాస్మృతా। మృత్తికాఖూత్కరాల్లే పాద్భిలాచ్చపథివృక్షయోః। కృతశౌచావశేషాచ్చ నగ్రాహ్యాసప్తమృత్తికాః। మృత్తికాంగోమయంవాపి ననిశాయాంసమాహరేత్। నగోమూత్రపురీషేతు గృహ్ణీయాద్బుద్ధిమాన్నరః" = சுத்தமாகிய விடத்தில் மணல் கற்கள்முதலியன வில்லாத மண்ணினைத்தேடிப் பெற்றுக்கொள்ளவேண்டுவது. அந்தமண் சிவந்தது, வெண்ணிறத்தது, பச்சைநிறத்தது எனமூவகைப்படும். சுடுகாட்டுள்ளதும், எலியின் வளையிலுள்ளதும், சுவர்பூசியதி லுள்ளதும், வழிக்கணுள்ளதும், மரத்தடியிலுள்ளதும், வேறொருவன் சௌசம் செய்துகொண்டு மிகுந்தது மாகிய ஏழ்வகைமண்ணினையும் கொள்ளலாகாது. மண்ணினையும், ஆவின் சாணத்தையும், இரவில் கொள்ளலாகாது. ஆவின் மயமூத்திரங்களை யறிவுடையவன் இரவிற் கொண்டுவரலாகாது. எ-று. காண்க.

## அங்கப்பிரக்ஷாளனம்.

யோகயாஞ்ஞவற்கியர். యోగయాజ్ఞవల్క్యః॥ "గత్వోదకాంతంవిధివత్థాపయేత్తత్పృథక్క్షితౌ। త్రిధాకృత్వామృదంతాంతు గోమయంతద్విచక్షణః। అధమోత్తమమధ్యానామంగానాం క్షాళనంతుతైః। భాగైరిపృథక్పృథక్కుర్యాత్ క్షాళనేన్యసంకరః" = சலத்தினருகே சென்று விதிப்படி, கொண்டுபோகப்பட்ட ஸ்நாநத்திரவியங்களைச்சுத்தபூமியில் வேறுவேறுகவைத்து, மண்ணினையும் ஆவின்சாணத்தையும் மும்மூன்று கூறுசெய்து

தனித்தனி யிட்டு ஒரு பங்கினால் உத்தமமான அங்கத்தைக் கழுவி மற்றொரு பங்கினால்நடுவானஉறுப்புக்களைக் கழுவி, வேறு பாகத்தினால் கீழ் அவயவங்களைக் கழுவுதல் வேண்டும். மண்ணின் பங்குகள் ஒன்றோடொன்று சேராதபடி வைக்க வேண்டுவது. எ-று. காண்க.

சௌனகர். శౌనకః॥ "ప్రయతో మృదమాదాయ దూర్వాపామార్గ గోమయం। ఏకదేశే పృథక్కుర్యాత్" = ஐம்பொறிகளையும் அடக்கினவனாய் ஸ்நாநதீர்த்தத்தினால் இரகசியமான இடங்களில் மண், அறுகு, நாயுருவி, ஆவின்சாணம் இவைகளை வேறுவேறாக இட்டு அலம்ப வேண்டுவது. எறு. காண்க.

வசிட்டர். వశిష్ఠః॥ "మృదైకయా శిరః క్షాళ్యం ద్వాభ్యాం నాభేస్తథోపరి। అధశ్చ తిసృభిః కాయం షడ్భిః పాదౌ తథైవచ। ప్రక్షాళ్య సర్వకాయంతు ద్విరాచమ్య యథావిధి" ஒரு மண்ணால் தலையையலம்பி, உந்திமுதல் கழுத்தளவும் இருமண்ணிட்டு அலம்பி, பின்புகால்வரையில் கீழ் உடம்பினை நான்குவிசை மண்பூசி அலம்பி, இரண்டு பாதங்களையும் ஆறுதரம் மண்ணால்தேய்த்து அலம்பி, அதன்பின் உடம்பெல்லாம் நீரினால் நன்றாக அலம்பி, விதிப்படி இருகால் ஆசமனஞ் செய்யவேண்டுவது. எ - று. காண்க.

## மிருத்திகை ஸ்நாநம்.

அங்கங்களை யலம்பியபின் செய்யத்தக்கனவற்றைச் சௌனகர் கூறினார். శౌనకః॥ గాయత్ర్యా ఆదిత్యో దేవతాఖ్యాతాతో దేవా ఇతిమృదమభిమంత్రయేత్. తతో యతఇంద్రస్వస్తిదా విశస్పతిర్వ్యి విమృధ ఇదగ్ం సుమే జరితరితి మృదం సంగృహ్య, ప్రతిమంత్రం ప్రతిదిశం క్షిపేత్ పూర్వాదిక్రమేణ। తతస్సమ్మార్జనం కుర్యాన్మృదా పూర్వంతు మంత్రవత్ "= காயத்திரிமந்திரத்திற்குச் சூரியன்தெய்வம் ஆகவே, அதனாலும், "అతో దేవా" என்றமந்திரத்தினாலும்மண்ணினை மந்திரித்தல்வேண்டும். பின் "యతఇన్ద్ర" என்றது முதலிய மந்திரங்களால்மண்ணினையெடுத்துக்கொள்ள வேண்டுவது. மண்ணினை நீர்விட்டுக்குழைத்துக் கிழக்குத் திசைமுதல் வரிசையாக பூசிக்கொள்ளவேண்டுவது. மண்ணினை யெடுத்து உபயோகிப்பதற்கு. எஜுர் வேதத்துள் "అశ్వక్రాంతే రథక్రాంతే" என்றது முதலிய மந்திரங்கள் பிரசித்தியாயிருக்கின்றன. எ-று. காண்க.

## கோமய ஸ்நாநம்.

இதுவுமது. "పునశ్చగోమయేనైవ మగ్రమగ్రమితిబ్రువన్। అగ్రమగ్రంచ రంతీనా మోషధీనాంవనేవనే। తాసామృషభపత్నీనాం సురభీణాంశరీరతః। ఉత్పన్నం లోకసాక్ష్యార్థం పవిత్రంకాయశోధనం। త్వంమేరోగాంశ్చశోకాంశ్చ పాపంచనుదగోమయ" = மறுபடியும் ஆவின்சாணத்தினல் "అగ్రంఅగ్రం" என்று கூறிக்கொண்டே யொவ்வொரு ஆரணியத்திலுமுள்ள ஔஷதிகளினுடைய கொழுந்துகளைப் புசிக்கின்ற இடபமனைவிகளாகிய பசுக்களுடைய உடம்பிலிருந்தும் பிறந்ததே! உலகசௌக்கியத்தின் பொருட்டுப் பரிசுத்தமாகவும் தேகத்தைச் சோதிக்கத் தக்கதாகவும் உள்ள கோமயமே! நீ என்னுடைய நோய்களையும் துன்பங்களையும் பாவங்களையும் போக்கடிப்பாயாக என்ற அருத்தமுடையதாய் மேலே குறித்ததாயுள்ள ஸ்மிருதி மந்திரத்தினைக் கூறிக் கோமயஸ்நாநஞ் செய்யவேண்டுவது. எ-று. காண்க.

## தூருவை ஸ்நாநம்.

இதுவுமது. "కాండాత్కాండాదితిద్వాభ్యా మంగమంగ ముపస్పృశేత్। "కాండాత్కాండాత్" = என்றது முதலிய இரண்டுமந்திரங்களால் இரண்டிரண்டு அறுகம்புல்லின் இதழ்களைக்கொண்டு தனித்தனி ஒவ்வொரு அங்கங்களையும் நீரிற்றோய்த்துப் பரிசிக்க வேண்டுவது. எறு.

## அபாமார்க்க ஸ்நாநம்.

இதுவுமது. "అపాపమపకిల్బిష మపకృత్యమపాతపః। అపామార్గత్వమ స్మాకం దుష్టంభయంనుదస్వాహా" = பாவமற்றதே! களிம்பற்றதே! மாறற்செய்கை=அபிசாரச் செய்கையற்றதே! வெயிற்குற்றத்தை யொழிக்கத்தக்கதே! ஓய் அபாமார்க்க மூலிகையே! நீ எங்களுடைய கெட்ட அச்சத்தைப் போக்கடித்துத்திருத்திசெய்க. என்ற மந்திரத்தைக் கூறி அந்தமூலிகையால் அவயவங்களைப் பரிசிக்க வேண்டுவது. எறு. காண்க.

## நீர்த்தெய்வப்பிரார்த்தனை.

இதுவுமது. "అథహిరణ్యశృంగమాపో దేవీరపస్త్వాం తరిత్యుపస్థాయ"= பின்பு நீரருகேநின்று, "హిరణ్యశృంగం, ఆపోదేవీః, అపస్త్వాంతః" என்ற மந்திரங்களால் பிரார்த்திக்கவேண்டுவது. எ-று. காண்க.

இதுவுமது. "సుమిత్రానఇత్యపః స్పృష్ట్వాదుర్మిత్రాఇతి బహిఃక్షిపేత్"= "సుమిత్రానః," = என்றமந்திரத்தைக் கூறி நீரைக்கையாற் றொட வேண்டும். "దుర్మిత్రాః" என்றமந்திரத்தினால், மேல் நீரிற் சிறிது வெளியிலிறைக்கவேண்டுவது. எ-று. காண்க.

இதுவுமது, "తతఇద్ద్రిశుద్ధఇత్యృచశ్చాపసి ప్రవిశ్యమనసాజపేత్"= பின்பு "ఇస్ద్రిశుద్ధః" = என்ற இருக்கு வேதமந்திரங்களை நீரிற் புகுந்து மனத்துள்ளே செபிக்கவேண்டுவது. எ-று. பின். "తత్రగాయేతసామాని అపివావ్యాహృతీర్జపేత్। శివేనమేజపిత్వేవ మాపఇత్యపఆప్లవేత్" அந்த நீரிற் சாமவேதகானஞ் செய்யவேண்டும். வியாஹ்ருதி மந்திரங்களைச் செபிக்கவேண்டும். "శివేనమే" என்ற மந்திரத்தைச் செபிக்கவேண்டும். அதன் பின் "ఆపః" என்ற மந்திரங் கூறி நீரின் மூழ்கவேண்டும். எ-று. காண்க.

## தீர்த்த ஆவாஹனம்.

வசிட்டர். వశిష్ఠః॥ "యేతేశతమితిద్వాభ్యాం తీర్థాన్యావాహయేద్బుధః। కురుక్షేత్రంగయాంగంగాం ప్రభాసంనైమిశంతథా" = பின்பு "యేతేశతం" என்னுமிரண்டு மந்திரங்களால் குருக்ஷேத்திரத்தையும் கயாக்ஷேத்திரத்தையும், கங்கையையும், பிரபாச க்ஷேத்திரத்தையும், நைமிசாரணியத்தையும் மற்றுமுள்ள தீர்த்தங்களையும் அறிந்தவன் ஆவாஹனஞ் செய்யவேண்டும். எ-று. காண்க.

சங்கர். శంఖః॥ "ప్రపద్యేవరుణందేవ మంభసాంపతిమీశ్వరం। యాచితందేహిమేతీర్థం సర్వపాపాపనుత్తయే। తీర్థమావాహయిష్యామి సర్వాఘౌఘనిషూదనం। సాన్నిధ్యమస్మింశ్చితోయే క్రియతాంమదనుగ్రహాత్। రుద్రాన్ప్రపద్యేవరదా న్సర్వానప్సుషదస్తథా। అపఃపుణ్యాఃపవిత్రాశ్చ ప్రపద్యేవరుణంతథా। శమయంత్వాశుమేపాపం రక్షంతుచసదైవమామ్" = சலபதியாகியும் நியாமகராகியும் உள்ளவருணதேவரைச் சரணடைகின்றேன். ஓ! வருணரே! எல்லாப்பாவங்களையும் போக்கடிப்பதற்கு நான் வேண்டிய தீர்த்தத்தை யெனக்கருளும், எல்லாப்பாவராசிகளையும் போக்கடிக்கவல்ல தீர்த்தத்தைக் கொடுத்தருளும் நீரில் ஆவாஹனஞ் செய்கிறேன். என்னிடத்து உமதுஅருளால் இவ்விடத்து அந்தநீர் வந்திருக்கும்படி செய்யவேண்டும். நீரில் வசிக்கின்றவரும் வரங்களைக் கொடுப்பவருமாகிய எல்லா வுருத்திரர்களையும் சரண்அடைந்து து

திக்கின்றேன். புண்ணியகரமாயும் பரிசுத்தமாயு முள்ள நீரை யும் வருணனையும் சரணஞ்செய்கின்றேன் இவரெல்லாரும் என் பாவத்தை விரைவிற்போக்குக. எப்பொழுதும் என்னைக்காக்க. எ‐று. காண்க.

வசிட்டர். వశిష్ఠః॥ "ఆపోహిష్ఠేదమాపశ్చ ద్రుపదాదివఇత్యపి। తథాహిర ణ్యవర్ణాభిః పావమానీభిరంతతః। తతోర్కమీక్ష్యచోంకారం నిమజ్యాంతర్జలేబుధః। ప్రాణాయామాంస్తుకుర్వీత గాయత్రంచాఘమర్షణం" = ఆపోహిష్ఠాఇదమాపః - ద్రుప దాదివ" = துருபதாதிவ. "హిరణ్యవర్ణాః" = ஹிரணியவர்ணா:= என்ற இம்மந்திரங்களாலும், "பவமான சூக்தங்க" ளாலும் பிரா ர்த்தித்து சூரியனைநோக்கிப் பிரணவத்தை யுச்சரித்துத் தெளி வுடையவனாய் நீரினுள் முழுகவேண்டுவது. பிராணயாமங்களைச் செய்ய வேண்டுவது. காயத்திரி மந்திரத்தையும், அகமருட ணசூக்தத்தையும் செபிக்கவேண்டுவது. எ‐று. காண்க.

விஷ்ணு. విష్ణుః॥ "తతోప్సుమగ్నస్త్రిరఘ మర్షణంతద్విష్ణోః పరమంపదం। సావిత్రీంయుంజతేమనఇత్య నువాకం పురుషసూక్తంవాజపేత్। స్నాతఆర్ద్రవాససాదే వర్షి పితృతర్పణ మంతస్థఏవకుర్యాత్" = பின்பு நீரின் முழுகி அகமருடண சூக்தத்தை மும்முறையும், "తద్విష్ణోః పరమంపదం" = என்னும் மந் திரத்தையும், சாவித்திரிமந்திரத்தையும், "యుంజతేమనః" என்னும் மந்திரப் பிராமண பிரசினத்திலுள்ள அனுவாகத்தையுமாவது, அல்லது புருடசூக்தத்தையாவது செபிக்கவேண்டுவது நீராடி யபின்னர் ஈரவுடையால் தேவரிஷி பிதிர்தருப்பணத்தை அந்நீரி லிருந்தபடியே செய்யவேண்டும். எ‐று. காண்க.

மேதாதிதி. మేధాతిథిః॥ "తతోంభసినిమగ్నస్తు త్రిఃపఠేదఘమర్షణం। ప్రద ద్యాన్మూర్ధ్నితథా మహావ్యాహృతిభిర్జలం" = பின்பு நீரில் முழுகியவனாய் அகமருடண சூக்தத்தை முக்கால் செபிக்கவேண்டும். மஹா வியா ஹிருதி மந்திரங்களால் சலத்தைத் தலைமேலிறைத்துக் கொள்ளவேண்டுவது. எ‐று. காண்க.

வசிட்டர். "స్నాత్వాసంగృహ్యవాసోన్య దూరూనంశోధయే న్మృదా। అప విత్రీకృతౌతౌతు తాపీనాస్రావవారిణా। యోనేనవిధినాస్నాతి యత్రకుత్రాపి భసిద్వి జః॥ సతీర్థఫలమాప్నోతి తీర్థేతుద్విగుణంభవేత్" = நீராடியபின்பு வேறு ஆ டையுடுத்துமண்ணால் தொடைகளை அலம்பிச் சோதித்துக் கொள்

ளவேண்டும். அத்தொடைகள் கௌபீனத்தினின்றும் தவறின கெட்டநீரினால் அசுத்தமாயுள்ள தாதலின். இவ்விதியினால் எந்த விருபிறப்பாளன் ஏதேனும் ஓர்நீரினால் ஸ்நாநஞ்செய்தால் அவன்தீர்த்தங்களிற் சென்று ஸ்நாநஞ்செய்தபயனை அடைகின்றான். தீர்த்தங்களிலேயே முழுகினால் அவனுக்குண்டாம் பயன் இரட்டிப்பாகும். எ-று. காண்க.

## ஸ்நாநத்திற்கு எய்தியதன்மே லெய்துவித்தல்.

யோகயாஞ்ஞவற்கியர். యోగయాజ్ఞవల్క్యః॥ "యఏషఃస్తు రసప్రోక్తస్స్నానస్యవిధిరుత్తమః॥ అసామర్థ్యాస్స్నకుర్యాచ్చే త్తత్రాయంవిధిరుచ్యతే। స్నానమంతర్జలేచైవ మార్జనాచమనేతథా। జలాభిమంత్రణంచైవ తీర్థస్యపరికల్పనం। అఘమర్షణసూక్తేన త్రిరావృత్తేననిత్యశః। స్నానాచరణమిత్యేత దుపదిష్టంమహాత్మభిః" = விரிவாகச்சொல்லப்பட்ட இந்த ஸ்நாநவிதி மிகச்சிறந்தது. இவ்வளவினையும் முற்றும் அனுட்டிப்பதற்கு ஆற்றலில்லாவழி, இலேசாகிய அனுகற்பத்தை விதிக்கின்றாம். நீருள்ளேமுழுகி நீராடுவதும், இறைத்துக் கொள்ளுவதும், ஆசமனஞ்செய்வதும், நீரை அபிமந்திரித்தலும், தீர்த்தத்தில் முழுகும்போது செய்யத்தக்க சம்பந்த விதிகளாம். சாதாரணமாக நாள்தோறும் அகமருடண சூக்தத்தைமும்முறைசெபித்து முழுகுவதேபோதுமென்று பெரியோர்களால் குறிக்கப்பட்டது. எ-று. காண்க. காலை முழுக்கும் உச்சி முழுக்குமாகிய விரண்டும் நித்தியமாம்.

உச்சிநீராடலும் நித்தியஸ்நாநவிதியு முற்றிற்று.

---

# நைமித்திகஸ்நாநம்.

மனு. మనుః॥ "దివాకీర్తిముదక్యాంచ సూతికాంపతితంతథా। శవంతత్స్పృష్టినంచైవస్పృష్ట్వా స్నానేనశుధ్యతి" = நீசனை, கைவிலக்கமானவளை, பிள்ளைபெற்றவளை, பதிதனை = பிரஷ்டனை, பிணத்தை, அதைத்தொட்டவனைத் தொட்டால் நீராடுவதாற் சுத்தனாகின்றான். எ-று. காண்க.

## சசேலஸ்நாநம்.

கௌதமர். గౌతమః॥ "శవస్పృశమథోదక్యాం సూతికాంపతితంతథా। స్పృష్ట్వాస్నానేనశుద్ధిస్స్యాత్సచేలేననసంశయః" = பிணத்தைத்தொட்டவனை,

பூத்தவளை, மகப்பேறு பெற்றவளை, நிலைகெட்டவனைத் தொட்டால் " సచేలస్నానం " சசேலஸ்நாநத்தால் சுத்தனாகின்றான். எ-று. காண்க.

வேறு மிருதியில். స్మృత్యంతరే॥ "పతితచండాలసూతికా ఉదక్యాశవస్పృ క్తత్స్పృష్టి స్పృష్టసచసచేల ఉదకోపస్పర్శనాత్ శుధ్యతి " = நிலைதவறினவன், சண்டாளன், சூலிருந்து பெற்றவள், மாதவிடாயானவள், பிணம் அதைத்தொட்டவள், இவர்களைத் தொட்டால் சசேல ஸ்நாநத்தால் சுத்தனாகின்றான். சசேல ஸ்நாநமென்பது அக்காலத்து டுத்திருந்தவாடைகளோடு நீருள் மூழ்குவது. எ-று. காண்க.

இவ்விடத்து, நிலைமைகெட்டவன் முதலினோர்கள் முதலாக அவனைத் தொட்டவனாதி மூன்றாவதாவான்வரைக்கும் சசேல ஸ்நாநத்தால் சுத்தியுண்டாம் நாலாவனுக்கு ஸ்நாநத்தால் சுத்தி அங்ஙனம் மரீசிகூறினர். మరీచిః॥ "ఉపస్పృశేచ్చతుర్థస్తు తదూర్ధ్వంప్రోక్ష ణంస్మృతం " = நாலாவான் நீராடவேண்டுவது. அவன்பின்னவானுக்கு நீர் தெளித்துக்கோடலே யமையுமெனக்கூறப்பட்டது. எ-று. காண்க.

சம்வர்த்தர் இருவர் மட்டிலே ஸ்நாநம் கூறினர். సంవర్తః॥ "తత్స్పృష్టినంస్పృశేద్యస్తు స్నానంతస్యవిధీయతే। ఊర్ధ్వమాచమనంప్రోక్తం ద్రవ్యా ణాంప్రోక్షణంయథా " = நிலைகெட்டவன் முதலியோரைத் தொட்டவனும், அவனைத் தொட்டவனும் நீராடவேண்டுமென்று விதிக்கப்படுகின்றது. அதன்பின்பு திரவியங்களுக்கு நீர்த்தெளித்தல் எவ்வாறோ ? அவ்வாறே ஆசமனம் கூறப்பட்டது. எ-று. காண்க. இது மனமறியாது தொட்ட விடயம்.

அங்ஙனம் சங்கிரகக்காரர் கூறியிருக்கின்றனர். సంగ్రహకారః॥ "అబుద్ధిపూర్వసంస్పర్శే ద్వయోఃస్నానంవిధీయతే। త్రయాణాంబుద్ధిపూర్వేతు తత్స్పృష్టి న్యాయకల్పనా " = அறியாமற் றொட்டுவிட்ட பக்ஷத்தில் இருவர் வரையில் ஸ்நாநமும், அறிந்துதொட்ட பக்ஷத்தில் மூவர்வரையிலும் ஸ்நானமும் ஸ்பரிசதோஷ நியாயத்தைப்பற்றி ஏற்பாடு செய்யப்படுகின்றது. எ-று. காண்க.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ "చండాలపతితశ్చైవ స్సంస్పృష్టంచస్పృశేద్యది। ప్రమాదాత్తతఆచమ్య జపంకుర్యాత్సమాహితః। తత్స్పృష్టస్పృష్టినంస్పృష్ట్వా

బుద్ధిపూర్వం ద్విజోత్తమః। ఆచమేత్తద్విశుద్ధ్యర్థం ప్రాహ దేవః పితామహః" = சண்டாளன், கருவுயிர்த்தவள், பிணம், தொட்டவனை எவனும் அறியாது தொட்டால் நீராட வேண்டுவதில்லை ஆசமனஞ்செய்து செபஞ்செய்யவேண்டும். புலையன் முதலியோரைத் தொட்டவனைத் தொட்டவனை யாரேனும் அறிந்துதொட்டாலும் ஸ்நாநம் வேண்டுவதில்லை ஆசமனஞ் செய்யவேண்டுவது என்று பிரமதேவன் கூறினர். எ-று. காண்க.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "ఉదక్యాశుచిభిస్స్నాయాత్ సంస్పృష్టస్తైరుపస్పృశేత్। అబ్లింగాని జపేచ్చైవ గాయత్రీం మనసా సకృత్" = பூத்தவளாலும், அசுத்தங்களாலும் தீண்டப்பட்டவன் நீராடவேண்டுவது. அவனாற் றீண்டப்பட்டவன் ஆசமனஞ் செய்யவேண்டுவது. ஜலமந்திரங்களைச் செபிக்கவேண்டும். மனத்துள்ளேயொருகால் காயத்திரியைத் தியானிக்கவேண்டும். எ-று காண்க. இது தடி முதலிய நடுவே கிடக்கையில் அதனால் தொட்டவனைப்பற்றியது. அங்ஙனமல்லாக்கால் "இருவர் வரையில் ஸ்நாநம்" என்று மேற்கூறிய வற்றோடு முரணுண்டாம். எவ்விடத்தில் ஆடை குறுக்கிட்டிருக்கும்போது பரிசிக்கப்படுகின்றதோ? அவ்விடத்தும். தடி குறுக்கிருக்குங்கால் தீண்டியதற்குக் கூறிய நியாயத்தையே கொள்ளலாகாது.

அங்ஙனம் பிரசேதர் கூறினர். ప్రచేతాః॥ "వస్త్రాంతరితసంస్పర్శే స్నానసాక్షాత్స్పర్శవిధీయతే। సాక్షాత్స్పర్శతయప్రోక్తం తద్వస్త్రాంతరితేపిచ"=ஆடை குறுக்கிருக்கச்சிதே தீண்டியது நேரோபரிசித்ததாகவே விதிக்கப்படுகின்றது. நேரே தொட்டால் என்னவிதி கூறப்பட்டதோ? ஆடை குறுக்கிட்ட காலத்திற் றீண்டியதற்கும் அதேவிதி கூறப்படுகின்றது. எ-று. காண்க.

சதுர் விம்சதி மதம். చతుర్వింశతిమతే స్నానస్యనిమిత్తాంతరముక్తం॥ "బౌద్ధాన్పాశుపతాన్జైనాన్ లోకాయతికకాపిలాన్। వికర్మస్థాన్ద్విజాన్స్పృష్ట్వా సవాసా జలమావిశేత్। కాపాలికాంస్తూపస్పృశ్య ప్రాణాయామోధికో మతః" = புத்தர்களையும், பாசுபதர்களையும், சமணர்களையும், உலகாயதரென்னும் நாஸ்திகரையும், காபிலர் என்னும் நிரீச்சுரசாங்கியரையும், வேதத்தால் விலக்கப்பட்ட கொடிய கருமங்களைச் செய்கின்ற விரு

பிறப்பாளரென்பாரையும் தீண்டினால் சசேலஸ்நாநம் செய்ய வேண்டும். காபாலிகர்களைப் பரிசித்தால் பிராணாயாமத்தையிரட்டிப்பாகச் செய்யவேண்டும். எ-று. காண்க.

சண்டாளர் முதலியோரைத் தீண்டுதலே நிமித்தமாகப் பிறந்த ஸ்நாநத்தில் விஷ்ணு சில விசேடம் கூறினர். విష్ణుః॥ "స్నానార్హో యోనిమిత్తేన కృత్వాతోయావగాహనం। ఆచమ్య ప్రయతః పశ్చాత్ స్నానం విధివదాచరేత్" = யாதேனுமோர் காரணத்தினால் அசுத்தனாய்ச் சுத்தனாகும் பொருட்டு நீராடவேண்டினோன் முதலில் சும்மாது நீரில் முழுகிவந்து பின்பு ஆசமனஞ்செய்து விதிப்படி மறுபடியும் ஸ்நாநம் செய்யவேண்டுவது. எ-று. காண்க.

யோகயாஞ்ஞவற்கியர். యోగయాజ్ఞవల్క్యః॥ "తూష్ణీమేవావగాహేత యదాస్యాదశుచిర్నరః॥ ఆచమ్య ప్రయతః పశ్చాత్ స్నానం విధివదాచరేత్" = மனிதன் எப்பொழுது அசுத்தனாகின்றானோ? அப்போது சாதாரணமாக நீரில் முழுகி எழுந்து பின்பு, முயற்சியோடும் ஆசமனஞ்செய்துவிதிப்படி ஸ்நாநம்செய்யவேண்டும். எ-று. காண்க.

## ஸ்நாநத்திற்குரிய சலம்.

கார்க்கியர். గార్గ్యః॥ "కుర్యాన్నైమిత్తికంస్నానం శీతాద్భిః కామ్యమేవ చ। నిత్యంయాదృచ్ఛికంచైవ యథారుచిసమాచరేత్"= நைமித்திக ஸ்நாநமும், காமிய ஸ்நாநமும், தண்ணீராலேயே செய்யவேண்டும். நித்த ஸ்நாநமும், இச்சித்தபோது செய்யும் ஸ்நாநமும் விரும்பியபடி செய்யலாம். எ-று. காண்க.

நைமித்திக ஸ்நாநவிதி முற்றிற்று.

---

# காமியஸ்நாநம்.

---

புலத்தியர். పులస్త్యః॥ "పుష్యేచజన్మనక్షత్రే వ్యతీపాతేచ వైధృతౌ। అమావాస్యాంనదీస్నానంపునాత్యాసప్తమాత్కులం। చైత్రకృష్ణచతుర్దశ్యాం యస్స్నాయాచ్ఛివసన్నిధౌ। నసప్రేతత్వమాప్నోతి గంగాయాంచవిశేషతః। శివలింగసమీపేతు యత్తోయంపురతఃస్థితం। శివతీర్థమితిఖ్యాతం తత్రస్నాత్వాదివంవ్రజేత్" = பூசம், ஜன்மநக்ஷத்திரம், வைதிருதி, அமாவாசை இந்நாட்களில் நதி

களில் ஸ்நானஞ்செய்வது ஏழுதலைமுறைவரையில் குலத்தைச் சுத்தஞ் செய்கின்றது. சித்திரைமாசம் கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தசி தினத்தில் சிவசந்நிதியில் யார் ஸ்நாநம் செய்கின்றானோ? அவன் பிணத் தன்மையை யடைவதில்லை. கங்கையினிடத்தாயின் இன்னும் அதிகபயனுண்டு. சிவகுறி = சிவலிங்கத்தின் முன்பாகச் சமீபத்தில் உள்ள தீர்த்தத்திற்குச் சிவதீர்த்தமென்று பெயர், அதில்முழுகினவன்தெய்வலோகத்தை யடைவன். எ-று. காண்க.

இயமன். యమః॥ కార్తిక్యాంపుష్కరేస్నాత స్సర్వపాపైః ప్రముచ్యతే। మాఘ్యాంస్నాతఃప్రయాగేచ ముచ్యతేసర్వకిల్బిషైః। జ్యేష్ఠమాసేసితేపక్షే ద్వాదశ్యాం హస్తసంయుతే। దశజన్మాఘహాగంగా తేనపాపహరాసదా" = கார்த்திகமாசத்தில் புஷ்கர க்ஷேத்திரத்தில் ஸ்நாநஞ் செய்தவன் எல்லாப் பாவத்தினின்றும் நீங்குகின்றான். மாசிமாசத்தில் பிரயாகை க்ஷேத்திரத்தில் ஸ்நாநஞ் செய்தவன் எல்லாப் பாவங்களாலும் விடப்படுகின்றான். ஆனிமாசத்தில் சுக்கிலபக்ஷம் துவாதசி அஸ்த நக்ஷத்திரமும் கூடியதினத்தில் கங்காநதியில் நீராடுதலினால் பத்துப்பிறவியில்செய்தபாவம் போகின்றது. ஆதலின் எப்போதும் அவைபாவங்களை யொழித்து விடுகின்றன. எ-று. காண்க.

விஷ்ணு. విష్ణుః॥ "సూర్యగ్రహణతుల్యాతు శుక్లామాఘస్యసప్తమీ। అరుణోదయవేళాయాం తస్యాంస్నానంమహాఫలం। పునర్వసూబుధోపేతా చైత్రేమాసిసితాష్టమీ। స్రోతస్సువిధివత్స్నాత్వా వాజపేయఫలంభజేత్" = மாசிமாசம் வளர்பிறைச் சத்தமி சூரியகிரணத்தோடு ஒத்தது. அன்று அருணோதயகாலத்தில் ஸ்நாநம் செய்வது விசேஷ பயனைக்கொடுக்கின்றது. சித்திரைவளர்பிறை அட்டமி புதவாரம் புனர்பூசமுங் கூடியதினம் கிடைக்கும்போது நதிகளில் விதிப்படி ஸ்நாநஞ்செய்து "வாஜபேய" யாகத்தின் பயனை அடைவன். எ-று. காண்க.

ஆதித்திய புராணம். ఆదిత్యపురాణే॥ "కార్తికంసకలంమాసం నిత్యస్నాయీజితేన్ద్రియః। జపన్హవిష్యభుక్ఛాంత స్సర్వపాపైఃప్రముచ్యతే। తులామకరమేషేషు ప్రాతస్స్నాయీసదాభవేత్। హవిష్యంబ్రహ్మచర్యంచ మహాపాతకనాశనం" = கார்த்திகைமாச முழுவது நாடோறும் தவறாது நீராடி ஐம்பொறிகளையும் வென்றவனாய், வேள்விச் சேடத்தைப் புசித்து, உடம்பை ஒறுத்தலாகிய தவத்தைச் செய்தவன் எல்லாப் பாவங்களினின்றும் நீங்குகின்றனன். ஐப்பசி, தை, சித்திரை, இந்தமாசங்க

ளில் எப்பொழுதும் வைகறையில் நீராடவேண்டும், வேள்வி யின் சேடமாகிய அவிசைப் புசிக்கவேண்டும். பிரமசரியவிரதத் தை அனுட்டிக்க வேண்டும். இது மஹாபாதகங்களைப் போக்க டிக்கும். எ-று. காண்க.

மச்சபுராணம். మత్స్యపురాణే॥ "ఆషాఢాదిచతుర్మాసాన్ ప్రాతస్స్నాయీభవేన్నరః। విప్రేభ్యోభోజనందత్వా కార్తిక్యాంసవ్రతోభవేత్। సవైష్ణవపదం యాతి విష్ణువ్రతమిదంస్మృతం" = ஆடிமுதலிய நான்குமாசங்களில் மனி தன் உதயத்தில் நீராடத்தக்கவனாகின்முன். வேதியர்க்கு உண் டிகளை ,புதவி கார்த்திகைமாசத்தில் விரத நியமத்தோடு கூடி யிருக்கவேண்டும். அவ்வாறு செய்தவன் விஷ்ணு வுலகத்தை யடைவன்.இதுவிஷ்ணுவிரதமென்றுகூறப்பட்டது.எ-று.காண்க.

மார்க்கண்டேய புராணம். మార్కండేయపురాణే॥ "సర్వకాలంతిలైస్స్నానం పుణ్యంవ్యాసాబ్రవీన్మునిః। తుష్యత్యామలకైర్విష్ణు రేకాదశ్యాంవిశేషతః। శ్రీకామస్సర్వదాస్నానం కుర్వీతామలకైర్నరః। సప్తమీంనవమీంచైవ పంచపర్వసువర్జయేత్ "= எப்பொழுதும் வெள்ளை யெள்ளினேடு நீராடுவது புண்ணிய லோகத்துள் வசிக்கும் திறத்தைக் கொடுக்கும், என்று அம் மார்க்கண்டேய முனிகூறினர். நெல்லிக்காயினுல் பூசி நீராடினுல் விஷ்ணு களிப்பையடைகின்முர். ஏகாதசியில் விசேடம் திருத் தியடைகின்றனர். செல்வத்தை விரும்பியவன் எப்பொழுதும்நெ ல்லிக்காய்பூசி ஸ்நாநஞ்செய்யவேண்டும். சத்தமியிலும் நவமியி லும் பஞ்சப்பருவங்கள் (எனவே, அமாவாசை, பௌர்ணவமி, கிருஷ்ணஅஷ்டமி, அந்தச்சதுர்த்தசி, சூரியசங்கிரமணம் இவைக ளிலும் நெல்லிக்காய் ஸ்நாநம் செய்யலாகாது. எறு. காண்க.

விஷ்ணு. విష్ణుః॥ బాలాశ్చతరుణావృద్ధా నరనారీనపుంసకాః। స్నాత్వామాఘేశుభేతీర్థే ప్రాప్నువంతీప్సితంఫలం॥ మాఘమాస్యుషసిస్నాత్వా విష్ణులోకంసగచ్ఛతి" பாலரோயாயினும், யவ்வனமுடையோரோ யாயினும், விருத்தர்க ளேயாயினும், ஆணாயினும், பெண்ணாயினும், அலியாயினும், மாசிமாசத்தில் புண்ணிய தீர்த்தங்களில் நீராடின், தாங்கள் விரும் பியபயனை யடைவர் மாசிமாசத்தில் உஷக்காலையில் நீராடின வன் விஷ்ணுவுலகத்தை யடைகின்முன். எ-று. காண்க.

காமியஸ்நாநம் முற்றிற்று.

# மலாபகர்ஷணஸ்நாநம்.

வாமனபுராணம். వామనపురాణే॥ "నాభ్యంగమర్కేనచ భూమిపుత్రే। క్షౌరంచశుక్రేచ కుజేచమాంసం। బుధేచయోషిత్పరివర్జనీయా శేషేషుసర్వేషు సదైవకుర్యాత్" = ஞாயிற்றுக்கிழமையில் எண்ணெயிட்டு நீராடலாகாது. செவ்வாய்க்கிழமையில் மயிர்களைதலும் ஆகாது வெள்ளிக்கிழமை செவ்வாய்க்கிழமை மாமிசம் புசிக்கலாகாது. ஏனையவெல்லாத் தினங்களுமாம். "చ" என்றதனால் சனிக்கிழமையில் மயிர்களைதலாகாது. எ-று. காண்க.

சோதிடநூல். జ్యోతిశ్శాస్త్రే॥ "సంతానంశాంతిరల్పాయు ర్ధనంనిర్ధనతా తథా॥ అనారోగ్యం సర్వకామా అభ్యంగాద్భాస్కరాదిషు" = எண்ணெய் முழுக்கினால் ஞாயிறுமுதல் முறையே யேழுநாட்களில், சந்தானம்=மகப்பேறு, சாந்தி, அற்பாயுள், பொருட்செல்வம், வறுமை, நோய், எண்ணிய பயனெய்துதலு முண்டாம். எ-று. காண்க.

மனு. మనుః॥ "పక్షాదౌచరవౌషష్ఠ్యాం రిక్తాయాంచతథాతిథౌ। తైలేనాభ్యజ్యమానస్తు ధనాయుర్భ్యాంవిహీయతే" = பிரதமைதிதி, ஞாயிற்றுக்கிழமை, ஷஷ்டி, சதுர்த்தி, நவமி, சதுர்த்தசிதிதிகள், "చ" என்றதனால் அமாவாசை பூரணையுமான பருவங்கள், இவைகளில் எண்ணெயிட்டு நீராடியவனுக்குப் பொருளும் ஆயுளும் குறையும். எ-று. காண்க.

கார்க்கர். గర్గః॥ "పంచదశ్యాంచతుర్దశ్యాం మష్టమ్యాంరవిసంక్రమే। ద్వాదశ్యాంసప్తమీషష్ఠ్యోః తైలంస్పర్శంవివర్జయేత్" = சஷ்டி, சத்தமி, அட்டமி, துவாதசி, சதுர்த்தசி, பௌர்ணவமி, சூரியசங்கிரமணம், "చ" என்றதனால் அமாவாசை, பிரதமை, சதுர்த்தி, நவமி, திதிகளும் விரதநாட்களும், பிதுர்தினங்களுமாகிய இவற்றுள் எண்ணெயைத் தொடுதலு மாகாது. எ-று. காண்க.

இயமன். యమః॥ "అష్టమ్యాంచచతుర్దశ్యాం నవమ్యాంచవిశేషతః। శిరోభ్యంగంవర్జయేత్తు పర్వసంధౌతథైవచ" = அட்டமி, சதுர்த்தசி, நவமி, பருவசந்தி காலங்களுமாகிய இவற்றுள் தலைக்கெண்ணெயிடலாகாது என்றது விசேடம். எ-று. காண்க.

இதுவும் கர்க்கர். గర్గః॥ "నచకుర్యాత్తృతీయాయాం త్రయోదశ్యాంతిథౌతథా। శాశ్వతీంభూతిమన్విచ్ఛన్ దశమ్యామపిపండితః" = திரிதியை, திரயோதசி, தசமி, இவைகளில் அழியாச்செல்வத்தை விரும்பிய அறிவுடையோன் எண்ணெ யிட்டுக்கொள்ள லாகாது. எ-று. காண்க.

## வேண்டும்போது எண்ணெயிட.

இவ்வாறாக எந்தத்திதிகளிலும் எண்ணெயிட்டு முழுகலாகாதாயின், தேகசுகத்தை யெப்போது அடைவது என்று கருதி பிரசேதசு=வருணர். விசேடதைலங்களால் முழுகலா மென்று விதித்தனர். ప్రచేతాః॥ "సార్షపంగంధతైలంచ యత్తైలంపుష్పవాసితం। అన్యద్రవ్యయుతంతైలం నదుష్యతికదాచన" = கடுகெண்ணெய், சந்தன எண்ணெய், பூமணமுள்ள எண்ணெய் (எனவேசம்பங்கியெண்ணெய், மல்லிகையெண்ணெய், இன்னும் வேறுவகைகள் சேர்ந்த எண்ணெய், அதாவது, கரிசாலைதைலம், நெல்லிக்காய்தைலம், சந்தனாதித்தைலம் முதலிய என்க) இவைகளோடுஆயினும், இவற்றோடு கலந்த யெண்ணெயோடாயினும் தலைமுழுகினால் எப்போதைக்கும்குற்றமில்லை. எ-று. காண்க.

இயமன். యమః। "ఘృతంచసార్షపంతైలం యత్తైలంపుష్పవాసితం। నదోషఃపక్వతైలేషు స్నానాభ్యంగేషునిత్యశః" = நெய், கடுகு எண்ணெய், பூமணமுடைய எண்ணெய், "చ" என்றதனால் வெண்ணெய், ஆமணக்கு நெய், இவையெல்லாமும் காய்ந்து பக்குவப்பட்டிருந்தால் அவைகளோடு நித்தமும் அப்பியங்கஸ்நாநம் செய்யலாம். எ-று. காண்க.

எண்ணெய்முழுக்கு முற்றிற்று.

---

## கிரியாஸ்நாநம் வருமாறு.

———:o:———

இனி கிரியாங்க ஸ்நாநம் நித்திய ஸ்நாநத்தைப் போலவே அனுட்டிக்க வேண்டுவது. என்னை ? " ప్రాతశ్శుక్లతిలైస్నాత్వా మధ్యాహ్నేదేవమర్చయేత్" = கணபதி சதுர்த்திதினத்தின் காலையில் வெண்

ணிற எள்ளோடு ஸ்நாநஞ்செய்து, பகலில்கடவுளருச்சனை செய்ய வேண்டும். எ-று. இப்படிப்பட்ட ஸ்நாநம் கிரியாங்க மெனப்படும். இவைகிரியைகளுக்கு அங்கமாக விருக்கின்றன என்னும் கருத்துப் புராணங்களுள் வெளிப்படக் கூறியுள்ளது. "కర్మక్రియాంకర్తుమనాః పూర్వంస్నానంసమాచరేత్। క్రియాంగంతత్సముద్దిష్టం స్నానందేవమయైర్ద్విజైః" = புண்ணியகருமத்தை மேற்கொண்டுசெய்ய விரும்பினேன்முன்பாக ஸ்நாநஞ் செய்யவேண்டும் அந்தநீராடல் அக்கருமத்திற்கு அங்கமாக விருக்குமென்று தேவவடிவர்களாகிய அந்தணர்களால் குறிக்கப்பட்டது. எ-று. காண்க.

## கிரியாஸ்நாநவிதி.

சங்கர். శంఖః॥ "క్రియాస్నానంప్రవక్ష్యామి యథావద్విధిపూర్వకం। మృద్భిరద్భిశ్చకర్తవ్యం శౌచమాదౌయథావిధి। జలేనిమగ్నస్త్రిరభ్యుజ్య చాపస్పృశ్యేద్యథావిధి। తీర్థస్యావాహనంకుర్యాత్తత్ప్రవక్ష్యామ్యతఃపరం। ప్రపద్యేవరుణందేవ మంభసాంపతిమీశ్వరం। యాచితందేహిమేతీర్థం సర్వపాపాపనుత్తయే। తీర్థమావాహయిష్యామి సర్వాఘవినిషూదనం। సాన్నిధ్యమస్మింశ్చిత్తోయే క్రియతాంమదనుగ్రహాత్" = கிரியாஸ்நாநத்தை விதிப்படி கூறுகின்றேன் முதற்கண் மண்ணினாலும் சலத்தாலும் விதிப்படிசௌசம்செய்துகொள்ளவேண்டும். பின்பு நீரில் முக்காலும் முழுகி முக்குடிநீர்குடித்துத் தீர்த்தத்தை ஆவாஹனம் செய்யவேண்டுவது. அதற்குமந்திரம். "ప్రపద్యేవరుణందేవం" என்றதுமுதலியன. இதனுரைமுன்னரே கூறியுள்ளது எ-று. காண்க.

## ஸ்நாநசலம்.

அறுவகை ஸ்நாநத்திலும் முக்கிய கற்பத்திலும், அநுகற்பத்திலும், நீர்விசேடங்களை விஷ்ணுபுராணத்துட் கூறப்பட்டது. విష్ణుపురాణే॥ "నదీనదతటాకేషు దేవఖాతబిలేషుచ। నిత్యక్రియార్థం స్నాయీత గిరిప్రస్రవణేషుచ। కూపేషూద్ధృతతోయేన స్నానంకుర్వీతవాభువి" = நதி (கீழ்கடல் நோக்கிச் செல்லும் யாறு), நதம் (மேல்கடல் நோக்கிச் செல்லும்யாறு), தடாகம், ஏரி, மடு, சுனை, "ప్రస్రవణ" = அருவி, இவைகளில் நித்திய கருமத்தின் பொருட்டு ஸ்நாநஞ் செய்யவேண்டுவது. கிடையாவழி கிணற்று நீரையாவது மேலெடுத்துக்கொண்டு முழுகவேண்டுவது. எ-று. காண்க.

மார்க்கண்டேயர். మార్కండేయః॥ "పురాణానాం నరేంద్రాణా మృషీణాంచమహాత్మనాం। స్నానంకూపతటాకేషు దేవతానాంసమాచరేత్" = முற்காலத்து அரசர் மஹான்மாக்களாகிய இருடிகள், தேவர்கள் இவர்களால் ஏற்படுத்தப்பட்ட கிணறுகள், ஏரிகள், மடுக்களிவைகளில் நீராடவேண்டுவது. (எனவே சிறந்தமுன்னோரெடுத்த நீர் நிலைகளில் ஸ்நாநம் செய்யவேண்டுமென்பது). எ-று. காண்க.

## நீரின்ஏற்றக்குறைவு.

மார்க்கண்டேயர். మార్కండేయః॥ "భూమిష్ఠముద్ధృతాత్పుణ్యం తతఃపి ప్రస్రవణోదకం। తతోపిసారసంపుణ్యం తస్మాన్నాదేయముచ్యతే। తీర్థతోయంతతఃపుణ్యం తతోగాంగంతుసర్వశః" மேலெடுத்து முழுகுநீரினும் பூமிமேல் நின்றுள்ள நீரிலாடுவது சிறந்தது; மலையருவி நீர் அதனினும் உயர்ந்தது, மடுக்கள் அதனிலும் விழுமியது; யாற்று நீரதனிலும் சான்றது. தீர்த்தோதகம் = தேவசந்நிதிகளிலுள்ள பரிசுத்தநீர், அதனினும் மாட்சிமைப்பட்டது; இவ்வெல்லாவற்றினும் மேலாயது கங்கைநீர். எ-று. காண்க.

## கங்கைநீரின்சிறப்பு.

மரீசி. మరీచిః॥ "భూమిష్ఠముద్ధృతంవాపి శీతముష్ణమథాపివా। గాంగంపయఃపునాత్యాశు పాపమామరణాంతికం" = மண்ணின்மேலதாகவேயாக, மேலெடுக்கப் பட்டதேயாக, குளிர்ந்ததேயாக, வெச்சென்றதேயாக, கங்கைநீராயிற் சாலும். அது ஒருவன் சாந்துணையுமனுபவிக்கத்தக்க பெரும்பாவங்களையும் விரைவிற் போக்கிப்புனிதஞ் செய்யும். எ-று. காண்க.

## விலக்காகியநீர்.

ஒழிக்கத்தநீரை வியாசர் கூறினர். వ్యాసః॥ "అసత్ప్రసృష్టేషున స్నాయాత్తుతథైవాసంస్తుతేషు। ఆత్మీయేష్వపినింద్యేషుదుష్టేష్వల్పజలేషుచ"=தான் கட்டுவித்த தாயினும் தகாதவர் தொட்டதும், சிறந்ததல்லாததும், நிந்திக்கத்தக்கதும், தோஷமுடையதும் = நோய்க்கிடமானதும், சுருங்கியதும், ஆகிய நீர்நிலைகளில் நீராடலாகாது. எறு. காண்க.

புண்டரீகர். పుండరీకః॥ "నద్యాయచ్ఛపరిభ్రష్టం నద్యాయచ్చవినిస్సృతం। గతంప్రత్యాగతంచైవ యత్తత్తోయంవివర్జయేత్" = யாற்றிலே விழுநீரும், அந்தயாற்றி னின்றும் வழுவிப்போம் நீரும், அதினின்றும் வெளிப்பட்டுச் செல்லும் நீரும், அதற்கு வருவாயாக வரும் நீரும் யாதோ? அவற்றையெல்லா மொழிக்கவேண்டும். எ-று. காண்க.

## பிராயச்சித்தஞ் செய்துகொள்ளத்தக்கநீர்.

சாதாதபர். శాతాతపః॥ "అన్త్యైరపికృతెకూపె సరోవాప్యాదికెతథా। తత్రస్నాత్వాచపీత్వాచ ప్రాయశ్చిత్తంసమాచరేత్" = அந்நியரா லெடுப்பிக்கப்பட்ட எவ்வகை நீர்நிலைகளிலும் ஸ்நாநம் செய்யலாகாது. ஒருக்கால் முழுகினும் குடித்தாலும் பிராயச்சித்தம் செய்துகொள்க. எ-று. காண்க.

## அதன்ஒழிபு.

மேற் கூறியவற்றிற்கு ஒழிபு மனு கூறுகின்றனர். మనుః॥ "అలాభెదెవఖాతానాం సరసాంసరితాంతథా। ఉద్ధృత్యచతురఃపిణ్డాన్ పారక్యేస్నానమాచరేత్" = சுனைகள், மடுக்கள், யாறுகள், கிடையாவழிவேற்றோரா லெடுப்பிக்கப்பட்ட நீர் நிலைகளில் நான்கு உருண்டை மண் சேறு துரும்பு முதலியவற்றை யாயினும் எடுத்தெறிந்து நீராடவேண்டும். எ-று. காண்க.

## வெந்நீர் விடயம்.

வெந்நீரால் முழுகுவதைச் சங்கர் விலக்கினர். శంఖః॥ "స్నాతస్యవహ్నితప్తేన తథైవపరవారిణా। శరీరశుద్ధిర్విజ్ఞేయా నతుస్నానఫలంభవేత్" = வெந்நீராலாயினும், அந்நியர்கைநீராலாயினும் நீராடினவனுக்கு உடம்பின்அழுக்கு ஒழிவதவ்வளவேயன்றிப் புண்ணியம்உண்டாவதில்லை எ-று. எனவே காட்சிப்பயனுண்டு. அதிருஷ்டபல னில்லையென்பது கருத்து.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "వృథాతూష్ణోదకస్నానం వృథాజప్యమవైదికం। వృథాత్వశ్రోత్రియెదానం వృథాభుక్తమసాక్షికం" = வெந்நீர்முழுக்கு வீணேயாம். வைதிகமல்லாதஜபமும் வீண். வேதமறியாதோனாகிய அசுரோத்திரியனுக்குக் கொடுத்த தானமும் வீண். விருந்தினரின்றித் தான்தனியேயுண்ட உண்டிவீண். எ-று. காண்க.

"ఆపఃపవసదాపూతా స్తాసాంవహ్నిర్విశోధకః। తతస్సర్వేషుకాలేషు ఉష్ణాంభః పావనంస్మృతం" = நீர்எப்பொழுதும் சுத்தமானது. தீயதனைச்சோதிக்கின்றது ஆகையால், எப்பொழுதும்வெந்நீரோசிறந்தது, என்று மிருதிகளிற் கூறப்பட்டது; என்று சிலர் கூறுகின்றனர். எ-று. காண்க.

முப்பத்தறுவர். షట్త్రింశన్మతే॥ ఆపస్స్వభావతోమేధ్యాః కింపునర్వహ్ని సంయుతాః। తేనసంతః ప్రశంసంతి స్నానముష్ణేనవారిణా" = இயற்கையாகவே நீர் பரிசுத்தமானது. அதற்கு மற்றும் பரிசுத்தமாகிய தீயின்சம்பந்த நேரிட்டால் வேறு கூறுவதென்னே? ஆதலால் நல்லோர் வெந்நீரினால் முழுகுவதனைச் சிறப்பிக்கின்றனர். எ-று. காண்க.

வெந்நீரைச் சிறப்பித்த மிருதிவசனங்கள் ஆதுரனைக்குறித்தது. அங்ஙனம் இயமன் கூறினர். యమః॥ "అదిత్యకిరణైఃపూతం పునః పూతంచవహ్నినా। ఆమ్నాతమాతురస్నానే ప్రశస్తంస్యాచ్ఛృతోదకం" = சூரியகிரணத்தாற் பரிசுத்தப்பட்டது; மீட்டும் நெருப்பினால் சுத்தமானது ஆகிய வெந்நீர் ஆதுரனுடைய ஸ்நாநத்திற் சிறந்ததென்று கூறப்பட்டது. எறு. காண்க. ஆதுரன் = இராஜீக தெய்வீகங்களாற் பீடிக்கப்பட்ட தீவரமுடையவன்.

எப்பொழுது, யாறுமுதலியன கிடைப்பதில்லையோ? அப்பொழுது அவ்வாதுரன் அல்லாதவனும் வெந்நீரின் முழுகுவது விலக்கத்தக்கதல்ல என இயமன் கூறினர். యమః॥ "నిత్యంనైమిత్తికం చైవ క్రియాయాంమలకర్షణం। తీర్థాభావేతుకర్తవ్య ముష్ణోదకపరోదకైః" = நித்தஸ்நாநம், நைமித்திகஸ்நாநம், கிரியாஸ்நாநம், மலாபகர்ஷணஸ்நாநம், இவைகளையெல்லாம் தீர்த்தசலம் கிடையாவழி வெந்நீராலாயினும் அந்நியன்கொண்டுவந்த நீரினாலாயினும் முழுகவேண்டுவது. எ-று. காண்க.

விருத்தமனு. వృద్ధమనుః॥ "మృతేజన్మనిసంక్రాంతే శ్రాద్ధేజన్మతిథౌతథా। అస్పృశ్యస్పర్శనేచైవ నస్నాయాదుష్ణవారిణా। సంక్రాంత్యాంభానువారేచ సప్తమ్యాంరాహుదర్శనే। ఆరోగ్యపుత్రమిత్రార్థీ నస్నాయాదుష్ణవారిణా। పౌర్ణమాస్యాంతథాదర్శే యఃస్నాయాదుష్ణవారిణా। సగోహత్యాకృతంపాపం ప్రాప్నోతినసంశయః" செத்தவழி பிறந்தவழித் தீட்டு, சங்கிராந்தி, பிதிர் சிராத்ததினம், தான்பிறந்ததாதிநாட்களிலும், தொடத்தகாதவரைத்தொட்டாலு

ம், வெந்நீரால் நீராடலாகாது. சங்கிரமணம், ஞாயிற்றுக்கிழமை, சத்தமி, கிரஹணம் இக்காலங்களில், நோயில்லாமை, மக்கள், ஒக்கல்=சுற்றம் முதலியவிருத்தி விரும்பினவன் வெந்நீரால் முழுகலாகாது. பூரணை, அமாவாசையில் யார் வெந்நீரால் முழுகுகின்றனோ? அவன்பசுவதை செய்தபாவத்தை யடைகின்றான் ஐயமில்லை. எ-று. காண்க. மரணமுதலிய நிமித்தங்களில் வெந்நீரால் முழுகலாகாது. பிறவெனில் வேற்றோர் கொடுவந்த நீரினலாயினும் கிணற்றினின்றும் மேலெடுக்கப்பட்ட நீராலாயினும் நீராடலாம் என்ற கருத்துக் கூறினல் மேற்கூறிய இயமன் வசனத்தோடு மாறுகோடல்=விரோதிப்பதுண்டாவதில்லை.

## அவ்வெந்நீர் முழுகும் விசேடவிதி.

வியாசர். వ్యాసః॥ "శీతాస్వప్సునిషిచ్యోష్ణా మంత్రిసంభారసంభృతాః। గేహేపిశస్యతేస్నానం నదీఫలసమంవిదుః" = தண்ணீரில் வெந்நீர்விட்டு மந்திரங்களால் அபிமந்திரித்து மனைக்கண்ணும் நீராடலாம் அந்த முழுக்குநதி = யாற்யில் செய்த ஸ்நாநத்தோடொத்தது என்று உணர்வர். எ-று. காண்க. கிரியாஸ்நாநம் முற்றிற்று.

கௌண ஸ்நாநத்தைப் பராசரனே மேற்கூறுவர் ஆண்டுணர்க.

ஸ்நாநவிதி முற்றிற்று.

---

## சந்தியாவந்தனவிதி.

---

சந்தியாவந்தனத்தின் சொரூபத்தைத் தக்ஷர்கூறுகின்றனர். దక్షః॥ "అహోరాత్రస్యయాసంధి స్సూర్యనక్షత్రవర్జితా। సాతుసంధ్యాసమాఖ్యాతా మునిభిస్తత్వదర్శిభిః" = பகலிரவுகளின் சந்திகாலம்யாது? சூரியனும் தாரகை = நக்ஷத்திரங்களும் கண்ணுக்குப் புலப்படாததுயாது? அது உண்மையுணர்ந்தவர்களாற் சந்தியென்று கூறப்பட்டது. எ-று. காண்க. ஈண்டு சந்திஎன்னு மொழிகாலப்பிரிவையுணர்த்து மொழியாகத் தோற்றுவதேயாயினும் அக்காலத்துள் உபாசிக்கத்தக்க தேவதை "சந்தியா" என்றவம் மொழியால் உபலக்ஷன

மாகப் பொருளாகின்றது. எனவே "சந்தியா" என்னு மொழிக்கு பகலிரவுகளின் கூட்டக்காலம் என்பது வாச்சியார்த்தம், அக்காலத்தில் உபாசிக்குந் தேவதையே இலக்கியார்த்தம் என்பது லக்ஷித லக்ஷணையால் = இருமடி ஆகுபெயரால் அந்தத் தேவதையை உபாசிக்குங் கரும அனுட்டானமும் பொருளாகின்றது. இக்கருத்தால் மூலத்துள் "சந்தியா" என்னுமொழி கருமவாசக மாகும்படிப் பிரயோகிக்கப்பட்டது. அல்லது உம். சந்தியிற் பிறந்த தொழில் "சந்தியா" என்னும் வியுத்பத்தி= மொழியாக்கப்பட்டால் "சந்தியா" என்பதற்கு தேவதையுபாசனே யென்பதும் வாச்சியார்த்தமே யாகின்றது.

வியாசரும் அங்ஙனம் கூறினர். వ్యాసః॥ "ఉపాస్తే సంధివేళాయాం నిశాయాదివసస్యచ। తామేవసంధ్యాంతస్మాత్తు ప్రవదంతిమనీషిణః" = பகலிரவின் சந்திகாலங்களில் உபாசிக்கின்ற தேவதையின் அந்தவுபாசனையையே "சந்தியா" என்று அறிவுடையோர் கூறுவர் எ-று. காண்க.

அந்தக்கிரியையினை யோகயாஞ்ஞவற்கியர் விதிக்கின்றனர். యోగయాజ్ఞవల్క్యః॥ "సంధౌసంధ్యాముపాసీత నాస్తగేనోద్గతేరవౌ" = சந்திகாலங்களில் சந்தியாதேவதையை யுபாசிக்கவேண்டுவது. சூரியன் முழுவதும் மறைந்தபின்பாயினும் உதயமானபின்பு ஆயினும் செய்யலாகாது. எ-று. காண்க. எனவே மறைவதற்கு முன்னும் வெளிப்படுதற்கு முன்னும் "சந்தியாவந்தனம்செய்யவேண்டுவது. என்பது கருத்து.

## சந்தியின்வேறுபாடு.

அச் சந்தியை மூவகைப் படுமென அத்திரியாற் கூறப்பட்டது. అత్రిః॥ "సంధ్యాత్రయంతుకర్తవ్యం ద్విజేనాత్మవిదాసదా" = தன்னை யுணர்ந்தவனால் நித்தமும் மூன்று "சந்தியாவந்தனம்" செய்யப்படுமாக - எ-று. காண்க.

## சந்தியாதேவதையின்பெயர் வேறுபாடு.

காலபேதத்தால் அத்தேவதைக்கு வேறுவேறு பெயர்களும் வியாசர் வகுத்தனர். వ్యాసః॥ "గాయత్రీనామపూర్వాహ్ణే సావిత్రీమధ్యమే దినే। సరస్వతీచసాయాహ్నే సైవసంధ్యాత్రిధాస్మృతా। ప్రతిగ్రహాదన్నదోషాత్ పాత

కాదుపపాతకాత్। గాయత్రీప్రోచ్యతేతస్మా ద్గాయంతంత్రాయతేయతః। సవితృద్యోతనాచ్చైవ సావిత్రీపరికీర్తితా। జగతఃప్రసవిత్రీవా వాగ్రూపత్వాత్సరస్వతీ ''=காலையில் காயத்திரி எனவும், உச்சிப்போதில் சாவித்திரி எனவும், மாலையில் சரச்சுவதி எனவும் அச்சந்தியாதெய்வம் மூவகையாகக் கூறப்பட்டது. பிறரிடத்தில் ஒன்றைவாங்கும்பாவமும், தகாதவுணவைப் புசித்த பாவமும், மற்றமஹாபாதக உபபாதகங்களும், ஆகிய இவற்றால் பயமுண்டாகாதபடி, செபிக்கின்றவனைக் காத்தலால் காயத்திரி என்னும் பெயராயிற்று.உலகத்தைப்பெறுகின்றவன் (எனவே பரமேச்சுரன்) சவிதாஎன்னப்படுவன் அவன்சந்நிதிப்படுதலின் சூரியனும் சவிதாஎன்னப்படுவன் அந்தச் சவிதாவை யொளிசெய்வித்துக் காட்டுதலினால் சாவித்திரி என்னும் பெயராயிற்று. உலகத்தைப்பெறுபவள் வாக்குருபமாய்-என்பது மந்திரவடிவாயிருப்பது ஆதலின் சிற்சத்தியே சரச்சுவதி என்னும் பெயரளாம். எ-று. காண்க.

## சந்தியாதெய்வநிறம்.

வண்ணபேதம் வேறுமிருதியுட் கூறப்பட்டது. வருமாறு, "గాయత్రీతుభవేద్రక్తా సావిత్రీశుక్లవర్ణికా। సరస్వతీతథాకృష్ణా ఉపాస్యావర్ణభేదతః" காயத்திரி செந்நிறத்தவராயும், சாவித்திரி வெண்ணிறத்தவராயும், சரச்சுவதி கருநிறத்தவராயும் உபாசிக்கப்படுவர். எ – று. காண்க.

## சந்திமும்முத்தற்றலைவர் வடிவாமாறு.

இதுவுமது. "గాయత్రీబ్రహ్మరూపాతు సావిత్రీరుద్రరూపిణీ। సరస్వతీవిష్ణురూపా ఉపాస్యారూపభేదతః'' = காயத்திரிபிரமன் வடிவாம், சாவித்திரி உருத்திரன் வடிவாம், சரச்சுவதி விஷ்ணுவடிவாம், எனவே காலத்திற்கேற்ற நாமரூப வேறுபாட்டால் உபாசிக்கவேண்டும். எறு. காண்க. உபாசனைஎன்பது குறைவற முற்றும் தியானித்தலாம்.

## காயத்திரிமூர்த்தி தியானம்.

வசிட்டர். వశిష్ఠః॥ముక్తావిద్రుమహేమనీలధవళచ్ఛాయైర్ముఖైస్త్రీక్షణై।ర్యుక్తామిందునిబద్ధరత్న మకుటాంతత్వార్థవర్ణాత్మికాం। గాయత్రీంవరదాభయాంకుశకశాశ్శుభ్రంకపాలంగదాం। శంఖంచక్రమథారవింద యుగళంహస్తైర్వహంతీంభజె ''=மேற்

குமுகம் முத்தின் நிறமும், வடக்குமுகம் பவளநிறமும், கிழக்கு முகம் பொன்னிறமும், தெற்குமுகம் நீலநிறமும், மேனோக்கிய நடுமுகம் படிகநிறமுமாக ஐந்துதிருமுகங்களை யுடையவர் திரு முகமொன்றற்குமும்மூன்றுகண்களாகப் பதினைந்துதிருக்கண்களை யுடையவர், அரதனமணிமுடியும், அவற்றுள் இளம்பிறைக்கீற்று முடையவர், இருபத்துநான்குதத்துவங்களுக்கும்வாசகமாயுள்ள இருபத்துநான்குமந்திரவெழுத்தினொளியேதிருமேனியாக வுடை யவர்பத்துத் திருக்கைகளும் அக்கைகள் தோறுமுறையேவரதம், அபயம், அங்குசம், கசை=சாட்டை, வெண்ணிறக்கபாலம், கதை, சங்கு, சக்கரம், இணைத்தாமரையும் தரித்தவர். இத்திறக்காயத் திரி தெய்வத்தை நான் தொழுகின்றேன். எ-று. காண்க. இது மும்முதற் றலைவர் திருவுருவாயும் சதாசிவமூர்த்த திருக்கோலமா யும்உள்ள தாமாதலின் முச்சந்தியிலும் சாதாரணத் தியானமாகக் கூறப்பட்டுள்ளதுஎன்றுணர்க. காலபேதம்பற்றிவிசுவாமித்திரசங் கிதை முதலியவற்றுள் வேறுவேறு தியானங்களும்கூறப்பட்டன.

கிருஷ்ணயஜுர்வேதம். அஉ - வது. பிரசினத்திலும் காயத் திரி யுபாசனை கூறப்பட்டுள்ளது. வருமாறு. "గాయత్ర్యా గాయత్రీ చ్ఛందో విశ్వామిత్రఋషి స్సవితా దేవతాగ్నిర్ముఖం బ్రహ్మాశిరో విష్ణుర్హృదయగ్ం రుద్రశ్శిఖా పృథివీయోనిః ప్రాణాపానవ్యానోదానసమానాసప్రాణా శ్వేత వర్ణా సాంఖ్యాయనసగోత్రా గాయత్రీ చతుర్విగ్ం శత్యక్షరా త్రిపదా షట్కుక్షిః పంచశీర్షా" = காயத்திரி மந்திரத்திற்கு காயத்திரி சந்தசு, விசுவா மித்திரர் இருடி, சவிதா தேவதை, அந்த மந்திரதேவதா மூர்த்திக்கு, திருமுகம் அக்கினி, பிரமன் சிரசு, இதயம் விஷ்ணு, சிகை உருத்திரன், பிரு திவியோனி, பிராணசத்தியே பிராணன், வெண்ணிறம், சாங்கியாய னசகோத்திரம், இருபத்து நான்கு எழுத்துகள், மூன்று பாதங் கள், ஆறுவயிறு, ஐந்துதலைகளையு முடையது காயத்திரி. எ-று. காண்க. மற்றுமுள்ள இம்மூர்த்திதியான விசேடங்களெல்லாங் காயத்திரிஇதய வித்தைமுதலிய மந்திர உபாசனாகாண்டங்களில் விரித்துக்கூறப்பட்டுள்ளன. உபநிடதம் பிரம சூத்திர முதலிய வற்றுள் சகுண வுபாசனையில் காயத்திரி வித்தை யென்று கூறப் பட்டஞானகாண்டமும் பிரசித்தியாயுள்ளது. காயத்திரி யுபாச னையின் உட்கருத்தி யாதெனில்? வேதம் தைத்திரிய சாகையில் கூறப்பட்டது.

தைத்திரீயபிராமணம். తైత్తిరీయబ్రాహ్మణం॥ "ఉద్యంతమస్తంయంతమాదిత్యమభిధ్యాయన్కుర్వన్బ్రాహ్మణోవిద్వాంత్సకలంభద్రమశ్నుతేసావాదిత్యోబ్రహ్మేతిబ్రహ్మైవసన్బ్రహ్మాప్యేతియఏవంవేద." = பிராணயாமாதி கருமஞ் செய்து கொண்டிருக்கும் அறிவுடைய வந்தணன், உதயத்தையும் அஸ்தமானத்தையு மடையும் சூரியனைத்தியானஞ்செய்பவனாய் எல்லா நன்மைகளையும் அனுபவிக்கின்றான். இந்தச்சூரியனே பரப்பிரமம் என்று தியானித்தவன் பிரமமேயாகிப் பிரமத்தை யடைகின்றான். யார் இங்ஙன முணரவல்லவனோ? அவன்பிரமத்தையடைகின்றான். எ-று. இதுவேயச்சுருதியின்பொருள். அல்லதூஉம். பிராணயாமாதி கருமங்களைச் செய்பவனாய் வேதத்துட் கூறியவாறு, அந்தப்பெயர்களால் தியானிக்கத்தக்க வடிவத்தோடுங் கூடி, "சந்தியா" என்னுமொழிக்குப் பொருளாயுள்ள சூரியனைப்பிரமம் என்று தியானிப்பவன் இம்மையிலும் மறுமையிலுமாகத்தக்க எல்லாமங்கலங்களையும் அனுபவிக்கின்றான். யார் இவ்வாறு கூறப்பட்டதியானத்தினால்சுத்தமாகிய அந்தக்கரணம்= மனமுதலியவற்றை யுடையவனாய்ப் பிரமத்தைக் கண்கூடாக= பிரத்திக்ஷமாக அனுபவிக்கின்றானோ? அவன் முன்னும் பிரமமே யாயினும் அஞ்ஞானத்தால் சீவத்தன்மையை யடைந்திருந்தலின்மேற் கூறப்பட்ட பிரமந்தானென்னு முணர்ச்சியால் அந்த அறியாமை நீங்கப் பிரமத்தையே யடைகின்றான். எனவும் பொருள் கூறுவர்.

வியாசரும் இதனையே கருதிக் கூறினர். వ్యాసః॥ "నభిన్నాంప్రతిపద్యేత గాయత్రీంబ్రహ్మణాసహ। సోహమస్మీత్యుపాసీత విధినాయేనకేనచిత్"=காயத்திரியைப் பேதமாக வுபாசிக்கலாகாது பிரமத்தோடு நானே ஆயினேனென்று எந்தவிதியாலாயினும் ஐக்கியானுசந்தானம்= ஒன்று படுந்தன்மையைத் தொடர்ந்து பற்றுதல் செய்யவேண்டும். எ-று. காண்க.

## சந்திகாலம்.

அவ்விடத்தில், பிராதஸ்ஸந்திக்கு = உதயக் கட்னுக்குக் கால அளவையைத் தக்ஷர் கூறினர். దక్షః॥ "రాత్ర్యంతయామనాడీద్వే సంధ్యాదిఃకాలఉచ్యతే। దర్శనాద్రవిరేఖాయాస్తదంతోమునిభిస్స్మృతః" = இரவின் கடையாமத்தின் முடிவு இரண்டுநாழிகை சந்திக்கு முதற்

காலமாகக் கூறப்பட்டுள்ளது. சூரியமண்டல பாகத்தை பார்க்குமளவும் சந்தியையின் முடிவுஎன்று முனிவர்களாற் கூறப்பட்டது. சங்கமகாலம் வரையிலும், காலைச்சந்தி கடனுக்குச் சாமானியகாலமுண்டு. எ-று. காண்க. (சங்கமகாலம் என்பது. சூரியனுதயமுதல் அஸ்தமானவரையினும் உள்ளபொழுது அகசு என்னப்படும். அதனை யைந்துபங்காக்கி யவற்றுள் இரண்டாவதுபாக காலம் சங்கமகாலமென்னப்படும்) இதனால், சாதாரணமாக ஆறு நாழிகை வரையில் காலைச்சந்திக்கடனுக்குச் சிறவாத காலமும் உண்டு என்றபடி.

பிரதோஷகாலமுடியும் வரையில், மாலைச்சந்திக் கடனுக்குக்காலமுண்டு. அதனை விருத்தமனு கூறினர். వృద్ధమనుః॥ "నప్రాత ర్న ప్రదోషశ్చ సంధ్యాకాలాతిపద్యతే। ముఖ్యకల్పానుకల్పశ్చ సర్వస్మిన్ కర్మణి స్మృతః"= விடியற்காலமும் பிரதோஷ சமயமும் சந்திக்கடனுக்குச் சிறந்த காலமாக விருக்கின்றன அதுகடத்தலால் கருமத்திற்குரிய பொழுது தவறிப்போதலில்லை. என்னையெனில்? எல்லாக்கருமங்களினும் முக்கியகற்பமும், அதன்பின்னரோ அனுகற்பமும் கூறப்பட்டிருத்தலின். எ-று. காண்க. பிரதோஷம்=பகலின்கடை முகூர்த்தம். அது அஸ்தமானசமயம்.

## சந்தியோபாசனைவகை.

கூர்மபுராணத்துள் சந்திக்கடன் கழித்தலின் முறைகுறிக்கப்பட்டது. కూర్మపురాణే॥ "ప్రాగగ్రేషు తతస్తిత్వా దర్భేషు సుసమాహితః। ప్రాణాయామత్రయంకృత్వా ధ్యాయేత్సంధ్యామితిశ్రుతిః" = கிழக்குத் தலையாகப் பரப்பிய தருப்பையின்மீது நன்றாக அமைதியோடு இருந்து முக்காற்பிராணயாமஞ் செய்து, அதன்பின் சந்திக் கடவுளைத் தியானிக்கவேண்டும் என்று வேதங் கூறுகின்றது. எ-று. காண்க.

யாஞ்ஞுவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "ప్రాణానాయమ్యసంప్రోక్ష్య త్ర్యృచేనాబ్దైవతేనతు" = பிராணயமஞ் செய்து, ஜலதேவதை சம்பந்தமான மூன்றுஇருக்கு மந்திரங்களால் மேலே நீர் தெளித்துக்கொண்டு. எ-று. காண்க.

பிரகற்பதி. బృహస్పతిః॥ "బధ్వాసనంనియమ్యాసూ న్స్మృత్వాచార్యాదికంతథా। సన్నిమీలితదృక్ప్రాణీ ప్రాణాయామంసమభ్యసేత్" = அசைவற ஆசன

மிட்டுப் பிராணவாயு இயங்குதலைத் தடுத்து, ஆசிரியர் முதலியோரைத் தியானித்துக் கண்மூடி வாய்பேசாது பிராணாயாமத்தைப் பழகவேண்டும். எ-று. காண்க.

## பிராணாயாம விலக்கணம்.

பிராணாயம விலக்கணத்தை மனுகூறினர். మనుః॥ "సవ్యాహృతిం సప్రణవాం గాయత్రీంశిరసాసహ। త్రిర్జపేదాయతప్రాణః ప్రాణాయామస్సఉచ్యతే"= மூன்றுவியாஹிருதி மந்திரங்களோடும், ஒருபிரணவ மந்திரத்தோடும், காயத்திரிசிரோமந்திரத்தோடும் கூட்டிக் காயத்திரியை மும்முறைப் பிராணவாயு இயங்காமற் றடுத்துச் செபிக்கவேண்டும். அங்ஙனஞ் செய்வது பிராணாயாம மென்று கூறப்படுகின்றது. எ-று. காண்க.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "గాయత్రీంశిరసాసార్ధం జపేద్వ్యాహృతిపూర్వికాం। ప్రతిప్రణవసంయుక్తాం త్రిరయంప్రాణసంయమః" = காயத்திரியை அதன்சிரத்தோடு கூட்டி வியாஹிருதியை முதலாக்கிக் கொண்டு, ஒவ்வொரு மந்திரத்திற்கும் பிரணவத்தைச் சேர்த்துச் செபிக்கவேண்டும். முக்கால் இவ்வாறு செய்வதே பிராணாயாம மெனப்படும். எ-று. காண்க.

யோகயாஞ்ஞவற்கியர். యోగయాజ్ఞవల్క్యః॥ "భూర్భువస్స్వర్మహర్జనస్తపస్సత్యంతథైవచ। ప్రత్యోంకారేణ సంయుక్తం తథాతత్సవితుఃపదం। ఓమాపోజ్యోతిరిత్యేతచ్ఛిరఃపశ్చాత్ప్రయోజయేత్। త్రిరావర్తనయోగాత్తు ప్రాణాయామస్సశబ్దితః"= "భూః" பூ: ॥ భువః ॥ புவ: ॥ స్వః ॥ சுவ: ॥ మహః ॥ மஹ: ॥ జనః ॥ ஜந: ॥ తపః ॥ தப: ॥ సత్యం ॥ ஸத்யம் ॥ இவ்வேழு மந்திரங்களும் சுவர்க்கம் முதல் சத்தியலோக வரையிலும் உள்ள ஏழுபுண்ணிய வுலகப் பெயர்களாக விருக்கின்றன. ஓங்காரம் பிரமவாசகமாம். மேற்கூறிய வேழுமந்திரங்களின் முதலில் இந்த வோங்காரத்தைச் சேர்க்கவேண்டும். அதனால் அவ்வுலகமுற்றும் பிரமவடிவாகப் பாவிக்கப்பட்ட தாகின்றன. తత్సవితుః ॥ தத்ஸவிதுः ॥ என்பது காயத்திரிமந்திரம் அதனைக் கூறவேண்டுவது. அதனுள். "తత్" தத் என்றமொழி மேற்கூறிப் போந்த புண்ணியலோகத்தோடு கலந்திருந்த பிரமவுணர்ச்சியைச்சுட்டி நிற்கின்றது. సవితుః ॥ ஸவிது: ॥ என்றமொழி யதனல் விசேடிக்கப்பட்டு உலகப்பிறப்பே காரணமாந் தன்மையை யுணர்த்துகின்றது. அதனல் விசேடிக்கப்பட்ட

భర్గో దేవస్య॥ பர்க்கோதேவஸ்ய॥ என்றமந்திரக்குறி, பரமனெனவுண த்துகின்றது. இனி அதனுடைய சிறந்தவொளியைத் தியானிக் கின்றோம். எங்களால் தியானிக்கப் பட்டவன் யாவன்? அவன் எம்முடைய அறிவை உண்மையான நல்லவழியிற் செலுத்துவன். என்பது காயத்திரிமந்திரத்தின் பொருள். பின்பு ஓங்காரத்தைச் செபிக்கவேண்டும். அதுமுக்குணங்களுக்கும், மும்முதல் மூர்த் திகளுக்கும், முக்காலத்திற்கும், மூன்று அவத்தைகட்கும், வாசகமாய் சுத்தப்பிரம வுணர்ச்சியைக் குறித்து நிற்கின்றது. முற்கூறிய காயத்திரி மந்திரப்பொருளோடு பிரிவற அநுசந்திக்க வேண்டுவது. பின்னர். "ఆపో జ్యోతిః" = ஆபோ ஜோதி என்ற மந்திரத்தைச் செபிக்கவேண்டும். அது சூரியசந்திராதியர்க்கும் அத்தேவதைகளையுடைய தத்துவங்கட்கும், ஆபோ மயமாகிய பிராணன் மாவுக்கும், வாசகமாய் அவ்வெல்லாமாகிய சீவனைக் காக்கின்றது. அந்தமந்திரத்துள்ள "రసః" "ரஸ" என்றமொழி ஆனந்த மயத்தை யுணர்த்துகின்றது. "అమృతం" "அமிர்தம்" என்றமொழி முத்தியென்பதே பொருளாகவுடையது. "బ్రహ్మ" பிரமம் என்ற மொழிஅவற்றோடு பிரிவற்ற அறிவே வடிவாகிய உண்மைப்பொருளைக் குறிக்கின்றது. பின்பு மீட்டும் மூன்றுவியா ஹிருதிகளோடு அதனைத் "தன்மயம்" = அதன் வசப்பட்ட தாகச் செய்து மேற்கூறிவந்த இவ்வெல்லா அருத்தங்களையும் ஓங்காரப் பொருளோடு கூட்டி, அதனதன் ஒலித்திறந் தவறாது மூன்றுதரம் பிராணவாயுவை மேலுக்கு ஈர்த்துப்பற்றிப் பிரமஸ் தானத்தை யிலக்காக வைத்துச் செபிக்கத்தக்க மந்திரயோகமே பிராணயாமம் என்றமொழிக்குப் பொருளாக விருக்கின்றது. விதிப்படி 'குருமொழி மரபில்வந்த இந்த மந்திரயோக வித்தை யின் மஹிமையால் உபாசிக்கின்றவன் கீழ் = நரக லோகங்களில் விழாமல், மேற்பட்டுள்ள புண்ணிய வுலகவழியாக ஆநந்த அநு பவத்தைச் செய்து, எல்லாப் பாவங்களினின்றும் ஒழிந்தவனாய் என்றுமழியாத மரபினையுடைய முத்தியை யடைகின்றான் என அந்த யோகயாஞ்ஞவற்கிய பாஷியத்தின்கருத்து. என்பதுணர்க.

## பிராணயாமபேதம்.

யோகயாஞ்ஞவற்கியர். యోగయాజ్ఞవల్క్యః॥ "పూరకః కుంభకో రేచకస్త్రిభిః ప్రాణాయామస్త్రిలక్షణః। నాసికాకృష్టఉచ్ఛ్వాసో ధ్మాతః పూరక ఉచ్యతే। కుంభ

కోనిశ్చలశ్వాసో రిచ్యమానస్తురేచకః" = பூரகமென்றும், கும்பகமென்றும், இரொசகமென்றும் பிராணுயமம் மூன்று வகைமையினையுடையது. மூக்கினுல் இழுக்கப்பட்ட மேல்சுவாசம் = மூச்சு, பூரகமென்றும், அவ்வாறு இழுக்கப்பட்ட மூச்சுத்தம்பிக்குங்காலத்தில் கும்பகமென்றும் பின்பு அந்தமூச்சை மெல்லமெல்லக் கீழ்விடுங்காலத்தில் இரோசகமென்றும் சொல்லப்படுகின்றது. எ-று. காண்க. தம்பித்தல். = அடக்குதல்.

## சந்திக்கடனுக்குரியமார்ஜனம்.

**மா**ர்ச்சனத்தை வியாசர் கூறினர். వ్యాసః॥ "ఆపోహిష్ఠేత్యృచా కుర్వన్మార్జనంతుకుశోదకైః। ప్రణవేనతుసంయుక్తం క్షిపేద్వారిపదేపదే। వప్రుష్టౌక్షిపేదూర్ధ్వ మధోయస్యక్షయాయచ। రజస్తమోమోహజాతాన్ జాగ్రత్స్వప్నసుషుప్తిజాన్। వాఙ్మనఃకాయజాన్దోషా న్నవైతాన్నవభిర్దహేత్" = "ஆபோஹிஷ்டா" என்ற இருக்குவினுல் தருப்பை நீரைப் பிரணவத்தைச் சேர்த்து அம்மந்திரத்தின் எட்டு வாக்கியங்களாலும் எட்டுவிசை தேகத்தின்மீது இறைத்துக்கொள்ளவேண்டுவது "యస్యక్షయాయ" என்ற மந்திரத்தினுல் மேல்பாகத்திற்கு நீரிறைக்கவேண்டும்." எ-று. இவ்வொன்பது மந்திரங்களாலும் செய்த அவ்வொன்பதுமார்ச்சனங்களும் முறையே சாக்கிரம், சொப்பனம், சுழுத்தியென்னு மூன்று அவத்தையிலும் காயக மானசிக வாசிகமாகிய திரிகரண பாவத்தையும் எனவே ஒன்பதுபாவங்களையும்சுடுகின்றது. எ-று.காண்க. மார்ச்சனம் = நீரிறைத்தல்.

**சாதாதபர்.** శాతాతపః॥ "ఋగంతేవాథపాదాన్తే మార్జనంసుసమాహితః। అర్ధర్చాన్తేతథాకుర్యా చ్ఛిష్టానాంమతమీదృశం" = ஒரு இருக்கின் முடிவிலாயினும், அதன் பாதியிலாயினும், அல்லது பாதம் = காற்பாகத்தின்முடிவிலாயினும் அமைதியோடும் மார்ச்சனம்செய்துகொள்ளவேண்டும். இங்ஙனஞ்செய்வதே சிட்டர் சம்மதமாம். எ-று. காண்க.

**ஹாரீதர்** హారీతః॥ "మార్జనార్చనబలికర్మభో జనానిదైవతీర్థేనకుర్యాత్" புரோக்ஷித்துக்கொள்ளுகை, அருச்சித்தல், பலியேற்பித்தல், உண்டல் ஆகிய இந்நான்குகருமங்களையும் தெய்வதீர்த்தமுத்திரையாற்செய்யவேண்டும். எ-று. எனவே அங்கையிலிருந்து ஐவிர

ற்றலைவழியாகச் செலுத்தவேண்டுமென்பது. (అంగుళ్యగ్రే దైవంతీర్థం) விரற்றலையிற் றெய்வதீர்த்தம், என்பது அமரநிகண்டு.

அந்த மார்ச்சனத்தைத் தாரையாக விழுந்துகொண்டிருக்கும் நீரிற்செய்யலாகாது. அங்ஙனம் பிரமன் கூறினர். "ధారాచ్యుతేన తోయేన సంధ్యోపాస్తిర్విగర్హితా। పితరో న ప్రశంసంతి న ప్రశంసంతి దేవతాః" தாரையாக விழுகின்ற நீரினால் சந்தியாவந்தனஞ் செய்வது நிந்திக்கப்பட்டது. அவ்வாறுசெய்வதைப் பிதிரரும் தேவரும்சிறப்பிப்பதில்லை. எ-று. காண்க.

ஆயின் மார்ச்சனத்தை எவ்வாறு செய்க வெனில்? பிரமனே கூறினர். బ్రహ్మ॥ "సంధ్యాతీర్థతటేవాపి భాజనే మృణ్మయేపివా। ఔదుంబరే చ సౌవర్ణే రాజతే దారుసంభవే। కృత్వాతు వామహస్తేవ సంధ్యోపాస్తిం సమాచరేత్" சந்தியாவந்தனத்திற்கு நின்ற தீர்த்தத்தின் கரையிலாயினும், மண்பாத்திரத்திலாயினும், அத்திமரத்தாற்செய்த பாத்திரத்திலாயினும், பொன் வெள்ளி பாத்திரங்களிலாயினும், மற்றுந்தகுதியுள்ள மரமுதலியவற்றாற் சமைந்த பாத்திரங்களி லாயினும், இடக்கரத்தினாலாயினும், நீரைப்பெற்றுக்கொண்டு அதனால் சந்தியாவந்தனஞ்செய்ய வேண்டும். எனவே மார்ச்சனம் செய்துகொள்ள வேண்டும், எ-று. காண்க.

மண்பாத்திரமுதலியன விருக்கையில் இடதுகை விலக்கானதாம். "వామహస్తే జలం కృత్వా యేతు సంధ్యాముపాసతే। సా సంధ్యా వృషలీ జ్ఞేయా అసురాస్తైస్తు తర్పితాః" = யார் இடதுகையில் நீர்கொண்டு சந்தியாவந்தனஞ் செய்கின்றனோ அவன் செய்த சந்தியை "விருஷலி" என்று உணரத்தக்கது. அதனால் அசுரர் திருத்தியடைவர். என்று ஸ்மிருதி வசனமிருப்பதால்.

மண்பாத்திரமுதலியன கிடையாவழி "కృత్వాతువామహస్తేవా" = இடதுகையிலாவது நீர் வைத்துக் கொண்டு சந்தியாவந்தனஞ் செய்யவேண்டும்; என்று சாமானியபக்கமாக விதிக்கப்பட்டது இவ்வாறு கூறியவிதிப்படி மார்ச்சனத்தைச் செய்துகொண்ட பின்பு, மந்திரங்களால் மந்திரிக்கப்பட்ட நீரைக் குடிக்கவேண்டுவது.

போதாயனர். బౌధాయనః॥ "అథాతస్సంధ్యోపాస నవిధింవ్యాఖ్యాస్యామస్తీర్థం గత్వాప్రయతోభిషిక్తః ప్రక్షాళితపాణిపాదో విధినాచమ్యాగ్నిశ్చ మామన్యుశ్చేతిసాయమపఃపీత్వా సూర్యశ్చేతి ప్రాతస్సావిత్రేణ సురభిమత్యా అబ్లింగాభిర్వారుణీభిర్హిరణ్యవర్ణాభిః పావమానీభిర్వ్యాహృతిభిరన్యైశ్చ పవిత్రైరాత్మానంప్రోక్ష్యపూతోభవతి" = பின்பு சந்திதேவதையை யுபாசிக்கவேண்டிய விதியை விவகரிக்கின்ரும். தீர்த்தத்தருகுசென்று முயற்சியோடும் அபிடேகஸ்நாநம் செய்துகொண்டு கைகால் சுத்திசெய்து விதிப்படி ஆசமனஞ்செய்து மாலையில் "అగ్నిశ్చ" என்றமந்திரத்தோடும் காலையில் "సూర్యశ్చ" என்றமந்திரத்தோடும் மந்திரித்தசலத்தைக் குடித்துப் பின்பு சூரியமந்திரங்கள், கோமந்திரங்கள், அப்பிலிங்க மந்திரங்கள், வருண மந்திரங்கள், வாயு மந்திரங்கள் "హిరణ్యవర్ణా" என்னும் அக்கினிமந்திரங்கள் இந்திரமந்திரங்கள் வியாஹிருதிமந்திரங்கள் முதலிய சுத்திகரமாயுள்ள புண்ணிய மந்திரங்களால்மந்திரித்த நீரைத்தேகத்தின்மேற்றெளிந்துக்கொண்டுபரிசுத்தனுகின்ருன். எ-று. காண்க.

## மந்திரோதகபானம்.

பாரத்துவாஜர். భారద్వాజః॥ "సాయమగ్నిశ్చమేత్యుక్త్వా ప్రాతస్సూర్యశ్చాపఃపిబేత్। ఆపఃపునంతుమధ్యాహ్నే తతశ్చాచమనంచరేత్" = மாலைப்போதில் "అగ్నిశ్చ" காலையில் "సూర్యశ్చ" உச்சியில் "ఆపఃపునంతు" என்ற மந்திரங்களால் மந்திரிக்கப்பட்ட சலத்தைப் பானஞ்செய்து பின்பு ஆசமனஞ் செய்யவேண்டும். எ-று. காண்க.

காத்தியாயனர். కాత్యాయనః॥ "శిరసోమార్జనంకుర్యాత్కుశైస్సోదకబిందుభిః। ప్రణవోభూర్భువస్స్వశ్చ గాయత్రీ చతృతీయకా। అబ్దైవత్యాఋచశ్చైవ చతుర్థమితిమార్జనం" நீர்த்துளிகளோடுங்கூடியதருப்பையால் தலைமேல்தெளித்துக்கொள்ள வேண்டும். அங்ஙனம் செய்வுழிப்பிரணவத்தால் முதற்றடவை, வியாஹிருதியால் இரண்டாமுறை, காயத்திரியால் மூன்ரும் விசை, ஜலமந்திரங்களால் நாலாந்தரம் எ-று. காண்க.

## பாவக்கழிவு.

இங்ஙனம் மார்ஜனம் செய்துகொண்ட பின்பு செய்யத்தக்கதைப் பிரஜாபதி கூறினர். ప్రజాపతిః॥ "జలపూర్ణంతథాహస్తం నాసికాగ్రే

సమర్పయేత్। ఋతంచేతిపఠిత్వాతు తజ్జలంతుక్షితౌక్షిపేత్ " = கைநிரம்ப நீர் வாங்கிக்கொண்டு மூக்கின்நுனிக்குக் கொண்டுபோய், "ఋతంచ" என்றமந்திரத்தைச் செபித்து அந்தநீரைப் பூமிமே லிறைக்க வேண்டும். எ-று. காண்க.

## அருக்கியம்.

பின்னர் சூரியன் பொருட்டு அருக்கியத்தைக் கொடுக்க வேண்டும். அங்ஙனம் வியாசர் கூறினர். వ్యాసః॥ "కరాభ్యాంతోయమాదాయ గాయత్ర్యా చాభిమంత్రితం। ఆదిత్యాభిముఖస్తిష్ఠం స్త్రిరూర్ధ్వమథసోత్క్షిపేత్" = இரண்டுகைகளாலும் நீர்வாங்கிக் கொண்டு காயத்திரியைச் செபித்துச் சூரியனுக்கு எதிராக நின்றுகொண்டு மூன்றுதரம் மேலே யிறைக்கவேண்டும். எ-று. காண்க.

ஹாரீதர். "సావిత్ర్యాభిమంత్రిత ముదకంపుష్పమిశ్రిత మంజలినాక్షిపేత్" = தருப்பைநுனி பூக்களோடுங் கூடியசலத்தை யங்கையால் வாங்கி, காயத்திரியால் அபிமந்திரித்துச் சூரியனுக்கு அற்பிக்கவேண்டும். எ-று. காண்க.

அருக்கியங் கொடுப்பதில் வேறுமந்திரம் விஷ்ணுவாற் கூறப்பட்டது. విష్ణుః॥ "కరాభ్యామంజలింకృత్వా జలపూర్ణంసమాహితః। ఉదుత్యమితిమంత్రేణ తత్తోయంచక్షితౌక్షిపేత్" = இரண்டங்கைகளையும் சேர்த்து நீர்நிரம்பக்கொண்டு "ఉదుత్యం" என்னும் மந்திரத்தால்மந்திரித்து அந்தநீரை பூமிமேலிறைக்க வேண்டுவது. எ-று. காண்க.

இதுவுமது. "తతఃప్రదక్షిణాంకృత్వా ఉదకంచస్పృశేత్" = பின்பு வலமாகவந்து சலத்தைத் தொடவேண்டுவது. எ-று. இங்ஙனம் வராக புராணத்துள்ளும் கூறப்பட்டது.

வராகபுராணம். వరాహపురాణే॥ "సాయంసంధ్యాముపాసీత ప్రోక్షయ్య సూర్యాయచాఞ్జలిం। దత్వాప్రదక్షిణంకృత్వా జలంస్పృష్ట్వావిశుధ్యతి" மாலை சந்தியாவந்தனம் செய்யவேண்டுவது. புரோக்ஷணம் = மேற்றெளித்தலைச்செய்து, சூரியனுக்கு அருக்கியத்தைக் கொடுத்து வலம் வந்து, நீரைத்தொட்டு பின் பரிசுத்தனாகின்றான். எ-று. காண்க

சுருதி. శ్రుతిః॥ "యత్ప్రదక్షిణంప్రక్రమం తితేనపాప్మానమవధూన్వంతి" = வலம்வருகின்றார்; என்பதுபாதோ? அதனால் பாவத்தை யுதறுகின்றார்கள். எ-று. காண்க.

## சூரியோபஸ்தாநம்.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ "అథోపతిష్ఠేదాదిత్య ముదయంతంసమాహితః। మంత్రైస్తువివిధైస్సౌరై ఋగ్యజుస్సామసంభవైః" = பின்னர் அமைந்த சித்தமுடையவனுய் உதயமாகின்ற சூரியனைக்குறித்து, பலவிதமாகிய இருக்கு, யஜசு, சாமங்களினுள்ள சூரிய மந்திரங்களால் பிரார்த்திக்க வேண்டுவது. எ-று. காண்க.

### உபஸ்தானம் = பிரார்த்தனை.

சூரியோப ஸ்தானத்தைத் தன்னுடைய சாகைக்கணுள்ள மந்திரங்களானே செய்யவேண்டுவது. "ఉపస్థానంస్వకైర్మంత్రై రాదిత్యస్యచకారయేత్" தன்னுடைய சாகைக்கணுள்ளமந்திரங்களால்சூரிய பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று வசிட்ட ஸ்மிருதி கூறுதலின். "ఉపస్థానం" = உபஸ்தானம். எது. "ఉప" = சமீபத்தில், "స్థానం" இருப்பது. எனவே. இலக்கணையால் சூரியனுக்கு எதிராகநின்று சாந்நித்தியம் = சந்நிதிச்சம்பந்தத்தைப் பாவித்துத் தன் சாகையிலுள்ள சூரியஸ்தோத்திர மந்திரங்களால் சூரியனை உபாசித்தல் என்னுங் கருமமாம்.

இந்தப்பிரார்த்தனை கூர்மபுராணத்தில் "స్వాహాకే" என்றது முதலிய வாக்கியங்களால்விரித்துக் கூறப்பட்டது. "ప్రాక్కూలేషు" என்றதுமுதல் சூரியோபஸ்தானம் வரையில் உதயகால சந்தியாவந்தனத்தில் எது கூறப்பட்டதோ? அதுவேமுயுள்ள மாத்தியாந்நிகம் சாயம்சந்திஎன்னுமிவ்விரண்டிலும் ஒத்தவாருக விருக்கும்.

### மாத்தியாந்நிகவிசேடம்.

ஆயின், மாத்தியாந்நிகம் = உச்சிகருமத்தில் சில்விசேடம், நாராயணரால்கூறப்பட்டது. నారాయణః॥ "ఆపఃపునంతుమంత్రేణ ఆపోహిష్ఠేతిమార్జనం। ప్రక్షిప్యచాంజలింసమ్య గుదుత్యంచిత్రమిత్యపి। తచ్చక్షుర్దేవఇతిచసూంస శ్చుచిషదిత్యపి। ఏతజ్జపేదూర్ధ్వబాహు స్సూర్యంపశ్యంత్సమాహితః। గాయత్ర్యాతుయథాశక్తిసముపస్థాయభాస్కరం" = "ఆపఃపునంతు" என்றமந்திரத்தால் நீர்குடித்து "ఆపోహిష్ఠా" என்றமந்திரத்தால் மார்ச்சனமும் "ఉదుత్యం చిత్రం" "తచ్చక్షుర్దేవహితం" "హంసశ్శుచిషత్" என்ற மந்திரங்களால் அருக்கியமும், இம்மந்திரங்களைச் செபித்துக்கொண்டு கைகளை

மேலெடுத்துச் சித்த அமைதியோடும் சூரியனை நோக்கிக் காயத்திரிமந்திரத்தால் சூரியோபஸ்தானமும் சத்தியுள்ள வரையில் செய்யவேண்டும். எறு. காண்க.

காலவிசேடம் சங்கரால் குறிப்பிக்கப்பட்டது. శంఖః॥ "ప్రాతస్సంధ్యాంసనక్షత్రాంమధ్యమాంస్నానకర్మణి। సాదిత్యాంపశ్చిమాంసంధ్యాముపాసీత యథావిధి" = நக்ஷத்திரங்கள் காணப்படும்போதே காலைச் சந்திக்கடனும், ஸ்நாநஞ்செய்தபோது மாத்தியாந்நிகசந்தியும், சூரியன் காணப்பட்டுக்கொண் டிருக்கும்போதே மாலைச்சந்திக்கடனும். எவ்வாறு விதியோ? அவ்வாறு செய்யவேண்டும். எறு. காண்க. ஸ்நாநஞ் செய்தபோது எனவே மாத்தியாந்நிக ஸ்நாநஞ் செய்த பின்பு என்பது கருத்து.

மாத்தியாந்நிக சந்தியில் "கௌணகாலம்" சிறவாதகாலத்தைத் தக்ஷர்கூறினர். దక్షః॥ "అధ్యర్ధయామమాసాయం సంధ్యామాధ్యాహ్నికీష్యతే" = ஒன்றரையாமம் முதற்கொண்டு சாயுங்காலம்வரையில் மாத்தியாந்நிக சந்திக்குக் காலம் வகுக்கப்பட்டது. எறு. காண்க.

## சந்திக்கு இடவிசேடம்.

மூன்று சந்திகட்கும் ஏற்றக்குறைவால் இடவிசேடங்களை வியாசர் கூறினர். వ్యాసః॥ "గృహేత్వేకగుణాసంధ్యా గోష్ఠేదశగుణాస్మృతా। శతసాహస్రికానద్యా మనంతావిష్ణుసన్నిధౌ" = மனையிற் சந்திவந்தனஞ் செய்வது ஒருமடங்கு பயனுடையது. பசுக்கொட்டிலில் செய்வது பதின்மடங்குபயன். யாற்றில் நூறுயிரம். விஷ்ணு சந்நிதியில் முடிவில்லாதது. எறு. காண்க.

மஹாபாரதம். మహాభారతే॥ "బహిస్సంధ్యాదశగుణా గర్తప్రస్రవణేషు చ। తీర్థేశతగుణా సహస్రంజాహ్నవీజలే" = வெளிச்சென்று குளம், வாய்க்கால், கயம்முதலிய நீர்நிலைகளில் சந்தியா வந்தனம் செய்வது பதின்மடங்கு பயன்; புண்ணிய தீர்த்தங்களில் நூறுமடங்கு; கங்கைநீரில் ஆயிரமடங்கு உண்டாம். எறு. காண்க.

சாதாதபர். శాతాతపః॥ "అనృతంమద్యగంధంచ దివామైథునమేవచ। పునాతివృషలస్యాన్నం సంధ్యాబహిరుపాసితా" = வெளியிற்செய்த சந்தியாவந்தனம்,பொய்கூறியபாவத்தையும்,கள்ளின்மணநுகர்ந்தபாவத்தை

யும், பகலில் பெண்புணர்ச்சி செய்தபாவத்தையும், விருஷலன் ஆனவனுடைய அன்னத்தைப் புசித்த பாவத்தையும் போக்கடித்துப் பரிசுத்தனுக்குகின்றது. எ-று. காண்க.

வெளியிற்சென்று சந்தியாவந்தனஞ் செய்யினும் "విహరణం" என்பது முதலிய கருமாங்கங்களுக்கு குறைவுண்டாகு மாயின் மனையினிடத்திலே தானே முச்சந்தி வந்தனத்தையும் செய்ய வேண்டும் என்று அத்திரிகூறினர். అత్రిః॥ "సంధ్యాత్రయంతు కర్తవ్యం ద్విజేనాత్మవిదా సదా। ఉభేసంధ్యేతు కర్తవ్యే బ్రాహ్మణైశ్చగృహేష్వపి" = தன்னை யுணர்ந்தவனுகிய அந்தணனுல், எப்பொழுதும் முச்சந்திவந்தனமும் செய்யப்படும். வேதியரால் மனைகளிலும் இரண்டு சந்தியாவந்தனங்களும் செய்யப்படும். எ-று. காண்க.

ஆயின், சிறந்திருத்தலின் வெளிச்சென்றே மூன்று சந்தியாவந்தனமும் செய்யவேண்டுமென்று நேர்ந்ததாயினும், சிரௌதமாகிய "விஹரணம்" என்னும் கருமம் புகழ்பெற்றதாமாதலின் அதனைப்பற்றிக் காலைமாலைச் சந்திகளை மனைக்கணணும் செயலாமென்று விதிக்கப்பட்டது. விஹரணம். எது. வேள்விச்சாலையில், சுரௌதாக்கினியைத் தக்ககாலத்தில் விதிப்படிப் பிரணயித்திடல். பிரணயநம் = தீவளர்த்தல்.

மாலைச்சந்தியா வந்தனத்தில் உபஸ்தானம் செய்வதற்குமந்திரவிசேடங்களை நாராயணர் கூறினர். నారాయణః॥ "వారుణీభిరథాదిత్య ముపస్థాయ ప్రదక్షిణం। కుర్వన్దిశో నమస్కుర్యా ద్దిగీశాంశ్చ పృథక్పృథక్" = வருணனைத் தெய்வமாக வுடைய மந்திரங்களால், சூரியனைப் பிரார்த்தித்து வலம்வருங்கால் திசைகளையும் திக்குப்பாலரையும் வேறு வேருக வழிபட வேண்டுவது. எ-று. காண்க.

"ఇమం మే వరుణ" என்றது முதலிய வருணதேவதாகமான மந்திரங்கள் இவற்றில் வருணனுக்குப் பெயராகிய சொற்களின் குறிப்பினுல் இந்த மந்திரங்கள் வருணனைப் பிரார்த்திப்ப தற்குத் தக்கதாக விருக்கின்றதே? என்பதுவினு, அங்ஙனமாயினும் சுருதி விசேடமானதா மாதலின் அச்சிறந்த சுருதியால் இந்தமந்திரக் குறி வாதிக்கப்பட்டு இம்மந்திரங்கள் சூரியோபஸ்தனத்திலேயே உபயோகிக்கப் படுகின்றது.

இவ்விடயம் மீமாஞ்சத்தில், மூன்ருவது அத்தியாயத்துள்ளும் விசாரிக்கப்பட்டுள்ளது. வருமாறு. விஷயவாக்கியம்.சுருதி. శ్రుతిః "ఐన్ద్ర్యా గార్హపత్యముపతిష్ఠతె" = இந்திர தேவதாகமாகிய மந்திரங்களால், காருகபத்தியமென்னும் வேதவேள்வியை உபஸ்தானம் செய்கிருன். எறு. காண்க.

எந்தஇருக்கு மந்திரத்துள் மந்திரக்குறியினுல் இந்திரன் தேவதையாக விளக்கப்பட்டுள்ளானே? அது "ఇన్ద్ర" = என்னும் பெயரையுடையது. "కదాచనస్తరీః" என்பதுமுதலியன. அவ்விடத்து, இந்திரனென்னு மொழியினது ஆற்றலால் இம்மந்திரத்தைஇந்திரோபஸ்தானத்தில் உபயோகப்படுத்தவேண்டு மென்று தொன்றுகின்றது. "గార్హపత్యం" என்ற இரண்டாஞ்சுருதியினுற்றலால் காருகபத்திய மென்னும் வேள்வித்தீயை உபஸ்தானஞ் செய்வதில் உபயோகிக்க வேண்டுமென்று தோன்றுகின்றது.

இவ்விடத்துச் சமுசயம் யாது? எனில், இரண்டினையும் சேர்த்து உபஸ்தானம் செய்யவேண்டுவதோ? அல்லது, ஒன்றினையோ? அதனுள்ளும் யாதேனும் தான் வேண்டிய தொன்றினையோ? அல்லது இந்திரனையோ? அங்ஙனமல்லாக்கால் காருகபத்தியத்தையோ? என்பது.

ஆண்டு, சுருதிக்கும், சத்தலிங்கத்திற்கும், ஒப்புமையாற்றல், சிறந்திருத்தலினுலும் முரணுதலின்றி யிருத்தலானும்இரண்டினையுஞ் சேர்த்தே யுபஸ்தானம் செய்யவேண்டு மென்பது ஒரு பக்கம்.

ஒன்றினை யுபஸ்தானம் செய்வதனுல் மந்திரத்திற்கு "ஆகாம்க்ஷை" = அவாய நிலையில்லாமையால், அங்ஙனமில்லாமையே மாறுகொளலா யிருத்தலானும் இரண்டனுள் யாதானு மொன்றனையே யுபஸ்தானஞ் செய்யவேண்டு மென்னும் நியதியாண்டுந் தோற்ருமலே யிருத்தலானும் கொள்வோ னிச்சைவழிச் செய்யலாமென்பது இரண்டாம்பக்கம். கொள்வோன் = உபஸ்தானஞ் செய்வோனுகிய கருத்தா.

சுருதிசத்த வடிவமானதா மாதலினது பொருளாற்றலைப் பற்றி நிற்றலானும், ஆற்றல் உபஜீவியமா யிருத்தலின் அதற்குச்

சிறப்பு மேலாதலாலும் இந்திரனே உபஸ்தானஞ் செய்வித்துக் கொளத்தக்க பொருள் என்பது மூன்றும்பக்கம். இத்துணையும் பூருவபக்கம். மந்திரத்துள்ள இந்திரனென்னு மொழி ரூடத்தினால்=வழக்கினால், சக்கிரனைத் தெரிவிக்கின்றது. சக்கிரன்=தேவர்கோமான். "ఇదిపరమైశ్వర్యే" = மேலாகிய ஐசுவரியம் என்னும் பொருளினையுடைய 'ఇది" என்னும் பகுதியினாற் பிறந்ததாமாதலின் இந்திரனென்னு மொழி தன்றொழிலுக்கு வேண்டுவனவாகிய சிறந்தசெல்வத்தோடு கூடிய காருகபத்திய மென்னும் வேள்வித்தீயைக் கூறுகின்றது. "గుణాద్వాప్యస్య భిధానంస్యాత్" = குணத்திலும் பெயர் வியாபகமானது; என்னும் நியாயத்தால், ஆற்றலிரண்டற்கு மொத்திருத்தலின் . சத்தலிங்கம் = மொழிக் குறிப்பு ஐயத்திற்கிடனாகின்றது. ஆயின் அதன்மேல் கூறப்படுகின்றது என்னை? "రూఢిర్యోగమపహరతి" = மொழிக்குரிய "ரூடசத்தி" = வழக்காற்றலால் "யோகசத்தி"=காரணமரபை யொழிக்கின்றது என்னு நியாயத்தால் காரணமரபினும் விரைந்துணர்த்தவல்ல வழக்கு மரபுவலியதா மாதலின் தேவர் தலைமகனே செய்வித்துக் கொளத்தக்கவனென்றுகூறதுமெனின், அற்றன்று, குறிப்பினாலும் விரைவிலுணர்த்துதலின் இரண்டற்கும் ஒத்தவலிமையே யாகின்றது. ஆகவே இவ்விடத்து, மறுக்கப்படாத சிறப்புள்ள சுருதியே உய்த்தலை = வினியோகித்தலை விதிக்கவேண்டுவது. அங்ஙனம், ஆசிரியரால் கூறப்படுகின்றது. "మంత్రార్థంమంత్రతోబుధ్వా తచ్ఛక్తించనిరూప్యచ। మంత్రాణాంతూపదేశేంద్ర శేషత్వశ్రుతికల్పనం"= மந்திரத்தின்பொருளைச்சாதாரணமாகமந்திரத்தினாலேயே புணர்ந்துகொண்டு அதனுள், எந்தெந்தமொழிக்கு எந்தெந்தப் பொருளில் ஆற்றலுள்ளதோ? அதனையாராய்ந் துணர்ந்து மந்திரமொழிகளுடைய பொருளுணர்ச்சிக்கு வேண்டுவனவாகிய மொழியின் அவாயநிலைகளைப் பற்றி "இந்திரசேடத் துவச்சுருதியை" கற்பிக்கின்றும். (எனவே இந்திரோபஸ்தானத்தைக் கூறுஞ் சுருதிவாக்கியத்திற்கு இது சேடவாக்கியமென்று கொள்வாம். என்பது பூருவபக்ஷ தாற்பரியம். "శ్రుత్యాప్రత్యక్షయాపూర్వం గార్హపత్యాంగతాంగతే। నిరాకాంక్షీకృతేమంత్రే నిర్మూలాశ్రుతికల్పనా" = மேற்கூறிய "காருகபத்தியம்" என்னும் வெளிப்பட்டுள்ள சுருதியினால் இந்தமந்திரம், காருகபத்திய வேள்வித்தீயி னுபாசனைக்கு அங்கமாயிருத்

தலால் வேறொன்றினை அவாவாதபடி செய்யப்பட் டிருத்தலின், இந்திரசேடத்துவச் சுருதியைக் கற்பிப்பதற்கு = ஊகிப்பதற்கு மூலமில்லை = இடனில்லை என்பது பூருவபக்ஷத்தார் யுக்தியின் கண்டனமாம். "తెనశీఘ్రప్రవృత్తిత్వాత్ శ్రుత్యాలింగస్యబాధనం" = அதனால் மந்திரங்களுக்கு விரைவிலே தீயென்னும் உணர்ச்சியுண்டாதலின், "గార్హపత్య" காருகபத்தியம் என்னும் சுருதியால், "ఐంద్ర్యా" என்னும் குறிக்கு வாதையுண்டாகின்றது. என்பது சித்தாந்தயுக்தியாம். ஆதலின் காருகபத்தியத்தீயே உபஸ்தானஞ் செய்துகொள்ளத் தக்கது என்பது துணிபொரு ளாகின்றது. இனிரூடமென்பதற்கு காரணங்கருதாதுவந்த இடுகுறி என்பாரு முளர். அவர் மதமறுப்பை ஈண்டு விரிவஞ்சிவிடுத்தாம்.

மேற்கூறிய மீமாம்ஸாதிகரண நியாயப்படி, மாலைச்சந்திவந்தனத்துள்ளும் "ఇమంమెవరుణ" என்றது முதலியவாகவரும்வருணக் குறிப்பாகிய மந்திரங்களால் சூரியப் பிரார்த்தனை செய்யவேண்டுமென்று கருதி "వారుణీభిరథాదిత్య ముపస్థాయ" என நாராயணராற் கூறப்பட்டது.

## சந்தியின்விசேடம்.

இயமன் சந்தியைச் சிறப்பிக்கின்றனர். యమః॥ "సంధ్యాముపాసతెయెతు సతతంసంశితవ్రతాః। విధూతపాపా స్తెయాంతి బ్రహ్మలోకం సనాతనం। యదహ్నాకురుతెపాపం కర్మణామనసాగిరా। అసీనఃపశ్చిమాంసంధ్యాం ప్రాణాయామైస్తు హంతితత్। యద్రాత్ర్యాత్కురుతెపాపం కర్మణామనసాగిరా। పూర్వసంధ్యాముపాసీనః ప్రాణాయామైర్వ్యపోహతి। ఋషయోదీర్ఘసంధిత్వా త్పర్వమాయురుపాయయుః। ప్రజ్ఞాంయశశ్చకీర్తించ బ్రహ్మవర్చసమెవచ"=யார் விரதநியமப்பயிற்சியுடையராய்ச் சந்தியை யுபாசிக்கின்றார்களோ? அவர்கள் பாவத்தை யுதறித்தள்ளி, அழியாத பிரமலோகத்தை யடைகின்றனர். பகலில் செய்கை, சொல், எண்ணம், என்னும் முக்கரணத்தால் எந்தப்பாவத்தைச் செய்கின்றானோ? அதனை மாலைச்சந்தியை யுபாசித்தவன் பிராணாயாமத்தால் போக்கடிக்கின்றான். இரவில் அங்ஙனம் குற்றஞ்செய்தோன் காலைச்சந்திவந்தனப் பிராணாயாமத்தால் ஒழிக்கின்றான். இருடிகள் நெடுங்காலம் தவறாமலே சந்தியை யுபாசித்ததால் முற்றுநிரம்பிய ஆயுளையும், நல்லபேரறிவை

யும், பெரும்புகழையும், சீர்த்தியையும், பிரமவொளியையும் அடைந்தனர். எ-று. காண்க.

## சந்திசெய்யாவிடிற் பாவமென்பது.

சந்திக்கடன் செய்யாவழி வருங்குற்றத்தைத் தக்ஷரால்கு றிப்பிக்கப்பட்டது. దక్షః॥ "సంధ్యాహీనోஉశుచిర్నిత్య మనర్హస్సర్వకర్మసు। యదన్యత్కురుతేకర్మ నతస్యఫలభాగ్భవేత్" = சந்தியாவந்தன மில்லாதவன். அசுசியுடையவனாய் நித்தமும் எல்லாக் கருமங்களுக்கும் தகாதவனே யாகின்றான். அன்றியும் வேறு எக்கருமஞ் செய்யினும் அதன்பயனை அவனடையமாட்டான். எ-று. காண்க.

கோபிலர். గోభిలః॥ "సంధ్యాయేననవిజ్ఞాతా సంధ్యాయేనానుపాసితా। జీవమానోభవేచ్ఛూద్రో మృతశ్శ్వాచాభిజాయతే" = சந்திக்கருமத்தை யாருணரவில்லையோ? யார்முறையே யுபாசிக்கவில்லையோ? அவன் பிழைத்திருக்குங் காலத்திற்றானே சூத்திரனாகின்றான். இறந்த பின்னர் நாயாகப்பிறக்கின்றான். எ-று. காண்க.

விஷ்ணுபுராணம். విష్ణుపురాణే॥ "ఉపతిష్ఠంతివైసంధ్యాం యేనపూర్వాం నపశ్చిమాం॥ వ్రజంతితేదురాత్మాన స్తామిస్రంనరకంనృప" = யார்காலை மாலைச் சந்திக்கடனை அனுட்டிப்ப தில்லையோ? அப்படிப்பட்ட துரான்மாக்கள், இருணரகத்துக்குப் போகின்றார்கள். எ-று. காண்க.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ "యోన్యత్రకురుతేయత్నం ధర్మకార్యే ద్విజోత్తమః। విహాయసంధ్యాప్రణతిం సయాతినరకాయుతం" = யார் சந்தியாவந்தனத்தை விடுத்து, வேறு தருமகாரியங்களில் முயற்சிசெய்கின்றானோ? அவன் உத்தமனான விருபிறப் பாளனே யாயினும் பதினாயிர நரகத்தினுக்குஞ் செல்கின்றான். எ-று. காண்க.

இங்ஙனங் கூறிய வெல்லாம் பீடைகளுக்குத் தப்பிப் பிழைப்போன் விடயம் பற்றியது. அங்ஙனம் யாஞ்ஞவற்கியர் கூறினர். యాజ్ఞవల్క్యః॥ "అనార్తశ్చోత్సృజేద్యస్తు సవిప్రశ్శూద్రసమ్మితః। ప్రాయశ్చిత్తీభవేచ్చైవ లోకేభవతినిందితః" = நோய்முதலியதுன்பகாரணமில்லாதவேதியன்யாவன்சந்திவந்தனத்தைவிட்டு விடுகின்றானோ? அவன்சூத்திரனோ டொத்தவனும், பிராயச்சித்தஞ் செய்துகொள்ளத் தக்கவனும், உலகத்துட் பழிப்படைந்தவனும் ஆகின்றான். எ-று. காண்க.

அத்திரி. అత్రిరపి॥ "నోపతిష్ఠంతియేసంధ్యాం స్వస్థావస్థాసువై ద్విజాః। హింసంతిహిసదా తేవై భగవంతందివాకరం" = எந்த விருபிறப்பாளன் சுகமாக விருக்குங்காலத்தும் சந்தியாவந்தனஞ் செய்வதில்லையோ? அவன் பகவனுகிய சூரியனைப்பலரறிய இமிசைசெய்தவனே யாகின்றான். எ-று. காண்க.

விஷ்ணுபுராணம். విష్ణుపురాణే॥ "సర్వకాలముపస్థానం సంధ్యయోః పార్థివేష్యతే। అన్యత్రసూతకాశౌచ విభ్రమాతురభీతితః" = பிறந்தது முதலிய ஆசூசங்கள், சித்தப்பிரமை, அவசரம், பயம் இவைகளொழிய மற்றெல்லாக் காலத்திலும் இரண்டுசந்தி யனுட்டானங்களும் செய்யத் தக்கனவாம். எ-று. காண்க.

## சூதகமுதலிய காலவிதி.

சூதகமுதலிய உபாதியுண்டாகிய காலத்தில் சத்தியுள்ள வழியும் சந்தியை யுபாசிக்கலாகாது என்று மரீசி கூறினர். మరీచిః॥ "సూతకేకర్మణాంత్యాగః సంధ్యాదీనాంవిధీయతే" = சூதகத்தில் சந்திமுதலிய கருமங்களை விடவேண்டுமென்று விதிக்கப் படுகின்றது. எ-று. காண்க.

## பிறிதுவிதி.

ஆயின், புலத்தியர் அதனைமறுத்தனர். పులస్త్యః॥ "సంధ్యామిష్టించరుం హోమం యావజ్జీవం సమాచరేత్। నత్యజేత్సూతకేవాపి త్యజన్గచ్ఛత్యధోగతిం" = சந்தியா வந்தனத்தையும், வேள்விக் கருமத்தையும், சரு கருமத்தையும், ஹோம கருமத்தையும், உயிருடம்போடு கூடியுள்ள வரையில் செய்யவேண்டும், சூதககாலத்திலும் விடலாகாது. விட்டவன் கீழ்ப்போகின்றான். எ-று. காண்க.

இது மானசிக சந்தியைக்குறித்துக் கூறியது. என்று தாற்பரியப் படுகின்றனர். எனவே சூதகமுதலிய வுபாதிகள் நேர்ந்தபோது, சந்திமுதலிய நித்தகருமங்களை மனத்துள்ளே செய்யவேண்டுமென்பது கருத்து. இக்கருத்து அம்மரீசியானே கூறப்பட்டுள்ளது. வருமாறு.

மரீசி. మరీచిః॥ "సూతకేమృతకేచైవ సంధ్యాకర్మనసంత్యజేత్। మనసోచ్చారయేన్మంత్రా న్ప్రాణాయామమృతేద్విజః। ఏతద్విదిత్వాయస్సంధ్యా ముపాస్తేసంశితవ్రతః।

దీర్ఘమాయుస్సవిందేత సర్వపాపైఃప్రముచ్యతే" = பிறந்தசூதகமும், இறந்த சூதகமுமாகிய விரண்டினுள்ளுஞ் சந்திக்கருமத்தை விடலாகாது. இருபிறப்பாளன் அப்பொழுது பிராணயம மொழிய ஏனையமந்திரங்களை யெல்லாம் மனத்திற் சிந்திக்க வேண்டுவது. யாவனிதையுணர்ந்து விரதநியம முடையவனுய்ச் சந்தியை யுபாசிக்கின்றனோ? அவன், தீர்க்காயுளைப் பெறுகின்றான். எல்லாப் பாவங்களி னின்றும் விடப்படுகின்றான். எ-று. காண்க.

## செபவிதி.

சந்தியா அனுட்டானத்திற்கு அங்கமாகிய செபத்தின் விதியை மனுகூறினர். మనుః॥ "ఆచమ్యప్రయతో నిత్య ముభేసంధ్యేసమాహితః। శుచౌదేశేజపఞ్జప్య ముపాసీతయథావిధి"=நாள்தோறும் சமதமங்களையுடையவனுய்ச் சுத்தமாகிய இடத்தில் செபிக்கத் தக்கதைச் செபித்து, இரண்டு சந்திக் கருமங்களையும் விதிப்படி யுபாசனை செய்ய வேண்டும்-எ-று. காண்க. சமம் = புறக்கரண மடக்கல். தமம்= அகக்கரண மடக்கல்.

## செபவிலக்கணம்.

அதனைச் சங்கர்கூறினர். శంఖః॥ "కుశబృస్యాంసమాసీనః కుశోత్తరాయాంవాకుశ పవిత్రపాణిస్సూర్యాభి ముఖోవాక్షమాలామాదాయదేవతాంధ్యాత్వజపఃకుర్యాత్" = தருப்பாசனத்தின்மே லாயினும், அதனைப்பரப்பிய ஆசனத்தின்மே லாயினு மிருந்து தருப்பையாற் சமைந்த பவித்திரத்தைக் கையிற்புனைந்து சூரியனுக்கு எதிர்முகமாக வாயினும் அல்லது வடக்குமுகமாக வாயினும், உருத்திராக்க செபமாலையைக் கையிற்பிடித்துத் தேவதையை தியானித்துக் கொண்டு செபிக்கவேண்டும். எ-று. காண்க.

வியாசர். వ్యాసః॥ "ప్రణవవ్యాహృతియుతాం గాయత్రీంచజపేత్తతః"= பிரணவ மந்திரத்தோடும், வியாஹிருதி மந்திரத்தோடும், கூடிய காயத்திரி மந்திரத்தைப் பின்பு செபிக்க வேண்டுவது. எ-று. காண்க.

யோக யாஞ்ஞவற்கியர் முடிவிலும் பிரணவத்தைச் சேர்க்கவேண்டு மென்று கூறுகின்றனர். యోగయాజ్ఞవల్క్యః॥ "ఓంకారం పూర్వముచ్చార్య భూర్భువ స్వస్తథైవచ। గాయత్రీం ప్రణవంచాంతే జపఏవముదా

ஹ்ருத:" = முதலில், ஓங்காரத்தைக் கூறிப் பின்பு வியாஹிருதிகள் மூன்றினையும் அதன்பின் காயத்திரியையும் முடிவில் மீட்டும் பிரணவத்தையும் செபிக்கவேண்டும். இங்ஙனம் செபத்தி னிலக்கணம் கூறப்பட்டது. எ-று. காண்க.

போதாயனர். బోధాయనః॥ "ఉభయతః ప్రణవాంసవ్యాహృతికాం జపేత్" = இருபுறமும் பிரணவத்தை யுடையதாய் வியாஹிருதியோடு கூடியதாய் உள்ளதனைச் செபிக்கவேண்டும். எ - று. காண்க.

## செபவகை.

நரசிங்கபுராணத்துள் செபவேள்விகளுக் குள்ள வேறுபாடுகளைக் கூறப்பட்டது. నృసింహపురాణే॥ "త్రివిధోజపయజ్ఞస్స్యాత్ తస్య భేదాన్నిబోధత। వాచికశ్చఉపాంశుశ్చ మానసస్త్రివిధస్స్మృతః। త్రయాణాంజపయజ్ఞానాం శ్రేయాంస్స్యాదుత్తరోత్తరః" = செபமும் வேள்வியும் மூன்று பிரிவினை யுடையனவாம். அவை, வாசிகம், உபாம்சு, மானசிகம், எனவாம். அவற்றுள், ஒன்றற்கு ஒன்றுமுறையேசிறந்ததாம். எ-று. காண்க.

## வாசிகசெபவிலக்கணம்.

நரசிங்கபுராணம். నృసింహపురాణే॥ "యదుచ్చనీచస్వరితైః స్పష్టశబ్దవదక్షరైః। మంత్రముచ్చారయేద్వాచా వాచికోయంజపస్స్మృతః" = உதாத்தம்= எடுத்தல், அனுதாத்தம் = படுத்தல், சுவரிதம் = சமநிலை, என்னும் சுரங்களோடு மொழிகளாலும் எழுத்துக்களாலும் திருத்தமாக வாக்கினால் நல்லுணர்ச்சி யுடையவன் மந்திரங்களை நன்றாக வுச்சரிக்கவேண்டும். அங்ஙனம் செய்யப்பட்டது வாசிகசெபமென்று கூறப்படும். எ-று. காண்க.

## உபாம்சுசெப விலக்கணம்.

இதுவுமது. "శనైరుచ్చారయేన్మంత్ర మీషదోష్ఠౌ ప్రచాలయేత్। అపరైరశ్రుతంకించి దుపాంశుస్సజపస్స్మృతః" = இதழ்களைச் சிறுக அசைத்து மந்திரங்களைச் சத்தப்படாது மெதுவாக உச்சரிக்கவேண்டும். அந்நியரால் சிறிதும் கேட்கப்படாத அது உபாம்சு என்று கூறப்படும். எ-று. காண்க.

## மானதசெப விலக்கணம்.

மானதசெப விலக்கணம் விசுவாமித்திரராற் கூறப்பட்டது. విశ్వామిత్రః॥ "ధ్యాయేద్యదక్షరశ్రేణిం వర్ణాద్వర్ణంపదాత్పదం। శబ్దార్థచింతనంభూయః కథ్యతేమానసోజపః" = ஓரெழுத்தி னின்றும் மற்றொருருளெழுத்து, ஒருமொழியி னின்றும் மற்றொரு மொழியாக முறையே மந்திரவெழுத்துக்களின் றொடர்பைத் தியானித்து ஒவ்வொருமுறைக்கும் சொல்லின் பொருளைச் சிந்தித்து வாக்கியார்த்தங்களை அனுசந்தானஞ் செய்கின்ற செபத்தை மானசமென்று கூறப்படும். எ-று. காண்க.

## இச்செபத்தின்தரம்.

அம்மூன்றற்கு முள்ள வேற்றக் குறைவுகளை அவ்விசுவாமித்திரரானே கூறப்பட்டது. విశ్వామిత్రః॥ "ఉత్తమంమానసంజప్య ముపాంశుంమధ్యమంవిదుః। అధమంవాచికంప్రాహు స్సర్వమంత్రేషువైద్విజాః" = மானதசெபம் உத்தமமாம். உபாம்சுசெபம் மத்தியமமாம். வாசிகசெபம்அதமமாம். எல்லாமந்திரங்களிலும் இதுவேமுறையென்றுணர்க. எ-று. காண்க.

## அச்செபத்தின்பயனதுதரம்.

விஸ்வாமித்திரர் విశ్వామిత్రః॥ "వాచికంత్వేకమేకంస్యా దుపాంశుశ్శతముచ్యతే। సహస్రంమానసంప్రోక్తం మన్వత్రిభృగునారదైః" = வாசிகத்தால் ஒருமொழிகூறினால் ஓரேபயன்; உபாம்சுவினால் ஒன்று நூறும்; மானசிகம் ஒன்றுசெய்தால் ஆயிரமாம் என்றுமனு, அத்திரி, பிருகு, நாரதராற் கூறப்பட்டது. எ-று. காண்க.

## செபத்தில்எண்ணிடும் கரஇலக்கணம்.

செபநியமங்களைச் சௌநகர் முதலியோர் கூறினர். శౌనకః॥ "కృత్వోత్తానౌకరౌప్రాత స్సాయంచాధోముఖౌతథా। మధ్యేస్తంబకరాభ్యాంతు జపఏవముదాహృతః" = உதயகாலையில் அங்கையை மேல் முகமாக வைத்தும், சாயங்காலத்தில் கீழ்முகமாக வைத்தும், உச்சிப்போதில் இருகையும் அஞ்சலியாக ஊர்த்துவமுகமாக வைத்தும் செபிக்க வேண்டும். எ-று. காண்க.

## செபசம்பத்தின்காரணம்.

சௌனகர் கூறினர். శౌనకః॥ "మనస్సంతోషణంశౌచం మౌనంమంత్రార్థచింతనం। అవ్యగ్రత్వమనిర్వేదా జపసంపత్తిహేతవః" = மனம் களிப்போடு கூடியிருத்தலும், உள்ளும்புறம்பும் சுத்தமாயிருத்தலும், வாய் பேசாதிருத்தலும், மந்திரப்பொருளைச் சிந்தித்தலும், அவசரப்படாமையும், பயனைக்கருதி வைராக முண்டாகாமையும் ஆகிய இவை செபத்தால்வரும் செல்வத்திற்குக் காரணமாம். எறு- காண்க.

## செபகாலவரையறை.

மனு. మనుః॥ "పూర్వాంసంధ్యాంజపంస్తిష్ఠేత్సావిత్రీమార్కదర్శనాత్। పశ్చిమాంతుసమాసీన స్సమ్యగార్క్ష విభావనాత్" = காலசந்தியில் சூரியனைத் தரிசிக்கும்வரையில் செபித்து நிற்கவேண்டும். சாயஞ்சந்தியில் நக்ஷத்திரகணங்கள் காணப்படும்வரையி லிருந்து காயத்திரி மந்திரத்தைச் செபிக்கவேண்டும். எறு. காண்க.

## மத்தியாந்நசெபம்.

மத்தியாந்ந செபத்தில் நியமம் வாயுபுராணத்திற் கூறப்பட்டது. వాయుపురాణే॥ "తథామధ్యమసంధ్యాయా.మాసీనఃప్రాఙ్ముఖోజపేత్" = உச்சிப்போதில் கிழக்கு முகமாக உட்கார்ந்திருந்து செபிக்க வேண்டுவது. எறு. காண்க.

## செபகாலத்தில் ஒழிக்கத்தக்கன.

வியாசர் கூறினர். వ్యాసః॥ "నసంక్రామన్నచహసన్న పార్శ్వమవలోకయన్। నాయాసితోనజల్పంశ్చ నప్రావృతశిరాస్తథా। నపదాపదమాక్రమ్య నచైవహికరాతథా। నచాసమాహితమనా నచసంశ్రావయన్జపేత్" = உலாவிக் கொண்டாயினும், நகையாடிக்கொண் டாயினும்; இருபுறமும் நோக்கிக் கொண்டாயினும் இளைப்படைந் தாயினும், வேறுரை யாடிக்கொண்டாயினும், தலைக்காடை சுற்றிக்கொண்டாயினும், ஒருகாலை மற்றொருகாலால் மிதித்துக்கொண் டாயினும், கைகளை மிதித்து (அல்லது) கட்டிக்கொண்டாயினும் அடங்கி யமையாத மனத்தையுடையவனாக வாயினும் (வேறுவிடயங்களைக் கேள்விப்பட்டுக்கொண் டாயினும்,) பிறர்கேட்கத் தக்கதாக வாயினும் செபிக்கலாகாது. எறு. காண்க.

**போதாயனர்.** బౌధాయనః॥ "నాభేరధస్సంస్పర్శనం కర్మసంయుక్తోవర్జయేత్" = வைதிக கருமங்களைச் செய்பவன் நாபிக்குங் கீழிடங்களைத் தொடலாகாது. எ-று. காண்க.

**இதுவுமது.** "జపకాలేనభాషేత వ్రతహోమాదికేషుచ। ఏతేష్వేవావసక్తస్తు యద్యాగచ్ఛేద్ద్విజోత్తమః। అభివాద్యతతోవిప్రం యోగక్షేమంచకీర్తయేత్"= செபம், விரதம், ஹோமம், பாராயணம், பூசை, தருப்பணம், வேள்வி, தியாகம், முதலியகருமங்கள் செய்யும்போது அவ்வத் தொழிலின் கண்ணே நோக்கமுடையனா யிருத்தல்வேண்டு மன்றி யுரையாட லாகாது. ஆயின் அப்படிப்பட்ட காலத்தில் உத்தமனான வேதியன் வந்தால் அவனுக்கு நமஸ்காரஞ்செய்து யோக க்ஷேமங்களை விசாரிக்கலாம். எ-று. காண்க.

**யோகயாஞ்ஞவற்கியர்.** యోగయాజ్ఞవల్క్యః॥ "యదివాగ్యమలోపస్స్యాజ్జపాదిషుకదాచన। వ్యాహరేద్వైష్ణవంమంత్రంస్మరేద్వావిష్ణుమవ్యయం"= செப முதலிய கருமத்தில் எப்போதாயினும் வாக்குநியம விரதத்திற்குப் பரிகாரமாக விஷ்ணுமந்திரத்தைக் கூறவேண்டும். நாசமற்ற விஷ்ணுவையாயினும் நினைத்தல்வேண்டும். எ-று. காண்க.

**சம்வர்த்தர்.** సంవర్తః॥ "లోకవార్తాదికంశ్రుత్వా దృష్ట్వాస్పృష్ట్వాప్రభాషితం। సంధ్యాంవినాచయజ్జప్యం తత్సర్వంనిష్ఫలంభవేత్" = உலகச்செய்திகளைக் கேட்டும், பார்த்தும், மிகப்பேசுவோனைத் தொட்டும், சந்தியையொழித்தும் என்னசெபம் செய்தாலும் அவையெல்லாம் வீணாகிவிடுகின்றன. எ-று. காண்க.

**கௌதமர்.** గౌతమః॥ "గచ్ఛతస్తిష్ఠతోవాపి స్వేచ్ఛయాకర్మకుర్వతః। అశుచేర్వావినాసంధ్యాం తత్సర్వంనిష్ఫలంభవేత్। క్రోధంమాంద్యంక్షుతంనిద్రాం నిష్ఠీవనవిజృంభణం। దర్శనంశ్వాదినీచానాం వర్జయేజ్జపకర్మణి। ఆచామేత్సంభవేచ్చైషాం స్మరేద్విష్ణుంసురార్చితం। జ్యోతీంషిచప్రశంసేద్వా కుర్యాద్వాప్రాణసంయమం। జ్వలనంగాంశ్చవిప్రాంశ్చ యతీన్వాపివిశుద్ధయే" = செபிக்கும் பொழுது, கோவம், சோம்பல், தும்மல், உறக்கம், அபானம் பறிதல், கோட்டாவிவிடுதல், நாய் நீசர்முதலிய நோக்குதலிவற்றை யொழிக்கவேண்டுவது. ஒருக்காலிவை நேரிடுமாயின், ஆசமனஞ் செய்யவேண்டும். பின் தேவர்களால் பூசிக்கப்பட்ட விஷ்ணுவைத் தியானிக்கவேண்டும். சூரியசந்திரர் முதலிய சோதிகளைத் துதித்தலாவ

துசெய்யவேண்டும். பிராணாயம மாயினும் செய்க. பரிசுத்தத்தின் பொருட்டுத் தீயை, வேதியனை, துறவிகளையாயினும் வணங்குதல் செய்க. எறு. காண்க.

## செபத்திற்குரிய இடம்.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "అగ్న్యగారే జలాంతే వా జపేద్దేవాలయేపి వా। పుణ్యతీర్థే గవాం గోష్ఠే ద్విజక్షేత్రేథవా గృహే" = வேள்விசெய்யும் மனை, நீர்க்கரை, தேவாலயம், புண்ணியத்தலம், தீர்த்தவிடம், பசுக்கொட்டில், வேதியன்மனை, அல்லது தனதுமனை யிவைகளிடத்திருந்து செபிக்கவேண்டுவது. எறு. காண்க.

சங்கர். శంఖః॥ "గృహే త్వేకగుణం జప్యం నద్యాదౌ ద్విగుణం స్మృతం। గవాం గోష్ఠే దశగుణం హ్యగ్న్యగారే శతాధికం। సిద్ధక్షేత్రేషు తీర్థేషు దేవతాయాశ్చ సన్నిధౌ। సహస్రశతకోటీనామనంతం విష్ణుసన్నిధౌ" = தன்மனையிற் செய்வது ஒரு பங்கு, யாறுமுதலியவற்றில் இருமடங்கு, பசுக்கட்டுங் கொட்டிலில் பதின்மடங்கு, வேள்விமனையில் நூற்றுக்குமேல், சித்தியடைந்த தலங்களில் ஆயிரம் பங்கு, தீர்த்தங்களில் இலக்ஷம், தேவசந்நிதியில்கோடி, விஷ்ணுசந்நிதியில் அநந்த மடங்காம். எறு. காண்க.

கூர்மபுராணம், కూర్మపురాణే॥ "గుహ్యకా రాక్షసాః సిద్ధా హరంతి ప్రసభం యతః। ఏకాంతే తు శుభే దేశే తస్మాజ్జప్యం సమాచరేత్" = குய்யகர், அரக்கர், சித்தர், இவர்கள்பலவற்காரஞ்செய்து பயனைப்பறித்துக்கொண்டு செல்கின்றனர் ஆதலின் இரகசியமாயுள்ள நல்லவிடத் திருந்து செபிக்கவேண்டும். எறு. காண்க.

## செபத்தின் தொகை.

யோகயாஞ்ஞவற்கியர். యోగయాజ్ఞవల్క్యః॥ "బ్రహ్మచార్యాహితాగ్నిశ్చ శతమష్టోత్తరం జపేత్। వానప్రస్థో యతిశ్చైవ సహస్రాదధికం జపేత్" = பிர்மசாரியன், ஆஹிதாக்கினி யுடையவன், இவர்கள் காலத்திற்கு நூற்றெட்டுவிசை செபிக்கவேண்டும். வானப்பிரத்தனும் துறவியும் ஆயிரத்தின் மேலாகச் செபிக்கவேண்டும். எறு. காண்க.

வெறுமிருதிகள். స్మృత్యంతరే॥ "దర్శశ్రాద్ధే ప్రదోషే చ గాయత్రీం దశసంఖ్యయా। అష్టావింశత్యనధ్యాయే సుదేశే తు యథాక్రమం" = அமாவாசை,

சிராத்ததினம், மஹாபிரதோஷகாலம், இவைகளில் காயத்திரியை ப்பத்துமுறைச்செபித்தலேபோதும்; மற்றையவோதலாகாதநாட்களில் இருபத்தெட்டு, ஏனைய சுத்ததினங்களில் முறைப்படி, செபஞ்செய்க. எ-று. காண்க.

இயமன். యమః॥ "సహస్రపరమాందేవీం శతమధ్యాందశావరాం। గాయత్రీంతుజపేన్నిత్యం సర్వపాపప్రణాశినీం" = எல்லாப் பாவங்களையும் ஒழிக்கத்தக்க காயத்திரி மந்திரங்களை உத்தமபக்ஷம் ஆயிரமுறை, மத்தியமபக்ஷம் நூறுமுறை, அதமம் பத்துமுறையாக வொவ்வொரு சந்திகாலத்திலும் தவறுமல் செபிக்கவேண்டும் எ-று. காண்க.

ஆபத்தம்பர். ఆపస్తంబః॥ "దర్భేష్వాసీనోదర్భాన్ధారయమాణస్సోదకేన పాణినా ప్రాఙ్ముఖస్సావిత్రీం సహస్రకృత్వఆవర్తయేచ్ఛతకృత్వో పరిమితకృత్వోవా" = தருப்பையின்மீது இருந்துகொண்டு தருப்பையைத் தரித்து நீரோடுகூடிய கையுடையனுய்க் கிழக்கு முகனுகிச் சாவித்திரி மந்திரத்தை ஆயிரமுறையாயினும் நூறுமுறையாயினும், எண்ணிறந்தபடியாயினும் செபஞ்செய்க. எ-று. காண்க.

## செபமாலிகை.

செபத்திற்கு அங்கமாயிருக்கப்பட்ட மாலிகையை ஹாரீதர் கூறினர். హారీతః॥ "శంఖరూప్యమయీమాలా కాంచనైరప్యథోత్పలైః। పద్మాక్షైశ్చరుద్రాక్షైః ప్రవాలైర్మణిమౌక్తికైః। తథాచేంద్రాక్షైర్మాలా తద్వదంగుళిపర్వభిః। పుత్రజీవమయీమాలా శస్తావైదికకర్మణి" = சங்கு-வெள்ளி-பொன்-இவற்ருற் சமைந்தமணிகளும், நீலோற்பலம் - தாமரை - வித்துக்களும், உருத்திராக்ஷமும், பவளமும், அரதனமணிகளும், முத்துக்களும், இந்திராக்ஷமணியும், அல்லது பத்திராக்ஷவிதையும், புத்திரஜீவவிதையும் ஆகிய இவைகளாற் செய்த செபமாலைகளாலும், விரற்கணுக்களினுள்ள இரேகைகளாலும், எண்ணிக்கை வைப்பது செபகருமத்திற் சிறந்ததாம். எ-று. காண்க.

## செபமாலையின் பயன்.

கௌதமர் கூறினர். గౌతమః॥ "అంగుళ్యాజపసంఖ్యాన మేకమేకముదాహృతం। రేఖయాష్టగుణంపుత్రజీవైర్దశగుణాధికం। శతంస్యాచ్ఛంఖమణిభిః ప్రవాళైశ్చసహస్రకం। స్ఫటికైర్దశసాహస్రం మౌక్తికైర్లక్షముచ్యతే। పద్మాక్షైర్దశలక్షస్తు

సౌవర్ణైర్గుణకోటిరుచ్యతే। కుశగ్రంథ్యాచరుద్రాక్షైరనంతంఫలముచ్యతే" = விரலா லெண்ணிச்செபித்தலின் பயன்ஒன்று, விரலிறை=இரேகைகளாற் செபிப்பது எண்மடங்கு, புத்திர சீவமணியாற் செய்வதுபத்து, சங்குமணிநூறு, பவளம் ஆயிரம், படிகம் பதினாயிரம், முத்து நூறாயிரம், தாமரைமணிபத்திலக்கம், பொன்மணிகோடி, தருப் பையின்பவித்திரமுடிமாலை, உருத்திராக்ஷமணிமாலையாற் செபிப் பதன்பயன் கணக்கற்றதாம். எ-று. காண்க.

## செபமாலைமணியின்கணக்கு.

பிரஜாபதிகூறினர். ప్రజాపతిః॥ "అష్టోత్తరశతంకుర్యాచ్చతుఃపంచాశికాంతథా। సప్తవింశతివాకుర్యాత్తతోనైవాధికాహితా। అష్టోత్తరశతామాలా ఉత్తమా సాప్రకీర్తితా। చతుఃపంచాశికాయాతు మధ్యమాసాప్రకీర్తితా। అధమాప్రోచ్యతేనిత్యం సప్తవింశతిసంఖ్యయా" = நூற்றெட்டு, ஐம்பத்துநான்கு, இருபத் தேழுமணிகளால் செபமாலை செய்யவேண்டும். அதிகமாகச் செய்வது இன்பத்தைத்தராது. இவற்றுள் நூற்றெட்டு உத்த மம், ஐம்பத்துநான்கு மத்தியமம், இருபத்தேழு அதமமாம். எ-று. காண்க. அதிகத்தை மறுத்தவாறு குறைவை மறுத்த தில்லையாதலின். அநேகஞ் சிட்டர்கள் பதினாறு மணிகளாலும் அமைத்து வழங்கு கின்றனர்.

கௌதமர். గౌతమః॥ "అంగుష్ఠంమోక్షదంవిద్యాత్తర్జనీశత్రునాశనీ। మధ్యమాధనకామాయా నామికాపౌష్టికాతథా। కనిష్ఠారక్షణీప్రోక్తా జపకర్మణిశోభనా। అంగుష్ఠేనజపేజ్జప్య మన్యైరంగుళిభిస్సహ। అంగుష్ఠేనవినాజప్యం కృతంతదఫలంభవేత్" பெருவிரலாற் செபிப்பது முத்தியைத்தரும், சுட்டுவிரல் சத்துரு நாசஞ்செய்யும், நடுவிரல் தனவிருப்ப முடையவனுக்கு ஆதா யத்தைத்தரும், ஈற்றயல்விரல் புஷ்டியைக்கொடுக்கும், சுண்டு விரல் காத்தலைச்செய்யும், என்று செபகருமத்தில் பயன்கூறப் பட்டது. ஆயின் பெருவிரலோடு ஏனைய விரல்களையும் சேர்த் துச் செபிக்கவேண்டும். பெருவிரலின்றி மற்றை யெவ்விரலாற் செபிக்கினும் பயனற்றதாய் முடியும். எ-று. காண்க.

## காயத்திரிசெபத்தின் சிறப்பு.

வியாசர் கூறினர். వ్యాసః॥ "దశకృత్వఃప్రజప్తాసా త్ర్యహాద్యచ్చకృతం లఘు। తత్పాపంప్రణుదత్యాశు నాత్రకార్యావిచారణా। శతజప్తాతుసాదేవీ పాపౌఘశ

మనాస్మృతా। సహస్రజప్తానియత ముపపాతకనాశనీ। లక్షజాప్యేనరాజేన్ద్ర యదిచ్ఛేత్త దవాప్నుయాత్ " = காயத்திரி மந்திரம் பத்துவிசை செபிக்கப்பட்டால், மூன்று தினத்திற்செய்த சிறு பாவங்களெல்லா மொழியும் இக்கருத்தை வேறு சிந்திக்கவேண்டுவதில்லை. நூறுதரம் செபிக்கப்பட்டால் பாவராசிகளைச் சாந்திசெய்யும். ஆயிரமுறை நியமமாகச் செபிக்கப்பட்டால் உபபாதகங்களையெல்லா நாசஞ் செய்யும். நூறாயிரமுறைசெபித்தால் மஹாபாதங்களையெல்லாம் ஒழிக்கும். கோடிதரஞ்செய்தசெபத்தால் இச்சித்தபயனெல்லாம் அடையக்கூடும். எறு. காண்க.

இயமன். యమః॥ " గాయత్ర్యానపరంజప్యం గాయత్ర్యానపరంధనం। గాయత్ర్యానపరంధ్యానం గాయత్ర్యానపరాహుతిః " = செபித்தலுக்குக் காயத்திரியினும் சிறந்தமந்திரமொன்றில்லை. காயத்திரியினும் சிறந்த பொருளுமில்லை. காயத்திரியினுஞ் சிறந்த தானமில்லை. காயத்திரியினும் சிறந்த வேள்வியுமில்லை. எ-று. காண்க.

மனு. మనుః॥ " యోఽధీతేహన్యహన్యేతాం త్రీణివర్షాణ్యతంద్రితః। సబ్రహ్మపరమభ్యేతి వాయురూపేణమూర్తిమాన్ " = யார்நாடோறும் தவறுதுசோம்புறக்கமில்லாம லிந்தக்காயத்திரி வித்தையினை அத்தியயனஞ் செய்கின்றனோ? அவன் வாயுரூபத்தால் உடம்பை யடைந்தவனாய்ப் பரமனை யடைகின்றான். எ-று. காண்க.

கௌதமர். గౌతమః॥ " అనేనవిధినానిత్యం జపంకుర్యాత్ప్రయత్నతః। ప్రసన్నవిపులాన్భోగా న్భుక్త్వాంముక్తించవిన్దతి " = இந்தவிதியினால் முயற்சியோடுமமைந்த சித்தமுடையவனாய் நாடோறும் செபிக்கவேண்டும். அவ்வாறுசெய்தவன் மிகுந்தபோகங்களையும் இம்மையிலுண்டி முதலிய சுகத்தையும் மறுமையில் முத்தியையும் பெறுகின்றான். எ-று. காண்க.

சந்தி அங்கமாகியசெபவிதி முற்றிற்று.

## ஹோமவிதி.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ " అథాగత్యగృహంవిప్ర స్సమాచమ్యయథావిధి। ప్రజ్వాల్యవహ్నింవిధి వజ్జుహుయాజ్జాతవేదసం " = பின்னர் விப்பிரன

னவன் மனைக்குவந்து விதிப்படியாசமனஞ் செய்து அக்கினியை வளர்த்தி விதிப்படி ஹோமஞ் செய்யவேண்டும். எ-று. காண்க.

## ஹோமஞ்செய்வோனியல்பு.

தக்ஷர். దక్షః॥ "సంధ్యాకర్మావసానేతు స్వయంహోమోవిధీయతే। స్వయంహోమేఫలంయత్స్యాత్తదన్యేననలభ్యతే। హోమేయత్ఫలముద్దిష్టం జుహ్వతస్స్వయమేవతు। హూయమానంతదన్యేన ఫలమర్ధంప్రపద్యతే" = சந்தியாவந்தனம் முற்றியவுடனே அக்கினிஹோத்திர கருமத்தைத் தானே செய்யவேண்டுமென்று விதிக்கப்படுகின்றது. தானே ஹோமஞ் செய்தால் என்னபயன் கிடைக்குமோ? அது, தன்பொருட்டு வேறொருவன்செய்தால் அவ்வளவு பயனாகமாட்டாது; அரைப்பங்கு பயனேயாம். எ-று. காண்க.

தன்பொருட்டு ஹோமஞ்செய்வார் இவரென்பது தக்ஷர் கூறினர். దక్షః॥ "ఋత్విక్పుత్రోగురుర్భ్రాతా భాగినేయోథవిట్పతిః। ఏతైరపిహుతంయత్స్యాత్తద్ధుతంస్వయమేవతత్" = இருத்துவிக்கு, தன்மகன், ஆசிரியன், உடன்பிறந்தான், நன்மருகன், மருகன் இவர்களால் தன்பொருட்டு ஹோமஞ் செய்யப்படின் அது தான் செய்தது போலுமாம். எறு. காண்க. இருத்துவிக்கு = வேள்விசெய்யும் பொருட்டு விதிப்படி நியமிக்கப்பட்டுத் தக்ஷணைக்குரியனாவோன்.

ஆயின் தானேஹோமஞ் செய்வது சிறந்தது. அது கூடாவழி இருத்துவிக்கு முதலியோர் செய்க என்றவற்றுள்ளுஞ் சில விசேடங்கள் கூர்மபுராணத்துட் கூறப்பட்டன. కూర్మపురాణే॥ "ఋత్విక్పుత్రోథవాపత్నీశిష్యోవాపిసహోదరః। ప్రాప్యానుజ్ఞాంవిశేషేణజుహుయాచ్చ యథావిధి" = இருத்துவிக்கு, மகன், மனைவி, மாணாக்கன், உடன்பிறந்தோன் இவருள் யாராயினும் தன்னாணை பெற்று வேள்வித் தீக்காரியஞ் செய்யலாம். எ-று. காண்க.

## அவருள்ஏற்றக்குறைவு.

அங்ஙனம் வேள்வி செய்வோர் தாரதம்மியத்தையுங் குறிக்கின்றது. అన్యైశ్శతహుతాద్ధోమా దేకశ్శిష్యహుతోవరః। శిష్యైశ్శతహుతాద్ధోమా దేకఃపుత్రహుతోవరః। పుత్రైశ్శతహుతాద్ధోమా దేకోహ్యాత్మహుతోవరః" = அந்நியர்செய்த நூறுவேள்வியினும் மாணாக்கன் செய்த தொன்றே சிறந்தது. அம்மாணாக்கன் செய்தநூற்றினும் மகன்செய்ததொன்

றேமிக்கது. அது நூற்றினுந் தான்செய்த வொன்றே சான்றது. எ-று. காண்க.

## ஹோமத்திற்குத்தானிருக்குமிடம்.

இருத்துவிக்கு முதலியோர் வேள்விசெய்யும்போதும் தலைவன் சமீபத்திலிருக்க வேண்டுமென்பது காத்தியாயனராற் கூறப்பட்டது. కాత్యాయనః॥ "అసమక్షంతుదంపత్యో హోతవ్యంనర్త్విగాదినా। ద్వయోరప్యసమక్షంతు భవేద్ధుతమనర్థకం" = தலைவன் தம்பதிகளாக எதிரிலில்லாமலே யிருத்துவிக்கு முதலியோர் வேள்வி செய்யலாகாது. அத்தம்பதிகளுள் ளொருவரோனு மெதிரில்லாமலே ஹோமஞ்செய்தால் அது வீணும் எ-று. காண்க.

## தலைவனில்லாவழி.

தலைவன்வேறிடஞ் சென்றவழியுள்ள விசேடத்தினைமிருதி கூறிற்று. స్మృతిః॥ "నిక్షిప్యాగ్నిం స్వదారేషుపరికల్ప్యర్త్విజంతథా। ప్రవసేత్కార్యవాన్విప్రోవృథైవనచిరంవసేత్" = ஒருதலையாகச்சிறந்தவினைமேற்செல்ல விரும்பிய வேதியன் தன் வேள்வித் தீயினை மனைவியினிடத்து விடுத்து, அக்கருமத்தைச் செய்வதற்கு ஒரு இருத்துவிக்கை நியமித்து, வெளிப்போகலாம். வீணாக நெடுங்கால மிருந்துவிடலாகாது. எ-று. காண்க.

## ஹோமத்திற்குரியகாலம்.

ஹோமத்திற்குரிய காலத்தைக் காத்தியாயனர் குறிப்பித்தனர். కాత్యాయనః। "యావత్సమ్యఙ్నభావ్యంతే నభస్యృక్షాణిసర్వతః। లోహితత్వంచనాపైతితావత్సాయంతుహూయతే"=எதுகாறும்ஆகாயத்துள்ளஉடுக்கள் நன்ருகக் காணப்படுவதில்லையோ? சந்தியாராகம்=அந்திச்செக்கர் நிறம் எதுகாறும் ஒழிவதில்லையோ? அதுகாறுமாகிய சாயங் காலவரையில் ஹோமஞ் செய்யப்படுமாக. எ-று. காண்க.

ஆப்த்தம்பர். ఆపస్తంబః॥ "సముద్రోవాఏషయద హోరాత్రస్తస్యైతేగాధే తీర్థేయత్సంధీ తస్మాత్సంధౌ హోతవ్యం" = என்று காத்தியாயனப் பிராமணத்தை உதகரித்தனர். இனி அதன்பொருள் வருமாறு. இரவுபகல் என்பன சமுத்திரமாக விருக்கின்றன. ஆழமறிய முடியாத இப்பெருவெள்ளத்தில் இரண்டின் கூட்டமே சந்தி

யிடமாகவிருக்கின்றது. ஆதலின் சந்திகாலத்தில் வேள்விசெய்ய வேண்டும். எ-று. காண்க. "నక్షత్రందృష్ట్వా ప్రదోషేనిశాయాంవాసాయం"= சாயம் என்னுஞ்சொல் நக்ஷத்திரங்களின்காட்சி, பிரதோஷப் போது, இரவு என்னு மிம்மூன்றினையும் குறிக்கின்றது. சமுத் திரமாக வுவமிக்கப்பட்ட பகலிரவென்னும் காலம் நீர்ப்பெருக் கின் கூட்டமாக விருக்கும். சந்திதீர்த்தம் புகுவோர்க்கு எளிய தாக விருக்குமாதலின் ஹோமகருமத்திற்குச் சந்தியாகாலம் முக்கிய கற்பமாக விருக்கின்றது. நக்ஷத்திரக்காட்சி முதலிய அம்மூன்றுகாலமும் சாயங்கால ஹோமத்துள் அநுகற்பமாக விருக்கின்றன. நக்ஷத்திரக்காட்சி என்பது. ஒரு நக்ஷத்திரம் கண் ணுக்குப் புலப்படுங்காலம். பிரதோஷம் என்பது எல்லாவுடுக் களையும் நோக்கத்தக்க காலம், இரவு என்பது உறக்கம் வருங் காலம். என்றுணர்க.

உதயகால சந்தியில் செய்யும் ஹோமத்திற் குரியகாலம் நான்குவகையாக அவ்வாபத்தம்பரானே கூறப்பட்டது. வரு மாறு. "ఉషస్యుషోదయం సమయాధ్యుషితే ప్రాతః" = பிராதஃ, என்னுஞ் சொல் 'உஷஎன்ற காலமும், உஷா என்ற காலமும், விடியற்கால மும், ஸமயாத்துயுஷிதம் என்ற காலமுமாகிய நான்கினையும் குறிக்கின்றது. எ-று. காண்க.

மனு அந்நான்கனுள் முதலாவதனையும் இரண்டாவதனை யும் ஒன்றுசெய்து மூன்றுகாலமாகக் கூறினர். మనుః॥ "ఉదితేను దితేచైవ సమయాధ్యుషితేతథా। సర్వథావర్తతేయజ్ఞ ఇతీయంవైదికీశ్రుతిః" = உதி தம், அநுதிதம், சமயாத்துயுஷிதம், என்னுமிக்காலக்களில் எல் லாவகையாலும் வேள்வி நடக்கின்றது, என்றவிது வைதிக சுருதி. எ-று. காண்க.

## அநுதிதகாலம்.

அவற்றி னிலக்கணங்களை வியாசர் கூறினர். వ్యాసః॥. "రాత్రే ష్షోడశభాగేషు గ్రహనక్షత్రభూషితే। కాలేత్వనుదితే ప్రాతర్హోమంకుర్యాద్విచక్షణః"= இராக்காலத்தைப் பதினாறு பங்காக்குமிடத்துக் கிரகங்களும் நக்ஷத்திரங்களும் பிறவுங் காணப்படுகின்ற கடைப்பாகம் அநு தித கால மென்னப்படும். அறிவுடையோன் காலையிற் புரியும் ஹோமத்தை யப்பொழுது செய்யவேண்டும். எ-று. காண்க.

## சமயாத்துயுஷித காலம்.

வியாசர். వ్యాసః॥ "తథాప్రభాతసమయే నష్టేనక్షత్రమండలే। రవిర్యావన్నదృశ్యేత సమయాధ్యుషితస్స్మృతః" = கிழக்கு வெள்ளெனவெளுக்கச்சிதே நக்ஷத்திரமண்டலம் மறைந்து சூரியன் கட்புலனாகாதவரையிலும் உள்ளகாலம் சமயாத்துயுஷிதகாலம் என்னப்படும். எ-று. காண்க.

## உதிதகாலம்.

வியாசர். వ్యాసః॥ "రేఖామాత్రస్తుదృశ్యేత రశ్మిభిస్సహితోరవిః। యదాతముదితంవింద్యాత్తత్రహోమంప్రకల్పయేత్" = சூரியன் கிரணங்களுடன் கோடுகிழித்த மாத்திரையே யெதுகாறுங் காணப்படுகின்றதோ? அப்படிப்பட்ட காலத்தை உதிதமென் றுணரத் தக்கது. அப்பொழுது ஹோமஞ்செய்க. எ-று. காண்க.

## ஹோமகாலத்திற்குரிய அநுகற்பம்.

வேள்வித்தீயினுக் குரிய அநுகற்பத்தை ஆசுவலாயனர்கூறினர். ఆశ్వలాయనః॥ "ఆసంగవాన్తంప్రాతః" = சங்கமகாலம் வருமளவும் பிராதக்காலமாம். எ-று. ஹோமத்திற்குத் தக்ககால மென்பது கருத்து. அல்லது, இக்கால மனைத்தும் காலவிசேடங்களேயாம். ஒவ்வொருசாகைகட்கு ஒவ்வொன்று சிறந்ததாக "உதிதானுதித ஹோமம்" போல வகுக்கப்படும் எண்றுணர்க. "உதிதானுதித ஹோமம்" என்பது, வேதத்துள் உதித காலத்துள் ஹோமஞ்செய்க; அநுதிதகாலத்தி லொழிக; எனவும், மற்றோரிடத்து, அநுதிதகாலத்தில் ஹோமஞ்செய்க; உதித காலத்துட் செய்யாதொழிக எனவும் கூறப்பட்டுள்ளது. ஈண்டு இவ்விரண்டு வாக்கியங்களுந் தம்முளொன்றோடொன்று முரணுதலி னம்முரணையொழிக்கும்படி ஒவ்வொன்றும் ஒவ்வொருசாகையர்க் குரித்தென மீமாம்சகர் நியாயம்வகுத்தனர் ஆதலினதுவென்றுணர்க.

எங்ஙனமாயினும் சிறந்தகாலத்தைக் கடந்து போனதாகவே யாகின்றது. என்னை? கோபிலர். గోభిలః॥ "అథయదిగృహ్యాగ్నౌసాయంప్రాతర్హోమయోః దర్శపూర్ణమాసయోర్హవ్యం హోతారంనాధిగచ్ఛేత్" = பின்பு கிருஹியாக்கினியால் சாயங்காலத்தும் உதயகாலத்தும் செய்யும் ஹோமத்திலும் அமாவாசை பூரணையிற் செய்யும்

ஹோமத்திலும், தேவர்களைத் திருத்தி செய்தலால் ஆகும்பயன் ஹோமஞ் செய்தவனைப் பொருந்தாதொழியும். எ-று. காண்க.

அற்றேல், செய்யக்கடவதியாதெனில்? முக்கியகாலங் கிடைப்பது அருமையா மாதலின் சாமானியகாலமே யான போதினும் விடாது கருமத்தைச் செய்தலே வேண்டும். அங்ஙனஞ் செய்த பயன் தலைவனை விட்டொழிதலில்லை என்று அக் கோபிலரோ அக்கால நிபந்தனை வகுத்தனர். గోభిలః॥ "ఆసాయమాహుతెరగ్నిహోత్ర రాహుతిర్నాత్యేత్యాప్రాతరాహుతెస్సాయ మాహుతిరామావాస్యా యాఃపౌర్ణమాసీనాత్యేత్యా పౌర్ణమాస్యా అమావాస్యేతి" = சாயங்காலஹோமம்வரையில் காலைஹோமம் கடந்து போவதில்லை. காலைஹோமம்வரையில் சாயங்காலஹோமம் தவறிப்போவதில்லை. அமாவாசைவரையில் பூரணை கடந்தொழிவதில்லை. பூரணைவரையில் அமாவாசைகடந்து ஒழிவதில்லை. எ-று. காண்க.

போதாயனரும் அவ்வாறே கூறினர். బోధాయనః॥ "ఆసాయంకర్మణఃప్రాత రాప్రాతస్సాయకర్మణః। ఆహుతిర్నాతిపద్యేత పార్వణాపార్వణాంతరం" காலை வேள்வித்தீக்காரியம் மாலைவரையிலும், மாலை வேள்வித்தீக் காலைவரையிலும், அதிக்கிரமித்துப் போவதில்லை. பர்வகாலஹோமம் வேறொரு பர்வகாலம் வருமளவும் அதிக்கிரமித்துப் போவதில்லை. எறு. காண்க.

## ஹோமவிடயத்தில் ஆபற்காலதருமம்.

வேள்வித் தலைவனுக்கு ஆபத்துவரின் பக்ஷஹோமஞ் செய்தல்வேண்டும். அங்ஙனம் மரீசிகூறினர். మరీచిః "శరీరాపద్భవేద్యత్ర భయాద్వాప్యగ్నిప్రపద్యతే। అథాన్యాస్వపిచాపత్సు పక్షహోమోవిధీయతే" = தன்னுடம்பினுக்கு ஓராபத்துவரினும், பயத்தினால் ஆபத்தும் பிற ஆபத்தும் வரினும், பக்ஷஹோமம் விதிக்கப்படுகின்றது. எ-று. காண்க.

பக்ஷஹோமம் செய்பவனுக்கு எந்த பக்ஷத்தில் ஆபத்து விட்டொழிகின்றதோ? அதுமுதல் அவன் நித்தமும் முறையே ஹோமஞ் செய்யவேண்டும். அங்ஙனம் மரீசியே கூறினர். మరీచిః॥ "పక్షహోమానథోకృత్వా గత్వాతస్మాన్నివర్తితః। హోమంపునః ప్రకుర్యాత్తు న చాసాదోషభాగ్భవేత్" = பக்ஷஹோமங்களைச் செய்திருந்து பின்பு

அவற்றினையும் விடின் மறுபடியு முறையே ஹோமஞ் செய்ய வேண்டும். அவன் குற்றமுடையவ னல்லன். எ—று. காண்க.

## மீட்டும் ஆதானஞ்செய்தல்.

இப்படி ஹோமத்தினை அனுட்டிப்பவனேயாயினும், தான் வசிக்கும் ஊர் எல்லையைக்கடந்து செல்வானாயின் மறுபடியும் அக்கினியை ஆதானஞ்செய்யவேண்டும். அங்ஙனம்காத்தியாயனர் கூறினர். కాత్యాయనః॥ "ఐహాయాగ్నింసభార్యశ్చే త్సీమాముల్లంఘ్యగచ్ఛతి। హోమకాలాదతీతస్య పునరాధానమిష్యతే" = அக்கினி ஹோத்திரத்தை விட்டு மனைவியோடு எல்லைகடந்து சென்றவனுக்கு ஹோம காலமாகிய பக்ஷமும் கடந்துவிட்டால் அவன்மீட்டும் அத்தீயினை விதிப்படி விச்சின்னாதானஞ்செய்தல் வேண்டும். எ—று. காண்க.

அங்ஙனம் ஹோமகாலம் கடந்து விடாமலிருந்தால் மீட்டும் ஆதானஞ்செய்ய வேண்டுவதில்லை. அதனைச் சௌனகர் கூறினர். శౌనకః॥ ప్రోషితేతుయథాపత్నీ యదిగ్రామాంతరంవ్రజేత్। హోమకాలేతుసంప్రాప్తే నసాదోషేణయుజ్యతే" = எப்பொழுது வேற்றிடத்திற்குப் போயிருக்கின்றானோ? அப்பொழுது அவன்மனைவியும் வேறோரூருக்கு சென்றிருக்கினும் வந்தபின் ஹோம காலம் கிடைத்தால் அவள் குற்ற முடையவளாதலில்லை. எ—று. காண்க.

## ஹோமத்திரவியங்கள்.

ஹோமஞ்செய்தற் குரிய திரவியங்க ளிவையென அக்காத்தியாயனரே கூறினர். కాత్యాయనః॥ "కృతమోదనసక్త్వాది తండులాదికృతాకృతం। వ్రీహ్యాదిత్వకృతంప్రోక్త మితిహవ్యంత్రిధాబుధైః। హవిష్యేషుయవాముఖ్యా స్తదనువ్రీహయస్స్మృతాః। అభావేవ్రీహియవయో ర్దధ్నావాపయసాపివా। తదభావేయవాగ్వా వా జుహుయాదుదకేనవా। యథోక్తవస్త్వసంపత్తౌ గ్రాహ్యంతదనుసారిచ। యవానామివగోధూమా వ్రీహీణామివశాలయః। ఆజ్యంహవ్యమనాదేశే జుహోతిషువిధీయతే। మంత్రస్యదేవతాయాస్తు ప్రజాపతిరితిస్థితిః" = அவ்வியம் = ஹோமஞ்செய்யப்படுதிரவியம், இது. கிருதம் – எம் – கிருதாகிருதம் - எம் – அகிருதம். எனவும் மூவகைப்படும். அன்னம், நெற்பொரி, வறுத்தமாவு, முதலிய அவிசுகிருதம் என்னும் பெயரவாம். கிருதம் என்பது பக்குவஞ் செய்யப்பட்டன. அரிசிமுதலியன கிருதாகிருதம் என்

னப்பட்டது. எனவே, பக்குவப்பட்டும் படாது மாயுள்ளன. நெல்முதலியன அகிருதம்என்னப்படும். அது பக்குவப்படாதன. ஹோமத் திரவியங்களில் யவம் சிறந்தது. விரீஹியென்னு நெல் ஒருசார் சிறந்ததாம். யவமாயிலும் விரீஹியென்னு நெல்லாயினும் கிடையாவழி தயிரினலாயினும் பாலினலாயினும் ஹோமஞ் செய்க. அவையும் கிடையாவழி, கஞ்சியினலாயினும் நீரினலாயினும் செய்க. எந்த ஹோமத்திற்கு எந்தத்திரவியம் கூறப்பட்டதோ? அந்தத்திரவியம் கிடையாதபக்ஷத்தில் அதனேடு சம்பந்தமுடைய மற்றொரு திரவியத்தைக் கொள்ளவேண்டுவது. உதாரணம். யவத்திற்குக் கோதுமை எவ்வாறே? விரீஹிஎன்பதற்கு நெல் யெவ்வாறே? அவ்வாறு பொல்வனவாம். யாண்டாயினுமாக் நெய்யினுக்கும், அவிசுக்கும், பிரதியாக வேறென்றினைக் கோடலில்லைகொள்ளுவதாயின் விதிக்கப்படுகின்றன. மந்திரத்திற்கு சுவாஹாகாரம், தேவர்கட்குப் பிரஜாபதி தேவதை; பிரதிநிதியாயிருப்பது முண்டு. எ-று. காண்க.

## ஆகுதிக்கு அளவு.

ஆகுதிப் பொருளினளவையை விருத்த பிரகற்பதி கூறினர். వృద్ధబృహస్పతిః॥ “ప్రస్థధాన్యం చతుష్షష్టి రాహుతేః పరికీర్తితం। తిలానాంతు తదర్థం స్యాత్తదర్థం స్యాద్ఘృతస్యతు” = வள்ளம்=இருநாழிதானியம்அறுபத்து நான்கு ஆகுதிக்குக் கூறப்பட்டது. (எனவே ஆகுதி ஒன்றற்கு ஒருபலமாகின்றது. பலம் = மூன்று ரூபாயிடை). எள்ளானல் அதிற்பாதியாம். (எனவே அரைப்பலமாம்). நெய்யானல் அவ்வெள்ளினிற்பாதி (எனவே காற்பலமாம்). எ-று. அல்லது, ஆகுதி ஒன்றற்கு மூன்றுவராகனிடை நெய் உத்தமகற்பமாம். இரண்டு வராகனிடை மத்தியமகற்ப மெனவும், ஒருவராகனிடை அதமகற்பமெனவும் வழங்குகின்ற வழக்குமுள்ளது என வுணர்க.

போதாயனர். బౌధాయనః॥ “వ్రీహీణాం వాయవానాం వా శతమాహుతిరిష్యతే” = விரீஹிஎன்னுந் தானியமே யாயினும் யவமென்னும் தானியமே யாயினுமாக ஒருவள்ளத்திற்கு நூறுஆகுதிகள் உடன்பாடாகின்றன. எ-று. எனவே இரண்டு ரூபாயிடை யாகின்றது. இது ஒருகற்பம் இன்னு மதமமாக ஒருரூபாயிடை ஆகுதிசெய்யும் வழக்கமுமுண்டு.

## ஹோமஞ்செய்தற்குரியவிதி.

ஹோமஞ் செய்யும் வகை தன்சாகையின் கிரகத்த கரும விதி சம்பந்தமாகிய சூத்திரப்படி செய்யப்படும் என்பதனை கிருஹியபரிசிட்டம் என்னு நாலிற்கூறப்பட்டது. గృహ్యపరిశిష్టే॥ "స్వగృహ్యోక్తేనవిధినా హోమంకుర్యాద్యథావిధి" = தன் சாகையின் கிருஹ்ய சூக்தத்தில் கூறப்பட்ட விதியினால் எவ்வாறுவிதிக்கப்பட்டதோ? அவ்வாறு ஹோமத்தைச் செய்ய வேண்டுவது. எ-று. காண்க.

## ஹோமஞ்செய்தற்குரியதீ.

இதுவுமது. "ఐహలుశుష్కేంధనేచాగ్నౌ సుసమిద్ధేహుతాశనే। విధూమేచ విహీనేచ హోతవ్యంకర్మసిద్ధయే" = உலர்ந்த விறகுகளைமிகவு மிட்டுநன்ருக வளர்க்கப்பட்டு ஹோமஞ்செய்த ஆகுதிப்பொருளைப் பக்குவஞ் செய்யத்தக்க நிலைமையுண்டாய்ப் புகையின்றி நாவைநீட்டுவது போலுங் கொழுந்துகளை வீசுகின்ற தீயினிடத்தில் கருமங்கள் முற்றுவதற்காக ஹோமஞ் செய்யவேண்டும். எ-று. காண்க.

இதுவுమது. "యోనర్చిషిజుహోత్యగ్నౌ వ్యంగారేచైవమానవః। మందాగ్నిరామయావీచ దరిద్రశ్చప్రజాయతే" = யார் எரியாத அக்கினியினிடத்திலும் மிகுந்த தீயில்லாதவிடத்தும் ஹோமஞ்செய்கிறானோ? அவன் பசித்தழன் மந்தமானவனாயும் தரித்திரனாயும் நோயாளியாயும் பிறக்கின்றான். எ-று. காண்க.

இவற்றை யெல்லாம் நன்குணர்ந்த பின்னரே அனுட்டானஞ் செய்யவேண்டும் அங்ஙன மில்லையேற் குற்றமாம். இக்கருத்தை அங்கிரசு கூறினர். అంగిరాః॥ "స్వాభిప్రాయకృతంకర్మ యత్కించిద్జ్ఞానవర్జితం। క్రీడాకర్మేవబాలానాం తత్సర్వంనిష్ప్రయోజనం" = அறிவில்லாமலே தான் கருதியபடி எவ்வளவு சிறியகருமஞ் செய்யினும் அது சிறுவர் விளையாட்டுத் தொழிற்போலும் எல்லாம் வீணாம். எ-று. காண்க.

சதுர்விம்சதிமதம். చతుర్వింశతిమతే॥ "హతంజ్ఞానంక్రియాహీనం హతాస్త్వజ్ఞానతఃక్రియాః। అపశ్యన్నంధకోదగ్ధః పశ్యన్నపిచపంగుకః" = தொழிலொடொவ்வாத அறிவும் இறந்து பட்டதேயாம், அறிவில்லாமையாற் செய்த தொழிலும் கெடுக்கப்பட்டதே யாம். பாராமல்வே

லெசெய்வோன் குருடன்; பார்த்தும் தவறுனதொழில்செய்பவன் சுடப்பட்ட கண்ணுடையவனே யாம். அவ்வளவு மன்று, ஒரு தொழிலை முறையே நிறைவேற்றுதவன் முடவனாகவு மிருக்கின்றான். எறு. காண்க.

## தீயின்வகையும் தொழில்வகையும்.

சுரௌதகருமத்திற்கும் ஸ்மார்த்த கருமத்திற்கும் தக்கவகைமையை யாஞ்ஞவற்கியர் கூறினர். యాజ్ఞవల్క్యః॥ కర్మస్మార్తంవివాహాగ్నౌ కుర్వీతప్రత్యహంగృహీ। దాయకాలాహృతేవాపి శ్రౌతంవైతానికాగ్నిషు" = இல்லறத்தான் நாடோறும் தன் மணவினைக் காலந்தொட்டுவந்த தீயினிடத்தில் ஸ்மார்த்த கருமத்தைச் செய்யக்கடவன். தகுதியானகாலத்தில் அக்கினி ஆதானஞ் செய்துகொண்டவனே யாயினும் காருகபத்தியம் முதலிய "வைதானிகாக்கினி" யினிடத்தில் சுரௌத கருமத்தைச் செய்யவேண்டுவது. எறு. காண்க.

## அவ்விருவகைத்தீயினையும் அனுட்டிக்கும்முறை.

யாருக்குச் சுரௌதாக்கினி ஸ்மார்த்தாக்கினி இரண்டுமுள்ளதோ? அவன் அவற்றை யனுட்டிக்கும் முறைமையைப் பரத்துவாசர் கூறினர். భరద్వాజః॥ "హోమంవైతానికంకృత్వా స్మార్తంకుర్యాద్విచక్షణః। స్మృతీనాంవేదమూలత్వాత్ స్మార్తంకేచిత్పురావిదః" = மனிதனுக்கு ஸ்மார்த்தாக்கினி முதற்கணுண்டாகின்றது பின்பு சுரௌதாக்கினியுண்டாகின்றதா மாகலின், நாடோறும் முதற்கண் ஸ்மார்த்தாக்கினிஹோத்திரத்தைச் செய்யவேண்டுவது என்று சிலர் கூறுகின்றனர். அறிவுடையோன் முதற்கண்ணே சுரௌதாக்கினியை யனுட்டித்துப் பின்பு ஸ்மார்த்தாக்கினியை அனுட்டிக்கவேண்டும். என்னை? மிருதிகளுக்குச் சுருதிகளே மூலமாயிருத்தலின். எறு. காண்க.

## அத்தீக்காரியஞ் செய்யத்தக்கவன் திறம்.

சாதாதபர். శాతాతపః॥ "శ్రౌతంయత్నాత్స్వయంకుర్యాదన్యోపిస్మార్తమాచరేత్। అశక్తౌశ్రౌతమప్యన్యః కుర్యాదాచారమంతతః" = சுரௌதாக்கினியைத் தானே செய்யவேண்டுவது ஸ்மார்த்தாக்கினியைப் பிறரும் செய்யலாம். ஆற்றலில்லாவழி, சுரௌதாக்கினியையும் அந்

நியர் செய்யலாம். முடிவுக்கு ஆசாரத்தையாவது விடாது பற்றுக. எ-று. காண்க.

## வேள்வித்தீக்காரியமும் நித்தகருமமே என்பது.

கற்கர். గర్గః॥ "కృతదారో నైవతిష్ఠేత్ క్షణమప్యగ్నినా వినా। తిష్ఠేతచేద్ద్విజో వ్రాత్యస్తథాచపతితోభవేత్। యథాస్నానం యథాభార్యా వేదస్యాధ్యయనం యథా। తథైవోపాసనం దృష్టం న తిష్ఠేత్తద్వియోగతః" = மனைவியோடு கூடியவன் அக்கினியையொழித்து ஒருகணமேனு மிருக்கலாகாது. அங்ஙனம் விட்டிருந்தால் அந்த விருபிறப்பாளன் பாக்கிய மற்றவனும் பதிதனும் போகின்றான். ஸ்நானம், மனைவி, வேதமோதல் எவ்வாறோ? அவ்வாறேவேள்வித் தீக்காரியமாகிய ஔபாசனமும் விடப்படாத காரியமாயுள்ளது. ஆதலா லதனைவிட்டிருத்தலாகாது. எ-று. காண்க.

ஆற்றலுடையவனு யிருந்தும் சுரௌத கருமத்தை விட்டு ஸ்மார்த்த கருமத்தினால் மாத்திரம் திருத்தியடைய லாகாது எனக் கற்கர் கூறினர் గర్గః॥ "యోవైదికమనాదృత్య కర్మస్మార్తేతిహాసకం। మోహాత్సమాచరేద్విప్రో నసపుణ్యేనయుజ్యతే। ప్రధానం వైదికంకర్మ గుణభూతంతథేతరత్। గుణనిష్ఠః ప్రధానంతు త్యక్త్వాగచ్ఛత్యధోగతిం" = யார் அஞ்ஞானத்தால் வைதிககருமத்தை ஆசரியாமல் மிருதிகளிலும் இதிகாசங்களிலும் கூறப்பட்டுள்ள ஸ்மார்த்த கருமத்தை மாத்திரம் அனுட்டிக்கின்றானே? அவன் புண்ணியப்பயனை யடைவதில்லை. வைதிக கருமஞ்சிறந்தது. ஸ்மார்த்த கருமம் சாமானியமானது. சாமானியத்தைப்பற்றி சிறந்ததைவிட்டவன் அதோகதிக்குப் போகின்றான். எ-று. காண்க.

அசத்தனைப்பற்றி வியாசர் கூறினர். వ్యాసః॥ "శ్రౌతంకర్తుంన చేచ్ఛక్తః కర్మస్మార్తంసమాచరేత్। తత్రాప్యశక్తః కరణే సదాచారంలభేద్బుధః" = சுரௌத கருமஞ்செய்வதற்கு சத்தியில்லாதவன் ஸ்மார்த்த கருமத்தையேனும் அனுட்டிக்கவேண்டும். அதற்கும் சத்தியில்லாதவன் நல்லொழுக்கத்தையேனு மடைந்திருக்கவேண்டுவது. எ-று. காண்க.

## ஹோமத்தின் சிறப்பு.

அங்கிரா. అంగిరాః॥ "యోదద్యాత్కాంచనంమేరుంపృథివీంచససాగరాం। తత్సాయంప్రాతర్హోమస్య తుల్యంభవతివానవా" = யார் மேருமலை யளவு

பொன்னையும், கடலோடு ஒத்தநிலத்தையுந்தானஞ்செய்வானோ? அவன் தானமும் சாயங்காலமும் உதயகாலமும் தவறாது செய்யும் ஹோமத்தோடு ஒக்குமோ? ஒவ்வாதோ? எ-று. காண்க.

## வேள்வி முடிந்தபின் திருநீறுபுனைதல்.

வேள்வித் தீக்காரியமுடிந்தபின்பு திருநீறு தரிக்கவேண்டும் என்பதனை பிரகற்பதி கூறினர். బృహస్పతిః॥ "సర్వభస్మాగ్నిహోత్రాంతే ధార్యమేవాగ్నిహోతృభిః॥ అనాహితాగ్నిబ్రహ్మాఖ్యమౌపాస నసముద్భవం"= சுரௌதாக்கினி ஹோத்திரஞ் செய்யும் வைதிகனாகிய இல்லறத்தான் வேள்வி செய்து முடித்த முடிவிலே "நரியம்" என்னும் பெயரையுடைய திருநீற்றைத் தரிக்கவேண்டும் "ఏవ" என்னும் தேற்றத்தால் திருநீறு தரியாதிருக்கலாகாது. சுரௌதாக்கினியை ஆதானஞ் செய்துகொள்ளாம லிருக்கும் ஸ்மார்த்தனான இல்லறத்தான் "ஔபாசனத்தால்" பிறந்திருக்கிற "பிரமா" என்னும் பெயரையுடைய திருநீற்றைத்தரித்தல்வேண்டும். எ-று. காண்க. "హోత్రాచైవతుభస్మనా" என்றதுமுதலிய வேறு மிருதி வாக்கியங்களால் சுரௌத ஸ்மார்த்தமென்னும் இரண்டு வேள்வித் தீயினையு முடையவன் அவ்விருவகைத் திருநீற்றினையுந்தரித்தல் வேண்டும். எங்ஙனமாயும் ஸ்மிருதி சுருதி சம்பந்தமாகிய திருவெண்ணீற்றினைத் தரித்தல் நித்திய கருமமாகிய அக்கினி ஹோத்திரம் ஔபாசனமென்பதற்கு அங்கமாக விதிக்கப்பட்டிருக்கின்றது. "చ" என்ற உம்மையால் இவ்விடயத்திற் பிரமாண வுரைகள் அனேகமாக வுள்ளன வென்பதனைக் குறிக்கப்படுகின்றது. இங்ஙனம் ஹோமவிதி முற்றிற்று.

"సంధ్యాస్నానంజపోహోమః" என்ற மூலவசனத்துட் கூறப்பட்ட கருமங்களுள் ஹோமம்வரையி லிங்ஙனம் விரிக்கப்பட்டன. இவற்றினையெல்லாம், ஒருபகற்பொழுதினை எட்டுப்பங்காக்கியவழி நேரும் முதற்பாகத்தில், (என்வே காலையோரரைச் சாமப் பொழுதினுக்குள்ளாக) முடித்தல் வேண்டும். ஆயின் மாத்தியாந்நிக ஸ்நாநம் முதலிய சிலவற்றினையும் இதுகாறுங் கூறிப்போந்தனவற்றுள் கூறப்பட்டுள்ளனவே யெனின்? அற்றன்று அவ்வவ்வதிகாரத்துள் விசாரம் வந்தவழிக் கூறியவாறு மாதவின் அவற்றினையும் அம்மூன்றேமுக்கால் நாழிகைக்குள் முடித்

துவிடவேண்டுமெனக் கூறியவாறன்று. என்னை? "దివసస్యాద్య భాగేతు కృత్యంతస్యోపదిశ్యతే। ద్వితీయేచతృతీయేచ చతుర్థేపంచమేతథా। షష్ఠేచసప్త మేచైవ అష్టమేచపృథక్పృథక్। విభాగేష్వేషుయత్కర్మ తత్ప్రవక్ష్యామ్యశేషతః" = ஒருபகலின் முதற்பாகத்துள் செய்யத்தக்க கருமங்களைச் செய்வோனுக்குக் கூறியது இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு பாகங்களிலும் வேறு வேறு செய்யத்தக்க கருமங்க ளெல்லாவற்றினையும் ஒழியாது கூறுதும் என்று மேற் கூறுதலின்.

## இனித் தேவதார்ச்சனைக்குரிய காலமுதலியன.

இனி மூலவாக்கியத்தினைப்பற்றி ஹோமவிதியைக் கூறி முடித்தபின்தேவபூசையைக் கூறுதல்வேண்டும். ஆகவே, அப்பூசனையானது, காலைவேள்விக்கடனைச்செய்து முடித்தபின்னர் எனச் சிலர் கூறுவர் அங்ஙனம் மரீசியும் கூறினர், మరీచిః॥ "ప్రథాయదేవ తాపూజాం ప్రాతర్హోమాదనంతరం" = காலையில் ஹோமவினை முடித்த பின்பு தேவபூசை செய்து, என்றவாறு.

பிரமவேள்வியும் செபமும் செய்தபின்னர் தேவபூசைசெய்யவேண்டு மென மற்றொரு சாரார் கூறுகின்றனர். வருமாறு. "కుర్వీతదేవతాపూజాం జపయజ్ఞాదనంతరం" = செபம் வேள்வி செய்த பின்பு தேவபூசை செய்யவேண்டுவது. எ-று. ஏனைய மிருதிகளுட்காண்க.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ "నిష్పీడ్యస్నానవస్త్రంవై సమాచమ్యచ వాగ్యతః। స్వైర్మంత్రైరర్చయేద్దేవా న్పత్రైపుష్పైస్తథాంబుభిః" = நீராடி ஆடையைப்பிழிந்து, ஆசமனஞ்செய்து, வாய்பேசாது, அவ ரவர்க்குரிய மந்திரத்தோடு அந்தந்தத்தேவரைப் பத்திரம் பூ நீர் முதலியவற்றோடு பூசித்தல்வேண்டும் எ-று. காண்க. இந்தத்தேவதார்ச்சனை அதிகாரம், பிரம வேள்வியைக் கூறியபின்னர்க் கூறுதும். ஈண்டுக் காலைஹோமஞ் செய்தபின் பிரம வேள்விவரையில்செய்யத்தக்க கருமங்களை மூலவசனத்துள் கூறுதிருப்பினும், ஏனைய சுருதி மிருதிகளால் கூறப்பட்டு அநுட்டான முறையே வருகின்றதாமாதலின் அக்கருமங்க ளெல்லாவற்றினையும் முறையே கூறுதும்.

### வேள்வித்தீக்கருமம் முடிந்தபின் செய்யத்தக்கன.

ஹோமஞ் செய்தபின் செய்யத்தக்கனவற்றைத் தக்ஷர் கூறினர். దక్షః॥ "దేవకార్యంతతఃకృత్వా గురుమంగళవీక్షణం" = பின்புதேவகருமங்களைச் செய்துமுடித்து, ஆசிரியனையும் மங்கலத் திரவியங்களையும் தரிசிக்க வேண்டும். எ-று. காண்க. மங்கலத் திரவியமென்பன கண்ணாடி முதலியன.

### மங்கலப்பொருளை நோக்குதல்.

உதயகாலத்தில் மங்கலப் பொருளினை நோக்கவேண்டுமென மச்சபுராணத்துட் கூறப்பட்டது. మత్స్యపురాణే॥ "రోచనంచందనంధేనుం మృదంగందర్పణంమణిం। గురుమగ్నించసూర్యం చప్రాతఃపశ్యేత్సదాబుధః" அறிவுடையோன் பொன்னையும், சந்தனத்தையும், பசுவினையும், மத்தளமுதலிய மங்கலவாத்தியங்களையும், கண்ணாடியையும், அரதனத்தையும், ஆசிரியனையும், எரிநெருப்பினையும், சூரியனையும், நித்தமும் காலையில் நோக்கவேண்டும். எ-று. காண்க.

விஷ்ணுபுராணம். విష్ణుపురాణే॥ "స్వాచాంతశ్చతతఃకుర్యా త్పుమాన్కేశప్రసాధనం। ఆదర్శాంజనమాంగళ్య దూర్వాద్యాలంభనానిచ" = பின்பு ஆசமனஞ்செய்து ஆண்மகன் தன் தலையுரோமத்தைச் சீர் திருத்திக் கொள்ளவேண்டும். கண்ணாடியைப் பார்த்து மை யெழுதிக் கொண்டு மங்கலத்திரவியங்களை நோக்கி அறுகு முதலியனவற்றைக் கையிற்பற்றவேண்டும். எ-று. காண்க.

### நெய்நோக்கு.

பிரமபுராணம். బ్రహ్మపురాణే॥ "స్వమాత్మానంఘృతేపశ్య స్సద్యస్సద్యాద్ద్విజాతయే। విప్రాయవేదవిదుషే యదిచ్ఛేచ్చిరజీవితం" = நெடுநாட்பிழைத்திருக்கவேண்டுமென்னு மிச்சையை யுடையவன் நெய்யிற் றன்னிழலை நோக்கி அந்நெய்யை வேத முணர்ந்த வேதியனுக்கு விதிப்படி தானமாகக் கொடுக்கவேண்டும். எனவே தக்ஷிணையோடு மந்திரங் கூறிக்கொடுத்தல் செய்க. எ-று. காண்க,

### அட்டமங்கலம்.

நாரதர். నారదః॥ "లోకేస్మిన్మంగళాన్యష్టౌ బ్రాహ్మణోగౌర్హుతాశనః। హిరణ్యంసర్పిరాదిత్య ఆపోరాజాతథాష్టమః। ఏతానిసతతంపశ్య న్నమస్యేదర్చయేచ్చయః।

ప్రదక్షిణంచకుర్వీత తదాహ్యాయుర్నహీయతే" = உலகத்துள் சிறந்தமங்கலப் பொருளாயுள்ளன எட்டு. அவை, வேதியன், ஆன், எரிநெருப்பு, பொன், நெய், சூரியன், நீர், அரசன், எனவாம். இவைகளை யெப்பொழுதும் தரிசித்த அளவிலே வலம்வந்து பணிந்து யார் எவ்வளவு பூசிக்கின்றனரோ? அவன் அவ்வளவு ஆயுள் குறையாமலே விருத்தியை யடைவன். எ-று. காண்க.

மனு. మనుః॥ "అగ్నిచిత్కపిలాసత్త్రీ రాజాభిక్షుర్మహోదధిః। దృష్టమాత్రాఃపునంత్యేతే తస్మాత్పశ్యేతనిత్యశః" = "అగ్నిచయనం" = "அக்கினி சயனம்" செய்த அக்கினிஹோத்திரியாகிய வேதியன், கபிலைப் பசு, சத்திரயாகஞ் செய்தவன், அரசன், துறவி, மஹா சமுத்திரம், இவைகள் பார்த்தளவே ஒருவனைப்பரிசுத்த னாக்குகின்றன. ஆதலினிவற்றை நாடோறும் தரிசிக்க வேண்டுவது. எ-று. காண்க.

வாமனபுராணம். వామనపురాణే॥ "హోమంచకృత్వా లభనంశుభానాం। తథాబహిర్నిర్గమసంప్రశస్తం। దూర్వాశ్చసర్పిర్దధిసోదకుంభం। ధేనుంసవత్సాం వృషభంసువర్ణం। మృద్గోమయం స్వస్తికమక్షతాంశ్చతైలం మధుబ్రాహ్మణకన్యకాంశ్చ। శ్వేతానిపుష్పాణి తథాశమీంచ హుతాశనం చందనమర్కబింబం। అశ్వత్థవృక్షంచసమాలభేత। తతశ్చకుర్యాన్నిజజాతిధర్మం" = வேள்விசெய்து மங்கலங்களைச் செய்து வெளிச்சென்று, அறுகு, நெய், தயிர், நீர் நிறைகுடம், கன்றோடு கூடிய ஆன், இடபம், பொன், பூமி, நல்ல மிருத்திகை, கோமயம் ஸ்வஸ்திகம் = பஞ்சவண்ணத்தோடு தேவபூசையின் பொருட்டு விதிப்படி அமைத்து வைத்த மாக்கோலம், அக்ஷதை, நல்லெண்ணெய், தேன், வேதியன், வேதியர் கன்னிகை, வெண்பூ, வன்னி விருக்ஷம், எரிநெருப்பு, சந்தனம், சூரியன், அரசமரம், இவைகளைத்தரிசித்தும் பரிசித்தும் பணிந்து பின் தன்குல தருமத்தைத் தொடங்கவேண்டும். எ-று. காண்க.

பாரத்துவாசர். భారద్వాజః॥ "కండూయపృష్ఠగాంగాంతు కృత్వాచాశ్వత్థవన్దనం। ఉపగమ్యగురూంత్సర్వాన్విప్రాంశ్చైవాభివాదయేత్" = பசுவினைச் சொறிந்து வலம்வந்து, அரசமரத்தினை வணங்கி, ஆசிரியனை அடைந்து பணிந்து, வேதியரனைவரையும் தொழவேண்டும். எ-று. காண்க.

## முதற்கண்வணங்குதற் குரியார்.

வேதியர் கூட்டத்துள்ளே முதலில் வணங்குதற்குரியா ரிவ ரென்பதனை மனுகூறினர். మనుః॥ "లౌకికంవైదికంవాపి తథాధ్యాత్మికమే వవా। ఆదదీతయతోజ్ఞానం తంపూర్వమభివాదయేత్" = உலகசம்பந்த மானதி லேனும், வேதசம்பந்த மானதிலேனும், ஆன்மசம்பந்த மானதி லேனும், ஞானத்தைத் தான் யாரால் பெறக்கூடுமோ? அவனுக்கு முதலிலே அபிவாதன நமஸ்காரஞ் செய்யவேண்டும். எ - று. காண்க.

## அபிவாதன முறை.

மனு. మనుః॥ "అభివాదాత్పరంవిప్రో జ్యాయాంసమభివాదయన్। అసౌనా మాహమస్మీతి స్వంనామపరికీర్తయేత్। భోశబ్దంకీర్తయేదంతే స్వస్యనామ్నోభివాదయేత్" தன்னின் மூத்தோரை வணங்குவோன் முதற்கண் "நமஸ்கரிக் கின்றேன்" என்று கூறிப்பின்பு தன்பெயரையும் கூறவேண்டும், பின்னர் விளித்தல் வாசகத்தைக் கூறவேண்டும். இவ்வாறு தத் தம் பெயர் கூறிவணங்குதல் வேண்டும் எ-று. காண்க. விளித் தல் = அழைத்தல். உதாரணம். "అభివాదయే దేవదత్తనామాహంభో"= பணிகின்றேன் தேவதத்தனாகிய நான் ஐயா? எனவரும்.

பிறமிருதி. స్మృత్యంతరే॥ "గోత్రంస్వశాఖాంస్వంనా మకీర్తయన్నభివాద యేత్" = தன் கோத்திரத்தினையும், தன் அத்தியயன சாகையை யும், தன்பெயரினையும் கூறிப்பின்னர் வணங்கவேண்டும். எ - று. காண்க.

பணிதல்வகையை ஆபத்தம்பர் கூறினர். ఆపస్తంబః॥ "దక్షి ణంబాహుంశ్రోత్ర సమంప్రసార్యబ్రాహ్మణోభి వాదయేదురస్సమం రాజన్యోమధ్యసమం వైశ్యోనీచైశ్శూద్రఃప్రాంజలిః" = வலதுகையினைச் செவிக்குச் சரியாக வுயரவெடுத்து வேதியன் அபிவாதனஞ் செய்யவேண்டும், மார் பினுக்குச் சரியாக அரசன், இடைக்குச்சரியாக வைசியன், தாழ் ந்து தரையோடொப்பச் சூத்திரன் அஞ்சலிசெய்த கரமுடைய வனாய் அபிவாதனஞ் செய்யவேண்டும். எ-று. காண்க.

ஒற்றைக்கையால் அபிவாதனஞ் செய்யலாகாது என்பதனை விஷ்ணு கூறினர். విష్ణుః॥ "జన్మప్రభృతియత్కించి చ్చేతసాధర్మమాచరేత్। సర్వం తన్నిష్ఫలంయాతి ఏకహస్తాభివాదనాత్" = பிறந்ததுமுதல் மனத்தால்

ஏதேனுஞ் சிறிது தருமஞ் செய்திருந்தாலுமதுஒற்றைக் கையால் வணங்குதலால் நசித்துப் போகின்றது. எ-று. காண்க.

எழுந்து எதிர்நின்று நமஸ்காரஞ் செய்யவேண்டும் என ஆபத்தம்பர் கூறினர். ఆపస్తంబః॥ "ఊర్ధ్వంప్రాణాహ్యుత్క్రామంతి యూనస్థవిరఆగతే। ప్రత్యుత్థానాభివాదాభ్యాం పునస్తాన్ప్రతిపద్యతే" = வயது முதிர்ந்த விருத்தர்வந்தால் இளைஞராயுள்ளோர் பிராணசத்தி மேலெழும்பத் தொடங்குகின்றது. ஆதலால் பிரத்தியுத்தானத்தாலும், நமஸ்காரத்தினாலும் மறுபடியும் அந்தப் பிராணசத்தியை யவர்களடைகின்றார்கள். எறு. காண்க. பிரத்தியுத்தானம்=மரியாதையாக எழுந்திருத்தல்.

## இனி வணங்கப்பட்டவன் விடயம்.

நமஸ்காரஞ் செய்தவனைப்பற்றிச் செய்யப்பட்டவன்சொல்லவேண்டியதனை மநுகூறினர். మనుః॥ "ఆయుష్మాన్భవసౌమ్యేతి వాచ్యోవిప్రోభివాదనే। అకారశ్చాస్యనామ్నోంతే వాచ్యఃపూర్వాక్షరఃప్లుతః" = "ஆயுஷ்மான்பவஸௌமியா அ-அ." ஆயுளையுடையவனாகுகநல்லோய்என்றுவேதியன்வணங்கியவழிக் கூறுதல்வேண்டும். இவன்பெயர் முடிவில், அகாரத்தைக் கூறவேண்டும். பூருவஎழுத்து அளபெடையாக விருத்தல் வேண்டும். எறு. காண்க. பூருவஎழுத்து எனவே எது முன்னே யோரெழுத்தினையுடையது அது பூருவாக்கரம் என்றபடி. ஆகவே ஈற்றெழுத்து என்பதுகருத்து. முதலெழுத்தோவெனின்? தன்னுற்றலால் மெய்யெழுத்தாகவே யிருக்கின்றது. என்னை? உயிர்மே லுயிரேறி முடிதலின்மையின். இங்ஙனங் கூறியதனால் வணங்குவோனுடைய பெயர்க்கணுள்ளமெய்யெழுத்தினையூர்ந்த ஈற்றுயிரெழுத்தினை யளபெடையாகக் கூறவேண்டும். அகரத்தைக் கூறவேண்டுமென்றதனால், ஈற்றுயிரெழுத்து மாத்திரையே உபலக்கணவிதியாற் காணப்படுகின்றது. எல்லாப் பெயர்களுக்கும் அகரமே. யிறுதியில் நிற்குமென்பது நியமமல்லாமையின். அங்ஙனமாயின். கூறுமாறென்னையெனின்? உதாரணம். "ఆయుష్మాన్భవదేవదత్తా౩" என்று ஆயுளையுடையவனாகுக தேவதத்தா அ-அ. எனவரும். தேவதத்தன் என்ற பெயர்க்காக நமஸ்காரஞ்செய்வோன் பெயரைக் கூறிக்கொள்க.

அபிவாதனஞ் செய்தவனுக்கு மறுபடியும் அபிவாதனஞ் செய்யு முறைதெரியாதவன் யாரோ? அவன் அபிவாதனஞ் செய்வித்துக் கொள்ளத்தக்கவ னல்லன். அங்ஙனம் மனு கூறினர். మనుః॥ "యోనవెత్త్యభివాద్యస్య విప్రఃప్రత్యభివాదనం। నాభివాద్యస్సవిదుషా యథా శూద్రస్తథైవసః" = அபிவாதனஞ் செய்தவனுக்கு எதிர் அபிவாதனஞ்செய்ய எந்த வேதியன் தெரியாதவனுவனே? அந்த வேதியன் அபிவாதனஞ் செய்வித்துக் கொள்ளுகைக்குத் தக்கவனல்லன். (எனவே அப்படிப்பட்டவனுக்கு அபிவாதனஞ் செய்யலாகாது என்பதுகருத்து). சூத்திரனெவ்வாறே? அவ்வாறே யவனுமாவன். எ-று. காண்க.

யார் தெரிந்தவனேயாயினும் எதிர் அபிவாதனஞ்செய்வதில்லையோ? அவனுக்குத் தோஷ முண்டாமென்று பவிஷ்ய புராணத்திற் கூறுகின்றது. భవిష్యత్పురాణే॥ "అభివాదితేయస్తు నకరోత్యభివాదనం। ఆశిషంచకురుశ్రేష్ఠ సయాతినరకాన్బహూన్" = அபிவாதனஞ் செய்யப்படும்போது யார் எதிர் அபிவாதனமாயினும் ஆசீர்வாதமாயினும் செய்வதில்லையோ? அவன் பலநரகங்களையு மடைகின்றுன். எ-று. காண்க.

இயமன். యమః॥ "అభివాదేతుయఃపూర్వ మాశిషంనప్రయచ్ఛతి। యద్దుష్కృతంభవేత్తస్య తస్మాద్భాగంప్రపద్యతే। తస్మాత్పూర్వాభిభాషీస్యాచ్చండాలస్యాపిధర్మవిత్। సురాంపిబేతివక్తవ్య మేవంధర్మోనహీయతే। స్వస్తీతిబ్రాహ్మణోబ్రూయాదాయుష్మానితిభూమిపః। వర్ధతామితివైశ్యస్తు శూద్రస్తుస్వాగతంవదేత్" = அபிவாதனஞ் செய்யும்போது யார் முதலில் ஆசீர்வாதத்தைச் செய்வதில்லையோ? அவன் அபிவாதனஞ் செய்தவனுடைய பாவத்துள் ஒரு பங்கினையடைகின்றுன். ஆதலின் முதற்கண் வாய்திறப்போனுக வேண்டும். தருமத்தை யுணர்ந்தவன் சண்டாளனுக் காயினும் கள்ளினைக்குடித்துச்செல்லுகஎன்று இதமொழியைக் கூறவேண்டும். இங்ஙனஞ்செய்வோனுக்குத்தருமம் ஈனமாவதில்லை. வேதியன் "స్వస్తి" "சுவஸ்தி" என்று கூறவெண்டும். அரசன். "ஆயுஷ்மான்" என்று கூறவேண்டும். வைசியன் "வர்த்ததாம்" என்று கூறவேண்டும். சூத்திரன் "சுவாகதம்" என்று கூற வேண்டும். எ-று. காண்க. சுவஸ்தி = க்ஷேமம் ஆகுக. ஆயுஷ்மான் = தீர்க்காயுளுடையவனுகுக. வர்த்ததாம் = விருத்தி அடைக. சுவாகதம் = நன்றுகவந்தனையோ? என்றவாறு.

## க்ஷேமம் வினுதல்.

மனு. మనుః॥ "బ్రాహ్మణంకుశలంపృచ్ఛేత్క్షత్రబంధుమనామయం। వైశ్యంక్షేమంసమాగమ్య శూద్రమారోగ్యమేవచ। పరపత్నీతుయాస్త్రీస్యాదసంబంధాచయోనితః। తాంబ్రూయాద్భవతీత్యేవం సుభగేభగినీతిచ"=வேதியனைக் "குசலமா" என விசாரித்தல்வேண்டும். அரசனை "அநாமயமா" எனக் கேட்க. வைசியனை "க்ஷேமமா" என வினவுக. சூத்திரனை "ஆரோக்கியமா" என்க. அந்நியன் மனைவியாயும் தனக்குப் பிறவிச் சம்பந்தமில்லாதவளாயுமுள்ள மாதினை "భవతి = பவதீ" "సుభగే = சுபகே" "భగినీ = பகிநீ". என விளித்து உபசரித்தல் செய்க. எறு. காண்க. குசலம் = அறிவின் சுகவிருத்தி. அநாமயம் = உபத்திரவங்களில்லாமை? க்ஷேமம் = இருந்த நிலைமை கெடாதிருத்தல், ஆரோக்கியம்=நோயில்லாமை, பவதீ = அருச்சனைக்குத் தக்கவளே ! சுபகே = மங்கலமுடையவளே ! பகிநீ= உடன்பிறந்தாளே ! என்றவாறு.

## பணிவுழி மூத்தோனிலக்கணம்.

"జ్యాయాంసమభివాదయన్" = தன்னினு மூத்தோனுக்கு அபிவாதனஞ் செய்து என்று முன் கூறப்பட்டுள்ள தன்றே? அங்ஙனம் செய்யப்படுவோன் எவ்வளவு காலம் மூத்தோனாகவேண்டுமென்பதனை ஆபத்தம்பர் கூறினர். ఆపస్తంబః॥ "త్రివర్షపూర్వశ్శ్రోత్రియోఽభివాదనమర్హతి"= மூன்றுவருடம் மூத்தோனாகியுள்ள சுரோத்திரியன் நமஸ்கரிக்கத் தக்கவனாக விருக்கின்றான். எறு. காண்க.

மனு. మనుః॥ "దశాబ్దాఖ్యంపౌరసఖ్యం పంచాబ్దాఖ్యంకళాభృతాం। త్ర్యబ్దపూర్వంశ్రోత్రియాణా మల్పేనాపిస్వయోనిషు" = தான்வசிக்கும் ஊரின் கண்ணேயுள்ளவருள் பத்துவருடம் மூத்தோனாகவிருக்க. வாசித்துணர்ந்தவருள் ஐந்துவருடம் மூத்தோனாகவிருக்க. வேதமோதியவருள் மூன்றுவருடம் மூத்தவனாகவிருக்க. பிறவிச்சம்பந்தமுடைய தமையன் முதலிய சுற்றத்தாருள் ஒரு சிறிது மூத்தோனாயிருக்கினும் சாலும். எறு. காண்க.

## பணிவுழிச் சிறியோர் விடயம்.

இருத்துவிக்கு முதலியோர் சிறியோரோயாயினும் வணங்கத்தக்கவரோ யாமென்று யாஞ்ஞவற்கியர் கூறியிருத்தலின், வய

திற் சிறியோர்க்கும் அபிவாதனஞ்செய்தல் வேண்டு மன்றே எனின்? எதிரொழுதல், உரையாடல், இவைகளால் அவர்கட்கு உபசாரஞ்செய்தல் தகுதியாதலின் அபிவாதனமுஞ் செய்யலா மென்று கௌதமர் கூறினர். గౌతమః॥ "ఋత్విక్ఛ్వశురపితృవ్య మాతులా నాంతుయవీయసాం ప్రత్యుత్థానాభివాదనం" = இருத்துவிக்கு, மகட்கொடை நேர்ந்தமாமன், தந்தையுடன்பிறந்த இளையோன், தாயுடன் பிறந்த அம்மான், இவர்கள் தன்னிற் சிறியரோ யாயினும் தன்னிடம் நாடிவரின் பெருமைநோக்கி எதிரொழுந்து அபிவாதனஞ் செய்யவேண்டும். எ-று. காண்க.

அபிவாதனம் என்பது தனது கோத்திரம் பிரவரம்பெயர் முதலிய கூறி வணங்குதலா மாதலினிப்பொருள் இவ்விடத்துச் செல்லாது. பிறவெனின்? நன்முக உபசரித்துரையாடலே அபிவாதனமென்க. அங்ஙனம் போதாயனர் கூறினர். బౌధాయనః॥ "ఋత్విక్ఛ్వశురపితృవ్యమాతు లానాంతుయవీయసాం ప్రత్యుత్థానమభిభాషణంచ"= இதற்கு உரைமேலே கூறப்பட்டது. இதுவேதியர் விடயம் என்றுணர்க.

## வேதியன் மாட்டேனையர் விடயம்.

சாதாதபர். శాతాతపః॥ "అభివాద్యో నమస్కార్య శ్శిరసావంద్యఏవచ। బ్రాహ్మణఃక్షత్రియాద్యైస్తు శ్రీకామైస్సాదరంసదా" = செல்வத்தை விரும்பிய அரசன் முதலிய வருணத்தர் எப்பொழுதும் வேதியனுக்கு அபிவாதனமும் நமஸ்காரமுஞ் செய்யவேண்டும். தலைகுனித்து வணங்குதலுஞ் செய்க. எ-று. காண்க.

## அந்நியர் மாட்டுவேதியன் விடயம்.

சாதாதபர். శాతాతపః॥ "నాభివాద్యాస్తువిప్రేణ క్షత్రియాద్యాః కథంచన। జ్ఞానకర్మగుణోపేతా యద్యప్యేతేబహుశ్రుతాః" = க்ஷத்திரியன் முதலியோர் நல்லஞானம், நல்லகருமம், நற்குணம், சிறந்தபுகழ்உடையவர்களா யிருப்பினும் அவர்கட்கு வேதியன் எவ்வகையபிவாதனமும் செய்யலாகாது. எ-று. காண்க.

## சூத்திரனுக்கு வணங்கிய வேதியன்விடயம்.

இதுவுமது. "అభివాద్యద్విజశ్శూద్రం సచేలస్నానమాచరేత్। బ్రాహ్మణానాంశతంసమ్య గభివాద్యవిశుధ్యతి" = இருபிறப்பாளன் சூத்திரனுக்கு

நமஸ்காரஞ் செய்தால் அப்போது கட்டியிருந்த வுடையோடு நீராடவேண்டும். பின் நூறுவேதியர்க்கு நன்முக அபிவாதனஞ் செய்தால் சுத்தனுகின்றுன் எ-று. காண்க.

## அபிவாதனஞ் செய்யத்தகாதவிடம்.

விஷ்ணு. విష్ణుః॥ "సభాసుచైవసర్వాసు యజ్ఞేరాజగృహేషుచ। నమస్కారంప్రకుర్వీత బ్రాహ్మణాన్నాభివాదయేత్" = எவ்வகைச் சபையினிடத்தும் வேள்விச் சாலையினும், அரசனரண்மனையினும் வேதியர்க்கும் நமஸ்காரஞ் செய்யலாமன்றி அபிவாதனஞ் செய்யலாகாது. எ-று. காண்க.

## பாதோபசங்கிரகணம்.

ஆசிரியன் முதலியோர் விடயத்தில் முதற்கண் அவர்கள் பாதத்தைப் பற்றவேண்டுவ தென்று கௌதமர் கூறினர். గౌతమః॥ "గురోస్పాదోపసంగ్రహణంప్రాతః" = "உதயகாலத்தில் ஆசிரியன் திருவடியைப் பற்றிப் பரிசிக்கவேண்டும். எ-று. காண்க. ஈண்டு இம்மூலத்துள் குரு என்றதாசிரியனை. என்னை; அதனை மேற் கூறுப.

கௌதமர். గౌతమః॥ "మాతృపితృతద్బంధూనాం పూర్వజానాంవిద్యాగురూణాంతద్గురూణాంచాభివాదయేత్" = தாய், தந்தை, அவர்கள் சுற்றத்தினர், தமையன்மார், தமக்கையர், ஓதுவித்தகுரவர், அவர்குரு, இவரனைவர்க்கும் அபிவாதனஞ் செய்க. எ-று. காண்க.

## பாதோபசங்கிரகண விலக்கணம்.

அங்ஙனம் திருவடி பற்றிப் பரிசிக்கு மிலக்கணத்தை மனு கூறினர். మనుః॥ "వ్యత్యస్తపాణినా కార్య ముపసంగ్రహణంగురోః। సవ్యేనసవ్య స్స్పృష్టవ్యో దక్షిణేనతుదక్షిణః" = ஆசிரியனுடைய பாதாபிவாதனத்தினைத் தன்னுடைய வியத்தியஸ்தமானகைகளினுல் செய்யவேண்டும். எனவே ஆசிரியன் வலது திருவடியைத் தனது வலக்கரத்தாலும் இடது திருவடியை யிடக்கரத்தாலும் மாறிப் பரிசிக்க வேண்டும். எ-று. காண்க.

போதாயனர். బౌధాయనః॥ "శ్రోత్రేసంస్పృశ్యమానస్స మాధాయాథ స్తాజ్ఞాన్వారా పద్భ్యామిత్యుపసంగ్రహణం" = காதினைத்தொட்டு அமைதி

யோடும் முழங்காலினுக்குக்கீழ் பாதம்வரையில் மாறித் தொட்டுத் தலைவணக்கஞ் செய்யவேண்டும். எ-று. காண்க.

இங்ஙனம் திருவடித்தொடுதல் குருபன்னி முதலியவர்க்கும் செய்யவேண்டும். அங்ஙனம் மனுகூறினர். మనుః॥ "గురువత్ప్రతిపూజ్యాస్స్యుస్సవర్ణాగురుయోషితః। అసవర్ణాస్తుసంపూజ్యాః ప్రత్యుత్థానాభిభాషణైః। భ్రాతృభార్యోపసంగ్రాహ్యా సవర్ణాహన్యహన్యపి। విప్రోష్యతూపసంగ్రాహ్యా జ్ఞాతిసంబంధియోషితః" = குருவின் சுசாதிமனைவியர், குருவைப்போலும் பூசிக்கத்தக்கவராம். அந்நியசாதி மனைவியரும், எழுந்து நின்று ரையாடத்தக்கவராகின்றனர். தன் வருணத்தாளாகிய தமையன் மனைவிக்கு நாடோறும் பாதந்தொட்டு அபிவாதனஞ் செய்ய வேண்டும். யாத்திரைசென்று வந்தகாலத்தின் மாத்திரம் ஞாதியர், சுற்றத்தினர்முதலிய பெரியோர் மனைவியர்க்கும் பாதந் தொட்டு அபிவாதனஞ் செய்யவேண்டும். எ-று. காண்க.

## அவ்வந்தனஞ் செய்யத்தகாதவிடம்.

இம்முறை விசேடண மில்லாமலே குருமுதலிய யாவர்க்கும் பாதவந்தனஞ் செய்யவேண்டு மென்னும் சாமானியவிதிக்கு மாறுக அம்மனுவே கூறினர். మనుః॥ "గురుపత్నీతుయువతిర్నాభివాద్యేహపాదయోః। పూర్ణవింశతివర్షేణ గుణదోషౌవిజానతా। అభ్యంజనంస్నాపనంచ గాత్రోత్సాదనమేవచ। గురుపత్న్యానకార్యాణి కేశానాంచప్రసాధనం" = இருபது வருட முடையவனுய்க் குண தோஷங்களையறிந்த ஆண்மகன், யௌவனப் பருவமுடைய குருபன்னிக்குப்பாதத்தைத் தொட்டு அபிவாதனஞ் செய்யலாகாது. யௌவனமுடைய குரு மனைவியும், இளமைப் பருவமுடைய மாணுக்கர்க்கு எண்ணெ யிடுதல், நீர்விடுதல், உடம்பினைத் தேய்த்தல், தலைமயிர் வகிர்தல் முதலியவற்றினைச் செய்யலாகாது. எ-று. காண்க.

பிறவெனின் அம்மனு கூறினர். మనుః॥ "కామంతుగురుపత్నీనాంయువతీనాంయువాభువి। విధివద్వందనంకుర్యాదసావహమితిబ్రువన్। విప్రోష్యపాదగ్రహణమన్వహంచాభివాదనం। గురుదారేషుకుర్వీత సతాంధర్మమనుస్మరన్" = குமாரப் பருவமுடையவன், யௌவன முடைய குருபன்னியர்க்குமிகவும் பத்தியோடும் நான் இன்னவன் என்று கூறிக்கொண்டே விதிப்படி தூரத்திருந்து வந்தனஞ் செய்யவேண்டும். யாத்திரை சென்

றுவரும்போது மாத்திரம் பாதத்தைத்தொட்டு அபிவாதனஞ் செய்க. அங்ஙனம் நாடோறும் செய்யலாகாது. எனவே தொடாமலே அபிவாதனத்தை மாத்திரம் நித்தமும் செய்யவேண்டுமென்க. தருமங்களைத்தான் அடையவிரும்பியேநல்லோன் குருமனைவியர் விடயத்தி லிவ்வாறு நடந்துகொள்ள வேண்டுவது. எ-று. காண்க.

## அபிவாதனஞ் செய்யலாகாதவன், செய்யப்படாதவன்.

அபிவாதனஞ் செய்வதில் விலக்கத்தக்கவரை ஆபத்தம்பர் கூறினர். ఆపస్తంబః॥ "నసోపానద్వేష్టితశిరా వహితపాణిర్వాభి వాదయీత"= காலில் பாதரக்ஷை பூண்டவனும், தலைமேல் ஆடைசுற்றியவனும், வேற்றுத் தொழில்பூண்ட கையுடையவனும், அபிவாதனஞ்செய்யலாகாது. எ-று. காண்க.

சங்கர். శంఖః॥ "నోదకుంభహస్తోభి వాదయేన్నభైక్షం చరన్నపుష్పహస్తో నా శుచిర్నజపన్నదేవపిత్ర్యకార్యం కుర్వన్న'శయానః" = நீர்க்கரகம் பற்றினவன், பிக்ஷாந்நத்தோடு செல்வோன், பூக்களைக் கையிற்கொண்டவன், அசுத்தமாயுள்ளவன், செபஞ்செய்து கொண்டிருப்பவன், தேவகாரியம் பிதிர்காரியம் செய்பவன், படுத்திருப்பவன், இவர்களெல்லாம் அபிவாதனஞ்செய்யப்படாதவர்களாம். எறு. காண்க.

ஆபத்தம்பர். ఆపస్తంబః॥ "తథాఽసమగతాయ గురవేనాభివాద్యంతథా ప్రయతాయాప్రయతశ్చన ప్రత్యభివదేత్త్వతి వయస్స్త్రియః" = ஒத்த நிலைமையில்லாத ஆசிரியனுக்கு அபிவாதனஞ் செய்யலாகாது. சரியான நிலைமையி லில்லாதவனுக்கு அவ்வாறுள்ளவன் அபிவாதனஞ் செய்யலாகாது. தன்னோடொத்த வயதினையுடைய மாதர்கட்கும் அபிவாதனஞ்செய்யலாகாது. எறு. காண்க.

அவ்வாறே வேறோரிடத்து மவர் கூறியவாறு. ఆపస్తంబః॥ "సమిత్పుష్పకుశాజ్యాంబు మృదన్నాక్షతపాణికః। జపంహోమంచకుర్వాణో నాభివాద్యస్సదాద్విజః। పాషండంపతితంవా వ్రాత్యం మహాపాతకినంశఠం। నాస్తికంచకృతఘ్నంచ నాభివాద్యాత్కథంచన। ధావంతంచప్రమత్తంచ మూత్రోచ్చారకృతంతథా। భుంజానమాతురంనార్త్వం నాభివాద్యాద్విజోత్తమః। వమంతంజృంభమాణంచ కుర్వంతందంతధావనం। అభ్యక్తశిరసంచైవ స్నాస్యంతంనాభివాదయేత్। స్రుక్పాణికమఃజ్ఞాత మశ

క్రుద్ధమ్మాతురం। యోగిసంచతపస్సక్తం కనిష్ఠంనాభివాదయేత్" = சமித்து, பூ, தருப்பை, நெய், நீர், மிருத்திகை, அன்னம், அக்ஷதை, கையிற் பற்றியுள்ளவனுக்கும், செபம், ஹோமம் செய்பவனுக்கும், அவ்வாறிருக்கும் இருபிறப்பாளர் அபிவாதனஞ் செய்யலாகாது. பாசண்டர், பதிதர், விராத்தியர் = கருமங்கெட்டவர், மஹாபாதகஞ்செய்தவன், சடர் = தயவில்லாதவுலோபர், நாஸ்திகர்= கடவுளில்லையென்பவர், இப்படிப்பட்டவர்களை எவ்வகையானும் அபிவாதனஞ் செய்யலாகாது. ஓடுகின்றவனுக்கும், மயங்கியவனுக்கும், மலமூத்திரங்களைக் கழித்திருப்பவனுக்கும், புசித்துக்கொண்டிருப்பவனுக்கும், தீவரப்படுவோனுக்கும், தக்கநிலைமையிலில்லாதவனுக்கும், வாந்தியெடுப்பவனுக்கும், கொட்டாவி விடுவோனுக்கும், பல்விளக்குவோனுக்கும், தலைமே லெண்ணெயிட்டுக்கொண்டிருப்பவனுக்கும், நீராடுவோனுக்கும், சிருக்கு என்னும் ஹோமஞ்செய் கருவியைப் பிடித்துள்ளவனுக்கும் தானறியாதவனுக்கும், சத்தியற்றவனுக்கும், பகையாளிக்கும், நோயாளிக்கும், யோகநிட்டையி லிருப்பவனுக்கும், தவத்தில் விருப்பமுடையோனுக்கும், தனக்கிளையோனுக்கும் அபிவாதனஞ் செய்யலாகாது. எ-று. காண்க.

சாதாதபர். శాతాతపః॥ "ఉదక్యాంసూతికాంనారీం భర్తృఘ్నీంగర్భఘాతినీం। అభివాద్యద్విజోమోహాత్ దశరాత్రేణశుధ్యతి" = கைவிலக்கமானவளுக்கும், மகப்பெற்றுள்ளவளுக்கும், கணவனைக் கொன்றவளுக்கும் = (எனவே. விதவை, அல்லது கணவனுக்கு அவமானம் விளைவிப்பவள் என்பதுகருத்து). கருவை யழிப்பவளுக்கும், இருபிறப்பாளன் அறியாமல் அபிவாதனஞ் செய்தால், ஒருபகலு மோரிரவும் புறம்பேகிடந்து பின்புசுத்தத்தை யடைகின்றான். எ-று. காண்க.

## குரவனியல்பு.

குரவனுக்குப் பாதத்தைத் தொட்டு அபிவாதனஞ் செய்ய வேண்டுமெனக் கூறியுள்ளதன்றோ? இனி அக்குரவனாவான் யார் எனில்? மனு கூறுகின்றனர். మనుః॥ "నిషేకాదీనికర్మాణి యఃకరోతియథావిధి। సంభావయతిచాన్నేన సవిప్రోగురురుచ్యతే" = நிஷேகமுதலிய கருமங்களை விதிப்படி யார் செய்கின்றாரோ? அன்னத்தால் போஷிக்

கின்ருனே ? அந்தவேதியன் குருவென்று துதிக்கப் படுகின்ருன். எ-று. காண்க.

யாஞ்ஞுவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "సంస్కర్తా క్రియాః కృత్వా వేదమస్మై ప్రయచ్ఛతి" = யார் ! சமஸ்கார கருமங்களைச்செய்து வேதத்தை யொருவனுக்குக் கொடுக்கின்ருனே ? அவன் குருவாவன். எ-று. காண்க.

வேதத்தைக் கொடுத்தல் எனவே அத்தியயனஞ் செய்வித்தலாம். இந்த அதிகாரம் வேதியன் ஒருவனுக்கே யுண்டா யிருக்கின்றது. நிஷேகமுதலிய ஸமஸ்கார கருமங்களைச் செய்தலுக்கு அதிகாரம் எல்லாவருணத்தார்க்கும் பொதுவாகவேயிருக்கின்றது.

நிஷேகமுதலியவற்றைச் செய்யுந் தலைவனுகிய தந்தையினும் வேருனவர்களைக் குருஎன்பது உபசாரவழக்காக விருக்கின்றது. இங்ஙனம் உபசாரவழக்காகிய குருத்தன்மை மனு முதலியோர் கூறினர்.

மனு. మనుః॥ "అల్పం వా బహు వా యస్య శ్రుతస్యోపకరోతి యః। తమపీహ గురుం విద్యా చ్ఛ్రుతోపక్రియయా తయా" = யார் சிறிதேயாயினும் பெரிதே யாயினும் வேதமுதலிய வித்தையைப் பழக்குவித்தலா லுபகரிக்கின்ருனே? அவனையு மீண்டு குருவெனவுணர்க. இல்லையேல் வேதமுதலியவற்றை யோதுவித்தலே யோருபகாரமா மாதலின், அதனைச் செய்விப்போனுங் குருவெனக்கொள்க. எ-று.

## குரவராவார்.

ஹாரீதர். హారీతః॥ "ఉపాధ్యాయః పితా జ్యేష్ఠో భ్రాతా చైవ మహీపతిః। మాతులః శ్వశురస్త్రాతా మాతామహ పితామహౌ। వర్ణజ్యేష్ఠః పితృవ్యశ్చ పుంస్యేతే గురవః స్మృతాః" = ஓதுவித்தவன், ஈன்றதந்தை, மூத்தசகோதரன், அரசன், அம்மான், மகட்கொடைநேர்ந்தவன், ஆபத்துக்குதவிக்காத்தவன், அன்னையை யீன்றபாட்டன், அத்தனை யீன்றபேரன், சாதியின் மூத்தோனுகிப் பிதாவோடு பிறந்தவன், இவரனைவரும் ஆண்பாற் குரவரென்ன மிருதிகளாற் கூறப்பட்டனர். எ-று. காண்க. பேரன்=பேருக்குரியவன். பாட்டன் என்றபடி.

இதுவுமது. " మాతామాతామహీగుర్వీ పితుర్మాతుశ్చసోదరాః। శ్వశ్రూః పితామహీజ్యేష్ఠా ధాత్రీచగురువత్ స్త్రియః" = அன்னை, அவளையீன்றவள், குலத்துள் வயதுமுதிர்ந்த விருத்தை, தந்தையோடு பிறந்தோள், தாயோடு பிறந்தோள், மனைவியின் தாய், தந்தையைப் பயந்தோள், தனக்குமுன்பிறந்தோள், செவிலி, இப்பெண்பாலனைவரும் குரவரோடொப்பர். எ-று. காண்க.

இங்ஙனம் கூறியதனாற் போந்தபயன் யாதெனில்? எவ்விடத்துத் தாய்தந்தையெனக் கொள்ளப்படுகின்றனரோ? அவ்விடத்தெல்லாம் அவரோடொப்ப இங்கு குறிக்கப்பட்டா ரனைவரும் பூசிக்கப்படுவோர், என்றுணரக் கிடத்தல் என்க. அதனானே அவ்வாரீதர் கூறியவாறு. హారీతః॥ "అనువర్తనమేతేషాంమనోవాక్కాయకర్మభిః" மனம், வாக்கு, காயம், என்னும் இம்மூன்று கருவியாலும் செய்யப்படும் தொழிலொப்புமையா லிவர்களைத் தொடர்ந்து பற்றி நிற்றல் வேண்டும். எ-று. காண்க. எனவே பூசிக்க வேண்டுமென்றவாறு.

வியாசர் వ్యాసః॥ "మాతామహోమాతులశ్చ పితృవ్యశ్శ్వశురోగురుః। పూర్వజస్స్నాతకశ్చర్త్విజ్ జ్ఞాన్యాశ్చగురువత్సదా। మాతృష్వసామాతులానీశ్వశ్రూర్ధాత్రీపితృష్వసా। మాతామహీపితృవ్యస్త్రీ గురుస్త్రీమాతృవచ్చరేత్" = அன்னையையீன்றோன், அம்மான், தந்தையுடன் பிறந்தோன், மகட்கொடைநேர்ந்தோன், குரவன், மூத்த சகோதரன், ஸ்நாதகனென இருத்துவிக்கு, இவ்வாண்பாலனைவருங் குருவைப்போலும் பூசிக்கத் தக்கவராம். தாயோடு பிறந்தவள், அம்மான்மனைவி, மனைவியின் தாய், செவிலி = வளர்த்தவள், தந்தையோடு பிறந்தவள், தாய்க்குத்தாய், தந்தையுடன் பிறந்தோர் மனைவி, குருமனைவி, இப்பெண்பாலா ரனைவரிடத்தும் தாயைப்போலும் உபசரித்தலைச் செய்க. எ-று. காண்க.

## அவருள்ஏற்றத் தாழ்ச்சிமுறை.

மனு. మనుః॥ "పితుర్భగిన్యాంమాతుశ్చజ్యాయస్యాంచస్వసర్యపి। మాతృవద్వృత్తిమాతిష్ఠేన్మాతాతాభ్యోగరీయసీ। ఉపాధ్యాయాన్దశాచార్య ఆచార్యాణాంశతం పితా। సహస్రంతుపితుర్మాతా గౌరవేణాతిరిచ్యతే" = தந்தையோடு பிறந்தவள், தாயோடு பிறந்தவள், தனக்குமுன் பிறந்தவள், இவர்களி

டத்தில் தாயோடொத்த உபசாரஞ்செய்க. உபசரிக்குமிடத்தில் யாரினும் தாயே சிறந்தவள். உபாத்தியாயரினும், ஆசிரியன் பதின்மடங்கு சிறந்தோன். அவ்வாசிரியனிலுந் தந்தை நூறு மடங்கு சிறந்தோன். தந்தையினுந் தாய் ஆயிரமடங்கு சிறந்தோள். எ-று. காண்க. உபாத்தியாயன் = வேதமோதுவித்தவன். ஆசிரியன் = மந்திரோபதேசஞ் செய்தவன்.

அற்றேல் புராணமதத்துள், தாயினுந் தந்தையே சிறந்தோனெனக் கூறப்பட்டது. என்னை? "ద్వౌగురూపురుషస్యేహ పితామాతాచధర్మతః। పితాగురుతరస్తత్ర మాతాగురుతరాతథా। తయోరపిపితాశ్రేయాన్ బీజప్రాధాన్యదర్శనాత్। అభావేబీజినోమాతా తదభావేతుపూర్వజః" = இவ்வுலகத்துள் ஆண்மகனுக்குக் குரவராவாரிருவர், தந்தை,தாயென. அவருள். தரும விரகசியத்தை விசாரிக்குமிடத்து, தந்தையே சிறந்தோன் எனவும், அவ்வாறே தாய் சிறந்தோ ளெனவும் இருவகையும் வெளிப்படுகின்றது. ஆயினும், வித்து, நிலம் என்னும் இவ்விரண்டனுள் நிலத்தினும் வித்தே தலைமையதாகக் காட்சியளவையாற் காணப்பட்டு வருதலின், அவ்வன்னை தந்தை யிருவருள் தந்தையே சிறந்தவன். வித்து அளித்ததந்தை யில்லாவழித் தாயே சிறந்தோள். இவ்விருவரு மில்லாவழி மூத்த சகோதரனே சிறந்தவன். எ-று. என்பதே யெனில்?

இப்புராண கூற்று நிஷேகமுதலிய சமஸ்காரங்களையுஞ் செய்து, ஓதுவித்தலும் செய்ததந்தையைக் குறித்த வாறெனக் கொள்ளவேண்டும. அங்ஙன மல்லாக்கால், "మాతైవగరీయసీ" = தாயே சிறந்தவள், என்ற கூற்றுக்கு மாறுகொள்ளலாம். அதனானேதாயின் மேன்மையை வியாசர் விரித்துக் கூறினர். వ్యాసః॥ "మాసాన్దశోదరస్థంయాధృత్వాశూలైస్సమాకులా। వేదనావివిధైర్దుఃఖైః ప్రసూతాచవిమూర్ఛితా। ప్రాణైరపిప్రియాన్పుత్రాన్ మన్యతే సుతవత్సలా। కస్తస్యానిష్కృతింకర్తుం శక్తోవర్షశతైరపి" = பத்துத் திங்களும் தாங்கிச் சுமந்து, வயிற்றுளைச்சலால் வயாவுற்று, பலதுன்பங்களாலும் வருந்திப்பெறும் வேதனையை யனுபவித்து மூர்ச்சித்துமகப்பெற்று, மக்களின்மீது பேரன்போடு தன்னுயிரினும் சிறந்ததாகவெண்ணி அம்மக்களைக் காக்கின்றனளே! ஐயோ! இத்துணை யுபகாரஞ்செய்த அன்னைக்கு மகன் தான் பிழைத்திருக்கும் நூறுவயதளவிலும் வருந்தி

யுபசரித்தாலும் கைம்மாறு செய்யவல்லவனே? ஒருவனுஞ் செய்யலாற்றான். எ - று. வயா = கருநோய்வருத்தம். கைம் மாறு = பிரதியுபகாரம்.

## இனி உபாத்தியாயர் இலக்கணம்.

மேற்கூறப்பட்ட உபாத்தியாயராவார் யாரெனில்? மனுகூறி னர். మనుః॥ "ఏకదేశంతువేదస్య వేదాంగాన్యథవాపునః। యోధ్యాపయతివృత్త్యర్థ ముపాధ్యాయస్సఉచ్యతే" = வேதத்துள் ளொருபாதியை யேனும் வேதவுறுப்புக்களாகிய சாத்திரங்களை யேனும் தன் ஜீவனத்தின் பொருட்டு யாவன்? ஓதுவித்தனனே? அவனே யுபாத்தியாயன். எ—று. காண்க.

## ஆசிரியனிலக்கணம்.

இதுவுமது. "ఉపనీయతుయశ్శిష్యం వేదమధ్యాపయేద్ద్విజః। సకల్పంసరహస్యంచ తమాచార్యంప్రచక్షతే" = யார் சிடனுக்கு உபநயனஞ் செய்து வேத முழுவதையும், அதன் உபயோகத்தை விதிக்குஞ் சூத்தி ரங்களையும், அதன் இரகசியம் = மறை பொருளையும் ஓதுவித்து உபயோகிக்கின்றானே? அவனை ஆசிரியனெனப் பெரியர் கூறுகின் றனர். எ—று. காண்க.

அன்னை தந்தையினும் ஆசிரியன் சிறந்தோனே யென அம் மனுவே கூறினர். మనుః॥ "ఉత్పాదకబ్రహ్మదాత్రోర్గరీయాన్బ్రహ్మదఃపితా। బ్రహ్మజన్మహివిప్రస్య ప్రేత్యచేహచశాశ్వతం" = தன்னைப் பெற்றவன் ஒருவன், வேதமந்திரங்களைக் கொடுத்தோ னொருவன், இவ்விருவருள் பிர மத்தைக் கொடுத்தவனே பிதாவாம். வேதியனுக்கு அப்பிராம ணப் பிறப்பேயன்றோ? மறுமையினும் இம்மையினும் அழிவற் றதாயுள்ளது. எ-று. காண்க. பிரமம் = வேதவுணர்ச்சி. விப் பிரன் = வேதியர்குலத்துட் பிறந்தவன்.

## குரவன்வயதின்றரம்.

யார் சிறியவனே யாயினும், விருத்தனுக்கும் ஓதுவிக்கின் றானே? அவனும் அவனுக்கு உயர்ந்தவனே என்று அம்மனுவே கூறினர். మనుః॥ "బాలోపివిప్రోవృద్ధస్య పితాభవతిమంత్రదః। అధ్యాపయామాస పితౄన్ శిశురాంగిరసఃకవిః। పుత్రకాఇతిహోవాచ జ్ఞానేనపరిగృహ్యతాన్। తేతమర్థమ

పృచ్ఛంత తేచానుగతమన్వవః। దేవాశ్చైతాంత్సమేత్యోచు ర్న్యాయ్యంవశ్శిశురుక్తవాన్। అజ్ఞోభవతివైబాలః పితాభవతిమంత్రదః। అజ్ఞంహిబాలమిత్యాహుః పితేత్యేవచమంత్రదం। నహాయనైర్నపలితైర్నవిత్తైర్నచబంధుభిః। ఋషయశ్చక్రిరేధర్మం యోనూచానస్సనోమహాన్ " = மந்திரத்தைக் கொடுத்த வேதியன் இளையமகனேயாயினும் விருத்தனுக்குந் தந்தையே யாகின்றான். பண்டிதராகிய ஆங்கீரசர் பிதிரருக்கு வேதமோதுவித்தனர். ஞானத்தாலவர்களைப்பற்றி "ஓ! மக்களே! என்று விளித்தனர் = அழைத்தனர். அப்போது அப்பிதிரர் கோவமடைந்தவராய்ச் சபைகூடி இச்சிறுவன் இங்ஙனம் அழைத்தன்முறையோ வெனத் தேவர்களை வினவினர். தேவர்கள்கூறியதாவது இச்சிறுவன் நுமக்குநியாயமே கூறினர். உணராதோனே பாலன் என்பது யாருமுணர்ந்தபடி. மந்திரத்தை யளித்தோனே தந்தையாவன் என்றுணர்க. ஆதலிற் பெரியர், தெரியாதோனைச் சிறியவனாகவும், மந்திரத்தைக் கொடுத்தவனைப்பிதாவாகவும் கூறுகின்றனர். வருடங்களாகிய காலத்தாலும், நரையுண்டாதலாலும், செல்வப் பொருளாலும், சுற்றத்தன்மை யுடைமையாலும், அந்தப் பெருந் தன்மை யுண்டாவதில்லை. இருடிகள் எந்தத்தருமத்தை யனுட்டித்தனர்களோ? அதுவே பரிசுத்தமாகிய குரவன் குலமரபாக வருகின்றது. அதுவே யெமக்குஞ் சிறந்தவுடன்பாடாக விருக்கின்றது. எ-று. காண்க.

அவ்வாறே விஷ்ணுவுங் கூறினர். విష్ణుః॥ " బాలేసమానవయసి హ్యధ్యాపకేగురువద్వర్తితవ్యం " = பாலனேயாக, தன்னேடொத்த வயதினை யுடையவனேயாக, தனக்கு ஓதுவித்தன் மட்டில் குரவனிடத்தி லொழுகியவாறு ஒழுகுதல் வேண்டும். எ-று. காண்க.

## மூத்தசகோதரன் விடயம்.

மூத்தசகோதரன் விடயத்திலும் குரவனிடத்திலொழுகியவாறு ஒழுகுதல் வேண்டும் என்று புராணசாரத்துட் கூறப்பட்டது. పురాణసారే॥ "జ్యేష్ఠభ్రాతాపితృసమో మృతేపితరిభూసురాః। కనిష్ఠాస్తంనమస్కారం త్యక్త్వానందానువర్తినః। తమేవచోపజీవేర న్యథైవపితరంతథా " = ஓ! வேதியரோ! தருமவிரகசியத்தைக் கேட்பீர்களாக. ஒருவனுக்குத் தந்தையிறந்தபின் அந்தத் தந்தையைப் பூசிக்கத் தக்க விடத்தில்

மூத்த சகோதரன் வருகின்றுன். இளையோராயுள்ளவர்கள் மூத்தோன் கருத்தின்வழி நடப்போராய்நமஸ்காரஞ்செய்துகொண்டு தந்தையினிடத்தில் எவ்வாறு தற்சுதந்தர மில்லாமல் ஆணையின் வழிநடந்து வந்தனரோ? அவ்வாறே ஒழுகிவரவேண்டும். எ-று. காண்க.

## சகோதரர்ஒழுக்கம்.

மனு. మనుః॥ "పితృవత్పాలయేత్పుత్రా జ్జ్యేష్ఠభ్రాతౄన్కనీయసః। పుత్రవచ్చాపివర్తేర న్యథైవపితరంతథా" = தந்தை மக்களைப் புரப்பது = காப்பது, போலும் மூத்தவன் இளையோரைப் புரக்கவேண்டும். மக்கள் தந்தையரிடத்து ஒழுகியவாறு இளையோர் மூத்தோனிடத்தும் ஒழுகுதல் செய்யவேண்டும். எ-று. காண்க.

## பரமாசிரியன் விடயம்.

பரமாசிரியன் விடயமும் அவ்வாறேயென அம்மனுவே கூறியுள்ளனர். మనుః॥ "గురోర్గురౌసన్నిహితే గురువద్వృత్తిమాచరేత్" = தன்னாசிரியனுடைய ஆசிரியனே பரமாசிரியன் என்னப்படுவன். அவனருகிருக்கும் காலத்துத் தான் குரவனிடத்து ஒழுகியவாறு அவரிடத்தும் ஒழுகுதல்செய்க. எறு காண்க.

## ஆசிரியன் முன் ஏனையர் விடயம்.

ஆசிரியன் ஆணையின்றி அம்மான் முதலிய குரவர்கட்குச் சமாவர்த்தன முற்றுதவன் அபிவாதனஞ் செய்யலாகாது என மனுகூறினர். మనుః॥ "నచానిసృష్టోగురుణా స్వాన్గురూనభివాదయేత్"=ஆசிரியன் ஆணைபெறுதவன் தன்னுடைய ஏனயகுரவர்க்கு அபிவாதனஞ் செய்யலாகாது. எறு. காண்க. ஏனய குரவராவார். தமையன், அம்மான் முதலியோர்.

சமாவர்த்தன முடித்தவன் அவ்வாசிரியன் சம்மதத்தைப் பெறவேண்டுமென்னும் நிர்ப்பந்தமில்லையென ஆபத்தம்பர் கூறினர். ఆపస్తంబః॥ "సమావృత్తేనగురవ స్సర్వేఉపసంగ్రాహ్యాః ప్రోష్యచసమాగమే"= சமாவர்த்தனத்தை முடித்தவன் பிரயாணம் போகும்போதும் போய் வரும்போதும் தன் குரவரனைவர்க்கும் பாதாபிவாதனஞ் செய்யவேண்டும். எறு. காண்க. சமாவர்த்தனம். எது. ஆசிரி

யன் மனையின்கணிருந்து விதிப்படி செய்யப்படும் வேதாத்தியயனத்தை முடித்துச் சாந்திசெய்துவிடுதல். பாதாபி வாதனம்= பாதத்தைத் தொட்டு வந்தனஞ்செய்தல்.

ஆசிரியனும் பரமாசிரியனும் ஏககாலத்தி லோரிடத்துள்ள வழிச்செய்யத்தக்கன வற்றை ஆபத்தம்பர் கூறினர். ఆపస్తంబః॥ "ఆచార్యప్రాచార్య సన్నిధానె ప్రాచార్యముపసంగృహ్య చార్యముపసంజిఘృక్షేత్" ஆசிரியன் அவராசிரியன் என்னு மிவ்விருதிறத்தரும் ஒருகாலத்தோரிடத்துக் கூடியவழிப் பரமாசிரியனை வணங்கிய பின்னரோ தன்னாசிரியனை வணங்குதல்செய்க. எறு. காண்க.

## அபிவாதனச்சிறப்பு.

அபிவாதன கருமத்தின் சிறப்பினை மனுகூறினர். మనుః॥ "అభివాదనశీలస్య నిత్యంవృద్ధోపసేవినః। చత్వారితస్యవర్ధంతె ఆయుర్ప్రజ్ఞాయశోబలం" நாடோறும் அபிவாதனஞ்செய்யும் இயல்புடையோனைப் பெரியோர்களை வழிபடுவோனுக்குத் தீர்க்காயுள், ஞானம், புகழ், வலிமை இந்நான்கும் வளர்கின்றன. எறு. காண்க.

அபிவாதனமும் முதற்காலகருமமு முற்றிற்று.

---

# வேதாப்பியாசகால நிண்ணயம்.

ஒரு பகலின் எட்டுப்பாகத்துள். இரண்டாம் பாகத்தில் செய்யத்தக்க கருமங் கூறப்படுகின்றது. దక్షః॥ "ద్వితీయెతుతథాభాగె వెదాభ్యాసొవిధీయతె" = அவ்வாறே இரண்டாங்காலத்துள் வேதாப்பியாசம் விதிக்கப்படுகின்றது. எறு. காண்க.

கூர்மபுராணம். కూర్మపురాణె॥ "వెదాభ్యాసంతతఃకుర్యా త్ప్రయత్నాచ్ఛక్తితోద్విజః। జపెదధ్యాపయెచ్ఛిష్యా న్ధారయెద్వైవిచారయెత్। అవెక్షేతచశాస్త్రాణిధర్మాదీంశ్చద్విజోత్తమః" = இருபிறப்பாளன் யாமத்திற்குப் பின்னர் ஊக்கத்தோடு முயற்சித்தும் வேதாப்பியாசம் செய்யவேண்டுவது. அத்தியயனம்செய்த வேதத்தைச் செபபாராயணங்களாற் சித்திசெய்து கொள்ளவேண்டும். மாணாக்கரை யோதுவித்தல்

வேண்டும். மறவாது ஞாபகத்தில் வைத்துச் சிந்தித்திருத்தல் வேண்டும். சுரம், இலக்கணம், அருத்தம், உய்க்குமிடமுதலிய வற்றை விசாரித்தல் வேண்டும். மற்றும் வேண்டுவனவாகிய தருமநூல் முதலியவற்றினை விருப்பத்தோடும் தேடிக்கொள்ள வேண்டும். இங்ஙனம் செய்வோன் இருபிறப்பாளருள் ளுயர்ந் தோன் எனப்படுவன். எ-று. காண்க. சுரம்=பண்.

## வேதாப்பியாசத்தின்சிறப்பு.

வேதமோதுதலை மனு சிறப்பிக்கின்றனர். మనుః॥ "వెదమెవ సమభ్యస్యె త్తపస్తప్స్యాద్విజో త్తమః। వెదాభ్యాసొహివిప్రస్య తపఃపరమిహొచ్యతె। ఋషిదెవమనుష్యాణాం వెదశ్చక్షుస్సనాతనం"=வேதியருள் ளுயர்ந்தவன் தவஞ் செய்தும் வேதத்தையே அப்பியசிக்கவேண்டும். இருபிறப்பாள னுக்கு வேதாப்பியாசமன்றோ? சிறந்த தவமெனக் கூறப்படுகின் றது. இருடிகட்கும், தேவர்கட்கும், மக்களுக்கும் வேதமே அழிவற்றகண்ணாக விருக்கின்றது. எ-று. காண்க.

வியாசர். వ్యాసః॥ "నాన్యోజ్ఞాపయతేధర్మం వెదాదెవైషనిర్బభౌ। తస్మాత్సర్వ ప్రయత్నేన ధర్మార్థంవెదమాశ్రయేత్" = வேறுயுள்ள மற்றெல்லாமும் தருமத்தை யுணர்த்தமாட்டாது. இத்தருமம் வேதமொன்றனு லேயே யேற்பட்ட தாமாதலின், எல்லாமுயற்சியாலும் தருமத் தின்பொருட்டு வேதத்தை இறுகப்பற்றவேண்டும். எ-று. காண்க.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "యజ్ఞానాంతపసాంచైవ శుభానాం చైవకర్మణాం। వెదఏవద్విజాతీనాం నిశ్శ్రేయసకరఃపరః" = வேள்விகட்கும், தவத்திற்கும், எனைய நல்ல கருமங்கட்கும், சுவர்க்கம் வீடுபேற் றிற்கும், வேதமொன்றே யிருபிறப்பாளர்க்குச் சிறந்தகருவி. எ-று. காண்க.

## வேதமுணராதோனிழிவு.

வேதமுணராதவனுடைய எல்லாத்தொழிலும் பயனற்ற தாகின்றன வென மனு கூறினர். మనుః॥ "యథాషణ్ఢోఫలః స్త్రీషు యథా గౌర్గవిచాఫలా। యథాచాజ్ఞేఫలందానం తథావిప్రోనృచోఫలః" =பேடி மாதர் பாலெவ்வாறு பயனடைவதில்லையோ? விதையடித்த எருத்துமா டுபசுக்களினிடத்து எவ்வாறு பயனற்றதாமோ? தானம் மூடனி

டத்து எவ்வாறு பயனற்றுவிடுமோ? அவ்வாறே வேத முணராத விப்பிரனும் பயனற்றவனுவன். எ-று. காண்க.

கௌதமர். గౌతమః॥ "అనధీత్యద్విజో వేదా న్యోన్యత్రకురుతెశ్రమం। సజీవన్నేవశూద్రత్వ మాశుగచ్ఛతిసాన్వయః। వేదానామప్యనభ్యాసా దాచారస్యచలంఘనాత్। అనృతాదన్నదోషాచ్చ విప్రంమృత్యుర్జిఘాంసతి" = யார்வேதத்தை யோதாமலே வேறுவித்தைக்காக முயற்சி செய்கின்றனோ? அவன் தன்சந்ததியோடு பிழைத்திருக்கும்போதே சூத்திர னுகின்றன் வேதமோதாமலே விட்டொழிதல், சிட்டராயுள்ளோர் ஒழுக்கத்தைக்கடந்து நடத்தல், நெடுநீர்மை = காலதாமசம், பொய் கூறுதல், குற்றமுடைய அந்நத்தைப் புசித்தல், இவ்வகைக் குற்றங்களையுடைய வேதியனை மிருத்திய தெய்வம்=மரணதேவதை பாதிவயதினுள்ளே தானேகொன்றுவிட விரும்புகின்றது. எ-று. காண்க. "ఆలస్యాదన్నదోషాచ్చ" என்பதும் பாடம். இதுசில பிரதிகளில் கைசோர்ந் திருக்கின்றது.

இன்னும் அந்தப்பகுதியில் எனவே மூன்றேமுக்கால் நாழிகைக்குமேல் ஏழரை நாழிகையினுள் செய்யத்தக்கவேறுதொழிலினையும்தக்ஷர்கூறினர். దక్షః॥ "సమిత్పుష్పకుశాదీనాం సకాలస్సముదాహృతః" = ஹோமத்திற்கு வேண்டும் சமித்து = விறகும், பூசைக்குரிய பூக்களும், கருமங்களுக்கு இன்றியமையாத தருப்பையும், ஆதியென்றதனுல் திருமஞ்சனநீர், சுத்தமாகிய ஆடை, முதலியவற்றையுந் திருத்திவைத்துக் கொள்ளுவதற்கும் அதுவே காலமென்று விதிக்கப்பட்டது. எ-று. காண்க. இரண்டாம் பாகத்திற் செய்யுந்தொழின்முற்றியது. இனி மூன்றுங்காலம்வருமாறு.

## பொருள்செய்யும் வகை.

இனி மூன்றுங்காலப்பகுதியுட் செய்யத்தக்கன வருமாறு "తృతీయేచతథాభాగే పోష్యవర్గార్థసాధనం" = மூன்றுவது காலப்பகுதியுள் அவ்வாறே தன்னுற் பாதுகாக்கத்தக்க சீவர்களின் பொருட்டு உபகரிக்க வேண்டுவனவாகிய பொருளைத் தேடுதல். எ-று. காண்க.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ "ఉపేయాదీశ్వరంచాథ యోగక్షేమార్థసిద్ధయే। సాధయేద్వివిధానర్థా న్కుటుంబార్థంతతోద్విజః" = பின்னர் இரு

பிறப்பாளன் தன்னுடைய யோகக்ஷேமங்களுக்கும் வேண்டுவனவாகிய பொருட்பயனை யடையும்படி உலகநாதனாகிய பரமேச்சுரனை யடையவேண்டுவது. தன் குடும்பத்தினை காக்கும் பொருட்டு அப்பரமேச்சுரனால் பலபொருட் பேற்றினையும் பெற வேண்டுவது. எ-று. காண்க. யோகம். எ-து. இருக்கும் நிலைமைக்குச் சிறந்தநிலைமை. க்ஷேமம். எ-து. உள்ளன வாகிய சிறப்பினுக்குக் குறைவில்லாமை. அருத்தம். எ-து. பயன், சந்தோடம், திருத்தியுமாம். குடும்பம். எ-து, தன்னாலோம்பப்படுவோர். ஈசுவரன் = எல்லாமுடையவன்.

பகவற்கீதை. శ్రీకృష్ణః॥ "ఈశ్వరస్సర్వభూతానాం హృద్దేశేర్జునతిష్ఠతి। భ్రామయంత్సర్వభూతానియంత్రారూఢానిమాయయా। తమేవశరణంగచ్ఛసర్వభావేనభారత" ஓ? அருச்சுனா? எல்லா ஆன்மக்களினுள்ளத்திலும் பரமேச்சுரனிருக்கின்றான், தன்னுடைய மாயைச் சக்கரத்துள் எல்லா வுயிர்களையும் சுழற்றுகின்றனர். எல்லா வகையாலும் அவனே காப்போன் என்று அவனை யடைக. என்று கண்ணனுங்கூறினர்.

இதுவுமது. "అనన్యాశ్చింతయంతోమాం యేజనాఃపర్యుపాసతే। తేషాంనిత్యాభియుక్తానాం యోగక్షేమంవహామ్యహం"=யார் வேறுவகை யில்லாதவரா யெம்மைத் தியானித்து உபாசிக்கின்றார்களோ? அப்படிப்பட்ட அழிவற்ற தியானவொழுக்க முடையவர்களின் யோகக்ஷேமங்களை நடத்துவிக்கும்பாரத்தை யாம் சுமக்கின்றாம் என்று அதே கண்ணன் அருச்சுனற்கு உபதேசித்தலால் அப்பரமேச்சுரனே தானென்றுணர்த்தினர். குருமுகமாதலின்.

இதுவுமது. "యద్యద్విభూతిమత్సత్త్వంశ్రీమదూర్జితమేవవా। తత్తదేవావగచ్ఛత్వం మమతేజోంశసంభవం"=உலகத்துள் எந்தத்தேகி ஈசுவர னருளுடையதாயும் ஆற்றலுடையதாயும், செல்வமுடையதாயும், ஒளியுடையதாயும், விருத்தி யடைவதாயும் உள்ளதோ? அது என்னொளியினுடைய கூறினாற் பிறந்ததாக நீயுணரக்கடவாய். என்றனர்.

ஸ்காந்தம். స్కాందే॥ "ప్రాణికర్మానురూపంతు ఫలమీశఃప్రయచ్ఛతి। సర్వభూతమయశ్శంభు స్తద్బుద్ధ్యాన్యముపాశ్రయేత్। అస్వాతంత్ర్యేణజీవానాం రక్షకత్వంతు శాంభవేత్। రక్ష్యంతేసర్వజీవాస్తు స్వతంత్రేణశివేనహి" = மக்களா யுள்ளோர் எவ்வகைத்தானதொழில் செய்கிறார்களோ? அதற்குத் தக்க பயனை யெல்லா வுயிருள்ளும் கலந்துநிற்கும் பரமேச்சுரனே. தருகின்றான். ஜீவர்களனைவரும் சுதந்தரமில்லாதவராமாதலின் வினைவயப் பட்டவர்களாய்க் காக்கப்படுவோராகின்றனர். சிவன் சுதந்தரனாய் எல்லாவுயிர்களையும் தன்வடிவாக

வுடையவனாய், நிக்கிரஹம் அநுக்கிரகம் என்னும் ஆற்றலோடு காப்பவனாக விருக்கின்றான். எ-று. இக்கருத்தோடு கடவுளிடத்துத் தன்னிலக்கியத்தைச் செலுத்தி உலகவிவகாரமாக வொருவன் பிறனொருவனை யாசிக்கவேண்டு மென்று கூறியவாறுணர்க.

பாகவதம். భాగవతే॥ "గర్భస్థితాం రక్షతియోహిగర్భే" = தான்தாய்க்கருப்பையினுள் ளிருந்த பொழுது தன்னைக்காத்த கடவுள்யாரோ? அவனே வெளிப்பட்டு வந்தபின்னுங் காப்பவனாகின்றனன். எ-று. காண்க.

சான்றோர்கூற்று. "దైవంమానుషరూపేణప్రత్యక్షమిహవర్తతే। స్వకర్మానురూపతద్ధి ఫలమస్మైప్రయచ్ఛతి" = தெய்வம் மானுடவடிவாகக் காட்சியால் வடிவோடுங் காணப்படுகின்றது. இவன்செய்யும் தொழிலினுக்குத் தக்கபயனை அத்தெய்வமே கொடுக்கின்றது. எ-று. காண்க.

இதுவுமது. దైవస్యస్థాపయిత్వాగ్రే ప్రయత్నంలోకసిద్ధయే" = இவ்வுலககாரியப்பயன் கைகூடும் பொருட்டுக் கடவுளை முன்னிட்டுத் தக்கமுயற்சியைச் செய்தல்வேண்டும். எ-று. காண்க.

இங்ஙனம் எல்லாஞற் கருத்துமா மாதலின் நம்மனைவருக்குங் காக்குந்தலைவன் கடவுளே யாமாகவே கடவுளையே நாமடைதல் வேண்டு மென்பது மேற்கூறிய கூர்மபுராணக் கருத்து என்றுணர்க.

## தன்னாற் காக்கப்படுவோ ராவார்.

யாரைத்தான் பாதுகாத்தலைச் செய்ய வேண்டுவதோ? அவர்களைத் தக்ஷரால் குறிப்பிக்கப்பட்டது. దక్షః॥ "మాతాపితాగురుర్భార్యా ప్రజాదీనస్సమాశ్రితః। అభ్యాగతోఽతిథిశ్చాగ్నిః పోష్యవర్గఉదాహృతః" = அன்னை, தந்தை, குரு, தன்மனைவி, மக்கள், ஒன்றுமில்லாதவேழை, தன்னைநம்பியடுத்தவன், உண்டிவேண்டி வலிதிற் றேடிவந்தோன், அதிதி = விருந்தினன், அக்கினிஎன்னு மிப்பதின்மரையும் ஓம்புதல் செய்க. எ-று. காண்க.

## பொருளீட்டும்வகை.

இங்ஙனம் கூறிய பதின்மரையும் காத்தலின் பொருட்டு வேண்டும் பொருளைத்தனக்குரிய தொழிலானே யீட்டுதல்வேண்டும், என்பதனை "యావత్రామాత్రప్రసిద్ధ్యర్థం స్వైస్స్వైఃకర్మభిరగర్హితైః। అక్లేశేన శరీరస్య కుర్వీతధనసంచయం" = ஜீவனம் நடக்கும் அவ்வளவே வேண்

டும் பொருளினை நிந்திக்கப்படாது தனக்குத் தக்கதாயுள்ள தொழிலால் தனதுடம்பிற் கிளைப்பு வாராமலே தேடிக்கொள்ளவேண்டும். எ-று. காண்க. நிந்திக்கப்படாதது எனவே ஓதுவித்தல் முதலியன. அக்கருத்தினை முன்னரே கூறினும்.

ஆயின், இக்கருமம் வேதிய னொருவனுக்கே பிழைக்கும் வகையோ? அல்லது. க்ஷத்திரிய வசியர்க்குமோ எனில்? மனு கூறினர். మనుః॥ "త్రయోధర్మానివర్తంతే బ్రాహ్మణాత్క్షత్రియంప్రతి। అధ్యాపనం యాజనంచ తృతీయశ్చప్రతిగ్రహః। వైశ్యంప్రతితథైవైతే నివర్తేరన్నితిస్థితిః" = அறு தொழிலினுள் மூன்றுதொழில் அந்தணனினும் அரசர்க்குத்தவறுகின்றது. அவை ஓதுவித்தல், வேட்பித்தல், தானமேற்றல், என்னபபடும். அவ்வாறே வைசியனுக்கும் அம் முத்தொழிலும் பிறபடுகின்றது. எ-று. காண்க. அதனானே ஓதுவித்தன் முதலியன அந்தணனுக்கே யொழிய ஏனையிருவர்க்கும் பொருளீட்டும் வழியல்லவாம்.

ஆகவே வேறுவழி மனுவாற் கூறப்பட்டுள்ளது. మనుః॥ "శస్త్రాస్త్రభృత్త్వంక్షత్రస్యవణిక్పశుకృషిర్విశః" = சத்திரங்களையும், அத்திரங்களையும் தரிப்பது அரசனுக்கும், பண்டமாறுதல், பசுநிரையோம்புதல், உழவுசெய்தல் வைசியனுக்கும் சீவனவழியாக விருக்கின்றன. எ-று. காண்க.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "ప్రధానంక్షత్రియేకర్మ ప్రజానాంపరిపాలనం। కుసీదంకృషివాణిజ్యం పాశుపాల్యంవిశస్స్మృతం" = அரசனுக்குக் குடிகளைப் புரப்பதே சிறந்தகருமமாம். வசியனுக்கு வட்டிவாங்குதல், உழவு, பண்டமாற்றுதல், ஆனிரையோம்புதல் என்னுமிவை சிறந்தகருமங்களாம். எ-று. காண்க.

பொருளீட்டுமெழுவகைவழியினையுமனுகூறினர். మనుః॥ "సప్తవిత్తాగమాధర్మ్యా దాయోలాభఃక్రయోజయః। ప్రయోగఃకర్మయోగశ్చ సత్ప్రతిగ్రహఏవచ" = அறத்தின்வழியே பொருளீட்டும் வகை ஏழுவகையாக விருக்கின்றன. அவை. தாயம், இலாபம், கிரயம், ஜயம், பிரயோகம், கருமயோகம், பிரதிக்கிரஹம். எனவாம். எ-று. தாயம்= தன்முன்னையோர் தொட்டுவந்த பொருள். இலாபம் = புதை

யல் முதலியவற்று லடைந்தது. கிரயம் = பண்டமாற்று இம் மூன்றும் நால்வருணர்க்கும் ஒத்தன. ஜயம்=வெற்றியா லடைந்த பொருள். இது அரசர்க்கே யுரியது. பிரயோகம் = கடன்கொடுத்து வட்டிவாங்குவது, கருமயோகம் = உழவு, வாணிபம், இவை வசியர்க்கே யுரியன. சற்பிரதிக் கிரஹம் = நல்லவனிடத்திருந்து நற்பொருளைப் பெறுதல். இது அந்தணர்க்கே யுரியது. எனக்கொள்க.

கூர்மபுராணம். కూర్మపురాణె॥ "ద్వివిధస్తుగృహీజ్ఞేయ స్సాధకశ్చాప్యసాధకః। అధ్యాపనంయాజనంచ పూర్వస్యాహుః ప్రతిగ్రహం। శిలోంఛెనాప్యపాదద్యాద్గృహస్థస్సాధక స్స్మృతః। అసాధకస్తుయఃప్రోక్తో గృహస్థాశ్రమసంస్థితః। శిలోంఛెతస్య కథితె ద్వెవృత్తీపరమర్షిభిః। అమృతెనాపిజీవెత మృతెనప్రమృతెనవా। అయాచితంస్యాదమృతంమృతంభైక్షంతుయాచితం"=இவ்வா வொழுக்கத்தினை யுடையவர், சாதகன் எனவும் அசாதகன் எனவும் இருவகைப் படுகின்றார். அவருள் முதலாவான் ஓதுவித்தல் வேட்பித்தல், விதிப்படி தானமேற்றல் என்னு மூன்றுகருமமும்அவனுக்குசிறப்புடையபிழைக்கும் வழியாக இருக்கும். அல்லது சிலவிருத்தியா லாயினும், உஞ்ச விருத்தியா லாயினும் பொரு ளீட்டிப் பிழைக்கலாம். அது சாதகனுக்குச் சாமானிய விருத்தியாக விருக்கின்றது. அசாதகனென இல்லறத்தானுக்கு சிலவிருத்தி, உஞ்சவிருத்தி யிரண்டும் சிறப்புடைய ஜீவனவழியென்று பெரியோர்களாற் கூறப்பட்டன. அன்றியும், அமுதவிருத்தி, மிருதவிருத்தி, பிரமிருதவிருத்தி, இவ்வுபாய வழிகளாலாயினும் அசாதகன் பிழைக்கலாம் இது அவனுக்குச் சாமானியமான வழியாம். தான் இரவாது பிறர் கொடுக்க வாங்கிச் சீவிப்பது அமிருதவிருத்தியாம். இரந்து சீவிப்பது மிருதவிருத்தியாம். எ-று. காண்க. விருத்தி = சீவன முயற்சி.

மனு. మనుః॥ "ఋతామృతాభ్యాంజీవెత మృతెనప్రమృతెనవా। సత్యానృతాభ్యామపివా నశ్వవృత్యాకదాచన" = இருதவிருத்தி, அமுதவிருத்தி, இவ்விரண்டாற் பிழைப்பது சிறந்தது. மிருதவிருத்தி, பிரமிருதவிருத்தி, இவ்விரண்டாற் பிழைப்பது இடைப்பட்டது. சத்தியாகிருத விருத்தியாற் பிழைப்பது கடைப்பட்டது. சுவவிருத்தி எப்பொழுதும் பிழைப்பாகாது.

## இவ்விருத்தியிலக்கணம்.

மனு. మనుః॥ " ఋతముంఛశిలంజ్ఞేయ మమృతంస్యాదయాచితం। మృతంతు యాచితంప్రోక్తం ప్రమృతంకర్షణంస్మృతం। సత్యానృతంతువాణిజ్యం తేనచైవాపిజీవ్యతే। సేవాశ్వవృత్తిర్వ్యాఖ్యా తాతస్మాత్తాంపరివర్జయేత్ " = உஞ்சவிருத்தியும் சிலவிருத்தியும் இருதமென் றுணரத்தக்கது (எனவே சத்தியத்தோடு கூடிய சீவனமென்னப்படும்). பிறரைச்சென் றிரவாது சீவிப்பதே அமுதம். (எனவே உயிரோடுகூடிய பிழைப்பாம்). இரந்து பிழைப்பதே மிருதம் (எனவே செத்த பிழைப்பாம்). உழுது பயரிட்டுப் பிழைப்பதே பிரமிருதம் (எனவே முற்றுஞ் செத்த பிழைப்பாம்). வியாபாரஞ்செய்து பிழைப்பது சத்தியானிருதம். (எனவே, மெய்போலப் பிறனுக்குக் காட்டிய பொய்ச் சீவனம்). கடைமுறை யிதனாலாயினும் பிழைக்கலாம். பிறரை யடுத்துச் சேவித்துப் பிழைப்பதே சுவவிருத்தி (எனவே நாய்போல் தனக்கு யார் சோறிடுகின்றனோ? அவனைச் சேவிப்பது. இது மிகஇழிந்த பிழைப்பாமென்பது உலகமறிந்தது. ஆதலின் அதனை யொழிக்கவேண்டுவது. எஙு. காண்க. " ఉంఛఃకణశఆదానం కణిశాద్యర్జనంశిలం " = யாரேனும் சிந்திவிட்டதாக வாயினும் எறிந்துவிட்டதாக வாயினு முள்ள தானியங்களை ஒவ்வொன்றாகச் சேர்த்துக்கொள்வது உஞ்ச விருத்தியாம். இதனைப் புராணங்களுள், பிபீலிகாவிருத்தி=எறும்பின் பிழைப்பெனக் கூறுவர். விளைந்து தானாகத் தரைமேல் விழுந்த கதிர்களையேனும் குலைகளையேனும் பொறுக்கிச் சேர்த்துக்கொள்வது சிலவிருத்தியாம். இவ்விருவகை விருத்தியிலும் பிறன் பொருளைக் கெடுத்துத் தான் அடைதல் என்னுங் கருத்தில்லாமையால் இவற்றினை இருதம் சத்தியமென்றும் கூறப்பட்டது. பிறனைச் சென்று இரவாதவனுடைய உயிர் ஈனத்தை யடைவதில்லையா மாதலின் அது அமுதசீவன மென்னப்படும். இரப்பவனுடைய உள்ளங் குன்றிப்போவதால் அது செத்த பிழைப்பு என்னப்படும். உழுது பயிர் செய்து பிழைப்பவன் பிறவுயிர்களின் இமிசைக்குக் காரணனாவதால் அது முற்றுஞ் செத்த பிழைப்பெனப் பட்டது. " నానృతాత్పాతకంపరం " = பொய் கூறுவதைப் பார்க்கினுஞ் சிறந்த பாவமில்லை. என்றலின். அப்பெரும் பாதகத்தினைக் கூறி அதனை மெய்யென்று பிறர் நம்பும்படிச் செய்கின்றானாதலின் வியாபா

ரம், சீவனவழிகள் பலவற்றுள்ளும் மிகத்தாழ்ந்ததாம். நாய்ப் பிழைப்பான சேவக விருத்தி யுத்தம வருணத்தார் யார்க்குந் தக்க தல்லவாம். இத்துணையும் வேதியர் விடயம்.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "కుసూలకుంభీధాన్యోవా త్ర్యాహి కోశ్వస్తనోపివా। జీవేద్వాపిశిలోంఛేన శ్రేయానేషాంపరః పరః" = குதிர்தானியம் வைத்திருப்பவனாக வாயினும், குடநெல்லுடையவனாக வாயினும், மூன்றுதினம் சீவனத்திற்குப் போதுமான தானியமுடையவனாக வாயினும், மறுநாளைக்கு இல்லாதவன். எனவே அன்றைக்குப் போதுமான நெல்லுடையவனாக வாயினும், சில விருத்தியா லேனும், உஞ்ச விருத்தியாலேனும் சீவனம் செய்பவனாக வாயினும் இருக்கவேண்டுவது.முதற்கூறியவரினும்உஞ்ச விருத்திசிலவிருத்தி சீவனம் செய்பவன் சிறந்தோனாம். எனவே முன்னவர்க்குப் பின்னவர் சிறந்தவர். எ-று. காண்க.

மேற்கூறியவர்களின் கரும வுரிமையை மனுவினாற் கூறப்பட்டது. మనుః॥ "షట్కర్మైకోభవత్యేషాం త్రిభిరన్యః ప్రవర్తతే। ద్వాభ్యామేకశ్చ తుర్థస్తు బ్రహ్మసత్రేణజీవతి" = இவருள் ளொருவன் (எனவே களஞ்சிய நெல்லுடையவன்) வேட்டல் முதலிய அறுதொழிலும் செய்பவனா யிருத்தல் வேண்டும். அந்நியன் (எனவே குடநெல்லுடையவன், வேட்பித்தல், ஓதுவித்தல், தானமேற்றல், என்னும் மூன்று கருமமும் செய்பவனாக விருத்தல் வேண்டும். மற்றொருவன் (எனவே மூன்றுநாளைய உண்டிக்குவேண்டும் நெல்லுடையவன்) வேட்பித்தல், ஓதுவித்தல் என்னு மிரண்டு கருமத்தை மாத்திரஞ் செய்பவனாக விருத்தல் வேண்டும். நாலாவான் (எனவே மறுநாளைய உண்டிக்கு வழியில்லாதவன். பிரமசத்திரம்= வேதமோது வித்தல், என்னுங் கருமமாத்திர முடையவனா யிருத்தல் வேண்டும். எ-று. காண்க.

## சூத்திரன் சீவனஞ்செய்யும் வகை.

சூத்திரன் பிழைக்கும் வகை உசனசு = சுக்கிரனாற் கூறப்பட்டது. ఉశనాః॥ "శూద్రస్యద్విజశుశ్రూషా సర్వశిల్పానివాపిచ। వక్ష్యస్సర్వేషాం శూద్రకర్మహ్యుదాహృతం" = அந்தணர், அரசர், வைசியர், என்னும்இருபிறப்பாளர் மூவரையும் முறைப்படி உபசரித்துப்பணிபு

ரிதல், எல்லாவகைப்பட்ட சிற்பத்தொழில் களையும் செய்தல், எல்லாப் பொருளையும் விற்றல், இவைகள்சூத்திரன் சீவனத்தொழிலென்றுகூறப்பட்டது, எ-று. காண்க.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "శూద్రస్యద్విజశుశ్రూషా తయాజీవ స్వణిగ్భవేత్। శిల్పైర్వావివిధైర్జీవేద్ద్విజాతిహితమాచరన్" = சூத்திரனுக்கு இருபிறப்பாளரைச் சேவிப்பதே தக்ககருமம் அம்முயற்சியாற்பிழைப்பவன் வசியனோ டொப்பாவன். பண்டங்களைக் கொடுக்கல் வாங்கலுமாகிய வாணிபமும்செய்யலாம். இருபிறப்பாளர்க்கு இன்பம் விளையும் வகையைவேண்டிப் பலவகைப்பட்ட சிற்பத்தொழிலாலாவது பிழைக்கலாம். எ-று. காண்க.

ஹாரீதர். హారీతః॥ "శూద్రస్యధర్మోద్విజాతిశుశ్రూషాపవర్జనం కళత్రాదిపోషణం కర్షణంపశుపాలన భారోద్వహనపణ్యవ్యవహారచిత్రకర్మ నృత్తగీతవేణువీణామృదంగవాదనాదీనిచ" = இருபிறப் பாளரைச் சேவிப்பதுவே சூத்திரனுக்குச் சிறந்த தருமமாம். அது குப்பைகளைதல் முதலிய தொழில், சுவாமி குடும்பத்தைக் காத்தல், நிலத்தை உழுதல் முதலிய செய்தல், பசுநிரைகளைக் காத்தல், சுமை சுமத்தல், அங்காடித்தொழில், சித்திரவேலை, கூத்து, பாடல், குழலாதியூதல், வீணை மத்தள முதலிய வாத்தியங்களை முழக்குத லாதியுமாம். இவை சூத்திரனுக்குரிய தருமமாம். எ-று. காண்க.

## பிரமவேள்வி.

பின்னர், பகலின் நாலாவது பங்கில் செய்யத்தக்க தொழிலினைக் கூறத் தொடங்கினர். "చతుర్థేతుతథాభాగే స్నానార్థంమృదమాహరేత్" = நாலாம்பங்கில் அவ்வாறே நீராடலின் பொருட்டுமண்ணினைக் கொண்டுவரவேண்டும். எ-று. காண்க. இந்தஉச்சி நீராடல் விதி அதிகாரப்பட்டதால் முன்னரோ கூறப்பட்டுள்ளது.

பின்பு. பிரமவேள்வியின் விதி கூறப்படுகின்றது. அதன் சொரூபம், தைத்திரீயப் பிராமண மென்னும் வேதபாகத்துள் குறிப்பிக்கப் பட்டது. తైత్తిరీయబ్రాహ్మణే। "యత్స్వాధ్యాయమధీయీతైకామ ప్యృచంయజుస్సామ వాతద్బ్రహ్మయజ్ఞస్సంతిష్ఠతే" = நன்றாக வேதமோதுதலே பிரமவேள்வியாம். கடைமுறை ஒருஇருக்கு மந்திரமாயி

னும், ஒருயஜுர் மந்திரமாயினும், ஒருசாம மந்திரமாயினும் விதிப்படி, நாடோறும் ஓதுதலாகிய பாராயணம் செய்வதே பிரமவேள்வி யென்னப்படும். எ-று. (பிரமம் என்பது, இவ்விடத்து வேதம் அது சாங்கோபாங்கமாக = முழுவதும் நன்றாகப் பிரமத்தைப் போதிப்பதனால் பிரமம் என்னப்பட்டது. அப்படிப்பட்ட வாசகத்தால் வாக்கென்னுங் கரணத்தால் கடவுளைப் பூசிப்பதே பிரமவேள்வி என்னப்படும்).

இலிங்கபுராணம். లింగపురాణే॥ "స్వశాఖాధ్యయనంవిప్ర బ్రహ్మయజ్ఞ ఇతిస్మృతః" = வேதத்துள், தன்னுடைய சாகையை ஓதுவதே பிரமவேள்வியாம் என்று மிருதிகளில் விதிக்கப்பட்டது. எ-று. காண்க.

## பிரம வேள்விக்குரிய காலம்.

பிரகற்பதி. బృహస్పతిః॥ "సచార్వాక్తర్పణాత్కార్యః పశ్చాద్వాప్రాతరాహుతేః। వైశ్వదేవావసానేవా నాన్యదాతునిమిత్తతః" = தருப்பணஞ் செய்வதற்கு முன்னமே யாயினும், காலை வேள்வித் திக்காரியம் முடிந்தபின்னராயினும். வைசுவதேவகருமம் முடிந்தவுடனாயினும், அப்பிரம வேள்வியைச் செய்யவேண்டும். வேறுநிமித்தத்தினால் மற்றெந்தக் காலத்தும் செய்யலாகாது. எ-று. இவ்விடத்து, வைசுவதேவம் என்றதனால் மானுடவேள்வி யெனக் கொள்ளப்பட்டது.

அங்ஙனம் கூர்மபுராணத் துள்ளும் கூறப்பட்டது. కూర్మపురాణే॥ "యదిస్యాత్తర్పణాదర్వాక్ బ్రహ్మయజ్ఞఃకృతోనహి। కృత్వామనుష్యయజ్ఞంతు తతస్స్వాధ్యాయమాచరేత్" = தருப்பணஞ் செய்வதற்கு முன் பிரமவேள்வி செய்யாதே யொழிந்திருந்தால் மானுட வேள்வியாகிய வைசுவதேவம் செய்தபின்பு வேதமோதலாகிய பிரமவேள்வி செய்யவேண்டும். எ-று. காண்க.

பிரமவேள்வி செய்வதற்குத் திசையும், இடமும், காலமும் சுருதியே கூறுகின்றது. శ్రుతిః॥ "బ్రహ్మయజ్ఞేనయక్ష్యమాణః ప్రాచ్యాం దిశిగ్రామాదచ్ఛదిర్దర్శఉదీచ్యాం ప్రాగుదీచ్యాంవోదితఆదిత్యే" = பிரமவேள்வியாகிய கருமத்தால் கடவுளைப் பூசிப்பவன், ஊருக்குக் கிழக்காகவாயினும், வடக்காக வாயினும், தென்கிழக்குத் திசையாக வாயினும் திரும்பி அம்முகமாக விருந்து புல், பாய் முதலிய

மேற் கூரைகண்ணுக்குப் புலப்படாத இடத்தில் சூரிய 'னுதய மான பின்பு-எ-று. சூரியன் உதயமான பின்பு என்பது, உதயத் துக்குமுன் ஆகாது என்றபொருளைத் தருவதன்றி உதயமான வுடனே என்று பொருள் கொள்ளலாகாது. ஏன் எனில்! உதய மானவுடனே ஹோமகால மாகின்றது ஆகலின்,

பிரமவேள்வி விடயத்தில் எந்த விடயத்திற்குச் சென்று எக்கருமஞ் செய்யவேண்டுவதோ? அதனை மனுகூறினர். మనుః॥ "అపాంసమీపెనియతో నైత్యకంవిధిమాస్థితః। సావిత్రీమప్యధీయీత గత్వారణ్యంస మాహితః" = காட்டிற்குச் சென்று நீர்க்கரையில் நித்தகரும விதி களை யனுட்டித்து அமைந்த மனத்தோடு சாவித்திரி மந்திரத்தை யும், தன்சாகை முதலிய வேதங்களையும், ஓதுதல் வேண்டும். எ-று. காண்க.

பிரமவேள்வியிற் பூணநூலை எவ்வாறு தரித்திருக்க வேண்டு வதோ? எதனைச் செய்யவேண்டுவதோ? அவற்றினையெல்லாம் வரம்பறுத்து வேதமே கூறிற்று. శ్రుతిః॥ "దక్షిణతఉపవీయ" = "ఉప విశ్య" = "హస్తావవనిజ్య త్రిరాచామెద్ద్విఃరి పరిమృజ్యసకృ దుపస్పృశ్యశిరశ్చక్షు షీనాసికెశ్రోత్రె హృదయమాలభ్య" = "దర్భాణాంమహదుపస్తీర్య పస్థంకృత్వా ప్రాజాసీనస్స్వా ధ్యాయమధీయీత దక్షిణోత్తరౌపాణీ పాదౌకృత్వాస పవిత్రావో మితి ప్రతిపద్యతె" = "త్రీనెవప్రా యుఙ్క్తెభూర్భువస్సువః" = "అథసావిత్రీంగా యత్రీంత్రిరన్వాహ పచ్ఛోర్ధర్చశోనవానం" = "గ్రామెమనసాస్వాధ్యాయ మధీ యీతదివానక్తంవా" = "హస్మహశౌచాస్నాయ ఉతారణ్యేబల ఉతవాచోదతిష్ఠన్నుత వ్రజన్నుతాసీన ఉతశయానో ధీయీతైవస్వాధ్యాయం" = మధ్యందినె ప్రబలమధీ యీత" = "నమోబ్రహ్మణఇతిపరిధానీ యాంత్రిరన్వాహాప ఉపస్పృశ్యగృహానెతి తతో యత్కించిద్దదాతిసాదక్షిణా" = ஊரில் மனத்தினால் வேதம் ஓதல்வேண் டும்( எனவே, ஆரணியகம் என்னும் வேதபாகத்தை உரத்துக் கூறலாகாது). (தான் ஓதியிருந்த வேதம் மறவாதபடி பகலிலே யாயினும் இரவிலே யாயினும் மனத்துள் தியானித்தலுமாம்) பரிசுத்தமானவிடத்தில், காட்டில், ஆரணியகவேதத்தினை உரத்து விசேடமாக ஓதல்வேண்டும். தேக சுகத்திற்குத் தக்க, சிறந்த நல்ல கருமத்தின்பொருட்டு, நடக்கினும், எழினும், இருக்கினும், நிற்கினும், கிடக்கினும், படுக்கினும் வேதமோதலை விடலாகாது. உச்சிப்போதில் விசேடமாக வேதமோதல் வேண்டும். இவ்

வாறு வேதமோதுதல்செய்து நாடோறும் பிரம வேள்விசெய் யும்போது, நீர்க்கருகில் கைகால் சுத்திசெய்து, சுத்தனாய், தருப் பையைப்பரப்பி அதன்மேல் இடது தொடையின்மீது வலக் கால் வரும்படி வீராசனமாக இருந்துகொண்டுவலப்பக்கங்கிடக் கும்படி இடதுதோள் தாங்கிய பூணநூலோடு, கிழக்குமுகமாக இடதுதோண்மேல் மேலாடை போர்த்துக் கையலம்பி ஆசமன மூன்றுதரம்செய்து, இரண்டு விசை அதரசுத்திசெய்து, இரு கையிலும் பவித்திரம் புனைந்து, இடது கை கீழும் வலது கை மேலுமாக அவ்விடது கையில் நீர் விட்டுக்கொண்டு வலது கை விரலால் ஒவ்வொருதரமும் அந் நீரைத்தொட்டு, தலை, கண், செவி, நாசி, மார்பு என்னு மிவ்வுறுப்புக்களுக்கு ஒவ்வொரு தரம் நீர்ப்பரிசம் செய்வித்து, பின்பு தருப்பையையும் நீரையும் இடதுகரத்தில்வைத்துக்கொண்டு அக்கையை வலமுழந்தாளருகி லிட்டு வலக்கரத்தால் அதை மூடிப்பிடித்துக்கொண்டு நியமமாக பிரமவேள்வியாகிய வேதபாராயணம் செய்யவேண்டும். இன்னும், "ஐத்யுத்" = "வித்தியுது" என்னும் மந்திரத்தைத்தொடங்கி, "வ்ருஷ்டி" = "விருஷ்டி" என்னும் மந்திரம் வரையில் (எனவே இவ்விரண்டு மந்திரங்களின் னடுவே கூறப்படும். மந்திரங்கள் "பிரமசத்திரம்" என்னப்படும். இதன்விதி "சுவாத்தியாயப் பிராமணம்" என்னும் ஆரணியக வேதபாகத்திற் கூறப்பட்டிருக் கின்றது. அம்மந்திரங்களுட்கூறிய முக்கியமான கருத்து என் னெனில்? "நமோ ப்ரஹ்மணே = நமோ பிரமணே" என்னும் சாந்தி கூறிப் பின்பு பிரணவத்தின் தோத்திரவாக்கியம் கூறி காயத் திரி மந்திரத்தைச் சாவித்திரி மந்திரமாகப் பாதம் = கால் ஆக வும் அரையாகவும், முழுதுமாகவும் மூன்றுவிசைப் பிரணவத் தோடும் வியாஹ்ருதிகளோடும் மாற்றிமாற்றிச் சேர்த்துக்கூறிப் பின்பு தன் சாகைமுதல் சாங்கோபாங்கமாய் நான்கு வேதங் களையும் (எனவே வேதமுதலிய மஹா வித்தைகளெல்லாவற் றினையும், பாராயணம்செய்து மறுபடியும் "நமோ பிரமணே" என்னும் சாந்திகூறி, "வ்ருஷ்டிரஸி = விருஷ்டிரசி" என்னு மந்திரத் தோடு வலமாக நீரைக் கையிலெடுத்து, உறுப்புத்தொடு மிடம் தொட்டு, அந்தவேள்வியை ஈசுவரப்பிரீதிசெய்து, அவ்வேள்வி சித்திக்கும் பொருட்டு, எவையேனுஞ் சிலவற்றைத் தக்ஷிணை

யாக அந்தணர்க்குக் கொடுக்கவேண்டும் என்று மேற்குறித்த வேதமந்திரங்களெல்லாவற்றினுடைய சிறந்த கருத்தாக விருக்கின்றது.

இக்காலத்தில் சிட்டராகிய வேதியர்கள், வேதமுதலிய மஹாவித்தைகளெல்லாவற்றினையும் ஓதுவதற்குப் பொழுதும் சுருக்கமாயுள்ளதுவே யன்றி முடியாததாயும் அருமையாயும் இருக்கின்றதென்று இருடியர்கள் ஏற்படுத்தியுள்ள எளியவிதி வகைப்படி மேற்கூறிய முறைமையைப் பற்றிஎல்லாவித்தைகளினு முள்ள முதற்சொற்களை மாத்திரம் கூறித்தன்சாகையில் தான் ஓதியுள்ள வேதபாகத்திலுள்ள தோர் பிரசினத்தையாவது முற்றும் பாராயணம்செய்து அவ்வளவில் முடிக்கின்றனர். அதற்கும் காலம் போதாதவரும், பட்டினி கிடக்கும் விரதங்களின் பாராயணதினத்தில் நித்தகருமத்தைச் சுருக்குவோரும், அந்தப்பிரசின பிரமவேள்வி செய்யாமலே, முதற்சொற்களை மாத்திரமே கூறி முடிக்கின்றனர்.

யோகயாஞ்ஞுவற்கியர். యోగయాజ్ఞవల్క్యః॥ " ప్రదక్షిణం సమావృత్య నమస్కృత్వోపవిశ్యచ। దర్భేషు దర్భపాణిభ్యాం సంహతాభ్యాం కృతాంజలిః। స్వాధ్యాయంతు యథాశక్తి బ్రహ్మయజ్ఞార్థమాచరేత్ " = வலமாகத் திரும்பி கீழ் விழுந்து வணங்கித் தருப்பையின் மீதிருந்து பவித்திரத்தினையுடைய இரண்டு கைகளையும் அஞ்சலியாகப் பிடித்துக்கொண்டு பிரமவேள்வியின் பொருட்டுத் தனக்கு ஆற்றலுள்ள வளாயில் வேதத்தை யோதவேண்டும். எறு. காண்க.

சௌநகர் செய்யத்தக்க னவற்றை வேறுவகையாகக் கூறினர். శౌనకః॥ " ప్రాణాయామైర్దగ్ధదోషః క్షుద్ధాంబరధరశ్శుచిః। యథావిధ్యుపస్పృశ్య ఆసీనో దర్భసంస్తరే। పవిత్రపాణిః కృత్వాతు ఉపస్థం దక్షిణోత్తరం " = பிராணுயாமங்களால் தன்பாவக் குற்றங்களைச் சுட்டொழித்துச் சுத்தமாகிய மடியாடையுடுத்துப் பரிசுத்தனாய் விதிப்படி ஆசமித்து தருப்பையாதனத்தின் மீது ஏறி இடக்காலின்மீது வலக்காலிட்டு இருந்து கொண்டு பவித்திரம் கையிற்புனைந்து பிரமவேள்வி செய்தல்வேண்டும். எறு. காண்க.

மேற்கூறப்பட்ட சுருதியில் " நீரைத் தொட்டு," என்ற வாக்கியத்தின் பொருளோடு இட்டுகையினையும் இரண்டுகால்களையும் வலக்கரத்து நீரால் புரோக்ஷித்து என்ற அருத்தத்தை வருவித் துரைக்கவேண்டும். ஏனெனில், பிரமவேள்வியிற் செய்யப்படுந் தந்திரங்கள் எல்லாவற்றிற்கும் முன்னேபயனைக் கூறு

தும். சுருதியுள் சொல்லப்பட்டிருக்குந் தந்திரங்களின் வரிசையில் இந்தப் புரோக்ஷணம் கூறப்பட்டிருக்கின்றது. தந்திரம்= கருமம், = தொழில். ஒருபொருட்கிளவி.

அப்பயனுமாறு. சுவாத்தியாயப் பிராமணம். స్వాధ్యాయబ్రాహ్మణే॥ "యత్త్రిరాచామతి తేనఋచః ప్రీణాతియద్ద్విః పరిమృజతి తేన యజూగ్ంషి యత్సకృదుపస్పృశతి తేన సామానియత్సవ్యం పాణింపాదౌ ప్రోక్షతి యచ్ఛిరశ్చక్షుషీనాసికేశ్రోత్రేహృదయమాలభ్యతి తే నాథర్వాంగిరసో బ్రాహ్మణానీతిహాసాన్పురాణానికల్పాన్గాథా నారాశగ్ంసీః ప్రీణాతి" = மூன்றுதரம் ஆசமனம் செய்ததனால் இருக்கு வேதந்திருத்தி யடையச் செய்கின்றது. நீரால் இருகால் அதர சுத்திசெய்ததனால், யஜுர்வேதத்தைத் திருத்தி செய்கின்ருன், ஒவ்வொருக்கால் ஒவ்வோரங்கத்தையும் பரிசித்தால் சாமவேதத்தைத் திருத்தி செய்கின்ருன். இடது கைகால்களில் புரோக்கிப்பதால் அதர்வண வேதத்தையும் இதிகாச புராணமுதலியவற்றினையும் திருத்தி செய்கின்ருன். எ-று. காண்க. எனவே அந்தந்த அபிமானி தேவர்கள் திருத்தி யடைகின்றனர் என்பது கருத்து. "దర్భాణాంమహదుపస్తీర్య என்ற இருக்கின்பொருள் சௌனகராற்குறிக்கப்பட்டது. శౌనకః॥ "ప్రాగ్వోదగ్వాగ్రామాన్నిష్క్రమ్యాపఆప్లుత్యశుచౌ దేశేయజ్ఞోపవీత్యాచమ్యాక్లిన్నవాసా దర్భాణాంమహదుపస్తీర్య ప్రాక్కూలానాంతు ప్రాఙ్ముఖ ఉపవిశ్యోపస్థంకృత్వా దక్షిణోత్తరౌపాణీ పాదౌసంధాయపవిత్రవం తౌద్యావాపృథివ్యోస్సంధిమీక్షమాణస్సంమీల్యవాయథాయుక్త మాత్మానం మన్యేతతథాయుక్తో ధీయీతస్వాధ్యాయమోంపూర్వాంవ్యాహృతయస్సావిత్రీమన్వాహపచ్ఛోర్ధర్చశస్సర్వామి తితృతీయమితిశౌచశ్నుచేగపుత్ర ఆశ్వలాయన ఏతన్నామక ఋషిరిత్యాహస్మేతి" = மேற் கூறப்பட்ட சுருதிகளின் கருத்தே யிதற்குங் கருத்தாக விருக்கின்றது. ஆயினும் ஊருக்கு வடக்காகவாயினும் கிழக்காக வாயினுஞ் சென்று நீராடி உலர்ந்த வாடையுடுத்து கிழக்குமுக விருந்து பூமிக்கும் ஆகாயத்திற்கும் நடுவே குறிப்பு வைத்துக்கொண்டு கண்களைமூடி யாயினும் திறந்தாயினும் அனுகூலித்தபடி வேதமோத வேண்டும். இவ்விதியைச்சுசியென்பவன் மகனை ஆந்நேயன் என்ற இருடிகூறினர். என்பது. விசேடக்கருத்து என்றபடி. காண்க.

அங்கங்கள் = சாத்திரங்களை யெல்லாம் ஓதுவதற்கு ஆற்றல் போதாவென்னும் குறைவுபாட்டால் முக்கியமான வேதத்

தையாவது ஓதாமல் விடக்கூடாது. ஆனல், பிரமவேள்வியில் செபம் செய்யத்தக்க வேதமுதலிய வித்தைகள் அசுவமேத பர்வத்தில் கூறப்பட்டது. అశ్వమెధ॥ వెదమాదౌసమారభ్య తథోపర్యుపరిక్రమాత్। యదధీతెన్వహంశక్త్యా తత్స్వాధ్యాయం ప్రచక్షతె। ఋచంవార్థయజుర్వాపి సామగాథామథాపివా। ఇతిహాసపురాణాని యథాశక్తినహాపయెత్." = முதலில் வேதத்தைத் தொடங்கி அவ்வாறே மேலும் மேலும் நாடோறும் ஆற்றலோடு எதனை ஓதிவருகின்றுனே? அதனை ஸ்வாத்தியாயமென்று கூறுவர். இருக்குவேதத்தை யாயினும், யஜுர்வேதத்தை யாயினும், சாமவேதத்தை யாயினும், காதைகளை யாயினும், இதிகாசங்களை யாயினும், புராணங்களை யாயினும், சத்தியுள்ள வளவில் விடலாகாது. எ-று. காண்க. காதை=வேதக்கதைகளுக் குடன்பட்ட பழமொழிகளையுடைய ஆரிடநூல்.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః "వెదాథర్వపురాణాని సెతిహాసాని శక్తితః। జపయజ్ఞప్రసిద్ధ్యర్థం విద్యాంచాధ్యాత్మికీంజపెత్" = மூன்று வேதங்களையும், அதர்வணத்தையும், புராணங்களையும், இதிகாசங்களையும், ஞானவித்தையையும், பிரமவேள்விசித்திக்கும்படி செபிக்க வேண்டும். எ-று. அத்தியான்ம வித்தை=வேதாந்தம்=ஞானவித்தை என்பன வொருபொருட்கிளவி.

தான் கற்றுக்கொள்வதற்காக வோதுவது போல, பிரமவேள்வியின் பொருட்டுச் செய்யும் ஓதலும் ஓதலாகாத காலத்திலும் விட்டொழிதல் வேண்டுமே யெனில்? மனு அதனை மறுத்தனர். మనుః॥ "వెదోపకరణెచైవ స్వాధ్యాయెచైవనైత్యకె। నానురోధోస్త్యనధ్యాయె హొమమంత్రెషుచైవహి। నైత్యకెనాస్త్యనధ్యాయో బ్రహ్మసత్రం హితత్స్మృతం। బ్రహ్మాహుతిహుతంపుణ్య మనధ్యాయవషట్కృతం" = வேதத்தின் கருவிகள் (எனவே சிக்ஷை, வியாகரணம் முதலிய அங்கஉபாங்கநூல்கள்) இவற்றை யோதியுணர்வதற்கும், நித்தியகருமமாகிய பிரமவேள்வியிலுள்ள வேதமோதலுக்கும், ஹோமத்தின் பொருட்டுக்கூறும் மந்திரங்களுக்கும், ஓதலாகாதகாலத்தில் ஓதக்கூடாது என்னும் தடையில்லை. நித்தியகருமத்திற்கு அநத்தியாய தோஷமில்லை. நித்தமாகிய வேதாத்தியயனம் "பிரமசத்திரம்" என்னும் பெயருடையதாகக் கூறப்படுகின்றது. பிரமம் = வேதமாகிய ஆகுதியால் ஹோமஞ் செய்யப்படுவது புண்ணியமாயுள்ளது.

"வஷட்டு" என்ற மந்திரபல்லவத்தோடு வேதாத்தியயனமில்லாதகாலமே ஓதலாகாதகாலம். தீயில் ஆகுதி கொடுக்கத்தக்க திரவியமே = பொருள்களே யிவ்விடத்துப்பிரமமாக விருக்கின்றது. அதனுல் ஹோமஞ் செய்யப்படுவதே "அத்தியாயம்" என்னப்படும். அதுவே "யாஜ்ஜியா" என்னும் பெயருடையது முதலிய மந்திரத்தொகுதியாக விருக்கும். "வஷட்டு" என்பது வசீகரத்தையுணர்த்து மந்திரமுடிபு. அதனேடும் ஹோமம் இல்லாமையால் அநத்தியாயம் என்னப்படும்.

அதனுனே வேதம். அநத்தியாய விசேடங்களைக்கூறி அவற்றில் செபத்தைப் புகழ்கின்றது. శ్రుతిః॥ "యఏవంవిద్వాన్మేఘేవర్షతి విద్యోతమానే స్తనయత్యవస్ఫూర్జతిపవమానేవావాత్య మావాస్యాయాగ్ం స్వాధ్యాయమధీతె తపఏవతత్తప్యతె తపోహిస్వాధ్యాయః." = யார்? இவ்வா றுணர்ந்தவன் மேகம் மழைபெய்யும்போதும், மின்னும்போதும், குமுகும்போதும், இடிவிழும்போதும், பெருங்காற் றடிக்கும்போதும், அமாவாசையிலும், வேதமோத நினைக்கின்றுனே? அவன் தவமே செய்யவேண்டும். (எனவே சிறிது செபிக்கவேண்டும் என்றபடி) அப்போது, தவஞ்செய்வதன்றே? வேதமோதலாகின்றது. எ-று. காண்க.

அந்த வோதலாகாத காலத்தில் சிறிதே செபிக்கவேண்டுமென்பது ஆபத்தம்பர் கூறினர். ఆపస్తంబః॥ "అథయదివాతోవాయా త్స్తనయెద్వావిద్యోతతె వాతథావస్ఫూర్జెదె కాఙ్మృచమెకంవాయ జురెకంవాసామాభి వ్యాహరేత్." = பின்பு காற்று வீசினுலும், மழை பெய்தாலும். மின்னினுலும், குமுறினுலும், இடியிடித்தாலும், இருக்கு, யஜஸு, சாமவேதங்களில் ஒவ்வொரு மந்திரமாயினும் கூறவேண்டும். எ-று. காண்க.

தானுயினும், தானிருக்குமிடமாயினும் அசுத்தமானபோது, பிரமயாகத்தைச் செய்யாதொழிக. அங்ஙனம் சுருதி கூறிற்று. శ్రుతిః॥ "తస్యవాఏతస్యయజ్ఞస్య ద్వావనధ్యాయౌ యదాత్మాశుచిర్యద్దేశః." = அங்குகூறிய இப்பிரம வேள்விக்கு, இரண்டுவகை அனத்தியாய காலமுள்ளன. ஒன்றுதான் அசுத்தமாயிருக்குங் காலம், மற்றென்றுதானுள்ள விடம் அசுத்தமானது. எறு. காண்க.

பிரமயாகத்தை வேதமே சிறப்பிக்கின்றது. శ్రుతిః॥ "ఉత్తమంనాకగ్ం రోహత్యు త్తమస్సమానా నాంభవతియావంతగ్ం హవాఇమాంవిత్తస్య పూర్ణాందదత్స్వర్గంలోకంజయతిభూయాగ్ంసంచాతుయం చాపపునర్మృత్యుంజయతి బ్రహ్మణస్సాయుజ్యంగచ్ఛతి." = சிறந்த சுவர்க்கத்தை யடைகின்ருன். ஒத்தவர்களுட் சிறந்தவனுகின்ருன். உலகமுழுவதும் எவ்வளவு பொன்கொள்ளுமோ? அவ்வளவு தனத்தையும் நிரப்பி அந்த பூமியை நல்லோர்க்கு விதிப்படி தானஞ்செய்தவன் எவ்வளவு சுவர்க்க பதத்தையடைந்து யாவர்க்கு மேலானவன் ஆவனே? அவ்வளவு புண்ணியவுலகத்தைவென்று தலைமைபெற்றவனுவன். பலவாகிய கெடாத புண்ணிய வுலகத்தையடைவன். மேலும், மிருத்தியுவையும் வெல்லுவன். பிரமத்தோடு சாயுச்சியத்தையும் அடைவன். இது விதிப்படி அப்பிரமவேள்வியைச் செய்வோன் அடையும்பயனும். எ-று. காண்க. மிருத்தியு, என்பதற்கு மரணம் என்பது வழக்குப்பொருள். அவமானம், வறுமை, தோல்வியடைதல் என்று, சில விடங்களிற் பொருள் கொள்ளப்படுகின்றது. மிருத்தியு. என்பது, பிரமாதமே=குறிதப்புதல் என்று சனச்சுஜாதர் கூறினர். மோகமே மிருத்தியு என்பது கவிஞர் கருத்து.

யாஞ்ஞுவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "యంయంక్రతుమధీయాతతస్యతస్యాప్నుయాత్ఫలం." = எந்த எந்த வேள்விக்கு வேண்டிய வாசகமாகிய வேதத்தை ஓதுகின்ருனே? அந்தந்த வேள்வியைச் செய்தாலடையும் பயனை அடைகின்ருன். எறு. காண்க.

பிரமயாக முற்றிற்று.

## தருப்பண விதி.

வசிட்டர். వసిష్ఠః॥ ఋక్సామాథర్వవేదోక్తా న్జప్యాన్మంత్రాన్యజూంషిచ। జపిత్వేవంతతఃకుర్యా ద్దేవర్షిపితృతర్పణం." = வேதமந்திரங்களைச் செபித்த பின்னர் தேவர்களுக்கும் இருடிகளுக்கும் பிதிர்களுக்கும் தருப்பணம் செய்யவேண்டும். எறு. காண்க.

பிரகற்பதி. బృహస్పతిః॥ "బ్రహ్మయజ్ఞప్రసిద్ధ్యర్థం విద్యాంచాధ్యాత్మికీం జపేత్। జప్త్వాథప్రణవంచాపి తతస్తర్పణమాచరేత్" = பிரமயாகம் சித்திக்கும் பொருட்டு ஞானவித்தையைச் செபித்துப் பின்பு பிரணவத்தைச்செபித்து, அதன்பின் தருப்பணம் செய்யவேண்டும். எ-று. காண்க.

விஷ்ணுபுராணம். విష్ణుపురాణే॥ "శుచిర్వస్త్రధరస్స్నాతో దేవర్షిపితృతర్పణం। తేషామేవహితీర్థేన కుర్వీతసుసమాహితః। త్రిరపఃప్రీణనార్థాయ దేవానామపివర్జయేత్। అథర్షీణాంయథాన్యాయ్యం సకృచ్చాపి ప్రజాపతేః। పితౄణాంప్రీణనార్థాయ త్రిరపఃపృథివీపతే." = நீராடிச்சுத்தனாய் உலர்ந்த ஆடையுடுத்து தேவர், இருடி, பிதிரர்களுக்கும் அவரவர்க்கு விதித்த தீர்த்தங்களால் பொறுமையோடும் தருப்பணம்செய்யவேண்டும். திருத்தி செய்விக்கும்பொருட்டு மூன்றுதரம் நீர்விடவேண்டும். ஆனால், முறைப்படி தேவர்களுக்கும், இருடிகளுக்கும் மூன்றுவிசையாகாது பிதிரர்களுக்கு மாத்திரம் முக்காலும் எள்ளுநீர் இறைக்கவேண்டும். எ-று. காண்க. விதித்ததீர்த்தம். மேலே கூறப்பட்டது.

வியாசர். వ్యాసః॥ "ఏకైకమంజలిందేవా ద్వౌద్వౌతుసనకాదయః। అర్హంతిపితరస్త్రీంస్త్రీంస్త్రియశ్చైకైకమంజలిం" = ஒவ்வொரு தேவர்க்கும் ஒவ்வொரு குடங்கைநீரும், ஒவ்வொரு இருடிக்கும் இவ்விரண்டு அங்கைநீரும், பிதிரர்க்கு மும்மூன்று சேரங்கைநீரும், மாதர்க்கு ஒவ்வோர்கை நீரும், புருடர்களுக்கு மூன்றுகை நீருமாம். எ-று. காண்க.

ஆக்கினேயபுராணம். ఆగ్నేయపురాణే॥ "ప్రాగగ్రేషుసురాంస్తర్పేన్మనుష్యాంశ్చైవమధ్యతః। పితౄంస్తుదక్షిణాగ్రేషుచైక ద్విత్రిజలాంజలీన్." = நுனிவிரல்களிலும் தருப்பைகளிலும், ஒவ்வொருதரம் தேவர்கட்குச் சலதருப்பணம் செய்யவேண்டும். அங்கையைச் சேர்த்து நடுவே இவ்விரண்டுவகை இருடிகளுக்கு அத்தருப்பணம் செய்யவேண்டும். அங்கை வலப்பாகமாக மும்மூன்றுதரம் அத்தருப்பணம் செய்யவேண்டும். எ-று. காண்க. ஒன்று, இரண்டு, மூன்று என்னும் அஞ்சலிக் கரத்தின் கணக்கு நியமம் அவரவர்சாகை விதிப்படி ஏற்பட்டுள்ளது. எந்தச்சாகையில் இந்தக்கணக்கு நியமம்

கூறப்பட வில்லையோ? அங்கு விகற்பமாக வரும். விகற்பம்= இரண்டு மாதல்.

அவ் விடத்து அவ்வாக்கிநேயத்திற்றுனே தருப்பண காலத்திற் பூணநூல் அணியும் விசேடம் குறிப்பிக்கப் பட்டது. ఆగ్నేయపురాణే॥ "సవ్యేన దేవకార్యాణి వామేన పితృతర్పణం। నివీతేన మనుష్యాణాం తర్పణం తు విధీయతే" = தேவகாரியங்களைச் சரியான வலப்புறம், பிதிர்கருமங்களை இடதுபுறம் மனுடர் தருப்பணம் மாலையாகவும் பூணநூலைச் செய்யவேண்டும் என்று விதிக்கப்படுகின்றது. எ-று. காண்க. சவியம் = உபவீதம். அபசவியம் = பிராசீனவீதம். நிவீதம் = சம்வீதம். என்ற வைதிகப் பெயருமுண்டு.

## தேவ தருப்பணம்.

சங்கலிகிதர். శంఖలిఖితౌ॥ "ఉభాభ్యాం హస్తాభ్యాం ప్రాఙ్ముఖో యజ్ఞోపవీతీ సాంగుష్ఠైః కుశైర్దేవతాతర్పణం దేవతీర్థేన కుర్యాత్" = கிழக்குமுகமாகப்பூணநூல் கிடக்கவிட்டு முனையோடுங் கூடிய தருப்பையோடு இருகையும் அஞ்சலியாகக் கீழ்நோக்கிய விரன்முனைக் கண்ணதாகிய தேவதீர்த்தத்தினுல் தேவர்கட்கு ஜலதருப்பணம் செய்யவேண்டும். எ-று. காண்க.

## இருடி தருப்பணம்.

விஷ்ணு. విష్ణుః॥ "తతః కృత్వా నివీతం తు యజ్ఞసూత్రమతంద్రితః। ప్రాజాపత్యేన తీర్థేన మనుష్యాంస్తర్పయేత్పృథక్" = பின்னர் பூணநூலை பிடர்மேலிருந்திருதோணடுவே மாலையாகக் கிடக்கவிட்டு உறக்கஞ் சோம்பலின்றி "பிரஜாபத்திய தீர்த்தத்தினுல் எனவே குடங்கை நடுவாக விடுநீரினுல் இருடிகட்குத் தருப்பணம் செய்யவேண்டும். எ-று. காண்க.

## பிதிர் தருப்பணம்.

போதாயனர். బౌధాయనః॥ "అథ దక్షిణతః ప్రాచీనావీతీ పిత్ర్యాన్ స్వధా నమస్తర్పయామీతి." = பின்பு தென்முகமாகப் பூணநூலினைப் பிராசீனவீதம்=வலத்தோண்மேலாக இடக்கரங் கீழ்க்கிடக்கப் பிதிர் தீர்த்தம் = பெருவிரற்சுட்டுவிரனடுநீரால் பிதிரரைக் குறித்து

"స్వధానమస్తర్పయామి" = "சுவதா(ர்)நமஸ்தர்ப்பயாமி" என்ற பல்லவத்தோடு கூடிய கிரியைக்கூறித் தருப்பணம் செய்யவேண்டும். எ-று. பல்லவம் = மந்திரமுடிபு.

ఉభాభ్యామపిహస్తాభ్యాముదకంయఃప్రయచ్ఛతి। సమూఢోనరకంయాతికాలసూత్రమవాక్శిరాః." = யார்? இருகையாலும் தருப்பணநீரைக் கொடுக்கின்றனோ? அந்தஅறிவில்லான்தலைகீழாகக்காலசூத்திரமென்னும் நிரயத்தை அடைகின்றான் என்ற இவ்வியாக்கிரபாதருரை சிராத்தாங்க தருப்பணத்தைப்பற்றிய தன்றிப்பிரமயாகம் பற்றிவந்த நித்தஜல தருப்பணத்தை இருகையாலும் செய்வதனை மறுத்தபடியன்று.

அதனாற் கார்ஷ்ணாஜினி முனியும் கூறினர். కార్ష్ణాజినిః। "శ్రాద్ధే వివాహకాలేచ పాణినైకేనదీయతే। తర్పణేతూభయేనైవ విధిరేష సనాతనః." = சிராத்தகாலத்திலும், விவாககாலத்திலும், நீர்த்தாரை யொருகரத்தால் விடப்படுகின்றது. தருப்பணத்தில் இருகையாலும் கொடுக்கப்படுகின்றது. இவ்விதிபழைய தொன்றாகவும் நிலைபெற்றதாகவும் உள்ளது. என்று. காண்க.

இத்தருப்பணத்தை, நிலை நீரிலிருந்து செய்யவேண்டும் என்று. கோபிலர் கூறினர். గోభిలః॥ "నోదకేషున పాత్రేషు నక్రుద్ధోనైకపాణినా। నోపతిష్ఠతితత్తోయం యద్భూమౌ నప్రదీయతే." = பாத்திரங்களிலும், நீர்நிலைகளிலும், ஒற்றைக்கையாலும், கோவத்தையுடையவனும் எந்தநீரினைத் தருப்பிக்கின்றனோ? அதுவும், எந்த நீர்நிலம் சுவறச்செய்வதில்லையோ? அதுவும், யாரைக்குறித்துத் தருப்பிக்கப்பட்டதோ? அவருக்குத்திருத்தியாவதில்லை. என்று. காண்க.

அதனால் நிலத்தின்மேனின்று அந்நிலத்து நிலை நீரைக்கொண்டு நிலத்தின்மேற் றானே தருப்பிக்க வேண்டுவது. நீர் முதலியவற்றுள் விழும்படி தருப்பிக்கலாகாது என்று விஷ்ணு கூறினர். విష్ణుః॥ "స్థలేస్థిత్వాజలేయస్తు ప్రయచ్ఛేదుదకంనరః। నోపతిష్ఠతితద్వారి పితౄణాంతన్నిరర్థకం" = நிலத்தின்மே லிருந்து நீரினுள் விழும்படியார் ஜலதருப்பணம் செய்கின்றனோ? அத்தருப்பணநீர் பிதிருக்கு ஏற்றதாகுவதில்லை. வீணாம். எ-று. காண்க.

அவ்விடத்துச் சில விசேடம் ஹாரீதர் கூறினர். హారీతః॥ "వసత్వావసనంశుష్కం స్థలేష్వాస్తీర్ణబర్హిషి। విధిజ్ఞస్తర్పణంకుర్యాన్న పాత్రేషుకదాచన। పాత్రాద్వాజలమాదాయ శుభేపాత్రాంతరేక్షిపేత్। జలపూర్ణేథవాగర్తే నస్థలేత్వనుబర్హిషి। కేశభస్మతుషాంగారకంటకాస్థిసమాకులం। భూపిస్మేహీతలంయస్మాత్ తస్మాత్తత్రర్పణంతతః" உலர்ந்த வாடையுடுத்து, மிகத்தருப்பை பரப்பிய நிலத்தின் மேல் விதியுணர்ந்தவன் தருப்பணஞ் செய்யவேண்டும். என்றும் பாத்திரங்களிற் றருப்பணஞ் செய்யலாகாது. ஆயின், நிலத்தின்மேற் பரப்பத்தக்க தருப்பை கிடையாவழிச் சுத்தமாகிய கலத்தில் நீர்பெற்றுக்கொண்டு புனிதமாகிய வேறு கலத்திலாயினும் குழி நிரப்பிய நீரிலாயினும் தருப்பிக்கலாமன்றித் தருப்பை பரப்பாத நிலத்தின்மேற் செய்யலாகாது ஏனெனில்? மயிர், சாம்பல், உமி, கரி, முட்கள், எலும்பு, முதலிய குற்றத்தோடு கூடிய நிலமிருப்பதுமா மாகலின். நிலத்தின்மேல் தருப்பை பரப்பி அதன்மேற் றருப்பிக்கவேண்டும். எ—று. காண்க.

ஆயின், "దేవతానాంపితౄణాంచ జలేదద్యాజ్జలాంజలిం" = தேவர்கட்கும், பிதிரர்க்கும், இருகையும் சேர்த்து நீர்த்தருப்பணம் நீரிற்றனே விழும்படிசெய்யவேண்டும். என்று கார்ஷ்ணாஜினி மிருதிவாக்கியம் உள்ளது. அசுத்தநிலத்தில் தருப்பணஞ்செய்யலாகாது. அங்ஙனஞ்செய்ய நேரிடின் நீரிலாயினும் செய்யலாம் என்ற கருத்து. என்றபடி.

அங்ஙனம் விஷ்ணுவும் கூறினர். విష్ణుః॥ "యత్రాశుచిస్థలంవాస్యాదుదకేదేవతాఃపితౄన్। తర్పయేత్తుయథాకామమప్సుసర్వంప్రతిష్ఠితం"—எவ்விடத்து நிலம் சுத்தமாயிருப்பதில்லையோ? அவ்விடத்துத் தன்மனம் போனவழி நீரினுள்ளே தேவர்க்கும் பிதிரர்க்குந் தருப்பணம் செய்யவேண்டும். அவ்வளவிற்கே தக்கதரம் நீர்க்கே யுள்ளது. எ-று. காண்க.

பாத்திர விசேடங்களை பிதாமகன் கூறினர். పితామహః॥ "హైమరూప్యమయంపాత్రం తామ్రకాంస్యసముద్భవం। పితౄణాంతర్పణేశస్తం మృణ్మయంతుపరిత్యజేత్" = பொன், வெள்ளி, செம்பு, வெண்கலம், இவற்றுளொன்றாற் செய்தகலம் பிதிரர் தருப்பணத்திற்குச் சிறந்ததாம். மண்பாத்திரத்தை யொழிக்க வேண்டுவது. எ—று. காண்க.

## தருப்பணத்திற்குரியகாலம்.

மரீசி. మరీచిః॥ "సౌవర్ణేనచపాత్రేణ తామ్రరౌప్యమయేనవా। ఔదుంబరేణ బైల్వేన పితౄణాం౽క్షయ్యమక్షయం" = பொன், வெள்ளி, செம்பு, அத்திமரம், வில்வமரம், இவற்றுளொன்றாற்செய்த கலந்நாற்செய்த தருப்பணம் பிதிரர்க்குக் கெடாதனவாகவிருக்கும் எ-று. காண்க.

## கலமில்லாதவிடயம்.

வெற்றுக்கையால் தருப்பணம் செய்யலாகா தென்று அவரே கூறினர். మరీచిః॥ "వినారౌప్యసువర్ణేన వినాతామ్రమయైస్తథా। వినామంత్రైశ్చదర్భైశ్చపితౄణాంనోపతిష్ఠతి" = வெள்ளி, பொன், செம்பு, மந்திரம், தருப்பை, இவற்றின் சம்பந்தமின்றிக் கொடுத்த தருப்பண நீர் பிதிரர், பெறுவதில்லை. எ-று. காண்க.

வேறுமிருதியும். స్మృత్యంతరే॥ "ఖడ్గమౌక్తికహస్తేన కర్తవ్యంపితృతర్పణం। మణికాంచనదర్భైర్వా నశుష్కేణకదాచన" = கட்கபாத்திரம், முத்து, இவைகளையுடைய கையால் பிதிரர் தருப்பணம் செய்யவேண்டும். அரதனங்கள், பொன், தருப்பை, இவற்றோடாயினும் செய்யவேண்டும், எப்போதும் வெறுங்கையோடுசெய்யலாகாது. எ-து. காண்க. கட்கபாத்திரம். என்பது அடிசிறுத்து நடுப்பெருத்து மேல்விரித்து இருக்கும் அருக்கிய வட்டகைகள் போல்வது. கட்கமிருகத்தின் கொம்பினால் செய்யப்பட்ட பாத்திர மென்பாருமுளர்.

மேற்கூறிய பொருள்களுள் எல்லாமிருத்தல் வேண்டுமோ? ஏதேனுமொன்றுபெற்றது சாலுமோ? என்றவழி அவ்விரண்டும் ஒத்தவாறல்லவென மரீசி மறுத்தனர். మరీచిః॥ "తిలానామప్యభావేతు సువర్ణరజతాన్వితం। తదభావేనిషించేత్తు దర్భైర్మంత్రేణవాపునః" = எள்ளில்லாவழிப் பொன்வெள்ளி யிருத்தல்வேண்டும். அவையுமில்லாவழித் தருப்பையாலாயினும் மந்திரத்தா லாயினும் தருப்பண நீர்விடவேண்டும். எறு. காண்க.

## திலதருப்பணம்.

எள்ளினைப் பெறும் வழியுள்ள விசேடத்தை யோகயாஞ்ஞவற்கியர் கூறினர். యోగయాజ్ఞవల్క్యః॥ "యద్యర్థ్యతంనిషించేత్తు తిలాంత్సమ్మి

త్రయజ్జలే। అన్యాన్యధాతుసవ్యేన తిలాగ్రాహ్యాఃవచక్షణైః " = மேலெடுத்துக் கொண்ட நீரைத் தருப்பிப்பதானால் நீரில் எள்ளினைக் கலந்து விட வேண்டும். அதனிலும் வேறுவகையாகச் செய்வதாயின் அறிவுடையோன் இடக்கரத்தால் அவ்வெள்ளினைப் பெற்றுக் கொள்ள வேண்டும். எ-று. காண்க.

மேற்கூறிய யோகயாஞ்ஞவற்கிய வுரை உரோமமில்லாத இடம்பற்றிய கருத்தினை யுடையது எனத் தேவலர் கூறினர். దేవలః॥ " లోమసంస్థాంస్తిలాన్కృత్వాయస్తుతర్పయతేపితౄన్। పితరస్తర్పితాస్తేన రుధిరేణమలేనచ " = யார்? எள்ளினை உரோமத்துள் ளிருப்பவையாகச் செய்துகொண்டு பிதிர் தருப்பணஞ்செய்கின்றனரோ? அவனால் பிதிரர், இரத்தத்தாலும் மலத்தாலும் தருப்பிக்கப்பட்டவராவர். எ-று. காண்க.

நிறத்தின் வேறு பாட்டால் எள்ளினை யுபயோகிக்கும் விசேடத்தினை யத்தேவலரோ கூறினர். దేవలః॥ "శుక్లైస్తుతర్పయేద్దేవాన్మనుష్యాంశ్శబలైస్తథా। పితౄణాంతర్పయేత్కృష్ణైస్తిలైస్సర్వదాద్విజః ". = இருபிறப்பாளன் வெள்ளை யெள்ளினால் தேவரையும், கலப்புநிற வெள்ளினால் இருடிகளையும், கறுப்பெள்ளினால் பிதிரரையும் தருப்பிக்கவேண்டும். எ-று. காண்க.

கூர்ம புராணத்துள் அத்தேவர் இருடி பிதிரர் தருப்பணத்திற் சிலவிசேடம் கூறப்பட்டது. కూర్మపురాణే॥ " దేవాన్బ్రహ్మఋషీంశ్చైవ తర్పయేదక్షతోదకైః। పితౄన్భక్త్యాతిలైఃకృష్ణైః స్వసూత్రోక్తవిధానతః " தேவருக்கும், பிரமவிருடிக்கும் அக்ஷதையோடு கூடிய நீராலும் பிதிரர்க்கு காரெள்ளினோடு கூடிய நீராலும் தன்சாகைக் குரிய சூத்திரத்துட் கூறிய விதிப்படி தருப்பணம் செய்யவேண்டும். எ-று. காண்க.

## திலதருப்பணம் கூடாதகாலம்.

சிலதிதிகள் முதலியவற்றுள் எள்ளினோடு செய்யும் தருப்பணம் ஆகாதென்று விலக்கப்பட்டுள்ளது. வருமாறு. "సప్తమ్యాం రవివారేచగృహేజన్మదినేతథా। భృత్యపుత్రకళత్రార్థీ నకుర్యాత్తిలతర్పణం " = மனைவி,

மக்கள், அடிமையர், இன்ப நிலைமையராக விருக்கவேண்டு மென்னும் எண்ணமுடையவன் சத்தமி, ஆதிவாரம், பிறந்த நாள், இக்காலங்களிலும் வீட்டினுள்ளும் திலதருப்பணம்செய் யலாகாது. எ-று. காண்க.

புராணத்துள்ளும். పురాణే॥ "ఉభయోః పక్షయోరాజంత్సప్తమ్యాం నిశిసంధ్యయోః। విద్యాపుత్రకళత్రార్థీ తిలాన్పంచసువర్జయేత్" = கல்வி, மக்கள், மனைவி வேண்டுமென்னும் விருப்பமுடையவன் இருபக்கத்துள்ள சத்தமிகள், இரவு, இருவகைச் சந்திகாலம், என்னு மிவ்வைந் திலும் எள்ளினை யொழித்துவிடவேண்டும். எ-று. காண்க.

போதாயனர். బౌధాయనః॥ "నజీవపితృకఃకుర్యాత్ స్త్రీభిస్తర్పణమాచరేత్। సప్తమ్యాం రవివారేచ జన్మర్క్షదివసేషుచ। గృహేనిషిద్ధంసతిలం తర్పణంతద్బహిర్భవేత్। వివాహేచోపనయనే చౌళేసతియథాక్రమం। వర్షమర్థంతదర్ధంచ వర్జయేత్తిలతర్పణం। తిథితీర్థవిశేషేషుకార్యం ప్రేతేషుసర్వదా"=பிழைத்திருக்கும் இருமுதுகுரவரையுடையவன் எப்பொழுதும் காரெள்ளோடு தருப்பணஞ் செய்யலாகாது. சத்தமி, ஞாயிற்றுக்கிழமை, பிறந்த நக்ஷத்திரம், பிறந்தவாரம், இந்தக்காலங்களில் திலதருப்பணம் செய்யலாகாது. மனைக்குள் திலதருப்பணம் செய்யலாகாது, வெளியிற்போய் செய்தல் வேண்டும். விவாகமானல் வருடபரியந்தமும், உபநயநமானல் ஆறுதிங்கள்வரையிலும், சௌளம்=முதலில் மயிர்கழிக்கும் வினையானல் மூன்று திங்கள் வரையிலும் திலதருப்பணம் செய்யலாகாது. இறந்த திதிவந்தபோதும், புண்ணியத்தலங்களுக்குச் சென்றபோதும் திலதருப்பணம் செய்யலாம். பிரேத கருமம் எல்லாவற்றிலும் எப்போதும் காரெள்ளினலேயே தருப்பணம் செய்யவேண்டுவது. எ-று. காண்க. பிரேதம்=பிணம். இறந்ததிதி = மிருததிதி = வருடந்தோறும்வரும் இறந்தநாள். இருமுது குரவர்=தாய்தந்தை.

## தருப்பணஞ்செய்யப்படுவோர்.

தருப்பணஞ் செய்யப்படத்தக்கவரைச் சத்தியவிரதர் குறிக்கின்றனர். సత్యవ్రతః॥ "కృతోపవీతోదేవేభ్యో నివీతీచభవేత్తతః। మనుష్యాంస్తర్పయేద్భక్త్యా బ్రహ్మపుత్రానృషీంస్తథా। అపసవ్యంతతఃకృత్వా సవ్యంజాన్వాచ్యభూతలే। దర్భపాణిస్తువిధినా ప్రేతాంత్సంతర్పయేత్తతః" = சவ்வியமாக தேவ

தருப்பணம், நிவீதத்தினல் இருடிகளு தருப்பணம், பவித்திரம் புனைந்து அபசவ்வியமாகப் பூணூல் தரித்து இடதுகாலை மண் மேல் மடித்து இறந்துபோன பிதிரர்க்குத் தருப்பணமும் செய்ய வேண்டும். எ-று. காண்க.

யோக யாஞ்ஞ வற்கியரும். యోగయాజ్ఞవల్క్యోపి॥ "బ్రహ్మాణంతర్పయేత్పూర్వం విష్ణుంరుద్రంప్రజాపతిం। వేదాంశ్ఛందాంసిదేవాంశ్చ ఋషీంశ్చైవతపోధనాన్। ఆచార్యాంశ్చైవగంధర్వా నాచార్యతనయాంస్తథా। సంవత్సరంసావయవం దేవీరప్సరసస్తథా। తథాదేవాన్నరాన్నాగాం నాగాన్సర్వతానపి। సరితోర్ణవమనుష్యాంశ్చ యక్షాన్రక్షాంసిచైవహి। పిశాచాంశ్చసుపర్ణాంశ్చ భూతాన్యథపశూంస్తథా। వనస్పతీనోషధీంశ్చ భూతగ్రామాంశ్చతుర్విధాన్। సవ్యజానుంతతో న్వాచ్యసాణిభ్యాంసజిణాముఖః। తల్లింగైస్తర్పయేన్మంత్రైస్సర్వాన్పితృగణాంస్తథా। మాతామహాంశ్చసతతంశ్రద్ధయాతర్పయేద్ద్విజః"=பிரமன், விஷ்ணு, உருத்திரன், பிராஜாபதி, வேதங்கள், சந்தசு, தேவர்கள், இருடிகள், தவச்செல்வர், ஆசிரியன், கந்தருவர், ஆசிரியன் மக்கள், வருடம், அதன் உறுப்பாகிய அயனம் - இருது - மாதம், தெய்வங்கள், தருக்கள், நாகசர்ப்பங்கள், கடல், மலை, யாறுகள், மனுடர், இயக்கர், அரக்கர், பைசாசர், கருடர், பூதர், பசு, வனஸ்பதி = காட்டுச் செடிவகைகள், பயிர்கள், எனவே அண்டசம், சுவேதசம், சராயுஜம், உற்பிசமுமாகிய நால்வகையோனியுயிர்கள், இவைகளனைத்தினையும் குறித்துத்தருப்பணம் செய்யவேண்டும். பின்பு இடது காலைமடித்துத் தென்முகமாக அவ்வவர் பெயராயுடைய மந்திரங்களைக் கூறி இருகரத்தினலும் பிதிரர் அனைவர்க்கும் தருப்பணம் செய்யவேண்டும். அவ்வாறே மாதாமகர் = தாயின் தந்தையாகிய பாட்டனுக்கும்சிரத்தையோடும் தருப்பணம்செய்யவேண்டும். எ-று. காண்க.

சௌனகர். శౌనకః॥ "అథకాండఋషీనేతా నుదకాంజలిభిశ్శుచిః। అవ్యగ్రస్తర్పయేన్నిత్యం మంత్రైరేవాథనామభిః"=யஜுர்வேத சாகையை யுடையவர்கள் வேதகாண்டத்தின் இருடிகள் பெயராக்கூறி அதே மந்திரங்களாலேவிளையாமல் இருகையாலும் நீர்வாங்கிக்கொண்டு இவ்விரண்டுவிசை தருப்பணம் செய்யவேண்டும். எ-று. காண்க.

பைட்டீநசி. పైఠీనసిః॥ "అపసవ్యంతతఃకృత్వా స్థిత్వాచపితృదిఙ్ముఖః। పితౄన్దివ్యానదివ్యాంశ్చ పితృతీర్థేనతర్పయేత్" = பின்பு, அபசவ்வியமாகப்

பூணூலிட்டுக்கொண்டு தென்முகமாகத் திரும்பிப் பிதிரர் தீர்த்தத்தினால் திவ்வியபிதிரர்க்கும் அதிவ்வியபிதிரர்க்கும் தருப்பணம் செய்யவேண்டும். எ-று. காண்க. வசு, உருத்திரர், ஆதித்தர், திவ்வியபிதிரர் எனப்படுவர். இயற்கைப் பிதிரராதலின். தன்தந்தைமுதலியோர் அதிவ்வியபிதிரராம், கருமவகையாற் பிதிரராதலின்.

யோகயாஞ்ஞவற்கியர். యోగయాజ్ఞవల్క్యః॥ "వసూన్రుద్రాంస్తథాదిత్యాన్నమస్కారసమన్వితాన్" = வசு உருத்திரர் ஆதித்தர் என்னும் தேவர்க்கு "நமஸ்தர்ப்பயாமி" என்று இரண்டாம் வேற்றுமையுருபினைச்சேர்த்துத் தருப்பணம்செய்யவேண்டும். எ-று. காண்க.

## அஷ்டவசுக்கள்.

எண்வசுக்கள் பெயர்களை பைட்டீநசி என்பவராற் கூறப்பட்டது. పైఠీనసిః॥ "ధ్రువో దమశ్చ సోమశ్చ ఆపశ్చైవానిలోఽనలః। ప్రత్యూషశ్చ ప్రభాసశ్చ వసవోఽష్టౌ ప్రకీర్తితాః" = துருவன், தமன், சோமன், ஆபன், அனிலன், அனலன், பிரத்தியூடன், பிரபாசன், இவ்வெண்மரும் வசுகணமாகிய பிதிர்த்தேவர்களாம். எ-று. காண்க.

## ஏகாதச ருத்திரர்.

இதுவுமது. "అజైకపాదహిర్బుధ్న్యో విరూపాక్షోథ రైవతః। హరశ్చ బహురూపశ్చ త్ర్యంబకశ్చ సురేశ్వరః। సావిత్రశ్చ జయంతశ్చ పినాకీ చాపరాజితః। ఏతే రుద్రాస్సమాఖ్యాతా ఏకాదశ సురోత్తమాః" = அசைகபாதர், அகிர்ப்புத்தினர், விருபாக்கர், இரைவதர், ஹரர், வெகுரூபர், சுரேசராகிய திரியம்பகர், சாவித்திரர், சயந்தர், பிநாகி, அபராசிதர் என்னும் இப்பெயரினையுடைய பதினொருதேவச்சிரேட்டர் உருத்திரகண பிதிர்த்தேவர்கள். எ-று. காண்க.

## துவாதசாதித்தர்.

இதுவுமது. "ఇన్ద్రో ధాతా భగః పూషా మిత్రోఽథ వరుణోఽర్యమా। అర్చిర్వివస్వాంస్త్వష్టా చ సవితా విష్ణురేవ చ। ఏతే వై ద్వాదశాదిత్యా దేవానాం ప్రవరా మతాః। ఇమే హి దివ్యాః పితరః పూజ్యాస్సర్వే ప్రయత్నతః"=இந்திரன், தாதா, பகன், பூஷன், மித்திரன், வருணன், அரியமான், அருச்சி, விவசுவன், துவட்டா, சவிதா, விஷ்ணு, என்னுமிவர் தேவருட் சிறந்த பன்

னிரண்டு ஆதித்தகண பிதிர்த்தேவராம். இம்மூவகையாரன்றோ? திவ்வியபிதிர் எனப்படுகின்றனர். இவர்களையும் தன்தந்தை முதலிய அதிவ்வியபிதிரரையுந்தருப்பிக்கவேண்டுவது. எ-று. காண்க.

## அதிவ்விய பிதிர் தருப்பணம்.

இதுவுமது. "స్వనామగోత్రగ్రహణం పురుషంపురుషంప్రతి। తిలోదకాంజలీంస్త్రీంస్త్రీను దైచ్ఛరుదైచ్ఛర్వినిక్షిపేత్" = அந்தந்தப் பிதிரர்களையும் ஒவ்வோர் புருடராக அவரவர் கோத்திரம் பெயர்கூறி மும்மூன்றுகை எள்ளும் நீரும் எடுத்தெடுத்துத் தருப்பணஞ் செய்ய வேண்டும். எ-று. காண்க.

யோகயாஞ்ஞவற்கியர். యోగయాజ్ఞవల్క్యః "సవర్ణేభ్యోంజలిర్దేయో నాసవర్ణేభ్యఏవచ। గోత్రనామస్వధాకారై స్తర్పయేదనుపూర్వశః;" = தன்சாதியார்க்கு நீராஞ்சலியைத் தருப்பணமாகத் தரவேண்டுவது. வேற்று வருணத்தார்க்குக் கொடுக்கலாகாது. கோத்திரம், பெயர் "స్వధా = சுவதா" என்னும் மந்திரபல்லவம் இவைகளோடு முதற்கணிருந்து முறை பிறழாது தருப்பணஞ்செய்து வரவேண்டும். எ-று. காண்க.

பிதிரர் பெயர் கூறுவதனுள்ளிருக்கும் விசேடத்தினைப் போதாயனர் கூறினார். బోధాయనః॥ "శర్మాంతంబ్రాహ్మణస్యోక్తం వర్మాంతంక్షత్రియస్యతు। గుప్తాంతంచైవవైశ్యస్య దాసాంతంశూద్రజన్మనః। చతుర్ణామపివర్ణానాం పితౄణాంపితృగోత్రతః। పితృగోత్రంకుమారీణా మూఢానాంభర్తృగోత్రతః" = அந்தணன், அரசன், வைசியன், சூத்திரனுடைய பெயர்களின் முடிவில் கூறியமுறைப்படி சிரலேசருமன், வருமன், குத்தன், தாசன் என்ற சொற்களைச்சேர்த்துத்தருப்பணம் செய்யவேண்டுவது இந்நான்கு வருணத்துள்ளவர்க்கும் அந்தந்தப்பிதிரர்கட்கும் அவ்வவர் கோத்திரத்தோடும், மணம் புரியாத பெண்களுக்குத் தந்தை கோத்திரத்தோடும், மணம் புணர்ந்த பெண்களுக்குக் கணவன் கோத்திரத்தோடும் தருப்பணஞ்செய்க. எ-று. காண்க.

## தருப்பணத்தில் பிதிரர் முறை.

பிதிரர் தருப்பணத்தில் முறைமையை சத்தியவிரதர் கூறினர். సత్యవ్రతః॥ "పితృభ్యఃప్రత్యహందద్యా త్తతోమాతృభ్యఏవచ। తతోమాతామ

హీనాంచ పితృవ్యస్యసుతస్యచ" = நித்தமும் தந்தைவருக்கத்துள் மூவர், பின் தாய் வருக்கத்துள் மூவர், அதனுக்குமேல் தாயைப்பெற்ற பிதாவருக்கத்துள் மூவர், பின் தாயின் அன்னை வருக்கத்துண் மூவர், பின் தந்தை யுடன்பிறந்த சகோதரர்கள், புத்திரர், இவ் வகையாகத் தருப்பணஞ்செய்யவேண்டும். எ-று. காண்க.

விஷ்ணுபுராணம். విష్ణుపురాణే॥ "పద్యాత్పైత్రేణతీర్థేన కామ్యాన్యన్యాం ఛృణుష్వమే। మాత్రేప్రమాత్రేతన్మాత్రే గురుపత్న్యైతథానృప। గురవేమాతులాదీనాం స్నిగ్ధమిత్రాయభూభుజః"=பிதிரர் தீர்த்தத்தினல் காமிய பிதிரர்கட்குத் தருப்பண நீரைக்கொடுக்கவேண்டுவது. தாய்க்கும், தந்தையைப் பெற்றவட்கும், தன் பாட்டன்தாய்க்கும், குருமனைவிக்கும், குர வனுக்கும், அம்மான் முதலியவர்களுக்கும், நட்புசெய்த மித் திரனுக்கும் தருப்பணஞ் செய்யவேண்டும். எ-று. காண்க.

ஹாரீதர். హారీతః॥ "పిత్రాదీన్మాత్రాదీన్మాతా మహాదీన్పితృవ్యాం స్తత్పత్నీర్జ్యేష్ఠ భ్రాతౄంస్తత్పత్నీర్మాతు లాదీంస్తత్పత్నీర్గుర్వాచార్యోపా ధ్యాయాదీంత్సుహృత్సం బంధిబాంధవాన్ స్త్రీవ్యా స్యదాతృపోషణకారిణ స్తత్పత్నీశ్చతర్పయేత్" = தந்தைவருக் கம், தாய்வருக்கம், தாயைப் பெற்ருேன் வருக்கம், தாயைப்பெற் ருேள் வருக்கம், தந்தையொடு பிறந்த சகோதரர், அவர்மனைவி யர், ஆதியென்றதனல் தந்தை சகோதரியர், தாய் சகோதரியர் மகட்கொடை நேர்ந்தோர், மனைவியொடு பிறந்தோர் முதலி யோர், அவரவர் அணுக்கச்சம்பந்தச் சுற்றத்தார், குரு, ஆசிரி யன், உபாத்தியாயன், பொன்கொடுத்தோன், அன்னமிட்டவன், காத்தவன், அவன்மனைவி, இவர்க ளனைவர்க்குந் தருப்பணஞ் செய்க. எ-று. காண்க.

## தந்தையுள்ளவன்செய்யும்தருப்பணம்.

தந்தை பிழைத்திருக்கையில் மகன் செய்யத்தக்க தருப் பணத்தின் முறைமையை யோகயாஞ்ஞவற்கியர்கூறினர். "యోగ యాజ్ఞవల్క్యః॥ "కవ్యవాహోనలస్సోమోయమశ్చైవార్యమాతథా। అగ్నిష్వాత్తాస్సోమ పాశ్చ తథాబర్హిషదోపిచ। యదిస్యాజ్జీవపితృక స్తాన్వదద్యాచ్చతథాపితౄన్। యేభ్యోవాపి పితాదద్యా త్తేభ్యోవాపిప్రదీయతే। ఏతాంశ్చైవప్రమీతాంశ్చ ప్రమీతపితృకోద్విజః" = கவ்வியவாகன், அனிலன், சோமன், இயமன், அரியமன், அக்கினிஷ் வாத்தர்கள், சோமபாக்கள், பரிஹிஷதர்கள், இவர்களைப் பிழைத்

திருக்குந் தந்தையை யுடையவன் பிதிர்த்தேவர்களாக உணர்ச்சி கொண்டு தருப்பணம் செய்யவேண்டும். அல்லது தன் பிதா யாவர் பொருட்டுத்தருப்பணநீரைக் கொடுக்கின்றனோ? அவர்களைக்குறித்து, சாமானியமாகவாயினும் தருப்பணநீரைக்கொடுத்தல்வேண்டும். தந்தையையிழந்த இருபிறப்பாளன் இறந்துவிட்ட பிதிரர் அனைவர்க்கும் தருப்பணஞ்செய்யவேண்டும். எ-று. காண்க.

## முடிவானநீராஞ்சலி.

முடிவிற்செய்யும் நீராஞ்சலியைக் காத்தியாயனர் கூறினர். కాత్యాయనః॥ "పితృవంశ్యామాతృవంశ్యాయేచాన్యేపితరోజనాః। తత్తస్తూదకమర్హంతి యేతాంస్తాంస్తర్పయామ్యహం" = பிதிர் வங்கிசத்திற் பிறந்தவர்கள், தாய்மரபிற்பிறந்தவர்கள், மற்றுமுள்ள யார் யார்? என்பிதிர்வருக்கத்திற்சேர்ந்திருக்கின்றனரோ? அவர்கள் அனைவர்பொருட்டும், என்னால் யார் தருப்பணநீரைப் பெறத் தக்கவர்களோ? அவரவரனைவர்க்கும்திருத்தியாகும்படிநான்செய்கின்றேன். எ-று. காண்க.

ஆதித்தியபுராணம். ఆదిత్యపురాణే॥ "యత్రక్వచనసంస్థానాం క్షుత్తృష్ణోపహతాత్మనాం। తేషాంహిదత్తమక్షయ్య మిదమస్తుతిలోదకం। యేమేకులేలుప్త పిండాః పుత్రదారవివర్జితాః। తేషాంతుదత్తమక్షయ్య మిదమస్తుతిలోదకం" = யாண்டேனுமோரிடத்தி லுள்ளவர், எந்தவிடத்திலாயினும் பசியோடும் தாகத்தினேடும், கதியற்றவராயுள்ளவர் யாவரோ? அவர்க்கு இந்தத்திலோதகம் கெடாததாகுக என்மரபில்யார் மக்கள், மனைவி, இல்லாதவர்களாய், பிண்டத்திற்கு வழியற்றவர்களாய் இருக்கின்ரர்களோ? அவர்கட்கு என்னால் கொடுக்கப்பட்ட இந்த எள்ளுந்தண்ணீரும் கேடற்றதாகுக. எ-று. காண்க.

மச்சபுராணம். మత్స్యపురాణే॥ "యేబాంధవాబాంధవాయే యేన్యజన్మని బాంధవాః। తేతృప్తిమఖిలాయాంతు యేవాస్మత్తోభివాంఛితాః" = யார் சுற்றத்தினரோ? யார் சுற்றத்தினரல்லாதவரோ? யார் வேறு பிறப்பில் சுற்றமாக விருந்தவரோ? யார் என்னால் நீர்க்கடனை விரும்புகின்ரரோ? அவர்களனைவரும் திருத்தியடைக. எ-று. காண்க.

## சுருக்கமான தருப்பணம்.

விரிவாகத் தருப்பணஞ் செய்வதற்குச் சத்தியில்லாதவன் சுருக்கமாகத் தருப்பணத்தைச் செய்யலாமென்று விஷ்ணுபுரா

ணத்துட் கூறப்பட்டது. విష్ణుపురాణే॥ "ఆబ్రహ్మస్తంబపర్యంతం జగత్తృప్యత్విత్యబ్రువన్। క్షిపేత్పయోఞ్జలీంస్త్రీంస్తు కుర్యాత్సంక్షేపతర్పణం"=பிரமன் முதலாக அசைவற்ற கட்டையாக விருக்கும் அணுத்திரள் வரையிலும் சராசரமாயுள்ள எல்லாப் பிரவஞ்சமுந் திருத்தியடைக என்று சொல்லுபவனாய் மூன்றுகைச் சலத்தை இறைத்துச் சுருக்கதருப்பணம் செய்யவேண்டும். எ-று. காண்க.

## இயம தருப்பணம்.

இயம தருப்பணம் விருத்தமனுவாற் கூறப்பட்டது. వృద్ధమనుః॥ "దీపోత్సవచతుర్దశ్యాంకార్యంచయమతర్పణం। కృష్ణాంగారచతుర్దశ్యామపికార్యం సదైవచ। యమాయధర్మరాజాయ మృత్యవేచాంతకాయచ। వైవస్వతాయకాలాయ సర్వభూతక్షయాయచ। ఔదుంబరాయదధ్నాయ నీలాయపరమేష్ఠినే। వృకోదరాయచిత్రాయ చిత్రగుప్తాయతేనమః"=ஆசுவீஜம்=ஐப்பிசிமாசம் கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசியிலும், மற்றெந்த மாசங்களிலாயினும் செவ்வாய்க் கிழமையோடுங் கூடிய கிருஷ்ண சதுர்த்தசியிலும், இயமனைக் குறித்துத் தருப்பணம் செய்யவேண்டும். இயமன், தருமராஜன், மிருத்தியு, அந்தகன், வைவசுவதன், காலன், சருவபூதக்ஷயன், ஔதும்பரன், தத்னைன், நீலன், பரமேஷ்டி, விருகோதரன், சித்திரன், சித்திரகுத்தன், என்னும் பெயராகிய மனுக்களை நான்காம் வேற்றுமை யுருபோடும் "நம" என்னும் மந்திரபல்லவத்தோடும். சேர்த்துக்கூறித்தருப்பணம்செய்யவேண்டும். எ-று. காண்க.

இந்த இயம தருப்பணஞ் செய்யவேண்டிய நியமத்தை ஸ்காந்த புராணத்துள் கூறப்பட்டது. స్కాందపురాణే॥ "దక్షిణాభిముఖోభూత్వా తిలైస్సవ్యంసమాహితః। దైవతీర్థేనదేవత్వాత్తిలైఃప్రేతాధిపాయచ"=இயமன் இறந்தவரனைவர்க்குந் தலைவனாகலின் அவனைக் குறித்துத் தருப்பணம் தென்முகமாக அபசவ்விய சூத்திரமுடையவனாக எள்ளினோடு நீர் கொடுக்கவேண்டும். இயமன் திக்குப்பாலகனாகிய தெய்வமாமாகலின் அத்தருமராஜன் பொருட்டுத்தெய்வதீர்த்தத்தினாலும் தருப்பணம செய்யவேண்டும். எ-று. காண்க.

இவ்வாறு இயமதருப்பணஞ் செய்பவனுக்கு உண்டாகும் பயனை அவ்வியமனே கூறினார். యమః॥ "యత్రక్వచననద్యాంహి స్నాత్వా

కృష్ణచతుర్దశీం। సంతర్ప్యధర్మంరాజానం ముచ్యతేసర్వకిల్బిషైః" = தேய்பிறைச் சதுர்த்தசிதிதியில் எங்கேனும் ஒருயாற்றில் நீராடி இராஜனாகிய தருமதேவதைக்குத் தருப்பணம் செய்தவன் எல்லாப் பாவத்தினின்றும் விடப்படுகின்றான். எ-று. காண்க.

## பீஷ்மதருப்பணம்.

மாகம் = மாசியீ சுக்கிலபக்ஷம் அட்டமிதினத்தில், பீஷ்மனைக்குறித்துத் தருப்பணம் செய்யவேண்டும் என்று வியாசர் கூறினார். వ్యాసః॥ "శుక్లాష్టమ్యాంతుమాఘస్య దద్యాద్భీష్మాయయోజలం। సంవత్సర కృతంపాపం తత్క్షణాదేవనశ్యతి। వైయాఘ్రపాదగోత్రాయ సాంకృతిప్రవరాయచ। గంగాపుత్రాయభీష్మాయ ప్రదాస్యేహంతిలోదకం। అపుత్రాయదదామ్యేత జ్జలంభీష్మాయ వర్మణే" = மாசித் திங்களின் வளர்பிறை அட்டமியில் வீட்டுமன் பொருட்டு யார் தருப்பணநீரைக் கொடுக்கின்றானோ? அவன் அவ்வருடத்திற் செய்த பாவங்களெல்லாம் அப்பொழுதே அழிந்துவிடுகின்றது. வையாக்கிரபாத கோத்திரன், சாங்கிருதிக இருடிப்பிரவரன், கங்கைமகன், கான்முளையில்லான், பீஷ்மவருமன், அரசகுலத்து அவதரித்திருந்த வீடுமன் பொருட்டு இத்திலோதகத்தைத் தருகின்றேன் என்றபொருளுடைய, ஆரிடமந்திரத்தைக் கூறித் தருப்பணம் செய்யவேண்டும். எ-று. காண்க. கான்முளை=புத்திரர்.

## தருப்பணச்சிறப்பு.

தருப்பணத்தின் சிறப்பு புராண சாரத்துட் கூறப்பட்டது. పురాణసారే॥ "ఏవంయస్సర్వభూతాని తర్పయేదన్వహంద్విజః॥ సగచ్ఛేత్పరమంస్థానం తేజోమూర్తిమనామయం" = இவ்வாறு எந்த விருபிறப்பாளன் ஒவ்வொருபகலிலும் எல்லாவுயிர்களையும் திருத்தி செய்விக்கின்றானோ? அந்த விருபிறப்பாளன் ஒளிமயமாகிய வுடம்பினையும், நோயின்மையினையும், மேலான கதியையும் அடைகின்றான். எ-று. காண்க.

## தருப்பணஞ்செய்யாவழிவருங்குற்றம்.

தருப்பணம் செய்யாதொழியின் பாவம்வருகின்றதென்று புராணத்துட் கூறப்பட்டது. పురాణే॥ "దేవాంశ్చైవ మునీంశ్చైవ పితౄం

సై్వయోనతర్పయేత్। దేవాదీనామృణీభూత్వానరకంసప్రజత్యధః”=தேவர்களையும், முனிவர்களையும், பிதிர்களையும் குறித்து யார் தருப்பணஞ் செய்வதில்லையோ? அவன் அந்தத் தேவ இருடி பிதிரர்கட்கு இறுக்கத்தக்க கடனை யுடையவனாய் நரகமென்னும் கீழ்நிலைக்குச் செல்லுகின்றான். எ-று. காண்க.

**யோகயாஞ்ஞவற்கியர்.** యోగయాజ్ఞవల్క్యః॥ “నాస్తిక్యభావాద్యస్తాంస్తు నతర్పయతివైపితౄన్। పిబంతిదేహనిస్రావం పితరోఽస్యజలాంజలిం” = தருப்பணத்தினால் பயனுண்டென்னு நம்பிக்கையில்லாமற் போவதால் யார் தேவரிஷி பிதிர் தருப்பணத்தைச்செய்வதில்லையோ? அவன் பிதிரர் நீர் விடாய்ப்பட்டவர்களாய் அவனது தேகத்தினின்றும் கழிந்த நீரினைக்குடிப்பர். எ-று. காண்க.

**ஹாரீதர்.** హారీతః॥ “దేవాశ్చపితరశ్చైవకాంక్షంతిసలిలాంజలిం। అదత్తేతుని రాశాస్తే ప్రతియాంతియథాగతం” = தேவர்களும் பிதிரர்களும், ஒருகை நீரை விருப்புற்று வருகின்றனர். கொடாவிட்டால் வந்ததுபோலவே பின்செல்லுகின்றனர். எ-று. காண்க.

**காத்தியாயனர்.** కాత్యాయనః॥ “ఛాయాంయథేచ్ఛేచ్ఛరదాతపార్తఃపయ యఃపిపాసుఃక్షుధితోఽలమన్నం। బాలోజనిత్రీం జననీ చబాలంయోషిత్పుమాంసం పురుషశ్చయోషాం॥ తథాసర్వాణిభూతాని స్థావరాణిచరాణిచ। విప్రాదుదకమిచ్ఛంతి సర్వేహ్యుదకకాంక్షిణః। తస్మాత్సదైవకర్తవ్య మకుర్వన్మహతైనసా। యుజ్యతేబ్రాహ్మణఃకుర్వన్విశ్వమేతద్బిభర్తిహి” = வலியவெய்யிலிற் சோடைப்பட்டவன் நீழலையும், தாகங்கொண்டவன் குடிநீரையும், மிகப்பசித்தவன் சோற்றினையும், குழவி தாயையும், தாய்மக்களையும், மாதர்கணவனை யும், ஆடவர் மாதரையும், எவ்வாறு விரும்பித் தொடர்வரோ? அவ்வாறே, இந்தச் சராசரமாகிய எல்லாவுயிர்களும், தருப்பணநீரை வேண்டி நிற்பனவாய் வேதியன் கைநீரையே விரும்புகின்றன. அதனால், எப்பொழுதும் தருப்பணத்தைச் செய்யவே வேண்டும். செய்யாதவன் மஹாபாவத்தை யடைவன். எந்தக் காரணத்தினால் வேதியன் தருப்பண கருமத்தைச் செய்கின்றானோ? அந்தக்காரணத்தினாலிந்தவுலகினை அந்தவேதியன் பொஷிக்கத் தக்கவனாவன். எ-று. காண்க.

ஈண்டு பிதிருடைய காதைகள் பிரசித்தி யடைந்திருக்கின்றன. పితృగాథాసు॥ “అపినస్సకులేభూయాద్యోనుదద్యాజ్జలాంజలిం। నదీషుబహులతో

యాసు శీతళాసుసంతృప్తః" = குளிர்ந்தநீர் மிகவுமுடைய யாற்றில் எம்பொருட்டு ஒருகைநீர் தருப்பிப்பவன் யாவனே? அவன் எங்கள் குலத்துள்உண்டாயிருக்கக்கடவது. அல்லதுஉண்டாயிருப்பனே? என்று அதிவ்விய பிதிரர்கள் விரும்புகின்றார்கள். எ-று. காண்க.

## ஆடைபிழிதல்.

தருப்பணம் செய்தபின் ஆடைபிழிதலைச் செய்யவேண்டுவது என்று யோகயாஞ்ஞவற்கியர் கூறினர். యోగయాజ్ఞవల్క్యః॥ "యావద్దేవానృషీంశ్చైవ పితౄంశ్చాపినతర్పయేత్। తావన్నపీడయేద్వస్త్రం యోహి స్నాతోభవేద్ద్విజః। నిష్పీడయతియోఽప్ర స్నాత్వానవస్త్రమతర్పణం। నిరాశాఃపితరో యాంతి శాపందత్వాసుదారుణం'" = எந்த விருபிறப்பாளன் நீராடுகின்றானே? அவன் நீராடியபின் எதுவரையில் தேவரிஷி பிதிர் தருப்பணம் செய்வதில்லையோ? அதுவரையிலும் நீராடிய ஈரவுடையைப் பிழியலாகாது. எந்த இருபிறப்பாளன் தருப்பணஞ்செய்யாமலே நீராடிய ஈரவுடையைப் பிழிந்துகொள்ளுகின்றானே? அவன் பிதிரர்கள் தங்களுக்கு இனித்தருப்பண நீரில்லையென்னும் நிராசையோடு, அவனுக்குமிகவும் அஞ்சத்தக்க கொடுஞ்சாபமிட்டுப்போகின்றனர். எ-று. காண்க.

அந்த ஈரவுடையை நிலத்தின்மேற் பிழிதல் வேண்டும் என்று வேறொரு மிருதியிற் கூறப்பட்டது. స్మృత్యంతరే॥ "వస్త్రనిష్పీడనేతోయం శ్రాద్ధేచోచ్ఛిష్టభోజనం। భాగధేయంశ్రుతిఃప్రాహతస్మాన్నిష్పీడయేత్స్థలే" ஆடை பிழியும்போது விழுகின்றநீரும் சிராத்தத்தில் வேதியர் உண்டுமிகுந்த சேடமும் "பாகதேயம்" என்ற பெயருடையதென்றுவேதங் கூறுகின்றது. அதனால், நிலத்தின்மேற் பிழியவேண்டுவது. எ-று. காண்க. (பாகதேயம் = பங்கிட்டுவைக்கத்தக்கது. எனவே, ஆடைபிழிந்த நீர் நிலத்தின்மேல் விட்டால் அவன் மரபிற் பிறந்திறந்து கதியற்றவர்களாயிருப்பவர்க்குத் திருத்தியானபங்கு ஆகின்றது. சிராத்தஞ் செய்தால் வேதியர் உண்டுமிகுந்த சேடத்தை, உண்கலத்தினின்றும் கீழ்விழவெறிந்தால் அந்த வுச்சிட்டசேடம் சிராத்த கருத்தாவாகிய தலைவனுடைய மரபில் உச்சிட்டத்தைத் தின்றிருந்து இறந்துபோனதாசதாசி ஜனத்திற்குப் பாகமாக விருக்கின்றது.)

## சூரியதருப்பணம்.

விஷ்ணுபுராணம். విష్ణుపురాణే॥ "ఆచమ్యచతతోదద్యా త్సూర్యాయ సలిలాంజలిం। నమోవివస్వతేబ్రహ్మ న్భాస్వతేవిష్ణుతేజసే। జగత్సవిత్రేశుచయే సవిత్రేకర్మ సాక్షిణే" = பின்பு ஆசமனஞ்செய்து பிரமவொளியோடு விளங்கி எங்குமாகிய வொளியுண்டாய் உலகசிருட்டி செய்பவனையும், எல்லாக் கருமங்கட்கும் சான்றும், உலகத்திற்கு ஆன்மாவுமாகிய சூரியனுக்கு, ஒருகைநீரைஅருக்கியமாக இறைத்துத்தருப்பணஞ் செய்யவேண்டும். எ-று. காண்க.

தருப்பணவிதி முற்றிற்று.

---

## தேவபூசனை.

இங்ஙனமாக மூலவசனத்துள் கூறுதொழிந்த கருமங்களைத் தருப்பணம் வரையில் கூறி முடிக்கப்பட்டது. இனி மூலத்துட் கூறப்பட்ட முறைப்படி தேவபூசனையை விவரமாகக் கூறுகின்றும். அதனை நரசிங்கபுராணத்துட் கூறப்பட்டது. నృసింహపురాణే॥ "జలదేవాన్నమస్కృత్య తతోగచ్ఛేద్గృహంబుధః। పౌరుషేణతుసూక్తేన తతోవిష్ణుంస మర్చయేత్" = நீர்த்தேவதைகளுக்கு வந்தனஞ் செய்து பின்பு வீட்டுக்குவந்து புருடசூக்தத்தில் விஷ்ணுவை நன்றாகப் பூசிக்க வேண்டும். எ-று. காண்க.

ஆக்கிநேயபுராணம். ఆగ్నేయపురాణే॥ "మంత్రైర్వైష్ణవైరాద్రైస్తు సావిత్రైశ్శాంభవైస్తథా। విష్ణుంప్రజాపతింవాపి శివంవాభాస్కరంశివాం। తల్లింగైరర్చయే న్మంత్రై స్సర్వదేవాన్సమాహితః" = விஷ்ணு மந்திரத்தால் விஷ்ணுவை யும், இரௌத்திர மந்திரத்தால் பிரஜாபதியையும், சவித்திரு மந்திரத்தால் சூரியனையும், சாம்பவ மந்திரத்தால் சிவனையும், தேவீமந்திரத்தால் பரசிவ சத்தியையும், அந்தந்தத் தேவதைக ளின்பெயர் தொழில் குணங்குறிப்புத்தெரிய விருகின்ற சுரௌத ஸ்மார்த்த புராண மந்திரங்களால் எல்லாத்தேவரையும் பூசிக்க வேண்டும். எ-று. காண்க.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ "బ్రహ్మాణంశంకరంసూర్యం తథైవమధు సూదనం। అన్యాంశ్చాభిమతాన్దేవా న్భక్త్యాచాక్రోధనోత్వరన్। స్వైర్మంత్రైరర్చయేన్ని

త్యం పతె1రెపుష్పైస్తథాంబుభిః" = பிரமன், சிவன், சூரியன், விஷ்ணு மற்றும் முள்ள பலதேவர்கள் இவர்களைப் பத்தியோடு கோவத்தை யொழித்து, விரையாமல், அந்தந்தத் தேவதா மந்திரங்களால் நாடோறும், பத்திரம், பூக்கள், நீர்முதலிய வுபசாரத்தோடும் பூசிக்கவேண்டும். எ-று. காண்க.

ஸ்மிருதிசங்கிரகம். స్మృతిసంగ్రహే॥ "ఆదిత్యమంబికాంవిష్ణుం గణనాథంమహేశ్వరం। ఏతెష్విష్టంప్రధానంతు పంచాయతనమర్చయేత్" = சூரியன், மஹாதேவி, விஷ்ணு, கணபதி, சிவன் இவ்வைந்து தேவரும் கூடினுல் அது "பஞ்சாயதனம்" என்னப்படும். இவற்றுள், நான்குதிசைக் கண்ணும் நான்குதேவர். நடுவே யொருதெய்வம் இவ்வாறு வைத்துப் பூசிக்கவேண்டும். எ-று. நடுவேயுள்ளது முக்கியதெய்வம், சூழவிருப்பது அங்கதெய்வமாம். இவ்வைந்தனுள் எந்த தெய்வத்தில் யார்க்கு விசேட விருப்பமும் பத்தியுமுள்ளதோ? அந்தத்தெய்வமே முதலாக வைத்துக்கொண்டு "பஞ்சாயதனம்" பிரதிமை மூர்த்தியா யிருக்கும் பரமேச்சுரனை யருசிக்கவேண்டும். எ-று. காண்க.

ஆனுல் முன் மூலத்திற்குப் பொருள்கூறியபோதே மிகவும் விசாரித்து முக்கியமாய் மஹாதேவனையே பூசிக்கவேண்டுமென்பது சித்தாந்தஞ் செய்யப்பட்டுள்ளது. ஆயினும் ஈண்டு, தரிசனபேதம். = சமயசாத்திர பேதங்களைப்பற்றிவிஷ்ணு, சங்கரன் முதலிய மூர்த்திபேதங்கள் கூறப்படுதலின் முரணுவதில்லை. தரிசனம் என்பதுயாதுஎனில்? புராணமுதலியவற்றுள் கூறப்பட்டுள்ளது.

## அறுவகைத்தரிசனம்.

புராணசாரம். పురాణసారే॥ "శైవంచవైష్ణవంశాక్తం సౌరంవైనాయకంతథా। స్కాందంచభక్తిమార్గస్య దర్శనానిషడేవహి" = சைவம், வைஷ்ணவம், சாக்தம், சௌரம், வைநாயகம், ஸ்காந்தம். என்னும் ஆறுசமய நூல்களும் பத்திமார்க்கங்களை விளக்குவதாமாதலின் சடுதரிசனம் என்று புகழ்பெற்றுள்ளது. எ-று. காண்க.

## விஷ்ணு அர்ச்சனை.

அவற்றுள், வைணவமதத்தின் கொள்கைப்படி விஷ்ணு பூசையின் முறையை மஹாபாரதம் அசுவமேத பர்வத்தில் விதிக்

கப்பட்டது. భారతె అశ్వమెధపర్వణి॥ "శ్రుణుపాండవతత్సర్వ మర్చనాక్రమమాత్మనః। స్థణ్డిలెపద్మకంకృత్వా చాష్టపత్రంసకర్ణికం। అష్టాక్షరవిధానెన అథవాద్వాదశాక్షరైః। వైదికైరథవామంత్రైర్మమసూక్తెనవాపునః। స్థాపితంమాంతతస్తస్మి న్నర్చయీతవిచక్షణః। పురుషంచతతస్సత్య మచ్యుతంచయుధిష్ఠిర। అనిరుద్ధంచమాంప్రాహు ర్వైఖానసవిదొజనాః। అన్యెత్వెవంవిజానంతి మాంరాజన్పాంచరాత్రికాః। వాసుదెవంచరాజెంద్ర సంకర్షణమథాపివా। ప్రద్యుమ్నంచానిరుద్ధంచ చతుర్మూర్తింప్రచక్షతే। ఏతాశ్చాన్యాశ్చరాజెంద్ర సంజ్ఞాభెదెనమూర్తయః। వినాధ్యాత్మపరాన్నవ మామెవంచార్చయెద్బుధః" = ஓய்! பாண்டவனே! என்னைப் பூசிக்கு முறையைக் கேளும் என்று கண்ணன் கூறுகின்றனர். நிலஞ்சுத்தமாகச்செய்து அரிசியைப்பரப்பி அதன்மேல், எட்டிதழாக வாயினும் பன்னிரண்டிதழாக வாயினும் தாமரைப்பூவெழுதி அதில், நாராயண அஷ்டாக்ஷர மந்திரமே யாயினும் வாசுதேவ துவாதசாக்ஷர மந்திரமாயினும் எழுதி, வைதிகமந்திரத்தா லாயினும், என்சூக்தத்தினு லாயினும், என்னைப்பதிட்டை செய்து அறிவுடையவன் அருச்சிக்க வேண்டும். வைகாநசாகம முணர்ந்தவர்களென்னைப் புருஷன், சத்தியன், அச்சுதன், அநிருத்தன், என்னு நான்குருவ முடையவனுக வுணர்வர். பாஞ்சராத்திராகமத்தையுவர்ந்தவர்கள்வாசுதேவன், சங்கரிஷணன், பிரத்தியும்நன் அநிருத்தன் என்னும் நான்குமூர்த்திமானுகக் கூறுவர். இவற்றையும் வேறுமுள்ளவற்றையும் பெயர் வேறுபாடு மாத்திரமே யுடைய எனது மூர்த்தமென்றே சொல்லுவர். ஆன்மஞானநிட்டர்க ளொழிய ஏனைய அறிவுடையவர்கள் இவ்வாறு என்னைப் பூசிக்கக்கடவர். எ-று. காண்க.

## பூசிக்கத்தக்கவிடம்.

ஆக்கிநேயபுராணம். ఆగ్నెయపురాణె। "అర్చనంసంప్రవక్ష్యామి విష్ణోరమితతెజసః। యత్కృత్వామునయస్సర్వె పరంనిర్వాణమాప్నుయుః। అప్సువగ్నౌ హృదయె సూర్యె స్థండిలెప్రతిమాసుచ। షట్స్వెతెషుహరెస్సమ్య గర్చనంమునిభిస్స్మృతం" = முனிகளனைவரும் எந்தப்பூசையைச் செய்து உத்தமமான மோக்ஷத்தை யடைந்தனரோ? அந்த அளவற்ற சோதியாகிய விஷ்ணுவினுடைய பூசையைச் சொல்லுகின்றேன். நீர், நெருப்பு, உள்ளம், சூரியன், ஸ்தண்டிலம்=நிரவியஅரிசி, உருவங்கள் "ச" என்றதனல், சாளிக்கிராமம், மணிகள், இயந்திரங்கள், இவ்

வாறு வடிவங்களிடமாக விஷ்ணுவை நன்ருகப் பூசிக்க வேண்டுமென்று, பெரியராற் கூறப்பட்டது. எ—று. காண்க.

## அதிகாரியர் பேதம்.

ஆக்கினேய புராணம். ఆగ్నేయపురాణే॥ “ అగ్నౌ క్రియావతాం దేవో దివి దేవో మనీషిణాం। ప్రతిమాస్వల్పబుద్ధీనాం యోగినాం హృదయే హరిః। తస్య సర్వగతత్వాచ్చ స్థండిలే భావితాత్మనాం ”=கருமயோகிகட்கு, அக்கினியிலும், வித்துவான்களுக்குச் சூரியனிடத்திலும், சிற்றறிவுடையவர்களுக்கு விக்கிரக வடிவத்திலும், யோகிகட்கு உள்ளத்திலும், பாவனை செய்யும் நம்பிக்கை யுடையவர்களுக்குத் தண்டிலத்திலும் கடவுள் பூசிக்கத்தக்கவராக விருக்கின்ருர். சீவர்களுடைய சமுசார துக்கங்களை நீக்குகிறவராதலாலே அரியென்னும் பெயரையுடைய விஷ்ணு எல்லாப்பொருளி னிடத்தும் கலந்திருப்பவரா யிருத்தலின் அப்படிப்பட்ட பரமான்மாவே அந்தந்த அதிகாரிகட்கு அந்தந்த அதிட்டான இடங்களில் உபாசிக்கத் தக்கவராக விருக்கின்ருர். எ—று. காண்க. தண்டிலம் = பரப்பிய அரிசி.

## புருட சூத்த நியாசம்.

ஆக்கிநேயபுராணம். ఆగ్నేయపురాణే॥ “ ఋగ్వేదే పౌరుషం సూక్తం మన్త్రితం గుహ్యముత్తమం। ఆనుష్టుభస్య సూక్తస్య త్రైష్టుభం తస్య దేవతా। పురుషో యో జగద్బీజ మృషిర్నారాయణస్స్మృతః। ప్రథమాం విన్యసేద్వామే ద్వితీయాం దక్షిణే కరే। తృతీయాం వామపాదే తు చతుర్థీం దక్షిణే న్యసేత్। పంచమీం వామజానౌ తు షష్ఠీం వై దక్షిణే న్యసేత్। సప్తమీం వామకట్యాం తు అష్టమీం దక్షిణే తథా। నవమీం నాభిమధ్యే తు దశమీం హృదయే తథా। ఏకాదశీం కంఠమధ్యే ద్వాదశీం వామబాహుకే। త్రయోదశీం దక్షిణే పి తథాస్యే తు చతుర్దశీం। అక్ష్ణోః పంచదశీం చైవ విన్యసేన్మూర్ధ్ని షోడశీం। యథా దేహే తథా దేవే న్యాసం కృత్వా విధానతః। న్యాసేన తు భవేత్సోపి స్వయమేవ జనార్దనః। ఏవం న్యాసవిధిం కృత్వా పశ్చాద్ధ్యానం సమాచరేత్ ” = இருக்கு வேதத்தில் புருடசூக்தமென்ப தொன்றுண்டு அது பெரியோர்களால் பூசிக்கப்பெற்றது. சிறந்ததாயும் வெளிப்படாததாயும் உள்ள இரகசியம். பிராணாயாமஞ்செய்து சங்கற்பித்துப் புருடசூக்தத்திற்கு இருடியையும், சந்தசுவையும், தேவதையையும், உச்சரித்து, அத்தச் சூக்தத்தில், பதினறு இருக்குகள்=மந்திரங்களிருத்தலினுல் அவற்றைப் பூசிக்குங்கருத்தா தன்னுடம்பிலும் தேவதா மூர்த்தியினிடத்தி

லும் அங்கநியாசம் செய்கின்றேன் என்று சங்கற்பித்து விதிப்படி ஒவ்வொருமந்திரத்தால் ஒவ்வொரு அங்கத்தையும் அபிமந்திரித்து முறையே நியாசம் செய்யவேண்டும். எவ்வாறெனில்? புருட சூக்தத்திற்கு, நாராயணரே இருடி, உலக காரணமான விராட்புருடனே தேவதை, சூக்தம் அனுஷ்டுப்பு என்னுஞ் சந்தசுவையுடையது. முடிவில் திருஷ்டுப்பு என்னும் சந்தசும்முடையது. நியாசத்துள். இடதுகையில் முதலிருக்கு, வலக்கரத்தில் இரண்டாவது. இடக்கால் மூன்றாவது. வலக்கால் நான்காவது. இடது முழங்கால் ஐந்தாவது. வலதுமுழங்கால் ஆறாவது. இடது புறத்து இடையில் ஏழாவது. வலதுபுறஇடையில் எட்டாவது. நாபியில் ஒன்பதாவது. உள்ளத்தில் பத்தாவது. கழுத்தில் பதினோராவது. இடதுதோள் பனிரண்டாவது. வலதுதோள் பதின்மூன்றாவது. வாய்பதினான்காவது. கண் பதினைந்தாவது தலை பதினாறாவது. இவ்வாறுஅந்தந்தவுறுப்புக்களில் அந்தந்த எண்களையுடைய இருக்கு மந்திரங்களைத் தன்னிடத்திலும் விஷ்ணு மூர்த்தியிடத்திலும் யார் நியாசம் செய்கின்றாரோ? அந்த மந்திரயோகி தானே விஷ்ணுவாகிறான். இவ்வாறு நியாசவிதியைச்செய்து அதன்பின்பு பூசைவேள்வியைத் தொடங்கிச் செய்யவேண்டுவது. எ-று. நியாசம்=வைப்பது. மந்திரத்தைச் செபித்து அங்கத்தைப் பரிசித்து மந்திர சத்தியறிவை அங்கத்துள் வைப்பது என்பது கருத்து.

## புருட சூக்தத்தினாற் பூசித்தல்.

ஆக்கினேய புராணம். ఆగ్నేయపురాణే॥ "పూర్వయావాహయేద్దేవమాసనంతుద్వితీయయా। పాద్యం తృతీయయాచైవ చతుర్థ్యార్ఘ్యంప్రదాపయేత్। పంచమ్యాచమనందద్యా త్షష్ఠ్యాస్నానంసమాచరేత్। సప్తమ్యాతుతతోవాసో హ్యష్టమ్యాచోపవీతకం। నవమ్యాగంధలేపంతు దశమ్యాపుష్పకంతథా।. ఏకాదశ్యాతథాధూపం ద్వాదశ్యాదీపమేవహి। నైవేద్యంతుత్రయోదశ్యా నమస్కారేచతుర్దశీ। ప్రదక్షిణేపంచదశీ శయనేషోడశీతథా। స్నానేవస్త్రేచనైవేద్యే దద్యాదాచమనంతథా। హుత్వాషోడశభిర్మంత్రైః షోడశాన్నస్యచాహుతీః। పునఃషోడశభిర్మంత్రైః దద్యాత్పుష్పాణిషోడశ। తత్ప్రసర్వంజపేద్ధ్యాయన్ పౌరుషంసూక్తముత్తమం। పఠన్సాత్సిద్ధిమాప్నోతి హ్యేవమేవసమర్చయేత్." = புருட சூக்தத்துள்ள பதினாறு இருக்கினால் விஷ்ணுமூர்த்தத்துக்குப் பதினாறு உபசாரத்தோடும் பூசிக்கவேண்டும்.

எவ்வாறெனில்? முதல்இருக்கினால், அத்தேவரை ஆவாஹனம் செய்ய வேண்டுவது. ஆவாஹனம்=அழைத்தல். உ - வது. ஆசனம் = பீடம்கொடுத்தல் ந - வது. பாத்தியம் = திருவடிக்கு நீருதவுதல். ச - வது. அருக்கியம் = கைக்கு நீருதவுதல். ரு - வது. ஆசமனம்=குடிநீருதவுதல் (முகசுத்தியின்பொருட்டு). சு - வது. ஸ்நாநம் = அபிஷேகம். எ - வது. பரிவட்டம்= அணிவதற்கு ஆடை. அ - வது. பூணூல். கூ - வது. சந்தனம். க0 - வது. பூக்கள். கக - வது. தூபம். கஉ - வது. தீபம். கந - வது. நைவேத்தியம். கச - வது. நமஸ்காரம். கரு - வது. வலம் வருதல். கசு - வது. சயனம். இக்கணக்கினையுடைய இருக்கு மந்திரத்தால் இந்த வுபசாரங்களைச் செய்ய வேண்டும். மேலும், ஸ்நாநம், ஆடை, நைவேத்தியம், இந்தவுபசாரங்களைச் செய்யும்போது, இடை யிடையே ஆசமனம் செய்விக்கவேண்டும். பின்பு அக்கினியில் இப்பதினாறு மந்திரங்களாலேயே அந்நத்தை பதினாறு ஆகுதிஹோமஞ் செய்யவேண்டுவது. அன்றியும், இப்பதினாறு மந்திரத்தால் பதினாறுபூக்களை அத்தேவர்க்குச் சாத்தவேண்டும். பின்பு புருடசூக்த முழுவதையும் அடிக்கடி செபிக்கவேண்டுவது. இவ்வாறு நாடோறும் விஷ்ணுவை நன்றாகப் பூசிக்கவேண்டும். இதுசெய்தவன் ஆறு திங்களிற் சித்தியடைவன். எனவே இச்சித்தபயன் உண்மை பெற வெளிப்படும். எறு. காண்க.

## சூரியமண்டலத்துள் விஷ்ணுதியானம்.

ஆக்கினேய புராணம். ఆగ్నేయపురాణె॥ "ధ్యేయస్సదా సవితృమండల మధ్యవర్తీ। నారాయణస్సరసిజాసనసన్నివిష్టః। కేయూరవాన్మకరకుండలవాన్కిరీటీ। హారీహిరణ్మయవపుర్ధృతశంఖచక్రః" = மகுடம், காதுக்கு மகரக்குழை, தோளுக்கு வாகுவலயம், என்னும் ஆபரணங்களை யுடையராய்க் கையில் சங்குஞ் சக்கரமும் பிடித்துப் பொன்போலும் ஒளிவிடும் திருக்கோல முடையவராய்க் கமலபீடத்தின்மேல் வீற்றிருக்கும் நாராயணன் எப்பொழுதும் சூரியமண்டலத்தின் நடுவே யிருக்கின்றார் என்று தியானிக்கப் படுபவராம். எனவே அவ்வாறு பாவிக்கவேண்டும். எறு. காண்க.

போதாயனர் கூறிய விஷ்ணுபூசனை. బోధాయనః॥ "అథాతో మహాపురుషస్య హరహః పరిచర్యా విధిం వ్యాఖ్యాస్యామః స్నాత్వా శుచిశ్శుచౌ దేశె

గోమయేనోపలిప్య ప్రతికృతింకృత్వా శుతపుష్పైర్యథా లాభమర్చయేత్" = அத
னால், பின்பு, மஹாபுருடராகிய விஷ்ணுவை யொவ்வொருபக
லிலும் பூசிக்கும் பூசைவிதியை எடுத்துக் கூறுகின்றாம். நீராடிச்
சுத்தனாய்ப் புனிதமாகிய ' இடத்தில் பசுவின் சாந்தினால் மெழுகி
விஷ்ணுமூர்த்தத் திருவுருவை (எனவே, சாளிக்கிராமம், மணி,
இயந்திரம், திரவிய அரிசி, உலோகம் - தரு-சிலைமுதலியவற்றாற்
சமைந்தமூர்த்தி, அல்லது பூரணகலசம்) இவற்றுள் ஒன்றிற்
பிரதிட்டைசெய்து புஷ்பமுதலிய பூசைத்திரவியங்கள் கிடைத்த
மட்டில் கொண்டு பூசிக்கவேண்டும். எ-று. காண்க.

இதுவுமது. సహపుష్పోదకేనమహా పురుషమావాహయేత్ ఓంభూఃపురు
షమావాహయామి, ఓంభువఃపురుషమావాహయామి, ఓంసువఃపురుషమావాహయా
మి,ఓంభూర్భువస్సువఃమహాపురుషమావాహయామీత్యావాహ్య" = பூக்களோடும்
சுத்தசலத்தைப்பெற்றுக்கொண்டு வேறுவேறுபிரணவத்தோடுங்
கூடியமூன்றுவியாஹிருதிமந்திரங்களால்புருடனை ஆவானஞ்செய்
கின்றேன் என்று முக்காலழைத்துப்பின்பிரணவத்தோடுஅம்மூன்
றுவியாஹிருதி மந்திரங்களையும் சேர்த்துமஹாபுருடனை யழைக்
கின்றேன் என்று ஆவாகனஞ் செய்து "ఆయాతుభగవాన్మహా పురుష
ఇత్యేతేన" = பகவராகிய 'மஹாபுருடன் வருக. எனக் கூறுக.

இதுவுமது. "స్వాగతేనాభినందతి స్వాగతమధునా భగవతో మహాపురుష
స్యేతి" = "స్వాగతం = சுவாகதம்" = என்பது. நல்வரவா என வுப
சரிக்கும் உபசாரமொழி. பகவராகிய மஹாபுருடருக்குச் சுவா
கதம் என்று களிப்பித்தல்வேண்டும். எ-று. காண்க.

இதுவுமது. "ఏతదాసనముపక్లృప్త మత్రాస్యతాం భగవన్మహా పురుషేతి
కూర్చందదాతి భగవతోయంకూర్చోదర్భ మయస్త్రివృద్గ్రంథి సువర్ణస్తంజుషస్వేతి" =
பகவராகிய மஹாபுருடருக்கு இந்தப்பீடிகை குறிக்கப்பட்டது.
ஓய்! பகவராகிய மஹாபுருடரோ! இவ்விடத்தில் இருந்தருளுக
என்றுகூறி, அத்தேவருக்குப் பசும்பொன்னிறத்துத் தருப்பையா
லியன்ற மூன்று பவித்திரக் கிரந்தியுண்டாகியதுமாகிய இந்தக்
கூர்ச்சம், சித்தமானது அன்போடு மிதன்மே லெழுந்தருளுக
என்று மந்திரங்கூறிப் பவித்திராசனத்தை அற்பிக்கவேண்டும்.
எ-று. காண்க. கிரந்தி = முடி. கூர்ச்சம்=தருப்பைப் பவித்திர
காண்டம். காண்டம் = நீட்சியுடையது.

இதுவுமது. "అత్రాధఃస్థానానికల్ప యత్యగ్రతః శంఖాయపరతశ్చక్రా యదక్షిణతోగదా యైవామతోవనమాలా యైపశ్చిమతః శ్రీవత్సాయ గరుత్మతేచోత్తరత శ్శ్రియైసరస్వత్యై పుష్ట్యైతుష్ట్యై చకల్పయామీతి" = ஈண்டு இக்கூர்ச்சத்துக்கீழிடத்தில் விஷ்ணுவின் பரிவாரதேவர்க்கு இடம் செய்கின்றேன். பாஞ்சசன்னியமென்னுஞ் சங்கினுக்கு முன்னிடம். அதன்பின் சுதரிசனம் என்னும் சக்கரப்படைக்கு, வலப்பால் கௌமோதகி என்னும் கதாயுதத்திற்கு. இடப்பால் வனமாலை என்னுந் துளவத்திற்கு. மெல்பால், ஸ்ரீவச்சம் என்னும் விருதுகுறிக்கும், கருடனுக்கும். வடபால், திருமகள், கலைமகள், புஷ்டிதேவி, துஷ்டிதேவியர்க்கும். இடம்செய்கின்றேன் எ-று காண்க.

இதுவுமது. "అథసావిత్ర్యాపాత్రమభి మంత్ర్యప్రక్షాళ్యత్రిరపః పరిషిచ్యానీయసహ పవిత్రేణాదిత్యందర్శయేత్" = பின்பு அக்கிரோதக பாத்திரத்தைச் சாவித்திரி மந்திரத்தால் அபிமந்திரித்து நன்றாக அலம்பி மூன்றுவிசை சலம்பூரித்து பவித்திரத்தோடு கொடுவந்து பிரணவம் கூறிச் சூரியனுக்குக்காட்ட வேண்டும். எ-று காண்க.

இதுவுமது. "స్నానంత్రీణిపదావిచక్రమఇతి" = "திரீணிபதாவிசக்கரமே" என்ற மந்திரத்தால் அபிடேகஞ்செய்க. எ-று. "పాద్యందద్యాత్ప్రణవేన"=ஓங்காரத்தால் பாத்தியம் கொடுக்கவேண்டும். எ-று. "అర్ఘ్యందద్యాద్వ్యాహృతిభిః" = வியாகிருதி மந்திரத்தால் அருக்கியந் தரவேண்டும். எ-று. "నిర్మాల్యంవ్యపోహ్యోత్తరతోవిష్వక్సేనాయనమఇతి" = நிருமாலியத்தைக் களைந்து விஷ்வச் சேநாயநம என்று வடக்கேஇடுக. எ-று. காண்க.

இதுவுமது. "అథైనంస్నాపయత్యాపోహిష్ఠేతితిసృభిర్బ్రహ్మజజ్ఞానం వామదేవర్గ్యజుః పవిత్రేణేత్యేతాభిష్షడ్భిః" = "ఆపోహిష్ఠా" = ஆபோஹிஷ்டா என்றது முதலிய மூன்று ஜலமந்திரங்களினாலும், பிரமஞாநம் - வாமதேவி - பவித்திரேண - என்ற மூன்று வேத மந்திரங்களாலும் அத்தேவரை அபிடேகித்து. எ-று. காண்க.

இதுவுமது. "స్నాపయిత్వాద్భిస్తర్పయతి కేశవంనారాయణమిత్యాదిదామోదరాంతం" = அபிடேகித்தபின் நீரினால், "கேசவந்தர்ப்ப யா

மி =" கேசவனைத்திருத்தி செய்கின்றேன். என்றது முதலாகத் தாமோதரன்வரையுமுள்ள பன்னிருமூர்த்திகளையும் பன்னிருநாம மந்திரங்களால் தருப்பித்து. எ-று. காண்க.

இதுவுமது. "ధౌతానివస్త్రయజ్ఞోపవీతాచమనీయాన్యద కేనవ్యాహృతిభిర్దత్వా" = துவைத்துச் சுத்தஞ்செய்யப்பட்ட பரிவட்டத்தையும் பூணூலையும், சலத்தால் ஆசமனீயத்தையும் வியாகிருதி மந்திரத்தால் கொடுத்து, எ-று. "వ్యాహృతిభిః ప్రదక్షిణముదకం పరిషిచ్య"= வியாஹிருதி மந்திரங்களால் சலத்தைச்சூழக்கட்டி. எறு. "ఇదంవిష్ణుర్విచక్రమఇతిగంధందద్యాత్" = "இதம்விஷ்ணு விசக்கரமே" என்ற மந்திரத்தினால் சந்தனத்தை அற்பிக்கவேண்டும். எறு. காண்க.

இதுவுமது. "తద్విష్ణోఃపరమంపద మితిపుష్పం" = "விஷ்ணோப்பரமம்" என்னு மந்திரத்தால் பூக்களையும். "ఇరావతీత్యక్షతాన్"= "இராவதி" என்னு மந்திரத்தால் அக்ஷதையையும். "సావిత్ర్యా ధూపం" = "சாவித்திரியா" என்னும் மந்திரத்தால் தூபத்தையும். "ఉద్దీప్యస్వేతిదీపం" = "உத்தீப்பியஸ்வ" என்னு மந்திரத்தால் தீபத்தையும். "దేవస్యత్వాసవితుఃప్రసవేశ్వినోర్బాహుభ్యాం పూష్ణోహస్తాభ్యాం భగవతేమహాపురుషాయజుష్టంచరుంనివేదయామీతినైవేద్యం" = "தேவஸியத்துவா" என்ற மந்திரத்தால் நைவேத்தியத்தையும் அற்பிக்கவேண்டும். எறு. காண்க.

இதுவுமது. "అథకేశవాదిద్వాదశ నామభిర్ద్వాదశపుష్పాణి శంఖాయ, చక్రాయ, గదాయై, వనమాలాయై, శ్రీవత్సాయ, గరుత్మతే, శ్రియై, సరస్వత్యై, పుష్ట్యై, తుష్ట్యైచనమఇతి ప్రత్యేకంపుష్పాణిచదద్యాత్." = கேசவாய, என்றது முதலியவாக தாமோதராய என்ற 'வரையிலும் உள்ளமந்திரத்தால் பன்னிருமூர்த்தி தெய்வங்களுக்கும், சங்காய என்பது முதல் துஷ்டியை என்றவரையிலு முள்ளதனுல் பத்து அங்க தேவதைகளுக்கும் நமஎன்னும் மந்திரபல்லவத்தோடு நாம மந்திரங்களை தனித்தனி பூக்களால் பூசிக்கவேண்டும். எ-று. காண்க.

இதுவுமது. "అవశిష్టైర్గంధ పుష్పైర్బ్రాహ్మణానలంకృత్య" = கடவுளைப் பூசித்து மிகுந்தசந்தனம் பூக்களால் வேதியர்களை யலங்கரித்து, "అథైనమృగ్యజుస్సామా థర్వభిస్తువన్ ధృవసూక్తం జపిత్వాపురుషసూక్తం చాన్యాంశ్చవైష్ణ వాన్మంత్రానిత్యేకే" = பின்பு இந்தவிஷ்ணுவைநான்

குவேதங்களாலும் துதித்து, துருவசூக்கத்தைச்செபித்து, புருட சூக்கத்தையும் இன்னும் வேறு வைஷ்ணவ மந்திரங்களையும் பாராயணஞ் செய்யவேண்டியதென்று சிலர் கூறுவர். எ-று. காண்க.

இதுவுமது. " ఓంభూర్భువస్సువరోం భగవతేమహాపురుషాయచరుముద్వాసయామీతి చరుముద్వాస్యదేవంచ ఓంభూఃపురుషముద్వాసయామీత్యాదినోద్వాస్య" = முதலிலும் முடிவிலும் பிரணவமுடைய எல்லா வியாகிருதி மந்திரங்களோடும் கடவுளுக்கு அற்பித்த சருத்திரவியங்களை (எனவே நிவேதனஞ்செய்த பதார்த்தங்களை) அவ்விடத்திருந்து வெளிப்படுத்தி வைக்கின்றேன் என்று எடுத்துவிட்டுப் பின்பு பிரணவத்தோடும் ஒவ்வொரு வியாகிருதி மந்திரத்தோடும் தனித்தனியேனும் ஒருமிக்க வேனும், " புருஷமுத்வாசயாமி" என்று அத்தேவரை அனுப்புவித்து. எ-று. காண்க.

இதுவுமது. "ప్రయాతుభగవాన్ పురుషోనేనహవిషాతృప్తఃపునరాగమనాయచేతి ప్రతిమాదిష్వేషూద్వాసనావాహనవిసర్జనవర్జం సర్వంసమానం" = மஹாபுருடராகிய ஹரிஇந்த ஹவிசுவினால் திருத்தியுற்றவராய் மீட்டும் வரும்பொருட்டும் காட்சிகொடுத் தருளும் பொருட்டும் கடவுளிருக்கைக்கு எழுந்தருளுக, என்று திருவடிவ முதலிய மூர்த்தி விம்பங்களில் உத்துவாசனஞ் செய்யவேண்டுவது சரப்பிரதிட்டை விடயம். திரப்பிரதிட்டை மூர்த்திகளிலும், சுயம்புவாகவுள்ள சாளிக்கிராம முதலியவற்றுள்ளும், சூரியன் - அக்கினி - சலம் - இவைகளிடத்திலும் பூசிக்கும் பொழுதும், வருகவென்று ஆவாகனமாயினும் போகவென்று விசர்ஜனமாயினும் செய்வது இல்லை. ஏனையபூசை விதியெல்லாம் எல்லாவிடங்களிலும் ஒன்றாகவிருக்கும். எ-று. காண்க.

இதுவுமது. తదేతన్మహత్స్వస్త్యయనమిత్యాచక్షతే మహత్స్వస్త్యయనమిత్యాహ భగవాన్ బోధాయనః" = இவ்வாறு பூசிப்பது சிறந்தசெல்வத்திற்கு ஏதுவாக விருக்கின்றது என்று பெரியோர் கூறுகின்றனர். பெருஞ்செல்வத்திற்கு வழியென்று பகவராகிய போதாயனர் கூறினர். எ-று. காண்க.

## விஷ்ணு பூசனைச்சிறப்பு.

கூர்மபுராணம். " కూర్మపురాణే॥ నవిష్ణ్వారాధనాత్పుణ్యం విద్యతేకర్మవైదికం। తస్మాదనాదిమధ్యాన్తం నిత్యమారాధయేద్ధరిం। తద్విష్ణోరితిమంత్రేణ సూక్తేనపురు

షేణతు। నైతాభ్యాం సదృశో మంత్రో వేదేషూక్తశ్చతుర్ష్వపి" = விஷ்ணுவை ஆராதிப்பதினும் சிறந்த புண்ணியமுடைய வைதிக கருமம் யாதொன்று மில்லை. ஆதலின் நாடோறும் இருபிறப்பாளன் காலையேயாயினும் உச்சிக்கண்ணேயாயினும் அவ்விஷ்ணுவை "తద్విష్ణోః" என்ற மந்திரத்தினாலும் புருட சூக்தத்தினாலும் ஆராதிக்க வேண்டும். இவ்விரண்டு மந்திரத்தோடு ஒத்த மந்திரம் நான்கு வேதங்களிலும் கூறப்படவில்லை. என்று. காண்க.

இவ்வாறு வைஷ்ணவ சாத்திரங்களை அனுசரித்த விஷ்ணு பூசையின் விதியையுணரத்தக்கது.

விஷ்ணுபூசைவிதி முற்றிற்று.

---

## சிவபூசைவிதி.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ శ్రీకృష్ణః॥ "ఏష దేవో మహాదేవ స్సదా సంసారభీరుభిః। ధ్యేయః పూజ్యశ్చ వంద్యశ్చ జ్ఞేయో లింగే మహేశ్వరః। నచ లింగార్చనాత్పుణ్యం లోకేస్మిన్నస్తి పావనం" = கடவுளரில் இம்மஹாதேவரே கடவுள். சமுசாரத்தில் அச்சமடைந்தவர்கள் எப்பொழுதும் மஹாதேவராகிய சிவனைத் தியானித்து, பூசித்துவணங்கவேண்டும். எல்லாந்தன்வடிவாக வுடையமகேச்சுரன் இலிங்கோற்பவராக வெளிப்படுகின்றார். சிவலிங்க அருச்சனைக்காயினும் மிகச் சிறந்த மஹாபுண்ணிய கருமம் உலகத்துள் ஒன்றுமில்லை, எனக் கண்ணன்கூறியவாறு. என்று. காண்க.

கூர்மபுராணம் பிரமசங்கிதை. కూర్మపురాణే॥ బ్రహ్మసంహితాయాం॥ వ్యాసః॥ "అథవా దేవమీశానం భగవంతంసనాతనం। ఆరాధయేన్మహాదేవం భావపూతో మహేశ్వరం। మంత్రేణరుద్రగాయత్ర్యా ప్రణవేనాథవాపునః। ఈశానేనాథవా రుద్రం త్ర్యంబకేనసమాహితః। పుష్పైః పత్రైరథాద్భిర్వా చన్దనాద్యైర్మహేశ్వరం। ఓం నమశ్శివాయేతి మంత్రేణానేనవాయజేత్। నమస్కృత్వామహాదేవం భావపూతో మహేశ్వరం। నివేదయీతచాత్మానం ధియాబ్రహ్మణమీశ్వరం। ప్రదక్షిణంద్విజఃకుర్యాత్ త్వం చబ్రహ్మశివాజపేత్। ధ్యాయీతదేవమీశానం వ్యోమమధ్యగతంశివం" =வியாசர் இருடிகட்குப் பஞ்சாயதன முதலிய தேவர் பூசைகளைக்கூறிப்

பின்பு விஷ்ணுபூசையைச் சிறப்பித்து முடிவில் சிவபூசனையைக் கூறியுள்ளனர். அறுகுணச் செல்வனுகியும் பெரியோர்க்குப் பெருமானுகியும், பெருங்கடவுளாகியும், உலகத்துக்கு இறைவனுகியும், நித்தமான வுண்மைப் பொருளாகியும் இருக்கின்ற பரமேச்சுரனைப் பரிசுத்தமாகிய மனமுடையவன் அருச்சிக்கவேண்டும். ஸ்ரீஉருத்திரமந்திரம், உருத்திர காயத்திரி, பிரணவம், ஈசான சூக்தம், திரியம்பகமந்திரம், சிவசடாக்கரமந்திரம், சிவபஞ்சாக்கரமந்திரம் இவைகளுள் ஒன்ருேடாயினும் எல்லாவற்ருேடாயினும் அருச்சனை வேள்வியை யனுட்டிக்கவேண்டும். பத்திர புட்பசந்தனம் திருமஞ்சனசல முதலிய பரிசுத்தப்பொருளோடு சிவலிங்கத்தைப் பூசித்து, வேதத்துட் கூறப்பட்ட ஸ்ரீஉருத்திர நமஸ்கார மந்திரங்களால் நமஸ்காரங்களைச் செய்து, இருபிறப்பாளன், சிவலிங்கத்தினை வலம்வந்து, நல்ல விவேகமாகிய ஞானத்தோடும் பூசிக்குங் தன்ஆன்மாவைப் பரப்பிரம மாகிய சிவனுக்குஅற்பித்து, பஞ்சப்பிரம மந்திரத்தைச்செபித்து, உலகை நடத்துங் கடவுளாய்ச் சிதாகாசத்தில் விளங்கிக்கொண்ருடிக்கும் சிவனைத் தியானிக்கவேண்டும். எ-று. காண்க.

கௌதமர். గౌతమః॥ "నార్మదేవా స్స్వయంవ్యక్తే లింగేవాపి క్రియామయే। సౌవర్ణే స్ఫాటికాదౌ చ రుద్రాక్షే పార్థివేపి చ। ఆత్మన్యగ్నౌ మహాదేవం వృషభేపి సమర్చయేత్" = நருமதை இலிங்கம், சுயம்பு இலிங்கம் = தானேதோன்றியது. கிரியாலிங்கம் = பஞ்சசூத்திர சிற்பவிதிப்படி செய்த பொன்முதலிய வுலோகலிங்கம், வெண்ணிற அமுதசிலை – சந்திரகாந்தக்கல் – மரகதமுதலிய அரதனச்சிலை படிகம் முதலியவற்ருற் சமைத்த விலிங்கம், உருத்திராக்கமணி, முதலிய இட்ட லிங்கங்களிலும், சுத்தமாகிய மிருத்திகையாற் செய்த பார்த்திப விலிங்கத்திலும், அக்கினி – சலம் – சூரியன் – முதலிய மஹா பூதங்களிலும், ஆன்மா முதலிய விலிங்கத்தி னிடத்திலும், வேதியன் - கோ=பசுமுதலிய சரலிங்கத்திலும், அட்டமூர்த்தியாகவும், எல்லா வுயிர்களிலும் நிறைந்துள்ளவனுயும் இருக்கும், உண்மை – அறிவு-இன்ப வடிவமுமாகிய பரமான்ம விலிங்கத்திலும் அச்சிவனை பூசிக்கவேண்டும். இலிங்கபூசனையின் பேதங்கள் அவரவர் ஆசிரிய சம்பிரதாயப்படி யுண்டாகின்றது. என்றது அதன் கருத்து.

**போதாயனர் கூறிய சிவபூசைவிதி.** బౌధాయనః॥ "మహాన్యాసవి
ధానేన లఘున్యాసేనవాద్విజః। శతైకాదశరుద్రైకా వ్యభిషేకపురస్సరం। అర్చయే
చ్ఛాంభవైర్మంత్రైః ప్రత్యహంపరమేశ్వరం" = மஹா நியாச விதிப்படி
யாயினும், இலகுநியாச விதியோடாயினும் சதவுருத்திர அபி
டேகம், அல்லது, பதினொருவிசை உருத்திராபிடேகமாயினும்
இல்லையேல் ஏகவாரம் = ஒருவிசை புருத்திராபிடேகமாயினும்
செய்து சாம்பவ மந்திரங்களால் இருபிறப்பாளன் நாடோறும்
சிவனை ஆராதிக்கவேண்டும். எ-று. காண்க.

**போதாயன சூத்திரம்.** బౌధాయనః॥ "అథాతో మహాదేవస్యాహరహః
పరిచర్యావిధిం వ్యాఖ్యాస్యామః స్నాత్వా శుచౌదేశే గోమయేనో పలిప్య ప్రతికృతిం
కృత్వాక్షతపుష్పైర్యథాలాభంసమర్చయేత్సహ పుష్పోదకేనమహాదేవమావాహయేత్"
அதனால், பின்பு. மஹாதேவனை நாள்தோறும் அருச்சிக்க
வேண்டிய பூசைவிதியை விரித்துக்கூறுகின்றாம். நீராடிச் சுத்த
னாய்ப் புனிதமாகிய இடத்துப் பசுவின் சாணினால் மெழுகிச்
சிறந்த பீடத்தில் பூசிக்கத்தக்க மூர்த்திவடிவத்தை ஏற்படுத்திக்
கொண்டு கிடைத்தமட்டில், சாந்தம், மலர், அக்ஷதை, பழ
வகை, திருமஞ்சன நீர்முதலிய பூசைத்திரவியக் கருவிகளோடும்
பூசிக்கவேண்டும். நீராலும் மலராலும் மஹாதேவனை ஆவாஹ
னஞ் செய்யவேண்டும். எ-று. காண்க.

**இதுவுமது.** ఓంభూః మహాదేవ మావాహయామి। ఓంభువః మహాదేవ మా
వాహయామి। ఓగ్ం సువః మహాదేవమావాహయామి। ఓంభూర్భువస్సువః మహాదేవమావా
హయామి" = என்ற இம்மந்திரங்களா லாவாஹனஞ் செய்து.
"ఆయాతు భగవాన్ మహాదేవ ఇత్యథ స్వాగతేనాభినందతి స్వాగతమధునా భగవతేమ
హాదేవాయ" என்ற மந்திரத்தால் நல்வரவு = சுவாகத வுபசாரஞ்
செய்து, "ఏతదాసనముపక్లృప్తం అత్రాస్యతాం భగవన్మహాదేవ ఇత్యత్రక్షూర్చందదా
తి భగవతోయంకూర్చో దర్భమయస్త్రివృద్ధరిత సువర్ణస్తంజుషస్వేతి" = இம்மந்தி
ரத்தால் தருப்பைப் பவித்திராசனத்தை அர்ப்பித்து. எ-று. காண்க.

**இதுவுமது.** "అత్రస్థానానికల్ప యత్యగ్రతో విష్ణవే బ్రహ్మణేచ దక్షిణతః స్కం
దాయ వినాయకాయ చ పశ్చిమతశ్శూలాయ మహాకాలాయ చోత్తరత ఉమాయై నందికే
శ్వరాయ చ స్థానం సంకల్పయామీతి కల్పయిత్వా" = சிவனுக்குமுன் விஷ்ணு
பிரமன், வலப்பக்கம் கணபதி, முருகன், பின்பக்கம் சூலம் மஹா

காளர், இடப்பால் — உமாதேவியார், திருநந்தி இவ்வாறு எண் வகை யாவரணதேவர்க்கும் தனித்தனி இடங்கற்பித்து. இவ்வா வரணதேவரோ யன்றி வேறு பரிவாரமும் அவரிடமும் உள்ளன அவை யாகமத்துட் காண்க.

இதுவுமது. "అథసావిత్ర్యా చాభిమంత్ర్య ప్రక్షాళ్యత్రిరపః పవిత్రమపఆనీయ సహపవిత్రేణాదిత్యం దర్శయెదామితిస్నానం" = சாவித்திரி மந்திரத்தால் பாத்திரஞ் சுத்திசெய்து வியாஹிருதியால் பவித்திர உதகத் தினைப் பூரித்து, பிரணவத்தினுல் சூரியனுக்குக் காண்பித்து திருமஞ்சனத்தின் பொருட்டு அக்கிரஜலத்தைத் திருத்திவைக்க வேண்டும். "పశితరుద్రేణపాద్యందద్యాత్" = உருத்திர மந்திரத்தால் பாத்தியமும். "ప్రణవేనార్ఘ్యం," = பிரணவத்தா லருக்கியமும் கொடுத்தல் வேண்டும். எறு. காண்க.

இதுவுமது. "అథవ్యాహృతిభిర్నిర్మాల్య మపోహ్యోత్తరతశ్చండీశాయన మఇత్యుత్తేనం స్నాపయిత్వాపోహిష్ఠా మయోభువఇతితి సృభిర్హిరణ్యవర్ణాశ్శు చయఃపావకా ఇతిచతసృభిః పవమానస్సువర్జన ఇత్యనువాకేన శ్రీరుద్రాధ్యాయేన చపంచరుద్రైర్వాస్నాపయేత్" = வியாகிருதி மந்திரத்தால் நிருமாலியங் களைந்து "சண்டேச்சுராயநம" என்றுவடதிசையிலிட்டுப்பின்பு. மூர்த்திக்கு அபிடேகம் செய்ய வேண்டும் "ఆపోహిష్ఠా" என்ற மூன்றுமந்திரம், "హిరణ్యవర్ణా" என்ற நான்கு மந்திரம், "పవమానస్సువర్జనః" என்றதொரு அனுவாகம், ஸ்ரீ உருத்திர அத்தியாயம் இரண்டு, பஞ்ச வுருத்திரங்கள் இவைகளால் அபிடேகஞ்செய்யவேண்டும். எ-று. காண்க.

இதுவுமது. "అథైనమద్భిస్తర్పయతి। భవందేవంతర్పయామి। శర్వందేవం తర్పయామి। ఈశానందేవం తర్పయామి। పశుపతిందేవంతర్పయామి। రుద్రందేవం తర్పయామి। ఉగ్రందేవం తర్పయామి। భీమందేవం తర్పయామి। మహాంతందేవం తర్పయామీత్యాదివైదికమంత్రైస్తర్పయిత్వా" = கிருஷ்ண யஜுர்வேதம் தைத்திரீயசாகை முடிவில். அஉ-வது. பிரசினத்தில் கூறியுள்ளபடி வைதிகமந்திரத்தால் அட்டமூர்த்திகளையும் தருப்பித்து. எ-று.

இதுவுமது. "అథవస్త్రయజ్ఞోపవీతాచమనీయాన్యుదకేనవ్యాహృతిభిర్దత్వా వ్యాహృతిభిఃప్రదక్షిణ ముదకంపరిషిచ్య నమస్తేరుద్రమన్యవ ఇతిగంధందద్యాత్సహస్రాణి సహస్రశ ఇతిపుష్పందద్యా దీశానంత్వాభువ నానామధిశ్రీమమిత్యక్షతా దద్యా

త్వావిత్రా ధూపముద్దిశ్య స్వాతిదీపం" = பின்பு வியாகிருதிகளால் நீரைக் கொண்டு பரிவட்ட ஆடை, பூணூல், ஆசமனம் அற்பித்து, வியா கிருதிகளால் கடவுளுக்கு நீரைவலமாகப் பரிஷேஜனம் செய்து "நமஸ்தேருத்திர மந்நியவே" என்ற மந்திரத்தால் சந் தனச்சாத்தும், "சஹஸ்ராணி சஹஸ்ரசஃ" என்ற மந்திரத்தால் மலரும், "ஈசாநந்துவா" என்ற மந்திரத்தால் அக்ஷதையும், சாவித்திரி மந்திரத்தால் தூபமும், "உத்தீப்பியஸ்வா" என்ற மந்திரத்தால் தீபமும் அற்பிக்கவேண்டும். எ-று. காண்க.

இதுவுமது. "దేవస్యత్వాసవితుఃప్రసవేశ్వినోర్బాహుభ్యాంపూష్ణోహస్తాభ్యాంభగవతెమహాదేవా యజుష్టంచరుంనివెదయామీతినైవెద్యం" = இம்மந்திரத் தால் நைவேதநத்தைச் செய்யவேண்டும். "అథాష్టభిర్నామభిః అష్టౌపుష్పాణిదద్యాత్" = భవాయదేవాయనమః என்றிவ்வாறு மேல்°தருப் பணத்துட் கூறிய வைதிகமந்திரங்களால் அட்டபுட்பம் சாத்தி "విష్ణవెనమఇత్యాదినాంగదెవెభ్యశ్చ" = విష్ణవెనమః। బ్రహ్మణెనమః। என்றிவ்வாறு அங்கதேவதைகட்கும் பூசைசெய்து. எ-று. காண்க.

இதுவுமது. "చరుశేషేణాష్టభిర్నామధేయైరష్టావాహుతీర్జుహోతి। భవాయదెవాయస్వాహేత్యాదినాహుత్వా వశిష్టైర్గంధమాల్యైర్బ్రాహ్మణాన్వృషభంధేనుం సవత్సాంచాలంకృత్వా త్రిభిర్వేదైరృగ్యజుస్సామభిస్తువంతిసహస్రాణిసహస్రశ ఇత్యనువాకం. జపిత్వాన్యాంశ్చ రౌద్రాన్మంత్రాన్యథాశక్తి జపిత్వా" = மேற்கூறிய வைதிக அட்ட நாமங்களால் சருசேடத்தை "భవాయదెవాయస్వాహా" என்று எட்டுஹோமங்களைச்செய்து, சிவபூசைச் சேடமாகிய சந்தனம் மலர்களால் வேதியர்களையும், இடபம் பசுக்களையும் அலங்க ரித்து, மூன்று வேதங்களாலும் "சஹஸ்ராணி சஹஸ்ரசஃ" என்ற அநுவாகத்தினாலும் மற்றுமுள்ள உருத்திர மந்திரங்க ளாலும் தனக்குச் சத்தியுள்ளவரையில் செபம் பாராயணம் தோத்திரம் செய்து, எ-று. காண்க.

இதுவுமது. "ఓంభూర్భువస్సువరోం మహాదెవాయచరుముద్వాసయామీతిచరుముద్వాస్య ఉద్వాసనకాలె ఓంభూఃమహాదెవముద్వాసయామీతి ప్రతిమంత్రం రుద్రముద్వాస్య। ప్రయాంతుభగవానీశ స్సర్వలోకనమస్కృతః। అనేనహవిషాతృప్తః పునరాగమనాయచ, పునస్సందర్శనాయచేతి, ప్రతిమాదిష్ఠానేష్వప్స్వగ్నావావాహనవిసర్జ నవర్జమస్యత్సర్వం సమానం" = இம்மந்திரங்களால் சருவையெடுத்து

வைத்து கடவுளை யெழுந்தருளச் செய்யவேண்டும். நருமதை யிலிங்கம், சுயம்புலிங்கம், அக்கினி, நீர், ஸ்திரப் பிரதிட்டை செய்த மூர்த்தி விம்பங்கள் முதலியவற்றுள் ஆவாஹனம் விசர்ச் சனம் கூடாது. ஏனையவற்றிற் கெல்லாம் ஒத்தபடியே. எ-று. காண்க.

இதுவுமது. "తదేతన్మహత్స్వస్త్యయనమిత్యాచక్షతేమహత్స్వస్త్యయనమి త్యాహ భగవాన్బోధాయనః" = இந்தச்சிவபூசைச் சிறந்த திருவு டைமைக்குவழியாகவிருக்கின்றது, என்றுபெரியர்கூறுகின்றனர். பெருஞ் செல்வத்திற்கு வழியென்று போதாயனர் கூறினர். எ-று. காண்க. (விஷ்ணு பூசைக்கும் சிவ பூசைக்கும் போதா யன சூத்திரம் ஒரோ வகையாக விருக்கின்றது. ஆனால் சிலமந்தி ரங்களும் அங்கதேவதைகளுமாத்திரமே வேறுபாடாக விருக்கின் றது. விஷ்ணு பூசையில் பொருள்விளங்கக் கூறினோமாதலின் சிவ பூசையில் அந்தவாக்கியங்களுக்கு உரைசுருக்கிக் கூறினோம்).

## சிவபூசைச்சிறப்பு.

சிவார்ச்சனையைத் திருநந்திகேச்சுரர் துதித்தனர். నందిధర్మేషు॥ "యదిప్రదద్యాద్గవాంలక్షం దోగ్ధ్రీణాంవేదపారగే। ఏకాహమర్చయేల్లింగంత స్యపుణ్యంతతో౽ధికం। సకృత్పూజయతేయస్తు భగవంతముమాపతిం। అశ్వమేధాదధి కం ఫలంభవతిభూసురాః" = பால்கறக்கும் நூறாயிரம் பசுக்களைவேத முற்று மோதிய வேதியனுக்கு விதிப்படி தானஞ்செய்தவன் எந் தப் புண்ணியத்தை யடைவனோ? அந்தப் புண்ணியத்திற் காயி னும் ஒருநாள் சிவலிங்கார்ச்சனை செய்தவன் புண்ணியம் அதிக மாம். ஓய்! வேதியரோ! கேட்பீர்களாக. பகவராகிய உமாபதி யை யார் ஒருக்கால் அருச்சிப்பானோ? அவனுக்குண்டாம்பயன் அசுவமேதம் செய்த பயனிலும் விசேடமாக விருக்கும். எ-று. காண்க.

## நிருமாலிய பிரசாதம்தரித்தல்.

నిర్మాల్యగన్ధాపిధార్యః॥ "దేవానభ్యర్చ్యగన్ధేన త్యాదస్మృతివిధానాత్" = தேவர்களைப் பூசித்து அச்சேட சந்தனத்தா லருச்சிப்பவன் தன் முகத்திற் புண்டரத்தைத் தரிக்கவேண்டு மென்று மிருதிகள் விதிக்கின்றன. எ-று. காண்க.

### அருச்சனைசெய்யாதார் குற்றம்.

தேவதார்ச்சனை செய்யாதொழிந்தாற் குற்றமெனக் கூர்ம புராணத்துட் கூறப்பட்டது. కూర్మపురాణే॥ "యోమోహాదథవాలస్యాద కృత్వాదేవతార్చనం। భుంక్తే సయాతినరకం సూకరేష్వభిజాయతే" = அஞ்ஞானத்தா லாயினும், சோம்பலா லாயினும் யார்? தேவதார்ச்சனை செய்யாமலே உண்கின்றானோ? அவன் நரகத்தை யடைந்திருந்து பின்பு பன்றியாய்ப் பிறக்கின்றான். எ-று. காண்க.

தேவபூசையின்விதி முற்றிற்று.

---

## குருபூசை.

—:ஃ:—

இனி மூலத்துள் "దేవతానాంచపూజనం" என்று கூறியபடித்தேவபூசையைக் கூறி "చ" என்ற அவ்வியயம் = உம்மை இடைச்சொல் குருபூசையைச் சமுச்சயார்த்தம் = எதிரதுதழீஇக் கூறுதலின் அக்குருபூசையைக் கூறுதும். கடவுளைப்போலவே குருவையும் பூசிக்கவேண்டுதலின். எவ்வாறெனில்?

சுருதி. శ్రుతిః॥ "యస్యదేవేపరాభక్తిర్యథాదేవేతథాగురౌ। తస్యైతేకథితాహ్యర్థాః ప్రకాశంతేమహాత్మనః" = யாருக்குக் கடவுளிடத்துச் சிறந்த பத்தியுண்டாயவாறுபோலக் குரவனிடத்தும் பத்தியுண்டாகின்றதோ? அப்பெரியவனுக்குவேதத்துட்கூறிய பொருளெல்லாம் விளங்குகின்றது. எ-று. காண்க.

சைவபுராணம். శైవపురాణే॥ "యోగురుస్సశివఃప్రోక్తో యశ్శివస్సహిశంకరః। శివవిద్యాగురూణాంచ భేదోనాస్తికథంచన। శివేమంత్రగురౌయస్య భావనాసదృశీభవేత్। భోగోమోక్షశ్చసిద్ధిశ్చ శీఘ్రంతస్యభవేద్ధ్రువం। వస్త్రాభరణమాల్యాని శయనాన్యాసనానిచ। ప్రియాణిచాత్మనోయాని తానిదేయానివైగురోః। తోషయేత్తం ప్రయత్నేన మనసాకర్మణాగిరా" = யார்குருவோ? அவனேசிவன் என்று கூறப்படுகின்றான். யார்சிவனோ? அவனேயன்றோ சங்கரவடிவன். சிவனுக்கும் வித்தியாகுருவுக்கும் எவ்வாறும் வேறுபாடில்லை. சிவனிடத்தும் மந்திர குருவினிடத்தும் யாருக்குப் பாவனை யொத்திருக்குமோ? அவனுக்கு, இம்மைச் சுகபோகப்ப

யனும் ஞானயோக சித்தியும் முத்தியும் சீக்கிரமாக வுண்டா கின்றது. இஃதுண்மை. நல்ல ஆடை, ஆபரணம், மலர்மாலை, படுக்கை, பீடிகை மற்றுமுள்ளனவாகிய தன் பிரியப்பொருள் களை யெல்லாம் தன்குரவனுக்கு அற்பிக்கவேண்டும். முயற்சி த்தும் எண்ணத்தாலும், தொழிலாலும், சொல்லாலும் களிப் பிக்கவேண்டும். எ-று. காண்க. சங்கரவடிவன் = மங்கலஞ்செய்ய வந்த கோலமாகிய குரவன்.

மனு. మనుః॥ "ఇమంలోకంమాతృభక్త్యా పితృభక్త్యాతుమధ్యమం। గురుశు శ్రూషయాత్వేవ బ్రహ్మలోకంసమశ్నుతే। సర్వేతస్యాదృతాధర్మా యస్యైతేత్రయఆదృతాః। అనాదృతాస్తుయస్యైతేసర్వాస్తస్యాఫలాఃక్రియాః। యావత్త్రయస్తేజీవేయు స్తావన్నా న్యంసమాచరేత్। తేష్వేవనిత్యంశుశ్రూషాం కుర్యాత్ప్రియహితేరతః। గురుశుశ్రూషణంభ క్త్యా కుర్యాత్ప్రియహితేరతః" = தாய்ப்பத்தியால் இம்மையும், தந்தை பத்தியால் சுவர்க்கமும், குருசேவையாற் பிரமலோகமும் அனு பவிக்கின்றான். யார் தாய்தந்தை குரவனை யாதரிக்கின்றானோ? அவன் எல்லாத் தருமங்களையும் ஆதரித்தவனே யாகின்றான். அம்மூவரும் யாரால் ஆதரிக்கப் படுவதில்லையோ? அவன் செ ய்யுங் கருமமெல்லாம் பயனற்றதாய்விடும். அம்மூவரும் எது வரையும் பிழைத்திருக்கின்றார்களோ? அதுவரையிலும் அந்நி யர்க்குத் தொண்டு செய்யலாகாது. தனக்கு நல்லஇன்பம் வே ண்டு மென்பவன் நாடோறும் அம்மூவரையுமே வழிபடுதல் செய்யவேண்டும். எல்லாக்கருமமும் தனக்கு நன்மையாக வே ண்டுமென்பவன் பத்தியால் குருவை வழிபடவேண்டும். எ-று. காண்க.

குருபூசை முற்றிற்று.

---

## வைசுவதேவப்பிரகரணம்.

ஒருபகலின் ஐந்தாவது பாகத்தில் செய்யத்தக்கனவற் றைத் தக்ஷர் கூறினார். దక్షః॥ "పంచమేచతథాభాగే సంవిభాగోయథార్హతః। పితృదేవమనుష్యాణాం కీటానాంచోపదిశ్యతే" = பகலின் ஐந்தாவது பங் கில் தென்புலத்தார் வேள்வி, தேவர்வேள்வி, மானுடவேள்வி,

பூதவேள்வி, தக்கதென்று முறைப்படி உபதேசிக்கப் படுகின்றது. எ-று. காண்க.

ஆயின். "ఆతిథ్యం వైశ్వదేవంచ" என்ற மூலவசனத்தால் வைசுவ தேவத்தினும் முன்பாக அதிதி = விருந்தினரை யுபசரிக்க வேண்டுமென்று கூறப்பட்டிருக்கின்றது. ஆயினும் தேவதார்ச்சனை முடித்தவுடனே வைசுவதேவஞ் செய்யத்தக்கதென நரசிங்க புராணத்துட் கூறப்பட்டது. నృసింహపురాణే॥ "పౌరుషేణ చసూక్తేన తతో విష్ణుం సమర్చయేత్। వైశ్వదేవం తతః కుర్యాద్బలికర్మ తథైవచ।" "తతః" = அதன்பின்பு. அதற்காயினும் பின்னர் என்றபொருளில்ஐந்தாம் வேற்றுமை யுருபு நிற்றற்குரிய இடத்தில் வந்திருக்கும் "తసిః" என்ற பிரத்தியயம் = விகுதியை யிறுதியிலுடைய அவ்வியயம். பின்னர் புருட சூக்கத்தால் விஷ்ணுவைப் பூசித்து, அதன்பின் வைசுவதேவஞ் செய்து அதன்பின்பு பலிக்கருமஞ் செய்ய வேண்டும். எ-று. காண்க.

புராணவசனத்துள் "తతః" என்று ஐந்தாவதனுருபுதொனித்தலால் இக்கருமஞ்செய்த பின்னரே பலிக்கருமஞ் செய்ய வேண்டுமென்னும் முறைப்பாடு விளங்குகின்றது. இனி இப்பராசரமூலத்துள்ளோ வெனில்? கருமங்களின் பெயர் வகைமாத்திரம் பாடங்கூறப்பட்டன, எனவே-பாட முறையாலேயே கருமமுறையுணரவேண்டுவதா யிருப்பதன்றிக் கருமமுறையையுணர்த்தும் வேறுமொழி காணப்படுவதில்லை. இங்ஙனமாக எதனைப் பற்றிக் கருமமுறையை யேற்படுத்த வேண்டும் என்றவழி, இருதிறநூலி லொருவிடயத்திற்குப் பொருள் வேறுபாடு வந்தவழி அவ்விரண்டனுள் எதற்கு அனுக்கிரஹமாகச் சுருதி உதவியுண்டாகின்றதோ? அதுவே வலுவுள்ளது. எனவே சுருதியே சிறந்ததென்றுபலாபலக் குறிகளைத் தெரிவிக்கின்ற இலிங்க சூத்திரத்துள், விதித்திருத்தலின் வைசுவ தேவ கருமத்தையே முன்னர் செய்யவேண்டும். இவ்வாறு பொருட்டுணிவு செய்தால் வேத பாடமுறையை விலக்காது கொண்டவாறே யாயிற்று.

அவ்வேதத்தின் பாடமுறையாவது. శ్రుతిః॥ "దేవయజ్ఞః పితృయజ్ఞో మనుష్యయజ్ఞో బ్రహ్మయజ్ఞః" = என்ற இச்சுருதி பாடமுறையில் தேவயாகம் எனவே வைசுவதேவம் முதற்கண்ணே கூறப்பட்டிருக்கின்றது.

ஸ்மார்த்த பாடத்தினும் சுரோளதபாடம் வலியதொன்று என்று "விரோதாதிகரணம்" என்னும் மீமாம்ஸா நியாயத்தால் தெரியவருகின்றது. ஆகலின். வைசுவ தேவத்தையே முன்னர் செய்யவேண்டும். ஆகவே வைசுவ தேவத்தையே முன்னர்க் கூறுகின்றும்.

## வைசுவதேவவிதி.

வைசுவதேவத்தை வியாசர் விதிக்கின்றனர். వ్యాసః॥ "వైశ్వదేవం ప్రకుర్వీత స్వశాఖావిహితం తతః। సంస్కృతాన్నైశ్చవిధైర్హవిర్భిర్వ్యంజనాన్వితైః। తైరేరావాన్నైర్బలిందద్యాచ్ఛేషమాస్థాన్యవారిణా। కృత్వాపసవ్యంస్వధయాసర్వం దక్షిణతోహరేత్"=தேவார்ச்சனை செய்தபின்பு வைசுவதேவத்தைச் செய்யவேண்டும். சமஸ்காரஞ் செய்யப்பட்ட கறிகாய்வகை வியஞ்சனத்தோடு அந்த வைசுவதேவாந்நப் பங்கிறைலேயே பலியைக் கொடுக்க வேண்டும். மிகுந்த சேடத்தை நீர்விட்டு அபசவ்வியப் பூணநூலோடு எல்லாவற்றையும் "சுவதா" என்று கூறித் தென்புலத்தார் பொருட்டுத் தென்திசையில் வைக்கவேண்டும். எ-று. காண்க.

நாராயணர். నారాయణః॥ "సభార్యస్తుశుచిస్స్నాతో విధినాచమ్యవాగ్యతః। ప్రవిశ్యసుసమిద్ధేఽగ్నౌ వైశ్వదేవంసమాచరేత్" = மனைவியோடு நீராடி சுத்தனுய் விதிப்படி ஆசமித்து, வாய்பேசாது, அக்கினி யிருக்குமிடஞ் சென்று எரிந்து கொண்டிருக்கும் அக்கினியில் வைசுவதேவ கருமத்தை நன்ருகச் செய்யவேண்டும். எ-று. காண்க.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ "శాలాగ్నౌ లౌకికేవాపి జలేభూమ్యామథాపివా। వైశ్వదేవస్తుకర్తవ్యో దేవయజ్ఞస్సవైస్మృతః। యదిస్యాల్లౌకికేపాకస్తతోన్నంతత్రహూయతే। శాలాగ్నౌతు పచేదన్నం విధిరేషసనాతనః" = சாலைக்கணுள்ள தீயிடத்தாயினும், இலௌகிகத் தீயினிடத் தாயினும், நீரினிடத்தாயினும், நிலத்திடத்தாயினும், வைசுவ தேவத்தைச் செய்யவேண்டும். அது தேவர் வேள்வியென்று கூறப்படுகின்றது. இலௌகிகத் தீயினிடத்துப் பாகஞ் செய்ததாயின் அந்த அந்நத்தை லௌகிகத் தீயினிடத்தே ஹோமஞ் செய்ய வேண்டும். சாலைத்தீயில் பாகம் செய்திருந்தால் அத்தீயிற்றுனே ஹோமஞ் செய்யவேண்டும். இவ்விதிநிலை பெற்றது. எ - று. காண்க.

அங்கிரா. అంగిరాః॥ "శాలాగ్నౌ పాచయేదన్నం లౌకికం చాపి నిత్యశః। యస్మిన్నగ్నౌ పచేదన్నం తస్మిన్ హోమో విధీయతే" = சாலைத்தீயி னிடத்தாயினும் இலௌகிகத் தீயினிடத்தாயினும், எந்தத் தீயில் பாகஞ் செய்யப்பட்டதோ? அந்தத் தீயினிடத்தே ஹோமஞ் செய்யவேண்டும். இந்த நியமம் மாறாதது. எ-று. காண்க.

சாதாதபர். శాతాతపః॥ "లౌకికే వైదికే వాపి హుతోత్సృష్టే జలే క్షితౌ। వైశ్వదేవస్తు కర్తవ్యః పంచసూనాపనుత్తయే" = இலௌகிகத் தீயினிடத்தாயினும் வைதிகத் தீயினிடத்தாயினும் ஹோமஞ் செய்து நீரைத்தெளித்த நிலத்தின்மீது பஞ்ச சூநதோஷ பரிகாரத்தின் பொருட்டு வைசுவதேவத்தைச் செய்ய வேண்டுவது. எ-று. காண்க.

## பஞ்சசூநம்.

பஞ்சசூநத்தை இயமன் கூறுகின்றனர். యమః॥ "పంచసూనా గృహస్థస్య వర్తంతే హరహస్సదా। ఖండనీ పేషణీ చుల్లీ జలకుంభ ఉపస్కరః॥" (అవస్కరః= என்பதூஉம் பாடம்) ఏతాస్సర్వం ప్రాపయన్విప్రో బధ్యతే వై ముహుర్ముహుః। ఏతాసాం పావనార్థాయ పంచయజ్ఞాః ప్రకీర్తితాః" = இல்லறத்தானுக்கு ஒவ்வொருபகலிலும் ஐவகைச் சூனம் உள்ளது. அவை கண்டினி, பேஷணி, சுல்லி, சலகும்பம், உபஸ்கரம், அல்லது அபஸ்கரம். என்ற வைந்தும் சூனமென்னும் பெயரவாம். இவற்றைஅவற்றவற்றின் காரியத்துள்ளே சம்பந்தப் படுத்துகின்ற வேதியன் ஒவ்வொரு தடவையும் பாவக்கட்டுக்குள்ளகப்படுகின்றான். ஆதலால் இவ்வைந்தின் ஒழிவாற் சுத்தனாகும் பொருட்டு ஐவகைப் பெரும் வேள்வி கூறப்பட்டுள்ளன. எ-று. காண்க. (சூனம் = கொலைக்கிடம். கண்டினீ=முறித்தல். அது உலக்கை உரல், அரிகருவி முதலிய கருவியாலாவது. பேஷணீ=அரைத்தல். அம்மி முதலியவற்றாலாவது. சுல்லி=அடுப்பு=அடுக்களையிடம். சலகும்பம் = நீர்க்குடம். நீர் சோதிக்கும் ஆடைமுதலியன. உபஸ்கரம் = முறம், சல்லடைமுதலிய பாடபேதத்தால் அபஸ்கரம். என்றது விளக்கும் அலகு, மெழுகும் ஆடை முதலியது. இவைகள் உயிர்க்கொலைக்கு இடமாகவிருக்கின்றன. இவை இல்லறத்தார் அனைவர்க்கும் நாடோறும் செய்யத்தக்க கருமங்கட்கு இன்றியமையாதன. இவற்று

னுண்டாம் உயிர்க்கொலைப் பாவம் மனைத்தலைவன் ஒருவனைச் சேருமேயல்லது அக்குடும்பத்துள் ஏனையர்க்கு இல்லை.

## வைசுவதேவகாலம்.

வைசுவதேவ கருமத்தை இரு பொழுதினும் செய்யவேண்டும் எனக் காத்தியாயனர் கூறினர். కాత్యాయనః॥ "సాయంప్రాతర్వైశ్వదేవః కర్తవ్యోబలికర్మచ। అనశ్నతాపిసతత మన్యథాకిల్బిషీభవేత్" = தலைவன் உண்ணுவிடினும் பகலினும் இரவினும் வைசுவதேவத்தையும், பலிதான கருமத்தையும் செய்யவேண்டும். செய்யாவிட்டால் பாவமுடையவனுவன். எ-று. காண்க.

## வைச்சுவதேவஹோமம்.

ஹோமஞ் செய்யத்தக்க முறையை ஆசுவலாயனர் கூறினர். ఆశ్వలాయనః॥ "అథసాయం ప్రాతస్సిద్ధస్య హవిష్యస్యజుహుయాదగ్ని హోత్రదేవతాభ్యస్సో మాయవనస్పతయేగ్నీషో మాభ్యామింద్రాగ్నిభ్యాం ద్యావాపృథివీభ్యాం ధన్వంతరాయేన్ద్రాయవిశ్వేభ్యో దేవేభ్యోబ్రహ్మణేస్వాహా" = பின்பு காலையிலேனும் மாலையிலேனும் அவிசுபாகமாய் முடிந்தவுடனே அக்கினிஹோத்திர தேவதைகட்கும், சோமாதி தேவதைகட்கும், சுவாஹாகாரத்தோடு அந்த அவிசுவை அந்தப்பாகத் தீயினிடத்தில் தனித்தனி ஹோமஞ் செய்யவேண்டும். எ-று. காண்க. அக்கினிஹோத்திர தேவதைகளாவார். சூரியன், அக்கினி, பிரஜாபதி. என்பார்.

ஆபத்தம்பர். ఆపస్తంబః॥ ఔపాసనేపచనేవాషడ్భిరాద్యైః ప్రతిమంత్రంహస్తేనజుహుయాదుభయతఃపరిషేచనం యథాపురస్తాత్" = ஔபாசனத்திலாயினும் பாகத்திலாயினும்முதல்ஆறுவகையால்ஒவ்வொருமந்திரத்திற்கும் கையால் ஹோமஞ் செய்யவேண்டும். இரண்டிலும்பரிஷேஜனம்.எவ்வாறு முன்னிடத்திலோ ? எறு. (முதலது எனவே வைசுவதேவானுவாகத்தில்முதலிற்கூறப்பட்டுள்ள "అగ్నయేస్వాహా" என்றதுமுதல் சுவிஷடகிருது வரையிலுமாகிய ஆறுமந்திரத்தால். உபயதঃ=இரண்டிலும் என்பது கருமத்தின் முதலிலும் முடிவிலும் என்க).

சாத்தியாயனர். కాత్యాయనః॥ "వైశ్వదేవాదన్నాత్పర్యుక్ష్య స్వాహాకారైర్జుహుయాత్" = வைசுவதேவ அந்நத்திருந்து பரிஷேஜனம்

செய்து சுவாஹாகாரத்தினால் மந்திரத்துட் கூறியபடி ஐந்து ஆகுதிகளை ஹோமஞ் செய்யவேண்டும். எ-று. காண்க. இவ்வை சுவதேவ விடயத்தில் அவரவரும் தத்தம் சாகை சூத்திரங்களுட் கூறியபடி நடக்கவேண்டுவதென்று வகுக்கப்பட்டது.

## வைசுவதேவாந்ந சமஸ்காரம்.

ஹோமஞ் செய்யத்தக்க அந்நத்திற்குச் செய்யவேண்டிய சமஸ்காரத்தை வியாசர் கூறினர். వ్యాసః॥ "జుహుయాత్సర్పిషాభ్యక్తం తైలక్షారవవర్జితం। దధ్యక్తంపయసాభ్యక్తం తదభావేంబునాపివా" = நெய்யால் நனைக்கப்பட்டதும், அல்லது தயிரினாலேனும் இல்லையேற் பாலினாலேனும் நனைக்கப்பட்டதும், ஒன்றுங் கிடையாவழி நீரினால் நனைக்கப்பட்டதுமா யுள்ளதும், எண்ணெய், காரசாரப் பண்டங்கள் கலவாததா யுள்ளதுமாகிய அவிசை ஹோமஞ் செய்ய வேண்டும். எ-று. காண்க.

## வைசுவதேவத் திரவிய அநுகற்பம்.

திரவியங்களின் அநுகற்பம் சதுர்விம்சதிமதத்துள் கூறப்பட்டது. చతుర్వింశతిమతే॥ "అలాభేయేనకేనాపి ఫలశాకోదకాదిభిః। పయోదధిఘృతైఃకుర్యాద్వైశ్వదేవంస్రువేణతు। హస్తేనాన్నాదిభిఃకుర్యాదద్భిరంజలినాజలే" கிடையாவழி எதனோடாயினும், எதேனும் ஒன்றினால், எனவே பழம், காய், இலை, சலம், கிழங்குவகை, பால், தயிர், நெய், முதலிய சத்துவத் திரவியங்களால் சிருக்கு, சிரவம் என்னும் இருவகை ஹோமக்கருவியுள் ஒன்றினாலாயினும் ஒரு கையினாலாயினும், இருகரத்தாலாயினும், தீயினிடத்தேனும், நீரினிடத்தேனும், நிலத்தினிடத்தேனும் வைசுவதேவஹோமத்தைச் செய்யலாம். எ-று. காண்க. இருகரம்=அஞ்சலி.

எதனைத்தான் புசிக்கின்றானோ? அதனைக்கொண்டே ஹோமஞ்செய்ய வேண்டும். என்று கிருகிய பரிசிஷ்டமென்னு நூலுட் கூறப்பட்டது. గృహ్యపరిశిష్టే॥ "శాకంవాయదివాపత్రం మూలంవా యదివాఫలం। సంకల్పయేద్యదాహారం తేనైవజుహుయాదపి" = காய்கறியேனும், இலைக்கறியேனும், வேரேனும், கிழங்கேனும், எந்த ஆகாரத்தைத் தான் உண்ண விரும்புகிறானோ? அதனானே ஹோமமுஞ்செய்ய வேண்டும். எ-று. காண்க.

க்ஷாரத்திரவியம், உப்பு, அந்நியர்கை உணவு, முதலிய குற்றங்களோடு கூடிய அவிசினால் அக்கினியில் ஹோமஞ்செய்யலாகாது. பிறவெனின்? தீயினிடத்துள்ள சூட்டோடுங் கூடிய நீறு = சாம்பரை விலக்கி அத்தீயினிடத்தில் சுத்தமாகிய அவிசைஹோமஞ் செய்யவேண்டும். அதனை ஆபத்தம்பர் கூறினர். ఆపస్తంబః॥ "నక్షారలవణహోమో విద్యతేతథాపరాన్నసంసృష్టస్య హవిష్యస్యహోమ ఉదీచీనముష్ణంభస్మాపోహ్య తస్మిన్జుహుయాత్తద్ధుతమహుతం చాగ్నౌభవతీతి"= காரத்தோடும், உப்பினேடும், ஹோமமில்லை. அந்நியர்கை யந்நங்கலந்த அவிசோடும் ஹோமமில்லை. சூடாகிய சாம்பரை வடக்கின்கண் விலக்கி, அதனிடத்தில் ஹோமஞ்செய்யவேண்டும். அது அக்கினியில் ஹோமஞ்செய்யப்பட்டதும், ஹோமஞ் செய்யப்படாததும் ஆகின்றது. எ-று, காண்க.

கிருகியபரிசிஷ்டம்: గృహ్యపరిశిష్టే॥ "ఉత్తానేనతుహస్తేన హ్యంగుష్ఠాగ్రేణపీడితం। సంహతాంగుళిపాణిస్తు వాగ్యతోజుహుయాద్ధవిః" = கீழ்நோக்கிய கையால் நான்குவிரலையும் சேர்த்துப் பெருவிரலால் அவிசை அழுத்திப் பிடித்து வாய்பேசாது ஹோமஞ் செய்யவேண்டும். எ-று. காண்க.

## அநக்கினிகன் வைசுவதேவம்.

அநக்கினிகன் = பிரமசாரியன், விதுரன் = மனைவியிழந்தவன் முதலியோர் செய்யும் வைசுவதேவத்திலுள்ள விசேடத்தை விருத்தவசிட்டர் கூறினர். వృద్ధవసిష్ఠః॥ "అనగ్నికస్తుయోవిప్రస్సోన్నంవ్యాహృతిభిస్స్వయం। హుత్వాశాకలమంత్రైస్తుశిష్టంకాకబలింహరేత్"=வேள்வித்தீயில்லாத வேதியன் அந்நத்தை வியாகிருதிகளாலும், சாகல மந்திரங்களாலும், ஹோமஞ்செய்து மிக்கவற்றைக்காக்கைக்குப் பலியாகக் கொடுக்கவேண்டும். எ-று. காண்க. (சாகலமந்திரம் என்பது. "దేవకృతస్యైనసః" என்றது முதலிய வென்றுணர்க.

விஷ்ணு. విష్ణుః॥ "అన్నంవ్యాహృతిభిర్హుత్వా హుత్వామంత్రైశ్చశాకలైః। ప్రాజాపత్యైర్హవిర్హుత్వా పూజయేదతిథీంస్తతః" = அந்நத்தை வியாகிருதிகளால் ஹோமஞ்செய்து, சாகல மந்திரங்களாலும் ஹோமஞ்செய்து, பிராஜாபத்திய மந்திரங்களாலும் ஹோமஞ்செய்து, அதன்பின் அதிதிகளைப் பூசித்தல்வேண்டும். எ-று. காண்க.

தேவயாகம் முற்றிற்று.

## பூதயாகம்.

பூதயாகம் கூர்மபுராணத்துட் கூறப்பட்டது. కూర్మపురాణే॥ "దేవేభ్యస్తుహుతాదన్నా చ్ఛేషాద్భూతబలింహరేత్। భూతయజ్ఞస్సవైప్రోక్తో భూతిద స్సర్వదేహినాం" = தேவர்கட்கு ஹோமஞ்செய்து மிருந்த அந்நத்திலிருந்து பூதங்கட்கு = உயிர்களுக்குப் பலியைக் கொடுக்க வேண்டுவது. அது பூதயாகமென்று பிரசித்தமாய்க் கூறப்பட்டது. உடம்போடுகூடிய எல்லாவுயிர்க்கும் அந்த வேள்வி திருவைக் கொடுக்கத்தக்கது. எ-று. காண்க.

ஹாரீதர். హారీతః॥ "వాస్తుపాలభూతేభ్యో బలిహరణంభూతయజ్ఞః"= வாஸ்து=மனையைக் காத்திருக்கும் தெய்வங்கட்குப் பலிகொடுப்பதே பூதயாகமாம். எ-று. பலி = பலத்தைச் செய்கின்ற உணவு.

காத்தியாயனர். కాత్యాయనః॥ "ఉద్ధృత్యహవిషాసిచ్య హవిష్యేణఘృతాదినా। స్వశాఖావిధినాహుత్వా తచ్ఛేషేణబలింహరేత్" = சமைத்த அவிசில் நாலி லொருபங்கை யெடுத்துக்கொண்டு நெய்யிட்டுத் தன்சாகையின் விதிப்படி ஹோமஞ்செய்து அதனுண் மிக்கதை பூதங்கட்குப் பலிகொடுக்கவேண்டும். எ-று. காண்க.

### வைசுவதேவஞ்செய்யத்தக்கவர்.

கௌணகருத்தர்களை அத்திரிகூறினர். అత్రిః॥ "పుత్రోభ్రాతా థవాఋత్విక్ శిష్యశ్శ్వశురమాతులాః। పత్నీశ్రోత్రియయాజ్యాశ్చ స్పృష్టాస్తేబలికర్మణి"= மகன், உடன்பிறந்தார், இருத்துவிக்கு, மாணாக்கன், மகட்கொடைதந்த மாமன், அம்மான், மனைவி, சுரோத்திரியன், புரோகிதன், என்னு மிவர்கள் பலிகரணகருமஞ் செய்யத்தக்கவராகக் குறிப்பிக்கப்பட் டிருக்கின்றார்கள். எ-று. காண்க.

### வழிநடப்போன்செய்யும் ஐவகைவேள்வி.

மனைக்கண் வேறு கருத்தர்க ளில்லாவிட்டால் அந்நிய ஆருக்குப் போகப் புறப்பட்டவன் தானே செய்துகொண்டிருக்க வேண்டுமென்று போதாயனர்கூறினர். బోధాయనః॥ "ప్రవాసంగచ్ఛ

తోయ స్వగృహేకర్తానవిద్యతే। పంచానాంమహతామేషాం సయజ్ఞైస్సహగచ్ఛతి ”= மனையில் வைசுவதேவம் செய்துகொண்டிருந்து, ஊர்ப்பயணம் போகத்துணிந்தவன் கௌணகருத்தர்கள் இல்லாவிட்டால் ஐவகைப்பெரும் வேள்வியோடும் வழிநடப்பன். எறு. காண்க.

## பலிகரணவகை.

சௌனகர். శౌనకః॥ “ అథబలిహరణమేతాభ్యశ్చైవదేవతాభ్యోఽప్స్వోషధివనస్పతిభ్యోగృహ్యగృహదేవతాభ్యోవాస్తుదేవతాభ్యఇంద్రాయేంద్రపురుషేభ్యో యమాయయమపురుషేభ్యోవరుణాయవరుణ పురుషేభ్యస్సోమాయసోమపురుషేభ్యఇతిప్రతిదిశం బ్రహ్మణేబ్రహ్మపురుషేభ్య ఇతిమధ్యేవిశ్వేభ్యోదేవేభ్య స్సర్వేభ్యోభూతేభ్యోదివాచారిభ్య ఇతిదివా నక్తంచారిభ్యఇతినక్తంరక్షోభ్య ఇత్యుత్తరతస్స్వధాపితృభ్యఇతి ప్రాచీనావీతీశేషం దక్షిణాయాందిశినినయేత్ ” = தருக்கள் முதலியவற்றி னுள்ள அபிமானி தெய்வங்கட்கும், மனைத் தெய்வங்கட்கும், வாஸ்து தேவதைகட்கும் பலிகொடுத்து, பின்பு இந்திரதிசை முதலிய நான்குதிசைக்கண்ணும் இம்மந்திரத்துட் குறித்திருக்கும் இந்திராதிதேவர் நால்வருக்கும் பலிகொடுத்து, அந்நான்கி னடுவே பிரமனாதி தேவர்க்குப் பலியீந்து, அதன் பின்னர் விசுவதேவர் முதலிய எல்லாத்தேவர்க்கும், எல்லாப் பூதங்களுக்கும், பகல் வைசுவதேவத்தில் பகலில் சஞ்சரிக்கும் உயிர்களுக்கும், இராத்திரி வைசுவதேவத்தில் இரவிற் சஞ்சரிக்கும் உயிர்களுக்கும், அரக்கருக்கும், வடதிசையில் பலிசெய்து, பின்பு தெற்காகத் திரும்பி, பூணூலை அபசவிய மாக்கிக்கொண்டு பிதிரரைக் குறித்து மிகுந்தபலி அந்நம் எல்லாவற்றையும் தென்றிசையில் வைத்துவிட வேண்டும். எறு. காண்க,

ஆபத்தம்பர். ఆపస్తంబః॥ “అపరేణాగ్నింసప్తమాష్టమాభ్యాముదగపవర్గముదధానసన్నిధౌ నవమేనమధ్యే గారస్యదశమై కాదశాభ్యాంప్రాగపవర్గముత్తరపూర్వదేశేగారస్యోత్తరై. శ్చతుర్భిశ్శయ్యాదేశే కామలింగేనదేహళ్యామంతరిక్షలింగేనోత్తరేణాపి ధాన్యాముత్తరైర్బ్రహ్మసదనేదక్షిణతః పితృలింగేనప్రాచీనావీత్యవాచీనపాణికుర్యాద్రౌద్రఉత్తరతోయథా దేవతాభ్యస్తయోర్నానా పరిషేచనం తయోర్ధర్మభేదాన్నక్తమేవోత్తరేణ వైహాయసం ”=வைசுவதேவ காண்டத்திலுள்ளமந்திரமுறையைக் கணக்கிட்டுக்கொண்டு இந்தச் சூத்திரத்துட் கூறியுள்ளபடி அந்தந்த எண்ணோடுங்கூடிய மந்திரத்தாலும் அந்

தந்தத் தேவர்களின் அடையாளங்களைத் தெரிவிக்கும் மந்திரங்களாலும் மனையின் அவ்வவ்விடங்களில் பலிவைத்து, வேறுவேறு பரிஷேஜனம் செய்யவேண்டும் என்றது முக்கியக்கருத்து. எனக் காண்க.

மார்க்கண்டேயர். మార్కండేయః॥ “ఏవంగృహబలింకృత్వా గృహేగృహపతిశ్శుచిః। ఆప్యాయనాయభూతానాం కుర్యాదుత్సర్గమాదరాత్ ” = இல்லறத்தானாகிய தலைவன் மனையில் பலிசெய்து பூதங்களைத் திருத்தி செய்வதற்கு மனைக்குவெளியிற் கொண்டுபோய் வைக்கவேண்டுவது. எ-று. காண்க. பூதம் = உயிர்கள்.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ “శ్వభ్యశ్చశ్వపచేభ్యశ్చపతితేభ్యస్తథైవచ। దద్యాద్భూమౌబహిస్త్వన్నం పక్షిభ్యోథద్విజోత్తమాః ” = நாய்க்கும், அந்நாயைத்தின்னுமவர்க்கும், பதிதர்க்கும், பறவைகட்கும், மனைக்குப் புறத்தில் நிலத்தின்மேல் அந்நம் வைக்கவேண்டும். எ-று. காண்க.

மனு. మనుః॥ “శునాంచపతితానాంచ శ్వపచాంపాపరోగిణాం। వాయసానాంక్రిమీణాంచ శనకైర్నిర్వపేద్భువి” = நாய்க்கும், பதிதர்கட்கும், நாயைத்தின்பவர்க்கும், கருமவியாதி யுடையவர்க்கும், காக்கைக்கும், சிற்றுயிர்க்கும் நிலத்தின்மேல் மெல்ல அன்னம் வைக்கவேண்டும். எ-று. காண்க.

அந்தப் பலியந்நத்தைக் கொடுப்பதற்குரிய மந்திரம் விஷ்ணுபுராணத்துட் கூறப்பட்டது. విష్ణుపురాణే॥ “దేవామనుష్యాఃపశవోవయాంసి సిద్ధాశ్చయక్షోరగ దైత్యసంఘాః। ప్రేతాఃపిశాచాస్తరవస్సమస్తాయే చాన్నమిచ్ఛంతిమయాప్రదత్తం॥ పిపీలికాకీటపతంగకాద్యా బుభుక్షితాఃకర్మనిబంధబద్ధాః। ప్రయాంతుతేతృప్తి మిదంమయాన్నంతే భ్యోనిసృష్టం సుఖినోభవంతు॥ యేషాంన మాతా నపితా నబంధుర్నైవాన్నసిద్ధిర్నతథాన్నమస్తి। తత్తృప్తయేన్నంభువి దత్తమేతత్తేయాంతు తృప్తింముదితాభవంతు॥ భూతానిసర్వాణి తథాన్నమేతదహంచ విష్ణుర్నతతోన్యదస్తి। తస్మాదిదంభూతహితాయ భూతమన్నంప్రయచ్ఛామి హితాయతేషాం। చతుర్దశోలోకగణోయ ఏషతత్రస్థితా యేఖిలభూతసంఘాః। తృప్త్యర్థమన్నంహిమయావిసృష్టం తేషామిదం తేముదితాభవంతు॥ ఇత్యుచ్చార్యనరోదద్యాదన్నంశ్రద్ధాసమన్వితః। భువిభూతోపకారాయ గృహీసర్వాశ్రయోయతః” = தேவர், மனுடர், மிருகம், சித்தர், இயக்கர், சர்ப்பங்கள், தைத்தியர், பிரேதர்கள் = இறந்து

கருமமற்றிருப்பவர்கள், பைசாசர்கள், தருக்கள், என்று கொடுக்கப்படும் பலியன்னத்தை விரும்புவோர், எறும்பு, புழுக்கள், இறகுள்ள செந்துக்கள், கருமக்கட்டிலகப்பட்டுப் பசியால் வருந்துகின்ற பிராணிகள், இவரனைவர்க்கும் என்னால் பலியன்னம் கொடுக்கப்பட் டிருக்கின்றது. அவரனைவரும் திருத்தியடைந்து சுகமுற்றுவாழ்க. யாருக்குத் தாய்தந்தை சுற்றமுதலிய ஆதரவில்லையோ? யாருக்கு உண்டியில்லையோ? அவர்கள் திருத்தியின் பொருட்டு என்னால் நிலத்தின்மேல் அன்னம் வைக்கப்பட்டிருக்கின்றது. இதனால் அவர்கள் திருத்தி யடைந்து களிப்போடு வாழ்க. எல்லாவுயிர்களும், அன்னமும், நானும், விஷ்ணுவாகவே இருக்கின்றோம். விஷ்ணுவினும் வேறு ஒன்றுமில்லை. அதனால் சருவபூதவடிவனாகிய விஷ்ணுவின் இதத்தின் பொருட்டு அந்தப்பூத வடிவாகிய அன்னத்தையே தருகின்றேன். அது பூதங்களின் இன்பத்தின் பொருட்டு ஆகுக. பதினான்கு உலகத்தி னுள்ளும் இருக்கும் எல்லாவுயிர்க் கூட்டங்களுக்கும் திருத்தியுண்டாக வென்று, பலியன்னம் என்னால் தாரைவார்த்து விடப்படுகின்றது. இது அவர்கட்குப் பிரீதியாகுக. அனைவரும் சந்தோடத்தோடுவாழ்க. என்றது புராணமந்திரத்தின் பொருள். இனி இம்மந்திரங்களைக் கூறி, சிரத்தையோடுபூமியின்மேல் அன்னத்தைக் கொடுக்கவேண்டும். ஏன்எனில்? இல்லறவொழுக்கமுடையவன், எனவே மனைவியோடு கூடியிருந்து குடித்தனம் செய்பவன் அனைவர்க்கும் பற்றுக்கோடாக இருத்தலின், உயிர்களுக்கெல்லாம் உபகாரம் செய்யவேண்டும். எ-று. காண்க.

பூதவேள்வி முற்றிற்று.

## பிதிர் வேள்வி.

தென்புலத்தார் வேள்வி சுருதியாற் குறிப்பிக்கப்பட் டிருக்கின்றது. ஸ்ருதி:॥ "యత్పితృభ్యస్స్వధాకరోత్యథ పితృయజ్ఞస్సంతిష్ఠతే"— தென்புலத்தார்க்கு எதனை "சுவதா" என்று கொடுக்கின்றனோ? எந்தநீரைக் கொடுக்கின்றனோ? அது பிதிர்யாகமாக விருக்கின்றது. எ-று. காண்க.

காத்தியாயனர். కాత్యాయనః॥ "అధ్యాపనంబ్రహ్మయజ్ఞః పితృయజ్ఞస్తుతర్పణం। హోమోదైవోబలిర్భౌతో నృయజ్ఞోఽతిథిపూజనం। శ్రాద్ధంవాపితృయజ్ఞస్స్యాత్పిత్ర్యోబలిరథాపివా" = வேதத்தை யோதுவித்தல் பிரமவேள்வி, தருப்பணமே பிதிர்வேள்வி, ஹோமமே தேவவேள்வி, பலிகொடுத்தலே பூதவேள்வி, அதிதிகளைப் பூசிப்பதே மானுடவேள்வி, சிராத்தமும் பிதிர்யாகமாகின்றது. தென்புலத்தார்க்குப் பலியீதலும் பிதிர் வேள்வியாம். ௬று. காண்க. ஈண்டு அவரவர் சாகையின்படி ஏற்பாடுகளுண்டாயிருக்கின்றன. இங்கு கூறியிருக்கும் சிராத்தமென்பது நித்திய சிராத்தத்தைக் குறிக்கின்றது.

## நித்தியசிராத்தவிதி.

நித்தியசிராத்த மெனவே "ఏకంతుభోజయేద్విప్రం పిత్రూనుద్దిశ్యసత్తమః। నిత్యశ్రాద్ధంతదుద్దిష్టం పితృయజ్ఞోగతిప్రదః" = நாடோறும் தென்புலத்தாரைக் குறித்து ஒவ்வொரு வேதியனை யாயினும் உண்பித்துவந்தால் அது நித்தச்சிராத்தம் என்னப்படும். அதுவே பிதிரர்களுக்கு நற்கதியைத் தரத்தக்க பிதிர்வேள்வியாம். எ-று. காண்க.

மார்க்கண்டேயர். మార్కండేయః॥ "కుర్యాదహరహశ్శ్రాద్ధ మన్నాద్యేనోదకేనవా। పిత్రూనుద్దిశ్యవిప్రాంస్తు భోజయేద్విప్రమేవవా" = அன்ன முதலியவற்றாலாயினும், நீரினாலாயினும், தென்புலத்தாரைக் குறித்து நாடோறும் சிராத்தஞ் செய்யவேண்டும். அந்தணரையாயினும் ஒருவேதியனையாயினும் உண்பிக்கவேண்டும். எ-று. காண்க.

நித்தச்சிராத்த வகையை மச்சபுராணத்துட் குறிப்பிக்கப்பட்டது. మత్స్యపురాణే॥ "నిత్యంతావత్ప్రవక్ష్యామి అర్ఘ్యావాహనవర్జితం। అదైవంతంవిజానీయాత్ పార్వణేతద్ధికీర్తితం" = தேவபாகம், அருக்கியம், ஆவாஹநம், இவைகளொன்று மின்றி நித்தச்சிராத்தத்தினைச் செய்யவேண்டும். இவையெல்லாம் பார்வணச் சிராத்தத்துட் கூறப்பட்டது. எ-று. காண்க.

பிரசேதர். ప్రచేతాః॥ "నావాహనాగ్నౌకరణం నపిండంనవిసర్జనం" = நித்தச் சிராத்தத்துள் ஆவாஹநம், அக்கினௌகரணம், பிண்டம், விசர்ஜநம். இல்லையாம். எ-று. காண்க.

வியாசர். వ్యాసః॥ "నిత్యశ్రాద్ధే ర్ఘ్యగన్ధాద్యైఃద్విజానభ్యర్చ్యశక్తితః। సర్వాన్పితృగణాంత్సమ్యక్సహైవోద్దిశ్యభోజయేత్। ఆవాహనస్వధాకార పిండాగ్నౌకరణాదికం। బ్రహ్మచర్యాదినియమోవిశ్వేదేవాస్తథైవచ। నిత్యశ్రాద్ధేత్యజేదేతా న్భోజ్యమన్నంప్రకల్పయేత్। దత్వాతుదక్షిణాంశక్త్యానమస్కారైస్సమర్చయేత్। ఏకమప్యాశయేన్నిత్యం షణ్ణామప్యన్వహంగృహీ" = நித்தச் சிராத்தத்தில் அருக்கியம், சந்தனம் முதலியவற்றோடு சத்தியுள்ளமட்டில் வேதியனைப்பூசித்து எல்லாப் பிதிரரையும் பொதுவாகக்குறித்து உண்பிக்கவேண்டும். ஆவாஹநம், சுவதாகாரம், பிண்டம், அக்கிநௌகரணம், முதலிய முக்கிய கருமங்களும், பிரமசரியம் முதலிய நியமங்களும், விசுவதேவர்களும் நித்திய சிராத்தத்தில் கூடாது. அந்நதான மாத்திரமே செய்யவேண்டும். சத்தியுள்ளவரையில் தக்ஷிணை கொடுத்து நமஸ்காரங்களால் நன்ருகப்பூசிக்கவேண்டும். ஒரு வேதியனுக்காவது நாடோறும் அந்நமிடவேண்டும். அறுதொழிலுக்கும் உரியவனுயுள்ள இல்லறத்தான் நாடோறும் இக்கருமஞ் செய்யவேண்டும். எ-று. காண்க. பிரமசரியநியமம் = மங்கையரோடு புணராமை.

## நித்தியசிராத்தத்திற்கு அனுகற்பம்.

நித்தச் சிராத்தத்திற்கு அனுகற்பத்தினைக் காத்தியாயனர் கூறினர். కాత్యాయనః॥ "ఏకమప్యాశయేన్నిత్యం పితృయజ్ఞార్థసిద్ధయే। అదైవంనాస్తిచేదన్యో భోక్తాభోజ్యమథాపివా। అభ్యుద్ధృత్యయథాశక్తి కించిదన్నంయథావిధి। పితృభ్యఇదమిత్యుక్త్వా స్వధాకారముదాహరేత్। తచ్చాస్మైబ్రాహ్మణాయేతి దత్వాభుంజీతవాగ్యతః" = பிதிரர் வேள்வியின்பொருட்டு நாடோறும் ஒருவேதியனுக்காயினும் அந்நமிடவேண்டும். அங்ஙனம்கூடாவழியேனும், புசிப்பவனில்லாவிடினும், உணவுப்பொருள் சாலாதாயினும், தன் உண்டியின்பொருட்டுக்குறித்துவைத்தஉண்டியில்சத்தியுள்ளமட்டில் சிறிது அந்நத்தையெடுத்து விதிப்படி "சுவதா" காரத்தோடு பிதிரருக்குத் தத்தஞ்செய்து அந்த அந்நத்தை பின்னவேதியனுக்கு என்று குறிப்பித்து வேறெடுத்துவைத்து மிக்கதை வாய்பேசாது புசிக்கவேண்டும். எடுத்துவைத்த அந்நத்தினை அவ் வேதியனுக்குக் கொடுத்துவிட வேண்டும். எ-று. காண்க.

அங்ஙனம் கூர்மபுராணத் துள்ளும் கூறப்பட்டது. కూర్మపురాణే॥ "ఉద్ధృత్యవాయథాశక్తి కించిదన్నంసమాహితః। వేదతత్వార్థవిదుషేద్విజాయై

వాపకల్పయేత్। దద్యాదహరహశ్శ్రాద్ధ మన్నాద్యేనోదకేనవా। పయోమూలఫలైర్వాపి పితృభ్యః ప్రీతిమావహన్" = சிறிது அந்நத்தையாவது எடுத்துவேதப் பொருளுணர்ந்த வேதியனுக்குக் கொடுத்துவிடவேண்டும். உள்ளவனயிருந்தால் நாடோறும், சோறு, நீர், பால், கிழங்குவகைகள், பழவகைகள் முதலியவற்றோடு பிதிரர்க்குத்திருத்தி புண்டாகும்படி நித்தச் சிராத்தம்செய்து வரவேண்டும். எ-று. காண்க.

நித்தியசிராத்தம் முற்றிற்று.

---

தேவயாகம், பூதயாகம், பிதிர்யாகம், இம்மூன்றும் மூலத்துட் கூறிய வைசுவதேவம் என்றசொல்லினல் கூறியதாகப் பொருள்படுகின்றது. విశ్వే = எல்லாரும். விசுவதேவர் எனவே எல்லாத்தேவரும் என்றபடி, எந்தயாகத்தில் பூசிக்கப்படுகின்ருர்களோ? அந்தக்கருமம் வைசுவதேவமென்னப்படும். தேவயாகத்தில், "విశ్వేభ్యో దేవేభ్యస్స్వాహా" என்று மந்திரம் கூறப்படுதலின் தேவயாகத்திற்கு வைசுவதேவமென்ற பெயர் ஒருதலையாகச் செல்லுகின்றது. ஆனல், யார்சாகையில் பூதயாகத்துள்ளும் இந்த மந்திரம் வருகின்றதோ? அவர்கட்குப் பூதவேள்வியும் வைசுவதேவம் என்னும் பெயர்க்குத்தக்கதாகவே யிருக்கின்றது. பிதிர் வேள்வியிலானலோ? "ఛత్రిన్యాయః" = சத்திரிநியாயத்தினல் அப்பெயர் உண்டாகலாம். சத்திரி நியாயமென்பது. "ఛత్రిణో యాంతి" = குடை யுடையவர்கள் போகின்ருர்கள். எ-று. ஈண்டுப் பன்மையீறு யாவரும் குடையை யுடையவர்கள் என்று பொருள் படுகின்றது. கூட்டத்துள் ஒருவனே யன்றே? குடைபிடித்திருக்கின்ருன். எல்லார்க்கும் அது இல்லாமையால் சிறந்த பொருள்கோளுக்கு இடமுண்டாவதில்லை. அதனனே இலக்கணையால் சாமானியப்பொருளை நிச்சயிக்கவேண்டும். ஆகவே, குடையுடையோனேடு செல்கின்றவரனைவரும் குடையுடையவர்கள் என்னும் வழக்குள்ளது. இந்தநியாயப்படியே விசுவதேவர்களின் மந்திரங்களுண்டா யிருக்கும் தேவயாகத்தோடு கூறப்பட்டிருக்கின்ற பிதிரர்வேள்வியும் தேவயாகம் போலவே வைசுவதேவம் என்னும் பெயரை அடைகின்றது. அல்லதுஉம். மூலவசனத்துள் "వైశ్వదేవంచ" என்புழி "చ" என்ற உம்மை

இடைச்சொல்லால் பிதிர் வேள்வி முதலியவற்றையும் எதிரது தழீஇயதாகத்தேவயாகத்தோடுசேர்த்துக்கூறப்படுகின்றது. (எதிரது தழூஉவலைச் சமுச்சயமெனக் கூறுப).

## வைசுவதேவத்தின் பயன்.

வைசுவதேவஞ் செய்தல் அன்னசமஸ்காரத்தின் பொருட்டா? புருடார்த்தத்தின் பொருட்டா? என்பது சமுசயம். "సాయం ప్రాతస్సిద్ధస్య హవిష్యస్య జుహుయాత్" என்ற இம்மொழியால் வைசுவதேவம் அந்நசமஸ்காரமென்றே தோற்றுகின்றது. "తానేతానహరహః కుర్వీత" என்ற மற்றொரு வாக்கியசேடத்தால் வைசுவதேவம் புருடார்த்தம் எனவேயுடன் படத்தக்கதாக விருக்கின்றது. இவ் விருவகைப் பொருள்கோளும் ஒன்றற்கொன்று முரணுதலின் இரண்டினையும் உள்ளதாக வுடன்பட்டுக் கொள்ளலாகாது. குற்றமென்னெனின்? வைசுவதேவம் அன்னத்திற்குச் சமஸ்கரமென்று கொள்ளின், அன்னம் தலைமையதாகின்றது. வைசுவதேவம் அதற்குக் குணமாகின்றது. வைசுவதேவம் புருடார்த்தமாகின்றது எனக்கொள்ளின் அவ்வைசுவதேவமே தலைமையதாகின்றது. அன்னமதற்குக் குணமாகின்றது. அங்ஙனமாயின், ஒருவிடயமே ஒரேகாலத்தில், முதலாகவும், குணமாகவும்இருப்பது வழக்குக்கு விரோதமாகின்றது. (எனவே, அன்னத்தின் பொருட்டுவைசுவதேவம்செய்வதா? வைசுவதேவத்தின்பொருட்டுஅன்னம் செய்வதா? என்பது சமுசயக்கருத்து. சோறுசமைத்தவுடனே வைசுவதேவம்செய்யவேண்டு மென்பதனால் அன்னசுத்தியின் பொருட்டே வைசுவதேவமென்பது பூருவபக்கம். வைசுவதேவத்தின் பொருட்டேசோறு சமைக்கப்பட்டதென்பதே சித்தாந்தம். "தமக்கென் றுலையேற்றார்" என்பது மது). "మహాయజ్ఞైశ్చ యజ్ఞైశ్చ బ్రాహ్మీయం క్రియతే తనుః" மஹாயாகங்களாலும், யாகங்களினாலும், இப்பிராமண சரீரம் செய்யப்படுகின்றது. என்ற மனுமொழியால் வைசுவதேவம் புருடார்த்தமென்றே தெரியவருகின்றது. இதுவே சித்தாந்தப் பிரமாணமாம். "సిద్ధస్య హవిష్యస్య జుహుయాత్" சித்தமாயுள்ள அன்னத்தின் பொருட்டு ஹோமஞ் செய்யவேண்டும் என்றவாசகம் பூருவபக்கத்தை வலுவு செய்கின்றதன்றோ? எனின். அதற்கு வேறுவகையாகச்சமாதானம் உண்டாகின்றது

“జుహుయాత్” என்றது உற்பத்தி விதிவசனம். “హుష్యస్య” என்றது விநியோகம்=செலுத்தும் விதிவசனமாம். “తానేతానహరహః కుర్వీత” என்றது அதிகாரவசனம். இதனால் பூருவபக்க யுக்தி ஆற்றல்சாலாது. அல்லதூஉம், அன்னத்தின் சமஸ்காரமே வைசுவதேவம் என்னுமிடத்தில் அந்நஞ் செய்யும்போதெல்லாம் வைசுவதேவஞ் செய்யவேண்டி வரும். அங்ஙனமாகா தன்றோ? ஏன் அந்தனைதரம் வைசுவதேவம் செய்யவேண்டும் என்றால். “ప్రతిప్రధానంగుణావృత్తిః” = முதலது உண்டாகுந்தோறுங் குணம் உண்டாகவேண்டும். என்ற நியாயத்தால் அந்நம் முதலென்றால் அது உண்டாகுந்தோறும் அதற்குக் குணமென்று சொல்லும் வைசுவதேவமும் நேரும். வைசுவதேவமே முதல்என்புழி அது வேண்டுவதில்லை இப்படிப்பட்ட அங்காங்கிபாவ அனுகூலத்தினால் வைசுவதேவம் புருடார்த்தம் என்பதே நியாயமாக விருக்கின்றது என்பது சித்தாந்தம்.

அதனானே கிருகியபரிசிட்டத்தில் கூறப்பட்டிருக்கின்றது. గృహ్యపరిశిష్టే॥ “ప్రోషితోప్యాత్మసంస్కారం కుర్యాదేవావిచారయన్” = வழிநடைப்பட்டவனு யிருப்பினும் ஆன்மசுத்தியாயுள்ள கருமத்தை விசாரஞ் செய்யாமலே ஒருதலையாகச் செய்யவேண்டும். எனவே வைசுவதேவஞ் செய்யவேண்டும். எ-று. காண்க.

**கோபிலர்.** సూత్రః॥ “యద్యేకస్మిన్ కాలే వ్రీహియవౌ పచ్యేయాతాం తతదన్యతరస్య హుత్వా కృతం మన్యేత యద్యేకస్మిన్ కాలే పునః పునరన్నం పచ్యేత సకృదేవ బలిం పతి తన్నస్యాన్నస్య దైవతం బలిం కుర్వీత” = ஒரேகாலத்தில் விரீஹியென்னு நெல்லினையும், யவமென்னு நெல்லினையும் கொண்டு வேறு வேறு பாகஞ்செய்தால், யாதொன்றினாலாயினும் வைசுவதேவ ஹோமஞ்செய்தாற் போதும். ஒரேகாலத்தில் அடிக்கடி பாகஞ்செய்தால் ஒருவிசை பலிசெய்தாற்போதும். ஒரேகாலத்தில் பலவகையாகப் பலவிடங்களிற் பாகஞ்செய்தால் இல்லத்துத் தலைவன் அடுக்களை யிடத்திருந்துபூதபலிகொடுத்தாற்போதும். எ-று. காண்க. எனவே, பலதிரவியங்களா லன்னம் சமைத்தாலும், அடிக்கடி யன்னஞ்செய்தாலும், அவிபக்தரான சகோதரர் பலர் வேறுவேறு சமைத்தாலும், இல்லத்தலைவனுடைய பாகத்தில் ஒருதிரவியத்தால் ஒருதடவை வைசுவதேவஞ் செய்யவேண்

டும். "ఏక" என்ற தேற்றத்தால் பலகால் செய்யலாகாதென்று பொருள்படுகின்றது.

வைசுவதேவம் முற்றிற்று.

---

## மாநுடவேள்வி.

அதிதிபூசை யென்னும் ஓர் வேறு பெயரையுடைய மானுடவேள்வி கூறப்படுகின்றது. ஆதித்தியம்=விருந்தோம்பலே மானுடவேள்வி யென்று காத்தியாயனராற் கூறப்பட்டது. కాత్యాయనః॥ "అధ్యాపనంబ్రహ్మయజ్ఞః పితృయజ్ఞస్తుతర్పణం। హోమోదైవోబలిర్భౌతో నృయజ్ఞోతిథిపూజనం" = இதனுரைமேலே கூறப்பட்டது.

சுருதி. శ్రుతిః॥ "యద్బ్రాహ్మణేభ్యోన్నం దదాతితన్మనుష్య యజ్ఞస్సంతిష్ఠతే" அந்தணர்க்கு அந்நதானஞ் செய்வதே மானுட வேள்வியாக விருக்கின்றது. எ-று. காண்க.

போதாயனர். బౌధాయనః॥ "అహరహర్బ్రాహ్మణేభ్యోన్నందద్యా న్మూలఫలశాకాని చైత్యథైనంమనుష్యయజ్ఞంసమాప్నోతి" = நாடோறும் வேதியர்க்கு அந்நதானம் செய்யவேண்டும். கிழங்கு, பழம், காய், கறி, இவற்றுள் ஏதேனும் கொடுக்கவேண்டும். அங்ஙனம் கொடுத்தவன் மானுடவேள்விப் பயனை அடைவன். எ-று. காண்க.

கார்ஷ்ணஜினி. కార్ష్ణాజినిః॥ "భిక్షాన్నంపుష్కలంవాపి హంతకారమథాపి వా। అసంభవేసదాదద్యా దుదపాత్రమథాపివా" = நிறைந்த பிச்சைச் சோற்றையாயினும் ஹந்தகாரத்தையாயினும், இரண்டு மில்லாவழி ஒரு சொம்பு சலமேயாயினும் எப்போதும் கொடுக்க வேண்டும். எ-று. காண்க.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ "హంతకారమథాగ్రంవాభిక్షాంవాశక్తితో ద్విజః। దద్యాదతిథయేనిత్యం బుధ్యేతపరమేశ్వరం" = நித்தமும் இருபிறப்பாளன். வந்த விருந்தினரை அதிதியை = பரமேச்சுரனுடைய வடிவமாகக்கொண்டு, அவர்களுக்குஹந்தகாரத்தையாயினும், அக்கிரத்தையாயினும், பிச்சையையாயினும் சத்தியுள்ளவனாயில் கொடுக்கவேண்டும். எறு. காண்க.

அந்தப் பிச்சை முதலியவற்றி னிலக்கணத்தினை மனுகூறினர். మనుః॥ "గ్రాసమాత్రంభవేద్భిక్షా అగ్రంగ్రాసచతుష్టయం। అగ్రంచతుర్గుణీకృత్య హంతకారోఽభిధీయతే" = பிச்சையென்பது விழுங்குமளவானசோறு, அது ஒருபிடிசோறு. அக்கிரம் என்பது நான்குபிடிசோறு. அந்த அச்கிரம் நான்குகூடியது ஒரு ஹந்தகாரமென்னப்படும். அது பதினறுபிடிசோறு. என்று விதிக்கப்படுகின்றது. எ-று. காண்க.

வந்த விருந்தினரை எப்போது பெறுவோமென்று எதிர்பார்த்து முன்றில் = மனைவாயிலில், சிறுபொழுது காத்திருக்க வேண்டும். என்று மார்க்கண்டேய புராணத்துட் கூறப்பட்டிருக்கின்றது. మార్కండేయపురాణే॥ "ఆచమ్యచతతఃకుర్యాత్ప్రాజ్ఞోద్వారావలోకనం। ముహూర్తస్యాష్టమంభాగమపేక్ష్యోహ్యతిథిర్భవేత్" = ஆசமனஞ்செய்து பின்பு கடைவாயிலிற்சென்று எதிர்பார்த்துநின்று, கால் நாழிகைவரையில் விருந்தினர் வருவாரோ? என்று காத்திருக்க வேண்டும். எ-று. காண்க.

விஷ்ணுபுராணம். విష్ణుపురాణే॥ "తతోగోదోహమాత్రంవై కాలంతిష్ఠేద్గృహాంగణే। అతిథిగ్రహణార్థాయ తదూర్ధ్వంవాయథేచ్ఛయా" = பின்னர், பசுவின்பால் கறக்கும்பொழுதளவாயினும், விருந்தினர்வரவைப் பெற்றுக்கொள்ளும்வரையில் மனைவாயிலின் முற்றத்தில் காத்திருக்கவேண்டும். அல்லது இச்சையுள்ளவரையிலாயினும் காக்கலாம். எ-று. காண்க.

மானுடவேள்வி முற்றிற்று.

---

இங்ஙனமாக. "సంధ్యాస్నానం" என்றமூலத்துள் நீராடல் முதல் விருந்துபசரித்தல் வரையிலுமுள்ள கருமங்கள் விரித்துரைக்கப்பட்டன.

ஈண்டுமூலத்துட் கூறப்பட்ட கருமங்களைக் கணக்கிட்டவழி ஏழாகத்தோற்றுகின்றது. ஆறுஎன வசனத்துட் கூறப்பட்டுள்ளது. இந்தக் கணக்கின் விரோதத்திற்குப்பரிகாரம் என்னெனில், "సమ్మార్గన్యాయః" = சம்மார்க்க நியாயத்தால் உத்தேசத்தைப் பொருந்திநிற்குங் கணக்குசொல்லப் புகுந்த இச்

சைக்கு விடயமாகாது. ஆதலின் அந்தவிரோதம் விளுவத்தக் கதல்லவாம். எந்தக்கருமம் உத்தேசத்தைப் பொருந்தியுள்ள தோ? அதனை நாடோறும் செய்யத்தக்கது என்று அக்கரும ங்கட்கு நித்தியத்தன்மை விதிக்கப்பட்டிருத்தலின்.

சம்மார்க்க நியாயமென்பது. பூர்வமீமாம்ஸைஜைமினிசூத்தி ரம். ௬ - வது. அத்தியாயத்துள் கூறப்பட்டிருக்கின்றது. இந்த அதிகரணத்திற்குவிடயவாக்கியம் வருமாறு. சுருதி. ஶ்ருதி:॥ ஜ்யோதிஷ்டோமே தஶாபவித்ரேண க்ரஹம் ஸம்மார்ஷ்டி" அக்கினிட்டோம யாகத்துள் தசாபவித்திரத்தால் கிரகத்தைத்தொடைக்கின்றான். எனவேபவி த்திரமுடியிட்ட தருப்பைகளால் வேள்விக் கருவியாய் "சோமவி ரதம்" முதலியவற்றினைச் சேகரித்து வைப்பதற்கு ஆதாரமா யுள்ள மரப்பாத்திரங்களைத் தொடைத்துச் சுத்தஞ்செய்கின் றான். எ-று. காண்க.

ஈண்டுவினு = சமுசயமாவது, இந்தச்சம்மார்க்கம், ஒருகிர கம்=ஒருபாத்திரத்திற்கா? எல்லாவற்றிற்குமா என்பது.—அன் றியும் இவ்விடத்தே உத்தேசியம் = வகுத்துக்கொண்ட, பொரு ளைப் பொருந்தி யிருக்கும் எண், சொல்லுதற்கு குறிக்கப்பட்ட தா? இல்லையா? என்ற ஆராய்ச்சியும் உண்டாகின்றது. (கிர ஹம் என்பது வகுத்துகொண்ட பொருண்மொழி.' ஒருமை யீற் றால் உணரப்படுகின்ற ஒன்றின்றன்மையென்கின்ற எண்ணிக்கை (விவக்ஷிதம்) சொல்லக்கருதியதா? அல்லவா? சொல்லக் கரு தியதாயின் ஒரே கிரகத்தைத் தொடைக்கவேண்டிவரும். கருதா தது ஆயின் எல்லாக்கிரகங்களுக்கும் அந்தச் சம்மார்க்கஞ்செய்ய வேண்டி வரும். என்ற ஆராய்ச்சியே சமுசயத்தின் காரணம். என்பது கருத்து).

சுருதி. "ஶ்ருதி:॥ பஶுநா யஜேத" = பசுவால் வேள்வி செய்ய வேண்டும். எ-று. இதனுள் "பஶுநா" = என்றமொழியில் ஒரு மையீற்றாலுணரப்படுகின்ற ஒன்றின்றன்மையென்று வகுத்துக் கொண்ட எண் சொல்லக்கருதியதென்று எவ்வாறு உடன்பட்டி ருக்கின்றதோ? அவ்வாறே "க்ரஹம் ஸம்மார்ஷ்டி" என்ற இடத்திலும், கிரகத்தின் ஒருமைத்தன்மை சொல்லக்கருதியதே யாகின்றது.

ஆதலின், ஒரேகிரகத்தையே தொடைத்தல்வேண்டும். என்பது பூருவபக்கம்.

பசுவுக்கு இந்த வாக்கியத்தினாலே வேள்விச்சம்பந்த முண்மை அறியப்படுதலினாலும், யாகமென்னு முதற்பொருளுக்குப் பசுவானது குணம் = அங்கமாயிருத்தலாலும், எத்தனை அங்கமுள்ளனவோ? அத்தனை முதற்பொருளைப் பெற்றுக்கொள்வது இல்லாமையாலும், எத்தனை பசுவால் யாகஞ் செய்ய வேண்டியது? என்ற வரம்பறுத்தலாய வினாவுண்டாயின் அதனை வரம்பறுக்கும் பசு என்னும் மொழியின் ஒருமையீற்றினால் உணரப்படுகின்ற ஒன்று என்னும் எண் அவ்விடத்துச்சம்பந்தப் படுகின்றது. ஆதலின், முதற்பொருளுக்கு அங்கமாக எடுத்துக்கொள்ளத்தக்க பசுவாசகத்தைப் பொருந்திய ஒன்றென்னும் எண் சொல்லக் கருதியதாவது தகுதியாகவே யிருக்கின்றது. அந்த எடுத்துக் காட்டினால் "𑌗𑍍𑌰𑌹𑌂𑌸𑌮𑍍𑌮𑌾𑌰𑍍𑌷𑍍𑌟𑌿" என்ற இடத்திலும் அங்ஙனம் கூறலாகாது. ஏனெனில்! கிரகங்களுக்கு மற்றொருவேதவுரையால் யாகசம்பந்த முண்மையறியப் படுதலினாலும், சம்மார்க்க வாக்கியத்துள் = எனவே "𑌗𑍍𑌰𑌹𑌂𑌸𑌮𑍍𑌮𑌾𑌰𑍍𑌷𑍍𑌟𑌿" என்றவுரையில் "𑌗𑍍𑌰𑌹𑌂" = என்னும் இரண்டாம் வேற்றுமை யுருபுடையவைதிகமொழியால் சம்மார்க்கமென்னுங் கருமத்தைக் குறித்துக் கிரகமென்னும் மரப்பாசனத்திற்கு (பாசனம் = பாத்திரம்) முதன்மைஉணரப்படுதலினாலும், ஒவ்வொருமுதற்பொருளுக்கும் அங்கமாகியசம்மார்க்கமென்னுங்கருமத்தை அடிக்கடிசெய்துவரவேண்டியிருத்தலாலும், எத்தனைக் கிரகங்களைச்சம்மார்க்கஞ் செய்யவேண்டுமென்னும் வினா தோன்றாமலே யிருத்தலாலும் வகுத்துக்கொள்ளப்பட்ட கிரகத்தைப்பொருந்திய வொருமை எண்சொல்லக் கருதியதல்ல. அதனால், கிரகங்க ளெல்லாவற்றினையும் சம்மார்ச்சனம் செய்யவேண்டுமென்பதே சித்தாந்தமாம், இதுவே சம்மார்க்க நியாயமாம். இந்த நியாயத்தினால் இவ்விடத்தும் வகுத்தெடுத்துக்கொண்ட சந்திமுதலிய கருமங்களைப் பொருந்திய ஆறு என்னும் எண்சொல்லக்கருதியதல்லவாம்.

பின்னர் கூறப்படுகின்றது. இப்பாராசரமிருதியில் வேறு விதியுரையால் சந்திமுதலிய கருமத்திற்குப்பெரும்பாலும் வழக்க

மின்மையால், இவ்வுரையானே நித்தியத் தன்மையுண்டாகிய அவற்றினுடைய தோற்றத்திற் கொள்ளத்தக்கதனைப்பொருந் துகையினல் "பசுவின் ஒருமைத்தன்மை" போலவே எண் வகுத்துக் கோடல் சிறந்த வாறுகின்றதென்னின்? முன்னர் யாம் கூறியுள்ளவாறு, "சந்தியாஸ்நாநம்" = சந்தியோடு கூடிய நீராடல் என்று சந்திசெய்தலின் அங்கமாகிய ஸ்நாநத்தோடு கூடிய அங்கியாகிய சந்தியொன்றெனக் கணக்கிடப்படுதலினல் இவ்விடத்து, ஆறென்ற எண் முரணுவதில்லை யென்றுணர்க. சந்தி முதலியவற்றின் நித்தத் தன்மையும் வேள்வித் தீமுதலிய கருமங்களைப் போலவே தேகமுள்ள வரையில் செய்யத் தக்கதாகவே புணரப்படுகின்றது. பிழைத்திருக்கும் வரையில் அதிகாரியாயிருத்தல் வேண்டுவதும். "దినే దినే" என்ற அடுக்கு மொழியின் "வீப்ஸா" கலப்பினல் பொருள் படுகின்றது. எவ்வாறு "వసంతే వసంతే జ్యోతిషా యజేత" = என்புழி, "వసంతే వసంతే" என்ற அடுக்குமொழி கலப்பினல் ஒவ்வொரு இளவேனிற் பருவத்திலும் வேள்வி செய்யவேண்டுவ தென்று நித்தியத்தன்மை வெளிப்படுகின்றதோ? அவ்வாறே மூலத்துள்ளும் "ప్రత్యహం వైశ్వదేవం చ షట్కర్మాణి దినే దినే" எனக் கூறப்பட்டுள்ளது. அடுக்கு மொழி=ஆமிரேடிதம் = துவிர்வசனம் என்பன வொரு பொருட்கிளவி. (௩௬௭)

## அதிதி இலக்கணம்.

మూ॥ ఇష్టో వా యది వా ద్వేష్యో మూర్ఖః పండిత ఏవ వా
సంప్రాప్తో వైశ్వదేవాంతే సోఽతిథిస్స్వర్గసంక్రమః. ॥౪౦౫॥

என்பது. அதிதி = விருந்து எப்படிப்பட்ட இலக்கணமுடையவன் என்றுவினைய வழிக் கூறப்படுகின்றது.

(இ-ள்). நட்பினனேயாக, பகைவனேயாக, கயவனேயாக, புலவனேயாக வைசுவதேவ கருமமுடிவில் வருபவன்யாரோ? அவனே விருந்தினனும். அவனே சுவர்க்கம் புகுவிப்பவனும். எ-று.

"ఇష్టః" = நண்பினன் முதலியோரை யுண்பிக்க வேண்டுமென யாஞ்ஞவற்கியராற் கூறப்பட்டது. యాజ్ఞవల్క్యః॥ "భోజయేదాగతాన్కాలే సఖిసంబంధిబాంధవాన్" = காலத்திற்கு வந்த நட்பி

னர், சம்பந்த முடையவர், சுற்றத்தார், இவர்களை யுண்பிக்க வேண்டும். எ - று. காண்க. துவேஷத்திற்கு விஷயமானவன் "ద్వేష్యః"=பகைக்கு முன்னிலையானவன். அல்லது, பகைக்கின்றவன். இவனை யுண்பித்தல் மனுவால் விலக்கப்பட்டது. మనుః॥ "కామమభ్యర్చయేన్మిత్రం నాభిరూపమపిత్వరిం। ద్విషతా హి హవిర్భుక్తం భవతి ప్రేత్య నిష్ఫలం" = நண்பனை நன்றாக உபசரிக்கவேண்டும், பகைவன் தக்கோனா யிருப்பினும் பூசிக்கலாகாது. பகைவனுண்ட வுண் வீணாகின்றது. எ—று. காண்க. இவ்விரண்டு மிருதிமொழிகளால் அன்னதான விடயத்தில் நட்பியாவனோ? பகையாவனோ? தெரிந்து கொள்ளவேண்டுவது ஒரு தலையாகின்றது. அவ்வாறே விருந்தினனாகவந்தவனும் நண்பனோ? பகைவனோ? என்று விசாரித்தல் வேண்டுமோ? என்னும் வினாத்தோன்றியவழி, விருந்தினர் விடயத்தில் அவ்விசாரம் வேண்டாவென் றுணர்த்தவேண்டி நண்பினனாகவாயினும், பகைவனாகவாயினு மெனக் கூறப்பட்டது.

"మూర్ఖః" = கயவன். இவனுக்கு உண்பித்தல் கூடாதென வேறுமிருதியில் விலக்கப்பட் டுள்ளது. స్మృత్యంతరే॥ "నష్టశౌచే వ్రతభ్రష్టే విప్రే వేదవివర్జితే। దీయమానం రుదత్యన్నం కిం మయా దుష్కృతం కృతం" = சுத்தவொழுக்கமில்லாதவன், நோன்பு கெட்டவன், வேத மோதலையொழித்தவன், இப்படிப்பட்ட வேதியனுக்குக் கொடுக்கும் அன்னம், நான் என்னபாவஞ் செய்தேன் என்று அழுதலைச் செய்கின்றது. "పండితః" = இது நல்லது இது கெட்டது என்றுபகுத்தறியவல்லஅறிவு "పండా" = "பண்ட" என்னப்படும். அதனையுடைவன் பண்டிதன் = பகுத்தறியும் மறிவுடைவன். எனவே புலவன் என்பது கருத்து. புலமையை யுடைய அறிஞனையே உண்பிக்க வேண்டுமென மனுவினாற் கூறப்பட்டது. మనుః॥ "శ్రోత్రియాయైవ దేయాని హవ్యకవ్యాని దాతృభిః। అర్హత్తమాయ విప్రాయ తస్మై దత్తం మహాఫలం" = வேதமோதி மிகவுந் தக்கோனாயுள்ள வேதியனுக்கு அவ்விய கவ்வியங்களைக் கொடுக்கவேண்டும். அவனுக்குக்கொடுக்கப்பட்டதனால் பெரும்பய னுண்டாம். எ - று. இவ்விரண்டினையால் தென்புலத்தாரைப்பற்றிய சிராத்தமுதலிய கருமங்களில் புலவன்யாரோ? கயவன் யாரோ? என விசாரிக்குமிடத்து வைசுவதேவத்தின் முடிவில்வந்த அதிதியையும் விசாரிக்கவேண்டு

மே என்னும் வினுவந்தவழி அங்ஙனமாகாது என விலக்குதற் பொருட்டு விருந்தாகவந்தவன் கயவனுயினும் புலவனுயினு மெனக் கூறப்பட்டது.

"వైశ్వదేవాంతే" = வைசுவதேவத்தின் முடிவில்எனவே தேவயாகம், பூதயாகம் முடிந்தபின்பு கால்நாழிப்பொழுதில் என்று பொருளுரைக்க வேண்டும். அதற்குப் பிரமாணமாக "ముహూర్తస్యాష్టమంభాగం" என்ற மார்க்கண்டேய புராண வுரைமுன்னரே எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. அதனுனே இக்காலத்தில் வருவதே அதிதிக்குஇலக்கணம் வேறல்ல என்றுணரத்தக்கது.

"స్వర్గసంక్రమః" = ஒருபொருள் எந்தக்கருவியால் அடையப்படுகின்றதோ? அது "சங்கிரமம்" என்னப்படும். சுவர்க்கத்தினுடைய சங்கிரமம். எனவே, சுவர்க்கமடைவதற்கு ஏது என்பது கருத்து.

அங்ஙனம் அசுவமேத பர்வத்துள்ளும் கூறப்பட்டது. అశ్వమేధికేపర్వణి॥ "క్షుత్పిపాసాశ్రమార్తాయ దేశకాలాగతాయచ। సత్కృత్యాన్నం ప్రదాతవ్యం యజ్ఞస్యఫలమిచ్ఛతా" = வேள்விப் பயன் என்பது சுவர்க்கம். அதனைத் தனக்கு வேண்டுமென்று விரும்புவோன் செய்யத்தக்கது என்னையெனில்? பசியோடும், தாகத்தினேடும் இளைப்போடும், துன்பமுற்றவனுய் வைசுவதேவத்தின்முடிவில் தன்மனைக்குவந்த உண்டிவிருப்பமுடையவனை உபசரித்து அவனுக்கு அன்னமிடவேண்டும். எ-று. காண்க. (௪0௭)

మూ॥ దూరాధ్వోపగతంశ్రాంతం వైశ్వదేవఉపస్థితం
అతిథింతంవిజానీయా న్నాతిథిఃపూర్వమాగతః. ॥౪౦౨॥

என்பது அவ்விருந்தினனை வகுத்துணர்த்துகின்றது.

(இ-ள்.) நெடுந்தூரம் நடைந்திளைத்து வந்து வைசுவதேவகாலத்திற்றன்னையடைந்தவனே விருந்தினனுக உணரத்தக்கது; முன்வந்தவன் அதிதியல்லன். எ-று.

"దూరాధ్వోపగతం" = தூரமான வழி நடந்துவந்தவன். என்பது. அயலூரிலிருந்து வந்தவன் என்றகருத்து "శ్రాంతం" = துன்பமுற்றவன் என்பது பசிதாகங்களால் வருத்த முற்றவன் என்றகருத்து. இங்ஙனமாதலின் வியாசரும் கூறினர். వ్యాసః॥

"అతిదూరాగతశ్శ్రాంతః క్షుత్తృష్ణాశ్రమకర్శితః। యత్నపూజ్యశ్చాతిథిస్సమ్యగయూపక్రతురేవసః" = நெடுந்தூரத்திருந்து வந்தவன், விடாயடைந்தவன், பசிதாகத் துன்பத்தா லிளைத்தவன், யாவனே? அந்த அதிதி நன்ருக வுபசரிக்கப்படத் தக்கவன். அந்தவிருந்துபசரிப்பு "யூபத்தம்பம்" இல்லாத வேள்வியேயாம். எ-று காண்க.

"నాఽతిథిఃపూర్వమాగతః" = முன்வந்தவன் விருந்தினனல்லன். எனவே என்று வந்தானே? அன்று அவன் விருந்தினனவதன்றி மறுநாள் விருந்தினன் என்னப்படான் என்பதுகருத்து. அங்ஙனம்மனுகூறினர். మనుః॥ "ఏకరాత్రంహినివసన్నతిథిర్బ్రాహ్మణస్స్మృతః" ஒரு இரவு யிருந்த வேதியனல்லனே? அதிதியென்று கூறப்படுகின்ருன். எ-று. காண்க,

"వైశ్వదేవఉపస్థితం" = வைசுவதேவ காலத்திற்கு உதவினவன். எனவே அன்றுவந்தவன் என்றகருத்து. சாயுங்காலத்திலானலோ? வைசுவ்தேவத்துள்ளும் ஒவ்வொரு காலத்தில் வந்தவனும் விருந்தினனேயாம். அங்ஙனம் மனுகூறினர். మనుః। "అప్రణోద్యోఽతిథిస్సాయంసూర్యోఢోగృహమేధినా। కాలేప్రాప్తస్త్వకాలేవా నాస్యానశ్నన్గృహేవసేత్" = மாலைப்பொழுதில் சூரியனு லடைவிக்கப்பட்ட விருந்தினன் இல்லறத்தானல் தள்ளப்படாதவனும். காலத்திலாயினும் அகாலத்திலாயினும் வந்தவன் இவனுண்டிபை உண்ணுமலே இவன் மனையிலிருக்கலாகாது. எறு. காண்க. சூரியனு லடைவிக்கப்பட்டவன் எனவே வேறு இடம் போவதற்கு அனுகூலமில்லாது அஸ்தமான சமயத்தில் மனைக்குவந்தவன் என்பது கருத்து.

யாஞ்ஞவற்கியரும். యాజ్ఞవల్క్యోఽపి॥ "అప్రణోద్యోఽతిథిస్సాయమపి వాగ్భూతృణోదకైః" = மாலையில் விருந்தாகவந்தவனைத் தள்ளிவிடலாகாது. சொல்லாலாயினும், நிலத்தாலாயினும் எனவேபடுக்க இடமுதலிய உதவுதலினலாயினும், திரணம் = உண்ணத்தக்கவொரு சிறுபொருளாலாயினும், அல்லது பாய்முதலியவற்ருலாயினும், நீரினலாயினும் உபசரிக்கவேண்டும். எறு. காண்க.

பிரசேதரும். ప్రచేతా అపి॥ "యస్సాయం వైశ్వదేవాంతే సాయంవా గృహమాగతః। దేవవత్పూజనీయోఽసౌ సూర్యోఢస్సోఽతిథిస్స్మృతః" = யார் மாலை வைசு

வதேவத்தின் முடிவிலாயினும், மாலைப்பொழுதிலாயினும், மனைக்குவருவானே? அவ்விருந்தினன், சூரியோடன்=சூரியனாலடைவிக்கப்பட்டவன் என்னப்படுகின்றான். அவனைக்கடவுளைப் பூசித்தாற்போலும் பூசிக்கவேண்டும். எறு. காண்க. (௪௧௦)

మూ॥ నైకగ్రామీణమతిథిం నగృహ్ణీతకదాచన
అనిత్యమాగతోయస్మాత్తస్మాదతిథిరుచ్యతే. ॥௪-௫॥

என்பது, நெடுந்தூர நடந்துவந்தவன் என்றதன் உட்பிரிவை யுணர்த்துகின்றது.

(இ-ள்). தானுள்ளதோரூரிலிருப்பவன் விருந்தினனாக வந்தால் அவனைக் கொள்ளலாகாது. நித்தம் வராதவன் யார் அவனே விருந்தினனும். எறு.

“అతిథిః” = யார்க்குத் திதியில்லையோ? அவனேஅதிதி. அங்ஙனம்இயமன் கூறினர். యమః॥ “తిథిపర్వోత్సవాస్సర్వే త్యక్తాయేనమహాత్మనా। సోతిథిస్సర్వభూతానాం శేషానభ్యాగతాన్విదుః” = எந்தப்பெரியோனால் திதிகள், பருவங்கள், திருவிழாக்கள் விடப்பட்டுள்ளனவோ? அவன் எவ்வுயிர்களுக்கும் அதிதியாக விருக்கிறான். ஏனையர் அப்பியாகதர் என்றுணர்க. எனவே மனுவாதி, யுகாதி, அமாவாசை, பூரணை, சங்கிராந்தி முதலிய விசேட திதிகளில் பொருளிச்சையால் யார்வருகின்றார்களோ? அவர்களே அப்பியாகதர் என்னப்படுவர். அப்படிப்பட்ட விசேடதிதிகளில் பொருளிச்சையொழித்து, எப்போதாயினும் ஒருகால் பசிதாகங்களைப் பொறுக்கமாட்டாது வந்தவனே விருந்தினன் என்னப்படும். இங்ஙனமாக, ஒரேயூரிலுள்ளவனு யிருந்தால் எல்லா விசேட தினங்களிலும் வந்து போகின்றான் ஆதலின் அவன் அதிதியல்லன். யார் அயலூரி லிருந்து எங்கோ செல்பவனாய் இடங்குறியாமல்பசித்து எப்போதும் வராதவனாக இருந்து வருகின்றானே? அவனே விருந்தினன். ஏனையன் அல்லன்.

அங்ஙனம் விஷ்ணு புராணத்துட் கூறப்பட்டது. విష్ణుపురాణే॥ “అజ్ఞాతకులనామాన మన్యతస్సముపస్థితం। పూజయేదతిథింసమ్యగ్ నైకగ్రామనివాసినం। అకించనమసంబంధ మన్నదేశాదుపాగతం”=குடி, பெயருணரப்படாதவனாய், வேற்றிடத்திருந்து வந்தவனாய், ஒரே யூரிலில்லாதவனாய்,

அயலூரானாய், தனக்குச் சம்பந்தமில்லாதவனாய், உண்டிக்கு வழியற்றவனாயுள்ள இவ்விருந்தனனை நன்றாகப் பூசிக்கவும். எ-று. காண்க.

**மார்க்கண்டேயர்.** మార్కణ్డేయః॥ "అమిత్రమతిథింకుర్యా న్నైకగ్రామనివాసినం। అజ్ఞాతకులనామానం తత్కాలసముపస్థితం। బుభుక్షుమాగతంశ్రాంతం యాచమానమకించనం। బ్రాహ్మణంప్రాహురతిథిం సపూజ్యశ్శక్తితోద్విజైః" = நட்பொருமை யில்லாதவனும், தன்னூரி லில்லாதவனும், குடி-பெயர் அறியாதவனும் அந்தப்பொழுதினுக்கு உதவினவனும், பசியாவிளைப்பினையடைந்து சிறிதும் வேறுமார்க்கமில்லாது சோறிரப்பவனும் யாரோ? அவனை விருந்தினனாகிய வேதியனாகக் கூறுவர். அவனை இருபிறப்பாளர் சத்தியுள்ளமட்டில் உபசரிக்க வேண்டும். எ-று. காண்க.

**மனு.** మనుః॥ "నైకగ్రామీణమతిథిం విప్రంసాంగతికంతథా। ఉపస్థితంగృహేవిద్యా ద్భార్యాయత్రాగ్నయోపివా" = ஒரூரி லிருப்பவனும் பழக்கச் சம்பந்தமுடையவனும், அவ்வூரில்தானே மனைவி, மனை, வேள்வித்தீயுடையவனும் ஆகிய வேதியன் அந்நத்தின்பொருட்டு வந்தால் அவன் விருந்தினன் அல்லன். (எனவே தன்னூரி லிருக்கிறவன் அதிதிதருமத்தோடு வந்தாலும் அதிதியல்லன் எப்போதாயினும் தன்னோடு சேர்ந்து பார்த்திருந்தாலும் அதிதியல்லன், எங்கேனும் ஓரிடத்தில் அதிதி தருமத்தோடு வந்தவனும் அதிதியல்லன். பிறவெனில்? தன்னூடாயினும், வேறுநாடாயினும், மனைவி, வேள்வித் தீயில்லாத விடங்களில் அதிதிதருமத்தோடு வந்தவன் யாரோ? அவனே அதிதியாம்). எ-று. காண்க. (௪௨௬)

## விருந்தினர்க்குச்செய்யுமுபசாரம்.

మూ॥ అతిథింతత్రసంప్రాప్తం పూజయేత్స్వాగతాదినా
అర్ఘ్యాసనప్రదానేన పాదప్రక్షాళనేనచ. ॥౪౩॥
శ్రద్ధయాచాన్నదానేన ప్రియప్రశ్నోత్తరేణచ
గచ్ఛంతంచానుయానేనప్రీతిముత్పాదయేద్గృహీ. ॥౪౪॥

என்பன விருந்தினர் இலக்கணத்தினைக்கூறி அவர்கள் வந்தபொழுது செய்யத்தக்கனவற்றைக் கூறுகின்றன.

(இ-ள்). வைசுவதேவ முற்றியவுடனே வந்த அதிதியை நல்வரவு வினவி யழைத்துவந்து அருக்கியம், ஆசனம் கொடுத்து, கால் அலம்பி, சிரத்தையோடு உண்டியா லுபசரித்து அன்போடுங் கூடியமுகமன் = உபாசாரமொழிகளைக்கூறி அவன் போகையில் சிறிதுதூரம் பின்சென்று இல்லறத்தான் விருந்தினனுக்கு அன்பை யுண்டாக்க வேண்டும் எ-று. காண்க. இது அந்தணர் விடயம். என்க.

"యద్బ్రాహ్మణేభ్యోన్నం దదాతి" என்ற சுருதியாலும், "అహరహ ర్బ్రాహ్మణేభ్యోన్నం దద్యాత్" என்ற மிருதியாலும் எடுத்துக்கூறப்படுதலின் அரசன் முதலியோர் விடயத்திலாயினே? அந்தணன் மனையில் விருந்து உபசரித்தலைப் பெறுதற்குத் தக்கவரல்லர். உணவு மாத்திரம் பெறலாம் என்று மனுகூறினர். మనుః॥ "బ్రాహ్మణస్యత్వనతిథి ర్గృహే రాజన్య ఉచ్యతే। వైశ్యశూద్రౌ సఖాచైవ జ్ఞాతయోగురురేవచ। యదిత్వతిథిధర్మేణ క్షత్రియోగృహమావ్రజేత్। భుక్తవత్సుచవిప్రేషు కామంతమపి భోజయేత్। వైశ్యశూద్రావపి ప్రాప్తౌ కుటుంబేఽతిథిధర్మిణౌ। భోజయేత్సహభృత్యైస్తా వానృశంస్యం ప్రకల్పయేత్। ఇతరానపిసఖ్యాదీ న్సంప్రీత్యాగృహమాగతాన్। సత్కృత్యాన్నంయథాశక్తి భోజయేత్సహభార్యయా"=அந்தணன்மனைக்கு வந்த அரசன் அதிதியல்லன், வைசியன், சூத்திரன், நண்பினன், ஞாதி, ஆசிரியன், சுற்றத்தினர் இவர்களுள் யார்வரினும் அதிதியல்லர். அரசன் அதிதி தருமத்தோடு வேதியன் மனைக்குவந்தால் வேதியர் உண்டபின்பு அந்த க்ஷத்திரியனை நன்றாக உணவா லுபசரிக்கவேண்டும். அதிதிதருமமுண்டாய் வைசிய சூத்திரர் வந்தார்களாயின், தன் பரிசனங்களோடு அவர்களை யுண்பிக்கவேண்டும்.. ஏனைய நட்பினர் முதலியோர் நண்பினால் இல்லத்திற்கு வந்தால் மனைவியோடும் அவர்களைச் சத்தியுள்ளவரையில் உபசரித்துஉண்பிக்கவேண்டும். எ-று. காண்க.

ஆசன முதலியன வுதவி யுபசரிப்பதிலுள்ள சிலவிசேடங்களை மனுகூறினர். మనుః॥ "ఆసనావసథౌశయ్యా మనువ్రజ్యాముపాసనం। ఉత్తమేషూత్తమంకుర్యా ద్ధీనేహీనంసమేసమం" = ஆசனம், உறையுள், படுக்கை, பின்போதல், உபசரித்தல், இவைகளை யுத்தமர் விடயத்தில் உத்தமமாயும், தாழ்ந்தவர்கட்குத் தாழ்வாயும், ஒத்தவர்க்கு ஒத்தபடியாயும் செய்யவேண்டும். எறு. காண்க. (சஙஉ) (சசஉ)

## விருந்துபசரியாவழி வருங்குற்றம்.

మూ॥ అతిథిర్యస్యభగ్నాశో గృహాత్ప్రతినివర్తతే
పితరస్తస్యనాశ్నంతి దశవర్షాణిపంచచ. ॥౪౫॥

కాష్ఠభారసహస్రేణ ఘృతకుంభశతేనచ
అతిథిర్యస్యభగ్నాశ స్తస్యహోమోనిరర్థకః ॥౪౬॥

என்பன. அதிதியை யுபசரியாவிடின் வருங்குற்றத்தைக் கூறுகின்றன.

(இ-ள்). விருந்ினன் யார் மனையிலிருந்து ஆசைகெட்டவனாய்ப் பின்னுக்குத் திரும்புகின்றானோ? அந்த மனையிலிருக்கிற இல்லறத்தானுடைய பிதிரர்கள், அவன் அன்னத்தைப் பத்து வருடம், அல்லது அதன்மேலும் ஐந்துவருடம் வரையில் புசிப்பதில்லை. (எனவே அவன்செய்கிற தென்புலத்தார் கடன் பதினைந்துவருடம் வீணாய்விடும்). மேலும் யாரிடத்துவந்த அதிதி ஆசைகெட்டவனாய்ப் போகின்றானோ? அவன் ஆயிரம் சுமை கட்டைகளையும், நூறுகுடம் நெய்யையும் கொண்டு செய்த ஹோமமும் வீணாய்விடும். எ-று. காண்க.

நான் இவன் மனையில் புசிப்பேன் என்னும் விருப்பத்தோடு வந்த அதிதி உண்டியைப்பெறாமல் அந்தமனையிலிருந்து பின்னுக்குத்திரும்பிச் செல்வானாயின் அம்மனைத்தலைவனாற் செய்யப்படுகின்ற பிதிர்கருமங்கட்குப் பயனில்லையாய் முடியும். அவ்வாறே தேவர்களைக் குறித்துச் செய்யப்படுகின்ற ஹோமமும் தகுதியான திரவியங்களோடு சாங்கமாகமுறைப்படி செய்து முற்றியதா மாயினும் வீணாய்விடும். அங்ஙனம் மனுகூறினர். మనుః॥ "శిలోంఛాచరతోనిత్యం పంచాగ్నీనపిజుహ్వతః। సర్వంసుకృతమాదత్తే బ్రాహ్మణోనర్చితోవసన్" = சில விருத்தி, உஞ்சவிருத்திகளைச் செய்பவனையும், நாடோறும் ஐவகைத்தீயினையும் வேட்டல்செய்பவனையும் உள்ள தலைவனுடைய புண்ணியங்களெல்லாவற்றையும், அதிதியாக வந்திருந்து உபசரிக்கப்படாத வேதியன்கொண்டுபோகின்றான். எ-று. காண்க. (கடோபநிஷத்து. ௩-ம். வல்லி. "పంచాగ్నయః" என்ற மொழிக்கு சங்கரபாஷியத்தின் உரையாகிய ஆநந்கிரீயத்துள் கூறப்பட்டுள்ளதாவது, காருகபத்தியம், தக்ஷிணைக்

கினியம், ஆஹவநீயம், சப்பியம், அவசத்தியம், என்ற பெயர்களை யுடைய ஐந்துதீ, யாருக்குள்ளதோ அவர்கள் பஞ்சாக்கினியர் என்னப்படுவர். அன்றியும், "ద్యౌః" = ஆகாயம். "పర్జన్యః" = மழை பெய்விக்கும் தெய்வம், "పృథివీ" = மண், "పురుషః" = ஆண்மகன், "యోషిత్" = மாது, இவ்வைந்தினிடத்து மேற்கூறிய ஐந்துதீயின் பாவனையோடு தியானஉபாசனைசெய்கின்றவேள்வித் தீத்தொழில்தலைவர்களும் பஞ்சாக்கினியரென்று கூறப்படுகின்றனர். என்றவாறு. அல்லதூஉம். சாந்தோக்கியஉபநிடதம். ரு-வது. பிரபாடகத்துள், பஞ்சாக்கினி உபாசனை விரித்துக் கூறப்பட்டுள்ளது. அதுவுமன்றி, மனு ந-வது, அத்தியாயத்து, குல்லூகபட்டீயவுரையில் மேற்கூறிப்போந்த பஞ்சாக்கினிகளையே கூறி, குளிர் போக்கடித்துக் கொள்வதுமுதலிய பயன்பொருட்டு வகுத்துக் கொண்டிருக்கும் தீக்கு; சப்பிய மென்று பெயர் என்று கூறப்பட்டுள்ளது. இம்மனு மிருதிவாக்கியத்தின் பொருள் இங்ஙனங் கொள்ளவறியாத சிலர். அதன் உரைகளை நோக்காது, "పంచాగ్నిష్వపిజుహ్వతః" = என்றவாக்கியத்திற்கு, "பஞ்சாக்கினிமத்தியில் தவம் பண்ணினும்" என்றுபொருள் கூறுகின்றனர். அது வேறுவிடயம். இவ்விடத்திற் பொருந்தாது. மந்திரசாத்திரத்துள் அடயோகத்தினுள்ளும் புராணங்களினுள்ளும் காண்க. யோக பாதஞ்சல சூத்திரத்து வியாச பாடியத்து வாஜஸ்பதிவியாக்கியானத்துள் அதனை விரித்துக் கூறுதலுங்காண்க.

அசுவமேதத் துள்ளும். ఆశ్వమేధికేపి॥ "సాంగోపాంగాం స్త్రథావేదాం స్పఠతీహదినేదినే। నచాతిథింపూజయతి వృథాసపఠతిద్విజః। పాకయజ్ఞైర్మహాయజ్ఞైస్సోమసంస్థాభిరేవచ। యేయజంతినచార్చంతి గృహేష్వతిథిమాగతం। తేషాంయశోభికామానాం దత్తమిష్టంచయద్భవేత్। వృథాభవతితత్సర్వమాశయాహతయాహతం" = சாங்கமாகவேதங்களை யோதினும் அதிதிபூசை செய்யாவிடின் அவ்வோதல்வீணும். வேள்விகள் செய்தாலும் அதிதியைப்பூசியாவிடின். செய்தவேள்விவீண். என்றதுகருத்து.

இவ்விடத்து, புண்ணியம் நாசமாகின்றது என்றபொருளினையுடைய வியர்த்தமென்னு மொழி பாவம் வருகின்றதென்னும் பொருளையும் இலக்கணையாற்றருகின்றது. அங்ஙனம் விஷ்ணு கூறினர், విష్ణుః॥ "అతిథిర్యస్యభగ్నాశో గృహస్థస్యతుగచ్ఛతి। తస్మాత్సుకృతమాదా

య దుష్కృతంతుప్రయచ్ఛతి" = யார் வீட்டிலிருந்து அதிதி ஆசை விட்டவனுய்ப் பின்னுக்குத் திரும்புகின்றுனே? அந்த அதிதி அம்மனைத் தலைவனுகிய இல்லறத்தானது புண்ணியங்களைப் பறித்துக்கொண்டு தன் பாவத்தை யவனுக்குக் கொடுத்து விட்டுப் போகின்றுன். எ-று. காண்க.

அசுவமேதபர்வம். అశ్వమెధపర్వణి॥ "వైశ్వదేవాంతికేప్రాప్త మతిథిం యోనపూజయేత్। సచండాలత్వమాప్నోతి సద్యఏవనసంశయః। నిర్వాసయతియోవిప్రం దేశకాలాగతంగృహాత్। పతితస్తత్క్షణాదేవ జాయతేనాత్రసంశయః" = வைசுவதேவம்முடிவாகும் சமயத்தில் வந்த அதிதியை யார் பூசிப்பதில்லையோ? அவன் அப்பொழுதே சண்டாளனுய் விடுகின்றுன். இதிலையமில்லை. தேசகாலத்திற்குச்சரியாக உண்டி வேட்டுவந்த வேதியனை மனையிலிருந்து புறம்பே யார் துரத்திவிடுகின்றுனே? அப்பொழுதே அவன் பதிதனுகின்றுன் சந்தேகமில்லை. எ-று. காண்க. (௪௬௭)

## விருந்தோம்பலின் சிறப்பு.

మూ॥ సుక్షేత్రేవాపయేద్బీజం సుపాత్రేనిక్షిపేద్ధనం
సుక్షేత్రేచసుపాత్రేచ హ్యుప్తందత్తంనవినశ్యతి. ॥௪௨௫॥

என்பது. விருந்தோம்பலின் சிறப்பினைத்தொகுத்துக் கூறுகின்றது.

(இ-ள்) நல்ல நிலத்து விதையை விதைக்கவேண்டும். நல்லவனுக்குப் பொருளைக் கொடுக்கவேண்டும். அங்ஙனம் வித்தியதும் கொடுத்ததும் கெடுவதில்லை. எ-று. காண்க.

இங்ஙனம், நல்லநிலத்து விதைத்தவித்து, கெடாது பெரும் பயனைத்தருவதுபோல நல்லோனுகிய விருந்தினனுக்குக்கொடுக்கப்பட்ட அந்நம், நீர்முதலிய தானம் நல்லபயனைத் தரும் என்பது கருத்து. அங்ஙனம் மனுவுங் கூறினர். మనుః॥ "నైవస్వయంతదశ్నీయా దతిథింయన్నపూజయేత్। ధన్యంయశస్యమాయుష్యంస్వర్గ్యంచాతిథిపూజనం" தானொருவனுகவே யிருந்துண்ணலாகாது. வந்த விருந்தினனை பூசிக்கவேண்டும். விருந்தோம்புதல், பிறந்தபயன், புகழ், ஆயுள், சுவர்க்கம் இவைகளைத் தருகின்றது. எ-று. காண்க. ஓம்புதல் = உபசரித்தல். "மண்ணின்மேற்பிறந்தார் பெறும்பயன் மதிசூடும்,

அண்ணலாரடியார் தமக்கமுதுசெய்வித்தல்" என்ற ஆளுடைய பிள்ளையார் புராணமுமது. "செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா, னல்விருந்து வானத்தவர்க்கு." என்பதுமது.

அசுவமேதம். ఆశ్వమెధికె॥ "పాదాభ్యంగాంబుదానైస్తు యోఽతిథింపూజయెన్నరః। పూజితస్తేన రాజెంద్ర భవామీహనసంశయః" = யாவன் விருந்தினரைக் கால்வருடி யெண்ணெய்பூசி நீர்சொரிந்து, சோறுநீரைக் கொடுத்தலினால் உபசரிக்கின்றானோ? அவனால் நானே பூசிக்கப் பட்டவனாவேன் இதில் ஐயமில்லை எனப்பகவர்கூறினர். எ-று. காண்க.

சாதாதபர். శాతాతపః॥ "స్వాధ్యాయెనాగ్నిహోత్రేణ యజ్ఞేనతపసాతథా। నచాప్నోతిగృహీలోకా న్యథాత్వతిథిపూజనాత్" = இல்லறத்தான் விருந்தோம்புதலினால் எவ்வாறு புண்ணிய வுலகத்தினைப்பெறுவானோ? அவ்வாறு, அத்தியயனத்தினாலாயினும், வேள்வியாலாயினும், அக்கினி ஹோமத்தினாலாயினும், தவத்தாலாயினும் அடைவதில்லை. எ-று. காண்க. (கூஎ௬)

మూ॥ నపృచ్ఛేద్గోత్రచరణె నస్వాధ్యాయంశ్రుతంతథా
హృదయెకల్పయెద్దేవం సర్వదెవమయోహిసః॥ ॥౪౮౪॥

என்பது, விருந்தோம்புந் தலைவ னொழுக்கத்தைக் கூறுகின்றது.

(இ-ள்.) வந்தவிருந்தினனுடைய கோத்திரத்தையும், ஒழுக்கத்தையும், வேதசாகையையும், கற்ற நூலையும், ஊரையும், பெயர் முதலியவற்றினையும் வினவலாகாது - அவனையே தெய்வமென்றுகொள்ளவேண்டும். ஏனெனில்? எந்தக்காரணத்தினால் அந்தவிருந்தினன் எல்லாத்தேவர் வடிவாயு மிருக்கின்றானோ? எனவே தேவரனைவரும் இல்லறத்தானுக் கருள்செய்யும்படி விருந்து வடிவமாய் வருகின்றார்களாதலால் நீர் யாரென அவரைவினவலாகாது. எ-று, காண்க.

சிராத்தமாகிய தென்புலத்தார் கருமத்தன்றோ? முதற்கண்ணே வேதியனை ஆராய்ந்து கொள்ளவேண்டுமென்று மனு கூறினர். మనుః॥ "దూరాదెవపరీక్షేత బ్రాహ్మణావెదపారగం। తీర్థంతద్ధవ్యకవ్యానాం ప్రదానెసోఽతిథిస్స్మృతః"=அந்தணனைத் தூரத்தேதானே சோதிக்க,

வேண்டும். வேதத்தைமுற்றும் ஓதினவனுயிருந்தால் அவ்விய கவ்வியங்களைக் கொடுக்கும் விடயத்தில் அந்த அந்தணன் சுத்த மாகிய அதிதியாக விருக்கின்ருன். எ-று. காண்க.

இயமன். యమః॥ "పూర్వమేవపరీక్షేత బ్రాహ్మణాన్వేదపారగాన్। శరీర ప్రభృతిద్రవ్యైశ్శుద్ధాంశ్చరితవ్రతాన్" = சிராத்தத்தின் பொருட்டு அந் தணைக் கொள்வோன், முற்றுமாகிய வேதாத்தியயனம், அங்கப்பழு தின்றிச் சுத்தனு யிருத்தல், விரதசீலம் உண்டா யிருத்தல், என்னு மிந்தக் குணங்களை யுடையவராய்த்தேடி முன் பாகவே ஆராய்ந்து கொள்ளவேண்டும். எ-று. காண்க.

சிராத்த விடயத்தில் வேதியனைச் சோதிக்க வேண்டுமென்ற விதியைப்பற்றி விருந்தாகவந்தவனையும் குலங் கோத்திர முதலிய ஆராய்தல் செய்யலாமன்ருே வெனின்? அஃதொழிக்கப்படுகின் றது. கோத்திரம்=மரபை விளக்கஞ்செய்த மஹாவிருடி சம்பந் தம். சரணம் = ஒழுக்கம். சுவாத்தியாயம் = வேதசாகை விசே டம். சுருதம்=வியாகரணம், மீமாம்ஸம் முதலிய "శ్రుతః" என்ற அவ்வியயம், இடம், பெயர். தொழில் முதலியவற்றை யுபலக்க ணத்தாலுணர்த்துகின்றது. இவ்விடயங்களையெல்லாம் வினவலா காதென்பது கருத்து.

அதனுனே இயமன் கூறினர். యమః॥ "నపృచ్ఛేద్గోత్రచరణే దేశం నామకులంశ్రుతం। అధ్వనో హ్యాగతంవిప్రం భోజనార్థముపస్థితం" = வழிநடந்து வந்து உண்டியின்பொருட்டு நேர்ந்த வேதியனைக் குறித்து உன் கோத்திரம், ஒழுக்கம், தேயம், பெயர், மரபு, கல்வி என்னை? என்று வினவலாகாது. எ-று. காண்க.

கோத்திர முதலியவற்றை வினவலாகாது என்ற அளவே யல்ல. அதிதியினிடத்து, தேவபாவனையையும் செய்யவேண்டும். அங்ஙனம் சாதாதபரால் கூறப்பட்டது. శాతాతపః॥ "చిత్తేచభావయేత్ స్మిన్వ్యాససంస్థయముపాగతం" = வியாசர்தாமே எழுந்தருளினர் என்று அந்த அதிதியைத்தான் தன்மனத்துள் எண்ணவேண்டும். எ-று. காண்க.

விஷ்ணுபுராணத் துள்ளும். విష్ణుపురాణే॥ "స్వాధ్యాయగోత్రచరణమపృష్ట్వాచతథాకులం। హిరణ్యగర్భబుద్ధ్యాతం మన్యేతాభ్యాగతంగృహీ" = இல்

லறத்தான் தன்மனைக்குவந்த அதிதியைக் குறித்து, கோத்திரம், ஒழுக்கம், வேதாத்தியயனம், குடி, பெயர் வினவாமல் இவனே பிரமதேவன் என்று, உணரவேண்டும். எ—று. காண்க.

தேவர்களே இவரென்று அறிந்து கொள்வதற்குக் காரண மென்னெனில்? விருந்தினன் எல்லாத்தேவர் வடிவமுமாமாறு புராணசாரத்துள் கூறப்பட்டது. పురాణసారె॥ “ తథాప్రజాపతిశ్శక్రో వహ్నిర్వసుగణోయమః। ప్రవిశ్యాతిథిమెవైతె భుంజతెన్నంద్విజోత్తమ ”=பிரஜாபதி, இந்திரன், அக்கினி, வசுகணம், இயமன், இந்தத்தேவர் விருந்தினருட் பிரவேசித்து அந்நத்தைப் புசிக்கின்றனர். எறு. காண்க.

கோத்திரமுதலியவற்றை வினவினால் பயனில்லை யென்று போதாயனராற் கூறப்பட்டது. బౌధాయనః॥ “ దెశంనామ కులంవిద్యాం పృష్ట్వాయోన్నం ప్రయచ్ఛతి। నసతత్ఫలమాప్నోతి దత్వాస్వర్గంనగచ్ఛతి ” = தேயம், பெயர், மரபு, கல்வி, இவற்றுள் யாதானு மொன்றினையேனும் வினவி யார் சோறிடுகின்றாரோ? அவன் அவ்வந்நதானப்பயனை யடைவதில்லை, வினவாது ஊட்டிச்சுவர்க்கம் புகுகின்றான். எறு. காண்க.

விருந்தோம்புதலாகிய வேள்விசெய்யு மில்லறத்தான் அவ் விருந்தினனைக் குடிமுதலியன வெவ்வாறு வினவலாகாதோ அவ்வாறே, அதிதியும் தன்வரலாற்றினையும் கூறலாகாது. என மனு கூறினர். మనుః॥ “ నభోజనార్థంస్వెవిప్రః కులగోత్రెనివెదయెత్। భోజనార్థంహితెశంస న్వాంతాశీత్యుచ్యతెబుధైః ” = வேதியன் உணவின் பொருட்டுத் தன் குடிமரபு முதலியவற்றைக் கூறலாகாது. உண்டியின் பொருட்டுத் தன் குடிமரபு முதலியவற்றைக்கூறினவன், கான்ற சோற்றையுண்டவன் ஆவன் என்று அறிவுடையோராற் கூறப்படு கின்றான். எறு. காண்க. கான்றல்=கக்கல்=வாந்திசெய்தல். (௪௮௨)

## பிரமசாரியன், சந்நியாசிவிடயம்.

మూ॥ అపూర్వస్సువ్రతీవిప్రో హ్యపూర్వశ్చాతిథిస్తథా
వెదాభ్యాసరతొనిత్యం త్రయసిపూజ్యాధినెదినె. ॥౮౯౫॥

என்பது. விருந்தினைக் கூறுமுகத்தாலின்னும் பிச்சைபுக்க சந்நியாசிக்கும் பிரமசாரிக்கும் உபசரித்தலையும் கூறுகின்றது.

(இ-ள்). சந்நியாச விரதமுடையவனும், விருந்தினனும், வேதமோதும் பிரமசாரியும், ஆகிய இம்மூவரும் நாடோறும் பூசிக்கத்தக்கவர். இவருள், சந்நியாசியும் பிரமசாரியும் தினந் தினம் வருபவராயினும் முன்வந்தவரல்லராம். எனவே அவர் நித்தம்வரினும் பிச்சையிடத்தக்கது. ஒருதினம்வந்த விருந்தினன் மறுதினமும்வந்தால் அவனுக்கு விருந்தினர்க்குச்செய்யும் உப சாரவிசேடம் செல்லாது என்றகருத்து. எ-று.

"ஸுவ்ரதீ" = முத்திக்கு ஏதுவாகிய நல்ல தருமமுடைய வன். எனவே சந்நியாசி என்பதுகருத்து. சந்நியாசி=துறவி= நீத்தோன். "வேதாத்யாஸரதஃ" என்பது. வேதமோதுதலின்பொரு ட்டே பிரமசரிய நிலைமையாதலின் பிரமசாரி எனப்பொருள் படுகின்றது. இவ்விருவரும், "அபூர்வௌ" = முன் வந்தவராகார். எனவே புதியரோ டொப்பப்பூசிக்கத்தக்கவர் என்பதுகருத்து. அதிதி=விருந்து=புதியர், ஒருபொருட்கிளவி. அங்ஙனம் யாஞ் ஞவற்கியரும் கூறினர். யாஜ்ஞவல்க்யஃ॥ "ஸத்க்ருத்யபிக்ஷவேபிக்ஷா தாதவ்யா ஸுவ்ரதாயச"=முற்றத்துறந்தோனுக்கும், பிரமசரியனுக்கும் உப சாரஞ்செய்து பிச்சையிடவேண்டும். எ-று. காண்க.

நரசிங்கபுராணம். ந்ருஸிம்ஹபுராணே॥ "பிக்ஷாஞ்சபிக்ஷவேதத்யா த்பரிவ்ரா ட்ப்ரஹ்மசாரிணே। அகல்பிதான்னாதுத்த்ருத்ய ஸர்வவ்யஞ்ஜனஸம்யுதாம்" = பிச்சைக்கு வந்த நீத்தோனுக்கும் பிரமசாரிக்கும் கற்பிக்கப்படாத அந்நத் திருந்து எடுத்து, (எனவே, பிறருண்ட சேடமல்லாதஎன்க. அல் லது, பிறர்பொருட்டு எடுத்து வையாதசோற்றிற் சிறிதெடுத்து- எ-று). செய்யப்பட்டுள்ள கறிவகை முதலியவற்றோடும் பிச்சை யிடவேண்டும். எ-று. காண்க.

மனு. மநுஃ॥ "பிக்ஷாஞ்சபிக்ஷவேதத்யா த்விதிவத்ப்ரஹ்மசாரிணே। யத்புண்யபல மாப்னோதி காந்தத்வாவிதிவத்குரோஃ। தத்புண்யம்ஸமவாப்னோதி பிக்ஷாந்தத்வாத்விஜோக்ருஹீ"= இல்லறத்தானாகிய விருபிறப்பாளன், துறவிக்கும் பிரமசாரிக் கும் விதிப்படி பிச்சையிடவேண்டும். அவ்வாறு கொடுத்தவன் தன்னாசிரியனுக்கு விதிப்படி கோதானஞ் செய்த பயனை யடை வன். எ-று. காண்க.

இயமன். யமஃ॥ "ஸ்த்க்ருத்யபிக்ஷவேபிக்ஷாம் யஃப்ரயச்சதிமானவஃ। கோப்ர தானஸமம்புண்யம் தஸ்யாஹபகவான்யமஃ" = பிச்சைக்கு வந்தவனுக்கு யா

வன்? பிச்சையிடுகின்ருஞே? அவனுக்குக் கோதான புண்ணியத்தோடொத்த புண்ணியம் வருமென்று பகவராகிய வியமன் கூறினர். எ-று. காண்க.

பிச்சைபுக்க பிரமசாரியனைப் பற்றி "స్వస్తి" = సు = நன்று అస్తి = உள்ளது. நன்மையுண்டு. எனவே. சுகமுண்டாக என்று கூறி அவன்கையில் சலம் விட்டுப் பின்பு பிச்சையிடவேண்டும். அங்ஙனம் கௌதமர் கூறினர். గౌతమః॥ "స్వస్తివాచ్యం భిక్షాదానమపూర్వం" = சுவஸ்தி என்று கூறவேண்டுவது. அதற்குமுன் பிச்சையிடலாகாது. எ-று. காண்க. (இவையெல்லாம் வைசுவதேவ கருமமுற்றிய பின்வந்த துறவி பிரமசாரியனைப்பற்றிக் கூறியது. எனக்கொள்க). (சகூ௨)

సూ॥ వైశ్వదేవేతుసంప్రాప్తే భిక్షుకేగృహమాగతే
ఉద్ధృత్యవైశ్వదేవార్థం భిక్షుకంతువిసర్జయేత్. ॥౫౦౪॥

என்பது, வைசுவ தேவத்திற்கு முன்வந்த துறவிக்கும்பிரமசாரியனுக்கும் செய்வகை கூறுகின்றது.

(இ-ள்). வைசுவதேவஞ் செய்யும்பொழுது (எனவேசெய்வதற்கு முன்பு) பிச்சைபுகுவோன் மனைக்குவந்தால் அந்நத்தில் வைசுவ தேவபாகத்தை யெடுத்து வைத்து, மற்றப்பாகத்துள் பிச்சையிட்டு அவனையனுப்பவேண்டும். எ - று. காண்க. "సంప్రాప్తే" = ప్రసక్తే = செய்பொழுது.

நிரசிங்க புராணம். నృసింహపురాణే॥ "అకృతేవైశ్వదేవేతు భిక్షుకేగృహమాగతే" = வைசுவதேவஞ் செய்வதற்குமுன் பிச்சை புகுவோன் மனைக்கு வந்தால். எ - று. காண்க. "భిక్షుకంతువిసర్జయేత్" = வைசுவ தேவத்துக்கு எவ்வளவு அன்னம் வேண்டுவதோ? அவ்வளவு அந்நத்தை வேறெடுத்து வைத்து மிக்கதனுள் பிச்சையிட்டுப் பின் பிச்சைபுக்கவனை யனுப்பவேண்டுவது. எ-று. இது பாராசர மூலவசனம்.

பிச்சை யிடாவிடிற் பாவம். என்பதனை மனு கூறினர். మనుః॥ "యతిశ్చబ్రహ్మచారీచ పక్వాన్నస్వామినావుభౌ। తయోరన్నమదత్వాతు భుక్త్వాచాంద్రాయణంచరేత్" = இல்லறத்தான் மனையில் அன்னம் பாக

மானவுடனே சந்நியாசியும் பிரமசாரியும் அதனுரிமை யுடைய வர்களாயிருக்கின்றார்கள். அவ்விருவர்க்கும் அன்னமிடாது புசித் தால் சாந்திராயண விரதஞ் செய்யவேண்டும். எ - று. காண்க. சாந்திராயண விரத விலக்கணம் மேற்பிராயச் சித்தத்துட் கூறு தும். ஈண்டு சாந்திராயண விரதமென்னும் பிராயச்சித்தங் கூறி யிருத்தலின் அதற்குக் காரணமாகிய பாவம் வெளிப்படுகின்றது. பக்குவப்பட்ட அன்னம் அவர்களது உடைமையாதலால் அவர் களுக்குக் கொடாவிட்டால் பாவம் வருதல் முறைமையேயாம். ("భుక్త్వా" = உண்டால் என்றதனால், பிச்சையிடாதவன் தான் புசியாதுவிடிற் பாவமில்லை யென்பது கருத்தாக வெளிப்படு கின்றது. பிச்சையிடாத பச்சாத்தாபத்தால் பட்டினி கிடந்தவ னுக்குப் பாவமில்லை யெனச் சிலர் கூறுவர். பிச்சையிட அநு கூலித் திருந்தும் இடாவிட்டால் எவ்வகையாலும் பாவமே என மற்றுஞ் சிலர் கூறுவர். உண்ணுவிட்டால் பச்சாத்தாபமும் உப வாசமும் பிராயச்சித்தமாக விருக்கின்றது. உண்டு விட்டால் சாந்திராயணம் கூறியே யுள்ளது. பிச்சையிடாமையால் நேர்ந் தபாவம் பிராயச்சித்தமின்றி நீங்காதென்பது தருமமுடிபு).

புராணம். పురాణే॥ "అహుత్వాగ్నిమసంతర్ప్య తపస్వినముపస్థితం। అశిత్వా తుపరోక్తే స్వానిమాంసానిఖాదతి" = ஹோமஞ் செய்யாதும், அன்னம் வேண்டிவந் துதவிய தபசியைத் திருத்திசெய்யாமலும் உண்ட வன்மறுமையில் தன்னுடம்பிற் றசையைத்தானே யருந்துவன். எ று. காண்க. (ரு0உ)

మూ॥ దద్యాచ్చభిక్షాత్రితయం పరివ్రాడ్బ్రహ్మచారిణాం
ఇచ్ఛయాచతతోదద్యా ద్విభవేసత్యవారితం. ॥ĸ0ч॥

என்பது, பிச்சைக்குப் பலர்வந்த வழிச்சத்தியில்லாத இல் லறத்தான் செய்வகை கூறுகின்றது.

(இள்). நீத்தோருக்கும் பிரமசாரிக்கும் மூன்று பிச்சை யிடவேண்டும், உணர்ந்தவன் சத்தியிருக்குமாயின் இச்சித்த வண் ணம் விசேடமாகவுஞ்செய்யலாம். அதிகம் பிச்சை யிடுவதை விலக்குவதில்லை. எ று.

சத்தியுள்ளவனாயில் பிச்சையிடலாமென்று கூர்மபுராணத் துட் கூறப்பட்டது. కూర్మపురాణే॥ "భిక్షాంవై భిక్షవేదద్యా ద్విధివద్బ్రహ్మచా

ఠణ। దద్యాదన్నం యథాశక్తి స్వార్థిభ్యో లోభవర్జితః "=உலோபத்தைவிடுத்து, விரும்புவோருக்குத் தன்சத்தியுள்ளவளாயில் அந்நதானம்செய்யவேண்டும். துறவிக்கும் பிரமசாரியனுக்கும் விதிப்படி பிச்சையிடவேண்டும். எ-று. காண்க. (௫௧௭)

మూ॥ యతిహస్తే జలం దద్యాత్ భైక్షం దత్వా పునర్జలం
తద్భైక్షం మేరుణా తుల్యం తజ్జలం సాగరోపమం. ॥౫౨౫॥

என்பது. பிச்சையிடு நியமங் கூறுகின்றது.

(இ-ள்). துறவியின்கையில் நீர்வார்க்கவேண்டும். பின்பு பிச்சையிடவேண்டும். அதன்பின்னர் மறுபடியும் நீர்வார்க்கவேண்டும். அங்ஙனம் கொடுத்த பலிமேருவோடு ஒப்பாம். அந்த நீர் கடல்போலுமாம். எ-று. எனவே சிறிதேசெய்யினும் பெரிது செய்த பயனுமென்பதுகருத்து. பலி=பயிக்கம்=பிச்சை.

சத்தியிருந்தால் விசேடம் பிச்சை யிடவேண்டும் எனப் பிரமபுராணத்துட் கூறப்பட்டது. బ్రహ్మపురాణే॥ " యతిపాత్రప్రపూరణీం భిక్షాం యతిభ్యస్సంప్రయచ్ఛతి। విముక్తస్సర్వపాపేభ్యో నాసౌ దుర్గతిమాప్నుయాత్ "= யார்முற்றத் துறந்தவனுக்கு பலிபாத்திரம் நிரம்பும்வளாயில் பிச்சை கொடுக்கின்றுனோ? அவன் எல்லாப்பாவத்தாலும் விடப்படுகின்றுன். இவனே நரகம்புகாதவன். எ-று. காண்க. (௫௨௭)

మూ॥ యస్యచ్ఛత్రం హయశ్చైవ కుంజరారోహమృద్ధిమత్
ఐన్ద్రం స్థానముపాసీత తస్మాత్తన్న విచారయేత్. ॥౫౨౬॥

என்பது, வறியோனைப்போலச் செல்வன் தன்மனைக்கு வரினும் உபசரிக்கவென்றது.

(இ-ள்). குதிரை, குடையுடையவன் பிச்சைக்குவரின் அவனுக்குப் பிச்சை கொடுத்தவன் யானையேறி அமுதமுண்ணும் இந்திரபதத்தையடைவன் ஆதலால் அவ்விடயத்து ஆராய்ச்சி வேண்டாம். எ-று.

இந்தச் சுலோகத்துள் "సందంశన్యాయః" = சந்தமிச நியாயத்தால் "ఆతిథ్యం కుర్యాత్" = என்ற இருமொழிகளையும் வருவித்துப் பொருளுரைத்துக் கொள்க. சந்தமிசம் என்பது, பற்றுக் குறடு= பற்றுக்கோல். இவ்வழக்கினுல், இவ்வசனத்து முன்பின் வசனங்

கள், அதிதியை உபசரித்தல் அதிகாரப்பட்டிருத்தலின் இவ்வுரையிலும் அதிதியைப் பூசிப்பவன் என்ற இருமொழியை வருவிப்பதாம். குடைநிழலும் குதிரையூர்தி முதலியனவுமுடையஅரசன் முதலியோர் அதிதியாக வந்தபோது அவன் இல்லறத்தானிலும் வருணச்சிரமங்களாற் றாழ்ந்தோனே யாயினும் அவனை யுபசரித்தால் சுவர்க்கப்பேறுண்டா மாதலின் அந்த விருந்தினனை யிழி வெண்ணத்தாற் பூசிப்பதோ? ஒத்தபடி யுபசரிப்பதோ? என்று ஐயமுறலாகாது. கடவுட் பாவனையானே அவனையும் பூசிக்கவேண்டும். ஆனல் அவன் இப்பிறவியில் தவஞ்செய்திலனாயினும் சென்றபிறவியிற் றவமுடையனா யிருப்பன். இல்லையேலவனுக்கு அத்துணைச் செல்வமுறாது. அதனானே செல்வமுடையோரெல்லாம், ஈசுரன் அமிசையையுடையவர் என்று கண்ணன் கூறினர். பகவற்கீதை. భగవద్గీతాసు॥ "యద్యద్విభూతిమత్సత్త్వం శ్రీమదూర్జితమేవవా। తత్తదేవావగచ్ఛత్వం మమతేజోంశసంభవం" = எங்கெந்தவுயிர் செல்வத்தை யாயினும், அதிகாரத்தையாயினும், ஆற்றலையாயினும், அபிவிருத்தியை யாயினும் உடையதா யிருக்கின்றதோ? அதனை என்னுடைய ஒளியின் கூற்றினாற் பிறந்ததாகவுணர்க. எ-று. காண்க. ஆதலால் ஐசுவரிய முடையவனாய்வந்தவனுக்கு விருந்துபசரித்தல் ஒத்தவாறேயாம். (நிக) வது சுலோகத்துள் வைசுவதேவஞ் செய்வதற்கு முன்னமேயாயினும் துறவிக்கும் பிரமசாரிக்கும் பயிக்கமிடவேண்டு என்றுகூறி யிருக்கின்ற அவ்விட்த்து உத்திவகை என்னெனில்? "వైశ్వదేవకృతంపాపం శక్తోభిక్షుర్వ్యపోహితుం। నహిభిక్షుకృతాన్దోషాన్ వైశ్వదేవోవ్యపోహితుం" = வைசுவதேவத்தில் நேர்ந்தபாவம் போக்கடிப்பதற்கு யாசிப்பவன் ஆற்றலுடையவனாவன். அப்பலிபுக்கவனால் நேர்ந்த பாவத்தினை வைசுவதேவம் சத்தியுள்ளதல்லாமையின் அன்றோ? எனவே வைசுவதேவம் பின்செய்தால் அதனல் வருங்குற்ற மெதுவோ? அதுபிச்சை யிடுதலாலொழிகின்றது. அப்பிச்சையிடாதவதனாலுண்டாகின்ற குற்றம் முன் செய்யப்பட்டிருந்த வைசுவதேவத்தினல் ஒழிவதில்லை என்பது கருத்து.

## பிச்சைபுகத் தக்கோர்.

ஈண்டு "భిక్షుః" என்ற மொழியுபலக்கணத்தால் ஓதுவோரையுங் குறிக்கின்றது. ஓதுவோரும் பிக்ஷுகரோடு கூடினவரொன்

று வியாசராற் கூறப்பட்டது. వ్యాసః॥ "యతిశ్చ బ్రహ్మచారీచ విద్యార్థీగురుపోషకః। అధ్వగః క్షీణవృత్తిశ్చ షడేతేభిక్షుకాస్స్మృతాః" = துறந்தவன், பிரமசாரியன், கல்வி விரும்பினோன், குருபணி செய்வோன், வழி நடப்போன், பிழைக்கும்வகை தவறியவன், என்னு மிவ்வறுவரும் பிச்சைக்குரியோரெனப்படுவர். எ-று. காண்க.

புராணசாரம். పురాణసారే॥ "వ్యాధితస్యార్థహీనస్య కుటుంబాత్ప్రచ్యుతస్యచ। అధ్వానంప్రతిపన్నస్య భిక్షాచర్యావిధీయతే" = நோயாளி, வறியவன், குடும்பத்தாராற் றுறக்கப்பட்டவன், வழிநடப்பவன் இவர்கள் பிச்சையெடுக்கலாமென்றுவிதிக்கப்படுகின்றது. எ-று. காண்க. (௫௰௩)

## வைசுவதேவஞ் செய்யாவழி வருங்குற்றம்.

మూ॥ అకృత్వా వైశ్వదేవంతు భుంజతేయే ద్విజాధమాః
సర్వేతే నిష్ఫలా జ్ఞేయాః పతంతి నరకేఽశుచౌ. ॥౫౪॥

என்பது, ஞாபகத்தால் வைசுவதேவத்தைச் செய்யாவழி வருங்குற்றம் கூறுகின்றது.

(இ-ள்). எவ்விழிந்த விருபிறப்பாளர் வைசுவதேவஞ்செய்யாது புசிக்கின்றாரோ? அவரனைவரும் வைசுவதேவப் பயனற்றவராகின்றனர். அன்றியும் அசுத்தமாகிய நரகத்து வீழ்கின்றனர். எ-று.

## விருந்தோம்பாக்குற்றம்.

మూ॥ వైశ్వదేవవిహీనాయే ఆతిథ్యేనబహిష్కృతాః
సర్వేతే నరకం యాంతి కాకయోనిం వ్రజంతిచ. ॥౫౫॥

என்பது, அதிதி பூசை செய்யாவழி வருங்குற்றங் கூறுகின்றது.

(இ-ள்) யார் வைசுவதேவஞ் செய்வதில்லையோ? விருந்தோம்பலையொழித்தனரோ? அவரனைவரும் இரௌரவம்முதலிய நரகத்தை யனுபவித்துப்பின்பு காக்கையாகப் பிறக்கின்றார்கள். எ-று. வைசுவதேவத்தைக் கூறுமுகத்தால் இதனையும் கூறினர்.

## அந்நமிடுதலின்றிறம்.

మూ॥ శ్వపాకోవాయదిచండాలో విప్రఘ్నః పితృఘాతుకః
వైశ్వదేవేతు సంప్రాప్తః సోఽతిథిస్స్వర్గసంక్రమః. ॥౫౬॥

என்பது. புதியவனை வந்தபாவிக்கும் உண்டி யுபகரிக்க வேண்டு மென்றது.

(இ-ள்.) பசுக்கொலைமுதலிய உபபாதகங்களைச் செய்தவனே யாயினும், சண்டாளனேயாயினும், பிரமகத்தி செய்தவனேயாயினும், பிதிர்க்கொலை செய்தவனே யாயினும். வைசுவ தேவகாலத்திற்கு உண்டிவிருப்பமுடையவனாய் வந்தவன் யாரோ? அவனே சுவர்க்கம் புகுவிக்கும் அதிதியாம். எ-று.

பாவி அதிதியாகவந்தால் அவனுக்கு உண்டி யுபசரிக்கலாமே யொழிய அதிதிக்குச் செய்யத்தக்க உபசார முழுவதுஞ் செய்யலாகாது என்பது கருத்து. இக்கருத்து அசுவமேத பர்வத்துள்ளும் கூறப்பட்டது. ఆశ్వమేధికే॥ "పాపోవాయదిచండాలో కాలే యస్యకశ్చిదాగతః। అన్నేనపూజనీయశ్చ పరత్రహితమిచ్ఛతా" = பாவியாயினும், சண்டாளனாயினும், யாரோயாயினும், பொழுதோடு யார்வருகின்றனரோ? அவனை மறுமைப்பயன் வேண்டினவன் உண்டியாலுபசரிக்கவேண்டும். எ-று. காண்க.

விஷ்ணு தருமோத்திரம். విష్ణుధర్మోత్తరే॥ "చండాలోవాశ్వపాకోవా శత్రుర్వాపితృఘాతుకః। దేశకాలాభ్యుపగతో భరణీయోమతోమమ" = சண்டாளனாயினும் நாயைத்தின்போனேயாயினும், பகைவனாயினும், தந்தையைக் கொன்றோனே யாயினும், தேசகாலத்திற்குச் சரியாக வந்தால் அவனை யுபசரிப்பது எனக்குச் சம்மதம். எ-று. காண்க.

விருந்துபசரித்தல் முற்றிற்று.

---

## ஐம்பெரும்வேள்விச்சிறப்பு.

இதுகாறும் கூறிவந்த ஐம்பெரும் வேள்விகளை ஹாரீதர் சிறப்பிக்கின்றனர். హారీతః॥ "దేవానృషీన్పితౄంశ్చైవ భూతాని బ్రాహ్మణాంస్తథా। తర్పయన్విధినావిప్రో బ్రహ్మభూయాయకల్పతే" = தேவரையும், இருடிகளையும், பிதிரரையும், உயிர்களையும், வேதியரையும் விதிப்படி திருத்திசெய்யும் வேதியன் பிரமசாயுச்சியத்திற்குத் தக்கவனாகின்றான். எ-று. காண்க.

புராணசாரம். పురాణసారే॥ "యత్ఫలంసోమయాగేన ప్రాప్నోతిధనవాన్ద్విజః। సమ్యక్పంచమహాయజ్ఞైర్దరిద్రస్తదవాప్నుయాత్" = செல்வமுமை இருபிறப்பாளன் சோமயாகத்தால் எந்தப்பயனை யடைவனே அந்தப் பயனை இவ்வைம்பெரும் வேள்வியால், ஓர்வறியவன் அடைவன். எ-று. காண்க.

## செய்யாவழிவருங்குற்றம்.

அவ்வைம்பெரும்வேள்விசெய்யாவழி வருங்குற்றம்வியாசராற் கூறப்பட்டது. వ్యాసః॥ "పంచయజ్ఞాంస్తుయోమోహాన్నకరోతిగృహాశ్రమీ। తస్యనాయంచనపరో లోకోభవతిధర్మతః" = எந்த இல்லறத்தான் அஞ்ஞானத்தால் ஐம்பெரும் வேள்விகளைச் செய்வதில்லையோ? அவனுக்குப் புண்ணியத்தினுல் இம்மையும் மறுமையும் உண்டாவதில்லை. எ-று. காண்க. (ருகூ0)

ஐம்பெரும் வேள்விச்சிறப்பு முற்றிற்று.

---

## உண்டிவிதி.

మూ॥ యోవేష్టితశిరాభుంక్తే యోభుంక్తేదక్షిణాముఖః
• వామపాదకరస్థిత్వా తద్వైరక్షాంసిభుంజతే. ॥౧-౨౫॥

என்பது. ஐம்பெரும் வேள்வியின் உண்டியைக் கருதி அநுவதித்து அதன்கணொழிக்கப்படுவன கூறுகின்றது.

(இ-ள்) யார் தலைமேலாடையோடும் தென் முகமாகவும், இடக்காலின்மேற் கைவைத்தாயினும் புசிக்கின்றனே? அவன் அந்நத்தினை யரக்கர் புசிக்கின்றனர். எ-று. (எனவே உண்டவூண் இந்திரிய அபிமானித்தெய்வங்கட்குத் திருத்தியுண்டுபண்ணி யம்முகத்தால் அறிவில் தெய்வ வுணர்ச்சிச் செல்வ முண்டாக்காது அரக்கர் பாலதாய்த் தாமதப் படுகின்றதென்றபடி).

உண்டிவிதி மநுவாற் குறிக்கப்பட்டது. మనుః॥ "భుక్తవత్సుచవిప్రేషు స్వేషుభృత్యేషుచైవహి। భుంజీయాతాంతతఃపశ్చాదవశిష్టంతుదంపతీ" =

வேதியர் உண்டபின், தமது பரிசனர்களனைவரும் புசித்தபின் மிக்கதை இல்லத்தலைவனும் தலைவியும் புசிக்கவேண்டும். எ-று. காண்க.

விஷ்ணுபுராணம். విష్ణుపురాణె॥ "తతస్సువాసినీదుఃఖి గర్భిణీవృద్ధబాల కాన్। భోజయేత్సంస్కృతాన్నేన ప్రథమంతుపరంగృహీ। అభుక్తవత్సుచైతేషు భుంజన్భుఙ్క్తేసుదుష్కృతం। మృతశ్చగత్వానరకం శ్లేష్మభుగ్జాయతేనృప" = பின்னர் சுமங்கலியர், துக்கப்படுவோர், கருப்பிணி, விருத்தர்கள், சிறுவர் = இளையமக்கள் இவர்களுக்குச் சுத்தமாகிய உணவுகளை முன்னுண்பித்துப்பின்பு, தலைவன் புசிக்கவேண்டும். இவர்களுண்பதற்கு முன் புசிக்குந் தலைவன் பாவத்தை யனுபவிக்கின்முன். மறுமையிலும் நரகத்தை யனுபவிக்கின்முன். அதன்பின், கபத்தைத் தின்னும் செந்துவாகப் பிறக்கின்முன்எ-று. காண்க.

மார்க்கண்டேய புராணம். మార్కండేయపురాణె॥ "పూజయిత్వాతిథీన్విప్రా జ్ఞాతీన్బంధూంస్తథార్థినః। వికలాన్బాలవృద్ధాంశ్చభోజయేదాతురాంస్తతః। వాంఛే త్క్షుత్తృట్పరీతాత్మా యశ్చాన్నంరససంయుతం" = தனக்குப் பசிதாக நேர்ந்தபொழுது அறுசுவையோடுங்கூடியநல்லுண்டியைப் பெறவேண்டுமென்னும் விருப்பமுடைய விப்பிரன், அதிதிகளையும், ஞாதியரையும், சுற்றத்தினரையும், பிச்சைபுக் கோரையும், உறுப்பறைகளையும்=அங்கப்பழுதினரையும், பாலரையும், விருத்தரையும், ஆதுரர்களையும்=தீவரப்படுவோரையும், முன்னுண்பித்துப் பின் தானுண்ணவேண்டும. ஏ-று. காண்க.

## மண்டலம்செய்வகை.

உண்ணுங்கால் செய்வகையினைப் போதாயனர். கூறினர். బోధాయనః॥ "ఉపలిప్తేసమేస్థానె శుచౌశ్లక్ష్ణసమన్వితె। చతురశ్రంత్రికోణంవా వర్తులం చార్ధచంద్రకం। కర్తవ్యమానుపూర్వ్యేణ బ్రాహ్మణాదిషుమండలం" = மெழுகப்பட்டுச் சுத்தமாயும் சருச்சரையற்றதாயும் உள்ள ஒத்த நிலத்தில் உண்டியின் பொருட்டு வேதியனுக்குச் சதுரமாயும், அரசனுக்கு முக்கோணமாயும், வைசியனுக்கு வட்டமாயும், சூத்திரனுக்குப் பிறைவடிவாயும் மண்டலம் செய்யவேண்டும். எ – று. காண்க.

சங்கர். శంఖః॥ "ఆదిత్యావసవోరుద్రా బ్రహ్మాచైవపితామహః। మండలాన్యుపజీవంతి తస్మాత్కుర్వీతమండలం" = ஆதித்தர், வசுக்கள், உருத்திரர், பிதா

மகனான பிரமன், இவர்கள் மண்டலங்களினிடத்து ஜீவிக்கின்றனர் ஆதலின் மண்டலஞ் செய்யவேண்டுவது. எ-று. காண்க.

## உண்ணுதலின்மரபு.

கூர்மபுராணம். కూర్మపురాణె॥ "ఉపలిప్తెశుచౌదెశె పాదౌప్రక్షాళ్యవైకరౌ। ఆచమ్యార్ద్రాననోక్రోధః పంచార్ద్రోభోజనంచరేత్" =மெழுகிச் சுத்தமாயிருக்கிற விடத்தில் புசிக்கவேண்டும். கால் கை வாய் பூசி இவ்வைந்தும் ஈரத்துடனிருக்கையில் ஆசமனஞ்செய்து, கோவமற்றவனாய்ப் புசிக்கவேண்டும். எறு. காண்க.

வியாசர். వ్యాసః॥ "పంచార్ద్రోభోజనంకుర్యాత్ ప్రాఙ్ముఖోమౌనమాస్థితః। హస్తౌపాదౌతథైవాస్య మేషుపంచార్ద్రతామతా" = கைகால்வாய் இவ்வைந்தினையும் நனைத்து, வாய்பேசாது கிழக்கு முகமாக இருந்துகொண்டு புசிக்கவேண்டும். எறு. காண்க.

அசுவமேதம். అశ్వమేధే॥ "ఆర్ద్రపాదస్తుభుంజీయాత్ ప్రాఙ్ముఖశ్చాసనేశుచౌ। పాదాభ్యాంధరణీంస్పృష్ట్వా పాదేనైకేనవాపునః" =காலலம்பிச் சுத்தமாகிய ஆசனத்தின்மீது கிழக்குமுகமாகவிருந்து, இரண்டு காலினலாயினும் ஒற்றைக்காலினலாயினும் நிலத்தினைத் தொட்டுக்கொண்டு புசிக்கவேண்டும். எறு. காண்க.

## உண்கலவிதி.

அந்த வுணவைக் கொள்ளும் விதியைக் கூர்மபுராணத்துட் கூறப்பட்டது. కూర్మపురాణె॥ "ప్రశస్తశుద్ధపాత్రేషు భుంజీతాకుపితోద్విజః" = இருபிறப்பாளன் கோவமின்றி விதிக்கப்பட்ட சுத்தபாத்திரத்தில் புசிக்கவேண்டும். எறு. காண்க.

தக்கதென்ற பாசனங்களைப் பைட்டீநசி கூறினர். పైఠీనసిః॥ "సౌవర్ణెరాజతెపాత్రె కాంస్యెపద్మపలాశయోః। భోజనెభోజనెచైవత్రిరాత్రఫలమశ్నుతె। ఏకఏవతుయోభుఙ్క్తే విమలెకాంస్యభాజనె। చత్వారితస్యవర్ధంతె ఆయుఃప్రజ్ఞాయశోబలం" = பொன், வெள்ளி, வெண்கலம், இந்தபாத்திரங்களிலும், தாமரையிலை, முருக்கிலை இவற்ருற் சமைந்த பாத்திரங்களிலும் புசித்தால் மூன்றுதினம் தீக்ஷையோடு செய்த வேள்விப்பயனை அடைகின்ருன். யார் குற்றமற்ற வெண்கல பாத்திரத்துள் ஒருவனே புசித்து வருகின்ருனே? அவனுடைய ஆயு

ளும், அறிவும், புகழும், வலிமையுமாகிய நான்கும் விருத்தியடை கின்றது. எ-று. காண்க.

முருக்கிலை தாமரையிலையில் புசிக்கும்விடயம் இல்லறத்தானுக்கன்று. ஏனையர்க்குக் கூறியது என மற்றோர் மிருதியுள் குறிக்கின்றது. స్మృత్యంతరే॥ “ పలాశపద్మపత్రేషు గృహీభుక్త్వైవ స్వంచరేత్। బ్రహ్మచారియతీనాంచ చాంద్రాయణఫలంభవేత్ ”—தாமரையிலையிலும் முருக்கிலையிலும் உண்ட இல்லறத்தான் சாந்திராயண விரதஞ்செய்க. பிரமசரியனும் துறவியும் அவற்றுட் புசித்தால் சாந்திராயணஞ்செய்த பயனுண்டாம். எ-று. காண்க.

வெண்கல பாத்திரத்துண்பது இல்லறத்தானுக்கு அன்றித் துறவி முதலியோர்க்கன்றெனப் பிரசேதர்கூறினர். ప్రచేతాః॥ “ తాంబూలాభ్యంజనేచైవ కాంస్యపాత్రేచభోజనం। యతిశ్చబ్రహ్మచారీచవిధవాచవివర్జయేత్” வெற்றிலைப்பாக்கு, எண்ணெய்முழுக்கு, வெண்கலபாத்திரத்துண்டல் ஆகிய இம்மூன்று கருமமும் சந்நியாசி, பிரமசரியன், கைம்பெண், இவர்கள் ஒழித்தல்வேண்டும். எ-று. காண்க.

உண்கலத்தினை நிலத்தின்மேல் வைத்தல் வேண்டுமென்பது கூர்மபுராணத்துட் கூறப்பட்டது. కూర్మపురాణే॥ “ పంచార్ద్రో భోజనంకుర్యాద్భూమౌపాత్రంనిధాయచ॥ ఉపవాసేనతత్తుల్యం మనురాహప్రజాపతిః”= கை கால்வாய்பூசி நிலத்தின்மேற் கலத்தையிட்டு உண்ணவேண்டும். அது உபவாசத்தோடொத்த புண்ணியமென்று சுவாயம்பு மனுகூறினர். எ-று. காண்க.

பிராணாகுதி செய்யுமளவே கலத்தை நிலத்தின்மேல் வைத்தல்வேண்டும் அதன்பின் பலகைமுதலிய ஆசனங்களின்மேல் வைத்துப் புசித்தல் வேண்டுமென்று வியாசர் கூறினர். వ్యాసః॥ “ న్యస్యపాత్రంతుభుంజీత పంచగ్రాసాన్మహామునే। శేషముద్ధృత్యభోక్తవ్యం శ్రూయతామత్రకారణం। విప్రుషాంపాదసంపర్కాత్ పాదచేలరజస్తథా। సుఖేనభుజ్యతేప్రాపిపిత్రర్థంతునలుస్యతే ” = உண்கலத்தினை நிலத்தின்மேலிட்டு ஐந்துகவளம் விழுங்கிய பின்னர் அக்கலத்தினை மேலெடுத்துக்கொண்டு மிக்கதைப் புசிக்கலாம் ஏனெனில்? நீர்த்துளி சோற்றினவிழ்கள் ஆடை, புறப்புகளிற்சிதறுமாகலினானும், காற்றாசு, ஆடைத்தூசு, அவ்வன்னத்திற் படுமாகலானுமென்க. உண்பதற்கும் அது ஒத்த

வாறுகவு மிருக்கும் என்னும் இன்ப நிலையின் பொருட்டேயாம். ஆயின் தென்புலத்தார்க்குரிய வுண்டியில் பாத்திரத்தினை நிலத்தின் மேற்றனே யிடவேண்டும் என்னும் விதிக்குக் குறைவில்லை. எ-று. காண்க. எனவே மந்திர நியமத்தோடு கூடிய பிராணாகுதிக்கும் சிராத்தவுண்டிக்குங்கலம் நிலத்தின்மே லிருக்கவேண்டும் இச்சையுணவுக்கு விதியின்மையின் சுகத்துக்குத்தக்கவாறு செய்யலாமென்றபடி.

கலத்திலிட்ட சோற்றினுக்கு நமஸ்காரம் செய்யவேண்டும் எனப் பிராமாண்ட புராணத்துட் கூறப்பட்டது. బ్రహ్మాణ్డపురాణే॥ "అన్నందృష్ట్వాప్రణమ్యాదౌ ప్రాంజలిఃకథయేత్తదా। అస్మాకంనిత్యమస్త్వేత దితిభక్త్యాథవందయేత్" = சாதத்தைநோக்கி முன்னர் வணங்கி யஞ்சலியத்தனாய் இஃதெமக்கு நித்திய மாகுகவென்று கூறிப்பத்தியோடும் தொழவேண்டும். எ-று. காண்க.

## பிராணாகுதிகற்பம்.

**கோபிலர்.** గోభిలః॥ "అథాతఃప్రాణాహుతికల్పోవ్యాహృతిభిర్గాయత్ర్యాభిమంత్ర్యఋతంత్వాసత్యేనపరిషించామీతి సాయం సత్యంత్వార్తేనపరిషించామీతిప్రాతరితి। అంతశ్చరతిభూతేషు గుహాయాంవిశ్వతోముఖః। త్వంయజ్ఞస్త్వం వషట్కారఆపోజ్యోతిరసోమృతం - త్వంబ్రహ్మత్వం ప్రజాపతిః బ్రహ్మభూర్భువస్సువరో మమృతోపస్తరణమసీత్యపఃపీత్వాదశహోతారం మనసానుద్రుత్య తద్వాదగ్నఞ్జీయాత్। ప్రాణాయస్వాహేతి గార్హపత్యమేవతేనాగ్నేజుహోతి - అపానాయస్వాహేత్యన్వాహార్యపచనమేవతేనజుహోతి - వ్యానాయస్వాహేత్యాహవనీయమేవతేనజుహోతి - ఉదానాయస్వాహేతి సభ్యమేవతేనజుహోతి - సమానాయస్వాహేత్యవసథ్యమేవతేనజుహోతి" = பின்பு பிராணாகுதிகற்பம் கூறப்படுகின்றது. வியாகிருதி, காயத்திரி இம்மந்திரங்களை மந்திரித்து அந்நத்தின்மீது நீரைத்தெளித்து, இரவில் "ఋతంత్వా" = ருதந்துவா, என்ற மந்திரத்தாலும், காலையில் "సత్యంత్వా" = சத்தியந்துவா, என்றமந்திரத்தாலும், உண்கலத்தை வலமாக நீர்வளையக்கட்டி, எல்லாவுயிர்களினுடைய இதயத்திலும் பிராணவடிவனாய் உலவுகின்றாய் என்பதுமுதலிய கடவுள்துதியே பொருளாகவுடைய "అంతశ్చరతి" = அந்தச்சரதி, என்றதுமுதல் வியாகிருதிப் பிரணவம் வரையுமுள்ளமந்திரத்தைத்தியானித்து "అమృతోపస్తరణమసి" = அமிர்தோபஸ்தரணமசி, என்ற மந்திரத்தைச் சொல்லி நீர்குடித்து, தசஹோ

துரு மந்திரங்களைக் கூறி அவ்வன்னத்தி லிருந்து சிறிது எடுத்து, பிராணன் முதலிய ஐந்து வாயுக்களுக்கும் சுவாஹாகாரத்தோடு உள்ளமாகிய வேள்விக்குண்டத்தில் பிராணனாகிய தீயில் அங்கமாகிய அந்த அவிசுவினை ஹோமஞ் செய்து தியானிப்பதே பிராணாக்கினி ஹோத்திர கருமமாம். ஐந்து பிராணனிடத்திலும் ஹோமஞ் செய்யப்பட்டது பஞ்சாக்கினியிலும் ஹோமஞ்செய்யப்பட்டதாகின்றது. எ-று. காண்க. பஞ்சாக்கினிமேலேகூறப்பட்டது.

அவ்வைந்து பிராண மந்திரங்களுக்கும் ஒவ்வொன்றின் றொடக்கத்திலும் பிரணவத்தைச் சேர்த்து முடிவில் சுவாஹாகாரத்தைச் சேர்த்து உச்சரிக்கவேண்டும் என்று சௌநகர் கூறினர். శౌనకః॥ "స్వాహాంతాగ్రప్రణవాద్యాశ్చ నామ్నామంత్రస్తువాయవః। జిహ్వయైవగ్రసేదన్నం దశనైస్తునసంస్పృశేత్" — பிரணவத்திற்கும் சுவாஹாகாரத்திற்கும் நடுவே பஞ்சப்பிராண நாம மந்திரங்களை நான்காம் வேற்றுமை யுருபோடு சேர்த்து அன்ன ஆகுதியை நாவினால் வாங்கி விழுங்கவேண்டுமே யன்றிப் பற்கள் படலாகாது. எ-று. காண்க.

நாவினால் வாங்கி விழுங்கும்பொழு துள்ள விசேடத்தினை அசுவமேதபர்வத்துள் கூறினர். ఆశ్వమేధికే॥ "యథారసంనజానాతి జిహ్వాప్రాణాహుతౌనృప। తథాసమాహితఃకుర్యాత్ ప్రాణాహుతిమతంద్రితః" — பிராணாகுதி யன்னச்சுவை நாவினுக்குத் தெரியாதபடி விரைவில் விழுங்கவேண்டும். எ-று. காண்க.

பிராணாகுதியின் பொருட்டு அன்னத்தை யெடுக்கும் நியமத்தைச்சௌனகர், கூறினர். శౌనకః॥ "తర్జనీమధ్యమాంగుష్ఠ లగ్నాప్రాణాహుతిర్భవేత్। మధ్యమానామికాంగుష్ఠైరపానేజుహుయాత్తతః। కనిష్ఠానామికాంగుష్ఠైర్వ్యానేతుజుహుయాత్తతః। మధ్యమానామికాంగుష్ఠై రుదానేజుహుయాత్తతః। సమానేసర్వహస్తేన సముదాయాహుతిర్భవేత్" — சுட்டுவிரல் நடுவிரல் பெரியவிரலால் பிராணனுக்கும் நடுவிரல் ஈற்றயல்விரல் பெருவிரலால் அபானனுக்கும், ஈற்றயல்விரல் கடைவிரல் பெருவிரலால் வியானனுக்கும், நடுவிரல்ஈற்றயல்விரல்ஒழியமற்றைச்சுட்டுவிரல் கடைவிரல் பெருவிரலால் உதானனுக்கும், ஐந்துவிரலாலும் சமானனுக்கும் ஆகுதிசெய்யவேண்டும். எறு. காண்க.

பரிஷேஜனஞ் செய்தபின்பு செய்யத்தக்கதைப் பௌடிய புராணத்துள் கூறப்பட்டது. భవిష్యత్పురాణే॥ "భోజనాత్కించిదన్నాగ్రం ధర్మరాజాయవైబలిం। దత్వాథచిత్రగుప్తాయ ప్రేతేభ్యశ్చేదముచ్చరేత్। యత్రక్వచనసంస్థానాం క్షుత్తృష్ణోపహతాత్మనాం। ప్రేతానాంతృప్తయేక్షయ్యమిదమస్తుయథాసుఖం"= பரிஷேஜனம் செய்தபின்பு கலத்தில் படைத்திருக்கும் அந்நத்திருந்து எடுத்து தருமனுக்கும் சித்திர குத்தனுக்கும், பலிகொடுத்து, எவ்விடத் தாயினும் பசிதாகத்தோடும் வருந்தியிருக்கும் பிரேதங்கட்குத் திருத்தியுண்டாகும்படி இந்தநீர் கெடாது வளர்க என்று, நீர்விட்டுப்பின்பு ஆபோசனம் கொள்ளவேண்டும். எறு. காண்க.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ "మహావ్యాహృతిభిస్త్వన్నం పరిధాయోదకేనతు। అమృతోపస్తరణమసీత్యాపోశానక్రియాంచరేత్" = வியாகிருதியால் நீரை அந்நத்தின்மேற் றெளித்து, "அமிர்தோப ஸ்தரணமஸி" என்று ஆபோசனம் கொள்ளவேண்டும். எறு- காண்க.

போதாயனர். బోధాయనః॥ "సర్వావశ్యకావసానేషుప్రక్షాళితపాణిపాదోప ఆచమ్యశుచౌ సంవృతేదేశేప్రాఙ్ముఖ ఉపవిశ్యఉద్ధృత మాహ్రియమాణంభూర్భువస్సువరోమిత్యుపస్థాయవాచంయ చ్ఛేదన్యత్సమానం మహావ్యాహృతిభిః ప్రదక్షిణమన్న ముదకంపరిషిచ్య సవ్యేనపాణినా విముంచన్నమృతోపస్తరణమసీత్యపః పీత్వా పంచాన్నేన ప్రాణాహుతీర్జుహోతి శ్రద్ధాయాంప్రాణే నివిష్టోమృతంజుహోమి శివోమావిశాప్రదాహాయ ప్రాణాయస్వాహా పానేవ్యాన ఉదానేసమానే నివిష్టఇత్యాదినా యథాలింగ మనుషంగ ఏవంపంచాన్నేన తూష్ణీంభూయవర్తయే త్ప్రజాపతింమనసాధ్యాయే దథాప్యుదాహరంతి "ఆసీనః ప్రాఙ్ముఖోశ్నీ యాద్వాగ్యతోన్నమ కుత్సయన్-ఆస్కందయంస్తన్మనాశ్చభుక్త్వాన్నంసముపస్పృశేదితి" సర్వభక్ష్యాపూపకందమూలఫలమాంసానాం దంతైర్నావద్యేన్నాతిసుహితం "అమృతాపిధానమసీ" త్యపఃపీత్వాచాన్తో హృదయదేశమభిమృశతి "ప్రాణానాంగ్రంథిరసిరుద్రోమావిశాంతకః, తేనాన్నేనాప్యాయస్వేతి," పునరాచమ్యదక్షిణ పాదాంగుష్ఠేపాణిం నిస్స్రావయ, "త్వంగుష్ఠమాత్రః పురుషాం గుష్ఠంచసమాశ్రితః, ఈశస్సర్వస్యజగతః ప్రభుఃప్రీణాతి విశ్వభుగితి" హుతానానుమంత్రణ మూర్ధ్వహస్తస్సమాచరే, "చ్ఛ్రద్ధాయాం ప్రాణేనివిశ్యామృతగ్ంహుతం ప్రాణమన్నేనాప్యాయస్వ శ్రద్ధాయామపానే నివిశ్యామృతగ్ం హుతమపాన మన్నేనాప్యాయస్వశ్రద్ధాయాం వ్యానేనివిశ్యామృతగ్ం హుతంవ్యానమన్నేనాప్యాయస్వశ్రద్ధాయాముదానేనివిశ్యామృతగ్ం హుతముదానమన్నేనాప్యాయస్వశ్రద్ధాయాగ్ం సమానేనివిశ్యామృతగ్ం హుతంసమానమన్నేనాప్యాయస్వేతి" య

థాలింగమనుషంగో "బ్రహ్మణిమఆత్మామృతత్వాయె" త్యాత్మానంయోజయేత్సర్వ క్రతు యాజినామాత్మయాజీ విశిష్యతే" = பிராணாகுதி ஹோத்திர வித்தையை யுபாசிக்கத்தக்க கற்பம்சுருக்கிக் கூறப்படுகின்றது. ஒருதலையாகிய கருமங்கள் முற்றியபின்பு கை கால் அலம்பி ஆசமனஞ் செய்து, சுத்தமாக்கி மேலும் சூழவும் மறைவு செய்யப்பட்டுள்ள இடத்தில் கிழக்குமுகமாக விருந்துகொண்டு, பரிமாறப்பட்டனவும் பரிமாறுவனவும் ஆகிய அவிஞ்ச மஹாவியாகிருதியோடு பிரணவமுடிவாக மந்திரித்துச் சுத்தஞ்செய்து பிரார்த்தித்து வாய்பேசாமல் இருக்கவேண்டும். ஏனையவெல்லாம் மேற்கூறப்பட்டதே. மஹா வியாகிருதிகளோடு நீரை அவ்வன்னத்தை வளையப் பரிஷேஜனம்செய்து, இடதுகையால் பாத்திரங்களை விடாமல் வலக்கரத்தால் "அமிர்தோபஸ்தரணமசி" என்ற மந்திரங்கூறி ஆபோசனம் பெற்றுக்கொண்டு அந்நத்தினால் ஐந்து தடவையில் விழுங்கத்தக்க அந்நத்தை எடுத்து பிராணனே அக்கினியென்ற பத்திநம்பிக்கையால் தொடங்கி அமுதவடிவாகிய அந்நத்தை ஹோமம்செய்கின்றேன். சூடாமலிருக்கும்பொருட்டு அந்நவடிவாகிய ஓ! சிவனே! வந்துட் புகுந்து சந்நிதிச்சம்பந்தத்தைத் தந்தருள் என்ற அருத்தமுடைய மந்திரங்கூறிப் பிராணதேவதையின் பொருட்டு சுவாஹா காரத்தோடும் ஹோமஞ் செய்து, அவ்வாறே, அபானதேவதைக்கும், வியானதேவதைக்கும், உதான தேவதைக்கும், சமான தேவதைக்கும் ஹோமஞ் செய்யவேண்டும். மேற்கூறிய பிரார்த்தனை மந்திரத்தைப் பிராணனுக்குக் கூறியதுபோலவே ஏனையவற்றிற்கு சேர்த்துக் கொண்டு அவ்விதமாக ஐந்து ஆகுதிகளால் ஹோமஞ் செய்து பின்பு சும்மாது, ஓராகுதியிட்டு பிரஜாபதியை மனத்திலே தியானிக்கவேண்டும். இவ்விடத்து, இருந்து கொண்டு கிழக்குமுகமாக அவ்வந்நத்தைப் பழுதுகூறுமலும், புறத்தெறியாமலும், வாயிலிடும்போது சிந்தாமலும் அதனிடத்து மனம் வைத்துப் புசிக்கவேண்டு மென்று பெரியர் கூறுவர். உண்ணத்தக்க எல்லா உண்டிகளும், சிற்றுண்டிகளும், கிழங்குவகைகளும், பழங்களும், மாமிசமும் இவைகளை பல்லால் கடித்துப் பறித்து தின்னலாகாது. (எனவே முறித்து சிறுதுணியாகச் செய்து புசிக்கவேண்டும். பல்லாற்கடித்தால் அச்சேடம் மறு

படியும் வாயில் வைக்கலாது). எல்லைகடந்த பெருண்டி தின்னலாகாது. பின்பு "അമൃതാപിധാനമസി" = "அமிர்தாபிதானமசி" என்ற மந்திரங்கூறி உத்தராபோசனம் கொள்ள வேண்டும். (அமிர்தத்தைப் பரப்பி அதன்மேல் ஹோமஞ்செய்து அதன் மேல் மறுபடியும் அமுதத்தை மூடியதாகப் பாவித்த பாவனையால் உண்டிக்குமுன் பூர்வாபோசனமும், பின்னுத்தராபோசனமும் உண்டாயிருக்கின்றது). அதன் பின்னர் ஆசமனஞ்செய்து, இதயத்தினைத்தொட்டு பிராணன் வெளிப்படாது உள்ளத்து மாட்டியிருக்கும் முடியாயிருக்கின்றீர் ஓ! உருத்திரரே! நீரே மிருத்தியு ஆதலின் இவ்வந்ந ஹோமத்தினால் நீர்திருத்தியடைந்தவராய்த் திருத்திசெய்யும். பசிவடிவத்தோடு உட்புக வேண்டா. என்னும் பொருளுடைய மந்திரத்தைச் செபித்து மறுபடியும் ஆசமனம்செய்து அந்தக்கைநீரை வலக்காற் பெருவிரல்மீது விழும்படி விடும்போது எல்லாவுலகுக்குந் தலைவனாகிய வள்ளல் பசிவடிவத்தால் உலகத்தை யெல்லாம் உண்டு சடராக்கினி வடிவனாய்ப் பெருவிரலங்குல அளவாக வயிற்றினுள்ளே பிரகாசித்துத் தன்னொளியால் இரத்தசஞ்சார வழியில் காற்பெருவிரலின் சிவநரம்பினைக் கலந்திருக்குந் தெய்வம் திருத்தியடைகின்றான். என்ற அருத்தமுள்ள மந்திரத்தைக் கூற வேண்டும். பின்பு, இந்தப்பிராணாக்கினி ஹோத்திர மென்னும் உண்டி வடிவமாகிய கருமத்தில் ஹோமஞ் செய்யப்பட்ட அன்னத்தைப்பற்றி, மேலே தோட்குச்சரியாக விரித்தெடுத்த கையுடையவனாய் மேற்கூறியபடி பிராணன் அக்கினியென்னும் நம்பிக்கையில் பிரவேசித்து அமுதம் ஹோமஞ் செய்யப்பட்டது. அன்னத்தினால் பிராணனைத் திருத்திசெய். என்ற அருத்தமுள்ள பிரார்த்தனை மந்திரங்களைப் பஞ்சப்பிராணனிடத்திலும் பஞ்சாக்கினி ஹோத்திர பாவனையோடு தனித்தனி அந்தந்தப் பெயர்க்குறிகளைச் சேர்த்துக்கொண்டு பிரார்த்தித்துச் செபித்து, "ബ്രഹ്മണി മ ആത്മാ അമൃതത്വായ" = எனது ஆன்மாமுத்தியின் பொருட்டுப் பிரமத்தினிடத்தில், என்ற பொருளுடைய மந்திரத்தைக் கூறி, ஆன்மாவைப் பிரமத்தினிடத்தி லொன்று செய்யவேண்டுவது. இவ்வகையாக நாடோறும் பிராணாக்கினி ஹோத்திர வித்தையை உபாசனைசெய்யும் வேள்வித்தலைவன் எல்லாவேள்வி

களையும் வேட்டவர்களுட் சிறந்தவனாக விருக்கின்றான். எ-று. காண்க.

## உண்டிச்சுவைமுறை.

விஷ்ணுபுராணம். విష్ణుపురాణే॥ "అశ్నీయాత్తన్మనాభూత్వా పూర్వంతుమధురంరసం। లవణామ్లౌతథామధ్యే కటుతిక్తాదికాంస్తతః। ప్రాగ్ద్రవం పురుషోశ్నీయాన్మధ్యేతుకఠినాశనం। అంతేపునర్ద్రవాశీతు బలారోగ్యేనముంచతి" = உண்டியினிடத்தே வைத்த மனத்தினை யுடையவனாய் முதலில் இனிப்பு= தித்திப்பினையும், நடுவே உவர்ப்பு, புளிப்பினையும், பின்னர், கைப்பு, கார்ப்பு = காரம் முதலியவற்றினையும், முதலில் நீர்த்தன்மையுள்ள பண்டங்களையும், நடுவே வலியபண்டங்களையும், முடிவில் மறுபடியும் நீர்வடிவாயுள்ள பண்டங்களையும் இவ்வாறு புசிப்பவன் வலுவையும் நோயில்லாமையும் தப்பாதுபெறுவன். எ-று. காண்க.

## உண்டியளவை.

உண்ணுங்கால் உண்ணத்தக்க அளவையை ஆபத்தம்பர் கூறினர். ఆపస్తంబః॥ "అష్టౌ గ్రాసామునేర్భక్ష్యాః షోడశారణ్యవాసినః। ద్వాత్రింశత్తుగృహస్థస్య హ్యమితంబ్రహ్మచారిణః" = முனிவர்கள் எட்டுக்கவளமும், காட்டிலுள்ளவன் பதினாறுகவளமும், இல்லறத்தான் முப்பத்திரண்டு கவளமும், கொள்ளவேண்டும். பிரமசாரியனுக்கு எல்லையில்லை. இவ்வகையாக, துறவி முதலியவர்க்கு உண்ணத்தக்க வுணவினளவு கணக்கிடப்பட்டது. எ-று. காண்க.

அசுவமேத பர்வத்திலும். అశ్వమేధికేపి॥ "వక్త్రప్రమాణపిండాంశ్చ గ్రసేదేకైకశఃపునః। వక్త్రాధికంతుయత్పిండ మాత్మోచ్ఛిష్టంతదుచ్యతే। పిండావశిష్టమన్నంచ వక్త్రనిస్సృతమేవయత్। యథాన్నేనవ్యథానస్యాత్తథాభుంజీతనిత్యశః"=ஒரு வாய்கொள்ளும் கவளம் ஒன்றொன்றாக ஒத்தபடி கொள்ளவேண்டும். வாய்கொண்டது போகக் கையில் மிகுந்திருந்த வுண்டி தன்னெச்சில் என்று கூறப்படும். அவ்வாறு மிக்க அந்நத்தையும் வாயிலிருந்து வெளியில் தவறிவிழுந்த அந்நத்தினையும் உண்ணலாகாது. உண்டால் சாந்திராயண விரதஞ் செய்யவேண்டும். எப்பொழுதும், கழிமிகுதி யாகவேனும், கழிசுருக்கமாகவேனும் உண்ணலாகாது. எவ்வளவாற் பசிப்பீடை யொழியுமோ? அவ்வளவேயுண்க. எ-று. காண்க.

## பரிகலச்சேடம்வைத்தல்.

விருத்தமனு. వృద్ధమనుః॥ "పీత్వాపోశనమశ్నీయాత్పాత్రదత్తమగర్హితం। భార్యాభృత్యదాసేభ్య ఉచ్ఛిష్టంశేషయేద్ద్విజః" = இருபிறப்பாளன் சிறிது நீரைக்குடித்துப் பின்பு உண்கலத்திற் படைத்திருக்கப் பட்ட நல்ல அந்நத்தினைப் புசிக்கவேண்டும். மனைவிக்கும் பணியாளர்க்கும், அடிமையர்க்கும் எச்சிலைமிருத்து வைத்தல் வேண்டும். எறு. காண்க.

## அச்சேடம்கூடாதவிடயம்.

புலத்தியர். పులస్త్యః॥ "భోజనంతునని శ్శేషం కుర్యాత్ప్రాజ్ఞః కథంచన। అన్యత్రదధిసక్త్వాజ్యం ఫలంక్షీరంచమధ్వపః" = தயிர், பொரிமாவு, நெய், பழம், பால், தேன், நீர், இவைகளை அறிவுடையோன் எப்பொழுதும் சேடப்படுத்தி வையாது புசித்தல்வேண்டும். எனையவற்றுட் சிறிதுவையாது புசிக்கலாகாது. எறு. காண்க.

## உண்ணுங்காலஅளவை.

மனு. మనుః॥ "సాయంప్రాతర్ద్విజాతీనా మశనంశ్రుతిచోదితం। నాంతరా భోజనంకుర్యా దగ్నిహోత్ర సమోవిధిః" = இருபிறப்பாளர்க்குக் காலைமாலை உண்ணுதல் வேதத்தால் விதிக்கப்பட்டது. இடையே புசித்தலாகாது. ஏனெனில்? உண்ணுதல் வேள்வித் தீக்கருமத்தோடு ஒத்தவிதியாக விருக்கும். எறு. காண்க. எனவே அகாலத்துள் புசிக்கலாகாது என்றபடி.

கௌதமர். గౌతమః॥ "సాయంప్రాతస్త్వన్నమభి పూజితమనిన్దన్భుంజీత" மாலையிலேனும்காலையிலேனும் நல்லஉண்டியைப் பழியாதுபுசிக்க வேண்டும். எறு. காண்க.

மேற்கூறிய வெல்லாவுரைகளாலும் கூறப்பட்டுள்ள உண்டியினை "యోవేష్టితశిరాభుఙ్క్తే" என்றமூலத்துள் அநுவாதஞ் செய்து, தோஷத்தைக் கூறுமுகத்தால் விலக்குகின்றார். (உண்ணுதலைச் செய்யவேண்டு மென்பது சுருதிமிருதிகளில் விதியில்லை. இச்சையால் உண்டிகிடைத்த வழி எவ்வாறு புசித்தால் குற்றம்வருமோ? அதனை யுணர்த்தி விலக்கப்பட்டுள்ளது. என்னில் பிரமாணமொழிகளுக்கு உண்டிவிடயத்தில் நிடேதத்தில் கருத்தன்றி விதியில் கருத்தில்லை என்பது).

இந்த நிடேதம், இன்னும் ஒழிக்கத்தக்கன வெல்லாவற்றிற்கும் உபலக்கணமாக விருக்கின்றது. (எனவே, மூலத்துள் சிலவற்றை யாகாதென மறுத்திருக்கும் மொழி, இன்னு மாகாதன வெவையெவை, யவற்றை யெல்லாம் விட்டொழியவேண்டுமென்பதுகருத்து).

உண்டிவிடயத்தி லுள்ள இன்னுஞ் சிலவிலக்குகளைப் பிரமபுராணத்துட் கூறப்பட்டது. బ్రహ్మపురాణే॥ "యస్తుపాణితలేభుఙ్క్తే యస్తు ఫూత్కారవాయునా। ప్రసృతాంగులిభిర్యశ్చ తస్యగోమాంసవచ్చతత్। నాజీర్ణేభోజనంకుర్యాత్ కుర్యాన్నాతిబుభుక్షితః। హస్త్యశ్వరథయానోష్ట్రమాస్థితో నైవభక్షయేత్। శ్మశానాభ్యంతరస్థోవా దేవాలయగతోథవా। శయనస్థోనభుంజీత నపాణిస్థంనచాసనే। నార్ద్రవాసానార్ద్రశిరా నచాయజ్ఞోపవీతవాన్। నప్రసారితపాదస్తు పాదారోపితపాణిమాన్। స్వబాహుసవ్యసంస్థశ్చ నచపర్యంకమాశ్రితః। నవేష్టితశిరాశ్చాపి నోత్సంగకృతభోజనః। నైకవస్త్రోదృషన్మధ్యే సోపానత్కస్సపాదుకః। నచర్మోపరిసంస్థశ్చ చర్మవేష్టితపార్శ్వవాన్। గ్రాసశేషంచనాశ్నీయాత్ పీతశేషంపిబేన్నచ। శాకమూలఫలేక్షూణాందన్తైశ్ఛేదైర్నభక్షయేత్। బహూనాంభుంజతాంమధ్యే నచాశ్నీయాత్త్వరాన్వితః। వృథానవిసృజేదన్నం నోచ్ఛిష్టఃకుత్రచిద్వ్రజేత్। పాఠాంతరం। నోచ్ఛిష్టం స్పందయేత్క్వచిత్"= யார் அங்கையி லுண்கின்றானோ? யார் ஆகாரத்தினையூதித் தின்பவனோ? யார் ஆகாரத்தைக்கையிலெடுத்துக்கைவிரித்துவளைத்து நக்கித்தின்பானோ? அவனுக்கு அந்தவுண்டி பசுவின் மாமிசம் போலாம். உண்டது சமியாதபோது = அசீரணத்தில் புசிக்கலாகாது. (அசீரணமாகத் தக்கபொருளையும் புசிக்கலாகாதென்பதூஉங் கருத்தாம்). பசியெடுத்தவன் மிகப் புசிக்கலாகாது. (மிகப்பசித்தும் புசிக்கலாகாது. எனவே மிகவும் பசித்திருக்கலாகாதென்பது கருத்து). யானை, குதிரை, வண்டி, ஒட்டகம் முதலிய வாகனத்தின்மே லிருந்தும் புசிக்கலாகாது. சுடுகாட்டிலும், மனைக்குப் புறத்திலும், தேவாலயத்திலும், படுக்கைமீதும் இருக்கும்போது புசிக்கலாகாது. கையிலும், இருக்கும் ஆசனத்திலும் கிடப்பனவற்றை யெடுத்துப் புசிக்கலாகாது. (கையில் உண்டைசெய்து இடும்படி வாங்கித் தின்னலாகாது. எனவுங்கருத்து). ஈரவுடையுடுத்தும், ஈரத்தலையோடும், பூணூலின்றியும், காலைநீட்டிக் கொண்டும், கால்மேல் வைத்துக்கொண்டும், இடதுகையூன்றியும், கட்டிலின்மே லிருந்துகொண்

டும், தலைமேலாடைசுற்றியும், யார்தொடைமீது இருந்து ஆயி னும், ஒற்றை யாடையோடும், கல்லின்மீதும், படியின்மீதும், காலில் பாதக்குறடு முதலிய தரித்தும், தோலின்மீதிருந்தும், தோல்போர்த்தும், உண்ணலாகாது. வாயில்வைத்த மீதியையும் தின்னலாகாது. குடித்து மீதியானதைக் குடிக்கலாகாது. கறி வகை, கிழங்கு, பழம், கரும்பு முதலியவற்றினை பல்லால்கடித்து பறித்துத் தின்னலாகாது. (எனவே, சிறுதுண்டமாகச் செய்து தின்னவேண்டு மென்பது). பலரோடு நடுவிருந்து புசிப்பவன் விரைந்து புசிக்கலாகாது. வீணே சோற்றினை யெறியலாகாது. பிறன் எச்சிலைத் தின்னலாகாது. எச்சிலோடு எங்கும் போகலா காது. எச்சிலை எங்கும் எறியலாகாது. எ-று. காண்க.

பிரகற்பதி. బృహస్పతిః॥ "నస్పృశేద్వామహస్తేన భుంజానోన్నంకదాచన। నపాదౌనశిరోవస్తిం నపదాభాజనంస్పృశేత్" = புசித்திருப்பவன் இடது கையால் அந்நத்தினை யொருபோதும் தொடலாகாது. கால், தலை, ஆண்குறி இவற்றினைத் தொடலாகாது. உண்கலத்தின் மேல் கால்படலாகாது. எ-று. காண்க.

உசனர். ఉశనాః॥ "నాదత్వామృష్టమశ్నీయా ద్బహూనాంచైవపశ్యతాం। నాశ్నీయుర్బహవశ్చైవ తథాచైకస్యపశ్యతః" = பலபேர் பார்த்திருக்கையில் அவர்கட்குக் கொடாமல் நல்லவுணவுகளை யொருவனே புசிக்க லாகாது. ஒருவன் பார்த்திருக்கும்போதும் அவனுக்குக் கொ டாமலே பலரும் தின்னலாகாது. எ-று. காண்க.

ஆதித்தியபுராணம். ఆదిత్యపురాణే॥ "నోచ్ఛిష్టంగ్రాహయేదాజ్యం జగ్ధశిష్టంచసంత్యజేత్। శూద్రభుక్తావశిష్టంతు నాద్యాద్భాండస్థితంత్వపి" = எச்சில் நெய்யை வாங்கிக் கொள்ளும்படி செய்யலாகாது. உண்டுமிக்க தை விட்டுவிடவேண்டும். சூத்திரனுக்கு உண்ணும்படி வைத்து மிக்கது பாத்திரத்துள்ளே யிருந்ததா மாயினும் அதனை விட்டு விடவேண்டும். எ-று. காண்க.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ "నార్ధరాత్రేనమధ్యాహ్నే నాజీర్ణేనార్ద్రవస్త్రధృత్। నభిన్నభాజనేచాద్యా న్నభూమ్యాంనచపాణిషు। నోచ్ఛిష్టంఘృతమాదద్యాన్న మూర్ధానంస్పృశన్నపి। నబ్రహ్మకీర్తయన్వాపినని శ్శేషంనభార్యయా। నాన్ధ్యాగారేనచాకాశే నచదేవాలయాదిషు." = ஒத்த நடுஇராவிலும், நடுப்பகலிலும், உண் டது சமியாத போதும், ஈரவுடையுடுத்தும், ஓட்டைக் கலத்தி

லும், நிலத்திலும், கையிலும், உண்ணலாகாது. எச்சில் நெய் வாங்கலாகாது. தலையைத் தொட்டுக்கொண்டும், வேதமோதிக் கொண்டும், கலத்தில் மீதியாகாதபடி தொடைத்தும், மனைவி யோடும், உண்ணலாகாது. அயலார் மனையிலும், வெளியிலும், தேவாலய முதலியவற்றுள்ளும், புசிக்கலாகாது. எ-று. காண்க.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "నభార్యాదర్శనేశ్నీయా నైకవా సానసంస్థితః" = மனைவி பார்த்திருக்க உண்ணலாகாது. ஒற்றை யாடையோடு முண்ணலாகாது. நிலத்தின்மே லிருந்தும் புசிக்க லாகாது. "నచోత్థితః" என்றது பாடமாயின் நின்று உண்ணலா காது. எ-று. காண்க.

அற்றேல். బ్రాహ్మణ్యాసహయోశ్నీయా దుచ్ఛిష్టంవాకదాచన। నతస్యదోష మిచ్ఛంతి నిత్యమేవమనీషిణః। ఉచ్ఛిష్టమితరస్త్రీణాంయోశ్నీయాద్బ్రాహ్మణఃక్వచిత్। ప్రా యశ్చిత్తీసవిజ్ఞేయ స్సంకీర్ణోమూఢచేతనః" = எந்தவேதியன் வேதியமாதி னோடு எப்போதாயினும் உண்ணுகின்றனோ? எச்சிலுண்கின் றனோ? அவனுக்குக் குற்றமுண்டென்று அறிவுடையோர் நித் தமாக நினைப்பதில்லை. வேற்று வருணமாதோடு எந்தவேதியன் எச்சில்மயங்க உண்ணுகின்றனோ? அந்தமூடன் சாங்கரியதோ ஷம் = கலப்புக்குற்ற முடையவனு மாதலின் பிராயச் சித்தஞ் செய்துகொள்ளத் தக்கவனென்று உணரப்படும். என்ற இதனல் வேதியன் தன்சாதி மனைவியோடு புசித்தால் குற்றமில்லையென்று ஆகின்றதே யெனில்?

அற்றன்று. அந்தவிதி, எவ்விதத்தும் குற்ற மில்லையே யில் லையென்னும், கருத்துடைய தல்ல. ஏனெனில்? "కదాచన"= எப்போதாயினும், என்று அவ்விடத்தே தானே கூறப்பட்டிருத் தலின். அதனனே ஆதித்திய புராணத்துள்ளும் கூறப்பட்டது. ఆదిత్యపురాణే॥ "బ్రాహ్మణ్యాభార్యయాసార్ధం క్వచిత్భుంజీతవాధ్వని। అధోవర్ణస్త్రీ యాసార్ధం భుక్త్వాపతతితత్క్షణాత్" = அந்தணன் தன்சாதி மனைவியோ டும் வழி நடையிலெப்போதாயினும் எங்காயினும் உண்டாலும் உண்பன். அன்றித்தாழ்ந்த சாதி மாதரோடு உண்டால் அப் பொழுதேபதிதன் ஆகின்றான். எ-று. காண்க.

மனு. మనుః॥ "నపిబేన్నచభుంజీత ద్విజస్సవ్యేనపాణినా। నైకహస్తేనచజలం శూద్రేణావర్జితంపిబేత్। పిబతోయత్ర తత్తోయం భోజనేముఖనిస్సృతం। అభోజ్యంతద్భవే

దన్నంభోక్తా భుంజీతకిల్బిషం। పీత్వావశేషితంతోయం బ్రాహ్మణఃపునరాపిబేత్। పిబేద్యది హితన్మోహా ద్ద్విజశ్చాంద్రాయణంచరేత్ " = இருபிறப்பாளன் இடதுகை யால் உண்ணலாகாது. குடிக்கலாகது. ஒற்றைக்கையால் நீர் குடிக்கலாகாது. சூத்திரனால் வாக்கப்பட்டநீரைக் குடிக்கலாகாது. வாயிலிருந்து மொழுகிய நீர் உண்ணத்தக்க அந்நத்தின்மீது பட்டால் அது எச்சிலாமாதலின் அதனை யுண்ணலாகாது. இன்னுற்பாவத்தையனுப்விப்பவன். வேதியன், பிறர்குடித்துமிக்கநீரை மறுபடியும் குடிக்கலாகாது. அறியாது குடித்தால் சாந்திராயணவிரதஞ் செய்யவேண்டும். எ-று. காண்க.

## நீர்குடித்தல்.

அத்திரி. అత్రిః॥ " తోయంపాణినఖస్పృష్టం బ్రాహ్మణోనపిబేత్క్వచిత్। సురాపానేనచసమ మిత్యేవంమనురబ్రవీత్ " = வேதியன் கைவிரல் நகம்பட்ட நீரை யாண்டுங் குடிக்கலாகாது. அதுகள்ளினைக் குடித்தலோடொக்குமென மனு கூறினர். எ-று. காண்க.

சாதாதபர். శాతాతపః॥ " ఉద్ధృత్యవామహస్తేన యత్తోయంపిబతిద్విజః। సురాపానేనతత్తుల్యం మనురాహప్రజాపతిః " = இடதுகையினா லெடுத்து இருபிறப்பாளன் நீர்குடித்தால் அது கள்ளைக் குடித்தலோடொக்குமென்று சுவாயம்பு மனு கூறினர். எ-று. காண்க.

அசுவமேதபர்வம். ఆశ్వమేధికే॥ " పానీయానిపిబేద్యేన తత్పాత్రంద్విజసత్తమః। అనుచ్ఛిష్టంభవేత్తావ ద్భూమౌయావన్ననిక్షిపేత్ " = இருபிறப்பாளன் நீர்குடித்த பாத்திரத்தை நிலத்தின்மேல் வைக்கும் வரையில் எச்சிலல்ல. எ-று. காண்க.

## பந்திபோசனம்.

சங்கர். శంఖః॥ " నానియుక్తోగ్ర్యాసనస్థఃప్రథమమశ్నీయా న్నాధికందద్యాన్నప్రతిగృహ్ణీయాత్. " = பிறர்வேண்டுகோ ளில்லாமலே தான்உயர்ந்த ஆசனத்தி லிருக்கலாகாது. முன்பாக உண்ணலாகாது. தன்னுடைய தரத்துக்கு மேலாகக் கொடுக்கலாகாது. அவ்வாறே வாங்குதலுமாகாது. எ-று. காண்க.

சாதாதபர். శాతాతపః॥ " అగ్ర్యాసనోపవిష్టస్తు యోభుంక్తేప్రథమంద్విజః। బహూనాంపశ్యతాంసోజ్ఞః పఙ్క్త్యాహరతికిల్బిషం " = உயர்ந்த ஆசனத்தி

விருந்து பலர் பார்க்கும்போது வரிசையில் எந்த விருபிறப்பாளன் முன்னதாகப் புசிக்கின்றானோ? அந்தமூடன் அந்தவரிசையி லுள்ளார் பாவத்தை யடைகின்றான். எறு. காண்க.

கோபிலர். గోభిలః॥ "ఏకపఙ్క్త్యుపవిష్టానాం విప్రాణాంసహభోజనే।యద్యేకోపిత్యజెత్పాత్రం నాశ్నీయురితరేపునః। మోహాద్భుఙ్క్తేతుయస్తత్ర ససాంతపనమాచరేత్। భుంజానేషుతువిప్రేషు యస్తుపాత్రంపరిత్యజేత్। భోజనేవిఘ్నకర్తాసౌ బ్రహ్మహాపిసౌచ్యతే" = ஒரேபந்தியில் உடன் புசித்திருக்கும் வேதியர் நடுவே ஒருவன் உண்கலத்தை விடுத்தானாயின் அனைவரும் உண்ணுதலை விட்டுவிடுவார்கள். தெரியாது யாவனாயினும் புசித்தால்? அவன் சாந்தபனம் என்னும் கிருச்சிரத்தைப் பிராயச் சித்தமாக அனுட்டிக்க வேண்டும். பந்தியில் வேதியர் புசித்திருக்கும்போது யார் தன் உண்கலத்தைவிட்டு எழுந்திருக்கின்றானோ? அவன் எல்லார் உண்டிக்கும் தடைசெய்தவனாகின்றான். அக்காலத்திலவன் பிரமகத்தி செய்தவனாகவுஞ் சொல்லப்படுகின்றான். எறு. காண்க.

## மௌனபோசனம்.

வாய் பேசாமையைக் கூறத்தொடங்கிப் புராணத்துள். పురాణే॥ "స్నానస్యతోవరుణశ్శక్తిం జుహ్వతోగ్నిశ్శ్రియంహరేత్। భుంజతోమృత్యురాయుష్యం తస్మాన్మౌనంచరేత్త్రిషు" = நீராடும்பொழுது பேசினால் வருணன் சத்தியைக் கெடுக்கின்றான். வேள்விசெய்யும்போது பேசினால் அக்கினிசெல்வத்தைக் கொண்டுபோய் விடுகின்றான். உண்ணும்போது பேசினால் மிருத்தியுதெய்வம் ஆயுளைக் கொண்டு போகும். அதனால் அம்மூன்று கருமங்களிலும் வாய் பேசலாகாது. மௌனமனுட்டிக்க வேண்டும். எறு. காண்க.

ஆயின். "మౌనవ్రతంమహాకష్టం హుంకారేణాపినశ్యతి। తథాసతిమహాన్దోషస్తస్మాత్తన్నియతశ్చరేత్" = மோனவிரதம் மிகவருத்தமானது ஏனெனில்? உங்காரஞ் செய்தாலும் கெடுகின்றது. அதனாற் பெருங் குற்றம் நேரிடுகின்றது. ஆதலால் அந்தவிரதத்தினை மஹாநியமமுடையவன் செய்யவேண்டும் என்ற இவ்வத்திரி யுரையால் மோன விரதத்தினைச் சத்தியுள்ள அதிகாரியே செய்யவேண்டும் என்றாமே? அங்ஙனமன்று. அவ்வுரை காஷ்டம் = மரத்

துண்டம்போலும் ஒலித்தரமே யில்லாமல் இருக்கத்தக்க மோன விரத விசேடத்தினைக் குறித்துக் கூறியது. என்றுணர்க.

இந்தவாய் பேசாமை ஐந்து பிராணாகுதி கொள்ளும்வரையிலும் கூறிய விடயம் என்று விருத்தமனு கூறினர். వృద్ధమనుః॥ "అనిద్దన్భుక్షయేన్నిత్యం వాగ్యతోన్నమకుత్సయన్। పంచగ్రాసాన్మహామౌనం ప్రాణాద్యాప్యాయనంమహత్" = உண்ணுமிடத்தில் முதற்கண் ஐந்துகவளம் புசிக்கிறவரையில் பிராணாதி தேவதைகளைத் திருத்திசெய்வது பெருங்கருமமாதலால் அப்போது அன்னத்தைப் பழியாது வாய்பேசாது அமைதியோடும் யாரையும் குற்றங்கூறாது புசிக்கவேண்டுவதுஙித்தமானவிதியாம். எ-று. காண்க.

அசுவமேதம். ఆశ్వమేధికే॥ "మౌనీవాప్యథవామౌనీ ప్రహృష్టస్సంయతేంద్రియః। భుంజీతవిధివద్విప్రో నోచ్ఛిష్టోనైవ్యన్నభాషయేత్"= மோனவிரதமுடையவனாகவாவது, இல்லாதவனாகவாவது, இந்திரியங்களை வென்றுகளிப்போடும் இருபிறப்பாளன் விதிப்படி புசிக்கவேண்டும். எச்சின் மயங்கியுள்ள வாயினரோடும் பேசலாகாது. (எனவே, புசிப்பவர்கள்ஒருவரோடொருவர் பேசலாகாது). எ-று. காண்க.

## அன்னம்பரிமாறல்.

சாதாதபர். శాతాతపః॥ "హస్తదత్తానిచాన్నాని ప్రత్యక్షలవణంతథా। మృత్తికాభక్షణంచైవ గోమాంసాశనవత్స్మృతం" = கையால்பரிமாறப் பட்ட சோறுமுதலிய வற்றையும் வேறுபதார்த்த வகைகளோடு கூடாது நேராகவிருக்கின்ற வுப்பினையும், மண்கட்டியையும், உண்பது கோமாமிசத்தை யுண்பதனோடொக்கும். எ-று. காண்க.

பைட்டீநசி. పైఠీనసిః॥ "లవణంవ్యంజనంచైవ ఘృతంతైలంతథైవచ। లేహ్యంపేయంచవివిధం హస్తదత్తంనభక్షయేత్"= உப்பு, கறிவகை, நெய், எண்ணெய், முதலிய வற்றினை கையாற் பரிமாறினுற் புசிக்கலாகாது, எ-று. காண்க.

இதுவுமது. "దర్వ్యాదేయంఘృతాన్నంచ సమస్తవ్యంజనానిచ। ఉదకంయచ్చపక్వాన్నంయోనదర్వ్యాప్రయచ్ఛతి। సభూరిణమహాసురాపశ్చ స్తైయాచగురుతల్పగః"= நெய், சோறு, கறிவகை, நீர், பக்குவப்பட்ட மற்றவுண்டிகளையும் யார் கரண்டியால் படைப்பதில்லையோ? அவன் மஹாபாதகஞ்செய்தவனாவான். எ-று. காண்க. (இது சாதாரணவுணவின்

பொருட்டுப் பரிமாறும்விடயம். விசேட போசனத்தில் மந்திர விதியோடு பாகப்பட்ட வுண்டியைக் கையால் படைக்க வேண்டுவதாக அவியின்முக்கியகருமத்தில் சான்றோர்வழக்கால் உணரப்படுகின்றது. அன்றியும் சிலபதார்த்தங்களைக் கையினாலும் சிலவற்றைக் கரண்டியாலும் படைக்கவேண்டும். உண்ணுவதற்கு முன்பரிமாற வேண்டிய முறைவேறு. உண்ணுங் காற்பரிமாறு முறைவேறு. அவற்றினைக்குறித்துப் புராணவாக்கியங்கள் மிக விருத்தலின் அவரவர்கள் ஆசாரவழக்கங்களே விதியாகவிருக்கின்றது).

## உண்ணும்போது பார்க்கலாகாதன.

அசுவமேதம். ఆశ్వమేధే॥ "ఉదక్యామపిచండాలం శ్వానంకుక్కుటమేవచ। భుంజానోయదిపశ్యేత్తు తదన్నంచపరిత్యజేత్"=புசித்துக்கொண்டிருப்பவன் கைவிலக்க மானவளையும், சண்டாளனையும், நாயினையும், கோழியையும், பன்றியையும், கழுதை முதலியவற்றினையும் கண்டால் அந்த அன்னத்தை விடவேண்டும். எ-று. காண்க.

## அரக்கவுணவு.

அசுவமேதம். ఆశ్వమేధే॥ "కేశకీటోపపన్నంచ ముఖమారుతవీజితం। అన్నంతద్రాక్షసంవిద్యాత్తస్మాత్తంపరివర్జయేత్" = மயிர், புழு, கலந்துள்ளதும், வாயாலூதப்பட்டது மாகிய இவை இராக்கத வுண்டியென்றுணரத்தக்கது. அதனாலவற்றை யொழிக்க வேண்டுவது. எ-று. காண்க.

காத்தியாயனர். కాత్యాయనః॥ "చండాలపతితోదక్యా వాక్యంశ్రుత్వా ద్విజోత్తమః। భుంజీతగ్రాసమాత్రంతు దినమేకమభోజనం" = சண்டாளர், பதிதர், கைவிலக்கமான மாதர்இவர்களுடைய வார்த்தை செவியிற்படும்போது ஒருகவளத்தையாவது வேதியன் உண்டால் ஒருநாள்முழுவதும் பட்டினி கிடக்கவேண்டும். எ-று. காண்க.

கௌதமர். గౌతమః॥ "కాలాహళధ్వనిమంత్రాణాం శ్చక్రస్యోలూఖలస్యచ। విశేషాంనినదంయావ త్తావత్కాలమభోజనం" = காளமுதலிய ஊதுகருவி, ஏந்திரம், சக்கரம், உரல், இவற்றின் சத்தம் எதுவரையில் கேட்கப்படுகிறதோ? அதுகாலம்வரையில் உண்ணுதலில்லையாம் எ-று. இயந்திரம் என்பது ஏந்திரமென மருவிற்று. அதுஅரிசி

முதலியனமாவுசெய்யுங்கருவி. சக்கரம்என்பதுவண்டி முதலியவற்றுளாயினும் ஏனைய கருவிகளிலாயினும் உள்ளனவெனக்கொள்க.

## போசனபந்திதோஷம்.

கௌதமர். గౌతమః॥ "అప్యేకపఙ్క్త్యాన్నాశ్నీయా ద్బ్రాహ్మణైస్స్వజనైరపి। కోహిజానాతికింకస్య ప్రచ్ఛన్నంపాతకంభవేత్। ఏకపఙ్క్త్యుపవిష్టానాం దుష్కృతంయద్దురాత్మనాం। సర్వేషాంతత్సమంతావ ద్యావత్పఙ్క్తిర్నభిద్యతే" = அந்தணர்க ளுடனேயாயினும், தன்சுற்றத்தாரோடாயினும் ஒரேபந்தியிலிருந்து புசிப்பதற்கு வேதியன் போகலாகாது. ஏனெனில்? வெளிப்படாத பாதங்களை இரகசியமாக யார் என்னை செய்துள்ளாரோ? அதனை யாவனறிவன். பந்திபேதமாகிற வரையில் ஒரேபந்தியில் சேர்ந்த பாவிகளுடைய பாவம் அந்தப்பந்தியிலிருப்பவர்கள் அனைவர்க்கும் ஒத்தபடியுண்டாம். எ-று. காண்க.

## பந்திபேதவகை.

கௌதமர். గౌతమః॥ "అగ్నినాభస్మనాచైవ స్తంభేనసలిలేనవా। ద్వారేణచైవమార్గేణ పఙ్క్తిర్భిద్యేతపఞ్చధా" = நெருப்பு, சாம்பல், சிறுசுவர்க்கட்டை, தூண், நீர், வாயிற்படி, நடைவழி, இவைகள் நடுவிருக்குமாயின், அப்புறத்த தொருபந்தி, இப்புறத்த தொருபந்தி என அறிவுடையோர் கூறுவர். எ-று. காண்க.

இயமன். యమః। "ఉదకంచతృణంభస్మ ద్వారంపంథాస్తథైవచ। ఏభిరంతరితంకృత్వా పఙ్క్తిదోషోనవిద్యతే" = ஜலம், புல், வெண்ணீறு, வாயிற்படி, நடக்கும்வழி, இவைகளைக் குறுக்கிட்டால் பந்திதோஷ மில்லையாம். எ-று. காண்க.

மூலத்துட் கூறப்பட்ட "యోవేష్టితశిరాభుఙ్క్తే" = என்றதற்கு இலக்கியார்த்தமாகிய நிடேதங்களைக் குறித்த நியமவிசேடங்களிவ்வகையாகக் கூறியவாறுயிற்று. இனி "యోభుఙ్క్తేదక్షిణాముఖః" தென்முகமாகப் புசிக்கலாகாதென்று மூலத்துட் கூறியிருப்பது நித்தமுண்ணுதலின் விடயம், ஏனெனில்? காமிய வுண்டியில் தென்முகமாகப் புசிக்கலாமென்று விதிக்கப்படுதலின்.

## காமியவுண்டி.

அங்ஙனம் மனுவிதித்தனர். మనుః॥ "ఆయుష్యంప్రాఙ్ముఖోభుఙ్క్తే యశస్యందక్షిణాముఖః। శ్రియంప్రత్యఙ్ముఖోభుఙ్క్తే ఋతంభుఙ్క్తఉదఙ్ముఖః" = கிழக்கு

முகமாக இருப்பவன் ஆயுளையும், தென்முகமா யுள்ளவன் புகழினையும், மேற்றிசைமுகமாயுள்ளவன் செல்வத்தினையும், வடக்குமுகமாயுள்ளவன் சத்தியத்தினையும் உண்பவனுவன். எ-று. காண்க.

## உண்டிக்குவிலக்காகியதிசை.

கோபிலர். గోభిలః॥ "ప్రాఙ్ముఖాన్నాని భుంజీత ఉదఙ్ముఖో వా ప్రత్యఙ్ముఖో వా యథాసుఖం। ఉత్తరంపితృకార్యేచ దక్షిణాంతు వివర్జయేత్" = வேதியன் கிழக்கு, மேற்கு, வடக்கு, என்னுமிவற்றுள் அனுகூலப்பட்ட திசை யொன்றின் முகமாக விருந்து புசிக்கலாம். தென்புலத்தார் கருமத்தில் வடமுகமாக விருந்து புசிக்கவேண்டும். தென்றிசையைவிட்டு விடவேண்டும். எ-று. காண்க.

இதுவுமது. "వామపాదకరోభుఙ్క్తే యశ్చస్థిత్వాభుఙ్క్తే తైస్సర్వైర్యద్భుక్తం తద్రక్షాంసిభుంజతే" = இடதுகாலின்மீது கைவைத்துக்கொண்டு யார் உண்ணுகின்றானே? யார் நிலத்தின்மீ திருந்தாயினும், நின்றாயினும், புசிக்கின்றானே? அவனோடு யார் புசிக்கின்றார்களோ? அந்த உண்டியை யெல்லாம் அரக்கர் தின்று போகின்றார்கள். எ-று. காண்க. (எனவே, அவர்களுக்குப் பிராணுக்கினி ஹோத்திர பலன் வருவதில்லை அது அரக்கரையடைகின்றது என்றபடி).

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ "యోభుఙ్క్తేవేష్టితశిరాః యశ్చభుఙ్క్తేవిదిఙ్ముఖః। సోపానత్కశ్చయోభుఙ్క్తే సర్వంవిద్యాత్తదాసురం" = யார் தலைக்கு வேஷ்டிசுற்றிக்கொண்டு புசிக்கின்றானே? கோணத்திசைகளின் எதிர்முகமாகப் புசிக்கின்றானே? பாதரக்ஷை பூண்டு புசிக்கின்றானே? அவையெல்லாம், அசுரபோசனமென் றுணர்க. எ-று. காண்க.

## உண்டபின்செய்வன.

விருப்பத்தா லுண்டாகிய உண்டிவிதிக்கு உத்தராங்கமாகிய எச்சில் நீர்விடுதன் முதலியவற்றைச் செய்யவேண்டு மெனத் தேவலர் கூறினர். దేవలః॥ "భుక్త్వోచ్ఛిష్టంసమాదాయ సర్వస్మాత్కించిదాచమన్। ఉచ్ఛిష్టభాగధేయేభ్యస్సోదకంనిర్వపేద్భువి" = உண்டபின் எல்லாப் புதார்த்தங்களிலுஞ் சிறிது சிறிது எச்சில்செய்து எடுத்துக்கொண்டு நீரோடு உச்சிட்ட பாகதேயர் பொருட்டு நிலத்தின் மேல் வடியும்படி உருட்டிவைத்தல் வேண்டும். எ-று. காண்க.

(உச்சிட்ட பாகதேயர். எச்சிலே செல்வமாக முடையவர். எனவே அதனுற் பிருத்தியடைவோர்).

உச்சிட்டதான மந்திரம் தேவலராற் கூறப்பட்டது. మంత్రః॥ " రౌరవేపుణ్యనిలయే పద్మార్బుదనివాసినాం। అర్థినాముదకందత్తం (పాఠాంతరం - ప్రాణినాంసర్వభూతానాం) హ్యక్షయ్యముపతిష్ఠతు "=பாவத்திற்கு வாழிடமாகிய இரௌரவம் என்னும் நரகத்தில், பதுமம், அற்புதம் என்னும் எண்களால் வாசம் செய்திருக்கும் யாசகப் பிராணிகளுக்கும் மற்றெல்லா வுயிர்களுக்கும், என்னுற் கொடுக்கப்படும் உச்சிட்டநீர் கெடாததாக அவர்க்குச் சேர்ந்திருக்கக்கடவது. எறு. காண்க.

## உத்தராபோசனம்.

வியாசர். వ్యాసః॥ "తతస్తృప్తస్సన్నమృతా పిధానమసీత్యపః పీత్వాతస్మాద్దేశాన్నాగపస్సృత్య విధివదాచామేత్ " = உண்டிருத்தனுகியபின் "அம்ருதாபிதானமஸி" என்ற மந்திரத்தினுல் ஜலத்தையெடுத்து உத்தராபோசனஞ்செய்துகொண்டு அவ்விடம்விட்டுச்சிறுதூரம் சென்று ஒதுங்கி அந்த ஆசமனநீரை விழுங்கவேண்டும். எறு. காண்க.

## உத்தராசமனம்.

அவ்வுத்தரா போசனவடிவமாகிய ஆசமனத்தைத்தேவலர் கூறினர். దేవలః॥ " భుక్త్వాచామేద్యథోక్తేన విధానేనసమాహితః। శోధయేన్ముఖహస్తౌచ మృదద్భిర్ఘర్షణైరపి " = புசித்துக்கூறிய விதிப்படி ஆசமனஞ் செய்யவேண்டும். அமைதியுடையவனுய் நீரால் நன்ருக வாய் கொப்பளித்துக் கைக்கு மண்ணிட்டு அலம்பி எச்சிற் பூச்சின் மயக்கமில்லாதபடி சோதித்து விடவேண்டும். எறு. காண்க.

## வாய்கழுவும்விதி.

கௌதமர். గౌతమః॥ "గండూషస్యార్థసమయే తర్జన్యావక్త్రశోధనం। కుర్వీతయదిమూఢాత్మా రౌరవంనరకంవ్రజేత్ " = கண்டூஷம் என்பது வாய் திற்றிக்கழுவி நீரைக்கொப்புளித்து உமிழ்தல். வாய்கொப்பளிக்குஞ்சமயத்தில் சுட்டுவிரலால் வாயினைச் சோதிக்கலாகாது. அவ்வாறு செய்தால் அந்தமூடன் இரௌரவம் என்னும் நரகத்திற்குச்செல்வன். எ-று. காண்க

வியாசர். వ్యాసః॥ "హస్తంప్రక్షాళ్యగండూషం యఃపిబేదవిచక్షణః। సదే వాంశ్చపితౄంశ్చైవ హ్యాత్మానమపిఘాతయేత్" = கையலம்பி வாய் கொப்புளித்தநீரை எந்த அவிவேகி, விழுங்குகின்றானோ? அவன்தேவர்களையும் பிதிரர்களையும், அடித்துத் துன்பஞ்செய்தவனாவன். எ-று. காண்க.

வியாசர். వ్యాసః॥ "తస్మిన్నాచమనంకుర్యాద్యత్రస్థాందేథభుక్తవాన్। యద్యుత్తిష్ఠత్యనాచాంతో భుక్తవానాసనాత్తతః। స్నానంసద్యఃప్రకుర్వీత సోన్యథాప్రయతోభవేత్"=எந்தக்கலத்தி லுண்கின்றானோ? அந்தக் கலத்திற்றானே விழும்படி ஆசமனஞ் செய்யவேண்டும். ஆசமனமென்பது ஈண்டு உத்தரா போசனமே யாம். புசிக்கும்படி யிருந்த ஆசனத்தின்மீதிருக்கும்போது உத்தராபோசனம் வாங்கிக்கொள்ளவேண்டும். அதனைப் பெறாமல் எழுந்தால் உடனே நீராடவேண்டும். அங்ஙனஞ் செய்யாவிட்டால் பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டும். எ-று. காண்க.

## புநராசமனம்.

கூர்மபுராணம். కూర్మపురాణే॥ "ఆచాంతఃపునరాచామేదాయంగౌరితి మంత్రతః। ద్రుపదాంవాత్రిరావృత్య సర్వపాపప్రణాశినీం। ప్రాణానాంగ్రంథిరసీత్యాలభేద్ధృదయంతతః। ఆచమ్యాంగుష్ఠమాత్రేణ పాదాంగుష్ఠేతుదక్షిణే। నిస్రావయేద్ధస్తజలమూర్ధ్వహస్తస్సమాహితః। హుతానుమంత్రణంకుర్యాచ్ఛ్రద్ధాయామితిమంత్రతః। అథాక్షరేణహ్యాత్మానం యోజయేద్బ్రహ్మణీతిసః। సర్వేషామేవయాగానా మాత్మయాగఃపరస్మృతః। యోనేనవిధినాకుర్యాత్సయాతిబ్రహ్మణఃపదం" ஆசமனஞ் செய்தவன் "ఆయంగౌః" என்றமந்திரத்தை யுச்சரித்து மறுபடியும்ஆசமனஞ் செய்யவேண்டும். எல்லாப் பாவங்களையும் போக்கடிக்கவல்ல "ద్రుపదా" எனவே "శివేనమా" என்றமந்திரந்தை மூன்றுதரம் செபித்து "ప్రాణానాంగ్రంథిరసిరుద్రః" என்ற மந்திரத்தால், இதயத்தைத்தொட்டுஅபிமந்திரத்து, பின்னரும்ஆசமனஞ்செய்யவேண்டும். அந்தச்சேடமாகிய நீரை மேல்பக்கமிருக்குந் தன் கைப் பெருவிரல் முனையால் வலக்கால் பெருவிரன்மேற் படும்படி ஒழுக்கவேண்டும். "హుతానుమంత్రణం" = ஹோமஞ் செய்ததை அபிமந்திரித்தல். (எனவே, உண்டவுணவைத் தேவதைப் பிரீதியாகும்படி மந்திரங்களோடு பிரார்த்திப்பது. இந்தக் கரு

மத்தை "శ్రద్ధాయాం" என்றது முதலிய மந்திரங்களாற் செய்து பின்னும் அஷ்டாக்ஷர மந்திரங்களால் தன் ஆன்மாவைப் பிரமத்தில் கலப்பிக்கவேண்டும். இந்த ஆன்மயாகம் எல்லாயாகங்களிலும் சிறந்தது. இவ்விதியால் யார் பிராணாக்கினி ஹோத்திரத்தைச் செய்கின்றானோ? அவன் பிரமலோகத்தை யடைகின்றான். எ-று. காண்க.

அத்திரி. అత్రిః॥ "ఆచాంతోఽప్యశుచిస్తావ ద్యావత్పాత్రమనుద్ధృతం। ఉద్ధృతేఽప్యశుచిస్తావ ద్యావన్నోలిప్యతే మహీ। భూమావప్యవలిప్తాయాం తావత్స్యాదశుచిః పుమాన్। ఆసనాదుత్థితస్తావ ద్యావన్న స్పృశ్యతే మహీ" = ஆசமனஞ் செய்தவனாயினும் எச்சிற்கலத்தை யெடுக்கிறவனாயில் அசுத்தனாகவேயிருக்கின்றான். எச்சிற்கலத்தை எடுத்துவிடினும் அந்நிலஞ் சுத்தமாகச் சாந்து மெழுகுகிறவனாயில் அசுத்தனாக விருக்கிறான். நிலமெழுகினாலும் உண்ணுவதற்கிட்ட ஆசனத்திலிருந்து மெழுந்தவன் நிலந்தொடுகிறவனாயில் அசுத்தனாகின்றான். எ-று. காண்க.

சாதாதபர். శాతాతపః॥ "ఆచమ్య పాత్రముత్సృజ్య కించిదార్ద్రేణ పాణినా। ముఖ్యాన్ప్రాణాంత్సమాలభ్య నాభిం పాణితలేన చ। భుక్త్వా నైవ ప్రతిష్ఠేత నచాప్యార్ద్రేణ పాణినా। పాణిం మూర్ధ్ని సమాధాయ స్పృష్ట్వా చాగ్నిం సమాహితః। జాతిశ్రైష్ఠ్యం సమాప్నోతి ప్రయోగకుశలో నరః" = ஆசமனஞ்செய்து அந்தபாத்திரத்தைவிட்டுவிட்டுச் சிறிது ஈரமுள்ள கையினால் மார்பைத்தொட்டுப்பிராணனைச் சிறிது தணியச்செய்து அங்கையால்தொப்புளைத் தடவவேண்டுவது. உண்டவுடனே வழிநடக்கலாகாது "నైవ ప్రతిష్ఠేత" என்பதூஉம்பாடம். அதற்கு உண்டபின் ஓரிடத்தில் இருந்துவிடலாகாது என்பதுபொருள்). ஈரக்கையோடு வெளிப்படலாகாது. பின்புஅங்கையால்உச்சியைத்தொட்டு, அதன்பின்தீயைத்தொட்டு)எனவே. அங்கையை நெருப்பிற்காய்ச்சி) அமைந்தமனத்தோடு இவ்வாறு உண்ணுதலின் ஒழுக்கத்தினை உபயோகிப்பதில் வல்லவனாயுள்ளவன் குலத்திற்சிறந்தவனாகின்றான். எ-று. காண்க.

## உண்டபின்கடவுளைத்தியானித்தல்.

விஷ்ணுபுராணம். స్వస్థః ప్రశాంతచిత్తస్తు కృతాసనపరిగ్రహః। అభీష్టదేవతానాంతు కుర్వీత స్మరణం నరః। అగ్నిరాప్యాయయద్ధాతూ న్పార్థివం పవనేరితః। దత్తావ

కాశేనభసా జరయన్నస్తుమారుతః। అన్నంబలాయమెభూమె రపామగ్నిర్నభస్వతః। భవత్వేతత్పరిణతం మమాస్త్వవ్యాహతంసుఖం। ప్రాణాపానసమానానా ముదానవ్యానయోస్తథా। అన్నంపుష్టికరంచాస్తు మమాస్త్వవ్యాహతంసుఖం॥ అగస్తిరగ్నిర్బడబా నలశ్చభుక్తంమయాన్నం జరయత్వశేషం। సుఖంచమైతత్పరిణా మసంభవం యచ్ఛత్వరోగంమమచాస్తుదేహే॥ విష్ణుస్సమస్తేంద్రియదేహదేహీ ప్రధానభూతో జగతోస్యచైకః। సత్యేనతేనాత్తమశేషమన్నమారోగ్యదం స్యాత్పరిణామహేతుః॥ విష్ణురాత్మాతథైవాన్నం పరిణామస్తథైవచ। సత్యేనతేనమద్భుక్తం జీర్యత్వన్నమిదంతథా। ఇత్యుచ్చార్యస్వహస్తేన పరిమృజ్యాత్తథోదరం। అనాయాసప్రదాయీని కుర్యాత్కర్మాణ్యతంద్రితః" = பின்பு சுகமாகச்சாந்த மனமுடையவனாய் ஆசனத்தின்மீது இருந்து, தன்னிஷ்ட தெய்வத்தைத் தியானிக்கவேண்டுவது. என்னுடம்பில், தீயானது வாயுவினால்தூண்டப்பட்டுப் பிருதிவிதாதுவினைத் தணித்தல் செய்க. வாயு ஆகாயத்தாலிடங்கொடுக்கப்பட்டு அந்நத்தைச் சமிப்பித்தல் செய்க. அந்நம் எனது பிருதிவி, அப்பு, தேயு, வாயுக்களுக்குவன்மைசெய்க. அதுநன்றாகப்பக்குவப்பட்டு, எனதுசுகம் கெடாதிருத்தலைச் செய்யவேண்டும். அந்நம் எனது பிராணன்முதலியவற்றிற்குப் புஷ்டியை உண்டுபண்ணி எனக்கு நீக்கமற்றதாகிய சுகமாகுக. அகத்தியனார், அக்கினி, வடவைத்தீ, இவர்கள் என் அந்நம் சேடமின்றிச் சமிக்கும்படிசெய்க. எனது உடம்பில் அன்னம் பக்குவமாய் உருவங்கடோறும் பொருந்தும்போது, அவ்வன்ன இரதம் தாதுக்களுக்கு வியாபிப்பதனால் எனக்கு நோயில்லாத சுகமுண்டாகுக. எல்லா இந்திரியங்களும் எல்லாத்தேகமும் தன்னதாகவுடைய எங்குநிறைந்த அறிவே விஷ்ணு என்னப்படும். அவர் ஒருவரோ இவ்வுலகத்துக்குத் தலைவனாகவிருக்கின்றார். எனவே மகாபூதமாய் ஏனைய பூதங்களை விழுங்குகின்றார் என்றபடி. உண்மையாகிய அவ்வறிவினால் அதிட்டானமாகப் பொருந்தியுள்ள அந்நமெல்லாம் சுகபரிணாமத்திற்குக் காரணமாகியும், நோயில்லாமையைத் தருவதாகியும் ஆகுக. ஆன்மாவும், அந்நமும், பரிணாமமும், விஷ்ணுவேயாம். அச்சத்தியத்தினால் நான் உண்ட அந்நம் அவ்வாறு சீரணமாகுக (எனவே-உலகமெல்லாம் விஷ்ணுஎன்னும் அதிட்டானத்தில் அமைக்கப்பட்டுள்ளதாதலின் அதிட்டானமொன்றே சத்தியமென்னு நம்பிக்கையை என்னறிவுகொள்வதற்கு நான் தின்ற அன்னங்காரணமாகுக. என்பது. என்னுகாரம் எனக்கு

பிரமஞானத்தினையுண்டுபண்ணுகஎன்றகருத்து). இவ்வாறுகூறித் தன்கையினால் வயிற்றினைத்தடவவேண்டும். பின்பு உறங்காமல் இளைப்பினைத் தராத தொழிலினைச் செய்தல்வேண்டும். எ-று. காண்க.

## தாம்பூலவிதி.

மார்க்கண்டேயர். మార్కణ్డేయః॥ "భూయోఽప్యాచమ్యకర్తవ్యం తతస్తాంబూలభక్షణం" = மறுபடியும் ஆசமனஞ்செய்து பின்பு வெற்றிலைப் பாக்குத்தின்னல்வேண்டும். எ-று. காண்க.

வசிஷ்டர். వశిష్ఠః॥ "సుపూగంచసుపర్ణంచ సుచూర్ణంచసుగంధిమత్। అదత్వాద్విజదేవేభ్య స్తాంబూలంవర్జయేద్బుధః। ఏకపూగంసుఖారోగ్యం ద్విపూగంనిష్ఫలం భవేత్। అతిశ్రేష్ఠంత్రిపూగంస్యా దధికంనైవదూష్యతి। పర్ణమూలేభవేద్వ్యాధిః పర్ణాగ్రేపాపసంభవః। చూర్ణపర్ణంహరత్యాయు శ్శిరాబుద్ధివినాశినీ। తస్మాదగ్రంచమూలంచ శిరాంచైవవిశేషతః। చూర్ణపర్ణంవర్జయిత్వాతాంబూలంఖాదతిద్విజః" =நல்லபாக்கு, நல்லவெற்றிலை, நல்லசுண்ணும்பு, நல்லமணத்தினையுடைய ஏலம், தக்கோலம், இலவங்க முதலியனவும் பச்சை கர்ப்பூரமுமாகிய வாசனைப்பண்டங்களும் உடையவாகியிருக்கும் தாம்பூலத்தினை அறிந்தவன் தேவர்கட்கும் வேதியர்க்கும் உதவாது தான் அனுபவித்தலாகாது. ஒற்றைப்பாக்கு சுகத்தையும் நோயில்லாமையையும் தரும். இரண்டுபுண்ணியத்தை ஒழிக்கும். மூன்று சிறந்தது. இதற்குமேலிட்டாற் குற்றமில்லை. வெற்றிலையின் அடியிலே=காம்பிலேநோயும், முனையில் பாவமும், உண்டாம். நடுநார் அறிவைக்கெடுக்கும். சுண்ணும்புவைத்த வெற்றிலை ஆயுளைக் கெடுக்கும். (எனவே. மாரடைத்துப் பிராணச்சேதமுண்டாம். ஆதலால் சுண்ணும்பு காரத்தையும் பாக்கின் துவர்ப்பினையும் கெடுத்து, குண்டலிக்குச் சொக்குதலை விடுவிக்கத்தக்க சிக்கோடும் தேங்காய்க்கொப்பரை வாதுமைவித்து, நெய், குளிர்ந்தசலம் புளித்தபண்டம் இவைகளைத் தாம்பூலவழக்கத் தொடக்கத்திலும், தேகத்திற்கு இளைப்புண்டானகாலத்திலும் புத்திமான்கள் உபயோகிக்கின்றனர்). ஆதலால் அடிக்காம்பினையும் முனையையும் நடுநாரினையையும் சுண்ணும்பு வெற்றிலையினையும் விடுத்து அறிவுடையவன் தாம்பூலத்தைத்தின்னுகின்றான்.எ-று. காண்க. (புத்தியுடையவன் "బుధః" = என்றதனால் தாம்பூலத்தைத் தின்னு

வது முகத்திற்குச் சுத்தமாயும் அழகாகிய மங்கலகரமாகியும், ஒருவகையான உச்சாகததை யுண்டுபண்ணுவதாயும், தேவதா யோக்கியமானதாயு முள்ளதாதலின் திருவுடையதாயும், உள்ள தென்று குணதோஷங்களை யுணர்ந்து உடற்கூற்றுக்குத் தக்க படி உபயோகித்தல் வேண்டுமென்னுங் கருத்தாகின்றது. வெற் றிலைப்பாக்குத் தின்பது பெரும்பாலும் காமிய மன்றி வைதிக விதிப்பாடல்ல. ஆயின் வசிட்டமிருதி முதலியவற்றின் கருத்து என்னெனில்? அவரவர் இசையால் தாம்பூலம் செய்கையில் அபாயமில்லாதபடி நல்ல திரவியங்களோடு குற்றமுடைய பாகங் களை யொழிக்கவேண்டும் என்னும் நிடேதங்களைத் தெரிவிப்பதே கருத்தென் றுணரத்தக்கது. இது பிரமசாரியருக்கும் விரதநியம முடைய இல்லறத்தாருக்கும், துறவிகட்கும், கைம்பெண்களுக் கும் இளைப்பும் பலகினமு முடையவர்க்கும், சிறுவர்க்கும், மிகவி ருத்தருக்கும் ஆகாதென மிருதிநூலாலும் ஆயுள்வேதத்தாலும் விலக்கப்பட் டிருக்கின்றது. இதனல் அநேகநற்குணங்க ளிருப் பினும் ஒவ்வொரு காலத்தில் பெரிய அபாயமும் உண்டாகின் றது. இதனை மிகவழக்கஞ் செய்தால் உடம்பிற்கு விரைவில் கிழத்தனம் உண்டாமென்று சிலவைத்தியநூலுட் கூறப்பட்டுள் ளது. இது காமியமாதலின் இவ்வழக்கம் நெடுநாளாகப் பெரு வழக்கத்திற்கு வந்தது. ஒழுக்கத்திற்கு மாறுபா டுண்டாகாதபடி கொள்ளவேண்டுவது).

## கிரகணம்வரில் உண்டி-விதி.

இங்குவிரித்துக் கூறப்பட்ட வுண்டியானது கிரகண காலத்தில் விலக்கப்பட்டதென மனுகூறினர். మనుః॥"చంద్రసూర్యగ్రహే నాద్యాత్స్నాత్వాచాద్యాద్విముక్తయోః। అముక్తయోరస్తగయో రద్యాద్దృష్ట్వాపరేహని" சந்திரசூரிய கிரகணகாலத்தி லுண்ணலாது. இராகுவினல் விடப் பட்ட பின் ஸ்நாநஞ்செய்து புசித்தல்வேண்டும். விடுகையில்லா மல் கிரகணம்பற்றி யுள்ளபோதே அஸ்தமானமா யிருந்தால் மறுநாள் விடப்பட்ட அவ்விம்பத்தினைப் பார்த்து நீராடிப் புசிக்கவேண்டும். கிரகணகாலம் என்பது தொட்டதுமுதல் விடு றைவரையில். எறு. காண்க.

இந்தப் போசனவிலக்குக் கிரகணகாலத்தில் மாத்திரமே யன்று. கிரகணத்திற்குச் சற்றுமுன்னும் ஆகாதென்று வியாசர்

கூறினர். వ్యాసః॥ "నాద్యాత్సూర్యగ్రహాత్పూర్వ మహ్నిసాయంశశిగ్రహాత్। గ్రహకాలేచనాశ్నీయా త్స్నాత్వాశ్నీయాచ్చముక్తయోః। ముక్తేశశినిభుంజీత యదినస్యాన్మహానిశా। అముక్తయోరస్తగయో రద్యాద్దృష్ట్వాపరేహని" = சூரிய கிரகணத்திற்கு முன்பகலில்புசிக்கலாது, சந்திரகிரகணத்திற்குமுன் இரவில்புசிக்கலாது. கிரகணகாலத்திலும் புசிக்கலாகாது. கிரகணம் விட்ட பின்பு ஸ்நானஞ் செய்து புசிக்கலாம். ஆனால் சந்திரகிரகணம் விட்டுவிட்டாலும் அரையிரவாகா விட்டால் புசிக்கலாம். கிரகணம் விடாமல் அஸ்தமய மாய்விட்டால் மறுநாள் சுத்தபிம்பத்தைப் பார்த்துப் புசிக்கவேண்டும். என்று. காண்க.

கிரகணத்திற்கு முன் புசிக்கலாகாதென்ற விலக்கிலுள்ள விசேடத்தை விருத்த வசிட்டர் கூறினர். వృద్ధవశిష్ఠః॥ "గ్రహణంతు భవేదిందొః ప్రథమాదధియామతః। భుంజీతావర్తనాత్పూర్వం పశ్చిమేప్రథమాదధః। రవేస్త్వావర్తనాదూర్ధ్వమర్వాగేవనిశీథతః। చతుర్థేప్రహరేచేత్స్యాచ్చతుర్థప్రహరాదధః" = இராத்திரி முதல்யாமம் ஆனபின்பு சந்திரகிரகணம் வருகிற தினத்தில் பகலிலுச்சிக்கு முன்பாகவே புசிக்கவேண்டும். இராத்திரி நாலாவது யாமத்தில் சந்திரக்கிரகணம் வந்தால் இராத்திரி முதல் யாமத்துக்கு முன்பாகவே (எனிற்பகலில்) உண்ணவேண்டும். பகலில் உச்சி கழிந்த பின்பு சூரிய கிரகணம் வந்தால், முன்பாகப் பாதிராத்திரிக்காயினும் பின்புசிக்கலாம். பகல்நாலாம் யாமத்தில் சூரிய கிரகணம் வந்தால் முன்னாளிரவின் நாலாவது யாமத்திற்காயினு முன்பாகப்புசிக்கலாம். என்று. காண்க. (இதன் கருத்து. என்னெனில் எந்தயாமத்துள் சந்திர கிரகணம் வருகின்றதோ! அந்த யாமத்திற்காயினும் முன் மூன்று யாமத்திலும் உண்ணலாகாது. அன்றியும் எந்தயாமத்தில் சூரியகிரகணம் வருகின்றதோ அந்த யாமத்திற்கு முன் நாலுயாமத்துள்ளும் புசிக்கலாகாது.

விருத்தகௌதமர். వృద్ధగౌతమః॥ "సూర్యగ్రహేతు నాశ్నీయా త్పూర్వంయామచతుష్టయం। చంద్రగ్రహేతు యామాంస్త్రీ న్బాలవృద్ధాతురైర్వినా" = சூரியகிரகணத்துக்கு முன் நான்கியாமமும், சந்திர கிரகணத்திற்கு முன் மூன்றியாமமும் உண்ணுதொழிதல் வேண்டும். மாதர், சிறுவர், விருத்தர், ஆதுரர், இவர்கட்கு இவ்விதியில்லை என்று. காண்க.

## பாலர்முதலியோர் காலநியமம்.

மச்சபுராணம், మత్స్యపురాణే॥ "అపరాహ్ణే నమధ్యాహ్నే నసాయంనతు సంగవే। భుంజీతసంగవేచేత్స్యా న్నపూర్వంభుక్తిమాచరేత్" = சாயுங்காலேயிற் கிரகணமுண்டானால் சாயுங்காலத்திலும், அபராந்நத்திலும், மத்தியாந்நத்திலும் உண்ணலாகாது. சங்கவகாலத்துள் புசிக்கலாம். சங்கவகாலத்திற் கிரகணமானால் அதற்குமுன் புசிக்கலாகாது. எறு. காண்க. இந்தவிதி சிறுவர், பாலர், விருத்தர், ஆதுரரையும் குறித்தது.

## கிரகணத்திலுண்டோன் பிராயச்சித்தம்.

வல்லவன் = பசிபொறுக்க வல்லவன் உண்டால் பிராயச்சித்தம் செய்கவென யாஞ்ஞவற்கியர் கூறினர். యాజ్ఞవల్క్యః॥ "చంద్రసూర్యగ్రహేభుక్త్వా ప్రాజాపత్యేనశుధ్యతి। తస్మిన్నేవదినేభుక్త్వా త్రిరాత్రేణైవ శుధ్యతి" = கிரகணகாலத்தில் புசித்தவன் பிராஜபத்திய கிருச்சிரத்தால் சுத்தனாகின்றான். அந்தத்தினத்தில் விலக்கிய காலத்துட் புசித்தால் மூன்றுதினம் பட்டினிகிடந்தாற் சுத்தனாவான். எறு. காண்க.

## கிரஸ்தோதய சந்திரக்கிரகணவிடயம்.

விருத்தவசிட்டர். వృద్ధవశిష్ఠః॥ "గ్రస్తోదయేవిధోః పూర్వం నాహర్భోజనమాచరేత్" = சந்திரன் கிரகணபரிசத்தோடு புறப்பட்டால் அதற்குமுன் அப்பகலில் உண்ணலாகாது. எறு. காண்க.

## கிரஸ்தாஸ்தமானவிடயம்.

பிருகு. భృగుః॥ "గ్రస్తావేవాస్తమానంతు రవీందూ ప్రాప్నుతోయది। తయోఃపరేద్యురుదయే స్నాత్వాభ్యవహరేన్నరః" = சூரிய சந்திரர்கள் கிரகணம்பற்றி விடாமலே அத்தமானமாயினால் மறுநாள் அவ்விம்பங்கள் உதயமானபின்பு நீராடிப் புசிக்கவேண்டும். எறு. காண்க.

விருத்தகார்க்கியர். వృద్ధగార్గ్యః॥ "సంధ్యాకాలేయదారాహు గ్రసతేశశిభాస్కరౌ। తదహన్నైవభుంజీత రాత్రావపికదాచన" = சந்திகாலத்தில் சந்திரசூரிய கிரகணமுண்டானால் அப்பகலில் புசிக்கலாகாது. ஒவ்வொருவேளை யிரவிலும் புசிக்கலாகாது. எ - று. காண்க.

## இராத்திரிசிராத்தவுண்டி விடயம்.

"స్నాత్వాచాద్యాద్విముక్తయోః" என்ற மனுவுரையாலும், "స్నాత్వాశ్నీయాచ్చముక్తయోః" என்ற வியாசவுரையாலும், "ముక్తౌదృష్ట్వాతుభుంజీత స్నానంకృత్వాతతఃపరం" என்ற விஷ்ணுதருமோத்தர வுரையாலும், "రాత్రావపికదాచన" என்ற விருத்தகார்க்கியர் உரையாலும், "ముక్తేశశినిభుంజీత యదినస్యాన్మహానిశా" என்ற வியாசவுரையாலும் சந்திரகிரகணம் விட்டபின்பு நீராடிப்பாகஞ்செய்து உண்பதற்குப்பாதிராத்திரிக் குள்ளாகக் காலம்நேர்ந் திருந்தால் புசிக்கலாமென்று பொருள் படுகின்றது. சிராத்த வுண்டியில் "మృతేహనిపరిత్యజ్య చండాలఃకోటిజన్మసు" = இறந்த நாளில் சிராத்தஞ்செய் யாமல் விட்டாற் கோடிசன்மத்துள்ளுஞ் சண்டாளனாகின்றான். "అవంధ్యందివసంకుర్యాత్" = இறந்தநாளை வீண்செய்யலாகாது. என்ற வுரையால் அந்த நாளில் சிராத்தத்தினைச் செய்யவேண்டுவ தென்று தெரிய வருகின்றது. "గ్రస్తాస్తమయవిధౌఽపూర్వం నాహర్భోజనమాచరేత్" என்ற விருத்தவசிட்டருரை யாலும் "తదహర్నైవభుంజీత" என்ற விருத்தகார்க்கியருரையாலும், பிடித்து உதயமாகிய சந்திர கிரகணத்துள் பகலுண்டி விலக்கப் படுகின்றது. "ననక్తంశ్రాద్ధంకుర్వీత" இரவில் சிராத்தஞ் செய்யலாகாது என்ற சுருதி யால் இராத்திரி சிராத்தபோசனம் விலக்கப்படுகின்றது. சிராத்தத்தினை விடலாகாது பகலும் செய்யலாகாது இரவிலும் செய்யலாகாது. பிறஎன் னெனில்?

இரவின்முதல் யாமத்திற்குனே கிரகணம் விட்டதாயினும், "స్నాత్వాచాద్యాద్విముక్తయోః" என்றதுமுதலிய மிருதி யுரைக்காயினும் "ననక్తంశ్రాద్ధంకుర్వీత" என்ற சுருதியுரையே சிறந்ததாமாதலின் "ప్రబలేనదుర్బలస్యబాధః" என்ற வழக்காலும் சிராத்தம் வைதிககருமமே யாதலின் வேதவுரையே சிறந்த விதியா யிருத்தலினாலும், "భుంజీతావర్తనాత్పూర్వం" என்ற விருத்த வசிட்ட வுரை,அன்று பகலினுள் சிராத்தபோசனம் செய்யலாம் என்னுமுடிவு நிலையைத் தெரிவித்தலாலும். "పరేద్యురుదయేస్నాత్వా భ్యవహరేత్" இரண் டாநாளுதயத்தில் நீராடிப் புசிக்கலாமென்ற விருத்தகார்க்கிய மொழியுள் "ఉదయే" என்றதனால் சூரியவுதயம் என்று பொருள்கூறி இரண்டாநாட் பகலிலாயினும் சிராத்தம் செய்யலாமா யிருத்தலாலும் ஒருக்காலும் இர விற் சிராத்தம் செய்யலாகாதென்று சிலகேவலத் திராமிடர்கள் விலக்கு கின்றனர்.

"యదినస్యాన్మహానిశా" என்ற வியாசவுரையால் இராத்திரிமுதல் யா மத்துள் கிரகணம்விட்டால் இரண்டாவது யாமத்துள் சிராத்த போச

னத்திற்குக் காலம் இருத்தலினாலும், " భుంజీతావర్తనాత్పూర్వం " உச்சிப்போ தினுக்குள் உண்ணலாமென்ற விருத்தவசிட்ட வுரை " గ్రహణంతుభవేదిందోః ప్రథమాదధియామతః " இராத்திரிமுதல் யாமம்கடந்தபின் சந்திரக்கிரகண முண்டான பக்ஷத்தில் என்ற அவருரையே கேவலத்திராமிடர் கூற்றுக்குத் தடையா யிருப்பதாலும், " తయోరపరేద్యు రుదయే స్నాత్వాభ్య వహరేన్నరః" என்றவிருத்தவசிட்டவுரையில் "తయోః" அவர்களுடைய, எனவே சந்திர சூரியர்களுடைய என்றபடி "ఉదయే" மண்டலம் தோன்றுகையில் என்ற பொருள் படுதலின், அவ்வுரை கிராஸ்தாஸ்தமான விடயமா யிருத்தலா லும் இராத்திரிமுதல் யாமத்துள் சந்திரகிரகணம் விட்டவழி பகற் சிராத் தபோசனம் செய்வதற் கிடமில்லை. அன்றியும் " అపరాహ్ణే పితౄణాన్తుజేత్ " அபரான்னகாலத்தில் பிதிர்வேள்வி செய்யவேண்டும் என்றலின் உச்சிப் போதினுக் காயினும் முன்னுகச் சிராத்தத்திற்குக் காலமில்லாமை யாலும் "యదినస్యాన్మహానిశా " என்ற வியாச வுரையாலும் இராத்தி சிராத்தத்திற்குக் காலமிருத்தலினாலும் "మృతేహనిపరిత్యజ్య చండాలకోటిజన్మసు, " "అవంధ్యంది వసంకుర్యాత్" என்னு முரைகளால்சிராத்தத்தினை விடலாகா; விட்டாற் பாவ மென்பதனாலும் "ననక్తం శ్రాద్ధంకుర్వీత என்ற சுருதிநிடேதம் "అన్యత్రరాహుద ర్శనాత్ " இராகுவைப் பார்த்தால் என்பது கிரகணகாலத்தை யொழித்து மற்றைய நாளில் இராத்திரி சிராத்தம் செய்யலாகா தென்னும் மற்றோர் சுருதி மொழியால் கிரகணகால இராத்திரி சிராத்தத்திற்குத் தடையில்லை என்று தோற்றுவதனாலும். கிரஸ்தோதய சந்திர கிரகண விடயத்திலாயி னும் முதல் யாமத்துள்ளேதானே விடப்படுகின்ற சந்திரகிரகண விடயத் திலாயினும் அவ்விரவே இரண்டாம் யாமத்துள் சிராத்த போசனம் ஆகு மென்று ஆந்திர கன்னட மகராட்டிரர் முதலியர் கூறுகின்றனர்.

" తుల్యబలవిరోధేవికల్పః " ஒத்ததரமுடைய் பிரமாண வுரைகட்குப் பொ ருள் மாறுபாடுவந்தவழி இரண்டிலொன்று செய்யலாமென்னும் விகற்ப நிலை யுண்டாகின்றது. கிரஸ்தாஸ்தமானசந்திரக்கிரஹணத்தில் மறுநாள்பகலுண்டி யில்லாமையால் சிராத்தஞ்செய்யலாகாது இராத்திரிசிராத்தமும் பொதுவகை யால்விலக்கப்பட்டது. அன்றிரவுஇராகு தரிசனமின்மையாலும் சிராத்தத்திற்கு விதிப்பு இல்லை. சிராத்தத்தையும் விடலாகாது எனில்? పరేద్యురుదయేస్నాత్వా என்றபிருகுமொழியால் மறுநாட்பகல் சிராத்தபோசனமாத்திரம் ஆமென்றும் மற்றவர்க்குச்சந்திரனுதயமான பின்பு ஸ்நாநயாகமுதலிய செய்து இரவிலுண் டிகொள்கவென்றும், கிருஷ்ணையாற்றின்வடக்குள்ளவர்கூறுகின்றனர். கிரஹ ணம், ஆசூசம்=சூதகம்போலசிராத்தத்திற்குத்தடையாகின்றது. மறுநாள்சந் திரதரிசனகாலம் வந்தால் அத்தடையொழிகின்றது. ஆசூசமுடிவில் சிராத்தம் நேர்ந்தவாறு போலச்சுத்த சந்திரோதயம்வந்தஅளவில்அப்பகலின் சிராத்தம்

நேரிடுகின்றதென்று, கிருஷ்ணையின் தென்பாகத்துள்ளவர் கூறுகின்றனர். இவ்விடயத்தில் அவரவர்முன்னோர்வழக்கே விதியாம்.

விஷ்ணு தருமோத்திரம். విష్ణుధర్మోత్తరే॥ "అహోరాత్రంనభోక్తవ్యం చంద్రసూర్యగ్రహోయదా। ముక్తిందృష్ట్వాతుభుంజీత స్నానంకృత్వాతతఃపరం"= எப்பொழுது சந்திர சூரியகிரகணம் வருகின்றதோ? அப்போது இரவும் பகலும் புசிக்கலாகாது (எனவே சந்திர கிரகணத்துக்கு முன் அன்றிரவும் பகலும் புசிக்கலாகாது. சூரியகிரகணத்தின் முன் அப்பகலும் பின்னிரவும் புசிக்கலாகாது. சந்திர கிரஹணம் கிரஸ்தாஸ்தமானால் அன்றிராத்திரியும் மறுநாள் பகலும் புசிக்கலாகாது. சூரியக்கிரஹணம் கிரஸ்தாஸ்தமானால் அன்றையபகலும் அவ்விரவும் புசிக்கலாகாது என்றபடி). கிரகணம் விட்டபின்பு சுத்தமண்டலம்பார்த்து ஸ்நாநஞ்செய்து பின்புபுசிக்கவேண்டும். எ-று. காண்க.

சுத்தமண்டலத்தைப்பார்த்து, என்றதேல், மேக முதலியத்தடைநேரிட்டால் பார்த்தல்கூடாதே எனில்? "దృష్ట్వా"=பார்த்து என்ற சொல்லினுக்கு நூலுணர்ச்சியே நோக்கமாதலின், நூலுணர்ச்சியாலுணர்ந்து என்றுகொள்க என விருத்தகௌதமர் கூறினர். వృద్ధగౌతమః॥ "చంద్రసూర్యగ్రహేనాద్యా త్తస్మిన్నహనిపూర్వతః। రాహోర్విముక్తింవిజ్ఞాయ స్నాత్వాకుర్వీతభోజనం" = சந்திர சூரிய கிரகணம் வந்தவழி முன்பாக அத்தினத்தில் புசிக்கலாகாது. இராகு விட்டகாலத்தை யுணர்ந்து பின்பு நீராடியுண்க. எ-று. (ஈண்டு, "విజ్ఞాయ"=உணர்ந்து, என்று நூலுணர்ச்சிக்குத்தலைமை கூறப்பட்டது).

இங்ஙனமாயின், மறுநாள் உதயத்திற்கு முன்பாகவும் நூலுணர்ச்சி யுண்டாமாதலின் கிரஸ்தாஸ்தமானத்திலும் மறுநாள் சுத்த மண்டலம் உதயகாலத்தையெதிர் பார்க்கவேண்டிய அவசியகமில்லாமலே முன்பு புசிக்கலாமே எனில்? அற்றன்று.

"తయోఃపరేద్యురుదయే స్నాత్వాభ్యవహరేన్నరః" = மறுநாள் கிரகணம் விட்டசூரிய சந்திரர்களின்சுத்த மண்டலம் வெளிப்பட்டபின் நீராடியுண்க. "అహోరాత్రం నభోక్తవ్యం" =பகலிரவு புசிக்கலாகாது, என்ற இவ்விருமொழியால் மேற்கூறிய வினவுக்குஇடமில்லை என்று கொள்க.

ஸ்காந்தபுராணம். స్కాందపురాణె॥ "యదాచంద్రగ్రహస్తాత నిశీథా త్పరతోభవెత్। భోక్తవ్యంతత్రపూర్వాహ్ణే నాపరాహ్ణే కథంచన। పూర్వంనిశీథాద్గ్రహణం యథాచంద్రస్యవాభవెత్। తదాదివానకర్తవ్యం భోజనంశిఖివాహన"=மைந்த! எப்பொழுதுபாதிராத்திரியானபின்பு சந்திரகிரகணம் வருகின்றதோ? அன்றைய பகல் உச்சிப்போதினுள்ளாகவே புசிக்கவேண்டும் உச்சிகழிந்தபின்பு எவ்வகையாலும் புசிக்கலாகாது. பாதிராத்திரிக்குமுன்பாகவே சந்திர கிரகணம்வந்தால் அன்றைய பகலிலேயேபுசிக்கலாகாது. எ-று. காண்க. இந்தச்சிவவாக்கியத்திற்கு சந்திர கிரகணத்திற்கு முன் மூன்றியாமகாலம் புசிக்கலாகாதென்பது கருத்தாகக்கொள்க. என்னை ? அதன்கருத்தையுணர்ந்த விருத்த கௌதமர். "చంద్రగ్రహేతుయామాంస్త్రీన్" = சந்திரகிரஹணத்து முன் மூன்றியாமம்விட்டுப் புசிக்கவேண்டும் என்று விசேடமொழி கூறியிருத்தலின்.

## கிரஹணோபவாசம்.

பாவம் கெடவேண்டுமென்னும் எண்ணமுடையவன் கிரஹணம்வந்தபோதுஒருதினமுற்றும்பட்டினிகிடக்கவேண்டுமென்று தக்ஷர்கூறினர். దక్షః॥ "అయనేవిషువెచైవ చంద్రసూర్యగ్రహేతథా। అహోరాత్రోషితస్స్నాత్వా సర్వపాపైఃప్రముచ్యతె"=கடகசங்கிரமணம், மகரசங்கிரமணம், துலைச்சங்கிரமணம், மேடசங்கிரமணம், சந்திரகிரகணம், சூரியகிரணம், இவ்வாறு பருவங்களிலும் நீராடி ஒரு பகலும் ஓரிரவும் பட்டினி கிடந்தவன் எல்லாப் பாவங்களாலும் விடப்படுவன் எ-று. காண்க. இது காமிய வுபவாசம்.

புத்திரர்களையுடையவன் காமியவுபவாசம் செய்யலாகாது என நாரதர் கூறினர். నారదః॥ "సంక్రాంత్యాముపవాసంచ కృష్ణైకాదశివాసరే। చంద్రసూర్యగ్రహేచైవ నకుర్యాత్పుత్రవాన్గృహీ" = சங்கிராந்திகளிலும், கிருஷ்ணபக்ஷ ஏகாதசியிலும் சந்திரசூரிய கிரஹண காலங்களிலும் மக்கட்பேறுடைய வில்லறத்தான் காமியவுபவாசம் செய்யலாகாது. எ-று. காண்க. கிரஸ்தாஸ்தமான மானுலோ? "అహోరాత్రంనభోక్తవ్యం" என்றவிலக்கு விதியாலுண்டாகும் பட்டினி நித்தமானதாமாதலின் அதனைப்புதல்வர்ப் பேறுடையவனும் செய்யவேண்டும்.

## தேசாந்திரகிரஹணவிடயம்.

தானிருக்கும் நாட்டில் காணத்தக்ககாலத்தில் வெளிப்படாமல், உலகத்தின் ஏனைய பாகங்களில் இருப்பவர்க்குக் காணத்தக்க கிரகணம் உண்டாவதாக நூலாராய்ச்சியால் தோற்றவரின் ஸ்நாநதானமுதலிய கருமங்களை அனுட்டிக்க வேண்டுவதில்லை என்று ஷடுத்திரிம் சதுமதத்துள் கூறப்பட்டது. షట్త్రింశన్మతే॥ "సూర్యగ్రహోయదారాత్రౌ దివాచంద్రగ్రహస్తథా। తత్రస్నానంనకుర్వీత దద్యాద్దానంన చక్వచిత్"=இரவில் சூரியகிரணம் என்று தெரியவருமாயினும், பகலில்சந்திர கிரஹண மென்று தெரியவருமாயினும் ஸ்நாநதாநங்களையெங்குஞ் செய்யவேண்டுவதில்லை. எறு. காண்க. (எனவே எந்தநாட்டிற்கு நாளலவால் கிரகணம் காணப்படுவதில்லையோ? எந்தநாட்டில் யார்க்கும் கிரஹணம் காணப்படுகிற தில்லையோ? அந்தநாட்டி லுள்ளவர்கள், மற்ற நிலத்திலுள்ளவர்க்குக் காணப்படுகின்றகாலத்தில்தருமகருமங்களையனுட்டிக்கவேண்டாவென்ற கருத்து).

உண்டியின்விதி முற்றிற்று.

---

## உண்டபின் செய்வன.

இங்ஙனம் உண்டியின்வரையில் விதிக்கப்பட்ட தொழிலால் பகலின் ஐந்தாவது பாகத்தைக் கழிக்கவேண்டுவது. ஐந்துபாகத்திற் செய்யவேண்டுவனவாகிய தொழில்களைக் கூறியது பகலின் ஏனையமூன்று பாகத்துள்ளும் செய்வனவற்றிற்கு உபலக்கணமாக விருக்கின்றது. அவற்றினைத் தக்ஷர்கூறினர். దక్షః॥ "భుక్త్వాతుసుఖమాస్థాయ తదన్నంపరిణామయేత్। ఇతిహాసపురాణాని ధర్మశాస్త్రాణిచాభ్యసేత్। వృథావివాదవాక్యాని పరివాదంచవర్జయేత్"=உண்டு சுகமாக விருந்து உண்ட வுண்டியைச் சீரணிப்பித்துக்கொண்டு, இதிகாசங்களையும், புராணங்களையும், தருமசாத்திரங்களையும் பழகுதல் செய்யவேண்டும். வீணனவார்த்தைகளையும், தருக்கவாதங்களையும், பிறரைப்பழிக்கும் பழிப்புரைகளையும் விட்டுவிடவேண்டும். எறு. காண்க

விஷ்ணுபுராணம். విష్ణుపురాణే॥ "అనాయాసప్రదాయీని కుర్యాత్కర్మాణ్యతంద్రితః। నాసచ్ఛాస్త్రవినోదేన సన్మార్గార్థవిరోధినా। దినం నయేత్తతస్సంధ్యాముపతిష్ఠేత్సమాహితః" = இளைப்பைத் தராத தொழில்களைச் சோம்பலின்றிச் செய்யவேண்டும். நன்மார்க்கத்திற் சரித்தவர்க் குண்டாகும் பயனுக்கு விரோதமாக, பயனுமுண்மையுமற்ற நூல்களில் பொழுதுபோக்கலாகாது. சாயுங்காலத்தில் அமைதியோடு சந்தியாவந்தனஞ்செய்யவேண்டும் எ-று. காண்க.

## போதுகழிக்கச்செய்யும் புராணாதிகேள்வி.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "అహశ్శేషం సమాసీత శిష్టైరిష్టైశ్చ బంధుభిః। ఉపాస్య పశ్చిమాం సంధ్యాం హుత్వాగ్నీంస్తానుపాస్య చ। భృత్యైః పరివృతో భుక్త్వా నాతితృప్తోథ సంవిశేత్" = பெரியோர்களோடும், நட்பினரோடும், சுற்றத்தினரோடும், களிப்புடனிருந்து பகலின்மற்றைப் பாகங்களைக் கழிக்கவேண்டும். பின்மாலைச்சந்திக்கடன் கழித்து, வேள்வித்தீக்கருமமுடித்து, பரிசனங்களாற் சூழப்பட்டு, சுருங்கவுண்டு பள்ளிகொள்ளவேண்டும். "ఉపాస్య చ" என்புழி "చ" என்றதனால் வைசுவதேவ முதலிய கருமங்கள்செய்ய வேண்டுமென்று எதிரது தழீஇயவாறுகப்பொருள்படுகின்றது. எ-று.(எனவே.இரவிலும் வைசுவதேவ முதலியசெய்து புசிக்கவேண்டும்என்றபடி).

## இராத்திரி வைசுவதேவம்.

மாலையிற் செய்யத்தகுவன வாகிய சந்திக்கடன், ஹோமம், இவ்விரண்டும் மேற்கூறப்பட்டன. முற்கூறிய வைசுவதேவத்துள்ளே யிரவிற் செய்யப்படுவதனுள் சிறிது வேறுபாடுள்ளதாமாக வின் அஃதீண்டு கூறப்படுகின்றது. விஷ்ணுபுராணம். విష్ణుపురాణే॥ "పునః పాకముపాదాయ సాయమప్యవనీపతే। వైశ్వదేవనిమిత్తం వై పత్న్యా సార్ధం బలిం హరేత్। తత్రాపి శ్వపచాదిభ్యస్తద్వదన్నం విసర్జయేత్। అతిథిం చాగతం తత్ర స్వశక్త్యా పూజయేద్బుధః। దివాతిథౌ తు విముఖే గతే యత్పాతకం నృప। తదేవాష్టగుణం పుంసాం సూర్యోఢే విముఖే గతే। తస్మాత్స్వశక్త్యా రాజేంద్ర సూర్యోఢమతిథిం నరః। పూజయేత్పూజితే తస్మిన్ పూజితాస్సర్వదేవతాః। కృతపాదాదిశౌచస్తు భుక్త్వా సాయం తతో గృహీ। గచ్ఛేచ్ఛయ్యామస్ఫుటితాం తథా దారుమయీం నృప" = இரவில் மறுபடியும் அந்நபாகஞ் செய்து அதில் அந்நத்தைஎடுத்து வைசுவதேவத்தின்பொருட்டு மனையாளோடு இருந்துநிலத்தின்மேற் பலியிடவேண்டும். அன்றி

யும், நாயைத்தின்போர் முதலியோர்க்கும் அந்நம்கொடுக்கவேண்டும். அதுவுமன்றி, அதிதியாகவந்தவனையும்உணர்ந்தோன்தன்னளவுக்குத்தக்கபடி உபசரிக்கவேண்டும். பகலில்வந்தவிருந்தினன் முகம்புலர்ந்து போவானாயின் எவ்வளவுபாவமுண்டோ? இரவில் சூரியனாலடையப்பட்ட விருந்தினன் முகம்புலர்ந்து போவானாயின் அதனி லெண்மடங்கு பாவமுண்டாகின்றது. ஆதலின் அவனை இயன்றமட்டில் உபசரிக்கவேண்டும். அதனால் எல்லாத்தேவரும்பூசிக்கப்பட்டவராவார். கைகால் சுத்திசெய்து தலைவன் இராவுண்டி வினைமுடித்துப்பின்பு முறியாதிருக்கின்ற மரப்படுக்கையின்மீது படுக்கவேண்டும். எ-று. காண்க.

## படுக்கை விதி.

படுக்கையினிலக்கணத்தை ஹாரீதர் கூறினர். హారీతః॥ "సుఖప్రక్షాళితచరణ స్తతోరక్షాంకృత్వోదకపూర్ణ ఘటాదిమంగళోపేతఆత్మాభిరుచితామనుపహతాం సుత్రామాణంపఠంఛయ్యా మధిష్ఠాయరాత్రిసూక్తం జపిత్వాఽష్ణుంనమస్కృత్య సర్పాపసర్పభద్రంతే ఇతిశ్లోకంపఠిత్వేష్ట దేవతాస్మరణంకృత్వా సమాధిమాస్థాయాన్యాంశ్చైవ వైదికాన్మంత్రాం త్సావిత్రీంచజపిత్వా మాంగళ్యంశ్రుతం శంఖంచ శ్రుణ్వన్దక్షిణ శిరాస్స్వపేత్" = வருத்தமின்றிக் கால் அலம்பி இரக்ஷைசெய்துகொண்டு நீர்நிறைகுடம் முதலிய மங்கலத் திரவியத்தோடும் தனக்கு இன்பமாகவும் வேண்டுவதாகவும், முறிவுபடாதுநன்னிலையுள்ளதாகவு மிருக்கும்படுக்கையின்மேல், "సుత్రామాణం" = என்றதுமுதலிய வேதவாக்கியங்களைத் துதித்து, ஏறி இருந்து, இருக்கு வேதத்துள்ள இராத்திரி சூக்தங்களையோதி விஷ்ணுவை வணங்கி "సర్పాపసర్పభద్రంతే" என்ற சுலோகத்தைக்கூறித்தன்னிஷ்டதெய்வங்களைத் தியானித்து, சிறிதுபோது அசைவற்றசமாதிநிலையில் இருந்து, ஏனையவைதிக மந்திரங்களையும் சாவித்திரியையும் செபித்து, மங்கலவாத்தியமும், வேதகோஷமும், சங்கநாதமும், கேட்டுக்கொண்டு தென்றிசைத் தலையாகப்படுத்து நித்திரை செய்யவேண்டும். எ-று. காண்க. இரக்ஷை = ஆடைமுதலியவற்றுற்புறப்போர்வை. மந்திரங்களாலகப் போர்வையுமாம். மங்கலதிரவியம் = வெற்றிலைப் பாக்குச் சந்தனம் பூ முதலியன.

## படுக்கைத்திசை.

விஷ்ணுபுராணம். విష్ణుపురాణే॥ "ప్రాచ్యాందిశిశిరశ్చాస్తం యామ్యా యామథవాన్నృప। సదైవస్వపతఃపుంసో విపరీతంతురోగదం" = கிழக்குத் தலை வைத்திடுதல் சிறந்தது. அல்லது தெற்குத்தலை வைப்பதுஞ்சிறந்ததாம். எப்பொழுதும் அவ்வாறு படுப்பதேநலமாம். வேறு வகையாகப்படுப்பது நோயைத்தரும். எ-று. காண்க.

கார்க்கியர். గార్గ్యః॥ "స్వగృహేప్రాక్ఛిరాశ్శేతె శ్వాశుర్యేదక్షిణాశిరాః। ప్రత్యక్ఛిరాఃప్రవాసేతు నకదాచిదుదక్ఛిరాః" = தன்மனையில் கிழக்குத்தலை, வேட்டகம்=மகட்கொடை நேர்ந்தோன்மனையில் தெற்குத்தலை, வெளியிற் புறப்பட்டு வழிநடக்கையில் மேற்குத்தலை, இவ்வகையாகப் படுத்தல்வேண்டும். எப்பொழுதும் வடக்குத்தலையாகப் படுக்கலாகாது. எ-று. காண்க.

விஷ்ணுபுராணம். విష్ణుపురాణే॥ "రాత్రిసూక్తంజపేత్స్మృత్వా సర్వాంశ్చసుఖశాయినః। నమస్కృత్వావ్యయంవిష్ణుం సమాధిస్థస్స్వపేన్నిశి" = இராத்திரிசூக்தத்தைச் செபித்து, சுகமாக நித்திரைசெய்பவரனைவரையும் தியானித்து, நாசமற்றவியாபகப்பொருளுக்கு வணக்கஞ்செய்து, மனத்தை யுள்ளத்தின் கண்ணே அசைவற நிறுத்தி யிரவில் நித்திரைசெய்யவேண்டும். எ-று. காண்க.

## சுகநித்திரை செய்வோர்.

கோபிலர். గోభిలః॥ "అగస్త్యోమాధవశ్చైవ ముచుకుందోమహామునిః। కపిలోమునిరాస్తీకఃపంచైతేసుఖశాయినః" = அகத்தியர், திருமால், முசுகுந்தனெகிய இராஜவிருடி, கபிலமுனி, ஆஸ்திகமுனி இவ்வைவரும் சுகநித்திரை செய்பவராம். எ-று. காண்க.

## படுக்கலாகாதவிடம்.

மார்க்கண்டேயர். మార్కండేయః॥ "శూన్యాలయేశ్మశానేచ హ్యేకవృక్షే చతుష్పథే। మహాదేవగృహేవాపి మాతృవేశ్మనినస్వపేత్। నయక్షనాగాయతనె స్కందస్యాయతనేతథా। కూలచ్ఛాయాసుచతథా శర్కరాలోష్టపాంసుషు। నస్వపేచ్ఛతథైకాంతే విద్యాదీక్షాంకదాచన। ధాన్యగోవిప్రదేవానాంగురూణాంచతథోపరి। నచాపిభగ్నశయనే నాశుచౌనాశుచిస్స్వయం। నార్ద్రవాసానగ్నశ్చ నోత్తరాస్థితమస్తకః। నాకా

శ్మశానేశూన్యేచ నచచైత్యద్రుమేతథా ''=பாழ்மனையிலும், சுடுகாட்டிலும், ஒற்றைமரத்தடியிலும், சதுக்கத்திலும் = நாற்றெருக்கூடுமிடம், சிவாலயத்திலும், சத்திகோட்டத்திலும், இயக்கர் அரக்கர் உள்ளஇடத்திலும், பாம்பின்புற்றிடத்திலும், குமாரகோட்டத்திலும், இடிகளைச்சார்விலும், மணலிலும், மண்கட்டி, இட்டிகை=செங்கல் கிடக்குமிடங்களிலும், புழுதியிலும், ஏரி அருகிலும், தீக்ஷையொழுக்க மில்லாதிருக்கையிலும், தானியம், பசு, வேதியன், கடவுள், ஆசிரியன் இவர்கள்மேலும், முறிந்த கட்டில்முதலிய படுக்கைமீதும்,அசுத்தத்தின்மேலும், சுத்தமில்லாதவனுயும்,ஈரவுடையுடையவனுயும், நிருவாணியாயும், வடக்குத்தலைவைத்தும், வெட்டவெளியிலும், ஒன்றுமில்லாதஇடங்களிலும்,சமணராதியர்பாழியிலும், தேவரில்லாவாலயத்திலும், அங்குள்ள மரத்தடியிலும், இன்னும் அச்சத்தை விளைவிக்கத்தக்க இடத்திலும், படுத்து நித்திரைபோகலாகாது. எ-று. காண்க. சூநியாலயம்=கடவுளர், பசு, விளக்கு, மனிதர் இல்லாதஇடம் என்பதுமாம்.

விஷ்ணு. విష్ణుః॥ "నార్ద్రపాదస్స్వపేన్న పలాశశయనే నపంచ దారుకృతే నభగ్నశయనేఽద్యుద్దగ్ధే నాగ్నిప్లుష్టే నబాలమధ్యే నచారిమధ్యే నధాన్యేనగో హుతాశన గురూణాముపరినోచ్ఛిష్టోనదివా'' = ஈரவுடையோடு படுக்கலாகாது. பரப்பிய இலை, ஐவகை மரத்தாற் செய்தது, முறிந்தது, இடியால் வெந்தது, நெருப்புப்பட்டது, இவைகள்மேற் படுக்கலாகாது. சிறுவர்நடுவே, நடப்பவர் நடுவே, தானியத்தின்மீது, பசுவின்மேல், வேள்வித் தீயின்மேல் அல்லது சாதாரணத் தீயின் மீது, குரவன்மேல், எச்சிலோடு, பகலிலேயும் படுத்துறங்க லாகாது. எ-று. காண்க.

விஷ்ணு புராணம். విష్ణుపురాణే॥ "నావిశాలాం నవైభగ్నాం నాసమాం మలినాంనచ। నచజంతుమయీంశయ్యా మధితిష్ఠేదనాస్తృతాం'' = அகலமற்றது, முறிந்தது, ஒத்தபடி யில்லாதது, மேடு பள்ளமானது. அழுக்குடையது, சிற்றுயிர்கள் விசேடமாக வுள்ளது, மேற்படுக்கைப் பாய்விரியில்லாதது முதலிய பள்ளிமேற் படுக்கலாகாது. எ-று. காண்க.

உசனர். ఉశనాః॥ "నతైలాభ్యక్తశిరాస్స్వపేన్నా దీక్షితఃకృష్ణచర్మణి''= எண்ணெய்த்தலையோடு படுக்கலாது. தீக்ஷையில்லாதவன் மான்

ரேலின்மீது படுக்கலாகாது. எ-று. காண்க. நியமம் = வைதிக விரதமுமாம்.

## நித்திரையின்காலம்.

தக்ஷர். దక్షః॥ "ప్రదోషపశ్చిమౌయామౌ వేదాభ్యాసరతో నయేత్। స్వాప్యామంశయానస్తు బ్రహ్మభూయాయకల్పతే"=பிரதோஷகாலங் கடந்தபின்பு இரண்டியாம வரையிலும் வேதமோதியிருந்து பின்பு ஒன்றரை யாமம் உறங்குமியற்கையுடையவன் முக்தியைப் பெறத்தக்கவனுவன். எ-று. காண்க.

மூலத்துள் "సంధ్యాస్నాన" என்றதுமுதல் "యోఽష్టింశిరాధుజ్జే" என்ற வரையிலும் நூலின் வெளிப்பட்ட சொற்பொருளாகவும், குறிப்புப் பொருளாகவும் பகலிற் செய்யத்தக்க கருமங்களெல்லாவற்றையும் சுருக்கிக் கூறப்பட்டது. இதனைச் செய்தால் நன்மையுண்டு செய்யாவழிப்பாவம் வருகின்றது.

## பகற்கருமத்தின்பயன்.

கூர்மபுராணம். కూర్మపురాణే ॥ "బ్రాహ్మణానాంకృత్యజాత మపవర్గఫలప్రదం। ఇత్థంతదఖిలంప్రోక్తం మహన్యహనియన్మయా। నాస్తిక్యాదథవాలస్యా ద్బ్రాహ్మణోనకరోతియః। సయాతినరకాన్ఘోరా న్కాకయోనౌప్రజాయతే। నాన్యోవిముక్తయేపంథా ముక్త్వాశ్రమవిధింస్వకం। తస్మాత్కర్మాణి కుర్వీత తుష్టయేపరమేష్ఠినః" = இங்ஙனமாக நாடோறும் வேதியர் வீடுபேற்றினுக்கு ஏதுவாகச் செய்யத்தக்க கருமங்கள் கூறப்பட்டது. நாத்திகத்தாலாயினும், சோம்பலாலாயினும் எந்தவேதியன் இதனைச்செய்வதில்லையோ? அவன் நரகத்தையனுபவித்துப்பின் காக்கையாகப் பிறக்கின்முன். தனது வருணச்சிரமதருமங்களை வழுவாது நடத்துவதினும் சிறந்த முத்திமார்க்கம் வேறில்லை யாதலின், ஆக்கிய கடவுள் களிக்கும்படி கருமங்களைச்செய்யவேண்டும். எறு. காண்க. (ருஎ௨)

## க்ஷத்திரியதருமம்.

మూ॥ అవ్రతాహ్యనధీయానా యత్రభైక్షచరా ద్విజాః
తంగ్రామందండయేద్రాజా చోరభక్తప్రదోహిసః॥ ౫౮॥

మూ॥ క్షత్రియోహిప్రజారక్షం ఛత్రపాణిః ప్రదండవాన్
నిర్జిత్యపరసైన్యాని క్షితింధర్మేణపాలయేత్. ॥ ౫౯॥

మూ॥ పుష్పమాత్రంవిచినుయా న్మూలచ్ఛేదంనకారయేత్
మాలాకారఇవారామె నయథాంగారకారకః॥ ॥௨௦௫॥

என்னின். அறுதொழிலும் செய்யும்படி வேதியன் அசாதாரணதருமம்கூறி அவற்றுள். ஓதலாதிப்பொதுத் தருமங்கூறுமுகத்தால்வந்த நித்தகருமங்கூறி, ஈண்டுவைப்பு முறையானே அரசதருமத்தை (எனவே அரசுரிமைபூண்ட வேந்தனது சிறப்புத் தருமத்தைக்) கூறுமுகத்தால் தீயோரைக் கடிதல், நல்லோரையோம்புதல் என்னுமிருவகையான அரசதருமத்துள் தீயரைக் கடிதலாகிய சிறப்புத்தருமம் முதற் சுலோகத்தால், கூறுகின்றது.

(இ-ள்). எந்தவூரில் இருபிறப்பாளர் விரதமும் இன்றிவேதமோதுதலுமின்றி ஐயமேற்றுத் திரிகின்றனரோ? அந்தவூர் கள்ளருக்குச் சோறிடுகின்றவூராம். அரசன் அந்த வூரிலுள்ளவர்களைத் தண்டிக்கவேண்டும்.

அரசன்படைகளை—ஆயுதங்களை, கையிற்பிடித்துத் துட்டரைத் தண்டித்துப் பகைவரைவென்று நிலத்தையடைந்து உயிர்களைக்களிப்பித்துத்தருமத்தோடுங்காக்கவேண்டும்.

பூஞ்சோலைக்கண்ணே பூவிற்பவன் பூக்களை மாத்திரம் பறித்துக் கொள்வதுபோற் கொள்ளலாமன்றிக் கரிவிற்பானைப்போல் வேரைக்களைந்து விடலாகாது. எ-று.

"వ్రతం" என்றதனால் பிரமசாரியன் தேன் முதலியவற்றை விட்டொழிதல் என்றவாறு. இதனையாஞ்ஞவற்கியர் கூறினர். యాజ్ఞవల్క్యః॥ " వ్రతమపీడయన్ " = பீடைசெய்யா தொழிவதேவிரதம். அல்லது, விரதத்தினைப் பீடியாது என்று கூறிஅவ்விரதத்தைவிளக்குகின்றனர். அதுவருமாறு. "మధుమాంసాంజనోచ్ఛిష్టం శుక్ల స్త్రీప్రాణిహింసనం। భాస్కరాలోకనాశ్లీల పరివాదాంశ్చవర్జయేత్ " = "మధు ". என்பது. ஈண்டுதேன். கள்ளன்று. என்னை? " నిత్యంమద్యంబ్రాహ్మణోవర్జయేత్ " = வேதியன் என்றும் கள்ளினை யொழித்தல் வேண்டும் என்று பொதுவகையாக விலக்கப்பட்டிருத்தலின். "మాంసం" எனவே ஆடுமுதலியவற்றின் மாமிசமும் ஆகாது என்றபடி. "అంజనం" = நெய்முதலிய வற்றால் உடம்பைப்பூசுதல். "ఉజ్జలం" =

மைமுதலிய கண்ணுக்குத்தீட்டல். "ఉచ్ఛిష్టం" குரவரல்லாதாரெச்சிலுண்டல். "శుక్తం" = கிட்டேமொழி, அன்னரசமன்று. என்னே? உண்ணலாகாதன கூறுமிடத்துவேறு பிரித்துரைக்கப்பட்டிருத்தலின். ஸ்திரீ=விடயபோகத்தின்பொருட்டு மாதரைஉபயோகித்தல். "ప్రాణిహింసనం" = சீவக்கொலை. "భాస్కరాలోకనం" = உதயாத்தமன மாகுஞ் சூரியனைத் தினமுநோக்குதல். "అశ్లీలం" = பொய்கூறுதல். "పరివాదం" = பிறர் குற்றத்தை வெளிப்படச் செய்தல்= புறங்கூறுதலுமாம். "ఆది" = முதலியன. எனவே வேறுமிருதிகளிற் கூறப்பட்ட சந்தனம் பூமுதலியனவற்றையும் பிரமசாரி விட்டுவிடவேண்டும். எ-று. காண்க.

அல்லதூஉம். தன்சாகையின் கிருஹியசூத்திரத்தில் கூறப்பட்டுள்ள பிரஜாபத்திய முதலிய நான்குவேத விரதங்களையும் அந்த "వ్రతం" என்ற மொழிகுறித்தவா றென்பது மொன்று. நால்வகைவிரதமான. பிராஜாபத்தியம், ஆக்கிநேயம், சௌமியம், வைசுவதேவம், என்பனவாம். இவை வேதமோதிய பிரமசாரி செய்யத்தக்கன.

ஆகவே விரதமில்லாதவர் எனவே இவ்விருவகை விரதமுமில்லாதவர்கள். எ-று. அத்தியயனமில்லாதவர் எனவே வேதமோதாதவர்கள். எ-று. கள்ளர். எனவே கள்ளரைப் போல்வார் என்றகருத்து. இச்சுலோகத்தால் விதிக்கப்பட்ட கருமம் செய்யாதிருப்பவர்களையும் விலக்கிய கருமங்களை யனுட்டிப்பவரையும் அரசன் தண்டிக்கவேண்டும் என்று இலக்கணையால் பொருள்படுகின்றது.

## வருணதருமநிலைபேறு.

அதனானே நாரதர்கூறினர். నారదః॥ "యోయోవర్ణో వహీయేత యశ్చాద్రేకమనువ్రజేత్। తంతం దృష్ట్వాస్వతో మార్గాత్ప్రచ్యుతం స్థాపయేత్పథి" =எந்தெந்த மரபுகுறைந்து விடுகின்றதோ? எது உயர்கின்றதோ? அவற்றையாராய்ந்தறிந்து தன்வழிதவறியுள்ளதனை அரசன் நன்மார்க்கத்தில் நிறுத்துக. எ-று. காண்க.

யாஞ்ஞுவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "అశాస్త్రోక్తేషుచాన్యేషు పాపయుక్తేషుకర్మసు। ప్రసమీక్ష్యాత్మనారాజా దండందండ్యేషుపాతయేత్। కులానిజాతీశ్శ్రే

జీశ్చ గణాన్జానపదానపి। స్వధర్మాచ్చలితాన్రాజా వినీయ స్థాపయేత్పథి"=நூல்களுட் கூறப்படாத தீவினைகளில் பழகியுள்ளவர்கள் தண்டனைப்படத்தக் கவரென்று, அரசன் தானுணரவரின் அவர்களைத் தண்டிக்கக்கட வன். அந்தணர் முதலிய வருணங்களும் "మూర్ధావసిక్త"=தலைமை பெற்ற மரபுகளும், தச்சர்முதலிய சிரோணியர்களும், ஐதுகர் முதலிய கணங்களும், அல்லது, படைமள்ளர்கூட்டமும், "జానపదాః"=தேயத்துள்ளவர்களும் தத்தம்மரபு ஒழுக்கந்தவறினரேல் அவர்களை யொறுத்து வசஞ்செய்து அவரவர்க்குரிய ஒழுக்கத்து நிறுத்துக. எ-று. சிரோணியர் = ஒரோதொழிலால் சீவிப்பவர். ஐதுகர் = ஒருகாரணம்பற்றிவந்தவர் (ஏதுப்பற்றிவந்தவர் ஐதுகர்) கணம் = கூட்டம். தேயத்துள்ளவர் = யாவர்க்கும் வேண்டும் பொதுத்தொழில் செய்துகொண்டு அவ்வவ்விடங்களிலுள்ள கருமான் முதலியவர்கள்.

## தண்டனைத்திறம்.

**மனு.** మనుః॥ "పితాచార్యస్సుహృన్మాతా భార్యాపుత్రఃపురోహితః। నాదండ్యోనామరాజ్ఞోఽస్తి యస్స్వధర్మేనతిష్ఠతి" = தந்தை, ஆரியன், நண்பன், தாய், மனைவி, மகன், புரோகிதன் இவர்களுள் யாரோயாயினுமாக ஒழுக்கந்தவறி யுள்ளவனைத் தண்டித்தல்வேண்டும். தண்டிக்கத்தகாதவன் அரசனுக்கு ஒருவனுமில்லை. எ-று. காண்க.

**யாஞ்ஞவற்கியர்.** యాజ్ఞవల్క్యః॥ "అపిభ్రాతాసుతోఽర్ఘ్యోవా శ్వశురో మాతులోఽపివా। నాదండ్యోనామరాజ్ఞోఽస్తి ధర్మాద్విచలితస్స్వకాత్" = தன்னெழுக்கத்தினின்றுந் தவறினேன், உடன்பிறந்தவன், மகன், பூசிக்கப்படுவோன், மாமன், அம்மான் இவர்களுள் யாரோயாயினும் அவன் தண்டனைப் படத்தக்கவனேயாம். அரசனுக்குத் தண்டிக்கத்தகாதவரில்லையாம். எ-று. காண்க.

## தண்டனைச்சிறப்பு.

**யாஞ்ஞவற்கியர்.** యాజ్ఞవల్క్యః॥ "యోఽదండ్యాన్దండయేద్రాజా సమ్యగ్వధ్యాంశ్చఘాతయేత్। ఇష్టంస్యాత్క్రతుభిస్తేన సమాప్తవరదక్షిణైః" = எந்த அரசன் தன்னொழுக்கந் தவறியவாற்றல் தண்டிக்கப் படுபவராயுள்ளவர்களை நல்லநூல்வழியேதக்கதண்டஞ்செய்விக்கின்றனோ? கொலைப்படத்தக்கவரைக் கொலைசெய்விக்கின்றனோ? அவ்வர

சன் பெருந்தானங்களைக் கொடுத்து வேள்விசெய்வித்த பயனைப் பெறுவன். எ-று. காண்க. தக்கதண்டனையாவது, சிறையிடுதல், அடிப்பித்தல், பொருட்பறி முதலியன.

## தண்டனைத்தவறு.

மனு. మనుః॥ "అదండ్యాన్దండయన్రాజా దండ్యాంశ్చైవాప్యదండయన్। అయశోమహదాప్నోతి నరకంచాధిగచ్ఛతి" = தண்டிக்கப் படாதவரைத் தண்டித்தாலும், தண்டிக்கப் படுவோரைத் தண்டியாது விட்டாலும் அரசன் பெரும்பழியையும் அடைவன். நரகத்திலும் புகுவன். எ-று.காண்க.

## தண்டனைவகை.

நாரதர். నారదః॥ "శారీరశ్చార్థికశ్చేతి దండశ్చద్వివిధస్స్మృతః। శారీరస్తాడనాదిస్తు మరణాంతఃప్రకీర్తితః। కణాదిస్త్వర్థదండస్తు సర్వస్వాంతస్తథైవచ" = அத்தண்டனை யிருவகைப்படும். அவை, அடித்தல்முதல் கொலைவரையிலும் சரீரதண்டனை யெனவும், கணத்தளவுமுதல் முற்றும்பறித்தல்வரையும் பொருட்டண்டனை யெனவும் கூறப்படும். எ-று. காண்க.

## அரசனுரிமையாணை.

மனு அரசனுக்கே தண்டனையுரிமை யாணையென்று கூறுகின்றனர். మనుః॥ "అరాజకేహిలోకేస్మిం త్సర్వతోవిద్రుతేభయాత్। రక్షార్థమస్యసర్వస్య రాజానమసృజత్ప్రభుః। ఇంద్రానిలయమార్కాణా మగ్నేశ్చవరుణస్యచ। చంద్రవిత్తేశయోశ్చైవ మాత్రానిర్హృత్యశాశ్వతీః। యస్మాదేషాం సురేంద్రాణాం మాత్రాభ్యోనిర్మితోనృపః। తస్మాదభిభవత్యేష సర్వభూతాని తేజసా। తపత్యాదిత్యవచ్చైష చక్షూంషిచమనాంసిచ। నచైనంభువిశక్నోతి కశ్చిదప్యభివీక్షితుం। సోగ్నిర్భవతివాయుశ్చ సోర్కస్సోమస్సధర్మరాట్। సకుబేరస్సవరుణ స్సమహేంద్రఃప్రభావతః। బాలోపినావమంతవ్యో మనుష్యఇతిభూమిపః। మహతీదేవతాహ్యేషా నరరూపేణతిష్ఠతి। ఏకమేవదహత్యగ్ని ర్నరందురుపసర్పిణం। కులందహతిరాజాగ్ని స్సపశుద్రవ్యసంచయం। కార్యంసోవేక్ష్యశక్తించ దేశకాలౌచతత్త్వతః। కురుతేధర్మసిద్ధ్యర్థం విశ్వరూపంపునఃపునః। యస్యప్రసాదేపద్మాశ్రీ ర్విజయశ్చపరాక్రమే। మృత్యుశ్చవసతిక్రోధే సర్వతేజోమయోహిసః। తంయస్తుద్వేష్టిసమ్మోహా త్సవినశ్యత్యసంశయం। తస్యహ్యాశువినాశాయ రాజాప్రకురుతేమనః। తస్మాద్ధర్మంయమిష్టేషు సత్యంపశ్యేన్నరాధిపః। అనిష్టంచాప్యనిష్టేషు తంధర్మంనవిచాలయే

త్। తస్యార్థేసర్వభూతానాం గోప్తారంధర్మమాత్మజం। బ్రహ్మతేజోమయందండ, మసృజ త్పూర్వమీశ్వరః। తంరాజాప్రణయంత్సమ్య క్త్రివర్గేణాభివర్ధతే" = உலகத்துள் அரசனில்லாது, வலியவர்களால் அச்சமுற்று எளியவர் யாவரும் ஓடும்போது, அவர்களைக் காக்கும்பொருட்டு இவ்வுலகத் தலைவர், இந்திரன், வாயு, இயமன், சூரியன், அக்கினி, வருணன், சந்திரன், குபேரன் இவ்வெட்டுத் தேவர்களினுடைய நிலைபெற்ற அம்சங்களையெடுத்து, அரசனைப்படைத்தார். அவ்வரசன் தெய்வ கலையோடு பிறந்தவனாதலின் தனது ஒளியால் எல்லாப் பூதங்களையும் பின்னிடச்செய்கின்றான். சூரியனைப்போலக் கண்ணினையும், மனத்தினையும், காய்கின்றான். இவ்வரசனை நன்றாகப்பார்ப்பதற்கு உலகத்தில், ஒருவனும் வல்லவனல்லன். வல்லமையால் அவ்வரசனே தெய்வமாக விருக்கின்றான். அவ்வரசன் இளைய மகனேயாயினும் மானுடவடிவங்கொண்ட பெருந்தெய்வ மாதலின் அவனை ஏனையமானிடரைப்போல மதித்து அவமானஞ் செய்யலாகாது. அருகிலேயடுத்துவந்த ஒருவனைமாத்திரமே தீயானது சுட்டுவிடுகின்றது. இவ்வரசனாகிய தீயானது ஒருவன் மேலிட்டு வந்தால் அவனையும் அவன் குடும்பத்தையும், பசுநிரைபொருள்களையும் சுட்டொழித்துவிடும். அவ்வரசன் வினைமேல் நாட்டம் வைத்து, காலதேசப்பகுதிகளையும் தன்னாற் றலையும் நோக்கித் தன்றருமத்தை முற்றிக்கொள்ளும்படி அடிக்கடியும் பலவடிவங்களையும் கொள்ளுகின்றான். (எனவே, சத்தி யில்லாதவனைப் போலும், தோழனைப்போலு, அடிமையாளைப்போலும், அசட்டைசெய்பவனைப்போலும், பகைவனைப்போலும் நடிப்பன்). அதனை நம்பி, அரசனுக்கு மாறாக நடக்கலாகாது அரசனுக்குத்தயவு வந்துவிட்டால் செல்வமுண்டாம். அவன் வீரத்துள் வெற்றியுண்டாம். கோவத்துள் மிருத்தியு இருக்கின்றது. எல்லாவொளியையுமுடையவனன்றோ? அரசன். யார் அறிவின்மையால் அரசனைப்பகைக்கின்றானோ? அவன் ஐயமில்லாமல் அழிந்து விடுகின்றான். பகைவனை யழிப்பதற்கு அரசன் எப்போதும் எண்ணமுடையவனாகவிருக்கின்றான். ஆதலால் அரசனானவன் தான்விரும்பினவரிடத்து எந்தத் தருமத்தை நியமிக்க முயற்சிக்கின்றானோ? தான்விரும்பாதவரிடத்து எந்தக்கெடுதியைச் செய்யவிரும்புகின்றானோ? அதுவேதருமமாகவிருக்கின்றது. அந்நியமத்தை அசை

ப்பிக்கமுடியாது. (எனவே அரசனுணை யெதுவாயினும் கடக்க லாகாது என்றபடி). அவ்வரசனுக்குப் பயனுண்டாம் பொருட் டுக்கடவுள் முன்னமே பிரமவொளியை யுடையனுகியும் தன்மக னுகியும் எவ்வுயிர்களையும் காப்பவனுகியும் உள்ளதண்டனை வடி வாகிய தருமத்தினைப் படைத்தார். அரசனனவன் அந்தத்தரும மானதண்டனையைக்குற்றமுடையவர்களிடத்துமுறையே செலுத் துவித்ததனுல், அறம், பொருள், இன்பம், என்னுமுன்றினுலும் விருத்தியடைகின்ருன். எ-று. காண்க.

மஹாபாரதம். మహాభారతే॥ "పరోక్షాదేవతాస్సర్వా రాజాప్రత్యక్షదైవతం। ప్రసాదశ్చప్రకోపశ్చ ప్రత్యక్షో యత్రదృశ్యతే। రాజామాతాపితాచైవ రాజాకులవతాంకులం। రాజాసత్యంచధర్మశ్చ రాజాహితకరోనృణాం। కాలోవాకారణంరాజ్ఞో రాజాకాలస్యకారణం। ఇతితేసంశయోమాభూ ద్రాజాకాలస్యకారణం। రాజమూలోమహారాజ ధర్మోలోకస్యరక్ష్యతే। ప్రజారాజభయాదేవ నబాధంతేపరస్పరం" = எல் லாத்தேவரும் பொறிகளுக்கு விடயப்படாது எட்டக்கூடாத வர்களா யிருக்கின்றனர். அரசனுகிய. தெய்வம் கண்காண எதி ரிலுள்ள தெய்வமாக விருக்கின்றது. அரசனுடைய அருளும் கோவமும் கண்காணப் பயனைக் கொடுத்தே விடுகின்றன. மன் பதைக்கு = மக்களுயிர்க்கு அரசனே தந்தையாயும் தாயா யும் குலமாயும் இருக்கின்ருன். அரசன்கூறியதே யுண்மை. அர சன்செய்ததே தருமம். அரசனே யாவர்க்கும் இன்பஞ்செய்ப வன். காலவியல்பைப்பற்றி அரசனுக்கு அறிவுண்டாகின்றதோ? அரச னறிவுடைமை பற்றிக் காலதருமம் உண்டாகின்றதோ? என்ற ஐயம்வேண்டா. அரசனே காலத்திற்குக் காரணனுகவிருக் கின்ருன். அரசன்முறை தவருது அறவொழுக்க முடையவ னுல் உலகம் நிலைபெற்றிருக்கின்றது. அரசன் பயத்தினுலே யே மனிதர் ஒருவரையொருவர் துன்பஞ் செய்வதில்லை. எ-று. காண்க.

## அரசனென்னும் பெயர்த்தகுதி.

அற்றேல் "దండయేద్రాజా" = அரசன் தண்டிக்க வேண்டு வது. என்று கூறப்பட்டது. நிலத்தினை யாள்பவனன்ருே? அர சன்! தண்டனையுமாணையும் அவனுக்கன்ருே?, உரியது. இங்ஙன

மாக இது க்ஷத்திரிய வருணத்திற்கே யுரிய சிறப்புத்தருமம் என எங்ஙனம் கூறப்படும் எனில்? அற்றன்று.

வருணதருமங்களைக் கூறவந்த நூலுட் கூறப்பட்ட "இராஜன்" என்னு மொழிக்கு க்ஷத்திரியனே பொருளென்று தரும நூல் முடிபு. க்ஷத்திரிய னல்லாதவனுக்கும் அரசச்செல்வ முண்டாயிருப்பின் தொழிலைப் பற்றியவாறாக வுலகவழக்கினால் அம் மொழி உபசார வழக்காகச் செல்லுமென்றுணர்க. வைதிகமாகிய "இராஜன்" என்னு மொழி க்ஷத்திரியன் பாலதேஎன்று மீமாம் ஸையில் அவேஷ்டி அதிகரணத்துள்ளும் விதிக்கப்பட்டுள்ளது.

## அவேஷ்டி அதிகரணம்.

பூருவ மீமாம்ஸை, ஜைமினிசூத்திரம் இரண்டாம் அத்தியாயம். அவேஷ்டி என்ற அதிகரணம்.

விடயவாக்கியம். சுருதி. శ్రుతిః॥ "ఆగ్నేయమష్టాకపాలం నిర్వపతిహిరణ్యందక్షిణా" = அக்கினி தேவதாகமாகிய புரோடாசத்தை எட்டுக் கபாலத்தில் சுத்தப்படுத்தி வைத்து ஹோமஞ் செய்கின்றுன். அதற்குப் பொன்னைத் தக்ஷிணையாகக் கொடுக்கவேண்டுவது. என்றது முதலிய சுருதிகளால் அரசன் செய்யத்தக்க இராசசூய மென்னும் வேள்வியில் அவேஷ்டியென்னும் பெயரினையுடைய வேள்விக்கருமத்தை முன்னிலை யாக்கிக்கொண்டு, "యదిబ్రాహ్మణోయజేత బార్హస్పత్యం మధ్యేనిధాయాహుతిం హుత్వాతమభిఘారయేత్, యదిరాజన్య ఐన్ద్రం, యదివైశ్యో వైశ్వదేవం"=வேதியன் வேள்விசெய்வதாயின் பிரகற்பதியைத் தெய்வமாகவுடையதை நடுவேவைத்து ஆகுதியை ஹோமஞ்செய்து அதனை அபிகரிக்கவேண்டும் (அபிகரித்தல் - நெய்வார்த்தல்) அரசனாயின் இந்திரனைத் தெய்வமாக வுடையதனை. வைசியனாயின் விசுவேதேவர்களைத் தெய்வமாக வுடையதனை. எ-று. என்பது.

சமுசயம். அவேஷ்டி என்ற வேள்வியில், பொருந்தும் வேதியன் முதலியோர்க்கு நடுவே வைத்துக்கொள்ளும் விசேடத்தைக்குறித்த நிமித்தமே பயனாகவுடையதாய் அவர்கள் பெயர் கூறப்பட்டதோ? இல்லையேல், பொருந்தாதவர்களைப் பொருத்துவிப்பதோ? அதுசித்திக்கும்பொருட்டு மூன்றுவருணத்தார்க்கும்

இராஜ சூயத்தில் அதிகார முடைமையோ? அல்லது, க்ஷத்திரிய னுக்கு மாத்திரமேயோ? அதன்பொருட்டு, "இராஜ" என்னு மொழி மூன்று வருணத்தினர்க்கும் பெயரா? அல்லது க்ஷத்தி ரியனுக்குமாத்திரமே பெயரா? அதன்பின்னரும் "இராஜ" என்னு மொழி இராச்சிய போக்கியதையே நிமித்தமாக வுடையதா? அல்லது,க்ஷத்திரியத்தன்மையையே நிமித்தமாகவுடையதா?என் பது. க்ஷத்திரியத்தன்மை = பிறப்பால் அம்மரபுடைமை.

பூருவபக்ஷம். "இராஜ" என்னுமொழி இராச்சிய யோக் கியத்தையே நிமித்தமாகவுடையதாம். சான்றோராட்சியுடைமை யினாலும், உலகமுழுவதும் வழங்கும் வழக்குடைமையாலும், மறுக்கப்படா திருத்தலினாலும் என்றுகொள்க. பிறப்பாலாய க்ஷத்திரியத்தன்மையையேநிமித்தமாகவுடையதென்பதுகூடாது. இழிசனருள் வழங்குதலுடைமை சான்றோ ராட்சியினும் ஆற்ற லற்ற தாமாதலினாலும், தமிழ் நூலுடையாரால் மறுக்கப்பட்டி ருத்தலினாலும், அவரல்லாத ஏனையருள்ளும் ஆட்சி யில்லாமை யாலும். என்க.

இராச்சியத்தை யுடையவனே இராஜன் என்பதற்குத் தமிழ் வழக்கு. "வேடர்க்கதிபதி நாகனென்பான்" எம், "வேடர்தங் கோமானுகன்" எம், "மைந்தனையீண்டழைத் தூநுங்கள் வரையாட்சியருளென்றூர் மகிழ்ந்து வேடர்." எம், குறுநிலமன்னர், வேளிர்குலத்தரசு, காடவர்கோன், குறும் பரசர், மலாடர்கோமான், எம், "அடிசேர்முடியினராகி யரசர்கடாந்தொழ, இடிசேர் முரசங்கண் முற்றத்தியம்ப விருந்தவர், பொடிசேர் துகளாகப் போவார்" எம். "உயர்குலமுமெல்லாந் திருமடந்தை யாம்போதவளோடு மாகும் அவள்பிரிந்து போம்போ தவளோடும் போம்". எம். கூறுப. "திருவு டைமன்னரைக் காணிற் திருமாலைக்கண்டேனே யென்னும்." என்பதுமது.

இனி அங்குள்ள, இராச்சிய சம்பந்தத்தினால் மூன்று வரு ணத்தாரும் அரசனே யாகின்றனர். "இராச்சியம்" என்னும் மொழியோ? வழக்கினால் தேயத்தின் காப்பினிடத்தே செல்லு கின்றது. அரசனுடைய சம்பந்தத்தைக் குறித்து நிற்பதில்லை. ஆயின் "[illegible]" என்னுஞ் சூத்திரமதிகாரமாக, "[illegible]" என்ற சூத்திரத்தால் "[illegible]" என்ற பிரத்தியயம் வியாகரணத்துட் கூறப்பட்டுள்ளது. அக்கணத்துள் "இராஜம்" என்ற மொழியும் கூறப்பட்டது. (எனவே, அதிபதி யென்பது

கருமப் பொருளில் ஆதிபத்தியம், எம், புரோகித என்னு மொழிகருமப் பொருளில் அவ்வாறு "யக்கு" வந்து பௌ ரோகித்தியம் என்றாற்போல கூட்டத்துள் கூறப்பட்ட "இராச" மொழியும் கருமத்தில் "யக்கு" வந்து இராச் சியம் என முடிந்தது என்றபடி). இந்நூலு மிருதியாமாகவே, உலகவழக்கினும் செய்யுள்வழக்கு வலியதாமாதலின் இராஜ சம்பந்தம்இராச்சியம் என்னும் மொழியாக்கத்திற்கு நிமித்தமா மே எனில்? அற்றன்று; சொற்களின்பொருளை நிச்சயிப்பதற்கு உலகவழக்கே யளவையாமாதலின். மிருதி = செய்யுள் வழக்கி னுக்கு மதுவே காரணமாம் அன்றி, வேறல்ல. இராச்சியமுடைய வனுக்கு இராஜன் என்னும் வழக்குடைமையானும் நீர்கூறிய வகையானும் இராச்சியமென்னு மொழியாக்கத்திற்கு இராஜ என்னு மொழிச் சம்பந்தங் காரண மாதலாலும் "இராஜா, இராச்சியம்" என்னு மிவ்விரண்டனுள் இராஜ மொழிக்கே சுதந்தரமுடைமை யாகின்றது அதனைப்பற்றி எழுந்த வியா கரணச் சூத்திரவிதி சொற்களின் வழுவையும் வழுவின்மை யினையும் விளக்குதன்மாத்திரையே வந்ததென்று அதற்குப் பொருள் கூறவேண்டும். அதனால் மூன்றுவருணத்தாரும் "இரா ஜா" என்னு மொழியால் கூறத்தக்கவராய் "இராஜசூய யாகத் தில்" பொருத்த முடையவர்களா யிருத்தலின் சுருதியில் அவர் கள் பெயர் கூறப்படுவது "ஶார்ஹஸ்பத்யம்" பார்ஹஸ்பத்திய முதலிய வற்றை நடுவே வைப்பது நிமித்தமாக வுடையதே சம்பந்த மாய் நேர்ந்தது. "யதி" = ஆனால் = ஆனபக்ஷத்தில், என்ற மொழியை "இராஜா" என்றமொழிக்கு இராச்சிய சம்பந்த மென்னு நிமித்தமுடைய தென்பதற்குப் பிரமாண முடையதா கின்றது. அங்ஙனமல்லாக்கால் "பிராமணன் முதலிய மொழி கள் ஆண்டு வாராவன்றே? "யதி" என்ற மொழியை ஆண்டு கூறியிருப்பதற்கும் நியாயமில்லாது ஒழியும். (எனவே, வேதி யன் இராஜசூயம் செய்தால் என்ற மொழியினால், வேதியன் அரசனால் என்றிவ்வாறு தோற்றுகின்ற தென்பது கருத்து). வியாகரண் மிருதிக்காயினும் வைதிகவழக்குச் சிறந்தது. ஆத லின் விடயவாக்கியத்துள் கூறப்பட்ட பிராமணன் என்றது முதலிய மொழிகள் காரணப் பொருளினவாம். என்பது.

சித்தாந்தம். வேதத்துள் கூறிய மாத்திரையானே ஈண்டு வரம்பு செய்வதற்கு அமையாதன்றோ? வேறுவகையால் வரம்புபெறுதலுடைமையின். "ராஜாநமபிஷேசயேத்" = இராஜனுக்குப் பட்டாபிடேகஞ் செய்யவேண்டும் என்ற இவ்வபிடேக விதிவாக்கியத்துள், அரசுவருவதற்கு முன்பாகவே இராஜா என்னும் மொழி பட்டாபிடேகத்திற்குத் தகுதியுடைய க்ஷத்திரியனுக்குக் கூறப்பட்டுள்ளது. அதனால் இராஜா "என்னுமொழிருடம் = வழக்காற்றலுடைய தென்றே கொள்ளப்படுகின்றது. இனி "ஸஃ" என்பதுவும் அவ்வியயமாதலின் எங்ஙனமே யாயினும் வியாகரண நியமத்திற்கு வாதையில்லாதபடி பொருட்சம்பந்தமாகின்றது. "இராஜா" என்னுஞ்சொல் வியாகரணத்தால் விவகரிக்கப்படுதலினால் சுதந்தரமுடையதல்லது இராச்சிய நிமித்தத்தினால் வந்ததன்று. இராஜமொழிக்கு க்ஷத்திரியன் என்று பொருள்கொள்ளும் வழக்கினுக்குக் காரணமில்லை என்பது கூடாது. இராச்சிய முடைமையாலன்று பிறப்பியற்கையானே "இராஜா" என்ற மொழி க்ஷத்திரியனுக்கே என்பதற்குத் தமிழ்நூல் வழக்குடைமையே காரணமாக விருக்கின்றது. "ஸ்ரீ நயதார்த்யோ ஸ்ம்ருதிஸ்ய ப்ரமாணமஸ்தி" = வழக்கு உண்மையே யான வழி மிருதிபிரமாணமாகாது. (எனவே, உண்மையான வுலக வழக்குச் செய்யுள் வழக்கினுஞ் சிறந்ததென்பது கருத்து). என்று சான்றோராகிய அவ்வியாகரண வாசிரியரானே கூறப்பட்டிருத்தலின். உலகவழக்கு ஈண்டுச் சம்பந்தப்படுகின்றது. வழக்கு என்பது எப்பொருளை யெம்மொழியாற் கூறிவந்ததோ? அது. பொதுவாகிய மயக்கவகையால் மருவியதற்குத் தடையுண்டாகின்றது. ஆதலின், "இராஜா" என்ற மொழியின் காரணசம்பந்தத்தானே "இராச்சியம்" என்னு மொழியாக்கப்பட்டது. சுதந்தரமொழி = வேறுகாரணத்தால் தோன்றாத சொல்லாகிய இராஜாஎன்றது பிறப்பால் க்ஷத்திரியனையவனைக் குறிக்குஞ் சொல்லாகின்றது. மேற்கூறிப் போந்தசுருதி மொழியாகிய விடயத்தொடர் மொழியால் கூறப்பட்டுள்ள வேதியன் முதலியமொழிகள் அவேஷ்டியென்ற வேள்விக்கருமத்தில் அவ்வேதியன் முதலியோர்க்கு இல்லாதபேற்றைப் பெறுவிக்கின்றது. என்பது சித்தாந்தம்.

இராஜன் என்பது மரபுபற்றிய க்ஷத்திரியனுக்கே யெனத் தமிழினுள்ளும் "அரசிளங் குமரன்போது மணிமணிமாடவீதி" எம், "உரிமையரசர் தொழில்புரியார்" எம், "வளநாடெல்லாங் கவர்ந்து முடியொன்று மொழியவரசர் திருவெல்லாமுடையராயினர்." எம், "செம்பியர்தந் தொல்லை நீடுங்குலமுதலோர்க் கன்றிச்சூடோ முடியென்று" எம், "பார்த்திபன் றென்னன் பாண்டியற்காகவே." எம், "நாவலந்தீவகத்தினுக்கு நாதரான காவலரோயேவி விடுத்தாரேனும் கடவமலோம்." எம், "முடியாலுலகாண்ட மூவேந்தர்முன்னே" எம், "வேந்தராயுல காண்டறம்புரிந்து" எம், "திருவும்வண்மையுந் திண்டிறலரசுஞ் சிலந்தியார்செய்த செய்பணிகண்டு, மருவு கோச்செங்க ணன்றனக்களித்த வார்த்தைகேட்டு." எம், "தெருண்டவாயிடைநூல் கொண்டுசிலந்தி சித்திரப்பந்தர் சிக்கெனவியற்றச் சுருண்ட செஞ்சடை யாயதுதன்னைச் சோழனுக்கிய தொடர்ச்சிகண்டு அடியேன்" எம், "வேந்துவினையியற்கை வேந்தனொரீஇய, வேனோர்மருங்கினு மெய்திடனுடைத்தே" எம், பொருளதிகாரம் மரபியல் முதலியவற்றுள்ளும் வருவனகாண்க.

அவ்வாறே மீண்டும் "இராஜா" என்றமொழி க்ஷத்திரியனுக்கே உரியபெயராகின்றது.

ஆயின், மன்னுயிர்க்கு இரஞ்சனம் செய்தல் = இனியன செய்து இன்பச்சுவை விளைவித்தலின் இராஜத்தன்மை யுண்டாயதென்று மகாபாரதத்துட் கூறப்பட்டது. మహాభారతే॥ "రం జనాత్తులురాజత్వం ప్రజానాంపాలనాదపి" = சந்தோடஞ் செய்து. சுவைப் படுத்தலினாலும் மன்னுயிர்களைக் காத்தலாலு மன்றோ? இராஜத்தன்மை. எறு. என்னெனில்?

ஆம், உண்மையே! மூலம் - ௫௬ - வது சுலோகத்துள். "క్షత్రియోహి ప్రజారంజక" = மன்னுயிரைக் களிப்பிப்பவ னன்றோ? க்ஷத்திரியன் என்று கூறி, மன்னுயிரைக் களிப்பித்தல் வடிவாகிய சிட்டரைப் புரத்தல் க்ஷத்திரியனுக்குத் தருமமென்று கூறப் பட்டதாகலின் க்ஷத்திரியனுக்கு அங்ஙனம் இனிமைசெய்தலு முண்டாகின்றது. ஆயின், ஈண்டு துட்டரையொறுத்தன் முன்னிலையாகிய நல்லோரைக் காத்தல் கூறப்பட்டது. பாரதத்துள் அரசநீதியில் சிட்டரைக் காத்தலின் பொருட்டே துட்டரை யொறுத்தலென்று மன்னுயிர்க் கினிமைசெய்தலைச் சிறந்ததாக வெண்ணியதனை முன்னர் கூறப்பட்டது. என்க.

யாஞ்ஞவற்கியரும். యాజ్ఞవల్క్యః॥ "ప్రధానః క్షత్రియే ధర్మః ప్రజానాంపరిపాలనం" = க்ஷத்திரியனுக்கு மன்னுயிரைக் காத்தலே சிறந்த தருமமாக விருக்கின்றது. எ-று. காண்க.

மனுவும் அங்ஙனமே கூறினர். మనుః॥ "ప్రజానాంరక్షణందానమిజ్యాధ్యయనమేవచ। విషయేష్వప్రసక్తిశ్చ క్షత్రియస్యసమాదిశేత్" = மன்னுயிரைக்காத்தல், கொடை, வேள்வி, ஓதல், புலன்வழி மனஞ்செல்லாதடக்கல் அரசனுக்குத் தருமமென்று விதிக்கப்படுகின்றது. எ-று. காண்க.

இது பாரதத்திற்கு மாறுகொளலன்று சாந்தி பருவத்திலும் இங்ஙனமே கூறியிருக்கின்றது. శాంతిపర్వణి॥ "నృపాణాంపరమోధర్మః ప్రజానాంపరిపాలనం। నిర్దిష్టఫలభోక్తాహి రాజాధర్మేణయుజ్యతే। వర్ణానామాశ్రమాణాంచ రాజాభవతిపాలకః। స్వేస్వేధర్మేనియుంజానః ప్రజాస్సర్వాః పాలయేత్సదా। పాలనేనైవభూతానాం కృతకృత్యోమహీపతిః। సమ్యక్పాలయితాభాగం ధర్మస్యాప్నోతిపుష్కలం। యజతేయదధీతేచ యద్దదాతియదర్చతి। రాజాషడ్భాగభాక్తస్య ప్రజాధర్మేణపాలయన్। సర్వాశ్చైవప్రజానిత్యం రాజాధర్మేణపాలయేత్। ఉత్థానేనప్రసాదేన పూజయేచ్చాపిధార్మికాన్। రాజ్ఞాహిపూజితోధర్మస్తతస్సర్వత్రపూజ్యతే। యద్యదాచరతేరాజా తత్ప్రజానాంచరోచతే" = மன்னுயிர்களைப் புரப்பதே அரசர்க்குத்தலை சிறந்ததருமமாம். அப்படிப்பட்ட அரசன் க்ஷத்திரிய தருமத்துட் கூறியுள்ள பயனை யடைகின்றான். வருணாச்சிரம வொழுக்கங்களுக்கு அரசனே காவலனாதலால் அவரவர்தருமத்தில் அவரவரை நிறுத்தித்தன் குடிகளை யெப்பொழுதும் காக்க வேண்டும். அரசன் உயிர்களைக் காத்தலால் செய்வனசெய்து முடித்தவனாகின்றான். நன்றாகவுலகோம்பு மரசன் மன்பதை= மக்கள்கூட்டம் செய்கின்ற வேள்வி, ஓதல், கொடை, பூசை, முதலிய தருமங்களில் ஆறிலொரு பங்கினை யடைகின்றான். ஆதலால், எல்லா வுயிர்களையும் தருமமாகவே காக்கவேண்டும். தருமசீலர் தன்னிடத்திற்கு வந்தபோது தக்கபடிஎழுந்திருத்தல், முகமலர்ச்சி, உபசாரம், முதலியவற்றால் உபசரிக்கவேண்டும். அரசனால் உபசரிக்கப்பட்ட தருமம் எல்லாவிடங்களிலும் பூசிக்கப்படும். அரசன் எதனைஎதனைச் செய்யத்தொடங்குகின்றானோ? அதனை அதனைக்குடிகளும் செய்யத்தொடங்குகின்றனர். எ-று. காண்க.

மார்க்கண்டேய புராணம். మార్కండేయపురాణే॥ "వత్సరాజ్యాభిషిక్తేన ప్రజారంజనమాదితః। కర్తవ్యమవిరోధేన స్వధర్మస్య మహీభృతా। పాలనేనైవ భూతానాం కృతకృత్యో మహీపతిః। సమ్యక్పాలయితా భాగం ధర్మస్యాప్నోతి పుష్కలం"= மகுடஞ்சூடிய அரசன் தனது தருமத்திற்குக் கேடில்லாமல் மன்னுயிர்க் கினிமையை முன்னர்ச் செய்யவேண்டும். எல்லாவுயிர்களையும் காத்தல் செய்தால் அரசன் கடமை அவ்வளவோடு போதுமான தாகின்றது. நன்றாகவுலகோம்பும் அரசன் ஓம்பப் பட்டவர்கள் செய்ததருமத்தில் முழுப்பங்கினை யடைகின்றான். எ-று. காண்க.

பிரமாண்ட புராணம். బ్రహ్మాండపురాణే॥ "యదహ్నా కురుతే ధర్మం ప్రజాధర్మేణ పాలయన్। దశవర్ష సహస్రాణి తస్య భుంక్తే మహత్ఫలం। సర్వతో ధర్మషడ్భాగో రాజ్ఞో భవతి రక్షతః। రక్షన్ధర్మేణ భూతాని రాజావధ్యాంశ్చ ఘాతయన్। యజతేऽహరహర్యజ్ఞైస్సహస్రశతదక్షిణైః। యోऽరక్షన్బలిమాదత్తే కరంశుల్కంచపార్థివః। ప్రతిభాగంచదండంచ సద్యోనరకంవ్రజేత్" = தருமத்தோடு மன்னுயிரோம்பும் அரசன் ஒரு நாள் செய்த அத்தருமத்திற்கு உண்டாகும் பெரும்பயனைப் பதினாயிரம் வருடம் அனுபவிக்கின்றான். காப்பவனுக்கு எல்லார் புண்ணியத்துள்ளும் ஆறிலொரு பங்குவரும். தருமத்தோடு எல்லாவுயிர்களையும் பாதுகாத்து, கொலைப்படத்தக்க பாவியர் களைக்கொன்று, நூறு ஆயிரமாகக் கொடைகொடுத்து நாடோறும் வேள்விக்கருமத்தால் கடவுளைப் பூசிக்கவேண்டும். மன்னுயிர்களைக் காவாமலே எந்த அரசன் அம்மன்பதையிடத்திருந்து கையடைப்பொருள், இறைப்பொருள், ஆயத் துறைச் சுங்கப் பொருள் பெறுகின்றானோ? விரும்பியவற்றையும் துயப்பனவற்றையும் = போகத்தையும் அடைகின்றானோ? தண்டிக்கின்றானோ? அந்த அரசன் அப்போதே நரகத்தை யடைகின்றான். எ-று. காண்க.

அரசனால் காக்கப்படுவோர் அச்சமுற்றவர்களே யாம். அந்த அச்சம் இருவகைப்படும். கள்ளராலும், துட்டராலும், கொடிய மிருகங்களாலும் உண்டாவது எனவும், பகைவர்சேனையா லுண்டாவதெனவுமாம். இவ்விருவகை யச்சத்தினையும் ஒழிக்கும்பொருட்டு, "ప్రచండవాన్" = நல்லதண்டனையை யுடையவனா யிருத்தல்வேண்டும் என்றும், "నిర్జిత్యపరసైన్యాని" = பகை

வர் படையைவென்று என்றும் கூறப்பட்டன. மக்கட்டொகுதி யின் அச்சத்தை யொழித்தலாகிய இவ்வினை க்ஷத்திரியனுக்கே உரியதருமமென்பதெங்ஙனமென்னும்வினு வருவித்துக்கொண்டு, அதற்குக் காரணமாக, "శస్త్రపాణిః" ஆயுதங்களைக் கையிற் பிடிக்கவேண்டும் என்று அரசதருமம் கூறப்பட்டது.

படைக்கலம் தொடுதல் அரசனுக்கே யுரியதென்று மனு கூறினர். మనుః॥ "శస్త్రాస్త్రభృత్త్వం క్షత్రస్య" = சத்திரங்களையும் அத்திரங்களையும் தரிப்பது க்ஷத்திரியனுக்குரியதருமம். எ - று. காண்க.

## படைக்கலவுரிமை.

அநுசாசனிக பருவத்திலும். வேந்தனைப்பற்றிக் கூறப்பட்டது. ఆనుశాసనికే॥ "ఉత్సాహశ్శస్త్రపాణిత్వం తస్యధర్మస్సనాతనః" = மேலான துன்பத்தைப் பொறுத்துச் சிறந்த புகழை யடையவேண்டுமென்னும் களிப்போடுங் கூடிய எண்ணம் "ఉత్సాహః" ஊக்கம் என்னப்படும். ஆதலினிதுவும், (எனவேபோர்விருப்பம்). படைக்கலங் கைப்பற்றலும், அந்த அரசனுக்குத் தொண்டுதொட்டுவந்த அழிவற்ற தருமமாம். எ-று. காண்க.

சத்திரம் என்றதனுல் போருக்குவேண்டிய கருவிகளெல்லாமும் இலக்கணையாற்கொள்ளப்படுகின்றது. அவை. சாந்திபருவத்துட் கூறப்பட்டது. శాంతిపర్వణి॥ "యష్టయస్తోమరాఃఖడ్గాః సాధనాని పరశ్వధాః। ధనూంష్యథవర్మాణి పరికల్ప్యాన్యనేకశః" = ஈட்டி, சவளம், வாள் முதலியவாகப் பகைவரைவெல்லத்தக்க கருவிகள். மழு = கண்டக்கோடாலி, கேடகம் = பலகை, 1 கவசம், முதலியவற்றினைப் பலவாறுகச்சமைத்துக்கொள்ளவேண்டும். எ-று. காண்க.

"ప్రచండవాన్" = சிறந்ததண்டனை யுடையவன் என்றதனுல் கள்ளர்முதலியோரை ஒறுப்பது என்றகருத்தாகின்றது. ஆயின் இப்பொருள் முன்னரோ கூறப்பட்டதாயினும், அது அங்கு பொதுவகையாற் கூறப்பட்டது. ஈண்டு மன்பதை புரத்தலுக்கு இன்றியமையாதவென்று சிறப்பித்துக் கூறப்படுகின்றது. ஆதலிற் கூறியது கூறலன்று.

## ஒறுத்தலின்வகை.

அவ்வொறுத்தலின் வகையை மனுகூறினர். మనుః॥ "అనుబంధంపరిజ్ఞాయ దేశకాలౌచతత్త్వతః। సాపరాధమథాలోచ్యదండందండ్యేషుపాతయేత్" குற்றத்திற்கும் குற்றவாளிக்குமுள்ள சம்பந்தத்தைச் சோதித்து, தேயவியற்கையையும் காலவியற்கையையும் சீர்தூக்கி உண்மையாகவே குற்றமுண்மை துணிவாகத் தோற்றப்பட்டால் தண்டனைக்குத் தக்கவர்களைத் தக்கபடி தண்டிக்கவேண்டும். எ-று. காண்க.

விஷ்ணு. విష్ణుః॥ "ఆగస్సుపితథాన్యేషుజ్ఞాత్వాజాతింధనంవయః। దండంప్రకల్పయేద్రాజా సంమంత్ర్యబ్రాహ్మణైస్సహ" = வேறு குற்றங்களிலும் வருணத்தினையும், பொருளுடைமையையும், வயதினையும் அறிந்துகொண்டு தன்னோ டிருக்கும் அந்தணரோடு ஆராய்ந்து அரசன் சிக்ஷையை நன்றாகவிதிக்கவேண்டும். எ-று. காண்க.

பிரகற்பதி. బృహస్పతిః॥ "వాగ్ధిగ్వధంస్వకంచైవ చతుర్ధాకల్పితోదమః। పురుషదోషవిభవం జ్ఞాత్వాసంపరికల్పయేత్। గురూన్పురోహితాన్విప్రాన్ వాగ్దండేనైవదండయేత్। వివాదినోనరాంశ్చాన్యాన్ దోషిణోర్థేనదండయేత్। చోరాదీనంగదండేన వధేనాపిచఘాతుకాన్" = உடற்றண்டம், வாய்த்தண்டம், பொருட்டண்டம், மரணதண்டம், எனத்தண்டம் நால்வகைப்படும். ஒருவனிடத்துள்ள குற்றத்தின் தரத்தை விசாரித்து அதற்குத்தக்கபடியொறுத்தல் வேண்டும். குரவர்களையும், புரோகிதர்களையும், வேதியர்களையும் சொல்லால் தண்டித்தல்வேண்டும். வழக்காளிகளையும் ஏனையசாதாரண குற்றமுடையவர்களையும் தக்கபொருட்பறிமுதலிய தண்டஞ் செய்தல்வேண்டும். கள்ளர்முதலியோரை அங்கங்களில் குறைத்தல் முதலிய உடற்றண்டஞ் செய்யவேண்டும். பெருங்கொலை முதலிய குற்றமுடைய காதகர்களைக் கொலைத் தண்டஞ்செய்ய வேண்டும். எறு. காண்க.

## சிக்ஷையின்வேறுபாடு.

காத்தியாயனர். కాత్యాయనః॥ "మిత్రాదిషుప్రయుంజీత వాగ్దండంధిక్తపస్వినాం। యథోక్తంతస్యతత్కుర్యు రనుక్తంసాధుకల్పితం। అధార్మికంత్రిభిర్న్యాయై ర్నిగృహ్ణీయాత్ప్రయత్నతః। నిరోధనేనబంధేన వివిధేనవధేనచ" = நட்பினர் முதலியோரிடத்து வாக்குத்தண்டஞ் செய்யவேண்டும் தவமுடை

யாரைக்கடிந்து கொள்வதேபொதும். எந்தக்குற்ற வாளிக்கு எந்தத்தண்டனை செய்யவேண்டுமென்று மிருதிகளிற் கூறப்பட்டுள்ளனவோ? அவனுக்கு அந்தத்தண்டனை செய்யவேண்டுவது. அப்போதைக்கப்போது நேரிடும் குற்றவகைகளுக்குத் தக்கபடி மிருதிகளிற் றண்டனை கூறுவிட்டால் நல்லோராகிச் சபைக்கணுள்ள சான்றோர் விதித்த தண்டனையைச் செய்ய வேண்டும். இவையெல்லாம் தருமத்தோடு நடந்து வருபவன் எப்போதாயினும் மயக்கமுதலிய ஏதுக்களால் குற்றஞ் செய்த வழி, கூறப்பட்டது. அதருமம் = பாவத்தைச் செய்வதே யியல் பாகவுடையவன் ஒருகுற்றஞ் செய்தால், அவனைக் கட்டுதல், சிறையிடுதல் பலவகையாலும் கொலைசெய்தல் என்னும் மூவகையால் ஒறுத்தல்வேண்டும். எ-று. காண்க.

## தண்டிக்கத்தக்க விடம்.

மனு. మనుః॥ "దశస్థానానిదండస్య మనుస్స్వాయంభువో௦బ్రవీత్। త్రిషువర్ణేషుతానిస్యు రక్షతో బ్రాహ్మణోవ్రజేత్। ఉపస్థముదరంజిహ్వా హస్తౌపాదౌచపంచమం। చక్షుర్నాసేచకర్ణౌ చధనందేహస్తథైవచ" = தண்டனை செய்தற் குரிய இடம் பத்தென்று சுவாயம்பு மனுகூறினர். அவை, மூன்றுவருணத்தார்க்கும் ஒத்தபடியாம். வேதியன் ஒருவனும் அப்பத்திடங்களிலும் ஊறுபாடில்லாதொழிக. பத்திடங்களாவன, உபத்தம் = மறைவிடம், வயிறு, நாக்கு, கை, கால், கண், மூக்கு, செவி, பொன், உடம்பு. எறு. காண்க.

## கொலைத்தண்டஞ் செய்யலாகாதார்.

மனு. మనుః॥ "మౌండ్యంప్రాణాంతికోదండో బ్రాహ్మణస్యవిధీయతే। పురుషాణాంకులీనానాం నారీణాంచనిశేషతః" = வேதியனுக்குத் தலைமழித்துத் துரத்துதலே கொலைத்தண்டத்தோடொப்பென்று விதிக்கப்படுகின்றது. நல்லமரபிற் பிறந்தவர்களுக்கும் பெரும்பாலும்மாதர்க்கும் கொலைத்தண்டம் ஆகாது. எ-று. காண்க.

பிரகற்பதி. బృహస్పతిః॥ "జగత్సర్వమిదంహన్యా ద్బ్రాహ్మణస్యనతత్సమం। తస్మాత్తస్యవధంరాజా మనసాపినచింతయేత్। అవధ్యాన్బ్రాహ్మణానాహు స్సర్వపాపేష్వవస్థితాన్। యద్యద్విప్రేషుకుశలం తత్తద్రాజాసమాచరేత్। రాష్ట్రాద్దేనంబహిష్కుర్యాత్సమగ్రధనమక్షతం" = உலகையெல்லாம் கொலைசெய்யினும் அது

வேதியனுக் கொப்பல்லவாதலின் வேதியன்கொலையை அரசன் மனத்தால் எண்ணவும்படாது. எல்லாப் பாவங்களையும் செய்தாலும்வேதியனைக்கொல்லலாகாதென்று பெரியர்கூறுவர். வேதியரிடத்து எது எது நன்மையோ? அவற்றையரசன் நன்றாகச் செய்யவேண்டும். பாவியான வேதியனைத் தண்டிக்காமல் அவன் சொத்துக்களோடும் அவனைத்தன் னரசாட்சியினின்றும் வெளிப் படுத்திவிடவேண்டுவது. எ-று. காண்க.

### நற்றண்டனையின் பயன்.

இயமன். యమః॥ "ఏవంధర్మప్రవృత్తస్య రాజ్ఞోదండధరస్యచ। యశోస్మిన్ప్రథతేలోకే స్వర్గేవాసస్తథాక్షయః"—இங்ஙனமாக அல்லாதானை யொறுத்துத் தருமத்தோடு நடக்குமரசனுக்கு இவ்வுலகத்தில்புகழ் வளரும். சுவர்க்கத்தும் கெடாத வாழ்வுண்டாம் எ-று. காண்க.

### பகைவர்மேற் சேறல்.

சாந்திபர்வம். శాంతిపర్వణి॥ "చైత్రేవామార్గశీర్షేవా సేనాయోగఃప్రశస్యతే। పక్వసస్యాహిపృథివీ భవత్యంబుమతీతథా। నైవాతిశీతోనాత్యుష్ణః కాలోభవతిభారత। తస్మాత్తదాయోజయీత పరేషాంవ్యసనేషువా। ఏతేహియోగాస్సేనాయాః ప్రశస్తాఃపరబాధనే। జలవాంస్తృణవాన్మార్గస్సమోగమ్యఃప్రశస్యతే। చారైస్సువిదితోభ్యాస కుశలైర్వనగోచరైః। నప్తర్షీన్పృష్ఠతఃకృత్వా యుధ్యేయురచలాఇవ। యతోవాయుర్యతస్సూర్యో యతశ్శుక్రస్తతోజయః। అకర్దమామనుదకా మమర్యాదామలోష్టకాం। అశ్వభూమింప్రశంసంతి యేయుద్ధకుశలాజనాః। సమానిరుదకాచైవ రథభూమిఃప్రశస్యతే। నీచద్రుమమహాకక్షా సోదకాహస్తియోధినాం। బహుదుర్గామహావృక్షా వేణువేత్రతిరస్కృతా। పదాతీనాంక్షమాభూమిః పర్వతోపవనానిచ। పదాతిబహుళాసేనా ధ్రువాభవతిభారత। తథాశ్వబహుళాసేనా సుదినేషుప్రశస్యతే। పదాతినాగబహుళా ప్రావృట్కాలేప్రశస్యతే। గుణానేతాన్ప్రసంఖ్యాయ యుద్ధంశత్రుషుయోజయేత్"—படை சேருவதற்குச் சித்திரைமாசமும், மார்கழிமாசமும் சிறந்தவாம். அப்போது மண்ணில் பயிர், நீர், இருக்கின்றன. அதிக குளிர்ச்சியேனும் அதிகவெப்பமேனும் இல்லாத அக்காலத்தில் சேனைகளைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். அல்லது, பகைவர்க்குத் துக்கமுண்டாயிருக்கும் காலமும் படையையெடுக்கலாம். நீரும், புல்லு முண்டாயிருக்கும் ஒத்தமார்க்கத்தைக் காட்டிற்றிரிந்தவழக்க முடையவொற்றர்களாலுணர்ந்து செல்லவேண்டும். சத்த

விருடிகளையும் முதுகின்புறமாக்கி மலைபோல நின்றுபோர்செய்யவேண்டும். காற்று எத்திசைக்கணின்று வருகின்றதோ? சூரியனும் சுக்கிரனும் எந்தப்புற மிருக்கின்றார்களோ? அந்தப்புறம் வெற்றியாம். (எனவே எதிர்காற்று; எதிர்வெய்யில், எதிர்வெள்ளிகூடாது என்றபடி). சேறு, நீர், வரப்பு = தடை, கட்டியில்லாதபூமி குதிரைப் படைகளுக்குத் தக்கதாம். நீரில்லாதவொத்தபூமி _ தேர்ப்படைக்குத்தக்கது. குற்றுச்செடிகளும் நீருமுள்ளவிசாலபூமி யானைப்போருக்கு நல்லதாம். அனேகம் மலைகள் பெருஞ்செடிகள், அல்லது மரங்கள், மூங்கல், பிரம்பு, இவற்றின்புதர்கள், மறைவு=ஒதுங்கிடம், மலை, சோலை, முதலியனவுடையபூமி காற்படைகளுக்குச் சிறந்ததாம். காலாள்களின் போருக்கு வெளிச்சமுள்ள பொழுதும் ஓடுவதற்கு வழிகளுமிருத்தல் வேண்டும். பகலில் குதிரைப்படையின் போர் உயர்ந்தது. காற்படை, யானைப்படை மிகுதியும் உடைய சேனைகட்கு மழைகாலம் சிறந்தது. இந்த வியல்புகளை நன்குணர்ந்து பகைவர்மேற் படையெடுத்துச் செல்லுக. எ-று. காண்க.

**மனு.** మనుః॥ "యదాతుయానమాతిష్ఠే దరిరాష్ట్రంప్రతిప్రభుః। తదానేనవిధానేన యాయాదరిపురంశనైః। మార్గశీర్షేశుభేమాసే యాయాద్యాత్రాంమహీపతిః। ఫాల్గునేవాథచైత్రేవా మాసేప్రతియథాబలం। అన్యేష్వప్యృతుకాలేషు యదాపశ్యేద్ధ్రువంజయం। తథాయాయాద్విగృహ్యైవ వ్యసనేచోత్థితేరిపోః। కృత్వావిధానంమూలేతుయాత్రికంచయథావిధి। ఉపగృహ్యాస్పదంచైవబాహ్యంసమ్యగ్విధాయచ। సంశోధ్యత్రివిధంమార్గం షడ్విధంచస్వకంబలం। సాంపరాయికకల్పేన యాయాదరిపురంశనైః" = சமர்த்தனை அரசன் பகைவர்மேற் போருக்குப்படை யெடுத்துச்செல்லவேண்டின், மார்கழி, பங்குனி, சித்திரை, அல்லது, மற்றைய இருதுக்களும் பகைவர்கள் துன்பமுற்றிருக்குங் காலமும், தனக்கு மிகவும் அனுகூலித்த காலமுமாக நல்லவேளையில் மெதுவாகப் புறப்பட்டுக் காலம் பார்த்து வழியில் பகைவர்மேற் செல்லவேண்டும். போர்க்குப் போவோன் மூலப்படைகளைச் சேதமுறாதபடி வைத்து, தன்னிருப்பிடத்தை நன்றாகக்காக்கும்படிசெய்து, உடன்வரத்தக்க படைகளையும், அதற்குவேண்டும் உண்டி முதலியவற்றையும், அங்கங்கு நடக்கும் செய்திகளையறிந்து வரவல்லவொற்றர்களையும் சீர்பெறவைத்துக்கொண்டு, மூன்று புறமும்வழிகளைச் சோதித்துக்கொண்டு, தன்னறு வகைப்படைகளை

யும் போருக்கு வேண்டும் முயற்சியோடும் விரையாது—அவசரப் படாதுபகைவர் பட்டணத்தின் மேற்செலுத்தவேண்டும். எ-று. க॥ ௯க.

## அறுவகைப் படையாவன.

உசனா. ఉశనాః॥ "మూలబలం శ్రేణిబలం మిత్రబలం ఆటవికబలంచేతి"= உள்ளூரிலுள்ளவர்களாகியவன்ற மூலப்படையும், வாணிபஞ்செய்பவராலாகிய சிரேணிப்படையும், நட்புப்படையும், கூலிப்படையும். பகைவரிடத்திருந்தும் கிடைத்தபடையும், கானவப்படையும், என அறுவகைப்படையாம். எ-று. காண்க.

## படைஅணிவகுத்தன் முதலியன.

போரின் பொருட்டுப் படைகளைச் சேகரித்துப் பலவகையாக அணிவகுத்தலை மனுகூறினர். మనుః॥ "దండవ్యూహేనతన్మార్గం యాయాత్తుశకటేనవా। వరాహమకరాభ్యాంవా సూచ్యావాగరుడేనవా। యతశ్చభయమాశంకేత్తతోవిస్తారయేద్బలం। పద్మేనచైవవ్యూహేన వివిశేతతథాస్వయం। సేనాపతీన్బలాధ్యక్షాం త్సర్వదిక్షునివేశయేత్। యతశ్చభయమాశంకేత్తాంప్రాచీంపరికల్పయేత్। గుల్మాంశ్చస్థాపయేదాప్తాన్కృతసంజ్ఞాంత్సమన్తతః। స్థానేయుద్ధేచకుశలానభీమానవికారిణః। సంహతాన్విభజేదశ్వాన్కామంవిస్తారయేద్బహూన్। సూచ్యావజ్రేణచైవైతాన్వ్యూహేనవ్యూహ్యయోధయేత్। ఉపరుధ్యారిమాసీత రాజ్యంచాస్యోపపీడయేత్। దూషయేచ్చాస్యసతతం యవసాన్నోదకేంధనం। భింద్యాచ్చైవతటాకాని ప్రాకారపరిఘాంస్తథా। సమవస్కందయేచ్చైనం రాత్రౌవిత్రాసయేత్తథా। ఉపజాప్యానుపజపేద్బుధ్యేచ్చైవహితత్కృతం। యుక్తేచదైవేయుధ్యేత జయప్రేప్సురపేతభీః। సామ్నాదానేనభేదేన సమస్తైరథవాపృథక్। విజేతుంప్రయతేతారీన్నయుద్ధ్యేతకదాచన। అనిత్యోవిజయోయస్మాద్దృశ్యేతేయుధ్యమానయోః। పరాజయశ్చసంగ్రామే తస్మాద్యుద్ధంవివర్జయేత్। త్రయాణామప్యుపాయానాం పూర్వోక్తానామసంభవే। యుధ్యేతసమసంపత్యా విజయేతరిపూంస్తథా। జిత్వాసంపూజయేద్దేవాన్బ్రాహ్మణాంశ్చైవధార్మికాన్। ప్రదద్యాత్పరిహారార్థం ఖ్యాపయేదభయానిచ। సర్వేషాంతువిదిత్వైషాం సమాసేనచికీర్షితం। స్థాపయేత్తత్రతద్వంశ్యం కుర్యాచ్చసమయక్రియాం। ప్రమాణానిచకుర్వీత తేషాంధర్మ్యానథోదితాన్" = தண்டவியூகம், சகடவியூகம், வராகவியூகம், மகரவியூகம், சூசிவியூகம், கருடவியூகம், இவற்றுள் யாதானுமொன்றாக அணிவகுத்துவழிச்செல்லவேண்டும். எத்திசையில் அச்சமுண்டாமென்று சந்தேகப்படுகின்றதோ? அத்திசையில் சேனைகளை அதிகப்ப

டுத்தி பலஞ்செய்ய வேண்டும். அரசன் பதுமவியூகத்தைக்கற்பித்துஅதனுட்டா னிருக்கவேண்டும். சேனுதிபதியையும், பலாத்தியக்ஷரையும், எல்லாத்திசைகளிலும் வைக்கவேண்டும். எத்திசையில்பயமுண்டாகுமோ? அத்திசை நோக்கித்தானும் பெரும்படையுமாக இருத்தல்வேண்டும். நம்பிக்கையுள்ளவர்களாயும். சண்டைக்குறிப்பை நன்குணர்ந்தவர்களாயும், தக்கவிடம், நிற்குநிலை, போர்செய்யும் உபாயவகைஇவைகளில் கை தேர்ந்தவர்களாயும், தன்னரசு, அல்லது, தலைவன்என்னும் உரிமையோடு தன்னுயிருள்ள வரையும் போர்விடாத மறத்தையுடைய மள்ளர்களாயும், உள்ள படைஞர்களை அங்கங்கு கூட்டங் கூட்டமாகச் சேர்த்து வைக்கவேண்டும். குதிரைப் படைகளையும், காலாட்படைகளையும் ஒரோபக்கஞ் சிறிதாகவே யுள்ளதுபோற் காணும்படி சேர்த்துவைத்து, காலம் வாய்த்தபோது வேண்டியவாறு மிகுதியாகக்காணும்படி விரித்துக் காட்டவேண்டும். சூசிவியூகமாயும், வச்சிரவியூகமாயும் படைகளைச் சேர்த்துக்கொண்டு போர்செய்யவேண்டும். பகைவனைக் குறுக்கிட்டு மறித்துக்கொண்டு, அவனது இராச்சியத்தை யலைக்கவேண்டும். பகைவர்க்கு உதவியாகவந்த புல், விறகு, சோறு, நீர் முதலியவைகளை உதவவொட்டாது கெடுக்கவேண்டும். ஏரிகள்முதலிய நீர் நிலைகளையும், கோட்டையையும், சுற்றுமதில்களையும், அகழிகளையும், ஆரற் சுவர்களையும் பிறவற்றையும் இடித்துவிடவேண்டும். பகைவர்கள் ஆற்றலற்றவர்களாய் ஓடிவிடும்படி வழிகாட்டித் தப்பித்துக்கொள்ளும்படி செய்துவிடவேண்டும். இராக்காலங்களில் திடீரென்று மேற்சென்று அச்சம்=வெருட்சி யுண்டு பண்ண வேண்டும். பகைவர் பக்கத்தாருள் தன்போதனைக்குட்படத்தக்கவர்கள் தன்வசமாகும்படி தக்கவைகளைப் பிறரறியாவகைபோதிப்பிக்கவேண்டும். பகைவர்கள் செய்யுஞ் செய்கையெல்லாவற்றினையும் முயற்சியோடும் எவ்வகையானும் தான் அறிந்துகொள்ளவேண்டும். தன்பக்கத்து முயற்சிக்குத் தெய்வ முதவியாக விருப்பது தானுணரவரின் அப்போது அச்சமின்றிச் சமர் செய்யவேண்டும். ஐயமுண்டானுல் இளைத்தபடி எதிரிக்குக்காட்டாமல் காலத்திற்குத் தக்கபடி, சாம வுபாயத்தாலாவது, பேத வுபாயத்தாலாவது, தான வுபாயத்தாலாவது, இல்லாக்காலெல்

லாவுபாயத்தாலுமாவது, எவ்விதத்தாயினும் பகைவர்களை வெல்லத்தக்க வுபாயவழிகளைத் தேடிச் செய்யவேண்டும். சண்டைப் பயத்தைக் காட்டவேண்டுமே யொழிய எப்போதும் சண்டையையே செய்யலாகாது. இருவர் போரிட்டவழி ஒருவனுக்கே வெற்றி யுண்டாமென்பது நிச்சயமானதல்ல. தோல்வி யடைந்தால் பெரிய நஷ்டமுண்டாம் "ஃ" என்றதனால் போரிட்டு வெற்றியையே அடைந்தாலும், பெருத்த நஷ்டமும் = இழப்பும் கஷ்டமும் = வருத்தமும் அனுபவியாமல் ஒழியாது. ஆதலால் சண்டைசெய்யலாகாது. மேற்குறித்த மூவகை யுபாயமும் நேரிடாவிட்டால், ஒத்ததரமான வலிமையா யிருக்குமிடத்தில், போராவது செய்து வெற்றியடைந்து, தேவர்களையும் வேதியர்களையும் பூசித்துத்தானதருமங்களைச் செய்து பழிபாவங்களைப் போக்கடித்துக் கொள்ளவேண்டும். வெற்றியடைந்துவந்த அரசன், தோற்றுவிட்ட நாட்டினர் யாவர்க்கும், "அபயம்" அச்சமில்லையென்று முதலில் பறைசாற்றுவிக்கவேண்டும். அந்நாட்டுக்குடிகளனைவருடைய கருத்தினையும் ஒருமிக்க அறிந்துகொண்டு, தோற்ற அரசன்மரபினனையே அரசாக ஏற்படுத்தவேண்டும். காலஎல்லை, தொழிற் கட்டுப்பாடாகிய எல்லை, அதற்கு வேண்டுவனவாகிய சத்தியப் பிரமாணமுதலிய சபதங்களையும் அவனோடு செய்துவைக்கவேண்டும். பின்பு பகையரசன் செய்துள்ள தருமங்களையெல்லாம் நடத்திவரவேண்டும். எ-று. காண்க.

பகைவர்க்குத் துன்பமுண்டானபோது, என்பது - பொருள்வலி, படைவலி, அறிவுடைமை, குறைந்தகாலமும். தன்சுற்ற முதலியவருள் விரோதமுடைமை, தெய்வவலி குறைதலுமாகிய காலமுமாம். உலோப முதலிய தீக்குணமும், பாவச்செய்கையும் அவற்றிற்குக் காரணமாம்.

மூலப்படையைக் காக்கவைத்தல் என்பது - தனது துருக்கத்தினையும், நாட்டினையும், சூழ்ந்த இகலரசர்கள் கைவசஞ் செய்யாதபடி காத்தலாம்.

"த்ரிவித⁴ம்மார்க³ம்" = ஒத்தவழி, நீர்வழி, காட்டுவழி, இவைகளை வழிநடைக்கு ஒத்துவரும்படி சீர்ப்படுத்திவைத்தல்.

"ஷட்³வித⁴ம்ப³லம்" = யானை, குதிரை, தேர், காலாள், சேனைத்தலைவர், ஏவலாட்கள், என்பன அறுவகைவலி.

தண்டவியூகம், எது - தடியைக் கிடத்தியவாறுபோல ஒரோவரிசையாகவொருவன்பின் ஒருவன் நிற்கச்செய்தல்.

சகடவியூகம். எது - பாண்டில்=வண்டிகளைப்போல வளையநிறுத்தல்.

முன்பக்கத்தில் "பலாத்தியக்ஷன்" நடுவே அரசன், பின்னே சேனாபதி, பக்கங்களில் யானைப்படை அதற்கடுத்து குதிரைப்படை, அதன்பின் காலாள் இவ்வாறாகத் தண்டவியூகஞ்செய்து, எல்லா முகத்தும் பயமுண்டாகுங் காலத்தில் வழிநடக்கவேண்டுவது. இவ்வகையாகவே முன்பக்கத்தில் ஊசியைப்போல் கூர்த்துச் சிறியதாயும், பின்பக்கம் விரிந்து பெரியதாயும் சகடவியூகம் செய்து பின்புறம் அச்சமுண்டானபோது வழிநடக்க வேண்டும்.

வராகவியூகம். எது - முன்னும் பின்னும் ஊசிபோற் சிறுத்து இருக்க நிறுத்துவது. ஆயின் நான்குகாலும் வாலுமுகமும் தோன்றநடுவே பருத்து இருப்பது.

கருடவியூகம். எது. வராகவியூகமேபோலும். ஆயின், இருபக்கஞ் சிறகுகள் அதிகமாம். இரண்டுகாலும் இருகோரைப்பற்களும் குறைவாம். வாற்புறம் சிறிது தடிப்பும், தலைப்புற மூக்கின் வளைவுமாம். பக்கங்களில் அச்சமுண்டாகும்போது. இவ்வாறாக கருடவியூகத்தால் வழிநடக்கவேண்டும்.

மகரவியூகம். எது. வராகவியூகத்திற்கு மாறுபாடாக விருக்கின்றது. என்னை? முன்னும் பின்னும் அகன்றும், நடுவே சுருங்கியும் இருக்கும்படி நிறுத்தவேண்டும். முன்னும்பின்னும் அச்சமுண்டானபோது இந்தவியூகத்தால் செல்லவேண்டும்.

சூசிவியூகம். எது - எறும்பொழுக்கைப்போல ஒன்றோடொன்று தொடர்ந்து ஊசியைப்போலச் சேனைகளை நிறுத்தி, விரைவுடைய இலகுத்தன்மை, வீரம், வலிமையுமுடைய போர் மள்ளரை முன்பாகத்தி லுடையதாக நிறுத்தல், இது முன்பக்கம் அச்சம் உண்டானபோது செல்லுவது.

பதுமவியூகம். எது - தாமரைவடிவாகவும் ஒத்தபடியாகவும், விரிவாகவும், வட்டம் வட்டமாகவும், வீதி வீதியாகவும், மண்டலங்களை வகுத்து அவற்றினைச்சூழ மேல் பாகத்தில் இதழ்களையமைத்து அதனுள் தாதுக்களில் அடங்கிக் கிடக்குங் கொட்டையை வகுத்து, போய் வருதற்குத் தக்கவழியாகத் தண்டும் அமைந்திருக்க நிறுத்துவது. அந்தத்தண்டாகிய வழி வேண்டியவாறு விரித்துக் கூட்டவும், சுருக்கி முடிக்கவும் கூடுமானதாக விருக்கும். இதனால் வேண்டுமானதிசையில் வேண்டுமானபடி போர்செய்யலாம். இதனுட் புகுவதே அருமை. உட்புகுந்தவன் வெளிவருதல் அதனினும் அருமையாம். இதனடுவே யிருப்பவன் வெளியுள்ளவர்களுக்கு அரியவனாயிருப்பான்.

வச்சிரவியூகம். எது - இது சூசீவியூகமே போலும். ஆயின் முட்களைப் போல எவ்விடங்களிலு முகமுடையதாக விருக்கும். இது பெருத்தஉடம்பு, தக்கவலிமை, போர்க்கல்வி தேர்ச்சி, தலைவனிடத்தன்பு, மானமுடைமை, ஊக்கமுடைமை, நுண்ணுணர்வு, சோர்வில்லாமையும் உடைய சிறந்த வீரர்களையே தேர்ந்தெடுத்து வேண்டுங் கருவியோடு தொகுக்கப்பட்டுள்ளது. அரியபோரில் பகைவரையிடித்துச் செல்லவாம்.

சேநாபதி. எது - யானை, குதிரை, தேர், காலாள், இவைகளின் உறுப்பான பரிவாரங்களும் கூடியது சேநாங்கமாம். அது பத்துகூடினால், பத்தியென்னப்படும். அப்பத்தி பத்துகூடினால் ஒருசேனையாம். அதற்குத் தலைவனே சேனாபதியாம். அப்பத்துச் சேநாபதிகளுக்குத் தலைவனே சேனாநாயகன். அவனே பலாத்தியக்ஷன் என்னப்படுவன்.

போர்ச்சங்கேதம். எது - சேனைகள் எழுந்துநிற்பதற்கும், அடங்குவதற்கும், வெளிப்படுவதற்கும், இடமாற்றுவதற்கும், நெருங்கிக் கொள்ளுவதற்கும், பிரிந்து தூரப்படுவதற்கும், முன்பின் பக்கம் இவ்விடங்களைச்சார்ந்து ஒதுங்குவதற்கும், நகர்வதற்கும், குதித்துத்தாண்டுவதற்கும், பகைவர்மேற் பாய்தலுக்கும், முன் விழவொட்டாது பற்றுவதற்கும், படைக்கலந் தொடுவதற்கும், விடுவதற்கும், ஊர்தி = வாகனங்களைச் செலுத்துவதற்கும், ஒருபுறங்காட்டி மற்றொருபுறம் வினைமுடித்தலுக்கும், ஒரேகாலத்தி லனைவரும் மேற்செல்லுவதற்கும், முறையே செல்வதற்கும், முன்னின்றவர் ஆனபின், பின்னின்றவர் செல்வதற்கும் ஓடிப்போவதற்கும், போர்தொடங்குவதற்கும், விடுவதற்கும், கோட்டையைப் பிடிப்பதற்கும், வெற்றிக்கும், தோல்விக்கும், நால்வகைச்சேனைக்கும், படைக்கலங்களுக்கும் வெவ்வேறாக ஒவ்வொன்றற்கும், தலைவன்கருத்துக்கு மாறுபாடின்றி வினைமுடிவதற்கு வாத்தியங்களாலுங் கொடிமுதலிய குறிகளினாலும் சங்கேதம் = குறிப்புகளை நியமித்து அக்குறியின்படி நடக்கும் வழக்கம் படைஞர் அனைவர்க்கும் ஒரேவகையாற் பயிற்றுவிக்கப்பட் டிருக்கவேண்டும்.

போருக்குவேண்டும் கருவிகளாவன, படைகளிலுள்ளவர்கட்கு உயிரைக் காப்பதுவாயுள்ள சோறுந் தண்ணீரும், உடம்பைக் காப்பதுவாயுள்ள கவசமுதலியவும், இளைப்பொழிக்கத்தக்க வுபசாரங்களும், வருத்தந்தோன்றாதுஉணர்ச்சியை நிலைபெறுத்துக் கொள்ளுவதும், மருந்தும்பிறவுமாம். இவையுயிர்காப்புக்கருவிகள். இனிபடைக்கலங்களும், அவற்றையுய்க்குங் கருவிகளும், விடப்பொடிகளும், அக்கினிசம்பந்தப் பொருள்களும், புகைசெலுத்துந்திறம், கல்செலுத்துந்திறம், இயந்திரம் - பொறிகள் செலுத்துந் திறமும் சுருங்கைகளும் பிறவும், பகையையழிக்குங் கருவிகளாம். அமைச்சர், வைத்தியர், மாந்திரிகர், சோதிடர், இவர்கள் இருவகைக்கும் பொதுக்கருவியாம். அரசனே ஆன்மா, படைகளேயாக்கை = உடம்பு என்றுகொள்க. சுருங்கை = நிலவறை.

தன்வினைக்குத் தெய்வசம்மதமறிதல். என்பது - செய்தமுயற்சி க்கை கூடிவருகை, சோதிடநூல், சகுநநூல், சரநூல் இவைகளால் தனக்குவெற்றிக்குறிப்புத்தோன்றுவது. இங்ஙனம் கூறியவற்றினையு மற்றுமுள்ளவைகளையும், மனுவியாக்கியானம் மேதாதிதி, குல்லூகபட்டீயம், பாரதம் நீலகண்டீயமுதலிய நூல்களுட் கூறியிருத்தலின் ஆண்டுணர்க.

மேற்கூறியபடி அரசன் பகைவர் நிலங்களை வென்று அதனையும் தனதுநாட்டினையும் தருமத்தோடும் காத்துவரவேண்டும்.

எங்ஙனமெனில். முன் ௬௦ - வது. சுலோகத்தில், "పుష్పమాత్రం" என்றுற்போல்வனவற்றுற் கூறப்பட்டது. மலர்மாலைதொடுப் பவன்பூஞ்சோலையுள் மரத்தின்மலர்ந்த பூக்களைமாத்திரம் பறிப் பானன்றி அம்மரத்தைக் களைதல்முதலிய துன்பஞ்செய்யாத வாறுபோல, நாட்டின்கண்ணே விளைபயிர் முதலியவற்றுல்மன்ப தைக்கு = மானுடர்க்கு, எவ்வெவ்வளவு இலாபம் உண்டாவ தோ? அவ்வம்மட்டில் அவர்கள் விருத்தியைவேண்டி இறை கூறு வாங்கிவரும்மரசன் (எனவே, குடிகளிடத்தில் ஆறிலொ ருகூறுக்கு அதிகப்படாது வாங்குபவன். என்றபடி) அவர்கள் புண்ணியத்திற்கு முரியவனுவான்.

கரிகளைச்சமைப்போன். மரங்களைவேரோடு பறித்துச்சுடு வதுபோலஅரசன் மன்பதைதேடியபொருளை யெல்லாம்தான் பறித்துக்கொண்டு, அவர்கள் உண்டிக்கே வருத்தப்படும்படிசெ ய்யலாகாது. மரத்தைவளர்த்துப் பூப்பறிப்பதுபோலக் குடிகளை ப்புரந்து வரியிறைவாங்கிக் கொள்ளவேண்டும். என்றுசாந்திபர் வத்திலுங்கூறப்பட்டது.

## இறைகூறு.

శాంతిపర్వణి॥ "మధుదోహందుహేద్రాష్ట్రం భ్రమరాన్నప్రతాపయేత్। నచె త్సువత్పీడయేత స్తనాంశ్చనతుకుట్టయేత్। జలూకావత్పిబేద్రాష్ట్రం మృదునైవనరాధిపః। వ్యాఘ్రీవాపహరేత్పుత్రం నదంశేన్నచపీడయేత్। యథాచలేఖకగిపర్ణ మాఖుగిపాత్రత్వ చంయథా। అతీక్ష్ణేనాప్యుపాయేన వర్ధమానంప్రదాపయేత్। తతోభూయస్తతోభూయగ్ క్రమాద్వృద్ధింసమాచరేత్" = வண்டு பூவைக் கெடுத்தல் செய்யாது முகந்து தேனைக்கொள்ளுவதுபோல, மன்பதைக்குத் துன்பமி ன்றி வரியிறையைப் பெற்றுக்கொள்ள வேண்டும். கரும்பைக் கோதுவேறு சாறுவேறு பிழிந்துகொண்டாற்போலும் கொள் ளலாகாது. பால்குடிப்பவன் முலைகொய்துவிடலாகாது. அட் டை நோய்தோன்றுது இரத்தங் குடிப்பதுபோல நாட்டிலுள் ளபயனை மெல்லக் கொள்ளவேண்டும். புலிப்பிணு, கடியாதும் அறையாதும் தன்குழவியைக் காப்பதுபோல நோய்த் தோற்ற மில்லாமலே மன்பதையைத் தன்வயமாக்கி நடத்த வேண் டும். எழுதுவோன் ஓலையைக் கிழியாமலெழுதுகின்ற வாறு போல் குடிகளுக்குத் துன்பமுண்டாகாதபடித் தன்னுணையைச் செலுத்தவேண்டும். எலிகள் உமியைக்கொறித்துத் தின்றுபோ

வதுபோல அரசன் குடிகளது செலவுக்குப் போதுமானது போக மிக்கவற்றைக் கொள்ளவேண்டும். குடிகளுக்கு வரவு மிகுதியானல் மெதுவான வுபாயவகையால் தான் பெற்றுக் கொள்ள வேண்டும். அவ்வாறே, நாட்டிற்செல்வம் மிகுதியா மளவு தனதுவரும்படியை அப்போதைக்கப்போது விருத்தி செய்துகொண்டு முறையே விருத்தியடைய வேண்டும். எ-று. காண்க.

மனு. మనుః॥ "క్రయవిక్రయమధ్వానం భక్తంచసపరివ్యయం। యోగక్షేమం చసంప్రేక్ష్య వణిజోదాపయేత్కరాన్। యథాఫలేనయుజ్యేత రాజాకర్తాచకర్మణాం। తథావేక్ష్యనృపోరాష్ట్రే కల్పయేత్సతతంకరాన్। యథాల్పాల్పమదంత్యాద్యం వార్యోకోవత్సషట్పదాః। తథాల్పాల్పోగ్రహీతవ్యో రాష్ట్రాద్రాజ్ఞాబ్దికఃకరః" = கொள்ளல், விற்றல் எவ்வளவு, வாடகை எவ்வளவு, படிச்செலவும் மற்றையசெலவும் எல்வளவு, பண்டம் சேதப்படாது வந்துசேருவதற்கு ஆள் காவற்செலவு எவ்வளவு, எல்லாம்போக வாணிபஞ்செய்வோனுக்கு வரும் இலாபம் எவ்வளவு என்பதனை ஆராய்ந்து, வணிகனுக்குவரி ஏற்பாடுசெய்து, இறுக்கச்செய்ய வேண்டும். பொருள் வரவுக்கு வேண்டுமானதொழில் செய்தவன், அரசன் இவரிருவர்க்கும் பயனுண்டாகும்படி யோசித்து இறைமகன் தன்னுட்டுக் குடிகளுக்குக் கப்பம்விதிக்க வேண்டும். அட்டை, கன்று, வண்டு, இவைகள் சிறுகச் சிறுகக் கொண்டு உண்பதுபோல அரசன் தேயத்தில் வருடத்துப்பகுதிப்பணத்தைச் சிறுகச் சிறுக (எனவே மாதவாரியாய்) பெற்றுக்கொள்ள வேண்டுவது. எ - று. காண்க.

மார்க்கண்டேயர். మార్కండేయః॥ మాసానష్టౌయథాసూర్య స్తోయంహరతిరశ్మిభిః। సూక్ష్మేణైవాభ్యుపాయేన తథాశుల్కాదికంనృపః" = சூரியன் எட்டுத்திங்கள் படிப்படி வெய்யலை அதிகரிப்பித்தும்குறைப்பித்தும் உபாயத்தால் நிலத்தின்கணுள்ள நீரைவரளச்செய் திழுத்துக்கொண்டு மீட்டும் மழைக்குக் காரணமாய்எவ்வாறு உலகத்தைக் குளிர்விக்கின்றனோ? அரசனும் அவ்வாறே படிப்படி ஆயத்துறை வரவும், இறைப்பொருளும் விருத்தியாகச்செய்தும் குறைத்தும் தான்தேடிய பொருளை மீட்டும் அக்குடிகளுக்கேயுதவிக் காத்தும் வரவேண்டுமென்றது கருத்து.

இங்ஙனம், அரசிறை பெற்றுக்கொள்வது மலர்மாலைதொடுப்பவனோடுவமித்துக்கூறுவது, ஏனைய அரசொழுக்கமெல்லாவற்றிற்கும் உபலக்கணமாக விருக்கின்றது.

## அரசனுக்குரிய அகப்பாட்டொழுக்கவியல்பு.

முடிசூட்டியல் முதலிய சிறப்போடுங் கூடியிருக்கும் இல்லறத்தானாகிய அரசனுடைய வெளிப்படாத விசேட தருமங்களை யாஞ்ஞுவற்கியர் கூறினர். యాజ్ఞవల్క్యః॥ "మహోత్సాహస్థూలలక్షః కృతజ్ఞో వృద్ధసేవకః। వినీతస్సత్వసంపన్నః కులీనస్సత్యవాక్ఛుచిః। అదీర్ఘసూత్రస్స్మృతిమానక్షుద్రోఽపరుషస్తథా। ధార్మికోఽవ్యసనశ్చైవ ప్రాజ్ఞశ్శూరోరహస్యవిత్। స్వరంధ్రగోప్తాన్వీక్షిక్యాందండనీత్యాంతథైవచ। వినీతస్త్వథవార్తాయాంత్రయ్యాంచైవనరాధిపః" "ఉత్సాహః" = புருடார்த்தங்களுக்கு ஏதுவாகிய தொழில்களைத் தொடங்கச் சோராதவெண்ணம் = பெரியவூக்க முடையவன். எ-று. "స్థూలలక్షః" = பெரியதனைப் பார்ப்போன், என்பது, பெருங்கொடைப் பொருளையே நோக்குவோன். எ-று. "కృతజ్ఞః" = பிறர்செய்த நன்மை தீமைகளை மறவாதவன். "వృద్ధసేవకః" = தவம், அறிவு, முதலியவற்றாற் சிறந்தோர் வழிநடப்பவன். எ-று. "వినీతః" சந்தேகப்படலாகாது, தீடீரொன்று இனிமை கூறலாகாது, பெரியோர்க்கு அடங்கி யொழுகவேண்டுவது, உத்திகளையும் வழக்கினியல்பையும் உணர்தல், யென்பது முதலிய மிருதிவாக்கியங்களா லுண்டாகிய நீதியோடும் இளகிய கருத்தினையு முடையவன். எ-று. "సత్వసంపన్నః" = செல்வத்திலும் வறுமையிலும் சுக துக்கங்களில் அழுந்தாதவலியை யுடையவன். எ-று. "కులీనః" = தாய்தந்தையர் என்னும் இருவகைமரபினும் நல்லோரை யுடையவன். எ-று. "సత్యవాక్" = மெய்பேசுமியற்கை யுடையவன். எ-று. "శుచిః" = உள்ளும் புறம்புஞ் சுத்தமானவன். எ-று. "అదీర్ఘసూత్రః" ஒருதலையாகச் செய்யவேண்டுங் கருமத்தைத் தொடங்குவதிலும், தொடங்கிய கருமத்தை முடிப்பதிலும் வீண்காலங்கழியாதவன் = தூங்காமுயற்சியுடையவன் எ-று. "స్మృతిమాన్" = உணர்ந்தபொருளை மறவாதவன். எ-று. "అక్షుద్రః" = நற்குணங்களில் வெறுப்பற்றவன். எ-று. "అపరుషః" = பிறர்குற்றங் கூறாதவன். எ-று. "ధార్మికః" = வருணாச்சிரமதருமங்களை யுடையவன். எ-று "అవ్యసనః" = பதினெட்டுவகைத் துக்கமுமில்லாதவன். துக்

கம் பதினெட்டாவன. ௧ - மிருகவேட்டை, ௨ - சூதாடுதல், ௩ - பலதொழிற்றடையாகப் பகலுறங்கல், ௪ - பிறர்பழிகேட்டுக்களித்தல், ௫ - மாதரோடுகலந்து களித்திருத்தல், ௬ - கட்குடியால் மயங்கி வீழ்ந்திருத்தல், ௭ - ஆடல், ௮ - பாடல், ௯ - வாத்தியங்களில் மனஞ்செலுத்தல், ௧௦ - வீண்காலங்கழித்தல், இப்பத்தும் இன்பம் வேண்டுமென்னும் இச்சையாற் பிறந்தகுணங்களாம். இவற்றினைக்காமத்துன்ப மென்னப்படும். ௧ - கோள் = அறியாக்குற்றங் கூறல், ௨ - ஆராயாது துணிந்தொறுத்தல்= நல்லோரைத் துன்பமுறுத்தல், ௩ - வஞ்சம் = கபட்டினுற் கொல்லல். ௪ - ஈர்ஷை = பிறர்குணங்கண்டு அழுக்காறடைதல். ௫ - அசூயை=பிறர்குணங்கண்டு, அருவருத்துக்கூறல். ௬ - பிறர்பொருளைக் கெடுத்தல். அது மூவகை, பிறர்பயனைக்கவர்தல் எ - ம். பிறர்பொருளைக்கவர்தல் எ - ம். பிறருக்குக் கொடுக்கத்தக்கனவற்றைக் கொடாதுகவர்தல் எனவுமாம், ௭ - வைதல் = திட்டுதல், ௮ - கோவத்தால் அடித்தல். இவ்வெட்டும் வெகுளியாலாவது. இவ்வெட்டுமே குரோதவியசனம் = வெகுளித்துன்பமாம். ஆகப்பதினெட்டு. இப்பதினெட்டினுள் பழகினும் இடையிலே விடத்தக்கனவாயுள்ளன பதினொன்று. ஏழுமாத்திரம் பழகியபின் தானொழியாது முற்றுங்கெடுத்தே விடுவனவாம். அவை கட்குடி, சூதாடல், பெண்புணர்ச்சி, வேட்டை, எனக்காமத்துட்பிறந்தன நான்கும், ஆராயாது துணிந்தொறுத்தல், அடித்தல், வைதல், என்னும்வெகுளியாற் பிறந்தன மூன்றும் ஆகஏழுமாம்). "ప్రాజ్ఞః" = ஆராய்ச்சியுடையவன். = ஆழ்ந்தகருத்தையறிந்து துணிதல். எ - று. "శూరః" = அச்சமில்லாதவன். எ-று. "రహస్యవిత్" = உணர்ந்தவற்றுள் வெளிப்படுத்தப்படாதனவற்றை யுள்ளடக்கவல்லவன். "స్వరంధ్రగోప్తా" = தன் அற்றமறைப்பவன் = சோர்வை மறைப்பவன். (எனவே அரசன் தன் 'படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண், தான், என்னும் எழனுள்ளும் பிறர்புகாவகைகாத்தல் என்று கொள்க). "ఆన్వీక్షిక్యాం" = தன்னை யறிந்திருத்தல் (எனவே தன்னைப்பற்றி யாராயும் தருக்கநூலுணர்ச்சியாலும்). "దండనీత్యాం" = தண்டனை நீதிநூலிலும். (எனவெ அருத்தநூல், என்பது, பொருளைத் தேடுதல், அதனைக் கெடுக்காது காத்தல், வளரச்செய்

தல், இம்மூன்றினையும் உணர்த்துநூல்). "వార్తాయాం" = பொருள் சேர்ப்பதற்கு ஏதுவாகிய நிலத்தையுழுதல், வாணிபஞ் செய்தல், பசுக்காத்தல், இவற்றையுணர்த்துநூலிலும், "త్రయ్యాం" பாவத்தை யொழிப்பதற்கும் புண்ணியத்தைத் தேடி ஞானமுன்னிலையாக முத்தியடைவதற்கும் ஏதுவாகிய இருக்கு, யஜுஸு, சாமவேதங்களிலும். "వినీతః" = விசேட முறுத்தப்பட்டவன். (எனவே அவற்றினை யுணர்ந்தோரால் உணர்த்தப்பட்டுச் சமர்த்தனுக்கப்பட்டவன். கேள்வியிற் சிறந்தோன் என்றபடி). இக்குணங்களை யுடையவனே மன்பதையையாளும் அரசாக விருப்பான். இவைஅரசனுக்கு அகப்பாட்டு ஒழுக்கமாம். எ-று. காண்க.

அதனனே. "షట్త్రింశద్గుణోపేతో రాజా" = முப்பத்தாறு குணங்களோடு கூடினவன் அரசன். என்ற சூத்திரத்தின் வியாக்கியானத்துள், மிகுந்த ஊக்கமுதலிய குணங்கள் உசனரால் கூறப்பட்டன.

## அரசனது புறப்பாட்டொழுக்க வியல்பு.

அரசன் வெளிப்பட்ட ஒழுக்கத்தினையும் யாஞ்ஞவற்கியரராற் குறிப்பிக்கப்பட்டது. యాజ్ఞవల్క్యః॥ "సమంత్రిణః ప్రకుర్వీత ప్రాజ్ఞాన్ మౌలాన్ స్థిరాన్ శుచీన్। తైస్సార్ధం చింతయేద్రాజా విప్రేణాథ తతస్స్వయం" = பேருக்க முதலிய குணங்களோடுங் கூடியஅவ்வரசன் இது இதம், இது அகிதம் என்று பகுத்தறியவல்ல கூரியரும், பரம்பரையாக வந்தவரும், பெருஞ்சுகதுக்கங்கள் வந்தாலுமயங்காதவரும், மரபுசுத்தமும் மனச்சுத்தமு முண்டானவர்களுமாயுள்ளவரை அமைச்சராக்கி அவர்களோடும் ஆராய்ச்சிசெய்யவேண்டும். பின்புஎல்லாவிலக்கணங்களோடுங்கூடிய வொரு வேதியனேடு ஆலோசிக்கவேண்டும். அதன்பின் தானே சிந்திக்கவேண்டும். எ-று. காண்க.

## மந்திரர் தொகை.

மனு. మనుః॥ "మౌలాంఛాస్త్రవిదశ్శూరాంల్లబ్ధలక్షాన్ కులోద్గతాన్। సచివాన్సప్తచాష్టౌవా ప్రకుర్వీత పరీక్షితాన్" = தொண்டு தொட்டுத் தன் குலமுறை யோடொத்து வந்தவர்களும், எல்லாநூல்களையு முற்றுமுணர்ந்தவர்களும், சுத்த வீரராயுள்ளவர்களும், தடையற்றபெருத்தஆராய்ச்சி யுடையவர்களும், நல்லமரபிற் பிறந்தவர்களும், எல்லாவகையாலும் ஆராய்ந்து தேர்ந்துகொள்ளப் பட்டவர்க

ளும் ஆத்தருமாகிய மந்திரியர் எழுவரை அல்லது எண்மரையாவது ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். எ-று. காண்க.

## மந்திரா லோசனை.

மனு. మనుః॥ "తైస్సార్ధంచింతయేన్నిత్యం సమాధింసంధివిగ్రహం। స్థానంసముదయంగుప్తిం లబ్ధప్రశమనానిచ। తేషాంస్వంస్వమభిప్రాయ ముపలభ్యపృథక్పృథక్। సమస్తానాంచకార్యేషు విదధ్యాద్ధితమాత్మనః" = அவர்களோடு நாடோறும் மன்பகையின் ஆக்கத்தின் பொருட்டும், பகைவரோடு சந்தி, போர், சேனை, பண்டாரம், பட்டணம், நாடு, முதலிய விடயங்களைப்பற்றியும், அவைகளைக் காத்தலின் பொருட்டும், இலாப நட்டங்களைப் பற்றியும், மனிதர் பசுக்களின் காப்பைப் பற்றியும், தேயத்தில் வரவுவிளைவைப் பற்றியும், செலவைப்பற்றியும் ஆராய்ச்சி செய்யவேண்டும். "సామాన్యం" என்றதுபாடமாயின், எல்லாரும்கூடியபொழுது முழுவதும் மறைவில்லாத வெளிப்பட்ட விடயங்களைப் பற்றியே ஆலோசிக்கவேண்டும். என்க. அவர்களுள் ஒவ்வொருவனை வேறுவேறாகத்தனித்தவிடத்திருந்து இவ்விருவராகவே வெளிப்படாத விடயங்களை ஆராய்ச்சி செய்து, தனித்தனி அவ்விடயம் பற்றியஅவரவர்கள் கருத்தின்மேல் அனைவருடைய கருத்தினையும் ஒரேகாலத்தி லறிந்துகொண்டு குணகுற்றங்களின் உயர்வுதாழ்வுகளைக்கண்டு பிடித்து, அதனுள், தனக்கு இதமாவது எதுவோ? அதனைத் தீர்மானித்துக் கொண்டுஅவ்வாறே நடத்தவேண்டும். எ-று. காண்க.

## முதல் அமைச்சன்.

மனு. మనుః॥ "సర్వేషాంతువిశిష్టేన బ్రాహ్మణేనవిపశ్చితా। మంత్రయేత్పరమం మంత్రం రాజాషాడ్గుణ్యసంయుతం। నిత్యంతస్మింత్సమాశ్వస్త స్సర్వకార్యాణినిక్షిపేత్। తేనసార్ధంవినిశ్చిత్య తతఃకర్మసమారభేత్" = அவ்வமைச்சருள் சிறந்தகுணத்தகுதி யுடையவனும் "షాడ్గుణ్యం" = சந்தி, விக்கிரஹம், யானம், ஆசநம், துவைதீபாவம், சமாச்சிரயம் என்னும் அறுவகைப்பட்ட இராச்சிய தந்திரங்களையும் அறிந்தவனுயுமிருக்கிற ஒருவேதியனை முதல் அமைச்சனுக்கிக்கொண்டு அவனேடு இன்றியமையாத விடயவாராய்ச்சியைச் செய்து அவனிடத்து நம்பிக்கைவைத்துத் தான் பார்க்கத்தக்க கருமங்களை அவன் வசமாக்கி அவனுடன்பாட்டினலேயே கருமமுடித்து வரவேண்டும். எ-று. காண்க.

## வினைமுடிப்போரை நியமித்தல்.

மனு. మనుః॥ "నిర్వర్త్యేతాస్యయావద్భి రితికర్తవ్యతానృభిః" = செய்து முடிக்கத்தக்க கருமங்களெல்லாம், வழுவாது நடக்கும்படி எந்தெந்தத் தரமுடைய எத்தனை தொழிற் றலைவர்களை நியமித்தாற் போதுமோ? அவர்களை அந்தந்தக்கருமங்களுக்குத் தக்க ஆற்றல் தகுதிமுதலியனவுடையவர்களாய்ச் சோதித்து, நியமிக்கவேண்டுமென்பது முதலிய பலவினைகள் பெருநூல்களாற் கூறப்பட்டன. எ-று. காண்க.

அரசன் தொடங்கவேண்டியகருமம் யாதெனில்? முதலாவது, தக்கவிடம், கோட்டை, முதலியவற்றினைச் சேகரித்துக் கொள்ளவேண்டுவது என்று யாஞ்ஞவற்கியராற்கூறப்பட்டது. యాజ్ఞవల్క్యః॥ "రమ్యంపశవ్యమాజీవ్యం జాంగలందేశమావసేత్। తత్రదుర్గాణికుర్వీత జనకోశాదిగుప్తయే" = சண்பகம், பாடலம், அசோகுமுதலிய பூமரங்களால் அழகுசெய்யப்பெற்றதும், பசுமுதலிய பிராணிகளுக்கு நோயின்றி விருத்தியாவதற்கு ஏதுவாகியும், உண்ணுதற்குரிய பலபண்டங்களும் விளைவுள்ளதாகியும், புல்விறகுநீர் நிரம்பியதாயும், மலைச்சார்புள்ளதாயுமிருக்கிற இடங்களில் அரசன் வாசஞ்செய்யவேண்டும். அவ்விடத்துத்தனக்கும், தன்சனங்களுக்கும், தன்பொருளுக்கும், காப்புண்டாகும் பொருட்டு, அரண்களை யேற்படுத்திக் கொள்ளவேண்டும். எ-று. காண்க. அரண்=கோட்டை.

## அரண்.

அரண்வகைகள் மனுவாற் கூறப்பட்டன. మనుః॥ "ధనుర్దుర్గం మహీదుర్గ మబ్దుర్గంవార్క్ష మేవవా। నృదుర్గంగిరిదుర్గంవా సమాశ్రిత్యవసేత్పురం। సర్వేణతు ప్రయత్నేన గిరిదుర్గంసమాశ్రయేత్" = "ధనుర్దుర్గం" = சுற்றிலும் ஐங்காதவழி வரையில் நீரற்றவெறுவெளியாகிய நிலக்கோட்டை. (தன் கோட்டையில் மாத்திரம் நீருடையது). "మహీదుర్గం" = கல்லாலும் இட்டிகையாலும், விசாலமாகவும், பன்னிருமுழ முதலிய தக்க வுயர்முள்ளதாகவும், மேலே நின்று போர் செய்வதற்கும் போக்குவரவுக்கும் தக்கவழி, மறைவான பதணம், சுருங்கை பல்கணிமுதலிய வுடைய ஞாயில்களுமுடைய மதில்ரண் "అబ్దుర్గం" ஆழமுள்ள நீராற் சூழப்பட்ட நீரரண் "వార్క్షం"=வெளியிற்சூழ

ஒருகாதவழியிலும் நெருக்கமுள்ள பெருமரங்கள், முட்கள், புதர்கள் முதலிய நிரம்பி உட்புகலாகாத காட்டரண். "నృదుర్గం" நாற்புறமுஞ்சூழ நால்வகைச்சேனையும் நித்தமும் காத்திருக்கும் படையரண். "గిరిదుర్గం" = எங்கும் ஏறி உட்புக முடியாததாய் அறிந்தவர்க்கே அடையவல்ல சிறுகவர்வழியதாய், உள்ளேயாறு, ஊற்று, சுனைமுதலிய நீர்நிலையதாய், பயன்தரும் மரங்களோடுங் கூடியவிரிந்த நிலமுடைய மலையரண், இவற்றுளொன்றனை யேற்படுத்திக்கொண்டு பட்டணஞ் சமைத்தல் வேண்டும். எல்லா முயற்சியாலும். மலைக்கோட்டையை யடைவதே சிறந்தது. எ-று. காண்க.

## அரண்களைச்சமைக்கவேண்டும்வகை.

சாந்திபருவத்திற் கூறப்பட்டது. శాంతిపర్వణి॥ "ధృఢప్రాకారపరిఘం నానృత్యశ్వరథసంకులం। ఊర్జస్వినంనాగరంచ చత్వరాపణశోభితం। ప్రసిద్ధవ్యవహారంచ ప్రశాంతమకుతోభయం। శూరాఢ్యంప్రాజ్ఞసంపూర్ణంతత్పురంస్వయమావిశేత్" = வலிமையுள்ள மதிலும், அகழியும் உடையதும், யானை குதிரைகள் நிரம்பியதும் நாடோறும் விருத்தியாவதும், நாகரீகமுள்ளமாந்தர்களையுடையதும், விரிந்தவெளியிடங்கள், வீடு, கடைத்தெருமுதலிய அணிகளுடையதும், சிறந்துபேர்பெற்ற வாணிபமும், நியாய விசாரமுநடந்து வருவதும், எந்தப்புறத்தும் அச்சமில்லாததும், வீரமுடையவர்களையும் பொருளுடையவர்களையும் உடையதும், கற்றோரால் நிரம்பியுள்ளதுமாகிய பட்டணத்துள் அரசன் தான் இருப்பிடஞ்செய்து கொள்ளவேண்டும். எ-று. காண்க.

மனு. మనుః॥ "కుర్యాదాయుధసంపన్నం ధనధాన్యేనవాహనైః। బ్రాహ్మణైశ్శిల్పిభిర్యంత్రై ర్యవసేనోదకేంధనైః" = படைக்கலச்சாலை, பண்டாரச்சாலை, தானியங்கள் நிரம்பிய களஞ்சியமுதலியவைகள், மற்றை எல்லாப்பண்டங்களு நிரம்பியபண்டசாலை, வாகனசாலை, பார்ப்பாரவீதி, சிற்பம்வல்ல கம்மியர் முதலிய வினைவல்லோர்கள், இயந்திரம், செக்கு, ஏற்றம், சிவிறிமுதலியகருவிகளும், புல்லைவைக்கோற்போர்கள், உணவுப்பொருள்கள், பாகசாலைகள், நீர் நிலைகள், நீர்க்கால்வாய்கள், விறகுகள்முதலிய எல்லாநிரம்பிய பட்டணத்தைக் கட்டுவிக்கவேண்டும். எ-று. காண்க.

## வினைமுடிப்போரை நியமித்தல்.

மனு. మనుః॥ "నిర్వర్తేతాస్యయావద్భి రితికర్తవ్యతానృభిః" = செய்து முடிக்கத்தக்க கருமங்களெல்லாம், வழுவாது நடக்கும்படி எந்தெந்தத் தரமுடைய எத்தனைதொழிற் றலைவர்களை நியமித்தாற் போதுமோ? அவர்களை அந்தந்தக்கருமங்களுக்குத் தக்க ஆற்றல் தகுதிமுதலியனவுடையவர்களாய்ச் சோதித்து, நியமிக்கவேண்டுமென்பது முதலிய பலவினைகள் பெருநூல்களாற் கூறப்பட்டன. எ-று. காண்க.

அரசன் தொடங்கவேண்டியகருமம் யாதெனில்? முதலாவது, தக்கவிடம், கோட்டை, முதலியவற்றினைச் சேகரித்துக் கொள்ளவேண்டுவது என்று யாஞ்ஞவற்கியராற்கூறப்பட்டது. యాజ్ఞవల్క్యః॥ "రమ్యంపశవ్యమాజీవ్యం జాంగలందేశమావసేత్। తత్రదుర్గాణికుర్వీత జనకోశాదిగుప్తయే" = சண்பகம், பாடலம், அசோகுமுதலிய பூமரங்களால் அழகுசெய்யப்பெற்றதும், பசுமுதலிய பிராணிகளுக்கு நோயின்றி விருத்தியாவதற்கு ஏதுவாகியும், உண்ணுதற்குரிய பலபண்டங்களும் விளைவுள்ளதாகியும், புல்விறகுநீர் நிரம்பியதாயும், மலைச்சார்புள்ளதாயுமிருக்கிற இடங்களில் அரசன் வாசஞ்செய்யவேண்டும். அவ்விடத்துத்தனக்கும், தன்சனங்களுக்கும், தன்பொருளுக்கும், காப்புண்டாகும் பொருட்டு, அரண்களை யேற்படுத்திக் கொள்ளவேண்டும். எ-று. காண்க. அரண்=கோட்டை.

## அரண்.

அரண்வகைகள் மனுவாற் கூறப்பட்டன. మనుః॥ "ధనుర్దుర్గం మహీదుర్గ మబ్దుర్గంవార్క్ష మేవవా। నృదుర్గంగిరిదుర్గంవా సమాశ్రిత్యవసేత్పురం। సర్వేణతు ప్రయత్నేన గిరిదుర్గంసమాశ్రయేత్" = "ధనుర్దుర్గం" = சுற்றிலும் ஐங்காத வழி வரையில் நீரற்றவெறுவெளியாகிய நிலக்கோட்டை. (தன் கோட்டையில் மாத்திரம் நீருடையது). "మహీదుర్గం" = கல்லாலும் இட்டிகையாலும், விசாலமாகவும், பன்னிருமுழ முதலிய தக்க வுயர்முள்ளதாகவும், மேலே நின்று போர் செய்வதற்கும் போக்குவரவுக்கும் தக்கவழி, மறைவான பதணம், சுருங்கை பல்கணிமுதலிய வுடைய ஞாயில்களுமுடைய மதிலரண் "అబ్దుర్గం" ஆழமுள்ள நீராற் சூழப்பட்ட நீரரண் "వార్క్షం"=வெளியிற்சூழ

ஒருசாதவனாயினும் நெருக்கமுள்ள பெருமரங்கள், முட்கள், புதர்கள் முதலிய நிரம்பி உட்புகலாகாத காட்டரண். "నృదుర్గం" நாற்புறமும்சூழ நால்வகைச்சேனையும் நித்தமும் காத்திருக்கும் படையரண். "గిరిదుర్గం" = எங்கும் ஏறி உட்புக முடியாததாய் அறிந்தவர்க்கே அடையவல்ல சிறுகவர்வழியதாய், உள்ளேயாறு, ஊற்று, சுனைமுதலிய நீர் நிலையதாய், பயன்தரும் மரங்களோடுங் கூடியவிரிந்த நிலமுடைய மலையரண், இவற்றுளொன்றனை யேற்படுத்திக்கொண்டு பட்டணஞ் சமைத்தல் வேண்டும். எல்லா முயற்சியாலும். மலைக்கோட்டையை யடைவதே சிறந்தது. எ-று. காண்க.

## அரண்களைச்சமைக்கவேண்டும்வகை.

சாந்திபருவத்திற் கூறப்பட்டது. శాంతిపర్వణి॥ "దృఢప్రాకారపరిఖం హస్త్యశ్వరథసంకులం। ఊర్జస్వినంనాగరంచ చత్వరాపణశోభితం। ప్రసిద్ధవ్యవహారంచ ప్రశాంతమకుతోభయం। శూరాఢ్యంప్రాజ్ఞసంపూర్ణంతత్పురంస్వయమావిశేత్" = வலிமையுள்ள மதிலும், அகழியும் உடையதும், யானை குதிரைகள் நிரம்பியதும் நாடோறும் விருத்தியாவதும், நாகரீகமுள்ளமாந்தர்களையுடையதும், விரிந்தவெளியிடங்கள், வீடு, கடைத்தெருமுதலிய அணிகளுடையதும், சிறந்துபேர்பெற்ற வாணிபமும், நியாய விசாரமுநடந்து வருவதும், எந்தப்புறத்தும் அச்சமில்லாததும், வீரமுடையவர்களையும் பொருளுடையவர்களையும் உடையதும், கற்றோரால் நிரம்பியுள்ளதுமாகிய பட்டணத்துள் அரசன் தான் இருப்பிடஞ்செய்து கொள்ளவேண்டும். எ-று. காண்க.

மனு. మనుః॥ "కుర్యాదాయుధసంపన్నం ధనధాన్యేనవాహనైః। బ్రాహ్మణైశ్శిల్పిభిర్యంత్రైర్యవసేనోదకేంధనైః" = படைக்கலச்சாலை, பண்டாரச்சாலை, தானியங்கள் நிரம்பிய களஞ்சியமுதலியவைகள், மற்றை எல்லாப்பண்டங்களு நிரம்பியபண்டசாலை, வாகனசாலை, பார்ப்பாரவீதி, சிற்பம்வல்ல கம்மியர் முதலிய வினைவல்லோர்கள், இயந்திரம், செக்கு, ஏற்றம், சிவிறிமுதலியகருவிகளும், புல்லைவைக்கோற்போர்கள், உணவுப்பொருள்கள், பாகசாலைகள், நீர்நிலைகள், நீர்க்கால்வாய்கள், விறகுகள்முதலிய எல்லாநிரம்பிய பட்டணத்தைக் கட்டுவிக்கவேண்டும். எறு. காண்க.

## அரண்மனை.

**மனு.** మనుః॥ "తస్యమధ్యేతుపర్యాప్తం కారయేద్గృహమాత్మనః। గుప్తంసర్వర్తుకంశుభ్రంజలవృక్షసమన్వితం"=அவ்வூர்நடுவே உட்கோட்டை செய்து அதற்குக் காப்புகளைச் செய்து அதனுள்ளே மிகுதியாக அந்தப்புரம் = மாதரிருக்குமிடம், தேவகோட்டம், படைக்கலச்சாலை, படைபயிலிடம், பாகசாலை, களிசெய்மண்டபம், நிதியறை, அரசாட்சிமண்டபம், காவலிடம், மேல்மாளிகை, எல்லாப்பருவங்களிலும் மலர், பழம், நிழலுமுண்டாகிய சிங்காரவனம், நல்ல நீர்நிலை, நீர்க்கால்வாய், கீழ்வீடு, நிலவறை, உடையதாய் வெண்சுண்ணந்தீற்றிச் சித்திரமுதலியவற்றால் அணிசெய்து, நோயில்லாமையைத் தரத்தக்க நல்லிடங்களை வலுவான கட்டடவகைகளோடு அரண்மனையாக அமைந்துக் கொள்ளவேண்டும். எ-று. காண்க. கோட்டம் = கோயில். படைபயிலிடம்=சிலம்பக்கூடம். பாகசாலை = சமையலிடம். நிலவறை = சுரங்கம்.

## அரசன்மணவினைவிதி.

**மனு.** మనుః॥ "తదధ్యాస్యోద్వహేద్భార్యాం సవర్ణాంలక్షణాన్వితాం। కులేమహతిసంభూతాం హృద్యాంరూపసమన్వితాం" = அரசன் அவ்வரண்மனையிலிருந்து தன்வருணத்தளும், நல்லவிலக்கண வுறுப்புகளோடும் கூடியவளும், பெருத்தமரபிற் பிறந்தவளும், நல்லெண்ணமுடையவளும், அழகுள்ளவளுமாகிய மாதினை மணம் புணரவேண்டும். எ-று. காண்க.

## அரசன்ஒழுக்கம்.

**மனு.** మనుః॥ "పురోహితంచకుర్వీత వృణుయాదేవచర్త్విజః। తేచగృహ్యాణి కర్మాణి కుర్యుర్వైతానికానిచ। యజేతరాజాక్రతుభిర్వివిధైరాప్తదక్షిణైః। ధర్మార్థంచైవవిప్రేభ్యోదద్యాద్భోగాన్ధనానిచ। స్యాచ్చామ్నాయపరోలోకే వర్తేతపితృవన్నృషు"= புரோகிதனை வகுத்துக்கொள்க. இருத்துவிக்கையும் அமைத்துக் கொள்க. அவர்கள், அரசன் கோயிலில் நடத்தவேண்டுவனவாகிய நித்தவேள்விகளையும், சுரௌதஸ்மார்த்த கருமங்களைம், எனவே, வேள்வித்தீக்காரியம், தேவபூசை, கோபூசை, வாஸ்துபூசை, ஆயுதபூசை, மனைச்சாந்தி, முதலியவற்றைச்செய்துவருவர். அரசன் குறைவறத்தக்ஷணைகொடுத்து, எவ்வகைப்பட்டவேள்விகளையும் செய்யவேண்டும். வேள்வியின்பொருட்டு வேதியர்க்கு

வேண்டுமான போகப்பொருளையும் பொன்னையும் தரவேண்டுவது. வேதமோதி, அவ்வேதமேசிறந்த அளவையாகக்கொண்டு அவ்வாறேநடந்து கொள்ளவேண்டும். உலகத்தில்மன்பதைக்குத் தந்தையைப்போலிருக்கவேண்டும். எறு.காண்க.

## இராஜபுரோகிதன்.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "పురోహితంచకుర్వీత దైవజ్ఞముదితోదితం। దండనీత్యాంచకుశల మథర్వాంగిరసేతథా" = கோள்களினது நிலைமை, அவற்றின்பயன், உற்பாதங்கள், அவற்றின்பரிகாரங்கள், கனவு, சகுனம்முதலியவற்றையெல்லாம் நன்குணர்ந்தோனையும், கல்வி, மரபு, அனுட்டானம், இவைகளால் தொன்றுதொட்டு வந்தகுறைவில்லாமையையுடையவனையும், அருத்தநூல் = பொருள்வளர்க்குநூலில் தேர்ச்சியுடையவனையும், பகையறுதி-நோயறுதி-பயமறுதிமுதலிய வினைகளிலும், சுரௌதஸ்மார்த்த கருமங்களைச் செய்வித்தலிலும், நீதிநூல்களிலும்தெளிவுணர்ச்சியுடையோனையும் உள்ள புரோகிதனைவகுத்துக்கொண்டு தக்கவுபசாரங்களால் தன்னவனாகவைத்துக்கொள்ளவேண்டும். எ-று. காண்க.

## நாட்டிலிருக்கத்தக்கவர்கள்.

இதுவுமது. "నదానమానసత్కారై ర్న్యాసయేచ్ఛ్రోత్రియాంత్సదా। భూగాంశ్చదద్యాద్విప్రేభ్యో వసూనివివిధానిచ" = கொடையாலும், சிறப்புச் செய்தலாலும், இனியவைசெய்தலாலும், வேதமுற்று முணர்ந்தவர்களைக்களிப்பச்செய்து, எப்பொழுதும் தன்னிடத்திருக்கும்படி செய்துகொள்ளவேண்டும். பொதுவாக்வே தன்னாட்டில் வேதியர்க்கு வேண்டுவனவாகிய போகங்களையும் பலவகைப்பட்ட தனங்களையும் கொடுக்கவேண்டும். எ-று. காண்க.

## இறையொழிப்பு.

வேதமுணர்ந்தவரால் வரியிறை பெறலாகாதென்று மனு கூறினர். మనుః॥ "మ్రియమాణోప్యాదదీత నరాజాశ్రోత్రియాత్కరం" = அரசன் தான் இறக்கவரினும் வேதமுணர்ந்த வேதியனிடத்திருந்து வரிவாங்கலாகாது. எ-று. காண்க.

வேதியர்க்கு ஜீவனங்களை வகுக்கவேண்டுமென்று மனு கூறினர். మనుః॥ "నచక్షుధాస్యవిషయే సీదేచ్ఛ్రోత్రియోవసన్। యస్యరాజ్ఞస్తువిష

యే శ్రోత్రియస్సీదతిక్షుధా। తస్యాపితత్క్షుధారాష్ట్రమచిరాదేవసీదతి। శ్రుతవృత్తేవిదిత్వా స్యవృత్తింధర్మ్యాంప్రకల్పయేత్। సంరక్షేత్సర్వతశ్చైనం పితాపుత్రమివౌరసం" = தனது நாட்டில் வேதமுணர்ந்த வேதியன் பசியோடு இருத்தலாகாது. எந்த அரசனது நாட்டில் வேதமுணர்ந்த வேதியன் பசியால் துன்பப் படுகின்றானோ அவ்வரசனது நாடு அப்பசித்திருந்த வேதியனால் விரைவில் துன்பமடையும். வேதமோதலும், நல் ஒழுக்கமுடைய வியல்பும், உணர்ந்து, அவன் தரும அநுட்டானங்களுக்குத் தக்க சீவனமார்க்கத்தைக் கற்பிக்கவேண்டும். அரசன் வேதியனைத் தந்தை மூத்த மகனைக் காப்பதுபோல் எல்லாவகையாலும் காக்கவேண்டும். எ-று. காண்க.

## அரசன்செய்கை.

அநுசாசனிகம். ఆనుశాసనికె॥ "శాలాప్రపాతటాకాని దేవతాయతనాని చ। బ్రాహ్మణావసథంచైవకర్తవ్యంనృపసత్తమైః। బ్రాహ్మణానావమంతవ్యాభస్మచ్ఛన్నాఇవాగ్నయః। కులముత్పాటయేయుస్తే క్రోధాత్తస్మాద్ద్విజాతయః। దుష్టానాంశాసనంధర్మ శిష్టానాంపరిపాలనం। కర్తవ్యంభూమిపాలేన నిత్యంకార్యోమహార్జవం" = தருமசாலை, அந்நசாலை, கல்விச்சாலை, தண்ணீர்ப்பந்தர், ஏரிகள், தேவ கோட்டங்கள், வேதியர்க்குமனை, இந்தத்தருமகாரியங்களை அரசருள்ளுயர்ந்தோன் செய்க. வேதியர் நீறுபூத்த நெருப்பைப் போலு மிருக்கின்றனர். அவர்கள் வெகுண்டாற் குலத்தை வேருடன் களைகின்றனர். ஆதலினவர்களை அவமானஞ் செய்யலாகாது. அரசன் தீயோரை யொறுத்தலும் நல்லோரைப் புரத்தலுஞ் செய்யவேண்டும். எப்பொழுதுஞ் செய்யுங்கருமஞ் செவ்வனே யிருத்தல்வேண்டும். எ-று. காண்க.

## இனியகாப்பு.

சாந்திபர்வம். శాంతిపర్వణి॥ "బాలాతురేషుభూతేషు పరిత్రాణంకురూద్వహా। శరణాగతేషుకారుణ్యం కుర్యాత్తత్రసమాహితః। భరణంసర్వభూతానాం రక్షణం చాపిసర్వశః। యష్టవ్యంక్రతుభిర్నిత్యం దాతవ్యంచాప్యపీడయా। ప్రజానాంరక్షణంకార్యం నకార్యంకర్మగర్హితం" = சிறுவர், நோயாளிகள், மாதர், அச்சமுற்றோர் முதலிய ஆதுரர், ஆதாரமற்றவர்கள், அங்கவீனர், அசத்தர்முதலியோர், பசுமுதலியவுயிர்களையும், மற்றெல்லாவுயிர்களையும் அரசன் பாதுகாத்துப் புரத்தல்வேண்டும். அடைக்கலம் புக்கவரிடத்து இரக்கம்வைத்து அவரைக்காக்கவேண்டும்.

எப்போதும்வேள்விசெய்து வரவேண்டும். வருத்தப்படுத்தாது கொடுத்துவர வேண்டும். மன்பதையைப் புரத்தல்வேண்டும். பரிக்கிடஞ்செய்து கொள்ளலாகாது. எ-று. காண்க.

## வேதியரைப் புரத்தல்.

இதுவுமது. "ఆశ్రమేషు యథాకాలం చేలంభోజనభాజనం। స్వయమేవాహరే ద్రాజా సత్కృత్యవిధిపూర్వకం। ఆత్మానంసర్వకార్యాణి తాపసేరాజ్యమేవచ। నివేదయేత్ప్రయత్నేన తిష్ఠేత్ప్రహ్వశ్చనిత్యదా। చక్రమేణమహీంలబ్ధ్వా ప్రజాధర్మేణపాలయన్" வேதமுனிவர் தவஞ்செய்யும் ஆச்சிரமங்கட்குத் தானேசென்று, அவர்களுக்குவேண்டிய ஆடை, உணவு, கலமுதலிய கருவிகளைக் கொடுத்து விதிப்படி யுபசரித்து, யானுமென்னரசும் நும்மதே யென்று கூறிவணங்கி நிற்கவேண்டும். வீரத்தால் நிலத்தைச் சம்பாதித்துத் தருமத்தோடு குடிகளைப் பாதுகாக்கவேண்டும். எ-று. காண்க.

## வீரதருமம்.

இதுவுமது. "ఆహవేనిధనంకుర్యా ద్రాజాధర్మపరాయణః। ఆహవేచమహీంలబ్ధ్వా శ్రోత్రియాయోపపాదయేదిత్యాది"=அரசன் போர்செய்ய வேண்டுவது. இறந்தால் சுவர்க்கமடைகின்றான். வெற்றியடைந்து பிழைத்தால் தான்தேடிய பூமியை வேதமுணர்ந்த வேதியர்க்குக் கொடுத்துவிடவேண்டும் என்பதுமுதலியன வருமாறு. எ-று. காண்க.

## கொடுங்கோல்.

மனு. మనుః॥ "మోహాద్రాజాస్వకంరాష్ట్రం కర్శయత్యనపేక్షయా। సోచిరాద్భ్రశ్యతేరాజ్యా జ్జీవితాచ్చసబాంధవః। శరీరకర్శనాత్ప్రాణాః క్షీయంతేప్రాణినాం యథా। తథారాజ్ఞామపిప్రాణాః క్షీయంతేరాష్ట్రకర్శనాత్" = அரசன் தனது நாட்டினை அறிவின்மையால் வெறுத்து உலரச்செய்வானாயின் விரைவிலே தானுந்தன்சுற்றமுமாக அரசையும்உயிரையும் இழப்பன். உடம்பு சுருங்கிக்கெடுற்றால் உயிரழிவதுபோல நாடு கேடுற்றால் அரசனுங் கேடுறுவன். எ-று. காண்க.

## அரசன்நித்தகருமம்.

மனு. మనుః॥ "ఉత్థాయపశ్చిమేయామే కృతశౌచస్సమాహితః। హుత్వాగ్నీన్బ్రాహ్మణాంశ్చార్చ్య ప్రవిశేత్సభాంతతః" = இரவின் நான்காவது யாமத்தி லெழுந்து சௌசமுதலிய கடன்கழித்து வேள்விக்கரு

மஞ்செய்து வேதியரைப் பூசித்து, இராஜிய விசார சபைக்குப் போகவேண்டும். எ-று. காண்க.

பிறமிருதிகளிலும். స్మృత్యంతరే॥ "ప్రాతరుత్థాయనృపతిః కృతాఽఽప్తాంత స్యధావనం। స్నానశాలాంసమాగమ్య స్నాత్వాపూతేనవారిణా। అర్ఘ్యందత్త్వాథదేవాయ భాస్కరాయసమాహితః। తతోఽలంకృతగాత్రస్స స్వక్స్రీమాలాక్యమంత్రవత్। ఘృతపాత్రంతుసంప్రాప్య దద్యాత్సకనకంనృపః" = அரசன் உதயத்தெழுந்து பல் தீட்டி நீராடிச் சுத்த சலத்தால் சூரியனுக்கு அருக்கியம் கொடுத்துப் "பின்பு அலங்கரித்துக்கொண்டு, நெய்யில் முகம்பார்த்து அந்த நெய்யோடு பாத்திரத்தையும் பொன்னையும் வேதியர்க்குக் கொடுத்துவிடவேண்டும். எ-று. காண்க.

## நித்ததானம்.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "ఋత్విక్పురోహితాచార్యై రాశీర్భిరభినందితః। దృష్ట్వాజ్యోతిర్విదోవైద్యాన్ దద్యాద్గాంకాంచనంమహీం। నైవేశికానిచతథా శ్రోత్రియాణాంగృహాణిచ" = இருத்துவிக்குகள், புரோகிதர், ஆசிரியர், இவர்களால் ஆசிமொழிபெற்று, சோதிடரையும் வைத்தியரையும் நோக்கி, கோதானம், சுவணதானம், பூதானம், "నైవేశికాని" = கந்நியாதானம் (எனவே கன்னிக்குத்தரத்தக்க பூணுடைமுதலிய கொடை.) வேதமுணர்ந்த வேதியர்க்கு மனைத்தானம் "చ" என்றதனுற் பிறதானங்களையும் செய்ய வேண்டும். எ - று. காண்க.

## தேயவிசாரம்.

மனு. మనుః॥ "తత్రస్థిత్వాప్రజాస్సర్వాః ప్రతినంద్యవిసర్జయేత్" = சபையிலிருந்து யாவரையும் விசாரித்துக் களிப்பச்செய்து அனுப்ப வேண்டும். எ-று. காண்க.

## மந்திராலோசனை.

மனு. మనుః॥ "గిరిప్రదేశమారుహ్య ప్రాసాదంవారహోగతః। అరణ్యేనిశ్శలాకేవా మంత్రయేతావిభావితః। మధ్యందినేఽర్ధరాత్రేచ విశ్రాంతోవిగతశ్రమః। చింతయేద్ధర్మకామార్థా న్సార్ధంతైరేకఏవవా" = மலைமேலாயினும், மேன்மாடத்திலாயினும், ஆரணியத்திலாயினும், வேறுமனுடசஞ்சாரமில்லாத விடங்களிலாயினும், பிறரறியாதபடி இரகசியமானவிடத்தி லிருந்து, கவலைப்படாமல் பகலிலாயினும், பாதிராவிலாயினும், தனித்

திருந்து இவைப்பற்றி அறம், பொருள், இன்பங்களைப் பற்றி அமைச்சர்களோடாயினும் தான் தனியேயாயினும் ஆலோசிக்க வேண்டும். எ-று. காண்க.

## ஆராய்ச்சிவிடயம்.

மனு. మనుః॥ కన్యానాంసంప్రదానంచ కుమారాణాంచరక్షణం। దూతసంప్రేషణంచైవ కార్యశేషంతథైవచ। అంతఃపురప్రచారంచ ప్రణిధీనాంచచేష్టితం। కృత్స్నంచాష్టవిధంకర్మ పంచవర్గంచతత్త్వతః। అనురాగాపరాగౌచ ప్రచారంమండలస్యచ। అరేరనంతరంమిత్ర ముదాసీనంతయోఃపరం। తాంత్సర్వానభిసంధధ్యా త్సామాదిభిరుపక్రమైః। వ్యస్తైశ్చైవ సమస్తైశ్చ పౌరుషేణనయేనచ। సంధించవిగ్రహంచైవ యానమాసనమేవచ। ద్వైధీభావంసంశ్రయంచ షడ్గుణాంశ్చింతయేత్సదా। ఆసనంచైవయానంచ సంధాయచవిగృహ్యచ। కార్యంవీక్ష్యప్రయుంజీత ద్వైధంసంశ్రయమేవచ। ఉపేతారముపేయంచ సర్వోపాయాంశ్చకృత్స్నశః। ఏతత్త్రయంసమాశ్రిత్య ప్రయతేతార్థసిద్ధయే। ఏవంసర్వమిదంరాజా సహసమ్మంత్ర్యమంత్రిభిః" = கன்னிகைகளைத் தக்க மருகருக்குக் கொடுத்தல், புதல்வரைக் காத்தல், தூதரை விடுத்தல், தொழிற் குறைவு, அந்தப்புரத்து விடயம், கரந்துறையொற்றர் செய்தி, (கரந்துறையொற்றர் = மறைந்து திரியும் தூதர்.) எண் வகைக்கருமம், ஐவகைவருக்கம், சூழ்ந்துள்ள அரசர் நட்பு - பகை - செய்கை, பகைவன் - நண்பன் - உதாசினன் = இரண்டுமில்லாதவன், அப்பகை, நண்பினர்க்கு நடுவாவோன், இவர்களனைவரையும், சாமமுதலிய நால்வகை யுபாயத்தோடாயினும், வீரத்தாலாயினும், நீதியாலாயினும், சந்திசெய்து வைத்துக்கொள்வது. தன் மேற்படையெடுத்து வந்தவனைச் சந்திசெய்வது. போர்செய்வது. தான்பிறர்மேற்படையெடுத்துச் செல்வது. தன்படையை வேறோரிடத்துக் காவல் நிறுத்துவது. பிறருள் ஒருவர்க் கொருவரைப் பகைசெய்விப்பது. தன்னினும் வலியமற்றோரரசனைத் தானடைவது. பகைவரைப் பொருட்படுத்தா தொழிவது. தன்படையை இரண்டாகப் பிரித்து வைப்பது. இவற்றுளெதனைத் தான் கடைப்பிடித்தால் தனக்கு ஆக்கமும், பகைவர்க்குக் கேடுமுண்டாகுமோ? அவ்விடயங்களையும், தனது அளவு - தான் அடையவிரும்பிய பயனளவு - அதற்குவேண்டும் உபாயவகைகள் - அவற்றுள், எதுதக்கது - எது எவ்வளவு - என்பது முதலிய எல்லாவிடயமும் அரசன் மந்திரிகளோடு ஆலோசிக்கவேண்டும். எ-று. காண்க.

அந்தப்புரத்து விடயம். எது. "శస్త్రేణవేణీవినిగూహితేన। విదూరథంవైమహిషీజఘాన। విషప్రదిగ్ధేనచనూపురేణ। దేవీవిరక్తాకిలకాశిరాజం" = விடூரதன் என்னும் அரசனை அவனது பட்டத்தரசியாகிய மனைவி தன் கூந்தலிலிட்ட பின்னலுண்மறைத்து வைத்திருந்த படைக்கலத்தாற் கொன்றனள். காசிராஜன் மனைவி, விரத்தியடைந்தவளைப்போல நடித்துக்காட்டிக் கடைமுறை விடம் பூசிய காற்சிலம்பாற் கணவனைக் கொன்றனள். என்பவாகலின், மாதர்கள்பால் உண்டாகும் கொடியசேட்டைகளைச் சோர்வில்லாமற்கண்டுபிடிக்கவேண்டும். என்றபடி.

"అష్టకర్మాణి" = எண்வகைக் கருமமாவன. உசனர். ఉశనాః॥ "ఆదానే చవిసర్గేచ తథాప్రైషనిషేధయోః। పంచమేచార్థవచనే వ్యవహారస్యచేక్షణే। దండశుద్ధ్యోస్సదాయుక్తస్తేనాష్టగతికోనృపః" = ఆదానం" = வரிஇறை - கப்பம் - அபராதம்- கையுடை - பகுதிமுதலியவற்றைப் பெறுதல், "విసర్గః" = பரிசனர் - கூலியாளர்முதலியோர்க்குச்சம்பளம்-கூலி - வெகுமதி முதலியகொடுத்தல், "ప్రైషః" அமைச்சர் - இராயபாரி = தூதர் - ஒற்றர் முதலியோரைச் செலுத்துதல், "నిషేధః" = உலகியல், வேதவியலாகிய கருமங்களைச் செய்பவர்களை வேண்டாமெனத்தடுத்தல், "అర్థవచనం" = தன்னாணைப்படி தொழில் நடத்துவோர்க்கு அவ்விடத்துண்டான ஐயம் ஒழிப்பதற்குக் கூறவேண்டுவனவாகிய முடிபு மொழி, "వ్యవహారస్యేక్షణం" = இருதலை வழக்காளிகளின் விசாரணை, "దండః = தண்டமிட்டுப் பொருள் முதலியன வாங்குவது. அல்லது, சிறையிடுதல் முதலிய வாகத்தண்டித்தல், "శుద్ధిః" = குற்றஞ்செய்தவன் குற்ற மொழிப்பித்தல், அல்லது சிறைவிடுவித்தல். எனவாம்.

இனி இவ்வெண்வகைக் கருமத்தினை மேதாதிதியுரையுட் கூறுமாறு. அதுகாறுஞ் செய்திராத தொழிலினைச்செய்தல், செய்துவந்த பழையதொழிலைச் செய்தல், அப்பழையவற்றினை முன்னினும் சிறப்பச்செய்தல், செய்தொழிலின் பயனையடைதல், சாமம், பேதம், தானம், தண்டம், என்பனவாம்.

இனி அரசநீதி நூலுட்கூறப்பட்டன என்னெனில்? வாணிபஞ்செய்வதற்குத் தக்கவழிகளைக் கற்பித்தல், அல்லது, நடக்கும்வழிதிருத்தல், யாறுகால்களுக்குப் பாலம்கட்டுதல், (பாலம் = வாராவதி) கோட்டை அரண் காப்பிடம் சமைத்தல், பழைமைப்பட்டுக் கெடுவனவற்றைப் புதுப்பித்தல். இதுவே சீர்ணோத்தாரம், யானைமுதலியவற்றைப் பிடித்துவரச்செய்தல் பழக்குவித்தல் முதலியன, ஆகரங்களிலிருந்து பொன் வெள்ளி இரும்பு முதலிய வுலோகங்களை யெடுப்பித்தல், படைக்கலஞ் செய்வித்தல், வெளியான நிலங்களைக்காத்தல், காடுசெடிகளை வளர்ப்பித்தல், குறைப்பித்தல், எனவாம்.

ஐவகை வருக்கம். "பஞ்சவர்க்க:"=ஐவகைவருக்கமாவனஒற்றர்கூட்டம்.அவை யாவன, "காபடிக:" = காபடிகன்=கபடியாகிய வொற்றன்.எனவே அந்நியன்கருத்தைக்கண்டு கொள்ளத்தக்க நுண்ணறிவினை யுடையனாய்க் கல்வி கற்கும் வித்தைவிருப்பமுடையவன், பிறரறியாதபடி அரசனால் சீவனமுதலிய பொருளுபகாரம்பெற்று ஆசிரியன் முதலிய பெரியோர்களிடத்துச் சோர்வுமுதலிய குற்றம் உண்டாயவழிப்பிறர் அறியாது விரைவில் அரசனுக்குத் தெரிவிப்பவனும். "உதாஸ்தித:" = உதாஸ்திதன் = பெரியநிலைமையிலிருந்தவன். எனவே சந்நியாசம் சமயதீக்ஷைநிலைமைபெற்றும் மடத்தலைமை ஆசிரியத்தலைமைபெற்றும் பலரானன்குமதிக்கப்பட்டு ஏதேனும் பிழைகூறப்பட்டதனால் இழிந்துவிடப்பட்ட விவேகிக்கு அரசன் பிறரறியாதபடி உதவிசெய்து மடமுதலியநிலைமை கற்பித்துவைத்துக் கரந்துறைசந்நியாசிகள், கட்டதீக்ஷிதர்,கபடவிரதமுடையவர்கள்,வேடதாரியர்,முதலியவேவுகாரருக்கு ஆடை யுண்டி யுதவிசெய்து,அவரால்சிறந்த பலவகைச்செய்திகளையும்உண்மையோடுபாயத்தாலுணர்ந்து அரசனுக்குத் தெரிவிப்போன். (பெருஞ்செல்வத்திருந்து இழிந்த இழிகுலத்தன், வேற்றரசனால் வெறுக்கப்பட்டு வந்தவன் முதலியோரெனவும் கூறுவர்). (கெட்டுப் பிழைத்தவன் என்பாருமுளர்). "க்ருஹபதி:" = கிருகபதி = உழுதுபயிரிடும் குடித்தனக்காரன் தெய்வகதியால் வறுமையுற்றுப்பிறரறியாது அரசனுபகாரத்தைப்பெற்று ஆக்கமுற்றுத் தலைவனாய் ஊர்க்குடிகள் கருத்தையறிந்து அரசனுக்கு முன்தெரிவிப்போன். வாணிபஞ்செய்வாருள்ளும் அவ்வாறானவனுமாம். "வைதிக:"=வைதிகன்= புரோகிதன் - சோதிடன் - வைத்தியன். மாந்திரிகன் - புராணிகன் - தேவபூசைசெய்வோன் முதலியோர் இடருற்றவழி அரசனால் இரகசியத்தில் உபகாரம் செய்யப்பெற்று, பலர்செய்திகளையும் அரசனுக்கு அப்போதைக்கப்போது தெரிவிப்பவருள் ஒருவனாவான். "தாபஸவ்யஞ்ஜன:" = தபவேடம் பூண்டவன்=சாலவித்தைமுதலிய வித்தைகளிற் சிறந்தவனாய் விரதி சந்நியாசி வேடம்பூண்டு மாணக்கரோடு வேற்றரசர் நாட்டுச்சென்று செய்தியறிந்துவந்து அரசனுக்குக் கூறுவோன்.

இனி பகை நண்பு நடு என்னும்பகுதி எழுபத்திரண்டாவன. மூலப்பகுதி நண்பன் - பகைவனுக்கு நண்பன் - நண்பனுக்கு நண்பன் - பகைவனண்பனிவர்களனன்பன், என்னுநான்கு எனவும் - மற்றொருசாரார், நண்பன் - பகைவனுக்குப்பகைவன். தன்பகைவன் - நண்பனதுபகைவன். எனநான்கு எனவும் நால்வகைப்பகுதியென்பர். இந்நால்வரும் தன்னரசுக்கும் - தன்எதிரரசுடையவனுக்கும் - தன்பின்னுள்ள அரசுடையவனுக்கும் எனப்பகுதி பன்னிரண்டு. உசனர் கருத்தின்படி, பகைவன் - நண்பன் - உதாசீனன் = இரண்டுமல்லாதவன் - நடுவன் - இந்நால்வரும் நாற்பகுதியராம். பிரகற்பதிகருத்து. வெளிப்பட்ட பகைவன் - வெளிப்படாத பகைவன் - வெல்லும்படி படை

யெடுத்தேவந்தவன் - சிறுநண்புடையவனாய் பகைவர்க்குந் தனக்குநடுவுள் ளவன். எனநாற்பகுதியாம். தனக்கு,- தனக்குமுன், தனக்குப்பின் னரசர்க் குமாகப் பன்னிருபகுதியரும் மூலப்பகுதியரெனப்படுவர். இவரோ கிளைப்ப குதியருமாவர் - அமைச்சன் - நாடுவிசாரத்தலைவன் - கோட்டைவிசாரத்தலை வன் - பொருள்வரவு விசாரத்தலைவன் - சேனைத்தலைவன். இவ்வைவரும் பொருட்பகுதியர் என்னப்படுவர். ஒவ்வோர்கிளைப் பகுதியர்க்கும் ஐவைந் தபொருட் பகுதியராகப் பொருட்பகுதியர் அறுபதின்மர். ஆகப்பகுதி எழு பத்திரண்டு. இவைகளைப்பற்றி யாராய்தலாம்.

## அரசனுண்டி.

மனு. మనుః॥ " వ్యాయామాప్లుత్యమధ్యాహ్నే భోక్తుమంతఃపురంప్రజేత్। తత్రాత్మభూతైః కాలజ్ఞై రహార్యైఃపరిచారకైః। సంపరీక్షితమన్నాద్యమద్యాత్ "=முயன்றிளைத்துவந்து, அல்லதுதிரிந்து களைத்துவந்து உச்சிப்போதில் நீராடி உண்டிக்குஅந்தப்புரத்துக்குச் செல்லவேண்டுவது. அங்கு தன்னையொத்தவனும் (எனவேவிசேடநம்பிக்கையுள்ளவன்) கால மறிந்தவனுமாயுள்ள சிறந்த மடைப்புலவனால். தன்னுடம்பின் கூறுபாட்டிற்கும் காலதேய வேறுபாட்டிற்கும் தக்கதாயுள்ள உணவுப்பொருளைச்சமைக்கப்பட்டுக் குற்றமறச்சோதிக்கப்பட்ட அந்நமுதலிய ஆகாரங்களைப் புசிக்கவேண்டும். எ - று. காண்க,

## உண்டிசோதனை.

மனு. మనుః॥ " మంత్రైర్విషాపహైః। విషఘ్నైరుదకైశ్చాపి సర్వద్రవ్యాణి నె జయేత్। విషఘ్నాని చ రత్నాని నియతో ధారయేత్సదా। పరీక్షితాఃస్త్రియశ్చైనం వ్యజనోదకధూపనైః। వేషాభరణసంయుక్తాః స్సంస్పృశేయుస్సమాహితాః। ఏవంప్రయత్నంకుర్వీత యానశయ్యాసనాశనే। స్నానేప్రసాధనేచైవ సర్వాలంకరణేషుచ " = விடம் போக்கு மந்திரங்கள், விடங்களை யொழிக்கும் நீர்வகைகள், விடங்களைப் போக்கும் மூலிகைகள் = பூண்டு செடிவகைகள், இவைகளால் எல்லாப் பண்டங்களையும் தக்கபடி சுத்திசெய்வது. விடத்தைப் போக்கும் இரத்தினங்களை எப்பொழுதும் விடாமலுடம்பிலணியவேண்டும். (விடமொழிக்கும் இரத்தினம் எனவே, ஈ, வண்டுமுதலியவிடங்களைப் போக்கும் மரகதம், பாம்புவிடத்தைத் தடுக்கும் வைடூயம்முதலியபோல்வன.) பரீக்ஷிக் கப்பட்டமாதர்கள் (எனவே விடமூச்சு, விடவேர்வை, விடப் பார்வை, விடவாக்கு, கெட்டசுழி, முதலிய இயற்கைக் குற்றமும், வஞ்சகங்கபடுமுதலிய செயற்கைக்குற்றமு மில்லாதவர்க

ளாகச் சோதிக்கப்பட்டு விடவொழிப்பாகிய அலங்காரமுடைய மாதர்கள்). சிவறி — சாந்தாற்றி — கவரிமுதலிய வீசுதல், பன்னீர் தெளித்தல், நறும்புகை கமழச்செய்தல், அணி செய்தல், உபசரித்தலின் பொருட்டுத் தொடுதல், ஆடைதரித்தல் முதலிய வுபசாரத்தொழில்களைச் சுத்தமாகச் செய்தல். உண்டல்— குடித்தல் — நீராடல் - ஆசனம் = பீடம், படுக்கை — போர்வை- அழகுசெய்தல் — மயிர்கழித்தல் வினை — எண்ணெய் முழுக்கு- சௌசம் - சிகை கோதல், பூ — சந்தனம் - வெற்றிலைப்பாக்கு- மருந்துமுதலியவாக அரசனுக்கு வேண்டுவனவாகிய எல்லாவற்றுள்ளும் முயற்சியோடும் விடமுதலிய குற்றங்களில்லாதபடியாயும், உடம்புக்கும், அறிவுக்கும், இன்பமும் விருத்தியும் உண்டாகும்படியாயும், நூன்முறைப்படி நன்றாகப்பரிசோதிக்கப்பட்டு உபயோகித்துக் கொள்ளவேண்டும். எ—று. காண்க. விடம் = விஷம். அது பாஷாணம், மருந்தீடுமுதலியன.

## அரசன்விஹாரம். (விஹாரம்=பொழுதுபோக்கு.)

மனு. మనుః॥ "భుక్త్వానథతాభిశ్చ స్త్రీభిరంతఃపురేసహ। విహృత్యచయథాకాలం పునఃకార్యాణిచింతయేత్" = உண்டபின் அந்தப்புரத்தில் மாதரோடு வேண்டியவாறு விநோதமாகச் சிறுபொழுது போதுகழித்தபின்பு, மீட்டும் உலககாரியங்களை ஆராய்தல் வேண்டும். எ—று. காண்க.

## அரசன்கண்ணோக்கம்.

மனு. మనుః॥ "అలంకృతశ్చసంపశ్యే దాయుధీయంపృథగ్జనం। వాహనానిచసర్వాణి శస్త్రాణ్యాభరణానిచ" = ஆடை முதலியவற்றால் அலங்காரமுடையவனாய்ப் படைக்கலச் சாலையினையும், தன் பரிவாரமான அதிகாரி முதல் ஏவலர் வரையுமுள்ள கூட்டங்களையும், சேனைகளையும், ஊர்தி = வாகனங்களையும், ஆபரணம் ஆடை புத்தகம் பொருள் முதலியவகைகளையும், ஏனைய போர்க்கருவிகளையும் கண்ணோக்கஞ் செய்யவேண்டும். எ-று. காண்க.

## அரசனது மாலை வைதிகவினை.

மனு. మనుః॥ "సంధ్యాంచోపాస్యశృణుయా దంతర్వేశ్మనిశస్త్రభృత్" = சந்தியாவந்தனம், ஔபாசனம், கடவுட்டரிசனை, முதலிய கருமங்களை அந்தப்புரத்துட் செய்யவேண்டும். எ-று. காண்க.

## அரசனது தனிவிசார விருப்பு.

**மனு.** మనుః॥ "రహస్యాఖ్యాయినాంచైవ ప్రణిధీనాంచచేష్టితం। గత్వాక క్ష్యాంతరంసమ్య క్సమనుజ్ఞాయతంజనం"=அதன்பின் தனியாராய்ச்சி யிருப்பிடஞ் சென்றிருந்து, மந்தணம் கூறவந்தவர்க்கும், வெளிப்படாவொற்றர்க்குஞ் சிறிதுபொழுது உதவி, அவர்கள் செய்தியையறிந்து விடைகொடுத்து அனுப்பவேண்டும். எ-று. காண்க. மந்தணம்=இரசியம்.

## அரசன் இராத்திரிவினை.

**மனு.** మనుః॥ "ప్రవిశేద్భోజనార్థంతు స్త్రీభిరంతఃపురంనిజం। తత్రభుక్త్వాపునః కించి త్తూర్యఘోషైఃప్రహర్షితః। సంవిశేచ్చయథాకాలముత్తిష్ఠేద్విగతక్లమః"=பின்னர் மாதர்களோடு அந்தப்புரஞ்சென்று உண்டு, சிறுபோது மங்கலப்பாடல், முரசுமுதலியவைகளை யனுபவித்து, இளைப்புச் செய்து கொள்ளாது சுகமாகப் படுத்திருந்து உதயகாலத்துவழக்கப்படி எழுந்திருக்க வேண்டும். எ-று. காண்க.

## அரசாட்சிகருமத்தைநடத்துவோர்.

**மனு.** మనుః॥ "ఏతద్విధానమాతిష్ఠే దరోగఃపృథివీపతిః। అస్వస్థస్సర్వమేతత్తు భృత్యేషువినివేశయేత్" = இவ்விடத்துக் கூறிய நித்தகருமங்களையெல்லாம் நோயற்றுச்சுகமாயுள்ள அரசன் செய்யவேண்டுவது. தேகசுகந்தப்பிய காலத்தில் தக்கஅதிகாரிகளை நியமித்து அவர்வசத்தில் விட்டுவிடவேண்டும். எனவே அவர்கள் அரசனுக்கு உத்திரவாதிகளாய் இன்றியமையாதனவற்றை நடத்தவேண்டுவது. எ-று. காண்க.

## அரசன்ஏனையதருமம்.

**மனு.** మనుః॥ "సంగ్రామేష్వనివర్తిత్వం ప్రజానాంచైవపాలనం। శుశ్రూషా బ్రాహ్మణానాంచ రాజ్ఞాంశ్రేయస్కరంపరం। అలబ్ధంచైవలిప్సేత లబ్ధంరక్షేచ్చయత్నతః। రక్షితంవర్ధయేచ్చైవ వృద్ధంపాత్రేషునిక్షిపేత్। అమాయయైవవర్తేత నకథంచనమాయయా। బుధ్యేతారిప్రయుక్తాంతు మాయాంనిత్యంసుసంవృతః" = போரில் முதுகு காட்டாது இருத்தல், மன்பதைபுரத்தல், வேதியர் கூறியவாறு கேட்டொழுகுதல், "శుశ్రూషా" = என்றபாடத்தில், வேதியர் பணிசெய்தல், இவைஅரசனுக்கு ஆக்கத்தைத்தருகின்ற சிறந்த தருமங்களாக விருக்கின்றன. அரசன் எப்பொழுதும் தானடையாத புதுப்புதுபயன் பலவற்றினையு மடைய விரும்பவேண்டும்.

கிடைத்த பொருளை முயற்சித்தும் கெடாதவகை காப்பாற்ற வேண்டும். அதனை மேலுமேலும் வளரச்செய்ய வேண்டும். அதிகமாகக் கிடைத்தனவற்றை நல்லோர்க்குப் பயன் படுத்த வேண்டும். அரசன் எவ்வகையாலும் (மாயை) வஞ்சகம்பொய் யில்லாதவனுயிருத்தல் வேண்டும். பகைவர்செய்யும் (மாயங்கள்) வஞ்சகம், கபடு, பொய் முதலியவற்றை முன்னுகவுணர்ந்து தன்னை மூடவேண்டும் (எனவே காத்துக்கொள்ள வேண்டு மென்பது). எறு. காண்க.

சாந்திபர்வம். శాంతిపర్వణి॥ "వ్యసనానిచసర్వాణి నృపతిః పరివర్జయేత్। లోకసంగ్రహణార్థాయ కృతకవ్యసనీభవేత్" = அரசன் எல்லாவியசனங் களையும் ஒழித்துவிட வேண்டுவது. உலகம் வசப்படும் பொருட்டு வஞ்சகமான வியசனமுடையவனுக விருக்க வேண்டும். (அவ்வியசனமாவன, வேட்டைமுதலிய காமங்காரணமாகப் பிறந்தனபத்தும், "பிசுநம்" = அருவருப்பு முதலிய வெகுளிகாரணமாகப்பிறந்த எட்டும், ஆகப்பதினுறு மெனமேற் கூறப்பட்டன). எறு. காண்க.

இதுவுமது. "వియుజ్యతేర్థధర్మాభ్యాం క్రోధజేష్వాత్మనైవతు। ద్వయోరప్యతయోర్మూలంయంసర్వేకవయోవిదుః। తంయత్నేనజయేల్లోభంతజ్జౌహ్యేతౌగుణావుభౌ" காமவியசனங்கள் அறம் பொருளைக் கெடுக்கின்றன. வெகுளிவியசனங்கள்தன்னைக்கெடுக்கின்றன. இவ்விரண்டிற்கும் எதுகாரணமென்று அறிவுடையோர் கூறுவரோ? அப்படிப்பட்ட வுலோபமாகிய கெட்டகுணத்தை எவ்வித முயற்சியாலாயினும்ஒழித்துவிடவேண்டும். எறு. காண்க, இவறலு மாண்பிறந்த மானமு மாணு வுவகையு மேத மிறைக்கு." என்பதுமது.

இதுவுமது. "వ్యసనస్యచమృత్యోశ్చ వ్యసనంకష్టముచ్యతే। వ్యసన్యధోధోవ్రజతి స్వర్యాత్యవ్యసనీమృతః" = வியசனமும் மரணமுமே இன்னுமை பலவற்றுள்ளுஞ் சிறந்த வின்னுதனவாம் இவ்விரண்டி னுள்ளும் சாவினும் பெரியதுவியசனமாம். என்னையெனில்? வியசனமுடையவன் கீழ்ப்போகின்முன். அஃதில்லாது இறந்தவன் சுவர்க்கம் பெறுகின்முன். எறு.காண்க." சாதலினின்னுததில்லை யினிததூஉ மீதலியை யாக்கடை". என்பதுமது. ஈதலியையாக்கடை.யென்றதனுல் உலோபமுடைமையும் என்றவாறுயிற்று.

**மார்க்கண்டேயர்.** మార్కండేయః॥ "వ్యసనానిపరిత్యజ్య సప్తమూలహరాణిచ। ఆత్మారిపుభ్యస్సంరక్ష్య బహిర్మంత్రవినిర్గమాత్। స్థానవృద్ధిక్షయజ్ఞాన షాడ్గుణ్యవిజితాత్మనా। భవితవ్యం నరేంద్రేణ ప్రజాసుసమవర్తినా। ప్రాగాత్మామంత్రిణశ్చైవ తతో భృత్యామహీభృతా। జ్ఞేయాశ్చానంతరంపౌరావిరుధ్యేతతతోఽరిభిః। యస్త్వేతానవినిర్జిత్య వైరిణోవిజిగీషతే। సోఽజితాత్మాజితామాత్య శ్శత్రువర్గేణబాధ్యతే" = மூலத்தைக் கெடுப்பதாகிய எழுவகை வியசனங்களை விட்டு (எனவே காமத்துணன்கும், வெகுளியில் மூன்றும் பெருவருத்தம் விளைக்கும்வியசனமென்பது மேலே கூறப்பட்டது) செய்த சூழ்ச்சிவெளிப்பட்டுப் பகைவர்க்கு இடனுண்டாகாத படிதன்னைக் காத்துக் கொள்ளவேண்டும். இருக்குமிடம், ஆக்கம், கேடு, இவற்றை யுணர்தலாலும், அறுவகைக் குணத்தாலும், மனத்தைத் தன் வசஞ் செய்திருக்கும் அரசன் குடிகளிடத்து நடுநிலை யுடையவனாக விருக்கவேண்டும், (எனவே அவரவர் நிலைமைக்குத் தக்கவாறு செய்தல் என்பது). முதல் தான், பின்மந்திரியர், அதன்பின் ஏவலர், அப்பால், நகரவாசியர், இவர்களைவர் கருத்தினையு முணர்ந்து அனுகூலப்படுத்தி இவர்களை வென்று தன் வசஞ் செய்து கொண்டபின், பகைவரை வெல்லுமுயற்சி செய்யவேண்டும். அவ்வாறு செய்யாதவன் பகைவரால் துன்புறுத்தப்படுகின்றான். எறு. காண்க.

## உலகோம்பலின் பயன்.

**சாந்திபர்வம்.** శాంతిపర్వణి॥ "స్త్రియశ్చపురుషామార్గం సర్వాలంకారభూషితాః। నిర్భయాఃప్రతిపద్యంతే యథారక్షతిభూమిపః। ధర్మమేవప్రపద్యంతే నహింసంతి పరస్పరం। అనుగృహ్ణంతిచాన్యోన్యం యథారక్షతిభూమిపః। యజంతేచమహాయజ్ఞై స్త్రయోవర్ణాఃపృథగ్విధైః।యుక్తాశ్చాధీయతేవేదా న్యథారక్షతిభూమిపః। యథారాజాధురంశ్రేష్ఠా మాదాయవహతిప్రజాః। మహతాబలవేగేన తదాలోకాంత్సమశ్నుతే"= அரசன் உலகோம்புவானாயின் மாதர், ஆடவர், அணிசெய்து கொண்டுபயமற்று வழிநடப்பர். அனைவரும் தருமத்தை யடைக்கலமடைவர். ஒருவரை யொருவர் வருத்துதல் செய்யார். ஒருவருக்கொருவர் உபகரிப்பார்கள். மூன்று வருணத்தரும் புண்ணியகருமங்களையே செய்வர். வேதமோதல் வழுவாது நடக்கும். அரசன் வலியனாய் விரைவில் உலகபாரம் எல்லாவற்றினையும் சுமந்து தனது குடிகள் என்னும் அபிமானத்தோடு காத்துவந்தால் புண்ணிய லோகத்தை யனுபவிக்கின்றான். எறு.

வான்மீகிராமாயணம். వాల్మీకిరామాయణే॥ "యఃక్షత్రియస్స్వధర్మేణ పృథివీమనుశాస్తివై। సలోకేఽథ తేవిర్యం యశోగచ్ఛేత్యచసద్గతిం" = எந்த அரசன் தனக்கு நூல்களால் விதிக்கப்பட்ட தருமத்தோடு உலகினைப் பாதுகாப்பனோ? அவன் இவ்வுலகத்தில் வீரம், புகழ் அடைவன். மறுமையில் நற்கதிபெறுவன். எ-று. காண்க.

## காவாவழி வருங்குற்றம்.

சாந்திபருவம். శాంతిపర్వణి॥ "యానంవస్త్రాణ్యలంకారా న్రత్నానివివిధానిచ। హరేయుస్సహసాచోరా యదిరాజానపాలయేత్। పతేద్బహువిధంశస్త్రం నక్షర్వణిక్పథః। మజ్జేద్ధర్మస్త్రయీనస్యా ద్యదిరాజానపాలయేత్" = அரசன் காவாவிட்டால், ஊர்தி, ஆடை, அணிகள், பலவகைப்பட்ட மணிகள் முதலியவற்றை விரைவில் கள்ளர் திருடுவர். பலவகைப்பட்ட படைக்கலம் மேல்விழும். உழவுத்தொழில் நடவாது. வாணிபஞ்செய்வோர் வழித்துறைகெடும். தருமம் மூழ்கிவிடும். வேதமில்லா தொழியும். எ-று. காண்க. (எனவே அப்பாவம் முற்றும் அரசனுக்காம் ஆதலின் அரசன் காக்கவேண்டு மென்பது கருத்து). (௬0௨)

அரசன் தருமம் முற்றிற்று.

---

# வைசியதருமம்.

மூ॥ లాభకర్మతథారత్నం గవాంచపరిపాలనం
కృషికర్మచవాణిజ్యం వైశ్యవృత్తిరుదాహృతా. ॥௬0௫॥

என்பது. வைப்புமுறையே வைசியனது சிறப்புத்தருமங் கூறுகின்றது.

(இ-ள்.) வட்டிவாங்குதல், இரத்தின முதலிய மணிச்சோதனை, பசுநிரைகளைக் காத்தல், உழுதல், கொள்ளல் விற்றலாகியபண்டமாற்று, இவைகள் வைசியன் தருமமாகக் கூறப்பட்டது.

"లాభకర్మ" = இலாபத்தின் பொருட்டுச் செய்யுந்தொழில். எனவே கடன்கொடுத்து வட்டிவாங்குதல், நெல்முதலிய தானி

யங்களைக்கொடுத்து நெல்வாங்குதல் முதலியன. (இது, தலவாசி, நாங்குயென விக்காலத்து வழங்குகின்றது.)

"రత్నం" = வச்சிரம், நீலம், மாணிக்கம் = செம்மணி, மரகதம், கோமேதகம், வைடூயம், புட்பராகம், பவளம், முத்து முதலியன. இம்மொழி இலக்கணையால் அவற்றைச் சோதித்தல், விற்றல், வாங்கல் என்ற பொருளைத்தருகின்றது.

பசு நிரைகளைக் காத்தலாவது, வைக்கோல் புல்லிடுதல், நீர்குடிப்பித்தல், மேய்த்தல், தேய்த்தல், சொறிதல், சுத்தஞ்செய்தல், நீராட்டல், பால்கறத்தல், புலிமுதலியவற்று லிடையூறு வராமற்காத்தல், முதலியவைகளாம்.

"కృషికర్మ" = நிலத்தையுழுது பக்குவஞ்செய்து விதை வித்தி, பயிர் வளரக்காத்துப் பயனைப்பெறுதல்.

"వాణిజ్యం" = தானியம், பாக்கு, ஆடை முதலியவற்றைக் கொள்ளல்விற்றல் இவையே வைசிய தருமமாம்.

இவ்வட்டிவாங்குதல், முதலியகருமங்கள் வைசியனுக்குத் தருமமென்று யாஞ்ஞவற்கியரும் கூறினர். యాజ్ఞవల్క్యః॥ "కుసీద కృషివాణిజ్య పాశుపాల్యం విశః స్మృతం" = வட்டிவாங்குதல், உழவு, கொள்ளல்விற்றல், பசுக்காத்தல், வைசியனது என்று கூறப்பட்டது. எ-று. காண்க.

மனு. మనుః॥ "పశూనాం రక్షణం దాన మిజ్యాధ్యయన మేవచ। వణిక్పథం కుసీదంచ వైశ్యస్య కృషి మేవచ" = பசுக்களைக்காத்தல், தானம்கொடுத்தல், வேட்டல், வேதமோதல், கொள்ளல்விற்றல், வட்டிவாங்குதல், இக்கருமங்களை வைசியனுக்கு விதிக்கத்தக்கது. எ-று. காண்க.

வராகபுராணம். వరాహపురాణే॥ "స్వాధ్యాయం యజనం దానం కుసీదం పశుపాలనం। గోరక్షాం కృషివాణిజ్యం కుర్యాద్వైశ్యో యథావిధి" = வேதமோதல், வேள்விசெய்தல், தானமீதல், வட்டிவாங்குதல், பசுநிரையோம்பல், ஆனிரைகாத்தல், உழவு, வாணிபம், இவைகளை விதிப்படி வைசியன் செய்தல்வேண்டும். எ-று. காண்க. ஆனிரை காத்தலை வேறுகூறியிருத்தலின், பசுநிரையோம்ப லென்பது, யாடு, குதிரைமுதலியவற்றை யோம்புதலெனக்கொள்க.

## விற்றற்குரிய பண்டங்கள்.

அநுசாசனபர்வம். ఆనుశాసనికే॥ "తిలచర్మరసాశ్చైవ విక్రేయాణిప శువాజినః। వణిక్పథముపాసీనై ర్వైశ్యైః శూద్రైస్సథైవ చ" = எள், தோல், இரசவருக்கங்கள், பசுக்கள், குதிரை முதலியவற்றினை ஆவணத்திருந்த வசியராயினும் அவர்களிடத்து அம்முயற்சியின் பொருட்டு நின்ற மற்றையர் யாவராயினும் விற்றல்வேண்டும். எறு. காண்க. ஆவணம் = கடைவீதி.

சாந்திபர்வதத்தில் ஜாபாலி யுபாக்கியானப் பிரசங்கத்தில் துலாதாரன் என்பவனால் வைசியதருமங் கூறப்பட்டது. శాంతిప ర్వణి ॥ తులాధారః॥ "యద్దదామినతంన్యూనం యద్గృహ్ణామినచాధికం। విక్రీణామి రాసాంశ్చాహమన్నవర్జమమాయయా। క్రీత్వావైప్రవిక్రీణే పరహస్తాద్ధనంబహు"=நான் எதனைக் கொடுக்கின்றேனே அது குறைவர்கவிராது. நான்எதனைக் கொள்ளுகின்றேனே அது மிகுதியாக விராது. சமைத்த சோறொன்றொழிய மற்றைய இரசவருக்கமனைத்தினையும்வஞ்சிப்பின்றி விற்கின்றேன். ஆயின், கொண்டதினும் அதிகபொருளைப் பிறன் கையிற் பெற்று விற்கின்றேன். எறு. காண்க.

## ஆனிரைபோம்புதல்.

சங்கலிதர். శంఖలిఖితౌ॥ "గావస్తాస్వపీతాసు నపిబేన్నతిష్ఠేన్నత్యాపవిశేన్న స్వయముత్థాప యేన్నైవార్ద్రశాఖయానపలాశయాస్పృష్ట్వాభి హన్యాత్ విషమేణా ల్పోదకేననైవతారయేద్బాల వృద్ధరోగార్తానాం శక్తితఃప్రతీకారం కుర్యాదన్యథా విప్లవః" = ஆனிரைகாத்தல் வேண்டும். அவை நீர்குடிக்குமளவுந் தான் நீர்குடிக்கலாகாது. அவை படுக்காவிட்டால் தான் உட்காரலாகாது. படுத்திருப்பதனைத் தான் எழுப்பலாகாது. பசிய சிறுவளாரினாலும் இலையற்ற கட்டைக்கோட்டினாலும் அதனைத் தீண்டாது, உலர்ந்த இலைகளோடுங் கூடியஉலர்ந்த சிறுவளாரினால் அதன்கால் முதலிய விடங்களின் மெல்லப்பரிசித்துச் செலுத்தவேண்டும். விஷமம் = பெருசிறுமேடுபள்ளம் அழுக்கு உளை முதலியவுடைய நீர் நிலைகளில் இறங்கவிடலாகாது. நீரில்லாதநிலைகளிலும் விடலாகாது. இளங்கன்று, கிழப்பசு, நோயுடையன இவற்றிற்குத் தன்னாலியன்றமட்டில் அவற்றின் றுன்பத்தை யொழிக்கத் தக்கவுபாயமு முபகாரமுஞ்செய்யவேண்டும். செய்யாவிடின் பாவத்துள் அழுந்துவன். எறு. காண்க.

## வசியன் அறுதொழில் மூவகைச்சீவனம்.

வட்டிவாங்குதன் முதல் வாணிபம்வரையில் எந்தெந்தக் கருமம் வசியனுக்குக்கூறப்பட்டதோ அவையெல்லாம் "వృత్తిః" சீவனோபாயம் = பிழைக்கும் வழியாம். இது மார்க்கண்டேயபுராணத்துட் கூறப்பட்டது. మార్కండేయపురాణే॥ "దానమధ్యయనంయజ్ఞో వైశ్యస్యాపిత్రిధైవసా। వాణిజ్యంపాశుపాల్యంచ కృషిశ్చైవాస్యజీవికా" = தானமீதல், வேதமோதல், வேள்விசெய்தல், இம்மூன்று வசியன் வைதிககருமமாம். வாணிபம், பசுநிரைகாத்தல், உழவுத்தொழில் இம்மூன்றும் சீவனத்தொழிலாம். எ-று.

## வசியன்சிறப்புத்தருமம்.

மநு. మనుః॥ "వైశ్యస్తుకృతసంస్కారః కృత్వాదారపరిగ్రహం। వార్తాయాం నిత్యయుక్తస్స్యాత్ పశూనాంచైవరక్షణే। ప్రజాపతిర్హివైశ్యాయ సృష్ట్వాపరిదదేపశూన్। నచ వైశ్యస్యకామస్స్యాన్నరక్షేయంపశూనితి। వైశ్యేచెచ్ఛతినాన్యేన రక్షితవ్యాఃకథంచన। మణిముక్తాప్రవాళానాం లోహానాంతాంతవస్యచ। గంధానాంచరసానాంచ విద్యాదర్ఘబలాబలం। బీజానాముప్తివిద్విద్యాత్ క్షేత్రబీజగణస్యచ। మానయోగాంశ్చజానీయాత్ తులాయోగాంశ్చసర్వశః। సారాసారంచభాండానాం దేశానాంచగుణాగుణం। లాభాలాభంచపణ్యానాం పశూనాంచవివర్ధనం। భృత్యానాంచభృతింవిద్యాద్భాషాశ్చవివిధానృణాం। ద్రవ్యాణాంస్థానయోగాంశ్చ క్రయంవిక్రయమేవచ। ధర్మేణచద్రవ్యవృద్ధావాతిష్ఠేద్యత్నముత్తమం। దద్యాచ్చసర్వభూతానా మన్నమేవ ప్రయత్నతః" = வசியன் தக்கவிதியோடு உபநயநமுதலிய சமஸ்கார கருமங்கள் செய்யப்பட்டு மணம்புணர்ந்து (பிரமசாரியாகவாயினும் சந்நியாசியாகவாயினுமிருத்தலாகாதென்றுதோற்றுவது.கிரகத்ததருமத்தையேஅனுட்டிக்க வேண்டுமென்பது சித்தமாகின்றது) உழவு, வாணிபம், ஆனிரை காத்தல்என்னும்" வார்த்தை " யிலும், யாடு குதிரை முதலிய பசுக்காத்தலிலும் தவறுது எப்போதும்நடத்தல்வேண்டும். பிரமன் பசுக்களைப்படைத்து வசியனுக்குக்கொடுத்தனர். பசுவை நான்காக்கமாட்டேன் என்றுவசியனுக்குஎண்ணம்பிறவாது, வைசியன் விரும்பிநிற்கையில் ஏனையோரால்பசுக்களையோம்பச்செய்யலாகாது. வயிர முதலிய மணிகள் சந்திரகாந்தம், சூரியகாந்தம்,படிகம், அயக்காந்தமுதலிய உபமணிகள் முத்து, சங்கு, பவளம்முதலியவும், வெள்ளி, பொன்முதலியவுலோகங்களும், நார்ச்சீலை, நூலாடை, பட்டுக்கோசிகம், மயிர்க்

கம்பளம், அகில், சந்தனம், குங்குமப்பூ. கஸ்தூரி, பச்சைக் கருப்பூரம், புழுகு=புனுகு, சவ்வாது, விலாமிச்சம், முதலிய வாசனைப்பண்டமும், வெல்லம்-சருக்கரை - உப்பு-புளிப்பு - காரம்-நெய்-எண்ணெய்-தேன்- அரக்கு-கந்தகம் முதலிய இரசவருக்கங்களும், தானியங்களும், பிரம்பு - மூங்கல்முதலிய மரவகைகளும் பிறவுமாயுள்ள பண்டங்களின் விலைகளும், அவற்றின் தரங்களும்,நிலத்தின்குணங்களும்,எந்தநிலத்தில்,எந்தகாலத்தில்எதனை விதைத்துப்பயிர்செய்துபயன்கொள்ளவேண்டுவதோ அதனையும், தானியமுதலிய பண்டங்களைச் சுத்தஞ்செய்து வைத்தலும்,வித்துக்களைச் சீர்செய்து வைத்தலும், முகத்தலளவையின் வேறுபாடுகளும், நிறுத்தலளவை வேறுபாடுகளும், கணித வேறுபாடுகளும், ஆக்கப்பட்ட பண்டங்களின் நன்மைதீமைமுதலியநிலைமைகளும், நிறவண்ணங்களின் ஏற்பாடுகளும். "ச" என்றதனாற் சிற்பபேதங்களும், தேயவியற்கைகளும், கொள்ளல் விற்றலின் நயநஷ்டங்களும், பசுக்களைக்காக்கத்தக்க வகைமைகளும், கூலித்தொழில் செய்பவர்களுக்குக் கூலியேற்பாடுகளும், எந்தெந்த நாட்டில் யார் யார் எந்தெந்தப்பாஷைகள் பயின்று எந்தெந்த வொழுக்கமுடையவர்களா யிருக்கின்றார்களோ அவற்றினை யறிந்து பழகுதலும், அவ்வப்பண்டங்கள் பிறக்குமிடமும், கொள்ளுமிடமும்கொள்ளத்தக்கபண்டமும்,விற்குமிடமும், கொள்வோரைப் பெறும்வகைமைகளும், முதலிய பிறவெல்லாமும் சான்றோர் வழியாலுணர்ந்து அனுபவத்தால் அறிவுணர்ச்சியடைந்து, தருமத்தோடும் "ச" என்றதனால் தருமத்திற்கு மாறுபாடில்லாததாகிப் பொய்முதலியவற்றோடும் நடத்தியும் தன் பொருள் விருத்தியாகும்படி நல்ல முயற்சிகளை யெப்பொழுதும் செய்துவரவேண்டும். இப்படிப்பட்ட வசியன் விசேடம் பொருளைத்தேடி எல்லாமுயற்சியாலும் அந்தப்பொருளினை வேதியன் முதலிய எல்லாவுயிர்களுக்கும் தக்கவாறு சோறிடுதன் முதலிய வேளாண்மை செய்யவேண்டும். எ-று. காண்க. வேளாண்மை= உபகாரம். "வாளார்கண்செந்துவர்வாய் மாமலையான்றன்மடந்தை, தோளாகம்பாகமாப் புல்கினான்றொல்கோயில், வேளாளரென்றவர்கள் வள்ளன்மையான்மிக்கிருக்குந், தாளாளராக்கூறிற் றான்றோன்றிமாடமே"-எம், வேளாளர்-ஏது,வசியர்க்கு உபகாரங்

காரணமாக வந்ததோர் குறியீடு. " தாளாற்றித்தந்தபொருளெல் லாந்தக்கார்க்குவேளாண்மைசெய்தற்பொருட்டு" என்பனவுமது.

இனிமூலத்துள் "లాభకర్మ" என்றதனை "లోహకర్మ" எனவும் சிலர்பாட மோதுகின்றனர். "లోహానాంచ" எனமனுவுங் கூறி யிருத்தலின் உலோகங்களைச் சோதிக்கும் அறிவு தொழிலென அதற்குப் பொருள் கூறுக.

## வைசியதருமத்தின்பயன்.

வைசியன் மேற்கூறிய தன் கருமத்தினை நான்முறையே அனுட்டித்து வருவானாயின் அவனுக்குண்டாம்பயனைப் பற்றி அசுவமேத பர்வத்துட் கூறப்பட்டது. అశ్వమేధికే॥ " వైశ్యధర్మమమలం చస్తై దేవబ్రాహ్మణపూజకః। సవణిక్స్వర్గమాప్నోతి పూజ్యమానోప్సరోగణైః "= வசியதருமத்தை விடாமல் தேவர்களையும் வேதியரையும் பூசித் துக் கொண்டிருக்கும் வசியன் அரமாதரால் பூசிக்கப்பட்டுச்சு வர்க்கம் புகுவன். எ-று. காண்க. அரமாதர்=தெய்வப்பெண்கள்.

## வசியன் இவ்விதிதவறிய வழிவருங்குற்றம்.

சாந்திபர்வம். శాంతిపర్వణి॥" యస్తుకర్తిజడాన్సాధూ న్వణిక్కూర్మిణీవంచి తా। సయాంతినరకంఘోరం ధనంతస్యాపిహీయతే "= எந்தவசியன், சாதுக் களாயும் தெரியாதவர்களாயு முள்ளவர்களை வஞ்சிக்கின்றானோ அந்தவசியன் அச்சத்தைத் தருகின்ற நரகத்திற்குச் செல்வன். அவன் பொருளும் அழிந்துவிடும். எ-று. காண்க. " வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப் பிறவுந் தமபோற் செயின். " என்பதுமது. (கூகஉ)

வசியதருமமுற்றிற்று.

---

# சூத்திரதருமம் வருமாறு.

---

మూ॥ శూద్రస్యద్విజశుశ్రూషా పరమోధర్మఉచ్యతే
అన్యథాకురుతేకించి త్తత్స్యాత్తస్యనిష్ఫలం. ॥உஅ॥

என்பது. நிறுத்தமுறையானே சூத்திரன் சிறப்புத்தரு மங்கூறுகின்றது

(இ-ள்.) வேதியன் கூறியவாறு ஒழுகுதல் ("శుశ్రూష" என்றது பாடமாயின், வேதியனிட்ட பணிபுரிந்துநிற்றல்) சூத்திரனுக்குச் சிறந்ததருமமென்று கூறப்படுகின்றது. அங்ஙனமன்றி வேறுவகையால் எந்தக்கருமஞ்செய்தாலு மதற்குப் பயனில்லையாய் முடியும். எ-று. காண்க

"ద్విజ" = இரண்டாற் பிறந்தவன். எனவே பிறப்பாலுந்தொழிலாலும் பிறந்தவன். என்றவாறு. உபநயன முடையவன் என்பது கருத்து. இக்காரணக் குறியில் "ద్విజ" = துவிஜஎன்பதற்கு அந்தணன் அரசன்வசியனுமாகிய மூவருமெனப்பொருள்படுகின்றது. அம்மூவர்க்கும்பணிசெய்தல்சூத்திரனுக்குச்சிறந்ததருமமல்லவாதலாலும் (దంతవిప్రాండజాద్విజాః" "பற்கள், வேதியன், முட்டையிலிருந்தும் பிறக்கும் பறவைமுதலியன துவிஜ என்பதன் பொருள்) என்ற "அமரநிகண்டி" னுலும் அம்மொழி வேதியன்மாட்டு உலகவழக்காதலின், காரணவாற்றலினும் வழக்காற்றல் சிறந்ததாமாதலானும் மனுமுதலியோர்கருத்தினைப்பற்றி, ஈண்டு துவிஜ என்னுமொழிக்கு வேதியன்மாத்திரமே யென்று பொருள்படுகின்றது. "పరమః" = சிறந்ததெனவே முத்திக்கு ஏதுவாகிய தருமம். எ-று. காண்க.

வேதியன் கூறியவாறுஒழுகி அவன் பணி புரிவதே சூத்திரன் ஆக்கத்திற்குஏதுவாகிய சிறந்ததருமமென்று மனுகூறினர். మనుః॥ "విప్రాణాంవేదవిదుషాం గృహస్థా నాంయశస్వినాం। శుశ్రూషైవతుశూద్రస్య ధర్మోనై శ్రేయసఃపరః। శుచిరుత్కృష్టశుశ్రూషు ర్మృదుర్వాగనహంకృతః। బ్రాహ్మణాద్యా శ్రయోనిత్య ముత్కృష్టాంజాతిమశ్నుతే" = வேதத்தை யுணர்ந்தவர்களாயும், புகழுடையவர்களாயுமிருக்கும் இல்லறவேதியனைச் சேவிப்பதே சூத்திரன் ஆக்கத்திற்குக் காரணமாகிய சிறந்ததருமம். பரிசுத்தனையும், தன்னினும் உயர்ந்தவருணத்தினருக்கு ஏவல் செய்வோனையும், மெதுவானவனையும், சாந்தமுடையவனையும், ஆணவமற்றவனையும், வேதியனையே யெதிர்பார்த்திருப்பவனையும், உள்ள சூத்திரன் தாழ்ந்தசாதியானேயாயினும், உத்தமவருணத்தானடையும் பயனை அனுபவிக்கின்றான். எ-று, காண்க.

விஷ்ணுபுராணம். విష్ణుపురాణే॥ "ద్విజశుశ్రూషయైవైష పాకయజ్ఞాధికారవాన్। నిజాన్జయతి వైలోకాన్ శూద్రోధన్యతరఃస్మృతః" = இந்தச்சூத்திரன்

வேதியர்பணி செய்தலினனே பாகஎச்சத்துள் அதிகாரமுடையவனுய்த்தானடைய வேண்டுவனவாகிய புண்ணியவுலகத்தினை வென்றுகொள்கிறுன். ஆதலால், சூத்திரன் சுத்தருளெல்லாஞ் சுத்தனும். எ-று. காண்க.

## சூத்திரனியல்பு.

அனுசாசனிக பர்வம். ఆనుశాసనికే॥ "రాగోద్వేషశ్చ మోహశ్చ పారుష్యంచనృశంసతా। శాఠ్యంచదీర్ఘవైరత్వ మతిమానమనార్జవం। అనృతంచాతివాదశ్చ పైశున్యమతిలోభతా। వికృతిశ్చాప్యవిజ్ఞానం జనశూద్రమావిశత్। దృష్ట్వాపితామహశ్శూద్ర మభిభూతంచతామసై:। ద్విజశుశ్రూషణంధర్మం శూద్రాణాంతుప్రయుక్తవాన్। నశ్యంతితామసాభావాశ్శూద్రస్యద్విజభక్తిత:। ద్విజశుశ్రూషయాశూద్రఃపరంశ్రేయోధిగచ్ఛతి" இச்சை, வெறுப்பு, வேட்கைப்பெருக்கம், வன்சொல், இரக்கமின்மை, தேருது செய்தல், தீராப்பிடிவாதம், கழிமானம், செவ்வனெழுகாமை, பொய்கூறல், அதிகவாதஞ்செய்தல், கோள், பெருமுலோபம், அறியாமை, முதலிய தீக்குணங்கள் சூத்திரன் பிறந்தளவில் வந்தனவாம். தாமசகுணங்களால் மூடப்பட்டிருந்த சூத்திரனை பிரமதேவன் நோக்கி, அவனுக்கு வேதியன் பணியைக்கொடுத்தனன். வேதியன்பணியால் சூத்திரனுக்கு அத்தாமசகுணங்கெடுகின்றது. இருபிறப்பாளன் பணியால் சூத்திரன் சிறந்தபெருமையை யடைகின்றுன். எ-று. காண்க.

## சூத்திரன் விசேடதருமம்.

தேவலர். దేవలః॥ "శూద్రధర్మాః త్రివర్ణ శుశ్రూషాకర్మ శ్రాద్ధ పాపణకర్షణ పశుపాలన భారోద్వహనపణ్యవ్యవహారచిత్రకర్మ నృత్తగీతవేణువీణాముకుజ మృదంగవాదనాదీని" = சூத்திரதருமமாவன், உயர் மூவருணத்தருக்கும் பணிபுரிதல், மனைவிமுதலாயினேரைக் காத்தல், நிலத்தையுழுதல், பசு மேய்த்தல், பாரஞ்சுமத்தல், அங்காடிவிற்றல், சித்திர மெழுதல், கூத்து, பாட்டு, குழலூதல், (எனைய துளைக்கருவியூதலுமாம்). வீணை வாசித்தல், மத்தளமுழக்கல், முரசுமுதலிய தோற்கருவி முழக்கன்முதலியனவாம். எ-று. காண்க.

## சூத்திரனுக்குரிய கருமாதிகாரம்.

விஷ்ணு புராணம். విష్ణుపురాణే॥ "దానంచదద్యాచ్ఛూద్రోపి పాకయజ్ఞైర్యజేతచ। పిత్ర్యాదికంచసర్వం వైశూద్రఃకుర్వీతనేతరత్"=சூத்திரனும் தானம்

கொடுக்கவேண்டும். பாகஎச்சங்களால் தேவபூசை செய்யவேண்டும். பிறிர் கரும முதலியவெல்லாம் செய்யவேண்டும். ஏனைய ஓதல் முதலிய நான்கு கருமங்களும் செய்யலாகாது. எ - று. காண்க. பாகவெச்சம், என்பது – சமைத்த பதார்த்தங்களால் தேவர்களுக்குச் செய்யும் பலிமுதலிய கருமங்களாம்.

யாஞ்ஞவற்கியர். యాజ్ఞవల్క్యః॥ "భార్యారతశ్శుచిర్భృత్యభర్తా శ్రాద్ధక్రియాపరః। నమస్కారేణ మంత్రేణ పంచయజ్ఞాన్నహాపయేత్"=மனைவியிடத்து அன்புடையவனாய் (எனவே மணம் புணர்ந்துகிரகத்தனாக விருக்கவேண்டுமேயன்றி பிறனில் விழைதல் செய்யலாகாது என்பது) சுத்தனாய் (எனவேநீராடன் முதலியவற்றால் தேக சுத்தனாதலும், பொய் கூறாமையால் நாக்குச் சுத்தனாதலும், தேவர், வேதியர் ஆசிரியர் பத்தியால்மனச்சுத்தனாதலுமாம்.) கூலிவேலையாளைக் காப்பவனாய், சிராத்தமுதலியகருமங்களைச் செய்பவனாயுள்ள சூத்திரன் "நமஃ" என்றமந்திரத்தால் ஐம்பெரும் வேள்விகளைத் தவறாது செய்யவேண்டும். எ–று. காண்க.

சாந்திபர்வம். శాంతిపర్వణి॥ "స్వాహాకారనమస్కార మంత్రంశూద్రేవిధీయతే। తాభ్యాంశూద్రఃపాకయజ్ఞైర్యజేతవ్రాహ్మణాంత్స్వయం। సంచయాంశ్చనకుర్వీత జాతుశూద్రఃకథంచన। నైవయాహిధనంలబ్ధ్వా వశేకుర్యాద్గరీయసః। రాజ్ఞాదానను జ్ఞాతః కామంకుర్వీతధార్మికః"="స్వాహా"="నమః"= என்றஇவ்விரண்டுமந்திரங்கண்மாத்திரமே சூத்திரனுக்குவிதிக்கப்படுகின்றது. அதனாற் சூத்திரன் பாகஎச்சஞ் செய்யவேண்டும். வேதியரைத் தானேசேவிக்கலாம். (எனவே தக்ககாலத்தில், படுக்கையிடுதல் கால்வருடல் முதலியனவாகத் தொட்டுச்செய்தலாம்). தான்செய்யும் தொழிலில் எவ்வகையாலேனும் மிகுதிசெய்து சேர்த்துவைத்துக்கொள்ளலாகாது. சேவித்தலால் திரவியத்தைச் சம்பாதித்துப்பெரியோர் பக்கலாகவைத்தல்வேண்டும். அரசனேயாயினும், தலைவனேயாயினும், உன்பொருளைக் கொண்டுபோ என்றபின் கொண்டுவந்து மனம்போல் உபயோகப்படுத்திக் கொள்ளலாம். ஆயின் தருமத்தோ டொழுகவேண்டும். எ-று. காண்க.

அநுசாசனம். అనుశాసనికే॥ "అహింసకశ్శుభాచారోదేవద్విజపూజకః। శూద్రోధర్మఫలైరిష్టైః స్వధర్మేణైవయుజ్యతే"=கொலைசெய்யாதவனாய், நல்

லஆசாரமுடையவனாய், தேவரைப் போலும் வேதியரைப்பூசிப்பவனாய், தன்தருமத்தை விடாதவனாயுள்ள சூத்திரன், தான் செய்த கருமங்களின் புண்ணியப்பயனை முற்றும் பெறுவன். எ-று. காண்க.

## சூத்திரன் ஜீவனமார்க்கம்.

சூத்திரன் வேதியர் பணிபுரிதல் மறுமைப்பயன் ஒன்றற்கேஏதுவாதலன்றி, இம்மைப்பயனாகிய சீவனவழியாகவு மிருக்குமென மனு கூறினர். మనుః॥ "ప్రకల్ప్యాతస్యతైర్వృత్తిః స్వకుటుంబాద్యథార్హతః। శక్తించావేక్ష్యభక్తించ భృత్యానాం చపరిగ్రహం। ఉచ్ఛిష్టమన్నందాతవ్యం జీర్ణానివసనానిచ। పులాకాశ్చైవధాన్యానాం జీర్ణాశ్చైవపరిచ్ఛదాః" = வேதியர்தமது பணிசெய்யுஞ் சூத்திரனுக்குத் தமது குடும்பத்திலிருந்து தக்கசீவனவழியை யுண்டுபண்ணவேண்டும். அவன் செய்யும்பணிக்கும், அவனுக்குண்டாயிருக்கும் பத்திக்கும், அவன் குடும்பத்திற்கும் தக்கவாறு தன்னளவையும் அறிந்து கொடுக்க வேண்டும். உண்டுமிக்கஎச்சில், பழையது, அனுபவித்து மிகுந்த பண்டங்கள், பழையஆடைகள், சோறு, அல்லது, அவல்பொரி முதலியன, தானியவகைகளிற் சிறிது சிறிது, பழைமைப் பட்ட ஏனையகருவிப் பொருள்களும் கொடுக்கப்படுவனவாம். ஏ-று. காண்க.

சாந்திபர்வம். శాంతిపర్వణి॥ "యశ్చకశ్చిద్ద్విజాతీనాం శూద్రశ్శుశ్రూషురావ్రజేత్। ప్రకల్ప్యాతస్యతైరాహు ర్వృత్తిర్ధర్మవిదోజనాః। ఛత్రవేష్టనమౌశీరం ఉపానద్వ్యజనానిచ। యాతయామానిదేయాని శూద్రాయపరిచారిణే" = யாரோனுஞ் சூத்திரன் அந்தணனுக்குப் பணிசெய்வோனாகவரின் அவனுக்குச் சீவனத்தை யுண்டுபண்ண வேண்டுமென்று தருமமுணர்ந்தவர்கள் கூறுகின்றனர். குடை, தலைக்காடை, அரைஞாண், பாய், செருப்பு, விசிறி, உடுக்குமாடை இவைகள்பழைமைப்பட்டால் பணிவிடைசெய்யும் சூத்திரனுக்குக் கொடுக்க வேண்டும். எ-று. காண்க.

## சூத்திரன்கடன்.

மனு. మనుః॥ "విప్రసేవైవశూద్రస్య విశిష్టంకర్మకథ్యతే। యదతోన్యద్ధికురుతే తద్భవత్యస్యనిష్ఫలం" = சூத்திரனுக்கு வேதியன் பணியேயெல்லாக்

கருமமாகவுமிருக்கின்றது. அதனைவிட்டு வேறெந்தத் தொழில் செய்தாலும்வினும். எ-று. காண்க.

## சூத்திரனுக்குவேதியன் பணியேசிறந்ததருமம்.

அரசவணிகர் பணிசீவனத்தின் பொருட்டாமாதலால் பொதுத்தருமம். என மனுகூறினர். మనుః॥ "శూద్రస్తు వృత్తిమాకాంక్షన్ క్షత్రమారాధయేద్యది। ధనినం వాప్యుపారాధ్య వైశ్యం శూద్రో జిజీవిషేత్। స్వర్గార్థముభయార్థం వై విప్రానారాధయేత్తు సః। జాతబ్రాహ్మణశబ్దస్య సా హ్యస్య కృతకృత్యతా" சூத்திரன் சீவனத்தை விரும்புவானாயின் பொருளுடையவனை அரசனையேனும், வசியனையேனும், அடுத்துப் பிழைக்கவேண்டும். இம்மையிற்சீவனமும் மறுமையில் நற்கதியையும் விரும்பினவன் வேதியர்களை அடுத்திருக்கவேண்டும். இவன் அந்தணன் ஏவல் செய்வோன் என்னும் பெயரைப்பெறுதலேயன்றோ? அவனுக்குச் சுத்தத்தன்மை. எ-று. காண்க. (சூ-உ-௭)

మూ॥ లవణం మధు తైలం చ దధి తక్రం ఘృతం పయః

న దుష్యేచ్ఛూద్రజాతీనాం కుర్యాత్సర్వేషు విక్రయం.॥௭௫॥

என்பது, அந்தணன் பணியிற்சீவிக்க முடியாவழிச் சூத்திரன் செய்கை கூறுகின்றது.

(இ-ள்.) உப்பு, தேன், எண்ணெய், தயிர், மோர், நெய், பால், இவைகளை யாவர்க்கும் விற்கலாம். சூத்திரர்க்கு அதுகுற்றமன்று. எ-று.

இருபிறப்பாளரேவல்கேட்டு அவர்கள்பணி செய்வதனாற் பிழைக்கமுடியாத சூத்திரன் தன்சீவனத்தின் பொருட்டு, உப்பு முதலியவற்றை விற்றலாம்.

ஆயின். உப்புமுதலியன தன்னைவிற்றவனுக்குக் குற்றத்தை யுண்டு பண்ணுகின்றது என யாஞ்ஞவற்கியர் கூறினர். యాజ్ఞవల్క్యః॥ "ఫలోపలక్షౌమసోమ మనుష్యాపూప వీరుధః। తిలౌదనరసక్షారాన్ దధిక్షీరం ఘృతం జలం। శస్త్రాసవమధూచ్ఛిష్టం మధులాక్షా చ బర్హిషః। మృచ్చర్మపుష్పకుతప కేశతక్రవిషక్షితీః। కౌశేయనీలలవణ మాంసైకశఫసీసకాన్। శాకార్ద్రౌషధిపిణ్యాక పశుగంధాంస్తథైవ చ। వైశ్యవృత్త్యాపి జీవన్నో విక్రీణీత కదాచన। లాక్షాలవణమాంసాని పతనీయాని విక్రయే। పయో దధి చ మద్యం చ హీనవర్ణకరాణి తు" = "ఫలం"

இலந்தைக்கனி தாபதக்கனி தவிர ஏனைய வாழைக்கனி முதலி யவற்றினையும், "உபலம்" மாணிக்கமுதலிய மணிகளையும், "க்ஷௌமம்" நார்ச்சீலை, பருத்தியாடை, செவ்வாடை முதலிய வற்றையும், "ஸோமஃ" = சோமக்கொடியையும், "மநுஷ்யாஃ" = ஆண், பெண், அலியாகிய அடிமைகளையும், "அபூபம்" = அதிரச முதலிய தின் பண்டங்களையும், "வீருதஃ" = பிரம்பு, சீந்தில்முதலியகொடி வகைகளையும், "திலாஃ" எள்ளினையும், "ஓதநம்" = சோற்றினை யும், "ரஸஃ" = வெல்லம், சருக்கரை, கருப்பஞ்சாறு முதலிய வற்றினையும், "க்ஷாரஃ" = யவாசாரம், சத்திசாரம், வெண்கார முதலியவற்றினையும், "தத்நி" = தயிரையும், "க்ஷீரம்" = பாலி னையும், உபலக்கணத்தால் பாலேடு - தயிர்க்கட்டிமுதலியபால், தயிர்ச் சிதைவுகளையும் "க்ருதம்" = நெய்யையும், உபலக்கணத் தால் எண்ணெய் முதலிய சிக்குப் பண்டங்களையும், "ஜலம்" = நீரையும், "சஸ்த்ரம்" = வாள்முதலிய ஆயுதங்களையும் "ஆஸவம்" = கள்ளையும், "மதூச்சிஷ்டம்" = மெழுக்கினையும், "மது" = தேனை யும், "லாக்ஷா" = அரக்கினையும், = "பர்ஹிஃ" = தருப்பையையும், "ம்ருத்" = மண்ணினையும், "சர்ம" = தோலினையும், "புஷ்பம்" மலர்களையும், "குதபஃ" = கம்பளங்களையும், "கேசாஃ" = சாம ரை கவரிகண் முதலியவற்றினையும் "தக்ரம் = உதஸ்வித்" = மோ ரினையும், "விஷம்" = சிங்கிமுதலிய விடத்தினையும், (எனவே வசநாபிமுதலியன) "க்ஷிதிஃ" = நிலத்தினையும், "கௌசேயம்" = கோசத்தாற் பிறந்தது = பட்டுகளையும், "நீலம்" = நீலத்தினை யும், "லவணம்" = ஐவகைஉப்புகளையும், "மாம்ஸம்" = ஊனினையும், "ஏகசபஃ" = குதிரை, கழுதை முதலியவற்றினையும், "ஸீஸம்" = ஈயமுதலிய வுலோகங்களையும், "சாகம்" = காய்கறி வகைகளை யும், "ஆர்த்ரௌஷதி" = பச்சைப் பயற்றினையும், "பிண்யாகம்" = இலைக் கறிகளையும், "பசுஃ" = காட்டுப் பசுக்களையும், "கந்தாஃ" = சந் தனம் அகில்முதலிய வற்றினையும், வைசிய விருத்தியாற் பிழைக் கவேண்டினவனும் எப்பொழுதும் விற்றலாகாது. அவற்றுள், அரக்கு, உப்பு, ஊன் இம்மூன்றனையும் விற்றவனை; அவை யப் பொழுதே நிலைமை கெடுத்து விடுகின்றன. பால், தயிர், கள், இம்மூன்றும் விற்றவனையுடனே தாழ்ந்தசாதியா ளாக்குகின்றன. எறு. என்னெனில்? ஈனசாதி சூத்திரன் என்பது.

அற்றன்று. இந்தயாஞ்ஞவற்கியவுரை ஆபத்து இல்லாதவே தியன்விற்றலாகாதென்று கூறியதன்றிச் சூத்திரனைப் பற்றிக்கூறியதல்லவா மாதலின் மனுவுங்கூறினர். మనుః॥ "సద్యఃపతతిమాంసేన లాక్షయాలవణేనచ। త్ర్యహేణశూద్రీభవతిబ్రాహ్మణఃక్షీరవిక్రయీ। శూద్రస్తులవణాదీని విక్రీణన్నహిదుష్యతి" = ஊன், அரக்கு, உப்பு, இவைகளைவிற்ற வேதியன் முழுவதும் பிரஷ்டனே யாகின்றான். வேதியன் மூன்றுநாள் பால்விற்றால் சூத்திரனேயாகின்றான். உப்புமுதலிய வற்றினைச்சூத்திரன் விற்றாற்குற்ற முடையவ னுவதில்லை. எ-று. காண்க. [பால்விற்ற வேதியன் மூன்றுநாள்வரையிற் சூத்திரனாக விருக்கின்றான் என்பது சிலர் கருத்து.

## சூத்திரன் வாணிபம்.

ஏவற்பணியால் பிழைப்பதற்குச் சக்தியில்லாத சூத்திரனுக்கு யாஞ்ஞவற்கியர் வாணிபத்தை விதித்தனர். యాజ్ఞవల్క్యః॥ "శూద్రస్యద్విజశుశ్రూషా తయాజీవన్వణిగ్భవేత్। శిల్పైర్వావివిధైర్జీవేత్ ద్విజాతిహితమాచరన్" = சூத்திரனுக்கு வேதியன் பணிசெய்வதே தருமம். அதனால் பிழைக்கமாட்டாதவன் வாணிகஞ்செய்யலாம். எந்தத் தொழிலால் இருபிறப்பாளர் ஏவலைத்தான் செய்யக்கூடுமோ? அப்படிப்பட்ட பல சிற்பத்தொழிலாலாயினும் பிழைக்கலாம். எ-று. காண்க.

மனு. మనుః॥ "అశక్నువంస్తుశుశ్రూషాం శూద్రఃకర్తుంద్విజన్మనాం। పుత్రదారాత్యయంప్రాప్తో జీవేత్కారుకకర్మభిః। యైఃకర్మభిఃప్రచరితైః శుశ్రూష్యంతేద్విజాతయః। తానికారుకకర్మాణి శిల్పానివివిధానిచ" = இருபிறப்பாள ரேவலைச்செய்யுந் திறமில்லாத சூத்திரன் மனைவி, மக்களுக்குச் சீவனங் கிடையாதஆபத்தினையடைந்தபோது, தச்சவேலை, மண்வேலை, உலோகவேலை, முதலியவற்றாலாயினும் பிழைக்கலாம். நல்லஒழுக்கமுடையஎத்தொழிலால் இருபிறப்பாளர் சேவிக்கப்படுகின்றாரோ? அப்படிப்பட்ட தச்சுமுதலிய காருகவினையாயினும், பலவகைப் பட்டசிற்பம் (எனவே படமெழுதல் முதலிய கைவேலையாயினும்செய்யலாம். எ-று. காண்க. (சூ. ௯)

## சூத்திரன் விலக்கு.

మూ॥ విక్రీణన్మద్యమాంసాని హ్యభక్ష్యస్యచభక్షణం —
కుర్వన్నగమ్యాగమనం శూద్రోపిపతతత్క్షణాత్. ॥౯౪॥

మూ॥ కపిలాక్షీరపానేన బ్రాహ్మణీగమనేనచ
వేదాక్షరవిచారేణ శూద్రఃపతతితత్క్షణాత్. ॥౬౫॥

என்பன. சூத்திரன் ஆபற்காலத்திலுஞ் செய்யலாகாதன கூறுகின்றன.

(இ-ள்). கள், ஊன், விற்றுலும், தின்னப் படாதனவற்றைத் தின்றுலும், புணரத்தகாதவளைப் புணர்ந்தாலும் சூத்திரன் அப்பொழுதே கெடுகின்றுன். கபிலைப்பசுவின் பால்குடித்தலினுலும், அந்தணமாதினைப் புணர்தலாலும், வேதத்தை விசாரித்தலாலும் சூத்திரன் அந்தக்கணமே நிலைதவறினவனுவான். எ-று. காண்க.

“మద్యం”=மத்தியமென்பது, பனங்கள், பலாச்சாறு, முந்திரிச்சாறு, இலுப்பைப்பூச்சாறு, பேரீச்சஞ்சாறு, தென்னங்கள், ஈச்சங்கள், முதலியவாகப் பலவகைப்படும்.

“అభక్ష్యం” = உண்ணலாகாதன. பசுவூன் முதலியன.

“అగమ్యా” = புணரலாகாதவள். அந்தணர் மாதுபோல்வாள். (சு௫௭)

சூத்திரதருமம் முற்றிற்று.

---

ఇతిశ్రీపరాశరస్మృతౌ ప్రథమోఽధ్యాయః॥ பராசரமிருதி முதலத்தியாயம் முற்றிற்று.

మాధవీయశ్లోకః॥ “ప్రఖ్యాతాపిపరాశరస్మృతిరిహస్మృత్యాగమాఖ్యాపనే ధర్మావర్ణచతుష్టయీబహుమతే సాధారణార్థాభిధా। అద్యస్త్వాహ్నికశిష్టనామవిహితత్షట్కర్మపూర్వాపరః పూర్వాధ్యాయనిరూపితం తదఖిలంవ్యాఖ్యాతుధీర్మాధవః॥

அம்மாதவிய சுலோகவுரை.

மிருதிகளால்வந்த ஆசாரங்களையும் (சுருதி மிருதிகளின் கருத்து) நன்றுவிளக்குவதில் பராசரமிருதி சிறந்ததாம். அதனுள் நான்குவருணத்தருக்கும் ஒத்த பொதுச்சிறப்புத் தருமங்

கள் கூறப்பட்டன, முதல்சிட்டர்களின் நாட்கருமக்கடன் கூறப் பட்டது. வேட்டல் முதலிய அறுதொழிலும் பின் கூறப்பட் டன. இங்ஙன முதலத்தியாயத்துட் கூறப்பட்ட அவற்றினை யெல்லாம் நல்லறிவினையுடைய மாதவர் உரைசெய்தனர். எ-று. காண்க.

ఇతిశ్రీమద్రాజాధిరాజ పరమేశ్వర వైదికమార్గ ప్రవర్తక శ్రీవీరబుక్కభూపాల సామ్రాజ్య ధురంధరస్య మాధవామాత్యస్యకృతౌ పరాశరస్మృతి వ్యాఖ్యాయాంప్రథమోధ్యాయః॥

ஸ்ரீ புக்கணராயருடையமுதலமைச்சராகிய

ஸ்ரீ மாதவாசிரியர்செய்தருளிய

பராசரமிருதிவியாக்கியானம்

முதலத்தியாயம்

தமிழ்மொழிபெயர்ப்பு

முற்றிற்று.

# பிழை திருத்தம்.

——:o:——

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 21 | 15 | எ-ம், | — |
| 23 | 8 | மென்றும் | என்றும் |
| ,, | 16 | பிதர் | பிதிர் |
| 24 | 20 | அநு பாதங்களுக்குப் | அநுபாதகங்களுக்குப் |
| 25 | 21 | எம்போலியற்கு | ஈம்போலியற்கு |
| 28 | 8 | மிகுதியாம் | மிகுதியாய் |
| 31 | 32 | என்து | என்பது |
| 43 | 19 | சம்பந்த | சம்பந்தம் |
| 62 | 28 | எனவும்படும். | என்பனவாம் |
| 65 | 16 | உணர்த்தப்பட்டால் | உணர்த்தப்பட்ட |
| 67 | 17 | அக்நிஷோமீய | அக்நிஷ்டோமீய |
| ,, | 29 | உணர்ச்சியால் | உணர்ச்சியில் |
| 70 | 13 | அக்கிநிஷோமீய | அக்கிநிஷ்டோமீய |
| ,, | 23 | அக்கிநிஷோமாதி | அக்கிநிஷ்டோமாதி |
| ,, | 25 | அக்கிநிஷோமீய | அக்கிநிஷ்டோமீய |
| 99 | 17 | உவ்ள | உள்ள |
| 101 | 17 | கூறப்படுகின்றது. | கூறப்படுகின்றன |
| 102 | 26 | சுகம் | சகம் |
| 108 | 6 | பலவிதமாகயுடையதாக் | பலவிதமா யுடைய தாகக் |
| 112 | 14 | விடயங்களைசேட்டேன் | விடயங்களைக்கேட்டேன் |
| 116 | 33 | யார்குத் | யார்க்குத் |
| 118 | 22 | விளைவது | விளைவது |
| 123 | 2 | தருமங்களைப் | தருமங்களை |
| 124 | 11 | யரர் | யார் |
| 126 | 10 | பதிணுகிய | பதிதணுகிய |
| ,, | 27 | பதிதணுகின் | பதிதணுகின்றுன் |
| 128 | 30 | உணர்த்துகின்றது | உணர்த்துகின்றன |
| 129 | 11 | நின்கின்றது | நிற்கின்றன |
| 140 | 10 | (சுங) | (சஉ) |
| 142 | 13 | பிராயசித்தம். | பிராயச்சித்தம் |
| ,, | 15 | எனவெ | எனவே |

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 142 | 21 | உதசரிக்கப்படும் | உதகரிக்கப்படும் |
| 147 | 1 | பிதர் | பிதிர் |
| 154 | 8 | இடையிட்டோடும் | இடையீட்டோடும் |
| 161 | 13 | நயத்தினாலேனும் | நியாயத்தினாலேனும் |
| 163 | 28 | வகைய்ால் | வகையால் |
| 207 | 12 | நாதமூன்றாவன | தானமூன்றாவன |
| 208 | 1 | இராஜசாதனம் | இராஜசதானம் |
| 213 | 25 | தேவலகனிகல்க்கணம் | தேவலகனிலக்ஷணம் |
| 226 | 11 | எனில் | என்னெனில் |
| 252 | 8 | ளேள்வி | வேள்வி |
| ” | 31 | இறுவும் | இதுவும் |
| 264 | 9 | அவளை | அவனை |
| 267 | 16 | சக்தி | சந்தி |
| 269 | 23 | தனக்கியவைகளை | தனக்கினியவைகளை |
| 273 | 9 | மேற்குமுசமரகா | மேற்குமுகமாகா |
| 280 | 5 | மிச்சையுடையவன் | இச்சையுடையவன் |
| 283 | 18 | குறைக்கலாதென்பது | குறைக்கலாகாதென்பது |
| 286 | 28 | பிராம | பிரம |
| 302 | 4 | உபயோசிக்க | உபயோகிக்க |
| 328 | 1 | முழுகத்தவனும் | முழுகத்தக்கவனும் |
| 341 | 25 | கிரியாஸ்நாநம் | கிரியாங்கஸ்நாநம் |
| 346 | 27 | தோற்றுவதேயாயிலும் | தோற்றுவதேயாயினும் |
| ” | 28 | உபலக்ஷன | உபலக்ஷண |
| 352 | 5 | பிராணாயம | பிராணாயாம |
| 354 | 2 | இரொசகமென்றும் | இரேசகமென்றும் |
| ” | ” | பிராணாயமம் | பிராணாயாமம் |
| 364 | 24 | கூறியலெல்லாம் | கூறியவெல்லாம் |
| 368 | 4 | மற்றெரு | மற்றொரு |
| 387 | 11 | பசுவிளைபும் | பசுவினையும் |
| 393 | 12 | நள்றாக | நன்றாக |
| 396 | 4 | விரும்பியே | விரும்பிய |
| 400 | 22 | வேண்டும | வேண்டும் |
| 402 | 10 | இச்சிறுவன் | இச்சிறுவர் |
| 418 | 26 | கிழக்குமுகவிருந்து | கிழக்கு முகமாக விருந்து |
| 420 | 13 | குமுகும் | குமுறும் |
| 422 | 28 | மும்மூன்றுதரம் | மும்மூன்றுதரம்பிதிரர்க்கு |
| 434 | 29 | தருப்பணம | தருப்பணம் |
| 448 | 10 | விஷ்னு | விஷ்ணு |
| 449 | 14 | பூசிக்குங்தன் | பூசிக்குந்தன் |
| ” | 15 | உலகனை | உலகை |
| 477 | 25 | நடைந்திளைத்து | நடந்திளைத்து |
| 495 | 2 | செல்வமுயை | செல்வமுடைய |

# பிழை திருத்தம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 518 | 22 | உடைய | உடையதாய் |
| 520 | 2 | உச்சாகதகை | உச்சாகத்தை |
| ,, | 8 | இசசை | இச்சை |
| ,, | 13 | பலகின | பலகீன |
| ,, | 22 | உணடி | உண்டி |
| ,, | 26 | உண்ணலாது | உண்ணலாகாது |
| ,, | ,, | இராகுவினால் | இராகுகேதுவினால் |
| 523 | 28 | சூரியவுதயம் | ஸூரியவுதயம் |
| 524 | 8 | கிராஸ்தாஸ்தமான | கிரஸ்தாஸ்தமான |
| 525 | 6 | புசிக்கலாகரது | புசிக்கலாகாது |
| 532 | 20 | கூறப்பட்டது | கூறப்பட்டன |
| 534 | 7 | குற்றத்தை | குற்றம் |
| ,, | 14 | நால்வகைவிரதமான | நால்வகைவிரதமாவன |
| 543 | 2 | மணி மணி | மணி |
| 549 | 3 | கொல்லலாகாதென்து | கொல்லலாகாதென்று |
| 561 | 18 | அனைவருனடய | அனைவருடைய |
| 567 | 27 | கெடுற்றால் | கேடுற்றால் |
| 568 | 16 | சுவணதானம் | சுவர்ணதானம் |
| 570 | 7 | உன்டாகும் | உண்டாகும் |
| 572 | 13 | செல்ல | செல்ல |
| 574 | 6 | வெண்டும் | வேண்டும் |
| ,, | 7 | இரசியம் | இரகசியம் |
| ,, | 17 | நித்தகருமங்களை | அரசாட்சி கருமங்களை |
| 581 | 11 | நிறுத்தலனவை | நிறுத்தலளவை |

:0: